ஸ்ரீ:

# ஸ்ரீ மஹாபாரதம்.



## பீஷ்மபர்வம்

திரிசிரபுரம்

ஸேண்ட் ஜோஸப் காலேஜ் ஸம்ஸ்க்ருத தலைமைப்பண்டிதர்,

மஹாவித்வான், ஸாரஸ்வதஸாரஜ்ஞர், கவிசிகாமணி,

ஸ்ரீ - உ - வே - T. V. ஸ்ரீநிவாஸாசார்யர்

அவர்களால்

மொழிபெயர்க்கப்பெற்று,

ஆண்டிப்பட்டி ஜமீன்தார்,

ஸ்ரீமான்,

S. Rm. M. Ct. பெத்தாச்சிசெட்டியார், M. R. A. S.

அவர்களின் பேருதவியைக்கொண்டு

கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

ம. வீ. இராமாநுஜாசாரியரால்

பதிப்பிக்கப்பெற்றது.



விலை ரூபா. ௪: தபால்சார்ஜ் அணா ௬.



1919.

ஸ்ரீ:

# முகவுரை.

ஸ்ரீ மஹாபாரதத்துள்சிறந்தபாகமாகிய பீஷ்மபர்வம் பூர்த்தியான விஷயம் நமது ஆப்தர்களுக்கெல்லாம் பெருமகிழ்ச்சியை விளைவிக்குமென்பதில் சந்தேகமில்லை. மொழிபெயர்ப்பு முழுதும் சிலவருஷங்களுக்குமுன் பூர்த்தியாகி வித்தமாகஇருந்தமையால், இது முன்னரே வெளிவந்திருக்கவேண்டுமாயினும் ஐரோப்பியமஹாயுத்தநிகழ்ச்சி காரணமாகநேர்ந்த பலஅசௌகரியங்களால் அப்போதேவெளிப்படுத்தமுடியாமல்நின்றது. தொடங்கியநற்காரியத்திலுள்ள ஊக்கமும் அது நடைபெறவில்லையேஎன்கிற ஏக்கமும் என்மனத்தில் வேரூன்றி நாளுக்குநாள் வளர்ந்துகொண்டேவந்தன. எப்படியும் நற்காலம் வாய்க்குமென்று எல்லாம்வல்ல ஸர்வேஸ்வரனது திருவடிகளையே பற்றுகக்கொண்டு கவலைக்கடலில் நீந்திக்கொண்டிருந்தேன். அவனுடைய பரமகருணையால் இந்தப் பீஷ்மபர்வம் பூர்த்தியாகிவெளிவந்ததில் எனக்குண்டாயிருக்கிறபெருங்களிப்புக்கு ஓர் அளவின்று.

இந்தப்பீஷ்மபர்வம் ஸ்ரீமஹாபாரதத்தினுள் மிக்கபெருமைவாய்ந்தது. இது, வேதத்துக்குஉபநிஷத்துக்கள்போல மஹாபாரதமாகிய ஐந்தாம்வேதத்துக்கு ஸ்ரீபகவத்கீதையாகியஉபநிஷத்தைத் தன்னகத்துடையது. பகவத்கீதையின்பெருமை உலகமெல்லாம் பரவி நிலவுகிறது. அதன்சொற்பொருட்சிறப்புக்களைப் பார்த்துப்பார்த்து எத்தேசத்தினரும் எச்சமயத்தினரும் வியப்படைகின்றனர். அதற்கு உலகத்திலுள்ள பற்பலபாஷைகளிலும் பற்பலமொழிபெயர்ப்புக்கள் இருத்தலே அதன்பெருமையை நன்குவிளக்கும். முற்றறிவனான ஸர்வேஸ்வரனது திருவாக்கினால் பரமஆப்தனான அருச்சுனனுக்குப் பெருங்கருணையுடன் சொல்லப்பட்டதென்றால், இதன்பெருமையைச் சொல்லவும்வேண்டுமா? பாண்டவகௌரவர்களுக்குப் பிதாமஹரும் பாரதர்களுக்கு நடுநாயகமணிபோன்றவரும் பேரறிவாளரும் தெய்வத்தன்மையுள்ளவரும் யாராலும்செய்தற்கரிய பெரியவிரதத்தைமேற்கொண்டு முற்றுப்பெறச்செய்தவருமான பீஷ்மரது ப்ரபாவத்தை முக்கியமாகக்கொண்டதென்பதிலும் வேறுசிறப்பு என்ன இருக்கிறது? பக்தபராதீனனான பகவான் தான்செய்தப்ரதிஜ்ஞை

தவறினும் அடியார்செய்தபிரதிஜ்ஞை தவறலாகாதென்று ஆஸ்ரித வாத்ஸல்யத்தை அனுஷ்டித்துக்காட்டி, 'அச்சுதன்' என்னும் தன் திருநாமத்தைநிலைநிறுத்திக்கொண்டதும் இந்தப்பருவத்திலன்றோ?

திரிசிரபுரம் ஸெண்ட்ஜோஸப்காலேஜ் ஸம்ஸ்க்ருததலைமைப்பண்டிதர் மஹாவித்வான் கவிசிகாமணி ஸாரஸ்வதஸாரஜ்ஞர் ஸ்ரீ. உ. வே. T. V. ஸ்ரீநிவாஸாசாரியரவர்கள் இந்தப் பீஷ்மபர்வத்தையும் மற்ற யுத்தபர்வங்களையும், என்வேண்டுகோளுக்கிணங்கி மொழிபெயர்த்துதவினார்கள். இவர்களுடைய பாஷாஜ்ஞானமும் சாஸ்திர பரிஸ்ரமமும் யாவராலும் கொண்டாடத்தக்கன. இவர்களுடைய உழைப்பின்பயனாகவெளிவந்த ஹம்ஸஸந்தேசமுதலிய அரிய நூல்களால் இவர்களுடைய கவித்திறமையும் இம்மொழிபெயர்ப்பால் கல்விவன்மையும் நன்குவிளங்கும். ஸ்ரீ அஹோபிலமடத்தில், ஸ்ரீ அழகியசிங்கர்ஸந்நிதியில் மஹாவித்வான்கள் பலர்கூடிய மஹாஸதஸில் இந்தஸ்வாமியினுடைய கல்விவன்மையையுங் கவித்திறமையையும் பாராட்டிக் கவிசிகாமணியென்னும் பட்டத்தைஅளித்தார்களென்றால், இவர்களுடைய பெருமையைச்சொல்லவும் வேண்டுமோ? மஹாபாரதமொழிபெயர்ப்புவேலையை எடுத்துக்கொண்டதுமுதல் இவர்கள் சிறிதும் ஸ்ரமம்பாராட்டாமல் விரைவில் மிக்க ஊக்கத்துடன் நிறைவேற்றித்தந்த உதவியை நான் என்றும்மறவேன்.

இத்துணைச்சிறப்புவாய்ந்தஇந்தப்பருவம் அச்சிட்டு வெளியிடுதற்கு வேண்டிய பொருளுதவிசெய்து ஆதரித்த பரமோபகாரிகள், ஆண்டிப்பட்டிஜமீன்தாரும் மதுரைத்தமிழ்ச்சங்கத்து உபஅக்கிராசனாதிபதியுமாகிய ஸ்ரீமான், S. Rm. M. Ct. பெத்தாச்சிசெட்டியார் M. R. A. S., அவர்கள். இவ்வள்ளற் பெருந்தகையாருடைய கொடைச்சிறப்பை என்னவென்று புகழ்வது! இவர்கள்உபகரித்தமாதிரி மிகப் பாராட்டற்பாலது. முந்தியபழக்கமில்லாமலும் இன்னது செய்ய வேண்டுமென்று நான்வற்புறுத்திக்கேளாமலும் பிறருடைய நிர்ப்பந்தங்களில்லாமலும் வேறுபயனைஎதிர்பாராமலும் அவர்கள் காலத்திற் செய்தபேருதவி புனைந்துரைக்கும்அளவினதன்று. யாசிக்கும் துன்பத்தைநான் அடையாமல் இவர்கள்கொடுத்ததன்சிறப்பை நினைக்குங் கால் என்மனம் மிகஇன்புறுகிறது.

"கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்று,
இரப்புமோர் ஏஎ ருடைத்து"

என்னும் பொய்யாமொழியின் பொருளை இவர்களிடத்து உண்மையாகக்கண்டேன். கல்விவளர்ச்சியில்பேரூக்கம்கொண்டவர்களும் புல

வர்களுக்கு எய்ப்பினில்வைப்புமாகிய ஸ்ரீமான்செட்டியாரவர்களுக்கு ஆயுள் ஆரோக்கியமுதலிய எல்லாநன்மைகளையும் மேன்மேலும் பொழிந்தருளும்படி எல்லாம்வல்ல இறைவனை எப்பொழுதும் பிரார்த்தித்தலின்றி யான்செய்யும் கைம்மாறு யாதுளது ?

ஸ்ரீபகவத்கீதையை மதத்ரயபாஷ்யங்களுடன்மொழிபெயர்த்து வெளியிடுவதாக நிச்சயித்திருந்தேன். பகவத்கீதைக்கு அந்தஅந்த மதச்சார்பாக அநேகமொழிபெயர்ப்புக்களிருத்தலாலும் வேறுசிலகாரணங்களாலும் அதனை இப்பொழுதுசெய்யாமல் நிறுத்திக்கொண்டேன். கீதையின்மொழிபெயர்ப்பு மஹாபாரதத்தின் மற்றப்பகுதிகளைப்போலவே ஒருமதச்சார்பாகஇராமல் பொதுவாகஇருக்கவேண்டுமென்பதே எனதுவிருப்பம். ஆயினும் வேதாந்தபாகங்கள்வரும்பொழுது அங்ஙனம்செய்தல் சாத்தியப்படவில்லை. மொழிபெயர்ப்பவர்கள் எந்தமதத்தைச்சார்ந்தவர்களோ அந்தமதத்தின்சார்பாகத்தான் மொழிபெயர்ப்பு அமைகிறது. இதனை, பகவத்கீதையில்மாத்திரமேயன்றி மற்றப்பருவங்களிலும் வேதாந்தப்பகுதிகள் வருமிடந்தோறும் காணலாம். இந்தமாதிரியானவிடங்களில் தங்கள்மதக்கொள்கைகளுக்கு முரணாயிருப்பதாகநினைப்பவர்கள் தங்கள்தங்கள் சமயநூல்களில்வல்லபண்டிதர்களிடம் கேட்டுத்தெளிந்துகொள்க.

இந்தப்பருவத்தில் ஆயுதப்பெயர்களும் வாத்தியப்பெயர்களும் பல வந்துள்ளன. அவைகளுள் சிலவற்றுக்குத் தமிழ்ப்பெயர்கிடைக்காமையாலும் சிலவற்றுக்கு ஒவ்வொருவர் ஒவ்வொருவிதமாகப் பொருள்கூறுதலாலும் அவற்றையும் மற்றுமுள்ள யுத்தபர்வங்களில் காணப்படும் அவ்விதச்சொற்களையும் தொகுத்துப்பொருளெழுதி அகராதியாக அச்சிடநினைத்திருக்கிறேன்.

இனி மற்றப்பர்வங்களையும் அச்சிட்டுவெளியிடுவதற்கான எல்லாவிதஆற்றலையும் எனக்கு அளித்தருளும்படி எல்லாம்வல்லஸர்வேஶ்வரனை ப்ரார்த்திக்கிறேன்.

இங்ஙனம் :

ம. வீ. இராமாநுஜாசாரியன்.

## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 309 | 31 | சதாநீகனை ஸஹோதரர்களான ஐந்து கேகயர்கள் மிகுந்தகோபங்கொண்டு எதிர்த்தோடினார்கள். | சதாநீகனைக் காக்கக்கருதி ஸஹோதரர்களான ஐந்துகேகயர்கள் மிகுந்த கோபங்கொண்டு ஓடிவந்தார்கள். |
| 376 | 31 | த்ரோணர். | க்ருபர். |

ஸ்ரீ:

ஸ்ரீமஹாபாரதம்

# பீஷ்மபர்வம்.

## விஷயஸூசிகை.

---

### ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம்.

## பூமிபர்வம்.



## பகவத்கீதாபர்வம்.



## ஸ்ரீபகவத்கீதை.

பீஷ்மவதபர்வம்.

பீஷ்மபர்வம் விஷயஸூசிகை

முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.

ஸ்ரீக்ருஷ்ணத்வைபாயநாய நம:.

# ஸ்ரீமஹாபாரதம்.

## பீஷ்மபர்வம்.



### முதலாவது அத்யாயம்.

### ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம்.

[1] நாராயணம் நமஸ்க்ருத்ய நரம் சைவ நரோத்தமம் ।
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத் ॥

(குருக்ஷேத்திரத்தில் கௌரவபாண்டவஸேனைகள் ஒன்றோடொன்று சேருவதும், இரண்டு பக்ஷத்தார்களும் பிரதிஜ்ஞை செய்துகொள்வதும்.)

ஜனமேஜயர், "வைசம்பாயனரே! வீரர்களான கௌரவர்களும் பாண்டவர்களும் ஸோமகர்களும் பற்பல தேசங்களினின்றும் வந்திருக்கின்ற மஹாத்மாக்களான மற்ற அரசர்களும் எவ்வாறு போர்புரிந்தனர்?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"ஜனமேஜயமஹாராஜரே! வீரர்களான கௌரவர்களும் பாண்டவர்களும் ஸோமகர்களும் தவம் செய்வதற்கேற்ற குருக்ஷேத்திரத்தில் எவ்வாறு யுத்தம்செய்தார்களென்பதை நீர் கேளும். அதிகபலமுள்ளவர்களான அந்தப்பாண்டவர்கள் ஸோமகர்களோடுகூடி ஜயிக்கவிரும்பிக் குருக்ஷேத்திரத்தில் வந்திறங்கிக் கௌரவர்களை எதிர்த்தார்கள். வேதாத்யயனத்தினால் நிறைந்தவர்களும் போரில்களிப்பவர்களுமான எல்லோரும் யுத்தத்தில் ஜயத்தைவிரும்பிச் சேனையுடன் யுத்தத்தில் நோக்கமுடையவர்களாயிருந்தார்கள். யுத்தவீரர்களோடு கூடின பாண்டவவீரர்கள் அவமதிக்கமுடியாத துர்யோதனனுடைய படையை எதிர்த்துவந்து கீழ்த்திசையைநோக்கி மேற்புறத்தில் தங்கி

1 இதன் உரைவிசேஷங்களை ஆதிபர்வம் முதற்பக்கத்தில் காண்க.

ஞர்கள். குந்திபுத்திரரான யுதிஷ்டிரர் [1]ஸமந்தபஞ்சகத்துக்கு வெளியில் சேனைகள் தங்குமிடங்களை ஆயிரமாயிரமாக முறைப்படி ஏற்படுத்தினர். பூமிமுழுவதும், தேர்களும் யானைகளும் குதிரைகளும் காலாட்களும் வெளியில் செல்ல, பாலர்களும் விருத்தர்களும் மிச்சமாயிருத்தலால் ஒருவரும் இல்லாததுபோலாயிற்று. அரசரில் சிறந்தவரே! ஸூர்யன் ஜம்பூத்வீபமண்டலத்தில் எவ்வளவுவரையில் பிரகாசிக்கின்றனே அவ்வளவுவரையிலுள்ளசேனைகளெல்லாம் வந்தன. அந்தஎல்லாவர்ணத்தாரும் ஒரிடத்தில் நிலைபெற்றவர்களாகி அனேகயோஜனைதூரமுள்ள ராஜ்யத்தையும் தேசங்களையும் நதிகளையும் மலைகளையும் காடுகளையும் நான்குபக்கங்களிலும் சூழ்ந்தார்கள். புருஷசிரேஷ்டரே! யுதிஷ்டிரர் வாகனங்களையுடைய அவர்களுக்கெல்லாம் சிறந்த பக்ஷணங்களையும் போஜனங்களையும் கொடுக்கும்படி கட்டளையிட்டனர். ஐயா! யுதிஷ்டிரர், ‘இப்படி சொல்லும் இவன், பாண்டவர்களைச் சேர்ந்தவனென நிச்சயமாக அறியத்தக்கவன்’ என்று அவர்களுக்குப் பலவிதமான அடையாளங்களை ஏற்படுத்தினர். குருவம்சத்திற்பிறந்த யுதிஷ்டிரர் யுத்தஸமயம் நெருங்கியிருக்கும்பொழுது எல்லோருக்கும் அடையாளங்களையும் பெயர்களையும் ஆபரணங்களையும் சேர்ப்பித்தார். கம்பீரமான மனமுள்ள துர்யோதனன் பார்த்தனுடைய கொடிநுனியைக் கண்டு எல்லாஅரசர்களுடனும் சேர்ந்து பாண்டவருக்கு எதிரணிவகுத்தான். தம்பியர்களால் நாற்புறத்திலும் சூழப்பட்டு ஆயிரம் யானைகளுடைய மத்தியில் தலையின் மீது தூக்கிப்பிடிக்கப்படுகிற வெண்குடையுடன் விளங்கும் துர்யோதனனைக்கண்டு போரில் மகிழ்ச்சியடைகிறவர்களான பாஞ்சாலர்கள் ஸந்தோஷமும் விருப்பமுமுள்ளவர்களாகிப் பெரிய சங்கங்களை ஊதினர்கள். ஆயிரமாயிரமாகப் பேரிகைகளையும் அடித்தார்கள். பிறகு பாண்டவர்கள் தம்சேனை, மிக்க ஸந்தோஷத்துடனிருப்பதைக்கண்டு மனக்களிப்புற்றுர்கள். வீர்யமுடையவரான வாஸுதேவரும் ஸந்தோஷமடைந்தார். புருஷோத்தமர்களான வாஸுதேவரும் தனஞ்சயனும் தேரிலிருந்துகொண்டு தங்களைச்சேர்ந்த போர்வீரர்கள் மகிழும்படி சிறந்த சங்கங்களை ஊதினர்கள். பாஞ்சஜன்யம் தேவதத்தமென்கிற இரண்டு சங்கங்களுடைய சப்தத்தையும் கேட்டு யுத்தவீரர்கள் மலஜலங்களைப்பெருக்கினர்கள். கர்ஜிக்கின்ற ஸிம்மத்தினுடைய முழக்கத்தைக்கேட்டு மற்றமிருகங்கள் பயமடைவதுபோல அந்தச்சேனையானது (சங்கங்களின்) ஒலியைக்கேட்டு வாட்டமுற்

[1] மூலத்தில், ‘ஸ்யமந்தபஞ்சகம்’ என்றிருக்கிறது.

றது. பூமியிலுள்ளபுழுதி மேலேகிளம்பியது. ஒன்றும்அறியப்படவில்லை. ஸூர்யன் சேனையினாலுண்டான புழுதியினால்மூடப்பட்டு அஸ்தமனத்தை அடைந்தவன்போலானான். அந்தஸமயத்தில் மாம்ஸங்களையும் ரக்தங்களையும்பொழிகின்றமேகமானது சேனைகளெல்லாம்நனையும்படி பொழிந்தது. அது ஆச்சரியமாயிருந்தது. பிறகு, பருக்கைக்கற்களை இறைக்கிறகாற்றும் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் அந்தச்சேனைகளை (அக்கற்களால்) அடித்துக்கொண்டு மெல்லத்தோன்றியது. ராஜேந்திரரே! கொந்தளிக்கும் கடல்போன்ற இரண்டுசேனைகளும் குருக்ஷேத்திரத்தில் மிக்கஸந்தோஷத்துடன் யுத்தம்செய்வதற்குஆயத்தமாக நின்றன. யுகத்தினுடையமுடிவில் இரண்டு கடல்களுக்குச்சேர்க்கையுண்டாவதுபோல, அவ்விரண்டு சேனைகளுக்கும் ஆச்சர்யகரமான சேர்க்கை உண்டாயிற்று. பூமி முழுவதும், தேர்களும் யானைகளும் குதிரைகளும் காலாட்களும் வெளியில் செல்ல, பாலர்களும் விருத்தர்களுமே மிச்சமாயிருப்பதினால் ஒருவரும் இல்லாதது போலாயிற்று. பரதர்களிற் சிறந்தவரே! பிறகு அந்தக்கௌரவர்களும் பாண்டவர்களும் ஸோமகர்களும் ஒரு பிரதிஜ்ஞையை ஏற்படுத்தி யுத்த தர்மங்களை நிலை நாட்டினார்கள். 'யுத்தஞ்செய்து முடிந்த பிறகு நமக்கு ஒருவருக்கொருவர் ப்ரீதியுண்டாகவேண்டும். ஸமமானவர்கள் யுத்தத்துக்காக எதிர்க்கவேண்டும். பின்னும், ஒருவனுக்காவது அந்யாய யுத்தம் எவ்விதத்தாலும் நேரக்கூடாது. பேச்சினால் சண்டையிடுவதில் முயல்கின்றவர்களோடு பேச்சினாலேயே எதிர்த்து யுத்தஞ்செய்யவேண்டும். சேனையின் மத்தியிலிருந்து ஓடிப்போனவர்கள் ஒருபொழுதும் கொல்லத்தக்கவரல்லர். தேராளி தேராளியோடும் யானைவீரன் யானைவீரனோடும் குதிரைவீரன் குதிரைவீரனோடும் காலாள் காலாளோடும் யுத்தம் செய்யவேண்டும். யுத்தவீரர்கள் வீரவாதங்களைச்செய்துகொண்டு சேர்க்கைக்கும் இஷ்டத்திற்கும் உத்ஸாஹத்திற்கும் பலத்திற்கும் தக்கபடி யுத்தம்செய்ய வேண்டும். நம்பிக்கைவைத்தவன்மீதும் பயந்தவன்மீதும் ஆயுதம் பிரயோகிக்கக்கூடாது. வேறொருவனோடு போர் புரிகின்றவனும் [1]அஜாக்ரதையுள்ளவனும் அவ்வாறே யுத்தத்தில் புறங்காட்டினவனும் ஆயுதமிழந்தவனும் கவசமுடைந்தவனும் ஒருகாலும் கொல்லத்தக்கவரல்லர். ஸாரதிகள்மீதும் குதிரைகள்மீதும் சஸ்திரங்களைக்கொண்டுவந்து கொடுக்கிறவர்கள்மீதும் பேரிகை அடிக்கிறவர்கள்மீதும் சங்கத்தை முழக்குகின்றவர்கள்

1 'சரணமடைந்தவனும்' என்பது வேறுபாடம்.

மீதும் எவ்விதத்தாலும் ஆயுதங்களைப் பிரயோகிக்கத்தகாது' என்று இவ்விதமாக அந்தக் கௌரவர்களும் பாண்டவர்களும் ஸோமகர்களும் ப்ரதிஜ்ஞைசெய்துகொண்டு ஒருவரைஒருவர்பார்த்து மிக்க வியப்படைந்தார்கள். பிறகு மஹாத்மாக்களான அந்தப்புருஷசிரேஷ்டர்கள் (குருக்ஷேத்திரத்தில்) பிரவேசித்துச் சேனையிலுள்ளவர்களோடு மிகவும் ஸந்தோஷமடைந்து மனத்தில் ஊக்கமுள்ளவர்களானார்கள்.

---

## இரண்டாவது அத்யாயம்.

## ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம். (தொடர்ச்சி.)



**(வியாஸர் திருதராஷ்டிரனுக்கு யுத்தத்தைப்பார்ப்பதற்குக் கண்கொடுப்பதாகக்கூறியதும், திருதராஷ்டிரன் யுத்தத்தைக் கேட்கமட்டும்விரும்பியதும், வ்யாஸர் ஸஞ்சயனுக்கு யுத்தவிஷயத்தில் ஸர்வஜ்ஞத்வத்தையளித்து யுத்தத்தைத் திருதராஷ்டிரனுக்குச்சொல்லும்படி ஏவித் துர்நிமித்தங்களுண்டாவதைக் கூறியதும்.)**

பிறகு மகிமையுடையவரும் எல்லாவேதங்களையுமறிந்தவர்களுள் சிறப்புற்றவரும் பாதகுலத்தில்பிறந்தவர்களுக்குப்பாட்டனாரும் (எல்லாவற்றையும்) நேராகப்பார்ப்பவரும் கீர்த்திபொருந்தியவரும் நடந்ததையும் நடக்கிறதையும் நடப்பதையும் அறிந்தவரும் ஸத்யவதியின் புத்திரருமான வியாஸமகரிஷி நடக்கப்போகிறகோரமானயுத்தத்திற்காகக் கீழ்த்திசையிலும் மேற்றிசையிலும்நிற்கின்ற இரண்டுசேனைகளையும்பார்த்து, அப்பொழுது ஏகாந்தத்திலிருந்துகொண்டு, துக்கிக்கின்றவனும் தைன்யமுற்றவனும் புத்திரர்களுடைய அநீதியைப் பற்றி ஆலோசிக்கின்றவனுமான திருதராஷ்டிரமகாராஜனைப்பார்த்து, "அரசனே! உன்னுடையபுத்ரர்களும் மற்றஅரசர்களும் காலனால் சூழப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் யுத்தத்தில் ஒருவரையொருவர் எதிர்த்து நாசஞ்செய்யவேபோகிறார்கள். பாரத! அவர்கள் காலனால் சூழப்பட்டுநாசமடைகையில் நீ காலத்தினுடைய மாறுபாட்டையறிந்து துக்கத்தில் மனத்தைச்செலுத்தாதே. அரசனே! புத்ர! நீ இந்தயுத்தத்தைப்பார்ப்பதற்கு விரும்புவாயாயின் உனக்குக் கண்ணைக்கொடுக்கிறேன். இந்தயுத்தத்தைப் பார்" என்று சொல்ல, திருதராஷ்டிரன், "பிரம்மரிஷிகளுள்சிறந்தவரே! ஞாதிகளுடைய வதத்தைப்பார்ப்பதற்கு நான் பிரியப்படவில்லை. ஆனால், உம்முடைய

அருளினால் இந்தயுத்தத்தை முழுதும் நான் கேட்கக்கடவேன்" என்று பிரார்த்தித்தான். அந்தத்திருதராஷ்டிரன் யுத்தத்தைப் பார்ப்பதற்குவிரும்பாமல் கேட்பதற்குவிரும்புமளவில் வரமளிக்கும் பிரபுவானவ்யாஸர் ஸஞ்சயனுக்கு ஒருவரத்தைக் கொடுத்தார். வ்யாஸர், "ராஜனே! இந்தஸஞ்சயன் உனக்கு இந்தயுத்தத்தைச் சொல்லுவான். இவனுக்கு யுத்தத்தில் எல்லாவிஷயமும் கண்ணுக்குப்புலப்படும். அரசனே! ஸஞ்சயன் ஞானக்கண்ணையடைந்து யுத்தத்தை உனக்கு உரைப்பான். ஸர்வஜ்ஞனுமாவான். வெளிப்படையாகவோ ரஹஸ்யமாகவோ பகலிலோ இரவிலோ (நடக்கும்) எல்லாவற்றையும் மனத்தினாலேஎண்ணப்பட்டாலும் ஸஞ்சயன் அறியப்போகிறான். இவனைச் சஸ்திரங்கள் பிளவா. இவனைச் சிரமம் வருத்தாது. இந்த ஸஞ்சயன் உயிருடன் இந்தயுத்தத்தினின்று விடுபடப்போகிறான். பரதஸ்ரேஷ்டனே! இந்தக்கௌரவர்களுக்கும், எல்லாப்பாண்டவர்களுக்கும் நான் கீர்த்தியைப் பிரஸித்தப்படுத்தப்போகிறேன். நீ துயரமடையாதே. நரசிரேஷ்டனே! இது தெய்வச்செயல். நீ துயரப்படத்தகாது. இது அடக்குவதற்குமுடியாதது. எங்குதர்மமோ அங்குஜயம்" என்றுகூறினார். மகிமைபொருந்தியவரும் மிக்க பாக்கியசாலியும் கௌரவர்களுக்குச் சிறந்தபாட்டனாருமாகிய அந்த வ்யாஸர் இவ்வாறுசொல்லிவிட்டுத் திரும்பவும் திருதராஷ்டிரனைப் பார்த்து, (பின்வருமாறு) சொல்லத்தொடங்கினார். "மகாராஜனே! இந்தயுத்தத்தில் பெரியநாசமுண்டாகப்போகிறது. அவ்வாறே இப்பொழுது பயத்தைக்கொடுக்கின்றநிமித்தங்களையும் காண்கிறேன். [1] சியேனங்களும் [2]க்ருத்திரங்களும் காக்கைகளும் [3]கங்கங்களும் கொக்குகளோடுசேர்ந்து த்வஜங்களுடையநுனிகளில் விழுகின்றன; கூட்டமும் கூடுகின்றன. பக்ஷிகள் ஆனந்தத்துடன் ஸமீபத்தில் ஸம்பவிக்கக்கூடியயுத்தத்தை எதிர்பார்க்கின்றன. இறைச்சியைத் தின்பவைகளானஜந்துக்கள் யானைகுதிரைகளுடைய மாம்ஸங்களைப் பக்ஷிக்கப்போகின்றன. பயங்கரங்களும் பயத்தைத்தெரிவிப்பவைகளுமான கழுகுகள் நடுப்பகலில் தெற்குத்திக்கைநோக்கி நான்குபக்கங்களிலும், 'கடா! கடா!' என்று சப்தத்தைவெளிப்படுத்திக்கொண்டு கூச்சலிடுகின்றன. பாரத! நாள்தோறும் காலைஸந்தியிலும் மாலைஸந்தியிலும் உதயாஸ்தமனகாலங்களில் சூரியனைக் [4]கபந்தங்களால்சூழப்பட்டதாகக் காண்கிறேன். வெளுப்புசிவப்பானஓரங்களுள்ளவைகளும் கறுத்திருக்கின்ற இடைவெளியுடையவைகளும்

1 2 3 கழுகுகளின் வகைகள். 4 தலைஇல்லாத சரீரங்கள்.

மின்னலோடுகூடியவைகளும் மூன்றுநிறமுடையவைகளுமான [1]பரிவேஷங்கள் மாலைக்காலத்தில் தவறாமல் சூரியனைச் சூழ்ந்துகொள்ளுகின்றன. (அமாவாஸ்யையில்) பாபகிரஹங்களால் ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறசூரியசந்திரர்களுக்கு இருப்பிடமானநக்ஷத்திரத்துடன்கூடியதும் இரண்டு ஸூர்யோதயகாலங்களைத்தொடாத [2]க்ஷயதிதியுடன் கூடியதுமான அஹோராத்திரத்தை நான்பார்த்தேன். அது பயத்தின் பொருட்டேயாகும். கார்த்திகைப்பௌர்ணமாஸியை ஒளியைஇழந்ததாகக்காண்கிறேன். செந்தாமரைநிறம்போன்ற நிறமுடைய ஆகாயத்தில் சந்திரன் அக்நியின்நிறம்போன்றநிறமுள்ளவனானான். வீரர்களும், பூமியில்பிரஸித்திபெற்றவர்களும் சௌர்யமுள்ளவர்களும் இருப்புலக்கைபோன்றகைகளையுடையவர்களுமான அரசர்களும் ராஜகுமாரர்களும் கொல்லப்பட்டுப் பூமியைவியாபித்துக்கொண்டு [3]உறங்கப்போகிறார்கள். இரவில் சண்டைபோடுகின்ற பன்றிபூனை இவ்விரண்டினுடைய பயங்கரமான மிக்கசப்தத்தை ஆகாயத்தில் நாள்தோறுங் கேட்கிறேன். தேவதாபிரதிமைகளும் நடுங்குகின்றன; சிரிக்கவும் சிரிக்கின்றன; வாய்களால் ரத்தத்தையும் கக்குகின்றன; வேர்க்கின்றன; கீழேயும்வீழ்கின்றன. அரசனே! அடிக்கப்படாமலே துந்துபிகள் உரக்க ஒலிக்கின்றன; குதிரைகளோடு சேர்த்துப்பூட்டப்படாமலே க்ஷத்திரியர்களுடைய மஹாரதங்கள் நகர்கின்றன; குயில்களும் [4]சதபத்ரங்களும் காடைகளும் பாஸங்களும் கிளிகளும் ஸாரஸபக்ஷிகளும் மயில்களும் கோரமான ஒலிகளை வெளியிடுகின்றன. ப்ருங்கிரிடிகள் என்று பெயர்கொண்ட கறுத்த விட்டில் பூச்சிகள் உலோகங்களை மூக்கினால் கொத்திக்கொண்டு குதிரைகளின் முதுகின்மீது உட்கார்ந்து கத்துகின்றன. அருணோதயகாலத்தில் நூறுநூறாகச் சலபங்களுடைய கூட்டங்கள் அதிகமாகக்காணப்படுகின்றன. இரண்டு ஸந்தியாகாலங்களிலும் திசைகள் எரிச்சலோடு கூடியனவாக விளங்குகின்றன. பாரத! மேகம் புழுதியையும் இறைச்சியையும் வர்ஷிக்கின்றது. அரசனே! நல்லோர்களால் கொண்டாடப்பட்டதும் மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றதுமான அருந்ததி நக்ஷத்திரமானது இதோ வஸிஷ்டநக்ஷத்திரத்திற்கு முந்திவிட்டது. அரசனே! இதோ சனியானவன் ரோஹிணியைப்பீடித்துக்கொண்டு நிற்கிறான். சந்திரனுடையகளங்கமானது நாசமடைந்துவிட்டது. ஆதலால் பெரியபயம் ஸம்பவிக்கப்போகிறது. மேகமில்லாத ஆகாயத்

---

1 சூரியனைச்சுற்றி வட்டமாயிருக்கும் ஒரு கோடு. 2 வேறுபாடம்.
3 மரிக்கப்போகிறார்கள் என்பதுபொருள். 4 ஒரு பறவை.

தில் மஹாகோரமான சப்தம் மிகுதியாகக் கேட்கப்படுகிறது. அழு கின்றவாகனங்களுடைய கண்ணீர்த்துளிகள் கீழே சிந்துகின்றன.

---

## மூன்றாவது அத்யாயம்.

## ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம். (தொடர்ச்சி.)



(வியாஸர் துர்நிமித்தங்களையும் ஜயிப்பவர்களுடைய வெற்றிக் குறிகளையும் திருதராஷ்டிரனுக்குக் கூறியது.)

கழுதைகள் பசுக்களிடத்தில் பிறக்கின்றன. புத்திரர்கள் தாய்களோடு ரமிக்கிறார்கள். காட்டிலுள்ள மரங்கள் பருவகாலம் வராமலிருக்கும்பொழுதே புஷ்பங்களையும் பலங்களையும் காண்பிக்கின்றன. இதற்குமுன் மக்களைப்பெறாதவர்களான கர்ப்பிணிகளும் மிக்கபயங்கரர்களான குழந்தைகளைப்பெறுகிறார்கள். நாய்முதலானமிருகங்கள் பக்ஷிகளோடு சேர்ந்து ஒன்றையொன்று தின்னுகின்றன. மூன்று கொம்புகளையுடையனவும் நான்கு கண்களையுடையனவும் ஐந்து கால்களையுடையனவும் இரண்டு ஆண்குறிகளையுடையனவும் இரண்டு தலைகளையுடையனவும் இரண்டு வால்களையுடையனவும் கோரப்பற்களையுடையனவுமாகப் பசுக்கள் அமங்களமாக உண்டாகின்றன. கருடன்கள் திறக்கப்பட்ட வாயும் அமங்களமான ஒலிகளும் மூன்றுகால்களும் கொண்டைகளும் நான்குகோரப்பற்களும் கொம்புகளுமுடையவைகளாக உண்டாகின்றன. அவ்வாறே மற்றப்பிராம்மவாதிகளுடைய ஸ்திரீகளும் உனது பட்டணத்தில் பருந்துகளையும் மயில்களையும் பெறுபவர்களாகக் காணப்படுகிறார்கள். அரசனே! பெண்குதிரை பசுவின்கன்றை உண்டுபண்ணுகின்றது. நாய் நரியை உண்டுபண்ணுகின்றது. ஒட்டகக்குட்டிகள் நாய்களை உண்டுபண்ணுகின்றன. கிளிகள் அமங்களமானசொற்களைச் சொல்லுகின்றன. சிலஸ்திரீகள் நாலைந்துபெண்களைப் பெறுகிறார்கள். பிறந்தவுடனே அந்தக்கன்னிகைகள் கூத்தாடுகிறார்கள்; பாடுகிறார்கள்; சிரிக்கிறார்கள். நீசஜாதியனைத்தையும்சேர்ந்தகூனர்களும் குருடர்களும் அதிகமானபயத்தைத்தெரிவித்துக்கொண்டு அட்டஹாஸஞ்செய்கிறார்கள்; கூத்தாடுகிறார்கள்; பாடுகிறார்கள். சஸ்திரங்களுடன்கூடின இந்தப்பிரதிமைகளும் காலத்தினால்தூண்டப்பட்டு ஒன்றையொன்று அடித்துக்கொள்ளுகின்றன. பாலர்கள் தடிகளைக்கையில்கொண்டு ஒருவரையொருவர்எதிர்த்துஓடுகிறார்கள். சண்டைசெய்யஎண்ணங்கொண்டு

கிருத்திரிமமான நகரங்களை ஏற்படுத்தி அவற்றில் ஒருவர் ஒருவருடைய நகரத்தை இடிக்கின்றார்கள். மரங்களில் தாமரைப்பூக்களும் கருநெய்தல்களும் ஆம்பல்களும் உண்டாகின்றன. நான்கு பக்கங்களிலிருந்தும் கொடியகாற்றுகள் வீசுகின்றன. புழுதியும் தணியவில்லை. அடிக்கடி பூமி நடுங்குகிறது. ஸூர்யனை ராகு வந்து அணுகுகிறது. அவ்வாறே கேதுவானது சித்திரைநக்ஷத்திரத்தைத் தாண்டியிருக்கிறது. அவ்விடத்திலிருந்துகொண்டு விசேஷமாகக் கௌரவர்களுடைய நாசத்தைக் காண்பிக்கிறது. மிக்க கோரமான தூமகேது க்ஷத்ரியநக்ஷத்திரமான புஷ்யத்தை ஆக்ரமித்துக்கொண்டு நிற்கிறது. அந்தப்பெரிய க்ரஹமானது இரண்டு சேனைகளுக்கும் கோரமான அமங்களத்தை உண்டுபண்ணப்போகிறது. அங்காரகன் மகநக்ஷத்திரத்திலும் பிருஹஸ்பதி சிரவணத்திலும் வக்கிரித்திருக்கிறார்கள். ஸூர்யபுத்ரனான சனியினால் பூர்வபல்குனிநக்ஷத்திரம் ஆக்ரமித்துப்பீடிக்கப்படுகிறது. சுக்ரன் பூரட்டாதியை ஆக்ரமித்துக்கொண்டு அதிகமாக விளங்குவதுடன் (பரிகம் என்கிற உபகிரஹத்தோடு)கூடி உத்தரட்டாதியை ஆக்கிரமிக்கப்பார்க்கிறான். கறுத்த நிறமுள்ள கேதுவென்கிற இரண்டாவது உபகிரஹமானது புகையுடன்கூடிய நெருப்புப்போல் நன்றாகஜ்வலித்துக்கொண்டு தேஜஸுள்ளதும் இந்திரனைத் தேவதையாகக்கொண்டதுமான கேட்டை நக்ஷத்திரத்தை ஆக்ரமித்து நிற்கிறது. க்ரூரகிரஹமான ராகுவானது கோரமாகஜ்வலித்துக்கொண்டு த்ருவநக்ஷத்திரத்தை வக்ரமாகச் சுற்றிவருவதுடன் சித்திராநக்ஷத்திரத்திற்கும் ஸ்வாதிக்கும் மத்தியிலிருந்துகொண்டு, ரோகிணியையும் (ஒரேநக்ஷத்திரத்திலிருக்கின்ற) சந்திர ஸூர்யர்கள் இருவரையும் பீடிக்கின்றது. அக்னியினுடைய காந்திபோன்ற காந்தியையுடையவனும் (மகத்திலிருக்கின்றவனுமான) அங்காரகன் அடிக்கடி வக்ரியாகிப் பிருஹஸ்பதியினாலே ஆக்ரமிக்கப்பட்ட சிரவணநக்ஷத்திரத்தை நன்றாகப் பூர்ணதிருஷ்டியினால் அடித்துக்கொண்டுநிற்கிறான். பூமியானது எல்லாப்பயிர்களாலும் மூடப்பட்டுப் பயிர்வகைகளின் மிகுதியையுடையதாயிருக்கிறது. (அந்தப்பூமியில்) யவதான்யங்கள் ஐந்துதலைகளுள்ளனவாயிருக்கின்றன. செந்நெற்பயிர்கள் நூறு தலைகளுள்ளனவாக இருக்கின்றன. எல்லாவுலகத்திற்கும் எவைகள் பிரதானமோ, இவ்வுலக (மனைத்தும்) எவைகளைச்சார்ந்திருக்கிறதோ அப்படிப்பட்ட பசுக்கள் கன்றுகளால் சுரப்பு உண்டுபண்ணப்பட்டு ரக்தத்தையே பெருக்குகின்றன. வில்லிலிருந்து ஜ்வாலைகள் வெளிப்படுகின்றன, கத்திகளும் மிகவும் ஜ்வ

ஸிக்கின்றன. ஆயுதங்கள் ஸமீபத்திலிருக்கிற யுத்தத்தை ஸ்பஷ்டமாகக்காண்பிக்கின்றன. சஸ்திரங்கள், ஜலம், கவசங்கள், த்வஜங்கள்இவைகளுடையகாந்திகள் அக்னியினுடைய காந்திகள்போலிருப்பதால் பெரிதானக்ஷயம் ஸம்பவிக்கப்போகிறது. அரசனே! பாரத! கௌரவர்களுக்குப் பாண்டவர்களோடுநேரக்கூடியயுத்தத்தில் பூமியானது ரக்தச்சுழலுள்ளதும் த்வஜங்களாகிற தெப்பங்களால் நிரம்பியதுமாகும். மிருகங்களும் பக்ஷிகளும் க்ஷத்திரியர்களுக்கு மிக்க பயத்தைக்காண்பித்துக்கொண்டு நன்றாக ஜ்வலிக்கின்றமுகங்களுள்ளனவாகத் திக்குக்களில் மிக்கபயங்கரமாகச் சப்திக்கின்றன. ஒரு சிறகும் ஒருகண்ணும் ஒருகாலுமுள்ளபக்ஷிகள் இராக்காலத்தில் பரபரப்புடன் ஆகாயத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு பயங்கரமாகக் கத்துகின்றன; ரத்தத்தையும்கக்குகின்றன. சிவந்தநிறமுள்ள அருணனுக்கொப்பான இரண்டுகிரகங்கள் ஒளியுள்ளஸப்தரிஷிநக்ஷத்ரங்களுடைய ஒளியைமறைத்துக்கொண்டு எரிகின்றவைபோலிருக்கின்றன. (ஒவ்வொரு ராசியிலும்)வர்ஷக்கணக்காயிருக்கின்ற பிருகஸ்பதி சனி ஆகிய இரண்டுகிரகங்களும் விசாகநக்ஷத்ரங்களின் ஸமீபத்திலிருந்து மிகஜ்வலிக்கின்றன. சந்திரஸூர்யர்இருவரும் இரண்டுநிதிக்ஷயத்தினால் பதின்மூன்றுவதுநாளில்ஸம்பவித்திருக்கிறதரிசத்தில் ராகுவினால் ஒரு தினத்தில் விழுங்கப்பட்டார்கள். பர்வகாலமல்லாதஸமயத்தில் ராகுவினால் பிடிக்கப்பட்ட சந்திரஸூர்யர்கள் பிரஜைகளுடைய க்ஷயத்தை விரும்புகிறார்கள். எல்லாத்திக்குகளும் நான்குபக்கங்களிலும் புழுதிமழைகளால் பிரகாசமற்றிருக்கின்றன. பயங்கரமான [1]உத்பாதமேகங்கள் இராக்காலத்தில் ரக்தத்தை வர்ஷிக்கின்றன. வேந்தனே! ஸ்வாதியினுடைய அம்சத்திலிருக்கின்ற க்ரூரக்ரஹமானராகு கொடியசெய்கைகளோடு (பதினாறுவதான) கிருத்திகாநக்ஷத்திரத்தைப்பிடிக்கிறது. தூமகேதுவை அனுஸரித்துக் காற்றுகளும் அடிக்கடி வீசுகின்றன. இந்தக்காற்றுகள் அழுகைக்குக்காரணமானபெரிய யுத்தத்தைக் காட்டுகின்றன. அரசனே! க்ஷத்திரியர்களுக்குநாசத்தை உண்டுபண்ணுகின்றவைகளும் அசுவினிதொடங்கி ஒன்பதொன்பதாகப் பிரிக்கப்பட்டவைகளும் முந்தினவைகளுமான எல்லா மூன்று நக்ஷத்திரங்களிலும் பிராணிகளுக்கு அடிக்கடி பயத்தைஉண்டுபண்ணிக்கொண்டு புதன் பிரவேசிக்கிறான். நான் இதற்குமுன் கிருஷ்ணபக்ஷத்தில் அமாவாஸ்யையைப் பதினான்குநாளிலும் பதினைந்துநாளிலும் பதினாறுநாளிலும் கண்டிருக்கிறேன். பதின்மூன்றுநாளில் ஸம்

[1] பிராணிகளுக்குஅசுபங்களைக்காட்டுகிற குறிகள்.

பவித்திருக்கிற இப்படிப்பட்ட அமாவாஸ்யையை நான் அறியேன். பதின்மூன்ருவதுநாளில் ஸம்பவித்திருக்கின்ற அமாவாஸ்யையில் சந்திரஸூர்யர்கள்இருவரும் ஒருதினத்திலேயே(ராகுவினல்) விழுங்கப்பட்டார்கள். பர்வமல்லாதகாலத்தில் கிரஹத்தால் பிடிக்கப்பட்ட இந்தச்சந்திரஸூர்யர்கள்இருவரும் பிரஜைகளை நாசப்படுத்துவார்கள். கிருஷ்ணபக்ஷசதுர்த்தசிதினத்தில் கொடிய மாம்ஸவர்ஷமானது உண்டாயிற்று. அந்தக்கிருஷ்ணசதுர்த்தசிதினத்தில் ராக்ஷஸர்கள் ரக்தங்களால்நிறைக்கப்பட்டவாயையுடையவர்களாகவும் திருப்தியற்றவர்களாகவும் இருக்கிருர்கள். நதிகள் ரக்தஜலத்தோடு எதிர்த்துச்செல்லுகின்றன. கிணறுகள் நுரைகளைக்கக்கிக்கொண்டு காளைகள்போலக் கர்ஜிக்கின்றன. கொள்ளிகள் இடியுடன்கூடி இந்திரனுடையவஜ்ராயுதத்துக்குச்சமமான ஒளியுடன்கீழேவிழுகின்றன. இந்த ராத்திரிசென்றுவிடிந்தவுடன் அநீதியின்பயனை அடையப்போகிறீர்கள். [1]மஹரிஷிகள், எல்லாத்திக்குக்களிலும் இருளடர்ந்திருக்கின்ற (இராக்காலத்தில் தீபமில்லாமையால்) பெரியபந்தங்களுடன் வீட்டினின்று வெளிப்பட்டுவந்து, (அவ்விதமானஉத்பாதங்களைக்கண்டு) அந்தஸமயத்தில், 'பூமியானது ஆயிரக்கணக்கான அரசர்களுடைய ரக்தத்தைப் பானம்பண்ணப்போகிறது' என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள். பிரபுவே! கைலாஸபர்வதமும் மந்தரபர்வதமும் ஹிமவத்பர்வதமுமாகிய இவைகளுடைய சிகரங்கள் ஆயிரமாயிரமாகப் பேரொலியோடு கீழேவிழுகின்றன. பூகம்பமுண்டாகுங்காலத்தில் அதிகமாகவிருத்தியடைகின்றநான்குஸமுத்திரங்களும் தனித்தனியே பூமியை நிலைகுலையச்செய்துகொண்டு கரையைத் தாண்டுகின்றவைபோல இருக்கின்றன. கொடியகாற்றுகள் பருக்கைக்கற்களையிறைத்துக்கொண்டும் மரங்களை முறித்துக்கொண்டும் வீசுகின்றன. கிராமங்களிலும் நகரங்களிலுமுள்ள [2]சைத்யவிருக்ஷங்கள் பெருங்காற்றுகளாலும் இடிகளாலும் அடிக்கப்பட்டும் நாற்புறத்திலும் ஒடிக்கப்பட்டும் விழுகின்றன. பிராம்மணர்களால் ஹோமஞ்செய்யப்பட்ட அக்னி நீலமாகவும் சிவப்பாகவும் மஞ்சள்நிறமாகவுமிருக்கின்றது. மேலும், அந்தஅக்னியானதுஇடமாகச் சுழலு

---

1 'அடர்ந்தஇருளில் எல்லாத்திக்குகளிலும் ஒன்ருேடொன்றுநெருங்கின பெரியஉற்கைகள்புறப்பட்டால் அப்பொழுது பூமியானது ஆயிரக்கணக்கான அரசர்களின்ரத்தத்தைப் பானம்பண்ணுமென்று மஹரிஷிகளால்சொல்லப்பட்டிருக்கிறது' என்றும் கொள்ளலாம்.

2 நாற்புறமும் குறடுகட்டி நடுவில்வைத்து வளர்க்கப்படுகிறமரம்.

கின்றஜ்வாலையுள்ளதாகவும் துர்க்கந்தமுள்ளதாகவும் பயங்கரமான சப்தத்தைவெளியிடுகின்றதாகவுமிருக்கின்றது. அரசனே! ஸ்பர்சங்களும் கந்தங்களும் ரஸங்களும் விபரீதமாயிருக்கின்றன. கொடிய மரங்கள் அடிக்கடி நடுக்கமுற்றுப் புகையை வெளியிடுகின்றன. அவ்வாறே பேரிமுதலியவாத்தியங்களும் தணலைப்பொழிகின்றன. (புஷ்பங்களாலும் தளிர்களாலும்) நிறைந்தமரங்களுடைய நுனிகளில் நான்குபக்கங்களிலும் மேற்புறத்தில் காக்கைகள் இடமாகவட்டமிட்டுக்கொண்டு உக்கிரமாகக்கத்துகின்றன. பக்ஷிகள், '[1]பக்வா, பக்வா' என்று மிகவும் அதிகமாய் அடிக்கடி கூச்சலிடுகின்றன; அரசர்களுடையநாசத்தின்பொருட்டு த்வஜங்களுடைய நுனிகளில் வந்து உட்காருகின்றன. மதம்கொண்டயானைகள் தியானஞ்செய்துகொண்டும் (ஜலமலங்களைப்) பெருக்கிக்கொண்டும் நடுக்கமுற்றும் இருக்கின்றன. எல்லாக்குதிரைகளும் வாட்டமுற்றிருக்கின்றன. யானைகளும் மிக்க வெயர்வையுடனிருக்கின்றன. பூஸம்பந்தம்பெற்றதும் ஸ்வர்க்கஸம்பந்தம்பெற்றதும் அந்தரிக்ஷஸம்பந்தம்பெற்றதுமான இத்தகைய மூன்றுவகைத்துர்நிமித்தங்களும் அரசர்களுடைய நாசத்தின்பொருட்டு எப்பொழுதும் உண்டாகின்றன. பாரத! இவற்றை நீ கேட்டு இவ்வுலகம் முழுதும் நாசத்தைஅடையாமலிருக்கும்படி ஸமயோசிதமான கார்யத்தைச்செய்வதற்கு முயற்சிசெய்" என்றுகூறினர்.

திருதராஷ்டிரன் பிதாவினுடைய இந்த வார்த்தையைக் கேட்டு அவரைப்பார்த்து, "மனிதர்களுக்கு க்ஷயம் உண்டாகப் போகிறதென்று முந்தியே தெய்வத்தினல் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதென்று நான் எண்ணுகிறேன். அரசர்கள் யுத்தத்தில் க்ஷத்திரியர்களுக்குரிய தர்மத்தினல் கொல்லப்படுவார்களாகில் வீரலோகத்தையடைந்து, ஸுகத்தையே அடைவார்கள். புருஷசிரேஷ்டர்கள் பெருஞ்சண்டையில் பிராணனைஇழந்து இம்மண்ணுலகில் கீர்த்தியையும் பரலோகத்தில் நெடுங்காலம் மிக்கஸுகத்தையும் பெறுவார்கள்" என்றுசொன்னன். ராஜசிரேஷ்டரே! கவிசிரேஷ்டரானவ்யாஸமஹரிஷி, "இது அவ்விதந்தான் ஆகத்தக்கது" என்று, சொல்லிவிட்டுப் புத்திரனனதிருதராஷ்டிரனுக்காக அதிகமாகச்சிந்திக்கலானர். அவர் அவ்வாறு ஒருமுகூர்த்தகாலம் தியானஞ்செய்துவிட்டு மறுபடியும் திருதராஷ்டிரனைப்பார்த்து, "ராஜேந்திர! ஸந்தேஹமில்லாமல் காலம் உலகத்தை நாசஞ்செய்கிறது; மறுபடியும் உலகங்

---

[1] 'இவை பறவைகத்தும் ஒலிக்குறிப்பு; 'மரணம் நெருங்கியவர்களுக்குத்தம்' என்பது பழைய உரை.

களை உண்டுபண்ணுகின்றது. இவ்வுலகில் ஒன்றும் நிலையுள்ளதன்று. ஞாதிகளுக்கும் கௌரவர்களுக்கும் ஸம்பந்திகளுக்கும் நண்பர்களுக்கும் தர்மத்தைவிட்டுவிலகாதவழியை நீ காண்பிப்பாயாக. தடுப்பதில் நீ திறமையுள்ளவன். ஞாதிவதத்தை மிகவும்இழிவானதென்று சொல்லுகிறார்கள். எனக்கு விருப்பமில்லாதகார்யத்தை நீ செய்யாதே. அரசனே! இந்தக்காலமே உன்னுடையபுத்ரரூபமாகத் தோன்றியிருக்கிறது. வேதத்தில் கொலை சிறந்ததென்று புகழப்படவில்லை. எவ்விதத்தினாலும் அது நன்மையன்று. எவன் குலதர்மத்தையும் தன்சரீரத்தையும் நாசம்செய்வனோ அவனைத் தர்மம் நாசம்செய்யும். சக்திஇருக்கும்ஸமயத்தில்கூட ஆபத்காலத்தில்போலக் காலத்தினால் நீ வழிதப்பியிருக்கிறாய். அரசனே! இந்தவம்சம்அழிவதின்பொருட்டும் அவ்வாறே அரசர்களுடையநாசத்தின்பொருட்டும் அனர்த்தமே ராஜ்யரூபமாக உனக்கு ஏற்பட்டது. தர்மத்தை அதிகமாக அழிப்பவனாக இருக்கிறாய். தர்மத்தை உன் புத்திரர்களுக்குச் சொல்லு. ஒருவராலும் அவமதிக்கமுடியாதவனே! பாபத்தை அடைதற்குக்காரணமானராஜ்யத்தால் உனக்கு யாதுபயன்? புகழ்ச்சியையும் தர்மத்தையும் கீர்த்தியையும் பாதுகாத்துக்கொண்டு ஸ்வர்க்கத்தைஅடைவாய். பாண்டவர்கள் ராஜ்யத்தை அடையட்டும். கௌரவர்கள் சாந்தியைஅடையட்டும்" என்றுகூறினார்.

பிராம்மணோத்தமரான வ்யாஸமஹரிஷி இவ்வாறு சொல்லுகையில் வாக்கியங்களின் ஸாரத்தைஅறிந்தவனும் அம்பிகாபுத்திரனுமான திருதராஷ்டிரன் (அவருடைய) வாக்யத்தைப்புகழ்ந்து திரும்பவும் பின்வருமாறு சொல்லலானான். "தேவரீர் எவ்விதமாகஅறிகிறீரோ அவ்விதமாகவே நானும் அறிந்திருக்கிறேன். பிறர்களும் நம்மவர்களுமாகிய இருதிறத்தார்களுடைய இருப்புஅழிவுகளை நான் உள்ளபடி அறிந்திருக்கிறேன். ஐயா! உலகமானது தன்காரியம்வந்தவுடன் மதிமயக்கங்கொள்ளுகிறது. என்னையும் தேவரீர் லோகத்துக்கு உட்பட்டவனாகவே எண்ணும். ஒப்பற்றமகிமையுடையவரான உம்மைப் பிரார்த்திக்கிறேன். ஸர்வஜ்ஞரான தேவரீரே எங்களுக்குக் கதி; நல்வழியைக்காட்டுகிறவர். அப்படிப்பட்ட என்புத்திரர்கள் எனக்கு வசப்படுகிறார்களில்லை. அவர்கள் அதர்மத்தைச்செய்யத்தகாதென்பதே என்னுடைய எண்ணம். தேவரீரே தர்மம்; பரிசுத்தமான யசஸ்; கீர்த்தி; தைரியம்; ஸ்மிருதி; மேலும் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் பூஜிக்கத்தக்க பாட்டனார்" என்றான். வ்யாஸர், "விசித்ரவீரியனுடைய புத்திரனே! அரசனே! உன்மனத்

தில் இருப்பதை உன்னிஷ்டப்படிசொல். உன் ஸந்தேகத்தைப்போக்குவேன்" என்றுசொல்ல, திருதராஷ்டிரன், "பகவானே! போரில் வெற்றிபெறுகிறவர்களுக்குள்ள அடையாளங்கள் எல்லாவற்றையும் உண்மையாகக்கேட்கவிரும்புகிறேன்" என்றுவினவினன். வ்யாஸர் சொல்லத்தொடங்கினர். "அக்னியானது நிர்மலமான காந்தியுடையதும் உயர்ந்திருக்கின்றகிரணங்களுள்ளதும் வலமாகச்சுற்றுகிற ஜ்வாலையுள்ளதும் புகையில்லாததுமாயிருக்கும். ஆகுதிகளுடையபரிசுத்தமான கந்தங்களும் அதிகமாகவீசும். இதை வரப்போகின்றஜயத்துக்கு அறிகுறியாகச் சொல்லுகிறார்கள். சங்கங்கள் கம்பீரமான கோஷமுள்ளவைகளும் மிருதங்கங்கள் மிக்கநாதமுள்ளவைகளுமாக ஒலித்தலும் ஸூர்யனும் சந்திரனும் மாசற்றகிரணங்களுடன்விளங்குதலும் வரப்போகின்றஜயத்தினுடைய அடையாளமென்று சொல்லுகிறார்கள். அரசனே! பிரயாணம் புறப்பட்டவர்களுக்கும் புறப்படுகிறவர்களுக்கும் காக்கைகளுடையவாக்குக்கள் வெளிப்படுதல் விரும்பத்தக்கது. புறப்படுகின்றவர்களுக்குப் பின்புறத்திலிருந்துகத்துகின்ற காக்கைகள் போகிறவர்களைத் துரிதப்படுத்துகின்றன. புறப்படப்போகிறவர்களுக்குமுன்னுலிருந்து கத்துகின்றகாக்கைகள் பிரயாணத்தைத்தடுக்கின்றன. மங்களகரமான வாக்குகளுள்ளபக்ஷிகளும் ராஜஹம்ஸங்களும் கிளிகளும் அன்றில்களும் சதபத்திரங்களும் எந்த யுத்த(ப்ரயாண)த்தில் வலம்வருகின்றனவோ அந்தயுத்தத்தில் ஜயம் நிச்சயமென்று பிராம்மணர்கள் சொல்லுகிறார்கள். எவர்களுடைய ஸேனையானது அலங்காரங்களாலும் கவசங்களாலும் கொடிமரங்களாலும் ஸுகரமானத்வனிகளாலும் குதிரைகளினுடைய கனைப்புகளாலும் பிரகாசிப்பதாகவும் பார்க்கமுடியாததாகவும் இருக்கின்றதோ அவர்கள் பகைவர்களைவெல்வார்கள். பாரத! எந்தயுத்தவீரர்களுக்கு ஸந்தோஷமுள்ளவாக்குகளும் அவ்வாறேபலமும் விருத்தியடைகின்றனவோ, பூமாலைகளும் வாடாமலிருக்கின்றனவோ அவர்களே யுத்தமாகிறஸமுத்திரத்தைத் தாண்டுகிறார்கள்.(யுத்தரங்கத்தில்) பிரவேசிக்கஎண்ணங்கொண்டவர்களுக்குப் பிரயாணகாலத்தில் வாயஸமானது இடப்பக்கத்திலும் வலப்பக்கத்திலும் பின்புறத்திலுமிருந்து (அதிகமாகக்கத்தினல்,) காரியஸித்தியைத் தெரிவிக்கிறது; எதிரிலானல் தடுக்கிறது. சப்தம், ரூபம், ரஸம், ஸ்பர்சம், கந்தம்இவைகள் வேறுபடாமல் மங்களகரமாயிருப்பதும் எப்பொழுதும் யுத்தவீரர்களுக்குச்சந்தோஷமுண்டாவதும் இப்புவியில் ஜயசீலர்களுக்குரிய அடையாளம். அரசனே! காற்றுகள் அனுஸரித்து வீசுதலும்,

அவ்வாறே மேகங்களும் பக்ஷிகளும் [1]இந்திரவில்லுகளும் பின் தொடர்ந்துசெல்லுதலுமாகிய இவை ஜயசீலர்களுக்குரிய அடையாளங்கள். அரசனே! மரிக்கப்போகின்றவர்களுக்கு (இவைகளெல்லாம்) விபரீதங்களாக ஸம்பவிக்கின்றன. ஸேனைசிறிதாயினும் பெரிதாயினும் யுத்தவீரர்களின்கூட்டத்திற்கு முக்யமாகஸந்தோஷமிருப்பது ஜயத்திற்குரியலக்ஷணமாகும். இது நிச்சயமென்று சொல்லப்படுகிறது. ஸேனைமிகப்பெரிதாகஇருந்தாலும் (அச்சேனையில்) ஒருவன் தைர்யமில்லாதவனயிருப்பானகில், (அச்சேனைமுழுவதையும்) தைர்யமில்லாததாகச்செய்கிறான். மிக்கசூரர்களான யுத்தவீரர்களும் உத்ஸாஹத்தையிழந்தஅந்தஸேனையோடுகூடவே உத்ஸாஹத்தையிழந்தவர்களாகச்செய்யப்படுகிறார்கள். மிகவும் பங்கமடைந்திருக்கிறபெரிய ஸேனையானது ஜலத்தினுடையபெரியவேகம்போலவும் பயந்தமான் கூட்டங்கள்போலவும் அச்சமயத்தில் திருப்பமுடியாததாகிறது. நெருக்கமானயுத்தத்தில் பெரியசேனையை (மீண்டு) ஸமாதானப்படுத்துவதற்கு ஒருகாலும்முடியாது. நன்றாகக்கற்றறிந்தவர்களும், (மனந்தளர்ந்த மற்றொருவனைக்கண்டு,) ‘இவன்மனம்தளர்ந்தான்’ என்று எண்ணி மனம்தளர்ச்சியடைகிறார்கள். பயந்தவர்களையும் தோல்வியடைந்தவர்களையும்பார்த்தால் மறுபடியும் பயம்விருத்தியடைகிறது. வேந்தனே! முழுதும்தோல்வியடைந்தஸேனையானது விரைவாகத் திக்குகளில்ஓடுகிறது. பெரியஸேனையானது சூரர்களாலும் நிலைநிறுத்துவதற்கு இயலாததாகிறது. மேதாவியான அரசன் எப்பொழுதும் ஊக்கத்துடன் பெரிய சதுரங்கஸேனையை உபசரித்து உபாயத்தைமுன்னிட்டுக்கொண்டு (ஜயத்தில்) முயற்சிக்கவேண்டும். அரசனே! உபாயத்தால்உண்டாகும்ஜயத்தைச் சிறந்ததாகச் சொல்லுகிறார்கள். பேதத்தினால் உண்டாகும்ஜயத்தை மத்தியமமாகச் சொல்லுகிறார்கள். யுத்தத்தினால்ஏற்படும்இந்தஜயமானது அதமம். பரஸ்பரம் கைகலந்துபோர்புரிவது பெரியதோஷம். அதற்கு நாசமே முதன்மையானதென்றுசொல்லப்படுகிறது. தம்பலத்தையும்சத்துருபலத்தையும்அறிந்தவர்களும் நல்லசந்தோஷமுள்ளவர்களும் புத்திரமித்திரகளத்திராதிகளிடத்தில்பற்றுதலற்றவர்களும் (ஜயம்அல்லது மரணம்இவ்விரண்டில்ஒன்றில்) நல்லநிச்சயமுள்ளவர்களுமான சூரர்கள் ஐம்பதுபேர்கள் இருந்தாலும் பெரியசேனையை நாசம்செய்வார்கள். அல்லது முன்வைத்தகாலைப்பின்வையாதவர்களான ஐந்து, ஆறு, ஏழுவீரர்களிருந்தாலும் பகைவர்களை ஜயிப்பார்கள். பாரத! பலமுள்ள

[1] இரட்டித்திருத்தலால் ‘மேகாః’ என்னும்பதம் விடப்பட்டது.

சிறகுகளுள்ளவைகதேயர், பெரிதாயினும் சத்துருவின்படையை அழிப்பது (தம்மாலேயேஸாத்யம்) என்பதைக்கண்டு பலரைத்தமக்கு உதவியாகவிரும்பவில்லை. சேனை அதிகமாயிருப்பதினாலேயே ஜயம் எப்பொழுதும்உண்டாகாது. ஜயமென்பது அநிச்சயமே. தெய்வமே இந்தவிஷயத்தில் முக்கியமான காரணம். யுத்தத்தில்ஜயம் பெற்றவர்களே கிருதகிருத்தியர்களாகிறார்களன்றோ?" என்றுகூறினார்.

நான்காவது அத்யாயம்.

## ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம். (தொடர்ச்சி.)



**(ஸஞ்சயன் திருதராஷ்டிரனுக்குப் பூமியினுடையதன்மையைச் சொல்லியது.)**

வியாஸர் புத்திசாலியான திருதராஷ்டிரனிடம் இவ்வாறு சொல்லிவிட்டுச் சென்றார். திருதராஷ்டிரனும் அதைக்கேட்டுத் தியானத்தையேஅடைந்தான். பரதர்களிற்சிறந்தவரே! அவன் ஒரு முகூர்த்தகாலம் தியானஞ்செய்து அடிக்கடிபெருமூச்சுவிட்டுக்கொண்டு, பரிசுத்தசித்தமுள்ளவனைஸஞ்சயனைப்பார்த்து, "ஸஞ்சய! இவ்வுலகில் சூரர்களும் யுத்தத்தைப் புகழ்கிறவர்களுமான இந்த அரசர்கள் நானாவிதமான ஆயுதங்களால் ஒருவரையொருவர் அடித்துக்கொள்ளுகிறார்கள். அரசர்கள், பூமிநிமித்தமாக அடித்துக்கொண்டு உயிரையிழந்து யமனுடையலோகத்தை விருத்திபண்ணுகிறார்கள்; அமரிக்கையை அடைகிறார்களில்லை. பூமியிலுள்ள ஐசுவரியத்தைவிரும்பி ஒருவரையொருவர் பொறுக்கிறார்களில்லை. ஸஞ்சய! பூமியானது அதிககுணமுடையதென்றுஎண்ணுகிறேன். அதை எனக்குச் சொல். அதிகமானகாற்றுவெய்யில்தான்யங்களின் நிறைவு இவைகளுள்ள குருக்ஷேத்திரத்தில் அனேகஆயிரங்கள் பத்துலக்ஷங்கள் கோடிகள் ஆயிரம்கோடிகளாகக்கணக்கிடப்பட்டிருக்கிறஉலகத்திலுள்ளவீரர்கள் கூடியிருக்கின்றார்கள். ஸஞ்சய! இவர்கள் எங்கிருந்துவந்திருக்கிறார்களோ அந்தநாடுநகரங்களுடைய பரிமாணத்தை உள்ளபடிகேட்க விரும்புகிறேன். நீ அளவற்றதேஜஸுள்ளவரும் பிரம்மரிஷியுமான அந்தவ்யாஸருடையமகிமையினால் கிடைத்த விளக்குப்போலப்பிரகாசிக்கின்ற திவ்யபுத்தியினால் அஜ்ஞானமாகிற இருள்நாசமடையும்படிசெய்யப்படுதலால் எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கும்தன்மையுள்ள ஞானக்கண்ணையுடையவனாயிருக்கிறாய்" என்றுகேட்க, ஸஞ்சயன் சொல்லலானான்.

"மஹாபுத்திமானே! என்னுடைய அறிவுக்குத்தக்கபடி பூமியினுடைய குணங்களை உமக்குச் சொல்லுவேன். பாதரிஷபரே! உமக்கு வந்தனம். சாஸ்திரத்தைக்கண்ணாகக்கொண்டு பாரும். இந்தப்பூமண்டலத்தில் பிராணிகள் ஜங்கமங்களென்றும் ஸ்தாவரங்களென்றும் இரண்டுவிதம். ஜங்கமங்களுக்கு முட்டை புழுக்கத்தால் உண்டாகும் வேர்வை கருப்பையென மூன்றுவிதமானஉத்பத்திஸ்தானங்கள் இருக்கின்றன. எல்லாஜங்கமங்களுள்ளும் ஜராயுஜங்கள் சிறந்தவைகள். ஜராயுஜங்களுள்ளும் மனிதர்கள் சிறந்தவர்கள்; பசுக்களும் சிறந்தவைகள். அரசரே! எவைகளிடத்தில் வேதோக்தமான யஜ்ஞங்கள் நிலைபெற்றிருக்கின்றனவோ அப்படிப்பட்ட பசுக்களுக்குப் பற்பலரூபமுள்ளவைகளான பதினான்குபேதங்கள் உண்டு. கிராமவாஸிகளுள் புருஷர்கள் சிரேஷ்டர்கள். ஆரண்யவாஸிகளுள் ஸிம்மங்கள் சிறந்தவைகள். எல்லாப்பிராணிகளுக்கும் ஒன்றையொன்றுஆசிரயித்தே ஜீவனம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. [1] உத்பிஜ்ஜங்கள் ஸ்தாவரங்களென்று சொல்லப்படுகின்றன. அவைகளுடையவகுப்புகள் மரங்கள், [2]குல்மங்கள், [3]லதைகள், [4]வல்லிகள், திருணஜாதிகளானமூங்கில்களென ஐந்தாம். அவைகளுடைய பத்தொன்பது பேதங்களும் பஞ்சமஹாபூதங்களுடன்சேர்ந்து இருபத்துநான்குவிதங்களாகின்றன. இந்த இருபத்துநான்குபேதங்களும் இருபத்துநான்கு அக்ஷரங்களுள்ள உலகங்களுக்குஸம்மதமான காயத்ரியென்று சொல்லப்படுகின்றன. பரதசிரேஷ்டரே! எல்லாக்குணங்களும் நிரம்பியதும் பரிசுத்தமுமான இந்தக் காயத்ரியை உலகத்தில் எவன் உள்ளபடி அறிவனோ அவன் அழியமாட்டான். இவைகளுள் அரண்யத்தில் வஸிப்பவைகள் ஏழு; கிராமத்தில்வஸிப்பவைகள் ஏழு; ஸிம்மங்கள் புலிகள் பன்றிகள் எருமைக்கடாக்கள் யானைகள் கரடிகள் வானரங்கள் இவ்வேழும் அரண்யத்தில்வஸிப்பவைகளாக எண்ணப்படுகின்றன. அரசரே! பசு வெள்ளாடு செம்மறியாடு மனிதர்கள் குதிரைகள் கோவேறுகழுதைகள் கழுதைகள் இவையேழும் கிராம்யபசுக்களென்று ஸாதுக்கள் கூறுகிறார்கள். அரசரே! முற்கூறப்பட்ட இந்தப்பதினான்குவிதமான பசுக்களும் கிராமத்திலும்அரண்யத்திலும் வஸிப்பவைகள் எல்லாம் பூமியிலேயே

---

1 மேலேதோன்றும் செடிகொடிமரம்முதலியவைகள்.

2 நாணல் தர்ப்பைமுதலியபுதர்கள்.

3 மரங்களில்ஏறிப்படரும் கொடிகள்.

4 பூமியில் படர்ந்து ஒருவருஷம்வரை இருக்கக்கூடிய பறங்கிமுதலியவை.

உண்டாகின்றன. எல்லாம் பூமியிலேயே அழிகின்றன. பிராணிகள் அனைத்துக்கும் பூமியே ஆதாரம். பூமியே சாஸ்வதமாயுள்ளது.எவ னுக்குப் பூமியிருக்கிறதோ அவனுக்கு ஜங்கமஸ்தாவரஸ்வரூபமான உலகமனைத்தும் வசப்படுகிறது. அந்தப்பூமியினிடத்தில் மிக்கபோா வலுள்ள அரசர்கள் ஒருவரைமற்றொருவர் கொல்லுகிறார்கள்'' என் றான்.

---

## ஐந்தாவது அத்யாயம்.

## ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம். (தொடர்ச்சி.)



(ஸஞ்சயன் திருதராஷ்டிரனுக்குப் பஞ்சபூதங்களுடைய குணங்களை யும் ஜம்பூத்வீபத்தின் அளவுமுதலியவற்றையும் சுருக்கமாகச் சொல்லியது.)

திருதராஷ்டிரன், ''ஸஞ்சய! ப்ரமாணங்களையறிந்தவனே! நதிகள் பர்வதவங்கள் தேசங்கள் மற்றும் பூமியைஅடுத்திருப்பவை களின் பெயர்களையும் நான்குபக்கத்திலும் பூமியினுடையஅளவை யும் காடுகளையும் முழுதும் எனக்குச்சொல்'' என்றுகேட்க, ஸஞ் சயன் சொல்லத்தொடங்கினான்.

''மஹாராஜரே! கற்றறிந்தவர்கள் உலகத்திலுள்ளஎல்லாவஸ் துக்களும் இந்தஐந்துமஹாபூதங்களென்றும் ஸமமாயிருப்பவைக ளென்றும் சுருக்கமாகச் சொல்லுகிறார்கள். ஆகாயம், காற்று, நெரு ப்பு, ஜலம், பூமி இவையெல்லாம் மேன்மேல் ஒன்றுக்கொன்று ஒவ் வொருகுணத்தால் மேல்பட்டிருக்கின்றன. அவைகளுள் பூமியே தலைமைபெற்றுள்ளது. சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம்இவ்வைந் தும் பூமியினுடையகுணங்களென்று தத்வத்தைஅறிந்தரிஷிகளால் கூறப்பட்டிருக்கின்றன. அரசரே! ஜலத்தில் நான்குகுணங்களிருக் கின்றன. அதில் கந்தம்இல்லை. சப்தம் ஸ்பர்சம் ரூபம்மூன்றும் தேஜஸினுடையகுணங்கள். சப்தம்ஸ்பர்சம் இரண்டும் வாயுவிலிருக் கின்றன. ஆகாயத்தில் சப்தம்ஒன்றே. வேந்தரே! சேதனர்கள் நிலை பெற்றிருக்கின்ற இந்தஐந்துகுணங்களும் பஞ்சமஹாபூதஸ்வரூப மான எல்லா உலகங்களிலுமிருக்கின்றன. போக்தாவானசேதன னுக்கும் போக்யவஸ்துக்களுக்கும் எப்பொழுது [1]ஸாம்யம் ஏற்படுகி றதோ அப்பொழுது அவ்விரண்டும் ஒன்றையொன்று நாடுகிறதில்லை.

---

1 'ப்ரம்மபாவம்' என்பது பழையஉரை.

எப்பொழுது அவைகள் வைஷம்யத்தை அடைகின்றனவோ அப்பொழுது போக்தாக்களும் போக்யபதார்த்தங்களும் ஸ்வஸ்வரூபங்களால் ஸ்வரூபஸத்தையைப்பெற்று ஒன்றையொன்று அடைகின்றன. வேறுவிதமாகஇல்லை. பஞ்சமஹாபூதங்கள் நசிக்கும்பொழுது வரிசையாகத் தத்தம்காரணங்களில்லயமடைந்து நசிக்கின்றன. ஸ்ருஷ்டிகாலத்தில் அவைகளுண்டாகும்பொழுதும் தத்தம்காரணவஸ்துக்களிடமிருந்து வரிசையாகவே உண்டாகின்றன. எல்லாவஸ்துக்களும் அளவிடமுடியாதவைகள். ஆதலால் அவைகளுடையஸ்வரூபம் ஈஸ்வரனுடையதே. ஸித்தர்களும் பிரம்மாண்டத்தைப் பிளந்துகொண்டு ஸித்திபலத்தினால் எங்கெங்குசெல்லுகிறார்களோ அந்தஅந்தஇடத்திலும்கூடப் பஞ்சபூதஸ்வரூபமானபொருள்கள் காணப்படுகின்றன. அங்ஙனம் அளவிடுவதற்குஅஸாத்தியமானபிரபஞ்சத்திலுள்ள அவைகளுடையப்ரமாணங்களை மனிதர்கள் ஊகத்தினால் சொல்லுகிறார்கள். எந்தப்பதார்த்தங்கள், 'இவை இப்படிப்பட்டவை ; இவ்வளவு பரிமாணமுள்ளவை' என்றுநினைக்கப்படமுடியாதவையோ அவைகளை ஒருமனிதன் ஊகத்தினால்ஸாதிப்பதற்கு முயற்சிக்கக்கூடாது. பிரகிருதிகளைக்காட்டிலும் எது அப்புறப்பட்டிருக்கிறதோ அது சிந்திக்கமுடியாததான ப்ரம்மத்தினுடையலக்ஷணம். குருநந்தனரே ! ஸுதர்சனமென்கிற நாவல்மரம்இருப்பதனால் ஸுதர்சனம் என்று பெயர்பெற்றத்வீபத்தை அளவோடும் அமைப்போடும் நான் சொல்லப்போகிறேன். மஹாராஜரே ! அந்தத்வீபமானது அளவினால் இவ்வளவென்றுகாணக்கூடாததாகவும் சக்கரம்போல வட்டவடிவமுள்ளதாகவும் இருக்கிறது ; நதிஸமூகங்களாலும் மேகங்களுக்கொப்பான மலைகளாலும் பற்பலவடிவமுள்ளநகரங்களாலும் அவ்வாறே மனத்தைக் கவர்வனவாகிய தேசங்களாலும் வ்யாபிக்கப்பட்டதும் புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்தமரங்களுள்ளதும் தனதான்யங்கள் நிறைந்ததும் நாற்புறத்திலும் உப்புக்கடலால் சூழப்பட்டதுமாயிருக்கிறது. ஒருமனிதன் தன்முகத்தை எவ்வாறு கண்ணாடியில் பார்ப்பனோ அவ்வாறே ஸுதர்சனத்வீபமானது சந்திரமண்டலத்தில் காணப்படுகிறது. அந்தஸுதர்சனத்வீபத்தைக்காட்டிலும் ப்லக்ஷத்வீபமானது இரண்டுமடங்குபெரிது. சால்மலித்வீபமானது அதைவிட இரண்டுமடங்குபெரிது. பிப்பலத்வீபமானது அதைக்காட்டிலும் இரண்டுமடங்குபெரிது. எல்லாவிதமானஔஷதிகளாலும் நிறைந்ததும் பர்வதங்களால் நாற்புறங்களிலும் சூழப்பட்டதுமான குசத்வீபமும் அதைவிட இரண்டுமடங்குபெரிதானது. அதைத்தவிரமற்ற

வைகளெல்லாம் ஜலமயங்களாக அறியத்தக்கன. மற்றப்பூமிபாகம் சுருக்கமாகச்சொல்லப்பட்டது. அதைக்காட்டிலும்வேறான இந்தத் வீபத்தை இப்பொழுது சுருக்கமாகச்சொல்லப்போகிறேன். இதனை நீர் கேளும்" என்று கூறினான்.

## ஆறாவது அத்யாயம்.

## ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம். (தொடர்ச்சி.)



(ஸஞ்சயன் ஒன்பது கண்டங்களையும் அவற்றிற்கு எல்லையான மலைகளையும் மேருவையும் வர்ணித்தது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! சிறந்தபுத்தியையுடையவனே! சாஸ்திரத்தில்சொல்லியபடி த்வீபத்தினுடையநிலைமையானது உன்னால் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. நீ தத்வங்களை அறிந்தவனாயிருக்கிறாய்; எல்லாவற்றினுடைய விஸ்தாரத்தையும் நீகூறவேண்டும். முயல் போன்றவடிவமுள்ள இந்த ஜம்பூத்வீபத்தில் பூமியினுடையபரப்பு எவ்வளவு காணப்படுகிறதோ அதினுடைய அளவை நன்றாகச்சொல். பிறகு பிப்பலத்வீபத்தைச் சொல்" என்றுவினவினான். இவ்வாறு அரசன்கேட்க, அந்தஸஞ்சயன் பின்வரும் வாக்கியத்தை உரைக்கலானான்.

"மஹாராஜரே! ஹிமாசலம், ஹேமகூடம், பர்வதங்களுள் உத்தமமான நிஷதம், வைடூர்யமயமானநீலம், சந்திரனுக்கொப்பான சுவேதம், எல்லாத் [1]தாதுக்களாலும் விசித்திரமான சிருங்கவான் ஆகியஆறுவர்ஷபர்வதங்களும் இருபக்கத்திலும் கிழக்குமேற்கு ஸமுத்திரங்களை ஆக்ரமித்துக்கொண்டு கீழ்த்திசையில் நீண்டிருக்கின்றன. அரசரே! இந்தப்பர்வதங்கள் ஸித்தர்களாலும் சாரணர்களாலும் வாஸஸ்தானமாக அடையப்பட்டிருக்கின்றன. இந்தப்பர்வதங்களின் நடுவிலுள்ள (பூமியினுடைய) பரப்பு அநேகஆயிரம்யோஜனைகள். பாரதரே! அந்தஇடத்தில் புண்ணியமானதேசங்களும் அவ்விதமான [2]வர்ஷங்களுமிருக்கின்றன. அவ்விடங்களில் எல்லாப்பக்கங்களிலும் பற்பலஜாதிகளைச்சார்ந்த பிராணிகள் வஸிக்கின்றன. இதுதான் பாரதவர்ஷம் இதற்கு அப்புறப்பட்டது ஹைமவதம். அந்தவர்ஷமானது ஹிமவத்பர்வதத்திற்கு அப்புறத்திலிருப்பதுபற்றி

---

1 உலோகங்கள்.

2 பிராணிகளுக்குத் தனதான்யாதிகளையும் தேகசௌக்கியமுதலான எல்லா அபீஷ்டங்களையும் வர்ஷிப்பதனால் இப்பெயர்வந்தது.

ஹைமவதமென்று சொல்லப்படுவதுடன் கிம்புருஷாவாஸமென்றும் சொல்லப்படுகிறது. ஹேமகூடபர்வதத்துக்கு அப்புறத்திலிருக்கின்றவர்ஷத்தை ஹரிவர்ஷமென்று சொல்லுகிறார்கள். மஹாபாக்கியமுள்ளவரே! நீலபர்வதத்துக்குத்தென்புறமாகவும் நிஷதபர்வதத்துக்குவடபுறமாகவும் கிழ்த்திசையில் நீண்டதான மால்யவான்என்கிறபர்வதம் இருக்கிறது. அந்தமால்யவத்பர்வதத்துக்கு அப்புறத்தில் கந்தமாதனபர்வதம் இருக்கிறது. அவ்விரண்டுமலைகளின் இடையில் இவ்வளவினதென்றுகாணமுடியாததும் ஸூர்யனுக்கொப்பானதும் புகையற்றநெருப்புப்போன்றதுமான மேருவென்னும் ஸ்வர்ணமலையிருக்கிறது. அது பூமியின்கீழே பதினாறுயிரம்யோஜனை ஆழ்ந்ததென்றும் மேலே எண்பத்துநாலாயிரம்யோஜனை உயர்ந்ததென்றும் சிகரத்தில் முப்பத்திராயிரம்யோஜனை அகன்றதென்றும் எண்ணப்பட்டிருக்கிறது. அரசரே! அதன்தாழ்வரை எண்பத்துநாலாயிரம் யோஜனை பரப்புள்ளது. அந்தமேருவானது மேலும் கீழும் குறுக்காகவும் பூமியைக் கவர்ந்துகொண்டிருக்கிறது. பிரபுவே! அதனுடையபக்கங்களில் புண்ணியம்செய்தவர்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கிற ஆஶ்ரமங்களுள்ளபத்ராஶ்வம் கேதுமாலம் [1]பாரதவர்ஷம் உத்தரகுருதேசம்என இந்தநான்குத்வீபங்களும் நிலைபெற்றிருக்கின்றன. கருடனுடையகுமாரனை ஸுமுகன்என்கிறபக்ஷியானது காக்கைகளும் பொன்னிறமாயிருத்தலைக்கண்டு, 'இந்தமேருவானது உத்தமங்களும் மத்யமங்களும் அதமங்களுமானஎல்லாப்பக்ஷிகளுக்கும் வேற்றுமை இன்மையை உண்டுபண்ணுகிறது. ஆதலால், யான் இம்மலையை விட்டுவிடுகிறேன்' என்றுஆலோசித்தது. ஜ்யோதிர்மண்டலங்களுள் உத்தமமானஆதித்யன் எப்பொழுதும் அம்மலையைச் சுற்றிவருகிறான்; நக்ஷத்திரங்களுடன்கூடினசந்திரனும் சுற்றிவருகிறான்; வாயுவும் பிரதக்ஷிணமாகவருகிறது. மஹாராஜரே! அந்தமலையானது திவ்யமானபுஷ்பங்களும் பலங்களும் நிரம்பியதும் ஸ்வர்ணத்தால்அலங்கரிக்கப்பட்ட எல்லாக்ருஹங்களாலும் சூழப்பட்டதுமாயிருக்கிறது. வேந்தரே! அந்தமலையில் தேவகணங்களும் கந்தர்வர்களும் அஸுரர்களும் ராக்ஷஸர்களும் அப்ஸரஸ்திரீகளுடைய கூட்டங்களோடு கூடியவர்களாக எப்பொழுதும் விளையாடுகிறார்கள். அதில் பிரம்மாவும் ருத்ரரும் தேவராஜனை இந்திரனும் ஒருங்குகூடி அநேகதக்ஷிணைகளுள்ள பலவிதயஜ்ஞங்களால் தேவர்களைப் பூஜிக்கிறார்கள். தும்புரு,

1 'ஜம்பூத்வீபம்' என்பது மூலம்; பத்ராஶ்வம் முதலானவர்ஷங்களுடன் சேர்த்துச்சொல்லியிருத்தலால்,

நாரதர், விச்வாவஸு, ஹாஹா, ஹூஹூ (இவர்களெல்லோரும் அந்தமேருவை) அடைந்து, பற்பலவிதமானஸ்தோத்திரங்களால் தேவசிரேஷ்டர்களை ஸ்தோத்திரம்செய்கிறார்கள். மஹாத்மாக்களான ஸப்தரிஷிகளும் கச்யபப்பிரம்மாவும் ஒவ்வொரு பர்வகாலத்திலும் தவறாமல் அந்தமேருவைக்குறித்துச் செல்லுகிறார்கள். உமக்கு மங்களமுண்டாகட்டும். அரசரே! அதனுடையசிகரத்தில் கவிசிரேஷ்டரான சுக்ராசார்யர் அஸுரர்களோடுகூடி விளங்குகிறார். இந்த ரத்தினங்கள் அவருடையவை. இந்தரத்தினபர்வதங்களும் அவருடையவை. அவரிடமிருந்து பகவானானகுபேரன் நாலில்ஒருபாகத்தை அடைகிறான். அந்தத்தனத்தின் பதினாறில்ஒருபாகத்தின் ஓரம்சத்தை மனிதர்களுக்குக்கொடுக்கிறான். அந்தப்பர்வதத்திற்குவடபக்கத்தில் திவ்யமானதும் எல்லாருதுக்களிலும் உண்டாகக்கூடியபுஷ்பங்களால் நிறைந்ததும் செங்குத்துப்பாறைகளின்மீதுஉண்டானதும் மனத்திற்கினியதுமான கோங்குமரக்காடு இருக்கிறது. அதில் திவ்யமான பூதங்களால்சூழப்பட்டவரும் பார்வதியைஸஹாயமாகக்கொண்டவரும் பிராணிகளைப்படைப்பவரும் கால்வரையில்தொங்குகிறகொன்றைமாலையைத்தரித்தவரும் உதித்திருக்கும் மூன்றுஸூர்யர்கள்போன்ற மூன்றுகண்களால்ப்ரகாசத்தைஉண்டுபண்ணுகிறவரும் ஐசுவரியமுள்ளவருமான ஸாக்ஷாத்பசுபதியானவர் விளையாடுகிறார். அவரை உக்கிரமானதவமுள்ளவர்களும் நல்லவிரதமுள்ளவர்களும் ஸத்யவாதிகளுமானஸித்தர்கள் பார்க்கிறார்கள். அந்தமஹேசுவரர் கெட்டநடையுள்ளவர்களால் பார்க்கமுடியாதவரன்றோ? ராஜரே! அந்தமலையினுடைய உச்சியினின்று க்ஷீரதாரைபோன்றதும் [1]விச்வரூபியும் அபரிமிதமானதும் பயங்கரமானஇடிமுழக்கம்போன்ற சப்தமுள்ளதும் புண்யமானதும் சிறந்தபுண்யபுருஷர்களால் அடையப்பட்டுள்ளதும் மங்களகரமானதும் பகீரதனுடையபுத்திரியுமானகங்கையானது மலைச்சரிவினாலுண்டானவேகத்தோடு மங்களகரமான சந்திரனுடைய மடுவில் வீழ்ந்துகொண்டிருக்கின்றது. ஸமுத்திரம்போன்றதும் புண்யமுமான அந்தமடுவானது (மேருவினின்று வேகமாய்விழுகின்ற) அந்தக்கங்கையினால்தான் உண்டுபண்ணப்பட்டது. பர்வதங்களாலும் தாங்கமுடியாத அந்தக்கங்கையை அப்பொழுது மகேசுவரர் லக்ஷம்

---

1 'விச்வரூபா' என்பதுமூலம்; 'விஷ்ணுரூபி' என்பதுபழையவுரை. கங்கை ஸ்ரீவிஷ்ணுவின்ஸ்வரூபம்என்னும்விஷயத்தில் ஒருஸ்மிருதிச்லோகம் பழையஉரையில் எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. அதன்பொருளாவது, 'வ்யாபகரும் சித்ஸ்வரூபியும் நிரஞ்சனருமான ஸ்ரீவிஷ்ணுவே த்ரவரூபமாகிக் கங்காஜலமாகஇருக்கிறார்; இதில் ஸம்சயமில்லை' என்பது.

வருஷங்கள் தலையினாலேயே தாங்கினர். அரசரே! மேருவிற்குமேற் பாகத்தில் கேதுமாலவர்ஷமிருக்கிறது. அரசரே! அந்தமேருவிலேயே இருக்கிற ஜம்பூத்வீபத்தில் பெரிதான ஒருதேசமிருக்கிறது. பாரதரே! அங்குவஸிக்கின்றவர்களுக்குப் பதினாயிரம்வருஷம் ஆயுள். அங்கு வஸிக்கின்றபுருஷர்கள் பொன்னிறமுடையவர்கள். ஸ்திரீகளெல்லாம் அப்ஸரஸ்திரீகளுக்கு ஒப்பானவர்கள். அவர்கள் நோயும் துன்பமுமற்றவர்களும் எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளமனத்தையுடையவர்களுமாயிருக்கின்றார்கள். அவ்விடத்தில் மனிதர்கள் நன்றாகப்புடமிட்டிருக்கின்ற பொன்போன்றகாந்தியையுடையவர்களாகப் பிறக்கிறார்கள். குஹ்யகர்களுக்குத்தலைவனானகுபேரன் கந்தமாதனமலைச்சிகரங்களில் ராக்ஷஸர்களோடுகூடி அப்ஸரஸுகளுடைய கூட்டங்களால் சூழப்பட்டவனாகி ஸந்தோஷமடைகிறான். கந்தமாதனபர்வதத்தினுடைய பக்கத்தில் அதைத்தொடர்ந்துள்ள நீர்க்குமிழிபோன்றவைகளான வேறுசிறியகுன்றுகளிருக்கின்றன. அங்கு வஸிப்பவர்கள் பதினோராயிரம்வர்ஷம் எல்லையுள்ள ஆயுளையுடையவர்கள். வேந்தரே! அங்கு மனிதர்கள் கறுத்தநிறமும் காந்தியுமுள்ளவர்களும் அதிகபலமுள்ளவர்களுமாயிருக்கின்றார்கள். பெண்கள் எல்லோரும் தாமரைமலர்நிறம்போன்றநிறமுடையவர்களும் மிக்க இனியதோற்றத்தையுடையவர்களுமாயிருக்கின்றார்கள். நீலபர்வத்திற்கு வடபுறத்தில் சுவேதம்என்கிறவர்ஷமிருக்கின்றது. சுவேதவர்ஷத்தைக்காட்டிலும்அப்புறத்தில் ஹைரண்யகவர்ஷமிருக்கிறது. அரசரே! அதற்கு வடஎல்லையான சிருங்கவத்பர்வதத்திற்கு வடபுறத்தில் பற்பலதேசங்களால் சூழப்பட்டிருக்கிற ஐராவதமென்கிறவர்ஷமிருக்கிறது. மஹாராஜரே! தெற்கிலும்வடக்கிலுமுள்ள பாரதவர்ஷம் ஐராவதவர்ஷமென்கிறஇரண்டுவர்ஷங்களும் நன்றாகவளைத்துஒன்று சேர்க்கப்பட்டிருக்கிறவில்லின்இரண்டுநுனிகள்போலச் சேர்ந்திருக்கின்றன. மத்தியிலுள்ளது இளாவிருதவர்ஷம். இவ்வண்ணமாக, மத்தியில் ஐந்துவர்ஷங்கள் இருக்கின்றன. இந்த வர்ஷங்களுள் (முன்முன்னுள்ளதைவிட) மேல்மேல்கூறப்பட்ட வர்ஷமானது குணங்களால் மேற்பட்டது. அவைகளில் வஸிப்பவர்களுக்குத் தர்மகாமார்த்த ஸ்வரூபமான மூன்றுபுருஷார்த்தங்களால் நீண்டவாழ்வும் ஆரோக்கியமும் உண்டாகின்றன. பாதகுலத்தில் பிறந்தவரே! அந்தவர்ஷங்களில் பிராணிகள் வெவ்வேறு ஸ்வபாவமுள்ளவைகளாயிருக்கின்றன. மஹாராஜரே! இவ்வாறு இந்தப்பூமியானது பர்வதங்களால் நிறைக்கப்பட்டிருக்கிறது. மிகப்பெரிதான ஹேமகூடந்

தான் கைலாஸம்என்னும் ப்ரஸித்தமான மலை. அரசரே! குபேரன் குஹ்யகர்களோடுகூட ஸந்தோஷமாயிருக்கிற அந்தமலையில் குளிர்ந்ததும் மனத்துக்கினியதுமான கல்தரையில் தேவரிஷிகளுடைய கூட்டங்களால் பூஜிக்கப்பட்டவரும் தேஜஸ்வியுமான மஹாதேவர் பார்வதியோடு நித்யவாஸம்செய்கிறார். அந்தக்கைலாஸத்திற்கு, வடபுறத்திலிருக்கின்ற மைநாகபர்வதத்திற்குஅப்புறத்தில் மிகப்பெரியதும் அற்புதமானதும் மணிமயமாயிருக்கின்றதுமான ஹிரண்யச்ருங்கமென்கிற மலை இருக்கிறது. அதனுடையபக்கத்தில் பெரிதும் தேவஸம்பந்தம்பெற்றதும் வெண்ணிறமுள்ளதும் தங்கமயமானமணல்களுள்ளதும் மனத்துக்கினியதுமான பிந்துஸரஸ் என்கிற (தடாகம்) இருக்கிறது. பகீரதமஹாராஜன் பாகீரதியானகங்காதேவியைக் கண்டு, அனேகவர்ஷகாலம் வாஸம்செய்த அந்தஇடத்திலிருக்கும் யூபஸ்தம்பங்கள் ரத்நமயமாயிருக்கின்றன. யாகமேடைகளும் பொன்மயமாயிருக்கின்றன. அவ்விடத்தில் மிக்ககீர்த்தியுடையவனான இந்திரன் யாகம்செய்து ஸித்தியைப்பெற்றான். எந்தஇடத்திலிருந்துகொண்டு, ப்ரம்மதேவர் நிலைபெற்ற எல்லாஉலகங்களையும் படைத்தாரோ, எந்த இடத்தில் ஸூர்யன் நான்குபக்கங்களிலும் பிராணிகளால் உபாஸிக்கப்படுகிறானோ, எந்தஇடத்தில் நரநாராயணர்களும் பிரம்மதேவரும் மனுவும் ஐந்தாமவரான ஸ்தாணுவும் பிராணிகளால் உபாஸிக்கப்படுகிறார்களோ அந்தப்பிந்துஸரஸில், பிரம்மலோகத்தினின்று வெளிப்பட்டு மூன்றுமார்க்கங்களால் செல்லுகிற தேவகங்காநதியானது முதலில்தங்கிப் பிறகு [1]வஸ்வோகஸாரை, நளினி, பரிசுத்தமான ஸரஸ்வதி, ஜம்பூநதி, ஸீதை, கங்கை, ஸிந்துஎன ஏழுவிதமாகப் பிரிந்து செல்லுகின்றது. பிரபுவினுடைய அத்புதமானஇந்த (கங்கா) ஸ்ருஷ்டியானது மனத்தினால்எண்ணவும் முடியாதது. இந்தஇடத்தில் (ஸுக்ருதசாலிகள்) ஆயிரக்கணக்கானயுகமுடிவுகளில் யாகத்தை அனுஷ்டிக்கின்றார்கள். ஸரஸ்வதீநதியானது சிலவிடத்தில் கண்ணுக்குப்புலப்பட்டும் சிலவிடத்தில் புலப்படாமலும்இருக்கின்றது. திவ்யமானஇந்தஏழுகங்காநதிகளும் மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றிருக்கின்றன. இமயமலையில் ராக்ஷஸர்கள் வஸிக்கின்றார்கள். ஹேமகூடத்தில் குஹ்யகர்கள் வஸிக்கின்றார்கள். நிஷதபர்வதத்தில் [2] ஸர்ப்பங்களும், [3]நாகங்களும் வாஸம்செய்கின்றன. கோகர்ணம்என்

---

[1] ஸ்ரீராமாயணத்தில், 'ஹ்லாதினி, பாவனி, நளினி, ஸுசக்ஷுஸ், ஸீதை, ஸிந்து, பாகீரதி' என்னும்பெயர்கள்கூறப்பட்டுள்ளன. (ஸ்ரீராமாயணம் பாலகாண்டம், 43-வது ஸர்க்கம். 11-வது ஸ்லோகம்முதலியனபார்க்க.)

[2] ஒருதலையுள்ளவை. [3] பலதலையுள்ளவை.

னும்தபோவனமும் இருக்கின்றது. சுவேதபர்வதமானது தேவா ஸுரர்கள் அனைவருக்கும் (வாஸஸ்தானமென்று) சொல்லப்படுகிறது. நிஷதபர்வதத்தில் கந்தர்வர்களும் அவ்வாறே நீலபர்வதத்தில் பிரம்ம ரிஷிகளும் எப்பொழுதும் வாஸஞ்செய்கிறார்கள். மஹாராஜரே! சிருங்கவான் என்கிறபர்வதமானது தேவர்களுக்கு வ்யவஹாரஸ்தான மென்று சொல்லப்படுகிறது. மஹாராஜரே! இவ்வாறு தனித்தனி யாக இந்தஏழுவர்ஷங்களிருக்கின்றன. (அவைகளில்) ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமானபொருள்கள் இருக்கின்றன. அந்தவர்ஷங்களில் தேவமனுஷ்யஸம்பந்தமான செல்வப்பெருக்கானது பலவிதமாகக் காணப்படுகிறது. அது எண்ணுவதற்குமுடியாதது. நன்மையை அடையவிருப்பமுள்ளவனால் அவசியம் நம்பத்தக்கது. வேந்தரே! முயல்வடிவங்கொண்டதும் திவ்யமும் நீர் என்னைக் கேட்டதுமான [1] இந்தப்பூமிக்கு முற்கூறப்பட்டவைகளான தெற்கிலும்வடக்கிலு முள்ள பாரதவர்ஷம் ஐராவதவர்ஷம் இரண்டும் இரண்டுவிலாப்பக்கங் கள். [2]சாகத்வீபமும் காஶ்யபத்வீபமும் காதுகள். அரசரே! தாம்ர பர்ணிநதிக்கு உத்பத்திஸ்தானமும் ஸம்பத்துள்ளதுமான மலயபர்வ தமானது இந்தத்வீபத்திற்கு முயல் வடிவம்போன்ற இரண்டாவது த்வீபமாகக் காணப்படுகிறது" என்றுகூறினான்.

---

ஏழாவது அத்யாயம்.

## ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம். (தொடர்ச்சி.)



(உத்தரகுருதேசத்தையும் பத்ராசுவகண்டத்தையும் கூறியது.)

திருதராஷ்டிரன், "மஹாபுத்தியுள்ளவனே! ஸஞ்சய! இதற் குமேல் மேருவினுடையவடபாகத்தையும் கீழ்பாகத்தையும் மால்ய வான்என்கிற பர்வதத்தையும் முழுமையும்சொல்" என்றுவினவ, ஸஞ்சயன்சொல்லலானான்.

"அரசரே! நீலபர்வதத்திற்குத்தென்புறத்திலும் அவ்வாறே மேருவினுடையவடபாகத்திலும் புண்யங்களும் ஸித்தர்களால்அடை யப்பட்டவைகளுமான உத்தரகுருதேசங்களிருக்கின்றன. அங்கு மரங்கள் தேன்போன்றருசியுள்ளபழங்களையுடையவைகளும் எப்பொ ழுதும் நிறைந்திருக்கின்றபுஷ்பங்களையும் பழங்களையுமுடையவைக

---

[1] ஒருசொல் விடப்பட்டது. [2] 'நாகத்வீபம்' என்பது வேறுபாடம்.

ளுமாயிருக்கின்றன. புஷ்பங்கள் நல்லவாஸனைபொருந்தியவைகளும் பழங்கள் மிகுந்தரஸமுள்ளவைகளுமாயிருக்கின்றன. அங்கு சில விருக்ஷங்கள் ஸர்வவிதமான அபீஷ்டங்களையும் கொடுக்கக்கூடியபழங்களையுடையவைகள். அரசரே! அவ்விடத்தில் மற்றவிருக்ஷங்கள், [1] 'க்ஷீரிகள்' என்றுபிரஸித்திபெற்றவைகளாக விளங்குகின்றன. அந்த மரங்கள் எப்பொழுதும் ஆறுசுவைகளுள்ளதும் அமிருதத்திற்கு ஒப்பானதுமானபாலைக் கறக்கின்றன. பழங்களின்ஸ்தானத்தில் வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் உண்டுபண்ணுகின்றன. அரசரே! பூமிமுழுதும் ரத்னமயமாகவும் பொன்மயமான சிறிய மணலுள்ளதாகவும் எல்லாருதுக்களிலும் ஸுகமானஸ்பர்சமுள்ளதாகவும் சேறில்லாததாகவுமிருக்கின்றது. அவ்விடத்திலுள்ளதாமரைஓடைகள் மங்களகரமாகவும் ஸுககரமானஸ்பர்சமுள்ளவையாகவும் மனத்திற்கினியவையாகவுமிருக்கின்றன. தேவலோகத்தினின்று நழுவுகின்ற எல்லாமனிதர்களும் அந்தஇடத்தில் பிறக்கிறார்கள். எல்லாரும் [2]விஷ்ணுபக்தர்களோடு ஸம்பந்தம் பெற்றவர்களும் விரும்பத்தக்க தோற்றமுள்ளவர்களுமாயிருக்கிறார்கள். தம்பதிகளாகப்பிறக்கிறார்கள். ஸ்திரீகளோ அப்ஸரஸுகளுக்கு ஒப்பானவர்கள். அவர்கள் அந்தக்ஷீரிவிருக்ஷங்களுடைய அம்ருதம்போன்றபாலைப் பானம் பண்ணுகிறார்கள். உரியகாலத்தில் [3]மிதுனம் பிறக்கிறது. அதுவும் ஸமமாகவே நன்றாகவிருத்தியடைகிறது; ஸமமானரூபமும் குணமுமுள்ளதும் அவ்வாறே ஸமமானவேஷமுள்ளதுமாயிருக்கிறது. பிரபுவே! அது இவ்விதம் ஒன்றுக்குஒன்றுஇசைந்ததாகவும் சக்ரவாகங்களுடையஇரட்டைக்குஒப்பாகவும் இருக்கிறது. அந்தஜனங்கள் எப்பொழுதும் வியாதியற்றவர்களும் ஸந்தோஷமுள்ளமனத்தையுடையவர்களுமாயிருக்கின்றார்கள். மஹாராஜரே! அவர்கள் பதினோராயிரம்வருஷம் ஜீவிக்கிறார்கள். [4]ஒருவரையொருவர்விடுகிறதில்லை. நிச்சயம். மரித்த அவர்களைக் கூர்மையானமூக்குள்ளவைகளும் மிக்க பலமுள்ளவைகளுமான பாருண்டங்கள் என்கிறபக்ஷிகள் இழுத்துக்கொண்டுபோய்க் குகைகளில்போடுகின்றன. அரசரே! உத்தரகுருதேசங்களைக்குறித்து உமக்குச் சுருக்கமாகச் சொன்னேன். இதற்குமேல் மேருவினுடைய கிழக்குத்திசையிலுள்ளபாகத்தை உள்ளபடி

---

1 பாலுள்ளவைகள். 2 'ஶுக்லாபிஜநஸம்பந்நா:' என்பதுமூலம். 3 தம்பதி.

4 'தம்பதிகள் ஒரேஸமயத்தில் மரிக்கின்றனர்என்பதுகருத்து' என்பது பழையஉரை.

நான் கூறுவேன். வேந்தரே! (மேருவினுடைய கீழ்த்திசையிலுள்ள) அந்தப்பத்திராசுவவர்ஷத்திற்கு முக்கியமானது பத்திரஸாலவனம்; அந்தக்காட்டில் காலாம்ரமென்கிறமஹாவிருக்ஷமிருக்கிறது. மஹாராஜரே! காலாம்ரவிருக்ஷமோ எப்பொழுதும் புஷ்பங்களும் கனிகளுமுள்ளதும் மங்களகரமானதும் ஒருயோஜனையுயரமுள்ளதும் ஸித்தர்களாலும் சாரணர்களாலும் அடையப்பட்டதுமாயிருக்கிறது. அந்தப்பத்ராசுவவருஷத்தில் அந்தப்புருஷர்கள் வெண்மைநிறமுள்ளவர்களும் காந்தியுள்ளவர்களும் மகாபலசாலிகளுமாயிருக்கிறார்கள். பெண்கள் ஆம்பல்நிறமுடையவர்களும் அழகுள்ளவர்களும் பிரியமான தோற்றமுள்ளவர்களும் சந்திரனுடையஒளிபோன்றஒளியுடையவர்களும் சந்திரனுடையநிறம்போன்றநிறமுடையவர்களும் பூர்ணசந்திரன்போன்ற முகமுடையவர்களும் சந்திரன்போலக் குளிர்ந்தசரீரமுள்ளவர்களும் நடனத்திலும் பாட்டிலும் ஸமர்த்தர்களுமாயிருக்கிறார்கள். அவ்விடத்தில்வஸிக்கின்றவர்களுக்கு வாழ்நாள் பதினாயிரம் வருஷம். காலாம்ரவிருக்ஷத்தினுடையரஸத்தைக் குடிப்பவர்களான அவர்கள் எப்பொழுதும் நிலைத்தயௌவனமுள்ளவர்களாயிருக்கிறார்கள். நீலபர்வதத்திற்குத்தென்புறமாகவும் நிஷதபர்வதத்திற்கு வடபுறமாகவும் பெரிதும் என்றும்அழிவற்றதும் எல்லாவிருப்பங்களையும்கொடுக்கின்றபழங்களையுடையதும் புண்யமும் ஸித்தர்களாலும்சாரணர்களாலும் அடையப்பட்டதுமான ஸுதர்சனமென்கிற ஒருநாவல்மரமிருக்கிறது. அதனுடையபெயரினாலே ஸநாதனமான இந்தத்வீபமானது ஜம்பூத்வீபமென்று சொல்லப்படுகிறது. பரதரேறே! [1]மரங்களுள்சிறப்புற்றதான அந்த நாவல்மரமானது ஆயிரத்துநூறுயோஜனை உயர்ந்துவளர்ந்து ஆகாயத்தை அளாவிக்கொண்டிருக்கிறது. அந்தமரத்தினுடையசுற்றளவோ இரண்டாயிரத்தைந்நூறு [2]அரத்நிகள். (பக்வகாலத்தில் தாமாகவேஉடைந்து) ரஸத்தைப்பெருக்குகின்ற அந்தப்பழங்களுடைய( [3]சுற்றளவு நூற்றிருபத்தைந்து அரத்நிகள்.) பூமியில்வீழ்கின்றஅந்தப்பழங்கள் பெரிய ஒலியைஉண்டுபண்ணுகின்றன. அரசரே! அந்தஇடத்தில் வெள்ளிக்கொப்பானரஸத்தையும் பெருக்குகின்றன. ஜநாதிபரே! அந்த நாவற்பழத்தின்சாறானது நதியாகி மேருவை வலமாகச்சுற்றிக்

---

[1] இங்கு விளிஒன்று விடப்பட்டது. விளிகள்மிகுதியாகவருமிடங்களில் முன்னும்பின்னும்இங்ஙனம்விடப்படுதலைக்கண்டுகொள்க.

[2] அரத்னி=சிறுவிரலைநீக்கி முஷ்டியுடன்கூடின கையளவு.

[3] இது பழையஉரையின் ஆதாரத்தைக்கொண்டு எழுதியது.

கொண்டு உத்தரகுருதேசங்களை அடைகின்றது. ராஜரே! அந்த இடத்தில்வஸிக்கிறவர்களுக்கு மனத்தில் அமைதிஉண்டாகிறது; தாகங்கிடையாது. அந்தப்பழத்தின்சாற்றைக்குடித்தவுடனே ஜரையானது அவர்களைவருத்துகிறதில்லை. அந்தஇடத்தில் தேவர்களுக்கு அணியாகின்றதும் பட்டுப்பூச்சிகளுக்குஒப்பானதும் மிக்கஒளிபொருந்தியதுமான ஜாம்பூநதம்என்ற அப்படிப்பட்டஸ்வர்ணமானது உண்டாகிறது. அவ்விடத்தில், மனிதர்கள் பாலஸூர்யன்போன்ற நிறமுள்ளவர்களாக உண்டாகின்றார்கள். அவ்வாறே, மால்யவான் என்னும் மலையினுடைய உச்சியில் எப்பொழுதும் அக்னியானது காணப்படுகிறது. (அது) ஸம்வர்த்தகம் என்று பிரஸித்திபெற்ற காலாக்னி. மால்யவானுடையசிகரத்தில் மிக்கபழமையான சிறிய ஒருகுன்று இருக்கிறது. மேலும், (அந்த) மால்யவானனது பதினோராயிரம் யோஜனைதூரம் உயர்ந்திருக்கின்றது. அவ்விடத்தில் மனிதர்கள் ஸ்வர்ணத்திற்கு ஒப்பானவர்களாகப் பிறக்கின்றார்கள். அவர்களனைவரும் பிரம்மலோகத்தினின்று நழுவினவர்கள். எல்லோரும் எல்லோரிடத்திலும் அன்புடையவர்கள். அவர்கள்தீவ்ரமானதவம்புரிகிறார்கள்; ஜிதேந்திரியர்களாகவும் இருக்கிறார்கள். பிராணிகளைரக்ஷிப்பதற்காகச் சூரியனுடைய ஸமீபத்தை அடைகிறார்கள். அறுபத்தாறாயிரமாகக்கணக்கிடப்பட்டிருக்கிறஅவர்கள் அருணனுக்குஎதிரில் சூரியனைச்சூழ்ந்துகொண்டு செல்லுகிறார்கள். அவர்கள் அறுபத்தாறாயிரவர்ஷங்களாக ஆதித்யனுடையதாபத்தினால்தபிக்கப்பட்டவர்களாகிச் சந்திரமண்டலத்தில் பிரவேசிக்கிறார்கள்" என்று கூறினான்.

---

## எட்டாவது அத்யாயம்.

## ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம். (தொடர்ச்சி.)

(மேருவின்வடக்கிலுள்ளமூன்றுகண்டங்களை வர்ணித்தல்.)

திருதராஷ்டிரன், "ஓ! ஸஞ்சய! வர்ஷங்கள் அவற்றிலுள்ள பர்வதங்கள் இவைகளுடைய பெயர்களையும் அந்தப்பர்வதங்களில் வஸிப்பவர்களையும் உள்ளபடி எனக்குச்சொல்" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"சுவேதபர்வதத்திற்குத் தென்புறமாகவும் [1]நீலபர்வதத்திற்கு

[1] 'நிஷதபர்வதத்திற்கு' என்பது வேறுபாடம்.

வடபுறமாகவும் [1]ரமணகம்என்றுபிரஸித்திபெற்ற வர்ஷமிருக்கிறது. அந்தவர்ஷத்தில் மனிதர்களெல்லாரும் [2]விஷ்ணுபக்தர்களோடுசேர்க்கைபெற்றவர்களும் மிக்கபிரியமானதோற்றமுள்ளவர்களும் பகைவர்களில்லாதவர்களுமாகஉண்டாகின்றார்கள். மஹாராஜரே! அவர்கள், எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளமனத்தையுடையவர்களாகப் பதினோராயிரத்தைந்நூறுவர்ஷம் ஜீவிக்கிறார்கள். ஶ்ருங்கவான்என்கிற பர்வதத்தினுடைய தென்புறமாகவும் சுவேதபர்வதத்தினுடையவடபுறமாகவும் ஹிரண்மயமென்று பிரஸித்தமானவர்ஷமிருக்கிறது. அதில் ஹைரண்வதி என்கிறநதி பெருகி ஓடுகிறது. மஹாராஜரே! அதில் பக்ஷிகளுட்சிறந்தபக்ஷிராஜரான அந்தவைனதேயர் வாஸம்செய்கிறார். மஹாராஜரே! அங்குஇருக்கின்ற மனிதர்கள் யக்ஷர்களைக்கிங்கரர்களாகவுடையவர்களும் தனிகர்களும் இனியகாட்சியுடையவர்களும் மிக்கபலமுள்ளவர்களும் ஸந்தோஷமுள்ளமனத்தையுடையவர்களுமாயிருக்கிறார்கள். அரசரே! ஜனாதிபரே! அவர்கள் பன்னீராயிரத்தைந்நூறுவர்ஷகாலம் ஆயுள்பிரமாணத்தைப் பெற்று ஜீவிக்கிறார்கள். அரசரே! சிருங்கவான்என்கிறபர்வதத்திற்குக் கொடுமுடிகள் மூன்றே. அவைகளில், ஒன்று ரத்னமயம்; அவ்வாறேஆச்சரியகரமானமற்றொன்று தங்கமயம்; மற்றொன்றுஸர்வரத்னமயமாகவும் கிருஹங்களால் விளங்கிக்கொண்டுமிருக்கிறது. அதில் சாண்டில்யரிஷியின்புத்திரியான ஸ்வயம்பிரபாதேவியானவள் நித்தியவாஸம்செய்கிறாள். அரசரே! சிருங்கவான்என்கிற பர்வதத்தினுடைய வடபாகத்தில் அதற்கு அப்புறமாக ஸமுத்திரத்தின் அருகில் ஐராவதம்என்கிறவர்ஷம் இருக்கிறது. அதில் ஸூர்யன் பிரகாசிக்கிறதில்லை. மனிதர்கள் கிழத்தன்மைஅடைகிறதில்லை. நக்ஷத்திரங்களோடுகூடின சந்திரனும் நான்குபக்கங்களிலும் (ஜ்யோதிர்க்கிரஹங்களால்) சூழப்பட்டு ஒரே சோதியாகஆனவன்போல் இருக்கிறான். மனிதர்கள் தாமரைப்புஷ்பங்களின்ஒளிபோன்றஒளியுடையவர்களும் தாமரைநிறமுடையவர்களும் தாமரையிதழ்போன்றகண்களையுடையவர்களும் தாமரையிதழ்போன்றநல்லவாஸனையுடையவர்களுமாக உண்டாகிறார்கள். அரசரே! (அங்குஇருக்கின்ற) அனைவரும் வெயர்வையற்றவர்கள்; நல்லகந்தமுடையவர்கள்; ஆகாரத்தைக்கருதாதவர்கள்; இந்திரியங்களை வென்றவர்கள்; தேவலோகத்தினின்றுநழுவிவந்தவர்கள்; அவ்வாறே

---

1 'முன்சுவேதவர்ஷம்என்று சொல்லப்பட்டதற்கு இது வேறொரு பெயர்' என்பது பழையஉரை.

2 'சுக்லாபிஜநஸம்பந்நா:' என்பது மூலம்.

ரஜோகுணமற்றவர்கள். அரசரே! பாரதவம்சத்தவர்களில் மிகச்சிறந்தவரே! அந்தமனிதர்கள் பதின்மூவாயிரம் வருஷகாலபரியந்தம் ஆயுள் பிரமாணத்தைப்பெற்று ஜீவிக்கின்றார்கள். அவ்வாறே பாற்கடலுக்கு வடபாகத்தில் ஸ்வர்ணத்தினால் பிரகாசிக்கின்ற சகடத்தில் ப்ரபுவும் வைகுண்டநாதருமான ஸ்ரீஹரியானவர் வாஸஞ்செய்கிறார். அந்த வாகனமானது எட்டுச்சக்கரங்களுள்ளதும் பூதங்களோடுகூடியதும் மனம்போலவேகமுள்ளதும் அக்நிபோன்றநிறமுடையதும் மிக்கதேஜஸுள்ளதும் ஜாம்பூநதமென்னும்பொன்னால் நன்றாக அலங்கரிக்கப்பட்டதுமாயிருக்கிறது. பாரதர்களில்சிறந்தவரே! அவர் எல்லாப்பிராணிகளுக்கும் நாதர்; எல்லாவற்றையும் வியாபித்திருப்பவர்; உலகங்களைப் படைப்பவர்; ஸம்ஹரிப்பவர்; (ஜீவஸ்வரூபியாயிருந்துகொண்டு)கார்யங்களைச்செய்பவர்; அவ்வாறே (ஈஸ்வரஸ்வரூபியாயிருந்துகொண்டு) கார்யங்களைச்செய்விப்பவர். அரசரே! ப்ருதிவியும், ஜலமும், ஆகாயமும், வாயுவும், தேஜஸும், ஸர்வப்பிராணிகளாலும் அநுஷ்டிக்கப்படுகிறயஜ்ஞமும் அவரே. அவருக்கு அக்நியானது முகமாயிருக்கிறது" என்றுசொன்னான்.

அரசரே! ஸஞ்சயனால்இவ்வாறுசொல்லப்பட்ட பெரியமனமுள்ள திருதராஷ்டிரராஜன் புத்திரர்களைப்பற்றிச் சிந்தையடைந்தான். அதிகதேஜஸுள்ளஅவன் ஆலோசித்து மறுபடியும்வசனிக்கலானான். "ஸூதபுத்ர! காலம் உலகத்தை அழிக்கிறது. மறுபடியும் எல்லாவற்றையும் உண்டுபண்ணுகின்றது. ஸம்சயமில்லை. இவ்வுலகத்தில் நிலைத்திருப்பது யாதொன்றுமில்லை. ஜீவனும், ஸர்வஜ்ஞராகவும் எல்லாப்பிராணிகளையும் ஸம்ஹரிக்கின்றவராகவும் இருக்கின்றநாராயணருமே சாசுவதர்கள். அந்தப்பிரபுவைத் தேவர்கள் வைகுண்டரென்றுசொல்லுகின்றனர். வேதங்கள் விஷ்ணுவென்றுசொல்லுகின்றன" என்றான்.

---

## ஒன்பதாவது அத்யாயம்.

## ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம். (தொடர்ச்சி.)



(பாரதவர்ஷத்திலுள்ளநதிகளையும் பர்வதங்களையும் தேசங்களையும் விஸ்தாரமாகக்கூறியது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! இந்தஸேனை விருத்தியடைந்திருப்பதும் என்புத்திரனைஇந்தத்துரியோதனன் மிக்கபேராசைகொண்

டிருப்பதும் பாண்டுபுத்திரர்கள் மிக்கஆவலுள்ளவர்களாயிருப்பதும் என்மனம் பற்றுதலடைந்திருப்பதுமான இந்தப்பாரதவர்ஷத்தினுடையஉண்மையை எனக்கு உரைப்பாய். நீ சிறந்தபுத்தியையுடையவனென்றுமதித்திருக்கிறேனன்றோ ?'' என்றுவினவினன்.

ஸஞ்சயன், "ஓ! அரசரே! அந்தப்பாரதவர்ஷத்தில் பாண்டவர்கள் பேராசையுடையவர்களல்லர். என்வார்த்தையைக்கேளும். அதில் துரியோதனனும் ஸௌபலனுனசகுனியும் பற்பலதேசாதிபதிகளான மற்றுமுள்ளமன்னர்களும் பேராசைகொண்டவர்கள். பாரதவர்ஷத்தில்பேராவலுள்ளவர்கள் ஒருவரையொருவர் பொறுக்கவில்லை. பாரதரே! பாரதவர்ஷத்தை இப்பொழுது உமக்குச் சொல்வேன். அரசரே! பாரதவர்ஷமானது தேவனான இந்திரனுக்கும் வைவஸ்வதமனுவுக்கும் வேனனுடையகுமாரனுனப்ருதுவுக்கும் மகாத்மாவான இக்ஷ்வாகுவுக்கும் யயாதிக்கும் அம்பரீஷனுக்கும் மாந்தாதாவுக்கும் நஹுஷனுக்கும் முசுகுந்தனுக்கும் உசீநரதேசாதிபதியானசிபிக்கும் ரிஷபனுக்கும் ஐலனுக்கும் ந்ருகனென்னும்அரசனுக்கும் குசிகனுக்கும் மஹாத்மாவானகாதிக்கும் ஸோமகனுக்கும் திலீபனுக்கும் மிக்கபலசாலிகளானமற்றக்ஷத்திரியர்களுக்கும் பிரியமானது. ராஜேந்திரரே! பாரதரே! எல்லோருக்குமே பாரதவருஷம் பிரியமானது. பகைவர்களை அடக்கும்திறமையுடையவரே! அந்தப்பாரதவர்ஷத்தை உள்ளபடிஉமக்குஉரைப்பேன். அரசரே! நீர் என்னைக்கேட்கிறதை நான் சொல்லுகிறேன். என்னிடத்தினின்று கேளும். மஹேந்திரம், மலயம், ஸஹ்யம், சுக்திமான், ரிக்ஷவான், விந்தியம், பாரியாத்ரம் இவ்வேழும் குலாசலங்கள். வேந்தரே! அவைகளுடைய ஸமீபத்தில் அறியப்படாதவைகளும் உத்தமவஸ்துக்களுள்ளவைகளும் பெரியவைகளும் விசித்திரமான தாழ்வரைகளுள்ளவைகளுமான ஆயிரக்கணக்கானபர்வதங்களிருக்கின்றன. அவற்றைக்காட்டிலும் வேருனவைகளும் அறியப்படாதவைகளும் [1]குள்ளர்களின் வாஸஸ்தானமுமானசிறுமலைகளும் இருக்கின்றன. குருகுலத்தில்பிறந்தவரே! ஆர்யர்களும் மிலேச்சர்களும் அவர்களோடுகலந்தமனிதர்களும் விசாலமான [2]கங்கை ஸிந்து, ஸரஸ்வதி, கோதாவரி, நர்மதை, மஹாநதியானபாஹுதை, சதத்ரு, சந்திரபாகை, மஹாநதியான யமுனை, திருஷத்வதி, பாபமற்றதும் பருத்தமணலுள்ளதுமானவிபாசை, ஆழமுள்ளவேத்ரவதி,

---

1 'ஹ்ரஸ்வோபஜீவிந:' என்பதுமூலம்.

2 இவற்றிலும் பின்வரும் தேசங்களிலும் சில இரண்டுமூன்றுமுறை வருகின்றன.

கிருஷ்ணவேணி, இராவதி, விதஸ்தை, பயோஷ்ணி, தேவிகை, வேதத்திலசொல்லப்பட்ட வேதவதி, த்ரிதிவை, இக்ஷுலை, க்ருமி, கரிஷிணி, சித்ரவாகை, ஆழமுள்ள சித்ரஸேனை, பாபங்களைப் போக்குகின்ற கோமதி, மஹாநதியானவந்தனை, கௌசிகி, த்ரிதிவை, க்ருத்யை, நிசிதை, லோஹிதாரணி, ரகஸ்யை, சதகும்பை, ஸரயு, சர்மண்வதி, வேத்ரவதி, ஹஸ்திஸோமை, திக், சராவதி, பயோஷ்ணி, வேணை, பீமரதி, காவேரி, சுலுகை, வாணி, சதபலை, நீவாரை, அஹிதை, ஸுப்ரயோகை, பவித்ரை, குண்டலி, ஸிந்து, ராஜனி, புரமாலினி, பூர்வாபிராமை, வீரை, பீமை, ஓகவதி, பாசாசினி, பாபஹரை, மஹேந்த்ரை, பாடலாவதி, கரீஷிணி, அஸிக்னி, மஹாநதியான குசசீரை, மகரி, மிக்கசிறப்புற்றமேனை, ஹேமை, க்ருதவதி, புராவதி, அனுஷ்ணை, சைப்யை, காபி, கலக்கமுடியாத ஸதாநீரை, மஹாநதியான குசதாரை, ஸதாகாந்தை, சிவை, வீரவதி, வஸ்த்ரை, ஸுவஸ்த்ரை, கௌரி, கம்பனை, ஹிரண்வதி, வரை, வீரகரை, மஹாநதியான பஞ்சமி, ரதசித்ரை, ஜோதிரதை, விஸ்வாமித்ரை, கபிஞ்சலை, உபேந்த்ரை, பஹுலை, குவீரை, அம்புவாஹினி, விநதி, பிஞ்சலை, வேணை, மஹாநதியானதுங்கவேணை, விதிசை, கிருஷ்ணவேணை, தாம்ரை, கபிலை, கலு, ஸுவாமை, வேதாஸ்வை, மஹாநதியானஹரிஸ்ராவை, சீக்ரை, பிச்சிலை, ஆழமுள்ளபாரத்வாஜி, ஆழமுள்ளகௌசிகி, சோணை, பாஹுதை, சந்திரமை, துர்க்கை, சித்ரசிலை, பிரம்மவேத்யை, ப்ருஹத்வதி, யவக்ஷை, ரோஹி, ஜாம்பூநதி, ஸுநஸை, தமஸை, தாஸி, வஸாமன்யை, வாரணஸி, நீலை, த்ருதவதி, மஹாநதியானபர்ணாசை, மானவி, விருஷபை, பிரம்மமேத்யை, பிருஹத்வதி, எப்பொழுதும் ரோகமற்றதானகிருஷ்ணை, மெதுவாகச்செல்லுகின்ற மந்தவாஹிநி, பிராம்மணி, மஹாகௌரி, துர்க்கை, சித்ரோபலை, சித்ரரதை, மஞ்சுலை, மந்தாகினி, வைதரணி, மஹாநதியானகோஷை, சுக்திமதி, அனங்கை, வ்ருஷஸை, லோஹித்யை, கரதோயை, விருஷகை, குமாரி, ரிஷிகுல்யை, மாரிஷை, ஸரஸ்வதி, மந்தாகிநி, ஸுபுண்யை, ஸர்வை, கங்கை இப்படிப்பட்டநதிகளிலும் இன்னும்அநேகம்பெரியநதிகளிலும் ஜலத்தைப் பானம்செய்கிறார்கள். பாரதரே! எல்லாநதிகளும் உலகத்துக்குத் தாய்போன்றவை. எல்லாநதிகளும் மிகுந்தபிரயோஜனமுள்ளவை. அவ்வாறே நூற்றுக்கணக்கும் ஆயிரக்கணக்குமாயுள்ள (இன்னும்அநேக) நதிகள் மறைவாகஇருக்கின்றன. ராஜரே! நினைவுள்ளமட்டிலும் இந்தநதிகள் என்னால் கூறப்பட்டன. இதற்குமேல் சொல்

லுகின்றஎன்னிடத்தினின்று தேசங்களைத்தெரிந்துகொள்ளும். பாரதரே! அந்தஜம்பூத்வீபத்தில் இந்தக்குருதேசம், பாஞ்சாலநாடு, சால்வம், மாத்ரேயம், ஜாங்கலம், சூரஸேனம், புளிந்தம், போதம், மாலம், மத்ஸ்யம், குசல்யம், ஸௌசல்யம், குந்திதேசம், காந்திகோஸலம், சேதிதேசம், மத்ஸ்யம், கரூசம், போஜம், ஸிந்துதேசம், புளிந்தகம், உத்தமம், தசார்ணம், மேகலம், உத்கலம், பஞ்சாலம், கோஸலம், நைகபிருஷ்டம், துராந்தரம், கோதம், மத்ரம், களிங்கம், காசி, அபரகாசி, ஜடரம், குகுரம், அவந்தி, தசார்ணம், குந்தி, அபாகுந்தி, கோமந்தம், மந்தகம், ஸண்டம், விதர்ப்பம், ரூபவாஹிகம், அஸ்மகம், பாண்டுராஷ்ட்ரம், கோபராஷ்ட்ரம், கரீதி, அதிராஜ்யம், குசாத்யம், மல்லராஷ்டிரம்,கேவலம், வாரவாஸ்யம், ஆயவாஹம், சக்ரம், சக்ராதி, சகம், விதேஹம், மகதம், ஸ்வக்ஷம், மலஜம், விஜயம், அங்கம், வங்கம், களிங்கம், யக்ருல்லோமம், மல்லம், ஸுதேஷ்ணம், ப்ரஹ்லாதம், மாஹிகம், சசிகம், பாஹ்லீகம், வாடதானம், ஆபீரம், காலதோயகம், அபராந்தம், பராந்தம், பஞ்சாலம், சர்மமண்டலம், அடவீசிகரம், மேருபூதம், உபாவிருத்தம், அநுபாவிருத்தம், ஸ்வராஷ்ட்ரம், கேகயம், குந்தாபராந்தம், மாஹேயம், கக்ஷம், ஸாமுத்ரநிஷ்குடம், அந்திரதேசம், கிரிமத்தியத்திலிருக்கின்ற அனேகம்மலைநாடுகள்,மலையின்வெளிப்புறத்திலுள்ள அனேகநாடுகள், அங்கமலஜங்கள், மகதம், மானவர்ஜகம், ஸமந்தரம், ப்ராவ்ருஷேயம், பார்க்கவம், புண்ட்ரம், பர்க்கம், கிராதம், ஸுதிருஷ்டம், யாமுனம், சகம், நிஷாதம், நிஷதம், ஆனர்த்தம், நைருதம், தூர்க்காலம், பிரதிமத்ஸ்யம், குந்தலம், கோஸலம், தீரக்ரஹம், சூரஸேனம், ஈஜிகம், கன்யகம், குணம், திலபாரம், மஸீரம், மதுமான், குந்தகம், காஸ்மீரம், ஸிந்து, ஸௌவீரம், காந்தாரம், தர்சகம், அபீஸாரம், உலூதம், சைவலம், பாஹ்லிகம், தார்வி, வானவம், தர்வம், வாதஜாமம், ரதோரகம், பஹுவாத்யம், ஸுதாமா, ஸுமல்லிகம், வத்ரம், கரீஷகம், குளிந்தம், உபத்யகம், வனாயு,தசாபார்ஸ்வரோமா, குசபிந்து, கச்சம், கோபாலகக்ஷம், ஜாங்கலம், குருவர்ணகம், கிராதம், பர்ப்பரம், ஸித்தம், வைதேஹம், தாம்ரலிப்தகம், ஓண்ட்ரம், மிலேச்சம், ஸைஸிரித்ரம், பார்வதீயம், இன்னும்மற்றத்தென்னடுகள், திராவிடம், கேரளம், கீழ்நாடுகள், பூஷிகம், வனவாஸிகம், கர்ணாடகம், மஹிஷகம், விகல்பம், மூஷகம், ஜில்லிகம், குந்தலம், ஸௌஹ்ருதம், நபகானனம், கௌகுட்டகம், சோளதேசம், கொங்கணம், மாலவம், நரம், ஸமங்கம், காகம், குகுரம், அங்காரம், மாரிஷம், த்வஜினி, உத்ஸவஸங்கேதம், த்ரிகர்த்தம், ஸால்வ

ஸேனி, வ்யூகம், கோகபகம், புரோஷ்டம், ஸர்மம், வேகவசம், விந்தியசுலிகம், புளிந்தம், வல்கலம், மாலவம், வல்லவம், அபாவல்லவம், குளிந்தம், காலதம், குண்டலம், காடம், மூஷகம், தனபாலம், நீபம், கடஸ்ருஞ்சயம், அடிதம், பாசிவாடம், தநயம், ஸுநயம், ரிஷிகம், விதபம், காகம், தங்கணம், பரதங்கணம், மற்றவடக்கேயுள்ள மிலேச்சம், க்ரூரம், யவனம், சீனம், காம்போஜம், தாருணம், மிலேச்சஜாதிவஸிக்கும்நாடு, ஸக்ருத்க்ருஹம், குலத்தம், ஹூணம், பாரஸீகம், ரமணம், சீனம், தசமாலிகம், க்ஷத்திரியோபநிவேசம், வைஶ்யகுலம், சூத்ரகுலம், சூத்திரம், ஆபீரம், தரதம், காஶ்மீரம், பசு, காசீரம், அந்தசாரம், பஹ்லவம், கிரிகஹ்வரம், ஆத்ரேயம், பாத்வாஜம், ஸ்தனபோஷிகம், புரோஷகம், களிங்கம், கிராதஜாதிவஸிக்கும்தேசம், தோமரம், ஹன்யமானம், காபஞ்சகம் இவைகளும் அவ்வாறேமற்றக் கீழ்நாடுகளும் வடநாடுகளும் இந்தப்பாரதவர்ஷத்திலிருக்கின்றன. பிரபுவே! என்னால் தேசங்கள் சுருக்கமாகச் சொல்லப்பட்டன. இந்தப் பூமியானது நன்றாகரக்ஷிக்கப்பட்டால் காமதேனுவைப்போல் சௌர்யமுதலியகுணங்களின் பலத்துக்குத்தக்கபடி அறம்பொருளின்பங்களாகிய சிறந்த பயன்களைத்தரும். இந்தப்பூமியினிடத்தில் சூரர்களும் தர்மார்த்தங்களை நன்றாகஅறிந்தவர்களுமான அரசர்கள் பேராவல் கொள்ளுகிறார்கள். தனங்களில்அதிகஆசைகொண்டவர்களும் பலசாலிகளுமான அவர்கள் யுத்தத்தில் உயிரையிழக்கிறார்கள். பூமியானது (யாகத்தால்) தேவசரீரங்களுக்கும் (அன்னத்தையளிப்பதால்) மானிடசரீரங்களுக்கும் மிகவும் முக்யரக்ஷகமாக இருக்கிறது. பாரதசிரேஷ்டரே! அரசர்கள் பூமியை அநுபவிக்கவிரும்பி நாய்கள் ஒன்று மற்றொன்றினுடைய புஜிக்கத்தக்கஒருவஸ்துவைக் கவர்வதுபோல ஒருவர்மற்றொருவருடையபூமியைக் கவர்கின்றனர். காமங்களை (எத்தனைவர்ஷங்கள் அநுபவித்தாலும்) பின்னும் ஒருவனுக்காவது திருப்தியுண்டாகிறதில்லை. பாரத! ஆதலால், கௌரவர்களும் பாண்டவர்களும் ஸாமதானபேததண்டங்களால் பூமியைக் கவர்ந்துகொள்ளமுயற்சிக்கின்றார்கள். மனிதரிற்சிறந்தவரே! பூமியானது நன்கு தொடர்ச்சியாகப்பார்த்துவரப்படுமாயின், பிராணிகளுக்குப் பிதாவும் பிராதாவும் புத்திரர்களும் அந்தரிக்ஷமும் ஸ்வர்க்கமும் ஆகின்றது" என்று கூறினான்.

---

பத்தாவது அத்யாயம்.

## ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம். (தொடர்ச்சி.)

(நான்கு யுகங்களையும் வர்ணித்தல்.)

திருதராஷ்டிரன், "ஸூத! ஸஞ்சய! இந்தப்பாரதவர்ஷம் ஹைமவதம் இவற்றினுடையஆயுள்பிரமாணத்தையும் பலத்தையும் சுபாசுபங்களையும் வருவதையும் சென்றதையும் நிகழ்கின்றதையும் அவ்வாறே ஹரிவர்ஷத்தையும் விஸ்தாரமாக எனக்குச்சொல்" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பாரதர்களிற்சிறந்தவரே! கௌரவர்களைவிருத்திசெய்பவரே! பாரதவர்ஷத்தில் க்ருதம், த்ரேதை, த்வாபரம், கலி என்று நான்கு யுகங்களுண்டு. பிரபுவே! க்ருதயுகமென்பது முந்தினது. பிறகு த்ரேதாயுகம். பின்பு த்வாபரம். அதன்முடிவில் கலியுகம் தொடங்குகிறது. குருகுலத்தவரில்மிகச்சிறந்தவரே! ராஜசிரேஷ்டரே! க்ருதயுகத்தில் ஆயுளினுடையஸங்கியையானது நாலாயிரவர்ஷங்களென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. அரசரே! அவ்வாறே திரேதாயுகத்தில் மூவாயிரம்வர்ஷங்கள் ஆயுள்காலம். இப்பொழுது த்வாபரயுகத்திலோ பூமியில் (ஜனங்கள்) இரண்டாயிரம்வர்ஷம் ஜீவித்திருக்கின்றனர். பாரதரேறே! இனி, கலியுகத்தில் (ஆயுள்காலத்திற்கு) வரையறையில்லை. அந்தக்கலியுகத்தில் கர்ப்பத்திலிருந்தும் மரிக்கிறார்கள்; அப்படியே பிறந்தும் இறக்கிறார்கள். பிறந்தவர்கள் மஹாபலமுள்ளவர்களும் மஹாஸத்வமுள்ளவர்களும் ப்ராஜ்ஞையும் குணங்களுமுள்ளவர்களுமானப்ராஜைகளை நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் உண்டுபண்ணுகிறார்கள். அரசரே! கிருதயுகத்தில்உண்டானவர்கள் தனிகர்களும் இனியதோற்றமுடையவர்களுமாயிருப்பார்கள். பிறந்தவர்களும், முனிகளாகவும் தவத்தையேபொருளாகக் கொண்டவர்களாகவுமிருந்துகொண்டு பிராஜைகளை உண்டுபண்ணுகின்றார்கள். க்ஷத்ரியர்கள் அதிகஉத்ஸாகத்தையுடையவர்களும் மஹாத்மாக்களும் தர்மத்தைஅனுஷ்டிப்பவர்களும் ஸத்தியத்தைச்சொல்லுகின்றவர்களும் பிரியமானதோற்றத்தையுடையவர்களும் நல்லதேகமுடையவர்களும் மஹாவீர்யமுள்ளவர்களும் வில்லாளிகளும் உத்தமமான வஸ்துக்களை அனுபவிப்பதற்குத்தகுதியுள்ளவர்களும் யுத்தத்தில் சூரர்களுள்சிறந்தவர்களுமாகப் பிறக்கிறார்கள். மன்னரே! த்ரேதாயுகத்தில் அரசர்கள் அனைவர்களும் சக்கரவர்த்திகள். த்வாபர

யுகத்தில் எப்பொழுதுமே எல்லாவர்ணத்தார்களும், அதிக உத்ஸாகமுடையவர்களும் வீர்யமுடையவர்களும் ஒருவரையொருவர் ஜயிப்பதில் விருப்பமுற்றவர்களுமாக உண்டாகிறார்கள். பாரதகுலத்தில்உதித்தவரே! அரசரே! கலியுகத்திலோ மனிதர்கள் அல்பதேஜஸுள்ளவர்களும் கோபமும் பேராசையுமுள்ளவர்களும் பொய்சொல்லுகிறவர்களுமாகப் பிறக்கிறார்கள், பாரதகுலத்திலுதித்தவரே! கலியுகத்தில் மனிதர்களுக்குப் பொறாமையும் தாமேசிறந்தவரென்கிறஎண்ணமும் க்ரோதமும் கபடமும் அஸூயையும் விஷயத்தில் பற்றுதலும் பேராவாவும் உண்டாகின்றன. அரசரே! நாதிபரே! இந்தத்வாபரயுகத்தில் (எல்லா நற்குணங்களுக்கும்) குறையுண்டாகின்றது. ஹைமவதம்என்கிற வர்ஷமானது (பாரதவர்ஷத்தைக் காட்டிலும்) குணங்களால் மேன்மைபொருந்தியது. அதைக்காட்டிலும் ஹரிவர்ஷம் உத்தமம்" என்றுகூறினான்.

**ஜம்பூகண்டவிநிர்மாணபர்வம் முற்றிற்று.**

---

பதினோராவது அத்யாயம்.

## பூமிபர்வம்.

**(சாகத்வீபவர்ணனம்.)**

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! இப்பொழுது ஜம்பூகண்டமானது உன்னால் உள்ளபடி உரைக்கப்பட்டது. இதனுடைய விஸ்தாரத்தையும் பரிமாணத்தையும் உள்ளபடிசொல். ஸஞ்சய! ஸமுத்திரத்தினுடைய அளவையும் குற்றமற்றதோற்றமுள்ளசாகத்வீபத்தையும் குசத்வீபத்தையும் எனக்கு நன்றாக உரைப்பாயாக. ஸஞ்சய! சால்மலித்வீபத்தையும் க்ரௌஞ்சத்வீபத்தையும் அவ்விதமே ராஹு, சந்திரன், சூரியன் இவர்களுடையஸ்வரூபத்தையும் உள்ளபடி முழுதும்சொல்" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லுகிறான்.

"அரசரே! இவ்வுலகமனைத்தையும் நிரப்பிக்கொண்டிருக்கிற த்வீபங்கள் அனேகங்களிருக்கின்றன. ஆகையால் ஏழுத்வீபங்களையும் சந்திரஸூர்யர்களையும் அவ்வாறேராகுவையும் குறித்துச்சொல்லப்போகிறேன். ராஜரே! [1]ஜம்பூகண்டத்தினுடையவிஸ்தாரமானது பூர்ணமாகப் பதினெண்ணாயிரத்தறுநூறு யோஜனை அளவுள்ளது.

---

1 'ஜம்பூபர்வத:' என்பது மூலம்; 'பர்வதம்போன்ற ஆகிருதியுள்ளதாயிருப்பதால் ஜம்பூபர்வதமென்று சொல்லப்பட்டது' என்பது பழையவுரை.

உப்புக்கடலினுடையவிஸ்தாரமானது முப்பத்தேழாயிரத்திருநூறு யோஜனை அளவுள்ளதென்று கருதப்பட்டிருக்கிறது. (இந்த ஜம்பூ கண்டத்தை) வட்டமாகச்சூழ்ந்துகொண்டிருக்கிற ஸமுத்திரமானது பலவிததேசங்களால் வியாபிக்கப்பட்டதும் மணிகளாலும் பவழங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் பலவிததாதுவர்க்கங்களால் விசித்திரமானபர்வதங்களோடுவிளங்குகின்றதும் ஸித்தர்களாலும் சாரணர்களாலும் சூழப்பட்டதுமாயிருக்கிறது. ராஜரே! இப்பொழுது சாகத்வீபத்தையும் உள்ளபடி சொல்லுகிறேன். குருநந்தனரே! முறைப்படிசொல்லுகின்ற என்னிடத்திலிருந்து நீர்கேளும். ராஜரே! அந்தச்சாகத்வீபமானது ஜம்பூத்வீபத்தின் அளவுக்கு இரண்டுமடங்கு அளவுள்ளது. மஹாராஜரே! தனிமையாயிருக்கிற அந்தச்சாகத்வீபத்தைச்சூழ்ந்த ஸமுத்திரமும் பரப்பினால்இரண்டுமடங்கு விஸ்தாரமுள்ளது. பாரதசிரேஷ்டரே! அந்தச்சாகத்வீபத்தில் பரிசுத்தமான தேசங்களுண்டு. அங்கிருக்கின்றமனிதர்கள் மரணமடைகிறதில்லை. (அவ்விடத்தில்) பஞ்சம் ஏது? அவர்கள் பொறுமையும்காந்தியும் பொருந்தியவர்கள். பாரதர்களிற்சிறந்தவரே! உள்ளபடி சுருக்கமாக இந்தச்சாகத்வீபம் சொல்லப்பட்டது. மகாராஜரே! வேறுஎதை நான் உமக்குச் சொல்லவேண்டும்?" என்றுகூறினான்.

திருதராஷ்டிரன், "ஓ! ஸஞ்சய! சாகத்வீபமானது இப்பொழுது சுருக்கமாகஉள்ளபடி உன்னால் சொல்லப்பட்டது. பெரியபுத்திமானே! விஸ்தாரமாக உள்ளபடி நீ உரைத்தல்வேண்டும்" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத் தொடங்கினான். "அரசரே! அவ்வாறே இந்தச்சாகத்வீபத்தில் ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட ஏழுபர்வதங்களும் (ஏழு) கடல்களும் நதிகளுமிருக்கின்றன. அவைகளுடையபெயர்களை என்னிடத்திலிருந்து கேளும். அரசரே! அவ்விடத்திலுள்ளவையெல்லாம் மிக்கநற்குணங்களுள்ளவைகள்; பரிசுத்தமானவைகள். மஹாராஜரே! (அதில்) தேவர்களோடும் ரிஷிகளோடும் கந்தர்வர்களோடுங்கூடின மேருவானது பிரதானமாகச் சொல்லப்படுகிறது. கிழ்த்திசையில் நீண்டதானமலயமென்கிற பர்வதமிருக்கிறது. அதினின்று மேகங்கள் தோன்றி நான்குபக்கங்களிலும் ஸஞ்சரிக்கின்றன. அதற்கு அப்புறத்தில் ஜலதாரம் என்கிற பெரியமலை இருக்கின்றது. இந்திரன் அதிலிருந்து சிறந்த ஜலத்தைத்தினந்தோறும் எடுத்துக்கொள்ளுகிறான். ஜனங்களுக்கு அதிபரே! அக்காரணத்தினால் வர்ஷாகாலத்தில் மழையுண்டாகிறது. (அந்தத்வீபத்தில்) ரைவதகம்என்கிறபெரிதான ஒருமலை இருக்கின்

றது. ஆகாசத்தில் (பிரகாசிக்கின்ற) ரேவதீநக்ஷத்திரம் அந்த மலையில் [1]எப்பொழுதும் நிலைபெற்றிருக்கிறது. அப்படிப்பட்ட மர்யாதையானது பிரம்மதேவரால் ஏற்படுத்தப்பட்டது. ராஜேந்திரரே! (அந்தரைவதகபர்வதத்திற்கு) வடபுறத்தில் நீருண்டமேகம் போலப் பிரகாசிக்கின்றதும் உன்னதமானதும் காந்தியுள்ளதும் பிரகாசஸ்வரூபமுள்ளதுமான ஶ்யாமம் என்கிற ஒரு பெரியமலை இருக்கிறது. அரசரே! அந்தமலையினால் (அங்குஉண்டாகிற) பிரஜைகள் கறுத்தநிறத்தையடைகின்றன" என்றுகூறினான். திருதராஷ்டிரன், "சஞ்சய! உன்னால் இப்பொழுதுசொல்லப்பட்ட விஷயத்தில் மிகப்பெரியஸம்சயம் எனக்கு உண்டாயிருக்கிறது. ஸூதபுத்ர! இந்தஇடத்தில் பிரஜைகள் எவ்வாறு கறுத்தநிறமடைந்தார்கள்?" என்றுகேட்க, ஸஞ்சயன், "மஹாராஜரே! குருநந்தனரே! எல்லாத்வீபங்களிலும் வெண்மைநிறமும் கருமைநிறமுமுள்ளபக்ஷி உண்டாகின்றது. அரசரே! ச்யாமபர்வதத்தில்மாத்திரம் அவ்விரண்டுநிறங்களுக்கும்இடையிலுள்ளநிறத்தோடு பக்ஷிகள் தோன்றுகின்றன. அந்தமலையானது [2]கருநிறமுள்ளதாயிருத்தலால் (அங்குஉண்டாவனவெல்லாம்) கருநிறமுள்ளனவாகவே ஆகின்றன. கௌரவேந்திரரே! அதற்கப்புறம் மஹோதயம்என்கிறதுர்க்கசைலம் இருக்கிறது. நல்லகாற்றுஉண்டாவதும் மகிழமாங்களுள்ளதுமானகேஸரமென்கிற ஒருமலையுமிருக்கிறது. அவைகளில் ஏழுவர்ஷங்களிருக்கின்றனவென்று வித்வான்கள்கூறுகின்றனர். தனித்தனியாக அவைகளுடையயோஜனைக்கணக்கானவிஸ்தாரமானது வரிசைப்படி இரண்டுமடங்குள்ளது. மஹாராஜரே! (அவைகள்) மஹாமேரு, மஹாகாசம், ஜலதம், குமுதோத்தரம், ஜலதாரம், [3]ஸுகுமாரம்என்று எண்ணப்பட்டிருக்கின்றன. ரேவதபர்வதத்திற்கப்புறம் கௌமாரமென்கிறபர்வதமும் ஶ்யாமபர்வதத்திற்கப்புறம் மணிகாஞ்சனபர்வதமும் கேஸரபர்வதத்திற்குஅப்பால் மௌதாகிஎன்கிறபர்வதமும் இருக்கின்றன. அதற்கப்புறத்தில் மஹாபுருஷர் ஸான்னித்யம்செய்கிறார். கௌரவரே! சாகத்வீபமானது நீண்டிருத்தலையும் குறுகியிருத்தலையும் பரிசீலனம் செய்து ஜம்பூத்வீபத்தோடு (ஸமானமாக) எண்ணப்பட்டிருக்கிறது. மஹாராஜரே! அதனுடையமத்தியில் சாகம்என்கிற பெரியவிருக்ஷம்

---

1 ரேவதிநக்ஷத்திரமானது ஆகாயத்தில் ஜோதிமண்டலரூபமாகஸஞ்சரித்தாலும் திவ்யரூபத்தோடு இம்மலையிலும் இருக்கிறது' என்பதுபழையஉரை.

2 'ஶ்யாமம்' என்பதுமூலம்.

3 முன்பு ஏழுவர்ஷங்கள் என்றுகூறி இங்கு ஆறேகூறப்பட்டுள்ளன.

இருக்கிறது. பிராணிகள் எப்பொழுதும் அதைஅனுஸரித்துக்கொண் டிருக்கின்றன. அந்தத்வீபத்தில் புண்யமானதேசங்களிருக்கின்றன. அங்கு சங்கரர் பூஜிக்கப்படுகிறார். அதற்கு ஸித்தர்களும் சாரணர்களும் தேவர்களும் செல்லுகின்றனர். அரசரே! பரதகுலத்திற்பிறந்தவரே! மனிதர்கள் தார்மிகர்களாக இருக்கின்றனர். நான்குவர்ணத்தினர்களும் தங்களுக்குரியகர்மங்களில்பற்றுதலுள்ளவர்களாயிருக்கின்றனர். அதில் திருடன் காணப்படுகிறதில்லை. மஹாராஜரே! அவ்விடத்தில் பிரஜைகள் நீண்டஆயுளுடையவர்களும், மூப்பும் மரணமுமில்லாதவர்களுமாகி, வர்ஷாகாலத்தில் ஸமுத்திரத்தைக்குறித்துச் செல்லும் நதிகள் விருத்தியடைவதுபோல, விருத்தியடைகிறார்கள். அதில் புண்யமானஜலமுள்ள நதிகளிருக்கின்றன. கௌரவரே! கங்கையும் ஸுகுமாரி, குமாரி, சீதாசி, வேணிகை, மஹாநதி, மணிஜலை, சக்ஷுர்வர்த்தனிகை என்று பலபிரிவாகப் பிரிந்து செல்கின்றது. குருவம்சத்தைவகிப்பவரே! அவ்விடத்தில் புண்யமானதீர்த்தமுள்ள லக்ஷம் நதிகள் பெருகிஓடுகின்றன. இந்திரன் எந்தநதிகளினிடமிருந்து (ஜலத்தைஎடுத்து) வர்ஷிக்கிறானோ அவற்றின்பெயர்களும் பரிமாணமும் நம்மால்சொல்வதற்கு இயலா. நதிகளுள்சிறந்த அவை புண்ணியமானவை. அவ்விடத்தில் உலகங்களால் ஸம்மதிக்கப்பட்டனவும், புண்யங்களுமான மங்கம், மசகம், மானஸம், மந்தகம் என்னும் நான்குதேசங்கள் இருக்கின்றன. மங்கதேசம் பிராம்மணர்களால் நிறைந்தது. அங்குவஸிக்கின்றவர்கள் தமக்குரியகர்மானுஷ்டானங்களில் பற்றுதலுள்ளவர்கள். மசகதேசத்தில் தார்மிகர்களும் எல்லாவிருப்பங்களையும் கொடுக்கின்றவர்களுமான அரசர்கள் வஸிக்கின்றனர். மஹாராஜரே! மானஸதேசவாஸிகள் வைசியதர்மத்தை அனுசரித்துப் பிழைக்கின்றவர்களும் விருப்பங்களெல்லாம்நிறைவேறினவர்களும் சூரர்களும் தர்மத்திலும் அர்த்தத்திலும் நிச்சயமுள்ளவர்களுமாயிருக்கின்றார்கள். மந்தகதேசத்தில் வஸிக்கின்ற மனிதர்கள் சூத்ரர்கள். அவர்கள் எப்பொழுதும் தர்மத்தையே அனுஷ்டிக்கின்றவர்கள். ராஜேந்திரரே! அதில் அரசனுமில்லை; தண்டனையுமில்லை; தண்டிக்கிறவர்களுமில்லை. தர்மத்தை அறிந்தவர்களான அவர்கள் தம்தர்மத்தினாலேயே ஒருவரையொருவர் ரக்ஷித்துக்கொள்ளுகிறார்கள். அந்தத்தீவின்விஷயத்தில் இவ்வளவுமட்டிலுந்தான் என்னால் சொல்லமுடியும். மிக்கஒளியுடையசாகதத்தீவின்விஷயத்தில் இவ்வளவுதான்உம்மால் கேட்கத்தக்கது" என்றான்.

## பன்னிரண்டாவது அத்யாயம்.

## பூமிபர்வம். (தொடர்ச்சி.)



(க்ரௌஞ்சமுதலான தீவுகளைவர்ணித்தல்.)

ஸஞ்சயன், "குருகுலத்தில் பிறந்தவரே! வடபக்கத்திலுள்ள தீவுகளிலும் இவ்வாறு கதை கேட்கப்படுகிறது. மஹாராஜரே! அதைச்சொல்லுகிறேன்; என்னிடமிருந்துகேளும். அந்தத்தீவுக ளில் நெய்யையேஜலமாகக்கொண்ட ஸமுத்திரமும் ஆடைத்தயிரையே ஜலமாகக்கொண்ட வேறொருஸமுத்திரமும் சாராயத்தையேஜலமா கக்கொண்ட ஸமுத்திரமும் மற்றொரு ஜலஸமுத்ரமுமிருக்கின்றன. அரசரே! எல்லாத்வீபங்களும் ஒன்றைவிடஒன்று இரண்டுமடங்கு பெரியவைகள். மஹாராஜரே! பர்வதங்களும் ஸமுத்திரங்களால் சூழப்பட்டிருக்கின்றன. அரசரே! மத்தியிலுள்ள தீவில் மனோசிலை மயமான கௌரம்என்கிறபெரியமலை இருக்கிறது. அரசரே! மேற் குப்பாகத்தில் நாராயணருடன்கூடின க்ருஷ்ணபர்வதமிருக்கிறது. அதில் மிகச்சிறந்தரத்நங்களை அவர் தாமே பாதுகாக்கிறார். அவ் விடத்தில் கேசவர் பிரஜைகளுக்கு ஸுகத்தை உண்டுபண்ணிக் கொண்டு பிரஸன்னராகஇருக்கிறார். குசத்தீவின்மத்தியில் தேசங்க ளுடன்கூடக் குசஸ்தம்பம் இருக்கின்றது. அரசரே! சால்மலித் தீவில் சால்மலிவிருக்ஷம் பூஜிக்கப்படுகிறது. க்ரௌஞ்சத்தீவில் ரத்ந க்குவியல்களுக்குஇருப்பிடமாயுள்ள க்ரௌஞ்சம்என்கிறபெரியமலை இருக்கிறது. மஹாராஜரே! அது நான்குவர்ணத்தார்களாலும் நாள்தோறும் பூஜிக்கப்படுகிறது. வேந்தரே! மிகப்பெரிதும் எல்லாத் தாதுவர்க்கங்களுமுள்ளதுமான கோமந்தம்என்கிறபர்வதமும் இருக் கிறது. அந்தப்பர்வதத்தில் ஸ்ரீமானும் தாமரைமலர்போன்றகண் களையுடையவரும் முக்தியடைந்தவர்களால் நித்யம்நன்றாகப்புகழப் பட்டவரும் பிரபுவும் பக்தர்களுடையபாவத்தை அபஹரிப்பவருமான நாராயணர் நித்யவாஸம்செய்கிறார். ராஜேந்திரரே! குசத்தீவில் பவழங்களால்நிறைக்கப்பட்ட ஸுநாமாஎன்கிறமலை இருக்கிறது. கௌரவரே! பிறரால்ஆக்ரமிக்கமுடியாததும் இரண்டாவதுமான த்யுதிமான் என்கிறஸ்வர்ணபர்வதமும் மூன்றாவதானகுமுதம்என்கிற பர்வதமும் நான்காவதானபுஷ்பவான்என்கிறபர்வதமும் ஐந்தாவ தானகுசேசயம்என்கிறபர்வதமும் ஆறாவதான ஹரிகிரிஎன்கிறபர்வத மும் இருக்கின்றன. இவ்வாறு இந்தஆறுசிறந்தமலைகள் இருக்கின்

றன. அவைகளுடையமத்தியிலுள்ள பரப்பானது எல்லாஇடங்களிலும்இரண்டுமடங்காக இருக்கின்றது. முதலாவதுஜௌத்பிதவர்ஷம்; இரண்டாவதுவேணுமண்டலம்; மூன்றாவதுஸுரதாகாரம்; நான்காவதுகம்பலம்; ஐந்தாவதுத்ருதிமத்வர்ஷம்; ஆறாவதுப்ரபாகரவர்ஷம்; ஏழாவதுகாபிலவர்ஷம். இவ்வாறு வரிசையாக ஏழு [1]வர்ஷங்களிருக்கின்றன. பூமிக்குநாதராயிருப்பவரே! இவைகளில் தேவர்களும் கந்தர்வர்களும் பிரஜைகளும் விளையாடுகிறார்கள்; ரமிக்கவும்ரமிக்கிறார்கள். அவைகளில் ஒருவரும் மரிக்கிறதில்லை. அரசரே! அவைகளில் திருடர்களில்லை; ம்லேச்சஜாதியைச்சேர்ந்தவனுமில்லை. அரசரே! அங்குவஸிக்கின்றஜனங்களெல்லோரும் பெரும்பான்மையாக வெண்ணிறமுடையவர்களும் அழகுள்ளவர்களுமாயிருக்கின்றனர். ஜனேசுவரரே! மிகுதியுள்ள எல்லாத்தீவுகளின்விருத்தாந்தங்களையும் நான் சொல்வேன். மஹாராஜரே! அவற்றைக் கவனமாகக் கேளும். மஹாராஜரே! க்ரௌஞ்சத்தீவில் க்ரௌஞ்சமென்கிற பெரியமலையிருக்கின்றது. கிரௌஞ்சத்திற்கப்புறத்தில் வாமனகம் என்கிறபர்வதம் இருக்கிறது. வாமனத்திற்கப்பால் அந்தகாரகம் என்கிற பர்வதமிருக்கின்றது. வேந்தரே! அந்தகாரத்திற்கப்பால் மைநாகம்என்கிறசிறந்தமலை இருக்கிறது. அரசரே! மைநாகத்திற்கப்பால் கோவிந்தம்என்கிறஉத்தமமானமலை இருக்கின்றது. அரசரே! கோவிந்தத்திற்கப்பால் நிபிடம்என்கிறபர்வதம் இருக்கிறது. வம்சத்தை விருத்திபண்ணுகிறவரே! அவைகளுடையவிஸ்தாரமானது மற்றவைகளைக்காட்டிலும்இரண்டுமடங்குள்ளதாயிருக்கின்றது. அந்த இடத்திலுள்ளதேசங்களைச் சொல்லப்போகிறேன். என்னிடத்தினின்று அவற்றைக் கேளும். கிரௌஞ்சபர்வதத்திற்கு அப்புறத்தில் குசலம்என்கிறதேசமிருக்கிறது. வாமனபர்வதத்திற்கு அப்புறத்தில் மனோனுகம்என்கிறதேசம். குருகுலத்தைக்காப்பவரே! மனோனுகத்திற்கப்பால் உஷ்ணம்என்கிறதேசமிருக்கின்றது. உஷ்ணதேசத்திற்கப்புறம் [2]ப்ராவாரதேசம். ப்ராவாரத்திற்கப்பால் அந்தகாரகம். அந்தகாரகதேசத்திற்கப்பால் முனிதேசம்எனக் கருதப்பட்டிருக்கிறது. ஜனாதிபரே! முனிதேசத்திற்கப்பால் ஸித்தர்களாலும் சாரணர்களாலும் வியாபிக்கப்பட்டதும் பெரும்பான்மையாகவெண்ணிறமுடையதுமான துந்துபிஸ்வநம்என்கிறதேசமிருப்பதாகக் கூறப்படுகிறது. மஹாராஜரே! இந்தத்தேசங்கள் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் அடையப்பட்டிருக்கின்றன. புஷ்கரத்வீபத்தில் சிற

1 வேறுபாடம். 2 மூலத்தில், 'ப்ராவரக' என்றிருக்கிறது.

ந்தரத்நங்களுள்ள புஷ்கரமென்கிறமலை இருக்கின்றது. அதில் பிரம்மதேவர் தாமே எப்பொழுதும் விளங்கிக்கொண்டிருக்கிறார். ராஜரே! அவரைத் தேவர்களும் எல்லாமஹரிஷிகளும் எப்பொழுதும் மனத்திற்கு இன்பமானவாக்குக்களாலே பூஜித்துக்கொண்டு உபாஸிக்கின்றனர். ஜம்பூத்வீபத்தினின்று பலவிதரத்னங்கள் உண்டாகின்றன. வேந்தரே! அந்த எல்லாத்தீவுகளிலும் பிரஜைகளுடைய பிரம்மசர்யத்தாலும் ஸத்யத்தாலும் [1]மனவடக்கத்தாலும் ஆரோக்கியத்தாலும் ஆயுள்பிரமாணத்தாலும் (மற்றத்தீவுகளைக்காட்டிலும் புஷ்கரத்தீவானது) இரண்டுமடங்கு மேல்பட்டது. பாரதரே! அரசரே! இந்தத்தீவுகளில் எந்தத்தேசங்கள் (என்னுல்) சொல்லப்பட்டனவோ அந்தத்தேசங்களுள் (எந்தத்தேசத்தில்) தர்மம்ஒன்றே காணப்படுகிறதோ அந்தஒருதேசம்தான் (மற்றஎல்லாத்தேசங்களைக் காட்டிலும்) இரண்டுமடங்கு மேன்மைபெற்றது. மஹாராஜரே! பிரஜைகளுக்கெல்லாம் நாதரான ஈஸ்வரர் தண்டத்தைஏந்தித் தாமே இந்தத்தீவுகளை எப்பொழுதும் ரக்ஷித்துக்கொண்டிருக்கிறார். மன்னரே! அவர் அரசர்; அவர் சிவன்; அவர் பிதா; அவர் பாட்டனுக்குத்தகப்பன். நரசிரேஷ்டரே! அவர் அறிவினர்களும் கற்றறிந்தவர்களுமான பிரஜைகளைக் காப்பாற்றுகிறார். கௌரவரே! சிறந்தவுகைகளுள்ளவரே! இந்தப்புஷ்கரத்தீவில் பிரஜைகள், தானகவேகிடைத்த ஸித்தமானபோஜனத்தையே நித்தியம் உட்கொள்ளுகிறார்கள். அதற்கப்பால் ஸமதரையுள்ளஉலகநிலைமை காணப்படுகிறது. மஹாராஜரே! அவ்விடத்தில் ஸமசதுரமான முப்பத்துமூன்றுமண்டலங்கள் இருக்கின்றன. கௌரவரே! பரதசிரேஷ்டரே! அவ்விடத்தில் உலகங்களால்புகழப்பட்ட வாமனம் ஐராவதமுதலான நான்குதிக்கஜங்களிருக்கின்றன. அரசரே! ஸுப்ரதீகமென்கிறதிக்குயானையானது மதப்பெருக்குள்ளகன்னங்களும்முகமுமுள்ளதாயிருக்கிறது. இந்தநான்கு கஜங்களுடைய பரிமாணத்தையும் அளவிடுவதற்கு நான் சக்தியுள்ளவனல்லேன். அந்தக்கஜஸமூஹமானது குறுக்கிலும் மேலிலும் அவ்வாறேகீழிலும் எப்பொழுதும் அளவிடப்படாததாயிருக்கிறது. அந்தஇடத்தில் எல்லாத்திக்குகளினின்றும் காற்றுகள் வீசுகின்றன. மஹாராஜரே! கட்டப்படாமலிருக்கின்ற அந்தயானைகள் தாமரைமலர்களுக்கு ஒப்பானவைகளும் மலர்த்தப்பட்டவைகளும் மிக்கஒளிபொருந்தியவைகளுமான துதிக்கை நுனிகளாலே அந்தக்காற்றுக்களைத் தடுத்து நிறுத்துகின்றன. மறுபடியும் அந்தயானை

---

[1] கூறியதுகூறலால் ஒருசொல் விடப்பட்டது.

கள் அக்காற்றுக்களை எப்பொழுதும் நூறுதுண்டாகச் சிதறும்படி விரைவாக வெளியில் விடுகின்றன. மஹாராஜரே! ஸ்வாஸிக்கின்ற திக்குயானைகளால் விடப்படுகின்ற காற்றுக்கள் இந்தப்புஷ்கரத்தீவில் வருகின்றன. அவற்றால், பிரஜைகள் நிலைபெற்றிருக்கின்றன" என்று கூறினான்.

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! தீவுகளுடைய மிக்கவிஸ்தாரத்தை நன்றாகக்கூறினை; அவற்றினுடைய அமைப்பையும் விளக்கிக்காட்டினை. ஸஞ்சய! ஸூர்யன் சந்திரன் ராகுஇவர்களுடையபரிமாணத்தைச் சொல்" என்றுவினவ, ஸஞ்சயன், "மஹாராஜரே! தீவுகள் கூறப்பட்டன. ஸூர்யன்முதலியக்ரஹத்தை உள்ளபடிகேளும். கௌரவசிரேஷ்டரே! மஹாராஜரே! ராகுக்ரஹமானது எவ்வளவுபரப்புள்ளதோ அவ்வளவு சுற்றளவுள்ளதாகக் கேள்வி. அந்த ராகுக்ரஹத்தினுடைய பரப்பானது பன்னீராயிரம் யோஜனை. குற்றமற்றவரே! பண்டிதர்களும் அவ்வாறேபௌராணிகர்களும் (முறையே) இந்த ராஹுக்ரஹத்தை முப்பத்தாறாயிரம்யோஜனை சுற்றளவுள்ளதென்றும் அதைக்காட்டிலும்ஆறாயிரம்யோஜனை அதிகச்சுற்றளவுள்ளதென்றும் கூறுகின்றனர். வேந்தரே! குருசிரேஷ்டரே! சந்திரமண்டலமானது பதினோராயிரம்யோஜனைபரப்புள்ளதென்றும் முப்பத்துமூவாயிரம் யோஜனைசுற்றளவுள்ளதென்றும் சொல்லப்படுகிறது. பெரியஉருவமுள்ளசந்திரமண்டலத்தின்பரப்பானது ஐம்பத்தொன்பதினாயிரம் யோஜனை அளவுள்ளதென்று சொல்லுகிறார்கள். குருநந்தனரே! அரசரே! மற்றவர்கள் சூரியனைப் பதினாயிரம்யோஜனைவிஸ்தாரமுள்ளதென்றும் முப்பதினாயிரம்யோஜனைசுற்றளவுள்ளதென்றும் சொல்லுகிறார்கள். ராஜரே! குற்றமற்றவரே! மிகச்சிறந்ததும் விரைவாகச்செல்லும் ஸ்வபாவமுடையதுமான இந்தச் சூரியன் ஐம்பத்தெண்ணாயிரம்யோஜனை (சந்திரனைக்காட்டிலும்) பெரிதென்றுகேள்வி. பாரதரே! சூரியனுடைய அளவை இப்பொழுது சொன்னேன். அந்தராகுவானது பெரிதாயிருப்பதால் இந்த ஸூர்யசந்திரர்களைத் தகுந்தகாலத்தில் மறைக்கின்றது. மஹாராஜரே! க்ரஹங்களுடையஸ்வரூபத்தைப்பற்றிக்கேட்ட உமக்குச் சாஸ்திரதிருஷ்டியினால் சந்திரஸூர்யர்களைப்பற்றிய இந்தவிஷயத்தைச் சுருக்கமாக இவ்வாறுஉரைத்தேன். மஹாராஜரே! இவ்வுலகமானது எவ்விதம்படைக்கப்பட்டிருக்கின்றதென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறதோ அது உள்ளபடி என்னால் முழுதும் உரைக்கப்பட்டது. ஆதலால், ஆறுதலை அடைவீராக. கௌரவரே! ஆதலால், புத்ரனுனூர்

யோதனனைப்பற்றி மனத்தில் ஸமாதானத்தை அடைவீராக. பரதசிரேஷ்டரே! அரசரே! மனத்திற்கு இன்பமான இந்தப்பூமிபர்வாவை எவன் கேட்பானோ அவன் ஐசுவரியமுள்ளவனும் செய்யவேண்டிய காரியத்தைச்செய்தவனும் ஸாதுக்களுக்கு ஸம்மதனுமாவான். மேலும், அவனுக்கு ஆயுளும் பலமும் கீர்த்தியும் தேஜஸும் விருத்தியடையும். அரசரே! எவன் நல்லவ்ரதத்துடன் இந்தப்பூமிபர்வாவைப் பர்வகாலத்தில் கேட்கிறானோ அவனுடைய பிதிருக்களும் பிதாமஹர்களும் பிரீதியடைகின்றார்கள். நாம் வஸிக்கும்இந்தஇடம் பாரதவர்ஷம். இது முன்னோர்களால் அநுபவிக்கப்பட்டுள்ளது; புண்யமானது. அவைஎல்லாவற்றையும் கேட்டீர்" என்று கூறினான்.

**பூமிபர்வம் முற்றிற்று.**

---

## பதின்மூன்றாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம்.

(ஸஞ்சயன் பீஷ்மருடைய வதத்தைத் திருதராஷ்டிரனுக்கு உரைத்தது.)

பரதகுலத்திற்பிறந்தவரே! பிறகு கற்றறிந்தவனும் எல்லாவற்றையும்நேரில்காண்பவனும் நடந்ததையும் நடக்கின்றதையும் நடப்பதையும்அறிந்தவனுமானஸஞ்சயன் மிக்கமனவருத்தமுற்றவனாகி யுத்தத்தினின்று விரைவாகவந்து அருகில்சென்று, சிந்திதுக்கொண்டிருக்கும் திருதராஷ்டிரனைப்பார்த்து, பரதகுலத்திற்பிறந்தவர்களுக்குப்பிதாமஹரானபீஷ்மர் கொல்லப்பட்டாரென்பதைக் கூறலானான்.

"மஹாராஜரே! நான் ஸஞ்சயன். பரதரேறே! உமக்கு வந்தனம்செய்கிறேன். சந்தனுவின்புத்திரரும் பரதகுலத்திற்பிறந்தவர்களுக்குப்பிதாமஹருமானபீஷ்மர் கொல்லப்பட்டார். எல்லாயுத்தவீரர்களுள்ளும்சிறந்தவரும் எல்லாவில்லாளிகளுக்கும்ஆதாரமானவரும் குருகுலத்திற்பிறந்தவர்களுக்குப் பிதாமஹருமான அப்படிப்பட்டபீஷ்மர் இப்பொழுது சரதல்பத்தையடைந்து படுத்திருக்கின்றார். அரசரே! எவருடையவீர்யத்தை ஆதாரமாய்க்கொண்டு உம்முடையகுமாரன் சூதாடினானோ அந்தப்பீஷ்மர் சிகண்டியினால்கொல்லப்பட்டு யுத்தகளத்தில் படுத்திருக்கின்றார். மஹாரதரும் பெரிய யுத்தத்தில் ஒருங்குசேர்ந்திருந்த எல்லா அரசர்களையும் காசிப்பட்டணத்தில் ஒருரதத்தின்உதவியினாலேயே ஜயித்தவரும் [1]பரபரப்

---

1 'அஸம்ப்ரமம்' என்பது மூலம்; 'பயமில்லாமல்' என்பது பழையஉரை.

பில்லாமல் யுத்தத்தில் ஜமதக்னிகுமாரரானபரசுராமரோடு போர் புரிந்து அவராலும்கொல்லப்படாதவருமான அவர் இப்பொழுது சிகண்டியினால் கொல்லப்பட்டார். அவர் சௌர்யத்தில் மகேந்திர னுக்குஒப்பானவர் ; ஸ்திரமாயிருப்பதில் இமயமலைபோன்றவர் ; காம் பீர்யத்தில் ஸமுத்திரம்போன்றவர் ; பொறுமையில் பூமிக்குஒப்பான வர் ; அம்புகளாகிறகோரப்பற்களுள்ளதும் வில்லாகிறவாயையுடைய தும் கத்தியாகிறநாவையுடையதும் நெருங்கமுடியாததுமான உமது பிதாவாகிறநரஸிம்மமானது பாஞ்சாலராஜகுமாரனால் இப்பொழுது வீழ்த்தப்பட்டது. பாண்டவர்களுடையபெரியசேனையானது ஸிம் மத்தைப்பார்த்துப் பசுக்கூட்டம்நடுங்குவதுபோல யுத்தத்தில்முயற்சி யுடையவரானதம்மைக் கண்டு பயத்தால்மனவருத்தமுற்று அதிக மாகநடுங்கும்படிசெய்தவரும் (சத்துருக்களுடைய) படையைஅழிப்ப வருமான அந்தப்பீஷ்மர் பத்துநாள் உமதுசேனையைக்காப்பாற்றி (ஒரு வராலும்) செய்யமுடியாதகாரியத்தைச்செய்து ஸூர்யன்அஸ்தம னமடைவதுபோல அஸ்தமயம்அடைந்தார். பரதகுலத்திற்பிறந்த வரே! அரசரே! இந்திரன்போல (ப்பகைவர்களால்) மனக்கலக்கம் அடையும்படிசெய்யமுடியாதவரும் யுத்தத்தில் ஆயிரக்கணக்கான பாணங்களைவர்ஷித்துப் பத்துத்தினங்களில் அர்ப்புதக்கணக்கான யுத்தவீரர்களைக்கொன்றவருமான அந்தப்பீஷ்மர் உமதுதுராலோசனை யில்கட்டுப்பட்டுத் திறமையற்றவனைப்போலக் கொல்லப்பட்டுக் காற்றி னால்முறிக்கப்பட்டமரம்போலப் போர்க்களத்தில் படுத்திருக்கிறார்'' என்றுகூறினான்.

---

## பதினான்காவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



(திருதராஷ்டிரன் பீஷ்மருடையவதத்தைக்கேட்டுத் துக்கித்துப் பீஷ்மர்முதலியோரின்யுத்தத்தை விரித்துரைக்கும்படி ஸஞ்சயனை வினவியது.)

திருதராஷ்டிரன், ''கௌரவர்களுள் சிறந்தவரான பீஷ்மர் சிகண்டியினால் எவ்வாறு கொல்லப்பட்டார்? இந்திரனுக்கு ஒப் பானவரும் என்பிதாவுமான அவர் ரதத்தினின்று எவ்வாறு வீழ்ந் தார்? ஸஞ்சய! பலசாலியும் தேவதைக்கு ஒப்பானவரும் பிதா வுக்காக ப்ரம்மசரியத்தை அனுஷ்டித்தவருமான பீஷ்மரால் விடு

பட்டவர்களான என்னுடைய யுத்தவீரர்கள் எவ்வித நிலைமையி லிருந்தார்கள்? சொல்வாயாக. பேரறிவினரும் சிறந்தவில்லாளியும் மிக்க பலமுள்ளவரும் அதிக முயற்சியுள்ளவருமான அந்தப்புருஷ சிரேஷ்டர் கொல்லப்பட்டவுடனே உன்னுடையமனம் என்னநிலைமை யிலிருந்தது? கௌரவர்களுள்சிறந்தவரும் வீரரும் (பகைவர்களைக் கண்டு) நடுங்காதவரும் புருஷசிரேஷ்டருமானபீஷ்மர் கொல்லப்பட் டாரென்று என்னிடத்தில் சொல்லுகிறாய். என்மனம் அதிகத் துன் பத்தையடைகின்றது. ஓ! ஸஞ்சய! (யுத்தகளத்தில் பகைவர்களை எதிர்த்துச்) செல்லுகின்ற அவரை எவர்கள் பின்தொடர்ந்தார்கள்? எவர்கள் அவருக்கு முந்திச் செல்லுகின்றவர்களானார்கள்? எவர் கள் நின்றார்கள்? எவர்கள் திரும்பினார்கள்? எவர்கள் அவரைத் தொடர்ந்தார்கள்? தோளிகளுள்சிறந்தவரும் அற்புதமான (வீர்ய முள்ளவரும்) க்ஷத்திரியசிரேஷ்டரும் (பாண்டவ) ஸேனையில்அவ் வாறுபுகுகின்றவருமானபீஷ்மரை எந்தச்சூரர்கள் விரைவாகப் பின் தொடர்ந்துசென்றார்கள்? சத்துருக்களையழிப்பவரும் சூரியனுக்கு ஒப்பானவருமானஎவர் ஸூர்யன் இருளை நாசம்செய்வதுபோல, பகைவர்களுடையபடையை நாசம்செய்துகொண்டும் பகைவர்களுக் குப் பயத்தைஉண்டுபண்ணிக்கொண்டும் போர்க்களத்தில் பாண்டு புத்திரர்களிடத்தில் செய்யமுடியாத காரியத்தைச் செய்தாரோ சத்துரு ஸைனியங்களை விழுங்குகின்றவரும் ஸமர்த்தரும் அவ மதிக்கமுடியாதவருமான அந்தப் பீஷ்மரை எவர்கள் சூழ்ந்துகொண் டார்கள்? ஸஞ்சய! நீ அவருக்கு அருகில்இருந்திருக்கிறாய்; யுத் தத்தில் பாண்டவர்கள் பீஷ்மரை எங்ஙனம்சூழ்ந்துகொண்டார்கள்? சத்ருசேனைகளைவெட்டுகின்றதும் அம்புகளாகிற கோரப்பற்களுள் ளதும் உதாரமானமனோபாவமுள்ளதும் வில்லாகிற சிறந்தவாயுள்ள தும் கோரஸ்வரூபமுடையதும் கத்தியாகிறநாவுள்ளதும் நெருங்க முடியாததும் அகார்யத்தில் வெட்கமுள்ளதும் ஜயிக்கப்படாததும் இந்தநிலைமையை அடையத்தகாததும் யுத்தத்தில் (இதுவரையில் ஒருவராலும்) ஜயிக்கப்படாததுமான அந்தப்புருஷப்புலியைக் குந்தி புத்திரன் எவ்வாறுவீழ்த்தினான்? கொடியவில்லுள்ளவரும்உக்ரமான அம்புகளையுடையவரும்உத்தமமானரதத்திலிருந்துகொண்டு பகைவர் களுடையமுடிகளை அம்புகளால்அறுப்பவரும் யுத்தத்தில் முயற்சி யுள்ளவரும் பிரளயகாலஅக்னிபோல அவமதிக்கமுடியாதவருமான எவரைக்கண்டு பெரியபாண்டவசேனையானது தினந்தோறும் கைகால் களைஉதைத்துக்கொண்டதோ அந்தப்பீஷ்மர் பத்துநாள் சேனையைநட

த்தி எவ்விதத்திலும்செய்யமுடியாதகாரியத்தைச்செய்து ஸூர்யன் அஸ்தமனத்தையடைவதுபோல நாசமடைந்தார். இந்திரன் அக்ஷய மானமழையைப்பொழிவதுபோல, குறைவற்றபாணமழையைப்பொழிந்து பத்துநாட்களில் [1]அர்ப்புதக்கணக்கான யுத்தவீரர்களை யுத்தத்தில்கொன்றவரும் பாதகுலத்தில்பிறந்தவருமான அந்தப்பீஷ்மர் என்னுடைய துராலோசனையினால், காற்றினால்முறிக்கப்பட்ட மாம்போல், பூமியில்அடித்துத்தள்ளப்பட்டுச் சக்தியற்றவர்போலப் போர்க்களத்தில் படுத்திருக்கின்றார். பயங்கரமானபராக்ரமமுள்ளவரும் சந்தனு புத்திருமானபீஷ்மரைப்பார்த்துப் பாண்டவர்களுடைய சேனையானது ஆயுதப்ரயோகம்செய்வதற்கு அவ்விடத்தில் எவ்வாறு வல்லமையுள்ளதாகியது? பாண்டுபுத்திரர்கள் பீஷ்மரோடு எவ்வாறு யுத்தம் செய்தார்கள்? ஸஞ்சய! துரோணர்ஜீவித்திருக்குங்காலத்தில் ஏன் பீஷ்மர் வெற்றிபெறவில்லை? அந்தயுத்தகளத்தில் கிருபரும் துரோணரும் பக்கத்திலிருக்கும்பொழுது (சத்துருக்களை) அடிப்பவர்களுள் சிறந்தவரான அந்தப்பீஷ்மர் எவ்வாறு மாணமடைந்தார்? தேவர்களாலும் அணுகமுடியாதவரும் அதிரதருமானபீஷ்மர் பாஞ்சாலபுத்திரனை அந்தச்சிகண்டியினால் எவ்வாறு யுத்தத்தில் கொல்லப்பட்டார்? ஸஞ்சய! அதிகபலமுள்ளவரும் சிரஞ்சீவியுமான பாசுராமரை யுத்தத்தில் எதிர்த்துச் சண்டைசெய்தவரும் அந்தப்பாசுராமாாலும் ஜயிக்கப்படாதவரும் இந்திரனுக்கொப்பான பாாக்ரமமுள்ளவரும் மஹாரதர்களுடையகுலத்திலுதித்தவரும் வீரரும் யுத்தத்தில்கொல்லப்பட்டவருமான அந்தப் பீஷ்மரைப்பற்றியவரலாற்றை எனக்குச் சொல்வாயாக. அவருடையவதத்தால் நாம் ஸுகமடையவில்லை. ஸஞ்சய! பெரியவில்லையுடையவர்களான என்னைச்சேர்ந்த எந்தயுத்தவீரர்கள் விரதம்தவறாதவரானபீஷ்மரைவிட்டு விலகாமலிருந்தார்கள்? துரியோதனனால்கட்டளையிடப்பட்ட எந்தவீரர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டார்கள்? ஸஞ்சய! சிகண்டியைமுதன்மையாகக்கொண்ட எல்லாப்பாண்டவர்களும் பீஷ்மரை எதிர்த்துவந்தார்களல்லவோ? அந்தக் கௌரவர்கள் எல்லோரும் பகைவர்களைவதஞ்செய்யும் விரதத்தினின்று நழுவாதவரானபீஷ்மரைத் தனியேவிடாமலிருந்தார்களா? புருஷசிரேஷ்டரான பீஷ்மர் கொல்லப்பட்டதைக்கேட்டு என்மனமானது பிளந்துபோகாமலிருப்பதால் உருக்கினால்செய்யப்பட்டதும் மிக்க உறுதியுள்ளதுமாயிருக்கிறதென்பது நிச்சயம். பாதசிரேஷ்டரும் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவருமான எவரிடத்தில் அளவிட

[1] பத்துக்கோடி.

முடியாத ஸத்யமும் மேதையும் நீதியும் இருக்கின்றனவோ, கர்ஜிக்கின்றமேகம்போன்ற நாணொலிசெய்பவரும் ஜலபிந்துக்கள்போன்ற பாணங்களுள்ளவரும் பேரிடிமுழக்கம்போன்றவில்லினுடையசப்தத்தையுடையவரும் உன்னதமானமஹாமேகம்போன்றவரும் பூஜ்யரும் வீரருமானஎவர் வஜ்ரபாணியான இந்திரன் அஸுரர்களைக்கொல்வது போலப் பாஞ்சாலர்களோடும் ஸ்ருஞ்சயர்களோடும்கூடினவர்களும் சத்துருக்களும் ரதிகர்களுமான குந்திபுத்திரர்களைத் துன்பஞ்செய்து சரமாரியைப்பொழிந்தாரோ அந்தப்பீஷ்மர் யுத்தத்தில் எவ்வாறு கொல்லப்பட்டார்? கோரமானதும் பாணங்களாகிறமுதலைகளுள்ளதும் நெருங்கமுடியாததும் விற்களாகிறஅலைகளுள்ளதும் குறைவற்றதும் [1]திட்டில்லாததும் சலித்துக்கொண்டிருப்பதும் தெப்பமில்லாததும் கதைகளும்கத்திகளுமாகிறசுறுமீன்களுக்குஇருப்பிடமானதும் குதிரைகளாகிறசுழல்களுள்ளதும் யானைகளால்நெருங்கியதும் காலாட்களாகிறமீன்களாலேசூழப்பட்டதும் சங்கங்கள் துந்துபிகள்இவைகளுடைய சப்தமுள்ளதுமான பாணங்களும் அஸ்திரங்களுமாகிறஸமுத்திரத்தில் விரைவாகக் குதிரைகளையும் யானைகளையும் காலாட்களையும் அனேகரதர்களையும் அமிழ்த்துகின்றவரும் யுத்தத்தில்சத்துருவீரர்களைக்கொல்கின்றவரும் கோபத்தால் தகிக்கப்படுகின்றவரும் தேஜஸால் சத்துருக்களைத் தபிக்கச்செய்கின்றவருமான பீஷ்மரைக் கரையானதுஸமுத்திரத்தைச்சூழ்வதுபோல, எந்தவீரர்கள் சூழ்ந்துகொண்டார்கள்? ஓ! ஸஞ்சய! பகைவர்களைக்கொல்லுகின்றவரானபீஷ்மர் யுத்தத்தில் எந்தக்கார்யத்தைச் செய்தார்? துரியோதனனுக்கு ஹிதத்தைச்செய்வதின்பொருட்டு எவர்கள் இவருக்குமுன்வந்தார்கள்? அளவுகடந்ததேஜஸுள்ள பீஷ்மருடைய வலப்பக்கத்துச் [2]சேனையை எவர்கள் ரக்ஷித்தார்கள்? வீரவிரதமுள்ள எவர்கள் பின்புறத்திலிருந்துகொண்டு சத்துருவீரர்களைத் தடுத்தார்கள்? எவர்கள் பீஷ்மரைமுன்புறத்திலிருந்துகாப்பாற்றிக்கொண்டு அருகில் நின்றார்கள்? யுத்தம்செய்கிறவீரரான பீஷ்மருக்கு இடப்பக்கத்திலிருந்த [2]ஸேனையை எந்தவீரர்கள் பாதுகாத்தார்கள்? ஸஞ்சய! இடப்பக்கத்திலுள்ள [2]சேனையிலிருக்கின்ற எவர்கள் ஸ்ருஞ்சயர்களைக்கொன்றார்கள்? படைவீரர்களில்தலைமைபெற்றவரும் (பகைவர்களால்) நெருங்கமுடியாதவருமானபீஷ்மரை முன்னிலையிலிருந்துகொண்டு எவர்கள் பாதுகாத்தார்கள்? அடையமுடியாத (யுத்த) கதியை அடை

---

1 'ஆஶ்ரயமில்லாததும்' என்பது பழையஉரை.

2 'சக்ரம்' என்பது மூலம்; 'தேருருளை' என்பது பொருந்தும்.

இன்றவர்களான எவர்கள் இருபக்கத்திலுமிருந்துகொண்டு (பீஷ்ம ரைப்) பாதுகாத்தார்கள்? ஸஞ்சய! (நம்முடையசேனைக்) கூட்டத்தில் எவர்கள் சத்ருவீரர்களை எதிர்த்துப் போர்புரிந்தார்கள்? வீரர்களால்பாதுகாக்கப்பட்ட பீஷ்மரும் அந்தப்பீஷ்மரால்பாதுகாக்கப்பட்ட அந்தக்கௌரவசேனையிலுள்ளவர்களும் (பகைவர்களால்) ஜயிக்கமுடியாத பாண்டவர்களுடையசேனைகளை யுத்தத்தில் விரைவாக ஏன்ஜயிக்கவில்லை? ஸஞ்சய! அந்தப்பாண்டவர்கள் ஸர்வலோகேஶ்வரரும் ஸர்வோத்தமருமான பிரம்மதேவர்போன்ற பீஷ்மரை அடிப்பதற்காவது எவ்வாறு சக்தியுடையவர்களானார்கள்? ஸஞ்சய! கௌரவர்கள் நடுத்திட்டுப்போன்ற எந்தப்பீஷ்மரை அடுத்து மனத்தில் தைர்யங்கொண்டு பகைவர்களோடு போர்புரிகிறார்களோ அப்படிப்பட்டபுருஷசிரேஷ்டர் அமிழ்ந்துபோனாரென்றுசொல்கிறாய். எனதுபுத்ரன் எவருடைய வீர்யத்தை ஆதாரமாயடைந்து பலமுள்ளவனாகப் பாண்டவர்களை மதிக்கவில்லையோ அவர் பகைவர்களால் எவ்வாறுகொல்லப்பட்டார்? பெரியவ்ரதமுள்ளவரும் எனக்குப்பிதாவும் யுத்தத்தில் கொடியமதங்கொண்டவருமான எவர் முற்காலத்தில் அஸுரர்களைநாசம்செய்கின்ற எல்லாத்தேவர்களாலும் உதவிசெய்வதற்காக விரும்பப்பட்டாரோ, மஹாவீர்யமுள்ள எவர் பிறந்தவுடனே உலகத்தில்பிரஸித்திபெற்றவரான அந்தச் சந்தனுவானவர் அந்த க்ஷணத்தில் சோகத்தையும் தைன்யத்தையும் துக்கத்தையும் முழுதும் துறந்தாரோ (உலகத்தில்) ப்ரஸித்திபெற்றவரும் சிறந்தகதியானவரும் கற்றறிந்தவரும் க்ஷத்திரியதர்மத்தில்நிலைபெற்றவரும் பரிசுத்தரும் வேதவேதாங்கங்களுடைய தத்வங்களையறிந்தவருமான அந்தப்பீஷ்மர் கொல்லப்பட்டாரென்று என்னிடத்தில் எவ்வாறு சொல்லுகின்றாய்? எல்லா அஸ்திரங்களிலும் சிக்ஷைபெற்றவரும் சாந்தரும் மனத்தைஅடக்கினவரும் சிறந்தமனமுள்ளவருமான பீஷ்மர் கொல்லப்பட்டாரென்பதைக் கேட்டு மிச்சமுள்ளசேனையும் கொல்லப்பட்டதென்றே எண்ணுகிறேன். பாண்டவர்கள் பிராயமுதிர்ந்தவரும் குருவுமான பீஷ்மரைக்கொன்று ராஜ்யத்தை அடையவிரும்புதலால் அதர்மமானது தர்மத்தைக்காட்டிலும்பலமுள்ளதாக வந்துவிட்டதென்பது என்னுடையஎண்ணம். ஜமதக்னிகுமாரரும் எல்லா அஸ்திரங்களையும்அறிந்தவரும் ஸர்வோத்தமருமானபரசுராமர் முற்காலத்தில் அம்பைநிமித்தமாக யுத்தத்தில்முயற்சித்து (எந்தப்) பீஷ்மராலே யுத்தத்தில் ஜயிக்கப்பட்டாரோ இந்திரனுக்கொப்பான செய்கையையுடையவரும் எல்லாவில்லாளிகளுள்ளும்சிறந்தவருமான அந்தப்பீஷ்

மர் சொல்லப்பட்டாரென்று என்னிடம்சொல்லுகிறாய். இதைக்காட்டிலும் மேலான துக்கம் ஏது? யுத்தகளத்தில் அனேகக்ஷத்திரியர்களுடைய கூட்டங்களை அடிக்கடிஜயித்தவரும் சத்துருவீரர்களைநாசம் செய்கிற வீரருமான அந்தப் பரசுராமராலும்கூட எவர் கொல்லப்படவில்லையோ அந்தமகாபுத்திமானான பீஷ்மர் இப்பொழுது சிகண்டியினால்கொல்லப்பட்டார். (ஆதலால்) துருபதகுமாரனானசிகண்டி, மகாவீர்யமுடையவரும் யுத்தத்தில் மிக்கமதம்கொண்டவருமான அந்தப் பரசுராமரைக்காட்டிலும் தேஜஸ், வீர்யம், பலம்இவைகளில் மேம்பட்டவனென்பது நிச்சயம். சூரரும் யுத்தத்தில்ஸமர்த்தரும் எல்லாப்படைகளிலும் மிக்கதேர்ச்சிபெற்றவரும் உத்தமமான அஸ்திரங்களையறிந்தவரும் வீரரும்பரதசிரேஷ்டருமான பீஷ்மரைக் கொன்றவனும் பகைவரைக்கொல்பவனுமான அவனைப் போர்க்களத்தில் எந்தவீரர்கள் அனுஸரித்தார்கள்? பாண்டவர்களோடு பீஷ்மருக்கு எவ்விதமாக யுத்தம்நடந்ததென்பதை எனக்கு உரைப்பாயாக. ஸஞ்சய! தலைவனையிழந்ததான என்புத்திரனுடைய சேனையானது (பர்த்தாவை யிழந்த) மங்கையைப்போலாகிவிட்டது. என்னுடைய அந்தச்சேனையானது இடையனைஇழந்தபசுக்கூட்டம்போல் மிக்கதடுமாற்றத்தை அடைந்துவிட்டது. மஹாயுத்தத்தில் எவருடையபௌருஷமானது எல்லாஉலகத்தையும்காட்டிலும் சிறந்ததோ அந்தப்பீஷ்மர் பரலோகத்தைவிரும்பினபொழுது உங்களுடையமனம் எவ்வாறிருந்தது? ஸஞ்சய! மஹாவீர்யமுள்ளவரும் உலகத்தில்தார்மிகருமானபிதாவை (சத்துருக்களால்) கொல்லும்படிசெய்வித்து இப்பொழுது நாம் பிழைத்திருப்பதிலும் நம்மிடத்தில் எவ்விதமானஸாமர்த்தியம் இருக்கின்றது? பீஷ்மர்கொல்லப்படவே என்புத்திரர்கள் ஆழமானஜலத்தில்அமிழ்கின்றஓடத்தைக்கண்ட கரையிலிருப்பவர்கள்போல மிகவும் துக்கத்தினால் சோகத்தை அடைவார்களென்றெண்ணுகிறேன். ஓ! ஸஞ்சய! புருஷசிரேஷ்டரானபீஷ்மர் கொல்லப்பட்டாரென்பதைக் கேட்டும் பிளந்துபோகாமலிருப்பதால் என்மனம் நிச்சயமாக வஜ்ரத்தாலானதுதான். புருஷசிரேஷ்டரும் அவமதிக்கமுடியாதவருமான எந்தப்பீஷ்மரிடத்தில் அளவிடமுடியாத அஸ்திரங்களும் புத்திசக்தியும் நீதியும் நிலைபெற்றிருந்தனவோ அவர் யுத்தத்தில் எவ்வாறுகொல்லப்பட்டார்? அஸ்த்ரத்தினாலாவது சௌர்யத்தினாலாவது தவத்தினாலாவது புத்தியின்சக்தியினாலாவது தைரியத்தினாலாவது கொடையினாலாவது ஒருவனும் மிருத்யுவினிடத்தினின்று விடுபடான். ஸஞ்சய! சந்தனுகுமாரரானபீஷ்மரும் கொல்லப்பட்டாரென்று சொல்லுகிற

காரணத்தினால் நிச்சயமாகவே காலமானது மிக்கவலிமையுடையது. அது எல்லாஉலகத்தாராலும் தாண்டமுடியாதது. புத்திரசோகத்தினால் மிகவும்வாட்டமுற்றிருக்கிற நான் (இந்தப்) பெரியதுக்கத்தை எண்ணுதவனுகிச் சந்தனுபுத்திரரான பீஷ்மரைக்காட்டிலும் மேலான ரக்ஷணத்தை விரும்புகிறேன். ஸஞ்சய! பூமியில்விழுந்திருக்கின்ற சூரியனைப்போல (யுத்தகளத்தில்) வீழ்ந்திருக்கின்ற சாந்தனவரைத் துர்யோதனன்கண்டபொழுது என்னசெய்தான்? ஸஞ்சய! நான் புத்தியினால் ஆலோசித்தவரையிலும் அரசர்களுடையசேனையில் நம்மவர்களாவது பிறர்களாவது கொஞ்சமேனும் மிஞ்சப்போகிறதில்லையென்று ஊகிக்கிறேன். பாண்டவர்கள் சாந்தனவரைக்கொன்று ராஜ்யத்தை அடையவிரும்புதலால் இந்தக்ஷத்திரியதர்மமானது கொடியதென்று ரிஷிகளால் நன்றாகக்காட்டப்பட்டிருக்கிறது. நாமும் பெரியவிரதமுடையவரான பீஷ்மரை வதம்அடையும்படிசெய்வித்து ராஜ்யத்தைவிரும்புகிறோம். க்ஷத்திரியதர்மத்தில் நிலைபெற்றவர்களும் சிறுவர்களுமானபாண்டவர்கள் அபராதிகளல்லர். ஸஞ்சய! கஷ்டமான ஆபத்துக்களில் உத்தமபுருஷனால் பராக்ரமமும் அதிகசக்தியுமல்லவோ வெளிப்படுத்தத்தக்கவை? அவை அவரிடத்தில் நிலைபெற்றிருந்தன. சைனியங்களை அதிகமாகநாசம்செய்கின்றவரும் அகார்யத்தில் வெட்கமுள்ளவரும் ஜயிக்கப்படாதவரும் பிதாவுமான பீஷ்மரைப் பாண்டுபுத்திரர்கள் எவ்வாறு எதிர்த்துத்தடுத்தார்கள்? ஸஞ்சய! சேனைகள் எவ்வாறு சேர்ந்திருந்தன? மிக்கபலசாலிகளானவீரர்களோடு எவ்வாறு யுத்தம்நடந்தது? என்னுடைய பிதாவான பீஷ்மர் பகைவர்களால் எவ்வாறுகொல்லப்பட்டார்? பீஷ்மர் கொல்லப்பட்டவுடன் துரியோதனனும் கர்ணனும் ஸௌபலனான சகுனியும் வஞ்சகனான துச்சாஸனனும் யாதுகூறினர்? மனிதர்கள் யானைகள் குதிரைகள் இவைகளுடைய தேகங்களால் பரப்பப்பட்டதும் அம்புகளும் வேல்களும் பெரியசக்திகளும் தோமரங்களுமாகிற பாச்சிகைகளுள்ளதும் அதிபயங்கரமும் யுத்தத்தால் நெருங்கமுடியாததுமான யுத்தகளமாகிறசூதாடும்ஸபையில் புத்திகெட்டவர்களான சூதாடிகள் நுழைந்துவிட்டார்கள். பயங்கரமானதும் பிராணனையேபந்தயமாகக்கொண்டதுமான யுத்தமாகிற சூதாட்டத்தில் எந்தப்புருஷசிரேஷ்டர்கள் விளையாடினார்கள்? அந்தயுத்தத்தில் சந்தனுபுத்திரரானபீஷ்மரைத்தவிர எவர்கள் ஜயிக்கப்படுகிறார்கள்? எவர்கள் ஜயிக்கப்பட்டார்கள்? எவர்கள் லக்ஷ்யம்வைத்துஅடித்துத் தள்ளப்பட்டார்கள்? ஸஞ்சய! அதை எனக்குச் சொல்வாயாக. பயங்கரமான

செய்கையுள்ளவரும் யுத்தத்தில்பிரகாசிக்கின்றவரும் எனக்குப் பிதாவும் தேவவிரதருமானபீஷ்மர் கொல்லப்பட்டாரென்பதைக்கேட்டு இப்பொழுது எனக்கு ஆறுதல்உண்டாகவில்லை. ஸஞ்சய! புத்திரனை இழந்ததனுலுண்டானதும் மனத்தில் ஊன்றியதுமான பெரியதுன்பத்தை அக்னியை நெய்யினுல்ஜ்வலிக்கச்செய்வதுபோல நீ ஜ்வலிக்கச்செய்கிருய். பிரஸித்திபெற்றவரும் எல்லாஉலகங்களுக்கும் நன்மையையே செய்கின்றவருமானபீஷ்மர் பெரிய பாரத்தைத்தாங்கிக்கொண்டிருந்துகொல்லப்பட்டாரென்பதைக்கண்ணுற்று என்புத்திரர்கள் துக்கிப்பார்களென்று எண்ணுகிறேன். ஸஞ்சய! நான் துரியோதனனுல் உண்டுபண்ணப்பட்ட அவ்விதமானதுக்கங்களைக் கேட்கப்போகிறேன். ஸஞ்சய! ஆதலால் அவ்விடத்தில்நடந்த எல்லாவற்றையும் எனக்குச் சொல். ஸஞ்சய! அந்த யுத்தத்தில் மந்தனுன (என்புத்திரனுடைய) புத்திக்குறைவினுல் நேர்ந்தஅநீதியையும் நல்லநீதியையும் நடந்தபடி எனக்குச் சொல். ஜயத்தைவிரும்புகின்றவரும் அஸ்த்ரங்களில்தேர்ச்சிபெற்றவருமான பீஷ்மராலே அந்தயுத்தத்தில் பராக்ரமத்துடன் எது செய்யப்பட்டது? கௌரவபாண்டவஸேனைகளுக்கு அந்தயுத்தம் எவ்வாறுநடந்தது? மேலும், எந்தக்காலத்தில் எவ்விதமுறையோடு எது எவ்விதமாக நடந்தது? அதைமுழுதும் உரைக்கவேண்டும்" என்றுகேட்டான்.

---

## பதினைந்தாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



(துரியோதனன் பீஷ்மரைரக்ஷிக்கும்படி துச்சாஸனனுக்குக் கட்டளையிட்டது.)

ஸஞ்சயன், "மஹாராஜரே! தொடர்ச்சியான இந்தக் கேள்வியானது உம்மால்கேட்கத்தகுந்ததுதான். அதற்கு நீர் தகுந்தவராயிருக்கின்றீர். இந்தத்தோஷத்தை நீர் துரியோதனன்மீது சுமத்துவதற்குத் தகுந்தவரல்லீர். தன்னுடைய கெட்டநடையால் கெடுதலை அடைகிறமனிதன் அந்தப்பாபத்தினுல் மற்றவனை (ஆக்ரமிக்கப்பட்டவனென்று) சந்தேகிப்பதற்குத் தகுந்தவனல்லன். மஹாராஜரே! மனிதர்களுள் எவன் முழுதும்நிந்திக்கத்தக்கவையும் மிக இழிந்தவையுமானகாரியங்களைச் செய்கிறுனே அவன் எல்லா உலகங்களிலும் கொல்லத்தக்கவனுகிறுன். (பிறர்செய்யும்) வஞ்சனையை அறி

யத் திறமையுள்ளவர்களும் மந்திரிகளுடன்கூடினவர்களுமான பாண்டவர்கள் உமக்காகவே காட்டில் துன்பத்தை அனுபவித்தார்கள்; நெடுங்காலம் பொறுத்தார்கள். மஹாராஜரே! குதிரைகளுக்கும் யானைகளுக்கும் அளவற்றதேஜஸுள்ள அரசர்களுக்கும் (யுத்தகளத்தில்நேர்ந்ததும்) என்னால் ப்ரத்யக்ஷமாகவும் யோகபலத்தினாலும் பார்க்கப்பட்டதுமானவிஷயத்தைக் கேளும். நீர் துக்கத்தில் மனத்தைச் செலுத்தவேண்டாம். அரசரே! இது இவ்விதமே ஆகத்தக்கதென்று முன்னமே தெய்வத்தால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இது நிச்சயம். எவருடைய அனுக்ரஹத்தினால் திவ்யமும் ஸர்வோத்தமமுமான அவ்விதஞானத்தை நான்அடைந்தேனோ சிறந்த புத்தியுள்ள அந்தவ்யாஸருக்கு வந்தனம்செய்து நன்றாகச் சொல்லுவேன். அரசரே! மஹாத்மாவான வ்யாஸருடையவரத்தினாலே எனக்கு [1]அதீந்திரியமான திருஷ்டியும் தூரத்திலிருந்தே (சப்தங்களைக்) கேட்குந்திறமையும் பிறருடையமனத்தையும் நடந்ததையும் இனி நடப்பதையுமுணர்தலும் சாஸ்திரமரியாதைகளைக்கடந்த துஷ்டர்களுடைய உத்பத்திக்குக் காரணத்தையறிதலும் ஆகாசத்தில் மங்களகாமானகதியும் யுத்தங்களில் அஸ்த்ரங்களாலேதாக்கப்படாமலிருத்தலும் கிடைத்திருக்கின்றன. விசித்ரமும் மிக்கஆச்சர்யமும் மயிர்க்கூச்சலை விளைவிப்பதுமானயுத்தம் பாரதர்களுக்குநடந்தவிதத்தை விஸ்தாரமாக என்னிடமிருந்துகேளும். மஹாராஜரே! ஆயத்தமாயுள்ள அந்தச்சேனைகள் முறைப்படி அணிவகுக்கப்பட்டிருக்கும்தருணத்தில் துர்யோதனன் துச்சாஸனனைநோக்கி, 'ஓ! துச்சாஸன! ரதங்கள் பீஷ்மரைரக்ஷிப்பதற்காக விரைவாக ஒன்றுசேர்க்கப்படவேண்டும். எல்லாச்சேனைகளையும் விரைவாக (யுத்தத்திற்கு) நீ ஏவவேண்டும். அனேகவர்ஷகாலமாக எண்ணப்பட்டிருந்த ஸைனிகர்களுடன்கூடின பாண்டவகௌரவர்களுடைய அவ்விதமானயுத்தமானது இதோ என்னை நாடிவிட்டது. யுத்தத்தில் பீஷ்மரைக்காப்பதைக்காட்டிலும் முக்கியமானவேறுகாரியம் இல்லையென்றே எண்ணுகிறேன். இந்தப் பீஷ்மர் பாதுகாக்கப்பட்டால் ஸ்ருஞ்சயர்களுடன்கூடின பாண்டவர்களையும் ஸோமகர்களையும்கொல்வார். பரிசுத்தமானசித்தமுள்ள பீஷ்மர், 'நான் சிகண்டியைக் கொல்லமாட்டேன். ஏனெனில், இவன் முன்பு ஸ்திரீயாயிருந்தவனெனக் கேள்விப்படுகிறேன். ஆதலால், அவன் என்னுடையயுத்தத்தில் விலக்கத்தக்கவன்' என்று சொல்லி

---

[1] கண்முதலியபாஹ்யேந்திரியங்களுக்கு அகோசரமான வஸ்துக்களை நோக்கக்கண்டறியுந்திறமையுள்ள ஞானக்கண்.

யிருக்கிறார். ஆதலால், பீஷ்மரை நன்குபாதுகாக்கவேண்டுமென்பது என்னுடைய எண்ணம். என்னைச்சேர்ந்தவர்களெல்லோரும் சிகண்டியைக்கொல்லும்விஷயத்தில் முயற்சியுள்ளவர்களாக இருக்கவேண்டும். அவ்வாறே எல்லாவிதத்தினாலும் அஸ்திரங்களில் ஸமர்த்தர்களான அந்தக்கீழ்நாட்டுவீரர்களும் மேல்நாட்டுவீரர்களும் தென்னாட்டுவீரர்களும் வடநாட்டுவீரர்களும் பிதாமகரைப் பாதுகாக்கவேண்டும். பாதுகாக்கப்படாமலிருந்தால் அதிகபலமுள்ள ஸிம்மத்தையும் ஓநாய் கொன்றுவிடுமன்றோ ? நரி ஸிம்மத்தைக்கொல்வதும்போலச் சிகண்டியானவன் பீஷ்மரைக்கொல்லும்படி நாமசெய்யக்கூடாது. யுதாமன்யுவானவன் இடப்பக்கத்திலுள்ள சேனையையும் உத்தமௌஜஸானவன் வலப்பக்கத்திலுள்ளஸேனையையும் ரக்ஷித்துக்கொண்டு அர்ஜுனனை அடைந்திருக்கின்றனர். அர்ஜுனனும் சிகண்டிக்கு ரக்ஷகனாக இருக்கின்றான். துச்சாஸனா ! பார்த்தனால் ரக்ஷிக்கப்படுகின்றவனும் பீஷ்மரால் (யுத்தத்தில்) விலக்கப்பட்டவனுமான சிகண்டியானவன் பீஷ்மரைக்கொல்லாமலிருக்கும்படிசெய்' என்றுகூறினான்.

---

## பதினாறுவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)

(கௌரவபாண்டவஸேனைகளை வர்ணித்தல்.)

பிறகு இரவுசென்று விடியற்காலம்ஆகவே, '(யுத்தத்துக்கு) ஆயத்தம்செய்யலாம் ; (யுத்தத்துக்கு) ஆயத்தம்செய்யலாம்' என்று உரத்துச்சொல்லுகின்ற அரசர்களுடையசப்தமானது பெரிதாகத் தோன்றியது. பாரதரே ! (சைனியம்) முழுவதும் சங்கவாத்யகோஷங்களும் துந்துபித்வனிகளும் ஸிம்மநாதங்களும் குதிரைகளினுடையகனைத்தலின் சப்தங்களும் அவ்வாறேதேருருளைகளின்ஒலிகளும் கர்ஜிக்கின்றயானைகளினுடையஒலிகளும் கர்ஜிக்கின்றயுத்தவீரர்களுடையஸிம்மநாதங்களும் கைகொட்டுதல்களும் உரத்தவீரவாதங்களும் எல்லாப்பக்கங்களிலும் நிரம்பின. மஹாராஜரே! கௌரவபாண்டவர்களுடைய பெரியஸேனைமுழுவதும் மிச்சமின்றி ஒன்றுசேர்ந்து சூரியோதயகாலத்தில் யுத்தம்செய்ய ஸன்னத்தமாகப்புறப்பட்டது. ராஜேந்திரரே ! உமதுபுத்திரர்களுடையனவும் அவ்வாறே பாண்டவர்களுடையனவுமான அஸ்திரங்களும் சஸ்திரங்களும் கவசங்களும் எவ்விதத்தினாலும் பிளக்கமுடியாதவைகளாயிருந்தன. பாரதரே !

பிறகு சஸ்திரங்களையுடையவைகளான உம்மைச்சேர்ந்தவர்களுடைய பெரியசேனைகளும் எதிரிகளுடைய பெரியசேனைகளும் வெளிப்படையான இடத்தில் நன்றாகக்காணப்பட்டன. அந்தச்சேனையில் பொன்னால் அலங்கரிக்கப்பட்டு விளங்குகின்றயானைகளும் தேர்களும் மின்னலுடன்கூடினமேகங்கள்போலக் காணப்பட்டன. தேர்ப்படைகள் அனேகநகரங்கள்போலக் காணப்பட்டன. அந்தச்சேனையில் உம்முடையபிதா பூர்ணசந்திரன்போல மிகவும்விளங்கினார். யுத்தவீரர்கள் அந்தச் சேனைகளில் விற்களையும் [1]ரிஷ்டிகளையும் கத்திகளையும கதைகளையும் சக்திகளையும் தோமரங்களையும் குற்றமற்றஆயுதங்களையும் ஏந்திநின்றார்கள். அரசரே! யானைகளும் காலாட்களும் தோளிகளும் குதிரைகளும் நூறுநூறாகவும் ஆயிரம்ஆயிரமாகவும் வலைகள் போலச் சூழ்ந்துநின்றனர். உயரஎடுத்து நிறுத்தப்பட்டவைகளும் காந்தியுள்ளவைகளும் பற்பலவித வடிவங்களுள்ளவைகளுமான உம்மைச்சேர்ந்தவர்களுடையகொடிகளும், பிறருடையகொடிகளும் ஆயிரம்ஆயிரமாகக் காணப்பட்டன. பொன்னாலும்ரத்நங்களாலுமாகியஆபரணங்களால்அலங்கரிக்கப்பட்ட அங்கங்களுள்ள ஆயிரமாயிரமாயிருக்கின்றயானைவீரர்கள் ஜ்வலிக்கின்றநெருப்புகள்போல அதிககாந்தியுடையவர்களாகவிளங்கினார்கள். யுத்தத்தில் விருப்பமுள்ளவர்களும் (யுத்தத்திற்கு) எழுந்தவர்களுமான அந்த உத்தமவீரர்கள் மஹேந்திரனுடையஉப்பரிகைகளிலுள்ள மாசற்றவைகளானகொடிமரங்கள்போலக் காணப்பட்டார்கள். உயர்த்தப்பட்ட ஆயுதங்களால்விசித்ரமாயிருப்பவர்களும் கையுறைபூண்டவர்களும் அம்புத்தூணியை அணிந்தவர்களும் விருஷபங்களுடைய கண்கள் போன்ற கண்களையுடையவர்களுமான அரசர்கள் சேனைமுகத்தை அடைந்து விளங்கினார்கள். புருஷசிரேஷ்டர்களும் சூரர்களும் பரிகாயுதம்போன்ற கைகளையுடையவர்களும் அக்ஷௌஹிணிக்கணக்கான படைகளுக்குத்தலைவர்களும் யாகங்களை அனுஷ்டித்தவர்களும் அளவற்றதக்ஷிணைகளைக்கொடுத்தவர்களுமான ஸௌபலனான சகுநி, சல்யன், [2]ஸிந்துதேசாதிபதியான ஜயத்ரதன், அவந்திதேசாதிபர்களான விந்தாநுவிந்தர்கள், காம்போஜதேசாதிபதியான ஸுதக்ஷிணன், களிங்கதேசாதிபதியான சுருதாயுஸ், ஜயத்ஸேனராஜன், கோஸலதேசாதிபதியான ப்ருஹத்பலன், ஸாத்வதனான க்ருதவர்மா இந்தப்பத்துவீரர்களும், துர்யோதனனுக்குஉடன்பட்டு அவனை அனுஸரிக்கின்றவர்களான இன்னும்அனேகர்களும், சிறந்தநீதியுடையவர்

[1] இருபுறமும் முனையுள்ளகத்தி. [2] வேறுபாடம்.

களும் மஹாரதர்களுமானமற்றஅரசர்களும், ராஜபுத்திரர்களும் யுக்த ஸன்னத்தர்களாகத் தங்கள்சேனைகளில் நின்றார்கள். கிருஷ்ணாஜினத்தைஉடுத்தவர்களும் பலசாலிகளும் யுத்தத்துடன்கூடியவர்களும் ஸந்தோஷமுடையவர்களும் ஸமர்த்தர்களுமான எல்லாவீரர்களும் துர்யோதனனுக்காக (உயிரைஇழந்து) பிரம்மலோகத்தை அடைவதில் தீக்ஷைபெற்றவர்களாகிப் பத்துஅக்ஷௌஹிணிகளைச்சேர்த்துக் கொண்டு நின்றார்கள். எந்தஇடத்தில் தலைவரானபீஷ்மர் எல்லாச் சேனைகளுக்கும் முன்னேஇருக்கின்றாரோ அந்தஇடத்தில் துர்யோதனனைச்சார்ந்ததும் பெரியதுமான கௌரவர்களுடையபதினோராவது அக்ஷௌஹிணிஸேனையானது நின்றது. மஹாராஜரே! வெள்ளைத்தலைப்பாகையையுடையவரும் வெண்மையானகுதிரைகளையுடையவரும் வெண்ணிறமுள்ளகவசத்தை அணிந்தவரும் (விரதத்தினின்று) தவறாதவருமானபீஷ்மரை உதித்திருக்கின்றசந்திரனைப்போல நாங்கள் கண்டோம். பொற்பனைமரத்தைக்கொடியாகக்கொண்டவரும் வெள்ளிரதத்தில்வீற்றிருக்கின்றவருமானபீஷ்மரைக் கௌரவர்களும் பாண்டவர்களும் வெண்மையானமேகத்தின்மீது விளங்குகின்றசூரியனைப்போலக் கண்டார்கள். கொட்டாவிவிடுகின்றபெரியஸிம்மத்தைக்கண்டு அற்பமிருகங்கள்நடுங்குவதுபோலப் படைமுகத்திலிருக்கின்றபீஷ்மரைக்கண்டு திருஷ்டத்யும்னனைமுதன்மையாகக்கொண்ட மகாவில்லாளிகளானபாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் மிக்கநடுக்கமடைந்தார்கள். அரசரே! திருஷ்டத்யும்னனைத்தலைவனாகக்கொண்ட எல்லாயுத்தவீரர்களும் அடிக்கடி மிகுந்தபயமடைந்தார்கள். அரசரே! உம்முடைய இந்தப்பதினோரக்ஷௌஹிணி ஸைனியங்களும் காந்தியுடையவைகளாயிருந்தன. அவ்வாறே பாண்டவர்களுடைய ஏழுஅக்ஷௌஹிணி சேனைகளும் மஹாபுருஷர்களால் பாதுகாக்கப்பட்டன. (யுத்தம்செய்வதற்காக) ஒன்றோடொன்றுகலந்திருக்கின்ற இரண்டுசேனைகளும், அதிகமதங்கொண்டசுறாமீன்களும் சுழல்களுமுள்ளவையும் பெரியமுதலைகளால் வியாபிக்கப்பட்டவையும் யுகாந்தகாலத்தில் (கொந்தளித்து, ஒன்றோடொன்று) தாக்குகின்றவையுமான இரண்டு ஸமுத்திரங்கள்போலக் காணப்பட்டன. வேந்தரே! ஒன்றோடொன்று (யுத்தத்திற்காக) எதிர்த்துநின்றகௌரவசேனைகளுடைய அவ்விதமானசேர்க்கையானது எங்களால் இதற்குமுன் பார்க்கப்பட்டதுமில்லை; கேட்கப்பட்டதுமில்லை.

---

## பதினேழாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



(கௌரவசேனை யுத்தத்துக்காகப் புறப்பட்டது.)

வேதங்களைப்பிரித்தவரும் பகவானுமான அந்தக்கிருஷ்ணத்வைபாயனர்சொன்னதுபோல எல்லாஅரசர்களும் ஒருங்குசேர்ந்து (குருக்ஷேத்திரத்திற்கு) வந்தார்கள். அந்தத்தினத்தில் சந்திரன் பிதிருலோகத்தைநாடிஇருந்தான். ஆகாயத்திலிருந்து ஏழுமஹாக்கிரஹங்கள் ஜ்வலித்துக்கொண்டு கீழேவீழ்ந்தன. ஆதித்யன் இரண்டாகப்பிளக்கப்பட்டவன்போல உதயகாலத்தில் காணப்பட்டான். சூரியன் காந்தியுடன் ஜ்வலிக்கின்றஜ்வாலையோடுகூட மறுபடியும்தோன்றினன். எரிச்சலுடன்கூடியதிசையில் மாம்ஸங்களையும் ரக்தங்களையும்புஜிக்கின்றநரிகளும் காக்கைகளும் (மரித்தவர்களுடைய) சரீரங்களை அடையஎண்ணங்கொண்டு கூச்சலிட்டன. பகைவர்களை அடக்குபவர்களும் ஜிதேந்திரியர்களுமான, பிராயமுதிர்ந்தவரும் கௌரவர்களுக்குப்பிதாமஹருமானபீஷ்மரும் பாத்வாஜபுத்திரரானதுரோணரும் தினந்தோறும் காலையில்எழுந்திருந்து, 'பாண்டுபுத்திரர்களானபார்த்தர்களுக்கு ஜயம்உண்டாகவேண்டும்' என்றுசொன்னார்கள். பகைவர்களைஅடக்குகிறவர்களான அவ்விருவரும் அந்தப்பிரதிஜ்ஞைசெய்யப்பட்டபடியே உம்முடையபிரயோஜனத்தைக்கருதி யுத்தம்செய்தார்கள். எல்லாத்தர்மவிசேஷங்களையுமறிந்தவரும் உமக்குப்பிதாவுமானதேவவிரதர் அரசர்களைஅழைத்து, 'க்ஷத்திரியர்களே! இதோ உங்களுக்கு ஸ்வர்க்கத்துக்குப்போவதற்காகப் பெரியவாயில் திறக்கப்பட்டிருக்கிறது. அவ்வாயில்வழியாக நீங்கள் இந்திரனோடும் ப்ரம்மாவோடும் ஸாலோக்யத்தை அடையுங்கள். இந்தவழியானது உங்களுக்கு முன்னோர்களாலும் அவர்களுக்கும் முன்னோர்களாலும் சாசுவதமாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. நீங்கள் யுத்தத்தில் மனக்கவலையற்றவர்களாக உங்கள்ஆத்மாவைக் கௌரவப்படுத்திக்கொள்ளுங்கள். நாபாகனும் யயாதியும் மாந்தாதாவும் நகுஷனும் நிருகனும் இப்படிப்பட்டசெய்கைகளால்ஸித்தியடைந்து உத்தமமான ஸ்தானத்தையடைந்தார்கள். வீட்டில் வியாதியினால் மரிப்பதென்பது க்ஷத்திரியனுக்கு அதர்மம். சஸ்திரத்தினால் நாசத்தை அடைவது இவனுக்கு ஸநாதனதர்மம்' என்றுகூறினர். பரதரில் சிறந்தவரே! பீஷ்மர்இவ்வாறுஉரைக்கக்கேட்டஅரசர்கள் சிறந்த

தேர்களால் தம்படைகளைப் பிரகாசிக்கச்செய்துகொண்டு (யுத்தத்திற்காகப்) புறப்பட்டார்கள். பாரதரே! ஸூர்யகுமாரனான அந்தக் கர்ணன் மந்திரிகளோடும்உறவினர்களோடுங்கூடப் பீஷ்மரால் யுத்தத்தில் ஆயுதத்தைக்கீழேவைக்கும்படி செய்விக்கப்பட்டான். உம்முடையபுத்திரர்களும் உம்மைச்சேர்ந்தஅரசர்களும் கர்ணனைவிலக்கிவிட்டு ஸிம்மநாதத்தினால் பத்துத்திக்குக்களையும் எதிரொலியிடும்படி செய்துகொண்டு புறப்பட்டார்கள். அந்தச்சேனைகள் வெள்ளைக்குடைகளாலும் கொடித்துணிகளாலும் கொடிமரங்களாலும் [1]யானைகளாலும் குதிரைகளாலும் காலாட்களாலும் பிரகாசித்தன. பூமியானது பேரிகைகள் பணவங்கள் துந்துபிகள் இவைகளுடையசப்தங்களாலும் தேருருளைகளுடைய தனியினால்உண்டுபண்ணப்பட்ட ஓசைகளாலும் கலக்கமுற்றதாயிற்று. ஸ்வர்ணமயமானகைவளைகளாலும் தோள்வளைகளாலும் விற்களாலும்விளங்குகின்றமஹாரதர்கள் நெருப்புடன்கூடினமலைகள்போல விளங்கினார்கள். பீஷ்மர் ஐந்துநக்ஷத்திரப்ரதிமைகளுள்ள பெரியபனைமரக்கொடியோடு நிர்மலமான சூரியனுக்கு ஒப்பாகக் கௌரவசேனையின் முன்பக்கத்தில் பிரகாசித்துக்கொண்டு நின்றார். பரதர்களிற்சிறந்தவரே! உம்மைச்சேர்ந்த மகாவில்லாளிகளான அரசர்கள் பீஷ்மருடைய கட்டளைப்படி இருந்தார்கள். கோவாஸனதேசத்தில் தோன்றியவனும் தாமரைப்புஷ்பத்தின்நிறமுடையவனுமான அந்தச்சைப்யன் எல்லாஅரசர்களோடுங்கூடினவனாகி அரசர்க்குரியதும் கொடியுள்ளதுமான சிறந்தயானையின்மீதேறி எல்லாச்சேனைகளுக்கும்முன்னிலையில்நின்றான். அசுவத்தாமாவானவர் யுத்தமுயற்சியுள்ளவராகி ஸிம்மத்தின்வால்வடிவமானகொடியோடு (யுத்தத்திற்காகச்) சென்றார். சுருதாயுதன், சித்ரஸேனன், புருமித்ரன், விவிம்சதி, சல்யன், பூரிஸ்ரவஸ், மகாரதனான விகர்ணன் இவ்வேழுமகாவில்லாளிகளும் துரோணபுத்திரரைமுன்னிட்டுக்கொண்டு சிறந்தகவசம் அணிந்து ரதங்களோடு பீஷ்மருக்கு முன்னால் சென்றார்கள். மிக்கவளர்ச்சியுள்ளவைகளும் காந்தியுள்ளவைகளும் பொன்மயமுமான அவர்களுடைய த்வஜங்களும் உத்தமமானரதங்களைவிளக்கிக்கொண்டு அதிகமாகப்பிரகாசித்தன. கமண்டலுவினால்அலங்கரிக்கப்பட்டதும் ஸ்வர்ணமயமானதும் வில்லுடன்கூடியதுமான ஆசார்யமுக்கியரான துரோணருடையவேதித்வஜமானது பிரகாசித்தது. அநேகலக்ஷக்கணக்கான ஸேனையைஅழைத்துச்செல்லுகின்றதுரியோதனனுக்கு மணிமயமானபெரிய அரவக்

[1] ஒருசொல் விடப்பட்டது.

கொடியானது இருந்தது. ரதிகர்களானபௌரவனும் காளிங்கனும் காம்போஜனும் ஸுதக்ஷிணனும் க்ஷேமதன்வாவும் சல்யனும் அந்தத்துர்யோதனனுக்குமுன்நின்றார்கள். கிருபரானவர் விருஷபக்கொடியையுடைய உத்தமமானரதத்தோடு (ஸைனிகர்களை) அழைத்துக்கொண்டு மகததேசாதிபதியினுடைய சேனாமுகத்தை அடைந்தார். அங்கதேசாதிபதியான (கர்ணபுத்திரனை விருஷகேதுவினாலும்) மனவுறுதியுள்ள கிருபராலும் ரக்ஷிக்கப்பட்ட கீழ்நாட்டுவீரர்களுடைய மிகப்பெரிதான அந்தச்சேனையானது சரத்காலமேகம் போல விளங்கியது. பெரும்புகழுள்ளஜயத்ரதன் படைத்தலையில் நின்றுகொண்டு பன்றிவடிவங்கொண்ட வெள்ளிமயமானபிரதான த்வஜத்தோடு விளங்கினான். லக்ஷம்தேர்களும் எண்ணாயிரம்யானைகளும் அறுபதினாயிரம்குதிரைகளும் அவனுடையவசத்திலிருந்தன. ஸிந்துதேசாதிபதியும் அரசனுமான ஜயத்ரதனால் பாதுகாக்கப்பட்ட அந்தப்படையின்முன்னணியானது அளவற்றதேர்களும் யானைகளும் குதிரைகளுமுள்ள பெரும்படையாகப் பிரகாசித்தது. களிங்கதேசங்களுக்கெல்லாம் அரசனாயிருப்பவன் அறுபதினாயிரம்தேர்களோடும் பதினாயிரம்யானைகளோடும்சேர்ந்து கேதுமான் என்கிற அரசனோடுகூடச் சென்றான். பர்வதங்களுக்கொப்பான அவனுடையபெரியயானைகள் யந்திரங்களாலும் தோமரங்களாலும் அம்புக்கூடுகளாலும் கொடிகளாலும் மிக்கபிரகாசமுள்ளவைகளாகச்செய்யப்பட்டு மிகவிளங்கின. களிங்கதேசாதிபதியானவன் அக்னிஸ்வரூபமான சிறந்தகொடிமரம் வெண்கொற்றக்குடை ஸ்வர்ணமயமான கண்டாபரணம் சாமரம் விசிறி ஆகிய இவற்றால்விளங்கினான். அரசரே! கேதுமான்என்பவனும் யுத்தரங்கத்தில் விசித்திரமும் உத்தமமுமான அங்குசமுள்ளயானையின்மீதேறி மேகத்தின்மீதிருக்கின்ற சூரியன்போல (விளங்கினான்.) தேஜஸினால்விளங்குகின்ற பகதத்தராஜன் உத்தமமானயானையின்மீதேறி வஜ்ரதரனை இந்திரன்போலச்சென்றான். பகதத்தனுக்குஒப்பானவர்களும் அவந்திதேசாதிபதிகளுமான விந்தன் அனுவிந்தனிருவரும் யானையின்பிடரியின்மீதேறிக் கேதுமானைத்தொடர்ந்துசென்றனர். வேந்தரே! த்ரோணராலும் அரசரானபீஷ்மராலும் அவ்வாறே ஆசார்யபுத்திரரான அசுவத்தாமாவாலும் பாஹ்லீகனாலும் கிருபராலும் ஏற்படுத்தப்பட்டதும் தேர்ப்படையுள்ளதுமான அந்தவ்யூகமானது யானைகளாகிற அங்கங்களுள்ளதாகவும் அரசர்களாகிறதலைகளுள்ளதாகவும் குதிரைகளாகிறசிறகுகளுள்ளதாகவும் உக்கிரஸ்வரூபியாக அட்டஹாஸம்

செய்துகொண்டு நாற்புறங்களிலும் முகங்களுள்ளதாகிப் பகைவர் படையை எதிர்த்துச்சென்றது.

---

## பதினெட்டாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)

### (கௌரவசேனையின்வர்ணனம்.)

மஹாராஜரே! பிறகு கேட்பவர்களுடைய மனத்தை நடுக்கமுறச்செய்கின்றதான போர்புரிய எண்ணங்கொண்ட போர்வீரர்களுடையசப்தமானது ஒரு முகூர்த்தகாலத்திற்குள் உரக்கக்கேட்கப்பட்டது. சங்கங்களுடைய த்வனிகளாலும் துந்துபிவாத்யங்களுடைய ஓசைகளாலும் யானைகளுடையகர்ஜனைகளாலும் தேர்ச்சக்ரங்களின் ஒலிகளாலும் பூமியானது பிளக்கப்பட்டதுபோலாகியது. அப்பொழுது கனைக்கின்றகுதிரைகளுடைய சப்தத்தினாலும் கர்ஜிக்கின்றயுத்த வீரர்களுடைய சப்தத்தினாலும் க்ஷணத்திற்குள் ஆகாயமும் பூமியும் நான்குபக்கத்திலும் நிரப்பப்பட்டன. (பகைவர்களால்) அவமதிக்கத்தகாதவரே! உமதுபுத்திரர்களுடையசேனைகளும் பாண்டவர்களுடைய சேனைகளும் ஒன்றையொன்று எதிர்க்குங்காலத்தில் மிகநடுக்கமுற்றன; அவ்விடத்தில் பொன்னால் அலங்கரிக்கப்பட்டயானைகளும் தேர்களும் மின்னல்களுடன்கூடினமேகங்கள்போல விளங்குகின்றவைகளாகக் காணப்பட்டன. அரசரே! பொன்வளையங்களுள்ளவைகளும் பற்பலவிதமானவடிவங்களுள்ளவைகளுமான உம்மைச்சேர்ந்த வீரர்களுடையகொடிகள் ஜ்வலிக்கின்றஅக்னிகள்போல விளங்கின. பாரதரே! உம்மைச்சேர்ந்தவீரர்களுடையகொடிகளும் சத்துருக்களுடையகொடிகளும் மஹேந்திரனுடைய நிர்மலமான பெரியத்வஜங்கள்போலக் காணப்பட்டன. வீரர்கள் நெருப்புக்கும் சூரியனுக்கும் ஸமமான காந்தியுள்ள பொற்கவசங்களை அணிந்து நெருப்புக்கும் ஸூர்யனுக்கும் ஸமமானஒளியுள்ளவர்களாகக் காணப்பட்டார்கள். அரசரே! விசித்திரமானஆயுதங்களையும் விற்களையுமுடையவர்களும் விசித்திரமான ஆயுதங்களைக் கையிலேந்தியவர்களும் கையுறை பூண்டவர்களும் கொடியையுடையவர்களும் விருஷபத்தினுடைய கண்போன்ற கண்களையுடையவர்களும் பெரியவில்லையேந்தியவர்களும் சிரேஷ்டர்களுமான கௌரவயுத்தவீரர்கள் படைமுகத்தையடைந்து விளங்கினார்கள். அரசரே! உம்முடைய குமாரர்களான துச்

சாஸனன், துர்விஷஹன், துர்முகன், துஸ்ஸஹன், விவிம்சதி, சித்ர ஸேனன், மஹாரதனானவிகர்ணன், ஸத்யவ்ரதன், புருமித்ரன், ஜயன், பூரிஸ்ரவஸ், சலன் இவர்கள் பீஷ்மருடையபின்புறத்தைக் காத்தார்கள். அவ்வாறே இருபதினாயிரம்தோராளிகள் இவர்களைப் பின்தொடர்ந்துவந்தார்கள். சூரர்களும் சரீரத்தைவிழக்கத்துணிந்தவர்களுமான அபீஷாஹர்கள், சூரஸேனர்கள், சிபிகள், வஸாதிகள், சால்வர்கள், மத்ஸ்யர்கள், அம்பஷ்டர்கள், த்ரிகர்த்தர்கள், கேகயர்கள், ஸௌவீரர்கள், கைதவர்கள், கிழ்நாட்டு மேல்நாட்டு வடநாட்டு வீரர்கள் ஆகிய இந்தப்பன்னிரண்டுதேசத்தைச்சேர்ந்த எல்லா அரசர்களும் பெரியரதக்கூட்டங்களுடன் பீஷ்மரைப் பாதுகாத்தார்கள். மிக்கபலமுள்ள பதினாயிரம்யானைகள் அடங்கியஒருபடையானது மகதநாட்டு வேந்தன் இருக்கிற இடத்திலுள்ள தேர்ப்படையை அனுஸரித்தது. படைநடுவில் ரதங்களுடைய சக்ரரக்ஷகர்களும் யானைகளுடையபாதரக்ஷகர்களுமான அறுபதுலக்ஷம் பெயர்கள் இருந்தார்கள். வில்லையும் கேடகத்தையும் கத்தியையும்கையில்கொண்டவர்களும் அனேகலக்ஷக்கணக்கானவர்களும் [1]நகரங்களாலும்ஈட்டிகளாலும் யுத்தம்செய்கின்றவர்களுமான காலாட்களின் கூட்டங்கள் முன்னணியில்சென்றன. பாரதரே! உம்முடைய புத்திரனுக்குப் பதினோர்அக்ஷௌஹிணி சேனைகளிருந்தன. மஹாராஜரே! அது யமுனையுடன்கூடினகங்கை போலக் காணப்பட்டது" என்று கூறினான்.

---

## பத்தொன்பதாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



(யுத்தத்தின்பொருட்டுப் பாண்டவசேனைபுறப்பட்டது.)

திருதராஷ்டிரன், "அணிவகுக்கப்பட்ட(நம்முடைய) பதினோரக்ஷௌகிணிஸேனையையும்பார்த்துப் பாண்டுகுமாரனான யுதிஷ்டிரன் அல்பமான ஸேனையினால் எவ்வாறு எதிரணிவகுத்தான்? ஸஞ்சய! மானுஷவ்யூஹத்தையும் தெய்வவ்யூஹத்தையும் காந்தர்வவ்யூஹத்தையும் ஆஸுரவ்யூஹத்தையும் அறிந்த பீஷ்மரைஎதிர்த்து அந்தக் குந்திபுத்திரன் எவ்வாறு எதிரணிவகுத்தான்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

---

[1] ஒருவகை ஆயுதம்.

"தர்மாத்மாவும் பாண்டுபுத்திருமான தர்மராஜர் அணிவகுக்கப்பட்டிருக்கின்ற துர்யோதனனுடைய சைனியங்களைக்கண்டு தனஞ்சயனைநோக்கி, 'ஐயா! ப்ருகஸ்பதிமஹரிஷியினுடையவசனத்தினால் (நீதியில்வல்லவர்கள், 'பகைவர் படைகளைவிடத் தன்படைவீரர்கள்) குறைவாயிருந்தால் (அரசன் அவர்களை) ஒன்றுசேர்த்துப் போர்புரியும்படி செய்விக்கவேண்டும்; அதிகமாயிருந்தால், அவர்களை இஷ்டப்படி (தனித்தனியாகப்பிரித்து) விஸ்தாரப்படுத்தவேண்டும். கணக்கினால் குறைந்தவர்களுக்கு, அதிகரித்திருக்கின்ற பகைவீரர்களோடு (போர்புரிகையில்) சூசீமுகம்என்கிறவ்யூகம் ஏற்படுத்திக்கொள்ளத்தக்கது' என்றுதெரிவிக்கிறார்கள். அவ்வாறே நம்முடைய படையானது பகைவர்படைகளைக்காட்டிலும் மிகவும் குறைவானது. பாண்டவ! ப்ருகஸ்பதிமகரிஷியினுடைய இந்தவார்த்தையை அறிந்து நீ அணிவகு' என்று கூறினர். இவ்வார்த்தையைக் கேட்டுப் பாண்டுபுத்திரனான அர்ஜுனன் தர்மராஜரைப்பார்த்து அரசர்களில் மிகச்சிறந்தவரே! பகைவர்களால் வெல்லமுடியாததும் வஜ்ரபாணியான இந்திரனாலே ஏற்படுத்தப்பட்டதும் வஜ்ரம்என்றுபேர்கொண்டதும் உறுதியுள்ளதுமானவ்யூஹத்தை இதோ நான் உமக்கு ஏற்படுத்துகிறேன். பெருங்காற்றுப்போலப் போரில் பகைவர்களால் தாங்கமுடியாதவனும் அடிப்பவர்களுள்சிறந்தவனுமான அந்தப்பீமன் நமக்குமுன் யுத்தம்செய்யப்போகிறான். யுத்தஉபாயங்களில்ஸமர்த்தனும் புருஷசிரேஷ்டனும் தலைவனுமானபீமஸேனன் பகைவர்படைகளின்வன்மையைஅடித்துக்கொண்டு நமக்குமுன் யுத்தம்செய்யப்போகிறான். துரியோதனனை முதன்மையாகக்கொண்டஎல்லாக்கௌரவர்களும் எவனைப்பார்த்து ஸிம்மத்தைக்கண்ட அல்பமிருகங்கள்போல மிகப்பயந்து திரும்பப்போகிறார்களோ (சத்துருக்களை) அடிப்பவர்களுள்சிறந்த அந்தப்பீமஸேனனுகிறமதிலை நாமனைவரும் தேவராஜனைத் தேவர்கள் ஆசிரயிப்பதுபோல ஓரிடத்தினின்றும் பயமடையாதவர்களாக ஆசிரயிப்போம். மிக்ககோபங்கொண்டவனும் மிகக்கொடியசெய்கையுள்ளவனும் புருஷசிரேஷ்டனுமான பீமஸேனனைப் பார்ப்பதற்குச்சக்தியுள்ளமனிதன் உலகத்தில் இல்லையென்பது நிச்சயம். இடிபோன்ற பலமுள்ளதும் உறுதியுள்ளதுமான கதாயுதத்தை எடுத்துக்கொண்டு அதிகவேகத்தோடு ஸஞ்சரிக்கும் பீமஸேனன் ஸமுத்திரத்தையும் வற்றும்படி செய்வான். அரசரே! மிக்கபலசாலியான பீமஸேனனைத் தன்னுடைய பெரியபலத்தைக் காண்பிக்கும்படிசெய்யும். வேந்தரே! கேகயர்களும் த்ருஷ்ட

கேதுவும் வீர்யவானுனசேகிதானனும் மந்திரிகளுடன் (படைகளை) அழைத்துக்கொண்டு திருதராஷ்டிரகுமாரர்களை நோக்கிச் செல்லட்டும்' என்றுமறுமொழிகூறினன். பாரதரே! அவ்வாறு சொல்லுகின்றபார்த்தனை அப்பொழுது எல்லாச்சேனைகளும் யுத்தத்தில் அனுகூலமானவாக்குகளாலே புகழ்ந்தன. இவ்வாறுசொல்லிவிட்டுப் பெரியகைவன்மையுள்ளதனஞ்சயன் அவ்வாறேசெய்தான். அவன் அவ்வாறே அந்தப்படைகளை அணிவகுத்து விரைவாக (எதிர்த்துச்) சென்றான். பாண்டவர்களுடையபெரும்படையானது (யுத்தஸன்னாகத்தோடு) புறப்பட்டிருக்கின்றகௌரவர்களைக்கண்டு (பிரவாகத்தால்) பூர்ணமானகங்கைபோல அசைவற்றதாகவும் கொஞ்சம்சலிக்கின்றதாகவும் காணப்பட்டது. பீமஸேனனும் வீர்யவானுனதிருஷ்டத்யும்னனும் நகுலனும் ஸஹதேவனும் த்ருஷ்டகேதுராஜனும் அப்போர்வீரர்களுக்குமுந்திநின்றார்கள். அதற்குப்பிறகு, அந்தவிராடராஜன் ஓர்அக்ஷௌஹிணிஸைன்யத்தால் சூழப்பட்டுத் தம்பிமாரோடும் குமாரர்களோடும் (அந்தப்பீமனைப்) பின்புறத்தில் பாதுகாத்தான். மிக்ககாந்தியுள்ளமாத்ரிபுத்திரர்களிருவரும் பீமஸேனனுடையசக்ரரக்ஷகர்களானார்கள்; அபிமன்யுவுடன்கூடின பலசாலிகளான திரௌபதிபுத்திரர்கள் பின்புறத்தை ரக்ஷித்தார்கள். ஸேனையில் சூரர்களும் ரதிகர்களுள்முக்கியர்களுமான பிரபத்ரகர்களோடுகூடினவனும் மஹாரதனும் பாஞ்சாலகுமாரனுமான திருஷ்டத்யும்னன் அவர்களுக்கு ரக்ஷகனாகஇருந்தான். பாதர்களுள்சிறந்தவரே! சிகண்டியோ அவர்களுக்குப்பின்புறத்தில் அர்ஜுனனால்பாதுகாக்கப்பட்டுப் பீஷ்மரைக் கொல்வதில்முயற்சியுள்ளவனாகச் சென்றான். மஹாபலசாலியான யுயுதானன் அர்ஜுனனுக்குப்பின்புறத்தில் இருந்தான். பாஞ்சாலகுமாரர்களான யுதாமன்யுவும் உத்தமௌஜஸும் சேனையைக்காப்பவர்களாயிருந்தார்கள். குந்திபுத்திரானயுதிஷ்டிராஜர் ஜங்கமமான மலைகள்போன்ற மதங்கொண்டபெரியயானைகளுடன்சேர்ந்து படைநடுவிலிருந்தார். பிறகு பெரியமனமுள்ளவனும் பராக்கிரமமுடையவனும் பாஞ்சாலராஜனுமானயஜ்ஞஸேனனும் ஓர்அக்ஷௌஹிணிஸேனையுடன் பாண்டவர்களுக்காகப் பின்புறத்தில் விராடனை அனுஸரித்துச் சென்றான். அரசரே! சூரியசந்திரர்கள்போலவிளங்குகின்றவைகளும் பொன்னணிகளால்அலங்கரிக்கப்பட்டவைகளும் பற்பல அடையாளங்களைத்தரித்தவைகளுமான பெரியகொடிகள் அவர்களுடையரதங்களிலிருந்தன. அதற்குப்பிறகு மஹாரதனை அந்த த்ருஷ்டத்யும்னன் ஸஹோதரர்களுடனும் புத்ரர்களுடனும்சேர்

ந்து (முற்கூறியஸேனாவீரர்களை) வேகமாகநடத்திக்கொண்டு யுதிஷ்டிரரைப் பாதுகாத்தான். உம்மைச்சார்ந்தவீரர்களுடையதேர்களிலும் பகைவர்களுடையதேர்களிலுமுள்ள பெரிய கொடிகளை அவமதித்துக்கொண்டு ஒப்பற்றபெரியவானரக்கொடியானது அர்ஜுனனுடைய ரதத்திலிருந்தது. கத்திகளையும் சக்திகளையும் ரிஷ்டிகளையும் கையில் கொண்டவர்களும் அனேகலக்ஷக்கணக்காயிருப்பவர்களுமானகாலாட்கள் பீமஸேனனுக்குரக்ஷகர்களாக முன்னிலையில் சென்றார்கள். மதப்பெருக்குள்ளகன்னமும்முகமுமுள்ளவைகளும் சௌர்யமுள்ளவைகளும் ஸ்வர்ணமயமானவலைபோன்ற மேல்விரிப்புகளால் ஜ்வலிக்கின்றவைபோலிருப்பவைகளும் அசைவற்றவைகளும் மழையைப் பொழிகின்ற மேகம்போன்றவைகளும் ஸர்வோத்தமங்களும் தாமரைமலர்போன்றவாஸனையையுடையவைகளும் வர்ஷாகாலத்துப்பர்வதங்கள்போன்றவைகளுமான பதினாயிரம்யானைகள் பின்புறத்தில் அரசரைத்தொடர்ந்து சென்றன. (ஒருவராலும்) ஜயிக்கமுடியாதவனும் பெரியமனமுள்ளவனுமானபீமஸேனன் பரிகாயுதம்போன்றதும் பயங்கரமுமான கதாயுதத்தை நன்றாகஉருவிக்கொண்டு பெரியஸைன்யத்தை நடத்திச்சென்றான். சூரியனைப்போலப்பார்ப்பதற்குமுடியாதவனும் ஸேனையைஎரிக்கின்றவன்போலிருப்பவனுமான அந்தப்பீமஸேனனை ஸமீபத்திலுள்ளஅந்தயுத்தவீரர்களெல்லோரும் எதிரில்பார்ப்பதற்குக்கூடச் சக்தியற்றவர்களானார்கள். பயமற்றதும் எல்லாப்பக்கங்களிலும்முகத்தையுடையதும் மின்னல்போன்றவிற்களையும்த்வஜங்களையுமுடையதும் கோரமுமான வஜ்ரம்என்றுபிரஸித்திபெற்ற இந்த வ்யூஹமானது அர்ஜுனனால் பாதுகாக்கப்பட்டது. பாண்டவர்கள் உம்முடையஸேனைக்கு எதிர்வ்யூஹமாக ஏற்படுத்திக்கொண்டதும் அவர்களால் நாற்புறங்களிலும்பாதுகாக்கப்பட்டிருக்கிறதுமான அந்த வஜ்ரவ்யூஹமானது மண்ணுலகில் (ஒருவராலும்) ஜயிக்கமுடியாதது. ஸைனியங்கள் விடியற்காலத்தில் சூரியோதயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கையில் மேகமில்லாமலே இடிமுழக்கத்துடன்கூடியகாற்றானது பின்புறத்தில் அதிகமாகவீசியது. நான்குபுறங்களிலும் பரற்கற்களைவாரியிறைக்கின்றகாற்றும் மெல்லவீசியது. புழுதியும் தூற்றிவிடப்பட்டது. பேரிருளானது உலகத்தை மூடியது. பரதர்களுள் சிறந்தவரே! கிழக்குமுகமாகப் பெரியகுறைக்கொள்ளி வீழ்ந்தது. (விழும்பொழுதே) உதிக்கின்றசூரியன்மீதுஉரைந்துகொண்டு பேரொலியுடன் சிதறியது. பரதர்களில்சிறந்தவரே! பிறகு ஸைனியங்கள் (யுத்த) ஸன்னாகத்தையடையுமளவில் சூரியன் ஒளியிழந்தவனாகி

நேரில் உதித்தான். பூமியானது சப்தத்துடன் சலித்தது. பாரதர்களிற்சிறந்தவரே! அப்பொழுது பூமியானது ஒலியுடன் சிதறியது. அரசரே! எல்லாத்திக்குக்களிலும் அனேகஇடிகள் உண்டாயின. மிக்கபுழுதி தோன்றியது. ஒன்றும் அறியப்படவில்லை. காற்றினால் விரைவாகஅசைக்கப்படுகின்றவைகளும் கட்டப்பட்டிருக்கின்ற கிங்கிணிஸமூகத்தையுடையவைகளும் பொன்மாலைகளையும் சிறந்தஆடைகளையுமுடையவைகளும் கொடித்துணிகளையுடையவைகளும் சூரியனுக்குச்சமமான ஒளிபொருந்தியவைகளுமான பெரியகொடிமரங்கள் (அசைவதால்) பனங்காடுகளில் சப்தமுண்டாவதுபோல எல்லாம், 'ஜணஜண' என்கிறசப்தமயமாகியது. பாரதர்களிற்சிறந்தவரே! ஆண்மையிற்சிறந்தவர்களும் யுத்தத்தில்களிக்கின்றவர்களுமான அந்தப்பாண்டவர்கள் இவ்வாறு உமதுபுத்திரனுடையசேனைக்கு எதிரணிவகுத்துக்கொண்டு கதாயுதத்தைக்கையில்கொண்டு முன்னிலையில் நிற்கின்ற பீமஸேனனைக்கண்டு நமதுயுத்தவீரர்களுடைய பிணங்களை விழுங்குகின்றவர்கள்போலநின்றார்கள்" என்றுகூறினான்.

---

## இருபதாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(கௌரவஸேனைகள் யுத்தத்திற்குப்புறப்பட்டுப்போதும் வகையை வர்ணித்தல்.)**

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! சூரியோதயமானவுடன் யுத்தம் செய்யஎண்ணங்கொண்டவர்களும் பீஷ்மரைத்தலைவராகக்கொண்டவர்களுமான என்னைச்சேர்ந்தவர்களாவது பீமஸேனனைத்தலைவனாகக் கொண்டபாண்டவர்களாவது எவர்கள் அப்பொழுது முதலில் உத்ஸாகமுடையவர்களானார்கள்? எவர்களுக்கு வாயுவுடன்கூடிய சந்திரசூரியர்கள் பின்புறத்திலிருந்தார்கள்? எவர்களுடையசேனையைப்பார்த்துத் துஷ்டமிருகங்கள் கத்தின? எந்தவீரர்களுடையமுகத்தின் காந்திகள் தெளிந்திருந்தன? இவைகளின்உண்மைஎல்லாவற்றையும் உள்ளபடி உரைப்பாயாக" என்றுவினவ, சஞ்சயன்சொல்லலானான்.

"அரசரே! இரண்டுபடைகளும் ஒன்றுக்கொன்று நிகரானவை போலிருந்தன. இரண்டுசேனையின்வ்யூகங்களும் அதிகஸந்தோஷமுள்ளவைகளாயிருந்தன. இரண்டுசேனைகளும்விசித்திரமான வனவரிசைகள்போலப்பிரகாசித்தன. அவ்வாறே இரண்டுசேனைகளும் யானை

களாலும் தேர்களாலும் குதிரைகளாலும் நிரம்பியிருந்தன. பாரதரே! அவ்விதமாகவே இரண்டுசைனியங்களும் பெரியவையும் பயங்கரமான ரூபமுள்ளவையும் (ஒருவராலும்) பொறுக்கமுடியாதவையுமாயிருந் தன. அவ்வாறே இரண்டுசேனைகளும் ஸ்வர்க்கத்தைஜயிக்கும்பொ ருட்டு அமைக்கப்பட்டிருந்தன. அவ்வாறே இரண்டுஸைனியங்களும் ஸத்புருஷர்களால் அடையப்பட்டிருந்தன. கௌரவர்கள் மேற்கு முகமாகநின்றார்கள். பாண்டவர்கள் கிழக்குமுகமாகநின்றார்கள். கௌரவர்களுடைய சேனையானது அஸுரராஜனுடைய சேனைபோ லிருந்தது. பாண்டவர்களுடைய (சேனையானது) தேவேந்திரனுடைய சேனைபோலிருந்தது. பாண்டவர்களுக்குப் பின்புறத்தில் குளிர்ந்த காற்று வீசியது. கௌரவர்களைநோக்கித் துஷ்டமிருகங்கள்கத்தின. (பாண்டவசேனையிலுள்ள) சிறந்தயானைகளுடைய மிகுதியானமதகந் தங்களை உமதுபுத்திரனுடையயானைகள் தாங்கவில்லை. துரியோத னன் தாமரைப்பூநிறமுடையதும் ஸ்வர்ணமயமானகச்சையுடையதும் மேல்விரிப்புள்ளதும் மதப்பெருக்குக்கொண்டதுமான யானையின் மீதேறி வந்திகளாலும் மாகதர்களாலும் நன்குபுகழப்பட்டுப் பிரகா சிக்கின்றதன்முடியின்மீது சந்திரன்போலவிளங்குகின்ற வெள்ளைக் குடையோடுகூடியவனும் ஸ்வர்ணமயமானமாலையை அணிந்தவனு மாகிக் கௌரவர்களுடைய மத்தியிலிருந்தான். காந்தாரராஜனான சகுனியானவன் மலைநாட்டுவீரர்களானகாந்தாரர் எல்லாப்பக்கத்தி லும் தன்னைச்சூழ்ந்துகொண்டுவர ஏகினான். பிராயமுதிர்ந்தவரும் வெள்ளைக்குடையைத்தரித்தவரும் வெண்ணிறமான வில்லையுடை யவரும் கத்தியைஏந்தியவரும் வெள்ளைத்தலைப்பாகையுள்ளவரு மான பீஷ்மர் வெண்ணிறமானகொடியோடும் இமயமலைபோலப்பிரகா சிக்கின்ற வெள்ளைக்குதிரைகளோடும் எல்லாச்சைனியங்களுக்கும் முந்திச் சென்றார். அவருடையஸேனையில் கௌரவர்களும் பாஹ் லீகர்களுள் ஒருவனானசலனும் அம்பஷ்டதேசத்தார்களான க்ஷத்ரி யர்களும் ஸிந்துதேசத்து அரசர்களும் ஸௌவீரர்களும் [1]பஞ்சாப் தேசவாஸிகளான சூரர்களும் சென்றார்கள். சிவப்புக்குதிரைகளை யுடையவரும் பொற்றேருள்ளவரும் மஹாத்மாவும் வில்லைக்கையிற் பிடித்தவரும் கம்பீரமான ஸ்வபாவத்தையுடையவரும் ஆப்தரும் எல்லா அரசர்களுக்கும் பிரஸித்தமான ஆசார்யருமான துரோ ணர் (கௌரவ) சேனைக்குப்பின்புறத்தில் இந்திரன்போலப் பகை வர்களை நோக்கி யுத்தத்திற்கேகினார். விருத்தக்ஷத்ரனுடைய குமா

1 'பஞ்சநதாः' என்பதுமூலம்.

ரனும், பூரிஸ்ரவஸுவும், புருமித்ரனும், ஜயனும், ஸால்வர்களும், மச்சநாடர்களும், யானைப்படைகளோடுகூடினவர்களும் ஸகோதரர்களும் யுத்தம் செய்யப்போகின்றவர்களுமான எல்லாக்கேகயர்களும் எல்லாச்சேனையினுடைய மத்தியிலுமிருந்தனர். சாத்வானுடைய குமாரரும் உத்தமமான (யுத்த) பாரத்தைத்தாங்குகின்றவரும் மஹாத்மாவும் சிறந்த வில்லாளியும் ஆச்சரியகரமாகயுத்தம்செய்கின்ற தன்மையுடையவருமான க்ருபாசார்யர் சகர்களோடும் கிராதர்களோடும் யவனர்களோடும் பஹ்லவர்களோடுங்கூடி (கௌரவ) சேனைக்குவடபக்கம் சத்துருக்களை எதிர்த்துச்சென்றார். மகாரதர்களும் பிரஸித்திபெற்றவர்களும் ஆயுதங்களைக் (கையில்) எடுத்தவர்களும் நல்லதேசத்தையுடையவர்களுமான விருஷ்ணிகளாலும் போஜர்களாலும் நன்குபாதுகாக்கப்பட்டதும் க்ருதவர்மாவினால் நான்குபக்கங்களிலும் ரக்ஷிக்கப்பட்டதுமான உம்முடையபெரும்படையானது (உமது) ஸைன்யத்திற்குத் தென்புறமாகச் சத்துருக்களை எதிர்த்துச்சென்றது. அரசரே! ரதிகர்களாணபதினாயிரம் ஸம்சப்தகர்களும், அஸ்திரத்தில்தேர்ச்சியுடையவர்களும் யுத்தத்தில் அர்ஜுனனுக்கு மரணமாவது ஜயமாவது உண்டுபண்ணத்தக்கதென்று படைக்கப்பட்டவர்களும் சூரர்களுமான அந்தத்ரிகர்த்தர்களும் எந்தஇடத்தில் அர்ஜுனன் இருக்கிறானோ அந்தஇடத்தில் சென்றார்கள். பாரதரே! உம்முடைய (ஸேனையில்) லக்ஷத்திற்குமேற்பட்டயானைகள் இருந்தன. பாரதரே! ஒவ்வொருயானைஉள்ளஇடத்தில் நூறுரதங்கள்; ஒவ்வொருரதமிருக்குமிடத்தில் நூறுகுதிரைகள்; ஒவ்வொருகுதிரையிருக்குமிடத்தில் பத்துவில்லாளிகள்; ஒவ்வொருவில்லாளியிருக்குமிடத்திலும் நூறுகேடகங்களுள்ளவீரர்கள். இவ்வாறு பீஷ்மரால்உம்முடையசேனைகள் அணிவகுக்கப்பட்டன. ஒவ்வொருதினமும் வந்தவுடனே சந்தனுபுத்திரரானபீஷ்மர் மானுஷம் தைவம் காந்தர்வம் ஆஸுரம் என்ற வ்யூகமுறையினாலே சேனையைஅணிவகுத்துக்கொண்டு முன்னணியில்நின்றார். மகாரதங்களுடைய கூட்டங்களாலே விஸ்தாரமானதும் ஸமுத்திரம்போலப்பேரொலியிடுகின்றதுமான பீஷ்மரால் (ஏற்படுத்தப்பட்ட) தார்த்தராஷ்டிரர்களுடைய வ்யூகமானது யுத்தத்தில் மேற்குமுகமாகநின்றது. அரசரே! பயங்கரமான உம்முடையஸேனையானது பற்பல ரூபமுள்ளதாயிருந்தது. பாண்டவர்களுடைய சேனையோ அவ்வாறில்லை. எந்தச்சேனைக்குக் கேசவரும் அர்ஜுனனும் நாயகர்களோ அந்தஸேனை சிறிதாயிருந்தாலும் பெரிதென்றும் (ஒருவராலும்) அவமதிக்கமுடியாததென்றும் எண்ணுகிறேன்.

---

## இருபத்தோராவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



(சத்துருவினுடையசேனையைக்கண்டுபயந்தயுதிஷ்டிரரை அர்ஜுனன் காரணம்காட்டித் தேற்றியது.)

ஸன்னத்தமாயிருக்கின்ற துர்யோதனனுடைய பெரிய சேனையைக்கண்டு குந்திபுத்ரரானயுதிஷ்டிரராஜர் துக்கத்தையடைந்தார். யுதிஷ்டிரர் பீஷ்மராலேஏற்படுத்தப்பட்டதும் உடைக்கமுடியாததுமான வ்யூகத்தைக் கண்ணுற்று உடைக்கத்தகாததுபோல இருக்கிறதென்றெண்ணி (மனவருத்தத்தால்) நிறம்மாறி அர்ஜுனனைப்பார்த்து, 'தனஞ்சய! மகாபாகுபலமுள்ளவனே! பிதாமஹரான பீஷ்மர் எவர்களுக்கு யுத்தம்செய்கின்றவராகஇருக்கின்றாரோ அந்தக் கௌரவர்களோடு போர்க்களத்தில் போர்புரிவதற்கு எவ்வாறு நம்மாலாகும்? சத்ருக்களைநாசம்செய்கின்றவரும் மிக்கஒளியுள்ளவருமானபீஷ்மரால் சாஸ்திரத்தினால்கண்டறிந்துகொள்ளப்பட்ட முறைப்படி ஏற்படுத்தப்பட்டிருக்கிறஇந்தவ்யூகமானது ஒருவராலும் குலையச்செய்யமுடியாதது; உடைக்கவும்முடியாதது. பகைவரைக்கொல்லுகிறவனே! அப்படிப்பட்டநாம்சேனைகளோடு ஸம்சயத்தையடைந்துவிட்டோம். எவ்வாறு இந்தமகாவ்யூகத்தினின்று நமக்கு ஜயமுண்டாகும்?' என்றுவினவினர். அரசரே! பிறகு சத்துருக்களைக்கொல்லுகின்றவனான அர்ஜுனன், உமதுஸேனையைக்கண்டு துக்கமடைந்தவர்போலிருக்கும் குந்தீபுத்ரரானயுதிஷ்டிரரைப் பார்த்துச் சொல்லலானான். 'வேந்தரே! புத்தியினால்மேற்பட்டவர்களும் சௌர்யமுடையவர்களும் குணமுள்ளவர்களுமான அனேகரை மிக்கஅல்பர்கள் எதினால் ஜயிக்கிறார்களென்பதைத் தெரிந்துகொள்ளும். அரசரே! அசூயையற்றஉமக்கு அவ்விஷயத்தில் காரணத்தைச் சொல்லப்போகிறேன். பாண்டவரே! அந்தக்காரணத்தை நாரதரிஷி அறிவார். பீஷ்மரும் துரோணரும் அறிவார்கள். இந்தவிஷயத்தைப்பற்றியே முன்பு தேவாஸுரயுத்தத்தில் பிரம்மதேவர்தேவலோகவாஸிகளான மஹேந்திரன்முதலானவர்களைநோக்கிச் சொல்லியிருக்கிறாராம். ஜயிக்கஎண்ணங்கொண்டவர்கள் ஸத்தியத்தாலும் கொடுமையற்றஸ்வபாவத்தாலும் தர்மத்தாலும் முயற்சியாலும் எவ்வாறு ஜயிக்கிறார்களோ அவ்வாறு பலத்தாலும் வீர்யத்தாலும் ஜயிப்பதில்லை. அவ்வாறு நீங்கள்அனைவரும் அதர்மத்தைவிட்டு உத்தமமான தர்

மத்தை நாடினவர்களும் அஹங்காரத்தையிழந்தவர்களுமாயிருந்து கொண்டு போர்புரியுங்கள். எங்கே தர்மமோ அங்கு ஜயம். மன்னரே! இதை நீர் அறிந்துகொள்ளும். நமக்கு யுத்தத்தில் ஜயம்நிச்சயம். 'ஸ்ரீவாஸுதேவர் எங்கு இருக்கிறாரோ அங்கு ஜயம்' என்று நாரதர் சொல்லுகிறார். கிருஷ்ணரிடத்தில் ஜயமானது வசப்பட்டிருக்கிறது. மாதவரை ஜயம் பின்புறத்தில் அனுஸரித்துவருகின்றது. அவ்வாறு இந்தக்கிருஷ்ணருக்கு விஜயம் ஒருகுணமாயிருப்பதுபோல நல்லவிநயமும் மற்றொரு குணமாயிருக்கிறது. கோவிந்தர் அனந்தமானதேஜஸுள்ளவர்; பகைவர்களுடையகூட்டங்களில் துக்கமற்றவர்; சாசுவதமானபிரம்மஸ்வரூபி. எல்லாவற்றிலும் அந்தர்யாமியான அவர் எங்குஇருக்கிறாரோ அவ்விடத்தில்ஜயம். முற்காலத்தில் ஹரியானஇந்தஸ்ரீகிருஷ்ணர் (ஒருமன்வந்தரத்தில்) விகுண்டாதேவிக்குப் புத்திரராகஅவதாரம்செய்து தடையற்றபாணங்களையுடையவராகித் தேவாஸுரர்களைநோக்கி, 'எவர்கள் ஜயமடையவேண்டும்?' என்றுகேட்டார். அச்சமயத்தில் அவரைஅனுஸரித்து, 'நாங்கள் ஜயிப்போமாக' என்று கூறியவர்கள் ஜயமடைந்தார்கள். அவருடையஅனுக்கிரஹத்தினாலன்றோ இந்திராதிகளான தேவர்களாலே மூவுலகங்களும் அடையப்பட்டன? பாரதரே! உலகமனைத்தையும் அனுபவிக்கின்றவரும் வைகுண்டநாதருமானபகவானேஉமக்குஜயத்தைவிரும்புவதால் ஒருவிதமான குறைவையும் இந்தச்சமயத்தில் யான் காணவில்லை' என்றுசொன்னான்.

---

## இருபத்திரண்டாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர்முதலானவர்கள் யுத்தத்திற்குப் புறப்பட்டது.)

பாரதர்களில்சிறந்தவரே! பிறகு யுதிஷ்டிரராஜர் தம்ஸேனையைப் பீஷ்மருடையஸேனைகளுக்கு எதிர் அணிவகுப்பதற்காக ஏவினார். குருகுலத்தில் பிறந்தவர்களுள்மிகச்சிறந்தவர்களானபாண்டவர்கள் நல்லயுத்தத்தினாலே உத்தமமான ஸ்வர்க்கத்தைவிரும்பினவர்களாக முன்னேசொல்லப்பட்டசேனைகளை முறைப்படி எதிரணிவகுத்தார்கள். நடுவிலிருக்கின்றசிகண்டியின் சேனையானது அர்ஜுனனால் காக்கப்பட்டது. முன்னிலையில்ஸஞ்சரிக்கின்றத்ருஷ்டத்யும்

ளன் பீமஸேனனால் பாதுகாக்கப்பட்டான். அரசரே! தென்புறத்திலுள்ளசேனையானது ஐசுவரியமுள்ளவனும் ஸாத்வதர்களுள்சிறந்தவனும் இந்திரன்போன்றவனும் வில்லாளியுமானயுயுதானனால் பாதுகாக்கப்பட்டது. யுதிஷ்டிரர் யானைப்படையின்நடுவில் மஹேந்திரனுடையவிமானத்துக்கொப்பானதும் வேண்டியவஸ்துக்களோடு கூடியதும் பொன்னாலும்மணியாலும்சித்திரவேலைசெய்யப்பட்டதும் தங்கமயமான அணிகள்கட்டுக்கயிறுகள்முதலியவைகளுள்ளதுமான ரதத்தின்மீதிருந்தார். உயரத்தூக்கிப்பிடிக்கப்பட்டதும் தந்தங்களால்செய்த கம்பிகளுள்ளதும் மிக்கவெண்ணிறமுள்ளதுமான இந்த யுதிஷ்டிருடையகுடை மிகப்பிரகாசித்தது. இந்தஸமர்த்தரான மகாராஜரை மஹரிஷிகள் ஸ்தோத்திரங்களோடு உபசரித்தார்கள். சாஸ்திரங்களில்வல்லவர்களான புரோஹிதர்களும் பிரம்மரிஷிகளும் ஸித்தர்களும் சத்துருவதத்தைச்சொல்லிக்கொண்டு ஜபங்களாலும் மந்திரங்களாலும் மஹௌஷதிகளாலும் நான்குபக்கங்களிலும் இவருக்கு க்ஷேமத்தைக் கூறினார்கள். பிறகு கௌரவர்களுள்சிறப்புற்றவரும் மஹாத்மாவுமான அந்தயுதிஷ்டிரர், வஸ்திரங்களையும் பசுக்களையும் பழங்களையும் புஷ்பங்களையும் ஸுவர்ணாபரணங்களையும் பிராம்மணர்களுக்குத் தானம்செய்துகொண்டு தேவராஜனை இந்திரன்போலப் பிரயாணமானார். ஸூர்யன்போன்றவட்டமான ஆயிரம்கண்ணாடிகளுள்ளதும் அநேககிங்கிணிகளுள்ளதும் உத்தமமானஜாம்பூநதத்தாலும் தங்கத்தினாலும் அலங்கரிக்கப்பட்டதும் ஜ்வாலைகளுள்ள அக்னிபோன்றதும் வெண்மையானகுதிரைகளையுடையதும் நல்லசக்கரங்களையுடையதுமான அர்ஜுனனுடையரதமானது அதிகமாகப்பிரகாசித்தது. எவனுக்குச்சமமானவில்லாளி இப்புவியில் இல்லையோ, ஒருகாலும் இனிமேலும்உண்டாகமாட்டானோ வானரத்தைக்கொடியாகஉடையவனும் காண்டீவத்தையும்பாணங்களையும் கையில்கொண்டவனுமான அந்தஅர்ஜுனன் கேசவரால்ஸாரத்யம்செய்யப்படும் அந்தத்தேரின்மீதேறினான். நல்லபுஜங்களுள்ளவனான எவன் ஆயுதமில்லாமல் புஜங்களால் யுத்தத்தில் மனிதர்களையும் குதிரைகளையும் யானைகளையும் சாம்பலாகச்செய்வனோ அந்தப்பீமஸேனன் உமது புத்திரனுடையசேனையை அடியோடழிப்பவனாகி மிக்கபயங்கரமான ஸ்வரூபத்தைத் தரித்தான். செந்நாயினுடையவயிறுபோன்றவயிற்றையுடைய அந்தப்பீமஸேனன் நகுலஸஹதேவர்களோடுசேர்ந்து வீரர்களுடையரதங்களுக்கு ரக்ஷகனாகஇருந்தான். அவ்விடத்தில் ஸிம்மம்போலவும் ரிஷபம்போலவும் மதங்கொண்டகதியுள்ளவனும்

உலகத்தில் மஹேந்திரனுக்குச்சமமானவனும் படைமுகத்திலிருக்கின்றவனும் (ஒருவராலும்) நெருங்கமுடியாதவனும் யூதபதியான யானைபோலக் கர்வத்தையுடையவனுமான அந்தப்பீமஸேனனைக் கண்டு உம்முடையயுத்தவீரர்கள் பயத்தினாலே பலம்குறைந்தவர்களாகிச் சேற்றில்அகப்பட்டயானைகள்போல மிகுந்ததுன்பத்தை அடைந்தார்கள். படைநடுவிலிருக்கின்றவனும் ராஜபுத்திரனும் சத்துருக்களால் நெருங்கமுடியாதவனும் பாதசிரேஷ்டனுமான அர்ஜுனனைப்பார்த்து ஜனார்த்தனர் பின்வருமாறு கூறலானார். 'ஸேனையிலிருந்துகொண்டு கோபத்தினால் நமதுபடையைமிகத்தவிக்கச்செய்பவரும் சிங்கம்போலப்பார்ப்பவரும் முந்நூறுஅசுவமேதயாகங்கள் செய்தவரும் குருகுலத்திற்குக் கொடிபோன்றவருமான பீஷ்மர் இதோஇருக்கிறார். இந்தச்சேனைகள் மஹானுபாவரானபீஷ்மரை, மேகங்கள் சூரியனை மறைப்பதுபோல மறைத்துக்கொண்டிருக்கின்றன. புருஷசிரேஷ்ட! இந்தஸைன்யங்களைக்கொன்று பாதசிரேஷ்டரான (பீஷ்மரோடு) போர்புரியவிரும்பு' என்றுகூறினார்.

---

## இருபத்துமூன்றாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன் துர்க்கையை ஸ்தோத்திரம் செய்தது.)

யுத்தத்திற்கு வந்திருக்கிற கௌரவ சேனையைக்கண்டு கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு ஜயமுண்டாவதின்பொருட்டு (அவனைப்பார்த்து,) 'மிக்கபாஹுபலமுள்ளவனே! நீ சுசியாகி யுத்தத்திற்குஎதிர்முகமாயிருந்துகொண்டு பகைவர்கள்தோற்பதற்காகத் துர்க்காஸ்தோத்திரத்தைச் சொல்' என்றுகூறினார். புத்திமானானவாஸுதேவராலே போரில்இவ்வாறுசொல்லப்பட்ட குந்தீபுத்திரனானஅர்ஜுனன் ரதத்தினின்றுஇறங்கிக் கைகளைக்குவித்துக்கொண்டு துர்க்காதேவியை ஸ்தோத்திரம்செய்யலானான்.

'யோகிகளுடையகூட்டத்துக்குப் பரமபதத்தைஅடைவிக்கிற யோகஸித்தியை உண்டுபண்ணுகிறவளே! பிரம்மஸ்வரூபிணி! மந்தாவனத்தில்வசிப்பவளே! உனக்கு நமஸ்காரம். தவறாதபிரம்மசர்யமுள்ளவளே! காலசக்தியே! ருத்திரருடையபத்தினியே! கபிலையே! கருமையும்பொன்மையும்கலந்தநிறமுடையவளே! பக்தர்களிடத்தில்

மங்களத்தைச்சேர்ப்பிக்கின்றவளே! உனக்குவந்தனம். காலரூபியாயிருந்துமஹாஸம்ஹாரத்தைச்செய்பவளே! உனக்குவந்தனம். காலாந்தகனுடையமனைவியே! தைரியமுள்ளவளே! (ஸங்கடத்தினின்று பிராணிகளைக்)கரையேற்றுபவளே! ஸர்வஸௌபாக்யலக்ஷணமுமுள்ளவளே! உனக்குவந்தனம். காத்யாயனியே! மிகவும்பூஜிக்கத்தக்கவளே! குரூரமானவளே! சிறந்த ஜயத்தைக்கொடுப்பவளே! ஜயஸ்வரூபிணி! மயில்தோகைகளைக் கொடியாகக்கொண்டவளே! பலவித ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளே! மிகக்கொடிய சூலத்தை ஆயுதமாகக் கொண்டவளே! கத்தி கேடயங்களைத் தரித்தவளே! கோபாலர்களுக்குத்தலைவரான ஸ்ரீக்ருஷ்ணருடைய இளையஸகோதரியே! (எல்லோருக்கும்) மூத்தவளே! நந்தகோபகுலத்தில் பிறந்தவளே! மகிஷாஸுரனுடைய ரக்தத்தில் எப்பொழுதும் பிரீதியுள்ளவளே! குசிககுலத்தில் பிறந்தவளே! மஞ்சளாடையைத் தரிப்பவளே! [1]சிறந்த புன்னகையுள்ளவளே! சக்ரம்போல் (வட்டமான) முகமுள்ளவளே! போரில்விருப்பமுள்ளவளே! உனக்குநமஸ்காரம். உமையே! சகம்பரருடையபுத்திரியே! [2] மகேஸ்வரஸ்வரூபிணி! வாஸுதேவஸ்வரூபிணி! கைடபனைநாசம் செய்தவளே! மஞ்சள்நிறமுடைய கண்களையுடையவளே! பற்பலரூபங்களுள்ளகண்களையுடையவளே! அதிகமான தூம்ரவர்ணமுடைய கண்களையுடையவளே! உனக்கு நமஸ்காரம். வேதத்தினால்புகழப்பட்டவளே! மகாபுண்ய ஸ்வரூபியாயிருப்பவளே! யாககார்யம் பிராம்மணன்முதலானவர்களுக்குநன்மைசெய்பவளே! அதீதவிஷயங்களையறிந்தவளே! ஜம்பூத்வீபத்தைச்சேர்ந்தராஜதானிகளிலுள்ளதேவாலயங்களில் நித்யமாகஸான்னித்யம்செய்பவளே! வித்தைகளுள் நீ பிரம்ம வித்தை; பிராணிகளுக்கு [3]மகாநித்ரை. ஸுப்ரம்மண்யருடைய தாயே! பகவதி! துர்க்கையே! காட்டில்வஸிப்பவளே! நீ ஸ்வாஹாகாரமென்றும் ஸ்வதையென்றும் கலையென்றும் காஷ்டையென்றும் ஸரஸ்வதியென்றும் வேதமாதாவானஸாவித்திரியென்றும் வேதாந்தத்தில் சொல்லப்படுகிறாய். மகாதேவி! பரிசுத்தமானமனத்தினால் நீ ஸ்தோத்திரம்பண்ணப்பட்டாய். உனது அனுக்கிரஹத்தினாலே போர்க்களத்தில் எப்பொழுதும் எனக்கு ஜயமுண்டாகவேண்டும். காடுகளிலும் பயங்கரமான துர்க்கங்களிலும் பக்தர்களுடையகிருகங்களிலும் பாதாளத்திலும் நித்தியம் வாஸம்செய்கிறாய். யுத்தத்தில்

1 'அட்டஹாஸே' என்பதுமூலம். 2 'ப்வேதே' என்பதுமூலம்.
3 ஸம்ஹாரம்செய்பவள்என்பதுகருத்து.

அஸுரர்களை ஜயிக்கிறாய். நீ [1]ஜம்பனி; [2]மோஹினி; மாயை; [3]ஹ்ரீ; ஸ்ரீ; காந்தியுள்ளஸந்தியை; அவ்வாறே மாதாவானஸாவித்ரி; துஷ்டி; புஷ்டி; தைர்யம்; சந்திரனையும் ஸூர்யனையும்விருத்திபண்ணும்படியானகாந்தி; ஐசுவரியமுடையவர்களுடையஸம்பத்து; நீ [4]யுத்தத்தில் ஸித்தர்களாலும் சாரணர்களாலும் பார்க்கப்படுகிறாய்' என்றான். பிறகு பார்த்தனுடையபக்தியை அறிந்து மனிதர்களிடத்தில் அன்புள்ள (துர்க்காதேவியானவள்) ஆகாயத்தை அடைந்து கோவிந்தருக்கெதிரில் நின்றுகொண்டு, 'பாண்டவ! சிறிதுகாலத்திற்குள்ளாகவே பகைவர்களைஜயிப்பாய். (பகைவர்களால்) அவமதிக்கமுடியாதவனே! நீ நாராயணரைஸகாயமாகக்கொண்ட நரனாயிருக்கிறாய். நீ போரில் பகைவர்களால் வெல்லமுடியாதவன். வஜ்ராதரனை இந்திரனாலும்ஜயிக்கமுடியாதவன்' என்று சொன்னாள். வரன்களைக்கொடுக்கின்ற தேவியானவள் இவ்வாறுசொல்லிவிட்டு க்ஷணத்திற்குள் மறைந்தாள். குந்தீபுத்திரனை அர்ஜுனன் வரத்தைப் பெற்று விஜயம் தனக்கென்றேஎண்ணினான். பிறகு பார்த்தன் மிகவும் மனத்துக்கிசைந்த ரதத்தின்மீதேறினான். கிருஷ்ணனும் அர்ஜுனனும் ஒருரதத்தின்மீதேறிக்கொண்டு திவ்யமானசங்கங்களை முழக்கினார்கள். எந்தமனிதன் காலையிலெழுந்து இந்தஸ்தோத்திரத்தைப்படிப்பனோ அவனுக்கு எப்பொழுதும் யக்ஷர்களிடத்தினின்றும் ராக்ஷஸர்களிடத்தினின்றும் பிசாசங்களினிடமிருந்தும் பயமுண்டாகாது; அவனுக்குப் பகைவர்களுமில்லை; ஸர்ப்பமுதலான விஷப்பற்களுள்ள பிராணிகளிடத்தினின்றும் பயமில்லை; ராஜகுலத்தினிடத்தினின்றும் எப்பொழுதும் பயமுண்டாகாது. (அவன்) விவாதத்தில் ஜயமடைவான். சிறையில் அடைபட்டவன் சிறையினின்று விடுபடுவான்; கஷ்டத்தை அவசியம்தாண்டுவான்; திருடர்களால் விடப்படுவான்; யுத்தத்தில் எப்பொழுதும் வெற்றி பெறுவான்; விசேஷமான ஐசுவரியத்தைப்பெறுவான்; ஆரோக்யத்தோடும்பலத்தோடும்கூடி நூறுவருஷங்கள் ஜீவித்திருப்பான். புத்திமானனவ்யாஸருடைய அனுக்கிரஹத்தினாலே என்னால் இது காணப்பட்டது. துராத்மாக்களான உமதுபுத்திரர்கள் அனைவரும் கோபத்திற்குஉடன்பட்டவர்களாகி இவ்விருவரையும் அஜ்ஞானத்தினாலே நரநாராயணரிஷிகள்என்று அறியவில்லை. உமதுபுத்திரர்கள் காலபாசத்தால் கட்டப்பட்டுவிட்டார்கள். வ்யாஸரும் நாரதரும் கண்

---

1 ஆலஸ்யம். 2 நித்ரை. 3 லஜ்ஜை. 4 'ஸமாதியில்' என்பது பழைய உரை.

வரும் குற்றமற்றபலராமரும் ஸமயத்திற்குஉசிதமான இந்தவார்த்தையைச் (சொல்லி) உமதுபுத்திரனைத்தடுத்தார்கள். அவன் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. எந்தவிடத்தில் தர்மம் இருக்கின்றதோ அந்தவிடத்தில் தேஜஸும் காந்தியும் ஹ்ரீயும் ஸ்ரீயும் புத்தியும் இருக்கின்றன. எந்தஇடத்தில் தர்மம்இருக்கிறதோ அந்தஇடத்தில் ஸ்ரீகிருஷ்ணரிருக்கிறார். எங்கு கிருஷ்ணர் இருக்கிறாரோ அங்கு ஜயம்இருக்கிறது' என்றுகூறினான்.

---

## இருபத்துநான்காவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



(ஸஞ்சயன் இரண்டுபடைகளுக்கும் நேர்ந்த அபிவிருத்தியைவர்ணித்தது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! எவர்களுடையபோர்வீரர்கள் அந்தப்போர்க்களத்தில் மிக்கஉத்ஸாகமுடையவர்களாகஎதிரில்நின்று போர்புரிந்தார்கள்? எவர்கள் அதிகசந்தோஷமுற்றமனத்தையுடையவர்களானார்கள்? எவர்கள் தீனர்களாக மனத்தைஇழந்தார்கள்? மனத்தைநடுக்கமுறச்செய்கின்ற அந்தயுத்தத்தில் என்னைச்சேர்ந்தவர்களா, அல்லது பாண்டவர்களா, எவர்கள் முந்திஅம்புகளைத் தொடுத்தார்கள்? ஸஞ்சய! அதை எனக்குச்சொல்வாயாக. எவனுடையசேனைக்கூட்டத்தில் பூமாலைகளிலிருந்து (நல்ல) வாசனை தோன்றியது? (பகைவர்களுக்கு) எதிராகக்கர்ஜிக்கின்ற எந்தயுத்தவீரர்களுக்குக் காற்று வலமாகவீசியது?" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அந்த இடத்தில் இரண்டு சேனைகளிலுள்ள யுத்தவீரர்களும் அப்பொழுது ஸந்தோஷமடைந்தார்கள். பூமாலைகள் இருதிறத்திலும் ஸமமாக இருந்தன. இரண்டு பக்கங்களிலும் நல்ல வாஸனைகள் தோன்றின. பாரதர்களிற்சிறந்தவரே! ஒன்றுசேர்ந்தும் அணிவகுக்கப்பட்டும் (சத்துருப்படையின்) சேர்க்கையால் நன்றாகவிருத்தியடைந்துமிருக்கிற சேனைகளுக்கு மிகப்பெரிய கைகலந்த யுத்தம் உண்டாகியது. ஒருவரையொருவர் (பார்த்துக்) கர்ஜிக்கின்ற சூரர்களானபோர்வீரர்களுடைய சங்கவாத்யத்தின் ஒலியுடனும் பேரீவாத்யத்தின் ஒலியுடனும் கலந்து நெருங்கிய (நான்குவித) வாத்திய கோஷமும் மிகுதியாக ஒலித்தது. வேந்தரே! பாரதர்களிற்சிறந்தவரே! இரண்டுசேனைகளுக்கும் ஒருவரையொருவர் பார்க்கிற யுத்தவீரர்களுக்கும் கர்ஜிக்கிறயானைகளுக்கும் ஸந்தோஷமடைகிறமற்றச்சேனைகளுக்கும் கைகலந்தயுத்தம் நேர்ந்தது" என்று கூறினான்.

---

ஸ்ரீ:
ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.
ஸ்ரீ க்ருஷ்ணத்வைபாயனாய நம:.

இருபத்தைந்தாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



## ஸ்ரீ பகவத்கீதை.

### முதலாவது அத்யாயம்.

(அர்ஜுனவிஷாதயோகம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! தர்மத்திற்குஇருப்பிடமானகுருக்ஷேத்திரத்தில் யுத்தம்செய்யும் எண்ணத்துடன் ஒருங்குசேர்ந்தவர்களானநம்மவர்களும் பாண்டவர்களும் என்னசெய்தனர்?" என்று கேட்டனன்.

ஸஞ்சயன், "துர்யோதனராஜன் அப்பொழுது அணிவகுக்கப்பட்டிருக்கிறபாண்டவஸேனையைக்கண்ணுற்று ஆசார்யரைநாடிப் பின்வருமாறு சொல்லலானான்.

'ஆசார்யரே! புத்திசாலியும் தேவரீருடையசிஷ்யனுமான த்ருபதராஜபுத்திரனால் அணிவகுக்கப்பட்டிருக்கிற பாண்டுபுத்ரர்களுடையபெரிதானஇந்தச்சேனையைப்பாரும். இதில் சூரர்களும் சிறந்தவில்லையுடையவர்களும் யுத்தத்தில் பீமனுக்கும் அர்ஜுனனுக்கும் ஒப்பானவர்களுமான யுயுதானன், விராடன், மஹாரதனானத்ருபதன், த்ருஷ்டகேது, சேகிதானன், வீரனான காசிராஜன், புருஜித், குந்திபோஜன், புருஷச்ரேஷ்டனானசைப்யன், சிறந்தசக்தியுள்ள யுதாமன்யு, பராக்ரமசாலியான உத்தமௌஜஸ், ஸுபத்ராபுத்ரனான அபிமன்யு, த்ரௌபதியின்மைந்தர்கள் இவர்கள் அனைவருமே மஹாரதர்களாயிருக்கின்றனர். பிராம்மணோத்தமரே! நம்மில் சிறப்புற்றவர்களான என்ஸேனைத்தலைவர்கள் எவர்களோ அவர்களை நீர் தெரிந்துகொள்ளும். நீர்தெரிந்துகொள்ளுதற்காக அவர்களை உமக்குச் சொல்லுகிறேன். தேவரீரும் பீஷ்மரும் கர்ணனும் யுத்தத்தில் ஜயசாலியானக்ருபரும் அஸ்வத்தாமாவும் விகர்ணனும் [1]ஸோமதத்தகுமாரனானபூரிஸ்ரவஸ்ஸும் மற்றும்பலசூரர்களும் எனக்காக உயி

[1] 'ஜயத்ரத:' என்பது வேறுபாடம்.

னைவிடத் துணிந்திருக்கிறீர்கள். எல்லோரும் பற்பலசஸ்திரங்க ளைப் பிரயோகிப்பவர்கள்; யுத்தத்தில் ஸமர்த்தர்கள். பீஷ்மராலே காக்கப்பட்ட இந்தநமதுசேனை போதுமானதன்று. பீமனால்ரக்ஷிக் கப்பட்ட அவர்களுடைய சேனையோவெனில் போதுமானது. நீங்கள் அனைவருமே எல்லாவழிகளிலும் அவரவர்களுக்கு ஏற்படுத்தப்பட்ட ஸ்தானங்களை அவரவர்கள்விட்டுவிலகாமலிருந்துகொண்டு பீஷ்ம ரையே காப்பாற்றக்கடவீர்கள்' என்றான்.

கௌரவர்களுள்பிராயமுதிர்ந்தவரும் பிதாமஹரும் பராக்ரம சாலியுமானபீஷ்மர், அந்தத்துர்யோதனனுக்கு உத்ஸாஹத்தை உண் டாக்குவதற்காக உரக்க ஸிம்மநாதம்செய்து சங்கத்தையும் ஊதினார். பிறகு சங்கங்களும் பேரிகளும் பணவங்களும் துந்துமிகளும் கொம்புகளும் விரைவாக முழக்கப்பட்டன. அந்தஒலியானது எங் கும் நிரம்பியது. பிறகு வெள்ளைக்குதிரைகள்பூட்டிய சிறந்ததேரின் மீதிருந்த கிருஷ்ணார்ஜுனர்கள் திவ்யசங்கங்களை முழக்கினார்கள். பாஞ்சஜன்யத்தை ஸ்ரீகிருஷ்ணனும் தேவதத்தத்தைத் தனஞ்சயனும் பௌண்ட்ரம்என்னும் மஹாசங்கத்தைப் பிறர்பயப்படும்படியான செய்கையுள்ள விருகோதரனும் அநந்தவிஜயம்என்னும் சங்கத்தைக் குந்தீபுத்ரரானயுதிஷ்டிரமஹாராஜரும் ஸுகோஷம் மணிபுஷ்பகம் என்னும்சங்கங்களை நகுலஸஹதேவர்களும் ஊதினார்கள். ராஜரே! சிறந்தவில்லாளியானகாசிதேசத்தரசன், மஹாரதனானசிகண்டி, த்ரு ஷ்டத்யும்னன், விராடன், பகைவர்களால்வெல்லுதற்குஅரியஸாத்யகி, த்ருபதன், த்ரௌபதிகுமாரர்கள், மிக்கபுஜபலமுள்ள ஸுபத்ரையின் குமாரனான அபிமன்யு ஆகிய அனைவரும் தனித்தனியாகச் சங்கங்களை முழக்கினார்கள். எங்கும்பரவின அந்தஒலியானது ஆகாயத்தையும் பூமியையும் எதிரொலிஇடும்படிசெய்துகொண்டு திருதராஷ்டிரபுத்ரர் களுடையஹ்ருதயங்களைப் பிளந்தது. ராஜரே! பிறகு வானரக்கொடி யுடையவனான அர்ஜுனன் ஸந்நத்தர்களாகநிற்கிற உமதுபுத்ரர் களைக்கண்டு சஸ்திரங்களைப்பிரயோகிக்கும்ஸமயம் நேர்ந்தவுடன் வில் லைக்கையிலெடுத்து ஹ்ருஷீகேசரைநோக்கி அப்பொழுது இந்தவாக் கியத்தைக் கூறலானான்.

'அச்சுதரே! யுத்தம்செய்யவிருப்பமுற்றவர்களாக நிற்கின்ற இவர்களை நான் பார்க்கும்வரையில் இரண்டுஸேனைகளின்இடையில் என்னுடையரதத்தை நிறுத்தும். இந்த யுத்தத்தொடக்கத்தில் எவர்க ளோடுகூட என்னால் யுத்தம் செய்யத்தக்கது? கெட்டபுத்தியையுடை யவனும் திருதராஷ்டிரபுத்திரனுமான துர்யோதனனுக்கு யுத்தத்தில்

பிரியத்தைச்செய்யவிருப்பங்கொண்டு இவ்விடத்தில் யுத்தம்செய்ய வந்திருக்கின்றவர்களை யான் பார்க்கிறேன்' என்றுகூறினான்.

பாரதரே! [1]குடாகேசனால் இவ்வாறு சொல்லப்பட்டஹ்ருஷீகேசர் இரண்டுசேனைகளின்நடுவில் பீஷ்மருக்கும் துரோணருக்கும் எல்லா அரசர்களுக்கும் எதிரில் உத்தமமானரதத்தை நிறுத்தி, 'பார்த்த! கூடி இருக்கிறஇந்தக்கௌரவர்களைப்பார்' என்றுசொன்னார்.

பிறகு பார்த்தன் அந்தப்போர்க்களத்தில் இரண்டுஸேனைகளிலும்இருக்கிறதகப்பன்மார்களையும் பிதாமஹர்களையும் ஆசார்யர்களையும் மாதுலர்களையும் ஸஹோதரர்களையும் புத்திரர்களையும் பௌத்திரர்களையும் ஸ்நேகிதர்களையும் மாமனார்களையும் ஸுஹ்ருத்துக்களையும் கண்டான். அந்தஅர்ஜுனன் நிற்கிறஅந்த எல்லாப்பந்துக்களையும் பார்த்துப் பெருங்கருணைமேலிட்டுத் துயரத்துடன் பின்வருமாறு சொல்லலானான்.

'கிருஷ்ண! யுத்தம்செய்யவிருப்பங்கொண்டுவந்திருக்கிற இந்தப் பந்துக்களைப்பார்த்து என்னுடைய அவயவங்கள் சோர்வடைகின்றன. வாயும் வரட்சியை அடைகிறது. என்சரீரத்தில் நடுக்கமும் மயிர்க்கூச்சலுமுண்டாகின்றன. காண்டீவம் கையினின்றுநழுவுகிறது. தோலும் நாற்புறத்திலும் எரிகிறது. நிற்பதற்குச் சக்தியற்றவனாயிருக்கிறேன். என்மனம் சுழலுகிறது. கேசவரே! விபரீதமானநிமித்தங்களையும் காண்கிறேன். யுத்தத்தில் ஸ்வஜனங்களைக்கொன்று (அடையும்) நன்மையை நான்காணவில்லை. கிருஷ்ண! விஜயத்தையாவது ராஜ்யத்தையாவது ஸுகங்களையாவது யான் விரும்பவில்லை. கோவிந்தரே! எங்களுக்கு ராஜ்யத்தால் யாதுபயன்? போகங்களாலாவது பிழைத்திருப்பதினாலாவது யாதுபயன்? எவர்களுக்காக ராஜ்யமும் போகங்களும் ஸுகங்களும் எங்களால்விரும்பப்பட்டனவோ அப்படிப்பட்ட ஆசார்யர்கள், தகப்பன்மார்கள், பிள்ளைகள், பிதாமஹர்கள், மாதுலர்கள், மாமனார்கள், பேரன்மார்கள், மைத்துனர்கள், ஸம்பந்திகள் ஆகியஇவர்கள் உயிரையும்தனங்களையுமிழந்து (இதோ) யுத்தகளத்தில் நிற்கின்றனர். மதுஸூதனரே! (என்னைக்) கொல்லுகிறவர்களாயிருந்தாலும் இவர்களை, மூவுலகங்களின் ஆட்சியின்நிமித்தமாகவும் கொல்லவிரும்பமாட்டேன். பூமிநிமித்தமாக யான் கொல்லவிரும்புவேனா? ஜனார்த்தனரே! தார்த்தராஷ்டிரர்களைக்கொன்று எங்களுக்கு என்னவுவகையுண்டாகப்போகிறது? [2]ஆததாயிகளானஇவர்

---

[1] சுருண்டமயிருடையவன் அல்லது சோம்பலில்லாதவன்.

[2] விராடபர்வம் 175-பக்கம் குறிப்பிற்காண்க.

களைக்கொன்றால் எங்களைப் பாதகமே வந்தணுகும். ஆதலால் பந்துக்களுடன்கூடின தார்த்தராஷ்டிரர்களை நாம் கொல்லுவதற்குத் தகுதியுள்ளவர்களல்லோம். மாதவரே! ஸ்வஜனங்களைக்கொன்று எவ்வாறு ஸுகமுடையவர்களாவோம்? ஜனார்த்தனரே! பேராசையினால்கெடுக்கப்பட்டமனத்தையுடையவர்களான இவர்கள் குலத்தினுடையஅழிவினால் விளையுங்கெடுதியையும் மித்திரத்துரோகத்தினால் விளையும்பாதகத்தையும் அறிந்துகொள்ளாமலிருந்தாலும், குலநாசத்தால் உண்டாகக்கூடியதோஷத்தை நன்றாகஅறிந்திருக்கின்றஎங்களால் இந்தப்பாபத்தினின்று எங்களைவிலக்கிக்கொள்ளும்பொருட்டு எப்படித் தெரிந்துகொள்ளாமல்போகக்கூடும்? குலம்நாசமடைந்தால் நிலைபெற்றவைகளான குலதர்மங்கள் அழிகின்றன. தர்மம்அழிந்தால் நிச்சயமாகவே குலம்அனைத்தையும் அதர்மம் கவர்ந்துகொள்ளுகிறது. கிருஷ்ண! அதர்மம்தலையெடுத்தால் குலஸ்திரீகள் கெட்டுப்போகிறார்கள். விருஷ்ணிகுலத்தில்உதித்தவரே! மாதர்கள் கற்பழிந்தால் ஒருஜாதியோடு மற்றொருஜாதி கலந்துபோகிறது. ஸாங்கர்யமானது குலத்தைநாசஞ்செய்தவர்களுக்கும் அக்குலத்திற்கும் நரகத்தின்பொருட்டேஆகிறது. இவர்களுடையபித்ருக்கள் பிண்டக்கிரியைகளையும் உதகக்கிரியைகளையும் இழந்தவர்களாக (நரகத்தில்) விழுகிறார்கள். வர்ணஸாங்கர்யத்தைஉண்டுபண்ணுகிற குலத்தைக்கெடுத்த பாபிகளுடையஇந்தத்தோஷங்களாலே நிலைபெற்றவைகளானஜாதிதர்மங்களும் குலதர்மங்களும் அழிக்கப்படுகின்றன. ஜநார்த்தனரே! குலதர்மங்களைஇழந்தமனிதர்களுக்கு நரகத்தில் எப்பொழுதும் ஸ்திரமானவாஸமானது உண்டாகுமென்று கேட்டிருக்கிறோம். நாங்கள் ராஜ்யஸுகத்திலுள்ளபேராவலால் ஸ்வஜனங்களைக்கொல்லுவதற்கு முயன்றதால் பெரிதானபாதகத்தைச்செய்வதற்கு முயற்சித்துவிட்டோம். அந்தோ! கஷ்டம்! ஆயுதங்களைக்கையில்கொண்டவர்களானதார்த்தராஷ்டிரர்கள் போர்க்களத்தில்எதிர்க்காதவனும் ஆயுதங்களையிழந்தவனுமானஎன்னைக் கொல்வார்களாகில் அது எனக்கு மிக்கநன்மையைப்பயப்பதாகும்' என்றுசொன்னான்.

அர்ஜுனன் இவ்வாறுசொல்லிவிட்டுச் சோகத்தினால் மனமபதைத்து அம்பையும்வில்லையும் கீழேஎறிந்துவிட்டுப் போர்க்களத்தில் ரதத்தின்மத்தியிலுட்கார்ந்தான்.

---

## இருபத்தாறுவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)

## பகவத்கீதை.

### இரண்டாவது அத்யாயம்.

### (ஸாங்கியயோகம்.)

அவ்வாறுகருணையினால்கவரப்பட்டவனும் நீர்நிரம்பிக்கலக்கமுற்றகண்களையுடையவனும் துக்கிக்கின்றவனுமான அந்த அர்ஜுனனைநோக்கி மதுஸூதனர் இவ்விதமானவாக்கியத்தை உரைக்கலானார்.

'ஓ! அர்ஜுன! அஜ்ஞானிகளாலடையத்தக்கதும் பரலோகத்துக்குக்கெடுதியைவிளைவிக்கக்கூடியதும் அபகீர்த்தியைஉண்டுபண்ணக்கூடியதுமான இத்தகையசோகமானது அகாலத்தில் யாதுகாரணத்தால் உன்னை வந்துஅணுகியது? ஓ! பார்த்த! நீ பயத்தை அடையாதே. இது உன்னிடத்தில் தகாதது. பகைவர்களைவாட்டுபவனே! மிக்கஇழிவான மனத்திலுள்ளஅதைர்யத்தைவிட்டு எழுந்திரு' என்றார்.

அர்ஜுனன் சொல்லுகிறான். 'ஓ! மதுஸூதனரே! பகைவர்களை அழிப்பவரே! நான் பூஜிக்கத்தக்கவர்களான பீஷ்மரையும் துரோணரையும் யுத்தத்தில் பாணங்களால் எவ்வாறு எதிர்த்துப் போர்புரிவேன்? மஹாமகிமைதங்கியவர்களான ஆசார்யர்களைக்கொல்லாமல் இவ்வுலகில் பிச்சைஎடுத்தேனும் உண்பது மேன்மையானது. பொருளாசையுள்ள ஆசார்யர்களைக்கொன்று இவ்வுலகத்திலேயே ரக்தங்களால்நனைக்கப்பட்டிருக்கிறபோகங்களை (எவ்வாறு) புஜிப்பேன்? (நாம் தார்த்தராஷ்டிரர்களை) ஜயிப்போமா? அல்லது (தார்த்தராஷ்டிரர்கள்தாம்) நம்மை ஜயிப்பார்களா? இவ்விரண்டனுள் எது நமக்குச் சிறந்ததோ அதை நாம்அறியோம். எவர்களைக்கொன்று நாம் பிழைத்திருப்பதற்குவிருப்பமுள்ளவர்களாகமாட்டோமோ அந்தத் துர்யோதனாதிகளே எதிரில் நிற்கிறார்கள். [1]கார்ப்பண்யத்தினாலும் தோஷத்தினாலும்கெடுக்கப்பட்டிருக்கிறஸ்வபாவத்தைஉடையவனான யான் தர்மத்தில்மயக்கம்கொண்டமனத்தையுடையவனாகித் தேவரீரை வினவுகிறேன். எது நிச்சயமாக நன்மையைவிளைவிக்கிறதாகுமோ

---

1 செய்யவேண்டியதை அறியாமையாலும் சோகத்தைப்போக்கக்கூடிய உபாயமில்லாமையாலும் உண்டாயிருக்கிற தீனத்தன்மை.

அதை எனக்குத் தேவரீர் உபதேசிக்கவேண்டும். யான் உமக்குச் சிஷ்யன். உம்மைச் சரணமடைந்திருக்கிறஎன்னைக் கட்டளையிடும். புவியில் பகைவரற்றதும் ஐசுவரியத்தினால்நிரம்பியதுமான ராஜ்யத்தையும் தேவர்களுக்கு அதிபதியாகஇருப்பதையும் அடைந்தாலும் இந்திரியங்களுக்குஅதிகவாட்சியையுண்டுபண்ணுகிற என்னுடையதுக்கத்தை எது விலக்குமோ அதை யான் காண்கிறேனில்லை' என்றான்.

பகைவர்களைத்தபிக்கச்செய்கிறவனை குடாகேசன் ஹ்ருஷீகேசரைப்பார்த்து இவ்விதம்சொல்லி (மறுபடியும்) அவரைநோக்கி, 'யான் போர்புரியப்போவதில்லை' என்றுசொல்லி மௌனியாயிருந்துவிட்டான். பாரதரே! இரண்டுசேனைகளினுடையமத்தியில் துக்கமடைந்திருக்கிறஅந்தஅர்ஜுனனைநோக்கி ஹ்ருஷீகேசர் நகைத்துக்கொண்டு பின்வரும்வசனத்தை உரைக்கலானார்.

'துக்கிக்கத்தகாதவர்களைக்குறித்து நீ துக்கிக்கிறாய். (தேகாத்மஸ்வபாவவிஷயமான) ஞானவாதங்களையும் பேசுகிறாய். [1]உயிரில்லாதவற்றைப்பற்றியும் [2]உயிருள்ளவற்றைப்பற்றியும் அறிஞர்கள் துக்கிக்கமாட்டார்கள். நான் ஒருகாலத்திலாவது இல்லாமலிருக்கவேயில்லை. நீயும் இல்லாமலிருக்கவில்லை. இந்த அரசர்களும் இருக்கவில்லையென்பதில்லை. நாம்எல்லோரும் இதற்குப்பிற்காலத்திலும் இல்லாமலிருக்கப்போகிறதில்லை. ஜீவாத்மாவுக்கு இந்தத் தேகத்தில் கௌமாரமும் யௌவனமும் மூப்பும் எவ்விதம் ஸம்பவிக்கின்றனவோ அவ்வாறே வேறுதேகத்தையடைதல் ஏற்படுகிறது. ஞானியானவன் அந்தவிஷயத்தில் மயங்குகிறதில்லை. குந்திபுத்திர! விஷயேந்திரியஸம்பந்தங்கள் சீதம், உஷ்ணம், ஸுகம், துக்கம்இவைகளைக்கொடுக்கின்றவைகளாகவும் வருதல்போதலுள்ளவைகளாகவும் அநித்யங்களாகவுமிருக்கின்றன. பாரத! அவைகளை நீ பொறுத்துக்கொள். புருஷஶ்ரேஷ்டனே! ஸுகதுக்கங்களை ஸமமாகக்கருதுகிற விவேகமுள்ளஎந்தப்புருஷனை இவைகள் துன்பப்படுத்தாவோ அவன் மோக்ஷத்தை அடைவதற்கு ஸமர்த்தனாகிறான். அஸத்தானவஸ்துவுக்குநிலையும் ஸத்தானவஸ்துவுக்குஅழிவும்இல்லை. இவ்விரண்டினுடையதத்வத்தையும் அறிந்தவர்களால் நிர்ணயம் கண்டறியப்பட்டிருக்கிறது. இஃதனைத்தும் எதனால் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ அதை அழிவற்றதாக அறி. அழிவற்றஇதற்கு அழிவை யாரும் செய்யமுடியாது. எக்காலத்திலுமிருப்பவனும் நாசமற்றவனும் அறியத்தகாதவனுமாயிருக்கிற சரீரியினுடைய இந்தத்தேகங்

[1] தேகங்கள். [2] ஆத்மாக்கள்.

கள் முடிவை உடையவைகளாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. பாரதனே! ஆதலால், யுத்தம்செய்வாயாக. எவன் இவனைக் கொல்லுகிறவனாக அறிகிறானோ, எவன் இவனைக் கொல்லப்பட்டவனாக அறிகிறானோ, அவ்விருவரும் அறிந்தவர்களல்லர். இவன் (ஒருவனைக்) கொல்லுகிறதுமில்லை; (வேறொருவனால்) கொல்லப்படுகிறதுமில்லை. இவன் பிறக்கிறதுமில்லை; இறக்கிறதுமில்லை; ஒருஸமயத்தில்உண்டாகி மறுபடி உண்டாகப்போகிறதில்லைஎன்பதுமில்லை. இவன் பிறப்பற்றவன்; அழிவில்லாதவன்; எப்பொழுதுமிருப்பவன்; முன்னோன். தேகமானது கொல்லப்பட்டாலும் (இவன்) கொல்லப்படுகிறதில்லை. பார்த்த! எவன் இவனை நாசமற்றவனென்றும் பிறப்பற்றவனென்றும் குறைவற்றவனென்றும் நித்தியனாயிருப்பவனென்றும் அறிகிறானோ அந்தப்புருஷன் எவனை எப்படி கொல்லச்செய்கிறான்? யாரைக் கொல்லுகிறான்? ஒருமனிதன் எவ்வாறு பழைய துணிகளைவிட்டுவிட்டு வேறுபுதிய வஸ்திரங்களை எடுத்துக்கொள்கிறானோ அவ்வாறே ஜீவன் பழைய சரீரங்களைவிட்டு வேறுபுதிய சரீரங்களை அடைகிறான். இவனை ஆயுதங்கள் வெட்டுகிறதில்லை. இவனை நெருப்பும் எரிக்கிறதில்லை. இவனை ஜலமும் நனைக்கிறதில்லை; காற்றும் உலர்த்துகிறதில்லை. இவன் வெட்டத்தக்கவனல்லன். இவன் எரிக்கத்தக்கவனுமல்லன்; நனைக்கத்தக்கவனுமல்லன்; உலர்த்தத்தக்கவனுமல்லன். இவன் எப்பொழுதுமேஇருப்பவன்; எல்லாஇடத்திலும் வியாபித்திருக்கிறவன்; ஸ்திரமானஸ்வபாவமுடையவன்; அசைவற்றவன்; அநாதியாயிருப்பவன். இவன் அவ்யக்தனென்றும் இவ்விதமானஸ்வபாவமுள்ளவனென்று சிந்திக்கத்தகாதவனென்றும் வேறுபாட்டை அடைவிக்கத்தகாதவனென்றும் சொல்லப்படுகிறான். ஆதலால், இவனை இவ்விதமாக அறிந்து நீ துயரப்படாமலிருக்கவேண்டும். [1] அப்படியன்றி இந்தஆத்மாவை எப்பொழுதும்பிறப்பவனென்றாவது எப்பொழுதும் இறப்பவனென்றாவது நினைக்கிறாயா? மிக்கபாகுபலமுள்ளவனே! அவ்விதமிருந்தாலும் நீ இவ்வாறு துக்கிக்கத்தக்கவனல்லை. பிறந்தவனுக்கு மரணம்நிச்சயம். இறந்தவனுக்கும் பிறப்புநிச்சயம். ஆதலால், விலக்கக்கூடாதவிஷயத்தில் நீ துக்கித்தல்தகாது. பாரத! பூதங்கள் அறியப்படாதமுந்தியநிலைமையையுடையவைகளாகவும் பிரகாசமான நடுநிலைமையையுடையவைகளாகவும் அறியப்படாத நாசத்தையுடையவைகளாகவும் இருக்கின்றன. அந்தவிஷயத்தில் என்னவியலனம்? ஆச்

[1] 'எப்பொழுதும்பிறப்பதும் எப்பொழுதும்இறப்பதுமானசரீரத்தையே இந்தஆத்மாவென்று எண்ணுகிறாயா?' என்றும் சொல்லலாம்.

சர்யம்போலிருக்கிறஇந்தஆத்மாவை (அனேகமனிதர்களுள்) ஒருவன் பார்க்கிறான். அவ்வாறே ஒருவன் ஆச்சர்யம்போலிருக்கிற இந்தஆத்மாவைப்பற்றி (ப்பிறருக்குச்) சொல்லுகிறான். ஆச்சரியம் போலிருக்கிறஇந்தஆத்மாவை ஒருவன் காதினால்கேட்கிறான். கேட்டும் பார்த்தும் சொல்லியும் ஒருவனாவது உள்ளபடி ஆத்மாவை அறிகிறதில்லை. பாரத! எல்லாப்பிராணிகளுடையதேகமும் கொல்லப்பட்டாலும் இந்தஆத்மாவானவன் எப்பொழுதுமே கொல்லத்தகாதவன். ஆதலால், எல்லாப்பிராணிகளைக்குறித்தும் நீ துக்கப்படலாகாது. மேலும் நீ உனக்குஉரியதர்மத்தைப்பார்த்து நடுங்குவதற்குத் தகுந்தவனல்லை. தர்மத்தைவிட்டுவிலகாமலிருக்கின்ற யுத்தத்தைத் தவிர க்ஷத்ரியனுக்கு வேறுவிதமான ஸ்ரேயஸ் கிடையாது. பார்த்த! தற்செயலாகநேர்ந்திருக்கிறதும் திறக்கப்பட்டிருக்கிறஸ்வர்க்கவாயிலுமான இவ்விதயுத்தத்தைப் புண்யவான்களான க்ஷத்ரியர்கள் அடைகிறார்கள். மேலும் நீ நியாயமானஇந்தயுத்தத்தைச்செய்யாவிடில் அதனால் ஸ்வதர்மத்தையும் கீர்த்தியையும் இழந்து பாவத்தையுமடைவாய். மனிதர்கள் அழிவற்றதான உன்னுடையஅபகீர்த்தியையும் சொல்லுவார்கள். கௌரவமுள்ளவனுக்கு அபகீர்த்தியானது மரணத்தைக்காட்டிலும்அதிகரித்ததாகிறது. முன்பு எந்த மஹாரதர்களுக்கு நீ மதிக்கப்பட்டவனாயிருந்து (இப்பொழுது யுத்தம்செய்யாமலொழிவதினால்) லாகவத்தை அடையப்போகிறாயோ அவர்கள் உன்னைப் பயத்தினால் யுத்தத்தினின்று பின்னிடைந்தவனென்று எண்ணுவார்கள். உன்னுடையபகைவர்கள் உன்னுடையவல்லமையை நிந்தித்துப் பலவிதமான சொல்லத்தகாதவார்த்தைகளையும் சொல்வார்கள். அதைக்காட்டிலும் அதிகமான துக்கம் என்னஇருக்கிறது? குந்தீபுத்ர! நீ கொல்லப்பட்டால் ஸ்வர்க்கத்தை அடைவாய்; ஜயித்தால் பூமியைஅனுபவிப்பாய். ஆதலால், நிச்சயமுள்ளவனாகிப் போர்புரிவதற்குஎழுந்திரு. ஸுகதுக்கங்களையும் லாபாலாபங்களையும் ஜயாபஜயங்களையும் ஸமமாகஎண்ணிப் பிறகு யுத்தம்செய்யத்தொடங்கு. இவ்வாறுசெய்தால் பாவத்தை அடையமாட்டாய். பார்த்த! [1] ஸாங்க்யத்தில் இந்தப்புத்தியானது உனக்குச்சொல்லப்பட்டது. எந்தப்புத்தியுடன் நீ கர்மபந்தத்தை நீங்குவாயோ அவ்விதயோகவிஷயமானஇந்தப்புத்தியைக் கேள். இந்தக்கர்மயோகத்தில் ஆரம்பித்த காரியத்திற்கு அழிவில்லை; (தொடங்கிநடுவில்விட்டாலும்) ஒருதோஷ

---

[1] (சங்கரபாஷ்யம்) பரமார்த்தவஸ்து விவேகவிஷயம். (ராமாநுஜபாஷ்யம்) புத்தியினால் நிச்சயிக்கத்தக்க ஆத்மதத்வம்.

முமில்லை. இந்தக்கர்மயோகரூபமான தர்மத்தினுடையஅம்சமானது சிறிதுசெய்யப்பட்டாலும் பெரிய பயத்தினின்றும் காக்கிறது. குரு நந்தன! இந்தக்கர்மயோகத்தில் நிச்சயஸ்வபாவமுள்ளபுத்தியானது ஒன்றே. நிச்சயஸ்வபாவமில்லாதவர்களுடையபுத்திகள் பற்பல பிரிவுள்ளவைகளாகவும் முடிவற்றவைகளாகவும் இருக்கின்றன. பார்த்த! ஸ்வர்க்காதிலோகஸுகங்களையே கர்மபலனாகக்கூறுகின்ற வேதவாதங்களில் பற்றுதலுள்ளவர்களும் (அவற்றைத்தவிர) வேறு இல்லை என்றுசொல்லுகிறவர்களும் காமத்தில் அழுந்தினமனத்தையுடையவர்களும் ஸ்வர்க்கமேமேலானதென்கிற கொள்கையுள்ளவர்களுமான எந்தஅவிவேகிகள் போகங்களையும் ஐய்வர்யங்களையும்அடைவதற்கு ஸாதனமாகப் பிறப்பையும் கர்மங்களையும் கர்மபலன்களையும் கொடுக்கின்றதும் அநேககர்மபேதங்களால்மிகுதியாயிருக்கின்றதும் [1]புஷ்பங்களோடுமாத்திரம்கூடியதுமான இப்படிப்பட்ட எந்தவார்த்தையைச் சொல்லுகிறார்களோ அந்தவார்த்தையினால் அபஹரிக்கப்பட்டமனத்தையுடையவர்களும் போகங்களிலும் ஐய்வர்யங்களிலும்விசேஷப் பற்றுள்ளவர்களுமாயிருக்கின்றவர்களுக்கு நிச்சயஸ்வரூபமானபுத்தியானது மனத்தில் உண்டாகவேமாட்டாது. அர்ஜுன! வேதங்கள் முக்குணங்களைப்பற்றியவை. நீ முக்குணங்களை இழந்தவனும் (ஸுக துக்கமுதலிய) இரட்டைகளை இழந்தவனும் எப்பொழுதுமேஸத்வ குணத்தில்நிலைபெற்றவனும் [2]யோக [3]க்ஷேமங்களற்றவனும் ஆத்மவானும் ஆகக்கடவாய். எல்லாப்பக்கத்திலும் ஜலத்தினால் நிறைந்திருக்கின்ற தடாகத்தில் தாகமுள்ளவனுக்கு எவ்வளவுமட்டிலும் பிரயோஜனமோ அவ்வளவுமாத்திரமே அதனிடமிருந்து பெற்றுக்கொள்ளப்படுவதுபோல விசேஷமானஞானத்தையுடையபிராம்மணனுக்கு எல்லாவேதங்களிலும் (எது மோக்ஷஸாதனமோ) அவ்வளவு மாத்திரமே எடுத்துக்கொள்ளத்தக்கதாகிறது. உனக்குக் கர்மத்திலேயே அதிகாரம் இருக்கிறது; ஒருபொழுதும் பலன்களில் அதிகாரமில்லை. கர்மங்களுக்கும் பலன்களுக்கும் நீ ஹேதுவாகாதே. கர்மங்களைச்செய்யாமலிருப்பதில் உனக்குப் பற்றுதல் வேண்டாம். தனஞ்சய! யோகத்தில்நிலைபெற்றவனாகிப் பற்றுதலைவிட்டு ஸித்தியிலும் அஸித்தியிலும் ஸமமாயிருந்துகொண்டு கர்மங்களைச் செய். (ஸித்தி அஸித்திஇரண்டிலும்)ஸமனாயிருத்தல் யோகம்என்று கூறப்படுகிறது. தனஞ்சய! பயனில் பற்றுதலின்றி ஸமத்வபுத்தியுடன் அனுஷ்டிக்கப்

---

[1] பலனில்லாததுஎன்பது கருத்து. [2] அதிகமாகப்பொருளைத்தேடுதல்.
[3] அடையப்பட்டபொருளைக்குறைவின்றிரக்ஷித்தல்.

படும்கர்மாவைக்காட்டிலும் (பலாபேக்ஷையுடன் செய்யப்படும்) கர்மாவானது மிக்கஇழிவானது. ஆதலால், முற்கூறிய ஸமத்வபுத்தியில் நிலைபெற்றிரு. பலத்தைக்கருதிக்கர்மாவை அனுஷ்டிப்பவர்கள் [1]கிருபணர்களாகிறார்கள். ஸமத்வபுத்தியுள்ளவன் புண்ணியபாவங்கள் இரண்டையும் இவ்வுலகத்தில் விட்டுவிடுகிறான். ஆதலால் ஸமத்வபுத்தியோகத்தின்பொருட்டு முயற்சிசெய். கர்மங்கள்செய்யப்படுங்கால் இந்தஸமத்வபுத்தியோகமானது மிகுந்தஸாமர்த்தியத்தால் ஸாதிக்கத்தக்கது. ஸமத்வபுத்தியுடையவர்களானஞானிகள் கர்மங்களாலுண்டானபயனை ஒழித்துப் பிறவியாகிறபந்தத்தினின்று விடுபட்டவர்களாகித் துன்பமற்றபதத்தை அடைகிறார்களன்றோ? எப்பொழுது உன்னுடையபுத்தியானது மோஹஸ்வரூபமானதோஷத்தைத் தாண்டுமோ அப்பொழுது கேட்கத்தக்கதிலும் கேட்கப்பட்டதிலும் ஒழிவையடைவாய். அநேக அர்த்தங்களைக்கேட்டதினால் [2]விப்ரதிபன்னமும் (ஸ்வயம்) ஏகரூபமுமாயிருக்கிற உன்னுடையபுத்தியானது எப்பொழுது [3]ஸமாதியில்அசைவற்றதாகநிற்குமோ அப்பொழுது யோகத்தை அடைவாய்' என்றார்.

அர்ஜுனன், 'கேசவரே! நிலைத்தபிரஜ்ஞையை அடைந்து ஸமாதியிலிருப்பவனுடையபாஷை எவ்விதமானது? நிலைத்தபிரஜ்ஞையையுடையவன் எப்படிபேசுவான்? எப்படிஇருப்பான்? எப்படிநடப்பான்?' என்று கேட்டனன்.

ஸ்ரீபகவான், 'பார்த்த! ஒருவன் ஆத்மாவினால் ஆத்மாவினிடத்திலேயே ஸந்துஷ்டியுள்ளவனாக எப்பொழுது மனத்தை அடைந்திருக்கின்ற எல்லாக்காமங்களையும் முழுதும் விட்டொழிக்கிறானோ அப்பொழுது அவன் நிலைபெற்றஞானத்தையுடையவனென்று சொல்லப்படுகிறான். துக்கங்களில்வருந்தாதமனத்தையுடையவனும் ஸுகங்களில் பற்றுதலற்றவனும் ஆசையையும் பயத்தையும் கோபத்தையும் இழந்தவனுமாயிருக்கிற முனியானவன் நிலைத்த பிரஜ்ஞையுடையவனென்றுசொல்லப்படுகிறான். எவன் எல்லாவஸ்துவினிடத்திலும் அபிமானமற்றவனும் அந்த அந்தவேண்டியவை வேண்டாதவைகளை அடைந்தும்விருப்பும் வெறுப்பும்அற்றவனுமாயிருக்கிறானோ அவனுக்

[1] (ராம்) ஸம்ஸாரிகள். 'தீனர்கள்' என்பதுபழையவுரை.

[2] (ச-ம்) பற்பலவிதமாகப் பிரிந்திருக்கின்ற. (ரா-ம்) ஸகலவஸ்துக்களையுங்காட்டிலும் ஆத்மாவை விஜாதீயமாகவும் நித்யநிரதிஶயஸூக்ஷ்மமாகவும் அறிந்த.

[3] (ச-ம்) ஆத்மாவினிடத்தில். (ரா-ம்) மனத்தில்.

பிரஜ்ஞை நிலைபெற்றதாகிறது. ஆமையானது தன் அவயவங்களை அடக்கிக்கொள்வதுபோல ஸகலவிஷயங்களினின்றும் அவன் எப்பொழுது தன்னிந்திரியங்களை அடக்கிக்கொள்ளுகிறானோ அப்பொழுது அவனுடைய பிரஜ்ஞை நிலைபெற்றதாகிறது. விஷயங்களைக் கிரஹிக்காமலிருக்கிற ஆத்மாவினிடத்தினின்று விஷயாரகம்நீங்கலாக விஷயங்கள் நிவிர்த்திக்கின்றன. இவனுடையவிஷயராகமும் விஷயங்களைக்காட்டிலும் [1]பரமானவஸ்துவைக்கண்டு நிவ்ருத்தி அடைகிறது. குந்தீபுத்ர! கலங்கச்செய்யும் தன்மையுள்ள இந்திரியங்கள், (விஷயவிருப்பம்நீங்காமலிருக்கும்போது) என்ன முயற்சிசெய்தாலும், விவேகியான புருஷனுடைய மனத்தையும் பலாத்காரமாக இழுத்துக்கொண்டு செல்லுகின்றன. அந்தஇந்திரியங்களெல்லாவற்றையும் அடக்கி என்னையே பிரதானமாகக்கொண்டு ஸமாதிநிலையுள்ளவனாயிருக்கவேண்டும். எவனுக்கு இந்திரியங்கள் வசப்பட்டவைகளாயிருக்கின்றனவோ அவனுக்குப் பிரஜ்ஞை நிலைபெற்றதாகிறது. விஷயங்களைச்சிந்திக்கிறமனிதனுக்கு அவைகளில் பற்றுண்டாகிறது. பற்றிலிருந்து ஆசை உண்டாகிறது. ஆசையினின்று குரோதம் உண்டாகிறது. குரோதத்தினின்று அவிவேகம் உண்டாகிறது. அவிவேகத்தினால் ஸ்மிருதிப்ரம்சம்உண்டாகிறது. ஸ்மிருதியினுடையதவறுதலால் புத்தி அழிந்துபோகிறது. புத்திநாசத்தினால் முழுதும் அழிந்துபோகிறான். ராகத்வேஷங்களினின்று விடுபட்டும் தனக்குஉடன்பட்டுமிருக்கின்ற இந்திரியங்களாலே விஷயங்களை அனுபவிக்கிறவனாயினும் ஸ்வாதீனமானமனத்தையுடையவன் மனத்தெளிவை அடைகிறான். இந்தப்புருஷனுக்கு மனத்தெளிவு உண்டாகுங்கால் எல்லாத்துக்கங்களுக்கும் நாசமுண்டாகிறது. தெளிந்தமனத்தையுடையவனுக்குப் புத்தியானது சீக்கிரமாக நிலைபெறுகிறது. இந்திரியஸ்வாதீனமற்றவனுக்குப் [2]புத்தி உண்டாகிறதில்லை. இந்திரியஸ்வாதீனமற்றவனுக்கு ஆத்மபாவனையுமில்லை. ஆத்மபாவனையற்றவனுக்குச் சாந்திஉண்டாகிறதில்லை. [3]சாந்தியற்றவனுக்கு ஸுகமேது? எந்தமனமானது செல்லுகின்ற இந்திரியங்களை அனுஸரிக்கும்படி (ஒருவனால்) செய்யப்படுகிறதோ அந்தமனமானது, காற்று ஜலத்தில் ஓடத்தை இழுப்பதுபோல அவனுடையவிவேகத்தை இழு

1 (ச-ம்) ப்ரம்மம். (ரா-ம்) ஸுகதரமான ஆத்மஸ்வரூபம்.

2 (ச-ம்) ஆத்மஸ்வரூபவிஷயமானபுத்தி. (ரா-ம்) விவிக்தாத்மவிஷயமானபுத்தி.

3 விஷயராகம்தணிதல்.

க்கிறது. மிக்கபாகுபலமுள்ளவனே! ஆதலால், எவனுடைய இந்திரியங்கள் எல்லாவிஷயங்களிலுமிருந்து விலக்கப்பட்டிருக்கின்றனவோ அவனுக்குப் பிரஜ்ஞையானது நிலைபெற்றதாகிறது. எல்லாப்பிராணிகளுக்கும் எது இரவோ (இரவுபோலப் பிரகாசமற்றதோ) அதில் இந்திரியங்களை அடக்கியயோகியானவன் விழித்துக்கொண்டிருக்கிறான். எதில் பிராணிகள் விழித்திருக்கின்றனவோ அது ஆத்மாவை ஸாக்ஷாத்கரிக்கின்றமுனிக்கு இரவு (இரவுபோலப்ரகாசமற்றது) ஆகிறது. நாற்புறங்களிலும் (ஜலத்தினால்) நிரப்பப்பட்டிருக்கிறதும் குறைவுநிறைவின்றி ஒரேநிலைமையிலிருக்கிறதுமான கடலில் (நதிகளுடைய) ஜலம்பிரவேசிக்கிறதுபோல எல்லாக்காமங்களும் எந்தயோகியினிடத்தில் பிரவேசிக்கின்றனவோ அவன் சாந்தியை அடைகிறான்; விஷயானுபவத்தில்விருப்பமுள்ளவனோ அடையமாட்டான். எந்தப்புருஷன் எல்லாவிஷயங்களையும்விட்டு ஆசையற்றவனும் மமதையற்றவனும் அஹங்காரமற்றவனுமாக ஸஞ்சரிக்கிறானோ அவன் சாந்தியை அடைகிறான். பார்த்த! இந்த நிலையானது பிரம்மத்தைஅடையச்செய்கிறது. இந்தஸ்திதியைஅடைந்தபுருஷன் மோஹத்தை அடைகிறதில்லை. இந்தநிலைமையில் அந்தியகாலத்திலும் நிலைபெற்றிருந்து ஆனந்தமயமானபிரம்மத்தை அடைகிறான்' என்றார்.

---

## இருபத்தேழாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



## பகவத்கீதை.

### மூன்றாவது அத்யாயம்.

### (கர்மயோகம்.)

அர்ஜுனன், 'ஜநார்த்தனரே! கர்மத்தைக்காட்டிலும் ஞானமானது சிறந்ததென்பது உமதுகொள்கையானால் அப்பொழுது பயங்கரமானகர்மத்தில் என்னை ஏன் பிரவ்ருத்திக்கச்செய்கிறீர்? (ஒன்றுக்கொன்று) விரோதம்போலிருக்கிற வாக்கியத்தினாலே என்னுடைய புத்தியை மோஹிக்கச்செய்கிறீர்போலும். நிச்சயமாக எதைஅநுஷ்டிப்பதினால் நான் ஶ்ரேயஸ்ஸைஅடைவேனோ அவ்வொன்றைச்சொல்லும்' என்றுகேட்டனன்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறார். 'பாபமற்றவனே! இவ்வுல கத்தில் ஸாங்கியயோகாதிகாரிகளுக்கு ஞானயோகத்தினாலும் கர்ம யோகிகளுக்குக் கர்மயோகத்தினாலும் ஸித்திஉண்டென்று இர ண்டுவிதமானநிஷ்டைகள் என்னால் முன்னமேகூறப்பட்டன. மனி தன் கர்மங்களைத் தொடங்காமலிருப்பதனால் ஞானநிஷ்டையை அடையமாட்டான்; கர்மங்களைவிட்டுவிடுவதனாலேயே ஸித்தியை யுமடையான். ஒருவனாவது ஒருபொழுதும் காமங்களைச்செய்யாமல் ஒருக்ஷணங்கூட இருக்கிறதில்லையன்றோ? எல்லோரும் ஸ்வாதீன மற்றவர்களாக ப்ரகிருதிஸம்பந்தத்தினால் உண்டானகுணங்களால் கர் மத்தைச்செய்யும்படி ஏவப்படுகிறார்கள். எவன் கர்மேந்திரியங்களை அடக்கிக்கொண்டும் மனத்தினால் விஷயங்களை நினைத்துக்கொண்டு மிருக்கிறானோ விவேகமில்லாத அந்தக்கரணத்தையுடைய அவன் பொய்யான ஆசாரமுடையவனென்று கூறப்படுகிறான். அர்ஜுன! எவன் மனத்தினாலே இந்திரியங்களையடக்கிப் பயனில் ஆசை யற்றவனாகிக் கர்மேந்திரியங்களால் கர்மயோகத்தைச்செய்யத்தொ டங்குகிறானோ அவன் சிறந்தவனாகிறான். நீ நித்யமாகச்செய்யத்தக் ககர்மத்தைச் செய். கர்மம்செய்யாமலிருப்பதைவிடக் கர்மத்தைச் செய்வது சிரேஷ்டமானது. (அனதிகாரியான நீ எல்லாக்கர்மங்களை யும்விட்டு ஞானநிஷ்டையில் ப்ரவ்ருத்திப்பாயாகில்) கர்மங்களைவிட்ட வனாஉனக்குச் சரீரரக்ஷணமும் ஸித்தியாது. குந்திபுத்ர! யஜ்ஞார் த்தமானகர்மத்தைக்காட்டிலும் வேறானகர்மத்தில் பிரவ்ருத்திக்கின்ற இந்தஜனங்கள் கர்மத்தினால் கட்டப்படுகிறார்கள். (ஆதலால்) நீ பய னில்ஆசையைவிட்டு யஜ்ஞார்த்தமானகர்மத்தைச் செய். ப்ரம்மதே வர் ஆதிகாலத்தில் யஜ்ஞங்களோடுகூடப் பிரஜைகளைப்படைத்து, 'இந்தயஜ்ஞத்தினால் விருத்திஅடையுங்கள். இது உங்களுக்கு இஷ்ட மானகாமங்களைநிரப்புகிறதாகட்டும்' என்றுகூறினார். இதனால் தேவர் களை ஆராதியுங்கள். அந்தத்தேவர்கள் உங்களை விருத்திஅடையச் செய்யட்டும். இவ்வாறு ஒருவருக்கொருவர் உபகாரஞ்செய்துகொண்டு சிறந்த நன்மையை அடையப்போகிறீர்கள். யஜ்ஞங்களால்ஆராதிக் கப்பட்டதேவர்கள் உங்களுக்கு இஷ்டமானபோகங்களைக்கொடுப் பார்கள். அவர்களால்கொடுக்கப்படும் அன்னமுதலியவைகளை அந் தத்தேவதைகளுக்குக்கொடாமல் எவன் தானே அனுபவிக்கிறானோ அவன் திருடனே. யஜ்ஞம்செய்து மிச்சமிருக்கிறஅன்னத்தைப் புஜிக்கிறஸாதுக்கள் எல்லாப்பாவங்களினின்றும் விடுபடுகிறார்கள். எவர்கள் தம்பிரயோஜனத்தின்பொருட்டே அன்னமுதலியவைகளைச்

சமைத்துஉண்கிறார்களோ அந்தப்பாவிகள் பாவத்தையே புஜிக்கிறார்கள். அன்னத்தினின்று பிராணிகள் உண்டாகின்றன. மேகத்தினின்று அன்னம் உண்டாகிறது. யஜ்ஞத்தினால் மேகம் உண்டாகிறது. யஜ்ஞமானது கர்மத்தினால் உண்டாகிறது. கர்மத்தைப் [1]பிரம்மத்தினிடமிருந்து உண்டானதென்று அறி. பிரம்மமானது [2]அக்ஷரத்தினிடமிருந்துஉண்டாகிறது. எங்கும் வியாபித்திருக்கும்பிரம்மமானது எப்பொழுதும் யஜ்ஞத்தில் நிலைபெற்றிருக்கிறது. ஆகையால், இவ்விதமாக ஈஸ்வரனால்நடத்தப்பட்டிருக்கிற சக்ரத்தை இவ்வுலகில் எவன் அனுஸரிக்கிறதில்லையோ பாபஸ்வரூபமான ஆயுளையுடையவனும் இந்திரியஸுகங்களில்களிப்பவனுமான அவன் வீணாக ஜீவிக்கிறான். எந்தமனிதன் ஆத்மாவினிடத்திலேயே பிரீதியுள்ளவனும் ஆத்மாவினிடத்திலேயே திருப்தியுள்ளவனும் ஆத்மாவினிடத்திலேயே ஸந்தோஷமடைந்தவனுமாகிறானோ அவனுக்குச் செய்யத்தக்கது யாதொன்றுமில்லை. (ஆத்மாவினிடத்திலேயே திருப்திஅடைந்திருக்கிற) அந்தமனிதனுக்கு இந்தஉலகத்தில் செய்யப்பட்டகர்மத்தினால் ஒருவிதமானபிரயோஜனமும் கிடையாது; கர்மங்களைச்செய்யாமையால் யாதொருதோஷமுமில்லை. அவனுக்கு எல்லாப்பிராணிகளிடத்திலும் பிரயோஜனத்தைக்கருதி ஆஶ்ரயிக்கவேண்டியது ஒன்றுமில்லை. ஆதலால் பயனில்ஆசையற்றவனாக எப்பொழுதும் கர்மாவை நீ நன்றாகச் செய். (ஏனெனில்) பயனில்விருப்பத்தைவிட்டுக் கர்மாவை அனுஷ்டிக்கிறபுருஷன் [3]பரத்தை அடைகிறான். ஜனகர்முதலானவர்கள் கர்மயோகத்தினாலேயே ஸித்தியை அடைந்தார்கள். (கர்மங்களை அனுஷ்டிப்பதில் உனக்குப் பற்றுதலில்லாமலிருந்தாலும்) ஜனங்களைத் தர்மங்களில்பிரவ்ருத்திக்கச்செய்வதென்கிற பயனைக்கருதியாவது கர்மாவைச்செய்வதற்குத் தகுந்தவனாயிருக்கிறாய். நூல்களைக்கற்றுஅவ்வழியில்நிற்பவன் எந்தஎந்தக்கார்யத்தைச் செய்கிறானோ அந்தஅந்தக்கார்யத்தையே வேறுமனிதனும் செய்கிறான். அவன் எதைப் பிரமாணமாகக்கொள்ளுகிறானோ அதை உலகமும்அனுஸரிக்கிறது. பார்த்த! எனக்குமூவுலகங்களிலும் செய்யத்தக்கது ஒன்றுமில்லை; அடையவேண்டியது ஒன்றும் அடையப்படாமலில்லை. (ஆயினும்) கர்மத்திலேயேநிலைபெற்றிருக்கிறேன். ஓ! பார்த்த! யான் எக்காலத்திலாவது ஆலஸ்யமில்லாதவனாகக் கர்

---

1 'ப்ரம்ம' என்பதுமூலம். (ச-ம்) வேதம். (ரா-ம்) சரீரம்.

2 (ச-ம்) ப்ரம்மம். (ரா-ம்) ஜீவாத்மா.

3 (ச-ம்) மோக்ஷத்தை. (ரா-ம்) ஆத்மாவை.

மத்திலீடுபெற்றிராமல்போனால் மனிதர்கள் எல்லாவிதத்தாலும் என்னுடையவழியையே பின்தொடருவார்கள். நான் கர்மத்தைச் செய்யாவிடில் இந்தஜனங்கள் அழிந்துபோவார்கள். ஜாதிஸாங்கர்யத்தைச் செய்தவனுவேன். இந்தப்பிரஜைகளையும் கொன்றவனுவேன். பாரத! ஆத்மஜ்ஞானமில்லாதவர்கள் கர்மாவில்பற்றுதலுள்ளவர்களாகி எவ்வாறு கர்மங்களை அனுஷ்டிக்கின்றார்களோ அப்படியே ஆத்மஞானமுள்ளவனும் பயனில்பற்றில்லாதவனாக ஜனங்களுடைய ப்ரயோஜனத்தைச்செய்யக்கருதிக் கர்மங்களைச் செய்யவேண்டும். ஆத்மஜ்ஞானமுள்ளவன் கர்மத்தில் பற்றுதலுள்ளஅவிவேகிகளுக்குப் புத்திபேதத்தை உண்டுபண்ணக்கூடாது. முயற்சியுடன் எல்லாக்கர்மங்களையும் தான்அனுஷ்டித்துப் பிறரையும் அனுஷ்டிக்கும்படிசெய்யவேண்டும். மனிதன் பிரகிருதியைச்சேர்ந்தகுணங்களாலே செய்யப்படுகின்ற எல்லாக்கர்மங்களையும் அகங்காரத்தினுல் தன் உருவத்தைஅறியாமல், 'நான்செய்கிறேன்' என்றுஎண்ணுகிறான். மிக்கபுஜபலமுள்ளவனே! குணகர்மவிபாகங்களின் உண்மையை அறிந்தவனே [1]குணங்கள் விஷயங்களில் ப்ரவ்ருத்திக்கின்றனஎன எண்ணிப் பற்றுதலுள்ளவனுவதில்லை. பிரகிருதியினுடைய குணங்களாலே மதிமயக்கங்கொண்டு குணங்களால் செய்யப்படுகின்ற கர்மங்களில் எவர்கள் பற்றுதலுள்ளவர்களோ சிறிதும் அறியாதவர்களான அந்தமந்தர்களை முழுதும்அறிந்தவன் (அதினின்று) நழுவும்படிசெய்யக்கூடாது. நீ என்னிடத்தில் ஆத்மஸ்வரூபவிஷயமானஞானத்தினுல் எல்லாக்கர்மங்களையும்ஸமர்ப்பித்து நிஷ்காமனும் மமதையைவிட்டவனும் தாபத்தைஇழந்தவனுமாயிருந்து யுத்தம் செய். எந்தமனிதர்கள் (இதுவேசாஸ்திரார்த்தமென்று) எனக்கு ஸம்மதமானஇந்தஸித்தாந்தத்தை எப்பொழுதும் அனுஷ்டிக்கிறார்களோ, சிரத்தையுள்ளவர்களோ, அஸூயையைஅற்றவர்களோ அவர்களும் கர்மங்களால் விடப்படுகிறார்கள். எவர்கள் அஸூயையையுடையவர்களாக என்னுடையஇந்தஸித்தாந்தத்தை அனுஷ்டிக்காமலிருக்கிறார்களோ அவர்களை ஒருவிதஞானமுமில்லாதமூடர்களென்றும் நாசமடைந்தவர்களென்றும் புத்தியில்லாதவர்களென்றும்அறி. ஞானமுள்ளவனும் தன்னுடைய [2]பிரகிருதிக்குத்தக்கபடி (விஷயங்களில்) ப்ராவ்ருத்திக்கிறான். (ஏனெனில்) பிராணிகள் ப்ரகிருதியை அனுசரிக்கின்றன. சாஸ்திரத்தினுல் செய்யப்பட்ட நியமனமானது

1 (ச-ம்) இந்திரியங்கள். (ரா-ம்) ஸத்வாதிகுணங்கள்.

2 (ச-ம்) தர்மாதர்மஸம்ஸ்காரம். (ரா-ம்) வாசனை.

என்னசெய்யும்? ஒவ்வோர்இந்திரியத்தின்விஷயத்திலும் ராகமும் த்வேஷமும் நிலைபெற்றிருக்கின்றன. அவ்விரண்டிற்கும் ஸ்வாதீனப் பட்டிருத்தலை அடையக்கூடாது. ஏனெனில், அவ்விரண்டும் இவ னுக்குப் பகைகள். ஸ்வதர்மமானது குணமில்லாததாயிருந்தாலும் நன்றாக அநுஷ்டிக்கப்பட்டபரதர்மத்தைக்காட்டிலும் சிறந்தது. ஸ்வ தர்மத்தில் தீமைவிளைந்தாலும் மேன்மை. பரதர்மமோவென்றால் பயத்தைவிளைவிக்கக்கூடியது' என்றார்.

அர்ஜுனன், 'விருஷ்ணிகுலத்தில்உதித்தவரே! ஒருமனிதன், விரும்பாமலிருந்தாலும் எதனால்தூண்டப்பட்டுப் பலாத்காரமாக நிய மிக்கப்பட்டவன்போலப் பாவத்தைச் செய்கிறான்?' என்று கேட் டன.

ஸ்ரீபகவான், 'இது ரஜோகுணத்தினின்றுஉண்டாகிறதும் (விஷயங்களைப்) பெருந்தீனியாகவுடையதுமான காமமே. இந்தக் காமமே குரோதரூபமாகப்பரிணமித்து மிக்கபாவங்களுக்குக் காரண மாகின்றது. ஆதலால், இந்தஸம்ஸாரத்தில் இந்தக்காமத்தை விரோ தியாகஅறி. எப்படி நெருப்பானது புகையினாலும் கண்ணாடி அழுக் காலும்சூழப்படுகின்றனவோ, எவ்வாறு கருவானது பையினால்மூடப் படுகிறதோ அவ்வாறே இந்தப்பிராணிக்கூட்டம் அந்தக்காமத்தால் மூடப்பட்டிருக்கிறது. குந்திபுத்ர! ஞானியினுடையஆத்மஜ்ஞானமா னது, நிரம்பாததும் திருப்தியற்றதுமான இந்தக்காமஸ்வரூபியான நித்யவைரியினாலே மூடப்பட்டிருக்கிறது. இந்தக்காமத்திற்கு இந்திரி யங்களும் மனமும் புத்தியும் இருப்பிடமென்றுசொல்லப்படுகின்றன. இவைகளால் இது ஞானத்தைமறைத்துக்கொண்டு தேகியைப் பலவ கையாக மயக்குகிறது. பரதர்களில்சிறந்தவனே! ஆதலால், நீ முதலில் இந்திரியங்களை அடக்கிக்கொண்டு ஆத்மஸ்வரூபவிஷயமான ஞானத் தையும் அதன்விவேகவிஷயமான (அல்லதுஅநுபவவிஷயமான) ஞானத்தையும்கெடுக்கின்ற இந்தப்பாவியான காமத்தை நாசம்செய். (ஞானத்தைக்கெடுக்கும்விஷயத்தில்) இந்திரியங்களைப் பிரதானமெ ன்று சொல்லுகிறார்கள். இந்திரியங்களைக்காட்டிலும் மனம் பிரதான மானது. மனத்தைக்காட்டிலும் புத்தி முக்கியமானது. புத்தியைக் காட்டிலும் எது பிரதானமோ அதுதான் காமம். மிக்கபுஜபலமுள் ளவனே! இவ்விதமாகக் (காமத்தைப்) புத்தியைக்காட்டிலும் மேலான தென்று எண்ணித் தன்மனத்தைத் தன்புத்தியினாலேயேஅடக்கி நிலைநிறுத்தி வெல்லுவதற்குமுடியாதகாமஸ்வரூபியானசத்துருவை நீ நாசம்செய்வாயாக.

---

## இருபத்தெட்டாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



## பகவத்கீதை.

### நான்காவது அத்யாயம்.

### ([1] யஜ்ஞவிபாகயோகம்.)

நான் அழிவில்லாத இந்தக்கர்மயோகத்தை ஸூர்யனுக்கு உபதேசித்தேன். சூரியன் மனுவுக்கு உபதேசித்தான். மனு இக்ஷ்வாகுவுக்கு உபதேசித்தான். சத்ருக்களைத்தபிக்கச்செய்கிறவனே! இவ்விதம் பரம்பரையாகவந்த இந்தக்கர்மயோகத்தை ராஜரிஷிகள் அறிந்திருந்தார்கள். அந்தக்கர்மயோகமானது இவ்வுலகத்தில் வெகுகாலமாகிவிட்டதால் அழிந்துபோய்விட்டது. புராதனமான அப்படிப்பட்ட இந்தக்கர்மயோகத்தையே இப்பொழுது நீபக்தனென்றும் நண்பனென்றும்எண்ணி நான் உனக்கு உரைத்தேன். இது உத்தமமானரகஸ்யமாகும்' என்றார்.

அர்ஜுனன், 'உம்முடையபிறப்பானது பிந்தினகாலத்தில் உண்டானது. ஸூர்யனுடையபிறப்பானது முந்தியது. (இவ்வாறிருக்க) நீர் மன்வந்தரத்தின்தொடக்கத்தில் ஸூர்யனுக்குஉபதேசித்தீரென்பதை யான் எப்படி அறிவேன்?' என்றுகேட்டான்.

ஸ்ரீபகவான், 'அர்ஜுனா! எனக்கும் உனக்கும் அநேகஜன்மங்கள் சென்றுவிட்டன. சத்ருக்களைத்தபிக்கச்செய்கிறவனே! அவை எல்லாவற்றையும் யான் அறிவேன்; நீ அறியாய். யான் பிறப்பற்றவனும் குறைவற்றவனும் பிராணிகளுக்குஈஶ்வரனுமாயிருந்தாலும் என்னுடையஸ்வபாவத்தை அவலம்பித்து என்னுடையமாயையினாலே அவதரிக்கிறேன். பாரதகுலத்தில்உதித்தவனே! எந்தஎந்தக்காலத்தில் தர்மத்திற்குக் குறைவு உண்டாகுமோ, அதர்மத்திற்குக் கிளர்ச்சியுண்டாகுமோ அப்பொழுதுஅப்பொழுது யான் என்னை அவதரிப்பிக்கிறேன். ஸாதுக்களைப்பாதுகாப்பதின்பொருட்டும் துஷ்டர்களை அழிப்பதின்பொருட்டும் தர்மத்தைநிலைநாட்டுவதின்பொருட்டும் ஒவ்வொருயுகத்திலும் நான் அவதரிக்கிறேன். அர்ஜுன! இவ்வாறான என்னுடைய அவதாரத்தையும் செய்கையையும் அப்பிராகிருதமென்று உண்மையாக எவன் அறிகிறானோ அவன் தேகத்தைவிட்ட

[1] ஞானயோகம் என்றும் வழங்கும்.

பிறகு திரும்பப்பிறப்பை அடைகிறதில்லை; என்னையே அடைகிறான். ஞானரூபமான தவத்தினால் பரிசுத்தர்களான அனேகர்கள் என்னை ஆஸ்ரயித்தவர்களாகவும் காமத்தையும்பயத்தையும்குரோதத்தையும்விட்டவர்களாகவும் என்னிடத்திலேயே மனத்தைவைத்தவர்களாகவும் என்னுடையஸ்வபாவத்தை அடைந்தார்கள். பார்த்த! எவர்கள் எவ்விதமாக என்னை உபாஸிக்கிறார்களோ அவர்களை நான் அவ்விதமாகவே அனுக்ரஹிக்கிறேன். மனிதர்கள் எனதுமார்க்கத்தை எல்லாவிதத்தாலும் அனுஸரிக்கிறார்கள். இவ்வுலகில் கர்மங்களுடையஸித்தியைவிரும்புகிறவர்கள் தேவதைகளைப் பூஜிக்கின்றனர். ஏனென்றால், மனுஷ்யலோகத்தில் கர்மத்தினால்உண்டாகின்றஸித்தியானது விரைவாக உண்டாகிறதன்றோ? (பிராம்மக்ஷத்திரியவைஶ்யசூத்திரர்கள்என்கிற)நான்குவர்ணங்களும் குணங்களினுடையபிரிவுகளோடும் கர்மாக்களுடைய பிரிவுகளோடும் என்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளுக்குக்கர்த்தாவாயிருந்தாலும் என்னைக் கர்த்தா அல்லனென்றும் நாசமற்றவனென்றும் அறி. என்னிடத்தில் கர்மங்கள் ஒட்டுகிறதில்லை. எனக்குக் கர்மபலத்தில் ஆசை இல்லை. இவ்வாறு எவன் என்னை அறிகிறானோ அவன் கர்மங்களால் கட்டப்படுகிறதில்லை. இவ்விதம்அறிந்து (ஸம்ஸாரத்தினின்று) விடுபடவிருப்பமுற்ற பூர்வபுருஷர்களாலும் கர்மாவானது அநுஷ்டிக்கப்பட்டது. ஆதலால், பூர்வபுருஷர்களால்அனுஷ்டிக்கப்பட்டதும் வெகுநாளாயுள்ளதுமான கர்மத்தையே நீ செய். 'கர்மம் எப்படிப்பட்டது? அகர்மம் எப்படிப்பட்டது?' என்கிறஇந்தவிஷயத்தில் கற்றறிந்தவர்களும் மயக்கமுற்றிருக்கிறார்கள். எதை அறிந்து அமங்களமானஸம்ஸாரபந்தத்தினின்று விடுபடுவாயோ அந்தக்கர்மாவை உனக்கு உரைப்பேன். (மோக்ஷஸாதனமான) கர்மஸ்வரூபத்திலும் அறியத்தக்கவிஷயமிருத்தலாலும், (நித்தியநைமித்திககாம்யஸ்வரூபமாகப்) பலவகைப்பட்டிருக்கிறகர்மஸ்வரூபத்திலும் அறியத்தக்கவிஷயமிருத்தலாலும் [1] அகர்மத்திலும் அறியத்தக்கவிஷயமிருத்தலாலும் கர்மாவினுடையகதியானது அறியமுடியாதது. கர்மத்தில் எவன் அகர்மத்தைப் பார்க்கிறானோ, அகர்மத்தில் எவன் கர்மத்தைப் பார்க்கிறானோ அவன் மனிதர்களுள் சிறந்தபுத்தியுள்ளவன். அவன் யோகி; எல்லாக்கர்மங்களையும் அநுஷ்டித்தவன். எவனுடைய எல்லாக்கர்மங்களும், பலாபேக்ஷையும் ஸங்கல்பமுமற்றனவாகுமோ அவனை அறிஞர்கள் ஞானமாகிறநெருப்பினால் வினைகள்எரிக்கப்பட்டவனென்றும் பண்டிதனென்றும்சொல்

---

[1] ஞானத்திலும்.

லுகிறார்கள். எவன் கர்மத்தில் பற்றுதலைவிட்டு எப்பொழுதும் த்ருப்தியுள்ளவனும் ஆஸ்ரயமில்லாதவனுமாயிருக்கிறானோ அவன் கர்மத்தில் நோக்கத்துடன் பிரவ்ருத்தித்தவனாயினும் ஒன்றையும் செய்பவனாகான். பயனில் ஆசை இல்லாதவனும் அடக்கப்பட்டதும் சிந்தையற்றதுமான மனத்தையுடையவனும் வெளிப்பொருள்களனைத்தையும் விட்டவனுமாகிச் சரீரம்நிலைப்பதற்குஉரியகர்மத்தைமாத்திரம்செய்கிறவன் பாவத்தை அடையான். தற்செயலாகக்கிடைத்த பொருளால் திருப்தியை அடைந்தவனும் ஸுகம்துக்கம்சீதம்உஷ்ண முதலியத்வந்துவங்களைக்கடந்தவனும் மாத்ஸர்யத்தை விட்டவனுமாகி ஸித்தியிலும் அஸித்தியிலும்ஸமமாயிருப்பவன் கர்மத்தையே செய்தாலும் கட்டப்படான். [1]ஸங்கத்தை விட்டவனும் பந்தத்தினின்றுவிடுபட்டவனும் ஞானத்தில்ஊன்றின மனத்தையுடையவனும் யஜ்ஞத்தின்பொருட்டுக் கர்மத்தைஆசரிக்கின்றவனுமானமனிதனுக்குக் கர்மம் முழுதும் நன்குஅழிந்துபோகிறது. பிரம்மரூபமான ஸ்ருக்ஸ்ருவமுதலியவைகளால் ஹோமம்செய்யத்தக்க பிரம்மரூபமான ஹவிஸானது பிரம்மரூபமான அக்னியில் பிரம்மத்தினால் ஹோமம் செய்யப்பட்டதென்று (எவன் எல்லாக்கர்மத்தையும் பிரம்மமயமாக எண்ணுகிறானோ) பிரம்மரூபமாகக்கர்மத்தைஅனுஸந்திக்கிற அந்த மனிதனாலே பிரம்மமேஅடையத்தக்கது. சிலகர்மயோகிகள் இந்திராதிதேவர்களைஉத்தேசித்ததான யஜ்ஞத்தையே உபாஸிக்கிறார்கள். மற்றவர்கள் ஹோமஸாதனமானஸ்ருக் ஸ்ருவமுதலியபாத்திரங்களாலே பிரம்மரூபமானஅக்னியில் பிரம்மஸ்வரூபமான ஹவிஸை ஹோமம்செய்கிறார்கள். பின்னும் சிலர் காதுமுதலானஞானேந்திரியங்களை ஸம்யமமாகிறஅக்னிகளில் ஹோமம்செய்கிறார்கள். பின்னும் சிலர் சப்தமுதலியவிஷயங்களை இந்திரியங்களாகிறஅக்னிகளில் ஹோமம்செய்கிறார்கள். சிலர் எல்லாஇந்திரியவியாபாரங்களையும் பிராணவாயுவினுடையவியாபாரங்களையும் ஞானத்தினால்பிரகாசிக்கிற மனோநிக்ரஹமாகியயோகாக்னியில் ஹோமம்செய்கிறார்கள். சிலர் நியாயத்தினால்திரவியங்களைத்தேடித் தேவதாராதனரூபமானயஜ்ஞத்தைச் செய்கிறார்கள். சிலர் தபோரூபமானயஜ்ஞத்தைச் செய்கின்றனர். அவ்வாறே சிலர் யோகத்தை யஜ்ஞமாகச் செய்கிறார்கள். முயற்சியுள்ளவர்களும் தீக்ஷ்ணமான விரதத்தையுடையவர்களுமானசிலர் வேதமோதலையும் அதன்பொருளை அறிதலையும் யஜ்ஞமாகச் செய்கிறார்கள்.

---

1 (ச-ம்) பலத்தில் பற்றுதல். (ரா-ம்) ஆத்மாவைத்தவிர மற்றவஸ்துக்களின் ஸம்பந்தம்.

பிராணுயாமத்தை முக்கியமாகஅனுஷ்டிக்கிற சிலகர்மயோகிகள் பிராணுபானவாயுக்களுடையகதிகளைத்தடுத்து அபானவாயுவினிடத்தில் பிராணவாயுவை ஹோமம்செய்கிறுர்கள். (இது பூரகம்.) அவ்வாறே பிராணவாயுவினிடத்தில் அபானவாயுவை ஹோமம்செய்கிறுர்கள். (இது ரேசகம்.) சிலர் நியதமானஆஹாரத்தையுடையவர்களாகப் பிராணன்களைப் பிராணவாயுக்களில் ஹோமம்பண்ணுகிறுர்கள். (இது கும்பகம்.) யஜ்ஞத்தையறிந்தவர்களான இவர்கள்எல்லோரும் யஜ்ஞத்திஞலே பாவங்கள்நசித்தவர்களாகி யாகத்தில் மிகுந்திருக்கின்ற அமிருதமென்றுபெயர்கொண்ட ஹவிஸைப்புஜித்து அழிவற்றதான பிரம்மத்தை அடைகிறுர்கள். குருகுலசிரேஷ்ட! யஜ்ஞம்செய்யாதவனுக்கு இவ்வுலகமேஇல்லை. அவ்வாறிருக்க, மற்றப்பரலோகமேது? இவ்வாறு பலவிதயஜ்ஞங்கள் வேதத்திஞுடைய முகத்தில் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள்எல்லாவற்றையும் கர்மங்களால்உண்டாவனவாகஅறி. இவ்வாறுஅறிந்தால் விடுபடுவாய். பகைவர்களை வாட்டுபவனே! த்ரவ்யரூபமானஸாதனங்களால்செய்யத்தக்கயஜ்ஞத்தைக்காட்டிலும் ஞானயஜ்ஞமேசிறந்தது. பார்த்த! எல்லாக்கர்மமும் அதைத்தவிரவேறுன எல்லாஉபாதேயமும் ஞானத்திலேயே முடிவுபெறும்படி செய்யப்படுகின்றன. அந்தப்ராம்மஞானத்தை ஸாஷ்டாங்கவந்தனத்திஞலும் கேள்வியிஞலும் பணிவிடையிஞலும் (ஞானிகளிடமிருந்து) தெரிந்துகொள். பாண்டவ! எந்தஞானத்தையறிந்து இவ்வாறு மோஹத்தை மறுபடியும் நீ அடையமாட்டாயோ, எதனுல் எல்லாப்பிராணிகளையும் உன்னிடத்திலும் அவ்வாறே என்னிடத்திலும் ஸமமாகப்பார்ப்பாயோ அந்தஞானத்தை ஆத்மதத்வத்தைஅறிந்த ஞானிகள் உனக்குஉபதேசிப்பார்கள். நீ எல்லாப்பாவிகளையுங்காட்டிலும் மிக்கபாவியாயிருந்தாலும்பாவமனைத்தையும் ஆத்மஜ்ஞானமாகிற தெப்பத்திஞலேயே தாண்டுவாய். அர்ஜுன! ஜ்வலிக்கின்றநெருப்பு விறகுகளை எவ்வாறு முழுதும் சாம்பலாக்குமோ அவ்வாறே ஞானமாகிறநெருப்பு எல்லாக்கர்மங்களையும் சாம்பலாகச்செய்கிறது. இவ்வுலகில் ஆத்மஜ்ஞானத்திற்குச்சமமான (பாவத்தைப்போக்கக்கூடிய) பரிசுத்தமானது வேறென்றுமில்லை. கர்மயோகத்தால்ஸித்திபெற்றவன் அந்தஞானத்தைத் தன்னிடத்தில்தானே வெகுகாலத்திற்குப்பின் அடைகிறுன். (குருபதேசத்தில்) ச்ரத்தையுள்ளவனும் அந்தஞானத்திலேயேபற்றுள்ளவனும் இந்திரியங்களை அடக்கினவனுமாயிருப்பவன் ஞானத்தைஅடைவான்; ஞானத்தைஅடைந்து சீக்கிரத்தில் சிறந்தசாந்தியை அடைகிறுன். ச்ரத்தையில்லாதவனும் விவே

கமில்லாதவனும் ஸம்சயமுள்ளமனத்தையுடையவனுமாயிருப்பவன் நாசமடைகிறான். ஸம்சயமுள்ளமனத்தையுடையவனுக்கு இவ்வுலகமுமில்லை; பரலோகமுமில்லை; ஸுகமுமில்லை. தனஞ்சய! யோகத்தினால்கர்மங்களைவிட்டவனும் ஆத்மஞானத்தாலே ஸம்சயத்தை அறுத்தவனும் [1]சிறந்தமனமுள்ளவனுமாயிருக்கிறவனைக் கர்மங்கள் கட்டுப்படுத்தா. பரதகுலத்தில்உதித்தவனே! ஆதலால், அஜ்ஞானத்தினால் உண்டானமனத்திலுள்ளஇந்தஸம்சயத்தை ஞானமாகிற கத்தியினால் வெட்டிக் கர்மயோகத்தை அநுஷ்டி; எழுந்திரு' என்றார்.

---

இருபத்தோன்பதாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



## பகவத்கீதை.

ஐந்தாவது அத்யாயம்.

([2]ஸந்யாஸயோகம்.)

அர்ஜுனன், 'கிருஷ்ண! கர்மங்களுடையஸந்யாஸத்தையும் மீண்டும்கர்மயோகத்தையும் சொல்லுகிறீர். இவ்விரண்டினுள் எந்த ஒன்று சிறந்ததென்று நன்குநிச்சயிக்கப்பட்டிருக்கிறதோ அதை எனக்குச் சொல்லும்' என்றுகேட்டான்.

ஸ்ரீபகவான், 'கர்மஸந்யாஸம் கர்மயோகம் இரண்டும் மோக்ஷத்தைக்கொடுக்கக்கூடியவை. அவ்விரண்டினுள் கர்மஸந்யாஸத்தைக் காட்டிலும் அநுஷ்டிக்கப்படும்கர்மயோகம் சிறந்தது. நீண்டகைகளையுடையவனே! எவன் வெறுக்கிறதில்லையோ, விரும்புகிறதில்லையோ, ஸுகதுக்கமுதலியத்வந்துவங்களற்றவனோ அவன் நித்யஸந்யாஸியென்று அறியத்தக்கவன். அப்படிப்பட்டவன் கர்மபந்தத்தினின்று ஸுகமாகவிடுபடுவான். அறிவீனர்கள் ஞானயோகத்தையும் கர்மயோகத்தையும் வெவ்வேறெனச் சொல்லுகின்றனர். பண்டிதர்களோ (அவ்வாறு) சொல்லுகிறதில்லை. (இவ்விரண்டனுள்) ஒன்றையாவது நன்குஅநுஷ்டிப்பவன் இரண்டினுடையபயனையும் அடைகிறான். ஸாங்கியயோகத்தில் நிலைபெற்றவர்களான அறிஞர்களால் எந

---

1 'ஆத்மவந்தம்' என்பதுமூலம். (ச-ம்) தவறுதலற்றவன். (ரா-ம்) உபதேசிக்கப்பெற்றவிஷயத்தில் மனவுறுதியுள்ளவன்.

2 கர்மஸந்யாஸயோகம் என்றும் வழங்கும்.

தஸ்தானம் அடையப்படுமோ அந்தஸ்தானமானது கர்மயோகநிஷ்டர்களாலும் அடையப்படுகிறது. ஞானயோகத்தையும் கர்மயோகத்தையும் ஒன்ருக எவன் பார்க்கிருனே அவனே பண்டிதன். நீண்ட கைகளையுடையவனே! கர்மஸந்யாஸமோவென்ருல் கர்மயோகமின்றி அடைவதற்கு மிக்க கஷ்டமானது. கர்மயோகத்துடன் ஆத்மாவை மனனம்செய்யும் ஸ்வபாவமுடையவன், பிரம்மத்தைச் சீக்கிரமாக அடைகிருன். கர்மயோகத்தில்நிலைபெற்றவனும் பரிசுத்தமும் ஜயிக்கப்பட்டதுமானமனத்தையுடையவனும் ஜிதேந்திரியனும் எல்லாப்பிராணிகளிலுமுள்ள ஆத்மாவையும் தன் ஆத்மாவையும்ஒன்ருயறிந்தவனுமானஒருவன் கர்மங்களைச்செய்தாலும் (அவற்ருல்)பற்றப்படான். ஆத்மதத்வத்தை அறிந்தவன், கர்மயோகநிஷ்டனுயிருந்துகொண்டு பார்ப்பவனும் கேட்பவனும் தொடுபவனும் முகர்பவனும் புஜிப்பவனும் செல்பவனும் உறங்குபவனும் மூச்சுவிடுபவனும் பேசுபவனும் (ஜலமலங்களை) விடுபவனும் (பொருள்களை) எடுப்பவனும் கண்களை விழிப்பவனும் மூடுபவனுமாயிருந்தும், இந்திரியங்கள் தத்தம்விஷயங்களில் செல்லுகின்றனவென்று மனத்தில் அனுஸந்தானம்செய்து, 'யான்ஒன்றையும் செய்யவில்லை' என்றுநினைப்பான். எவன் கர்மங்களை ப்ரம்மத்தினிடத்தில் ஒப்பித்துப் பயனில்பற்றுதலைவிட்டுச் செய்கிருனே அவன் ஜலத்தினுல்தாமரையிலைஒட்டப்படாததுபோலப் பாபத்தினுல் ஒட்டப்படுகிறதில்லை. கர்மயோகிகள் பற்றுதலைவிட்டு ஆத்மசுத்தியின்பொருட்டுச் சரீரத்தினுலும் மனத்தினுலும் புத்தியினுலும் அபிமானமற்றிருக்கிறஇந்திரியங்களாலும் கர்மத்தைச் செய்கின்ருர்கள். ஆத்மாவினிடத்திலேயே மனத்தைச்சேர்த்தவன் கர்மபலத்தைவிட்டு ஸ்திரமானசாந்தியை அடைகிருன். ஆத்மாவினிடத்தில்மனத்தைச்சேர்க்காதவன் காமத்தின்தூண்டுதலால் கர்மபலனில்பற்றுதலுடையவனுகிக் கட்டப்படுகிருன். ஜிதேந்திரியன் மனத்தினுல் எல்லாக் கர்மங்களையும் ஒன்பதுவாயில்களுடன்கூடின பட்டணம்போன்றசரீரத்தில் வைத்துவிட்டு ஒன்றையும்செய்யாமலும் செய்விக்காமலும் ஸுகமாயிருக்கிருன். பிரபுவாயிருக்கிறஆத்மா உலகத்துக்குக் கர்த்ருத்வத்தையும் கர்மங்களையும் கர்மபலத்தின்ஸம்பந்தத்தையும் உண்டாக்குகிறதில்லை. ஆனுல்பிரகிருதிவாஸனையானது நடைபெற்றுவருகிறது. அந்த அந்தக்கர்மத்துக்குத்தக்கபடி எல்லாத்தேகங்களிலும்ப்ரவேசிப்பதற்குத்தகுதியுள்ளஜீவாத்மா ஒருவனுடையபாபத்தையும் க்ரஹிக்கிறதில்லை; புண்ணியத்தையும் கிரஹிக்கிறதில்லை. அஜ்ஞானத்தினுலே ஞானம் மூடப்பட்டிருக்கிறது. அதனுல், ஜந்துக்கள் மோகிக்கின்றன.

எவர்களுக்கு ஆத்மஜ்ஞானத்தினால் அவ்விதமான அஜ்ஞானமானது நாசஞ்செய்யப்பட்டதோ அவர்களுக்கு அந்தஉத்தமஞானம் ஸூர்யன்போல (எல்லாவற்றையும்)பிரகாசிப்பிக்கிறது. அவ்விதமானஆத்மதர்சனத்தில்புத்தியைச்செலுத்தினவர்களும் அந்தஆத்மவிஷயமான மனத்தையுடையவர்களும் அந்த ஆத்மஸ்வரூபாப்யாஸத்தில்நிலைபெற்றவர்களும் அதையேபரமபிரயோஜனமென்றுஎண்ணியவர்களும் ஞானத்தினால் பாபம்போனவர்களுமாயிருக்கின்றவர்கள் திரும்பவும் ஸம்ஸாரத்திற்கு வாராமலிருக்கச்செய்யும்மோக்ஷத்தை அடைகிறார்கள். கல்வியும் வணக்கமுமுள்ளபிராம்மணனிடத்திலும் பசுவினிடத்திலும் யானையினிடத்திலும் நாயினிடத்திலும் நாயின் மாம்ஸத்தைப்பக்வம்செய்துபுஜிப்பவனிடத்திலும் ஞானிகள் ஸமதிருஷ்டியுள்ளவர்கள். எவர்களுடையமனமானது நடுநிலைமையில் நிலைபெற்றிருக்கிறதோ அவர்களால் இந்தநிலைமையிலேயே ஸம்ஸாரமானது ஜயிக்கப்பட்டதாகிறது. தோஷமற்றதும் ஸமமுமான ஆத்மவஸ்துவல்லவோ ப்ரம்மம்? ஆதலால், (ஆத்மஸாம்யத்தில்நிலைபெற்றார்களேயானால்) அவர்கள் பிரம்மத்தினிடத்தில் நிலைபெற்றவர்களே. ஸ்திரமானவஸ்துவினிடத்தில்புத்தியைவைத்தவனும் முழுதும்மோகமற்றவனும் ப்ரம்மத்தை அறிந்தவனும் ப்ரம்மத்தினிடத்தில்நிலைபெற்றவனுமான ஞானியானவன் பிரியத்தைஅடைந்தும் மகிழான்; அப்பிரியத்தைஅடைந்தும் துயரமடையான். எவன் பாஹ்யவிஷயானுபவங்களில் பற்றுதலற்றமனத்தையுடையவனாகி அந்தராத்மாவினிடத்திலேயே ஸுகத்தைஅடைகிறானோ அவன் ப்ரம்மாப்யாஸத்தில் சேர்க்கப்பட்டமனத்தையுடையவனாகி அக்ஷயமானஸுகத்தை அடைகிறான். குந்திபுத்திர! விஷயேந்திரியஸம்பந்தத்தினால்உண்டாகிற போகங்கள் எவைகளுண்டோ அவைகள் துக்கத்துக்குக் காரணமாயிருப்பவைகளே. ஏனென்றால், அவைகள் உண்டாவதும் அழிவதுமாகவே இருக்கின்றன. அவைகளில் உண்மைதெரிந்தவிவேகியானவன் ரமிக்கிறதில்லை. சரீரத்தைவிடுவதற்குமுன் ஸாதநாநுஷ்டானதசையிலேயே காமக்ரோதங்களால்உண்டானவேகத்தைப் பொறுத்துக்கொள்வதற்கு எந்தமனிதன் திறமையுடையவனோ அவனே ஆத்மானுபவத்துக்குத்தகுந்தவன்; அவனே ஸுகமுடையவனாவான். எவன் அந்தராத்மாவினிடத்திலேயேஸுகமுள்ளவனும் அந்தராத்மாவினிடத்திலேயேகிரீடிக்கின்றவனும் அவ்வாறே அந்தராத்மாவினிடத்திலேயேபிரகாசமுள்ளவனுமாயிருக்கிறானோ அந்தயோகியானவன் பிரம்மஸ்வரூபியாகிப் பிரம்மானந்தத்தை அடைகிறான். ஸம்

சயமற்றவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் எல்லாப்பிராணிகளுக்கும்ஹிதத்தைத்தேடுவதிலேயேபற்றுதலுள்ளவர்களும் கல்மஷமற்றவர்களுமானரிஷிகள் பிரம்மானந்தத்தை அடைகிறார்கள். காமக்குரோதங்களினின்றுவிடுபட்டவர்களும் முயற்சிப்பவர்களும் மனத்தை அடக்கினவர்களும் ஆத்மஸ்வரூபத்தைஅறிந்தவர்களுமான பிரம்மநிஷ்டர்களுக்குப் பிரம்மானந்தம் இருபுறங்களிலும் இருக்கிறது. பாஹ்யங்களானவிஷயஸ்பர்சங்களை வெகுதூரத்தில் விலக்கிக் கண்களை இரண்டுபுருவங்களின்மத்தியிலும்வைத்துப் பிராணாபானவாயுக்களை மூக்கினுள்ஸஞ்சரிக்கும்படி ஸமமாகச்செய்து இந்திரியங்களையும் மனத்தையும் புத்தியையும்அடக்கி, காமத்தையும் பயத்தையும் குரோதத்தையும்நீக்கி மோக்ஷத்தையே முக்கியபிரயோஜனமாகக்கருதி ஆத்மாவையே மனனம்செய்துகொண்டிருக்கிறவன் எப்பொழுதும் முக்தனே. கர்மயோகியானவன் என்னை யஜ்ஞங்களையும் தவங்களையும் அநுபவிக்கிறவனும் எல்லாலோகங்களுக்கும் மஹேஸ்வரனும் எல்லாப்பிராணிகளுக்கும்ஸுஹ்ருத்துமாக அறிந்து சாந்தியை அடைகிறான்.

---

## முப்பதாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)

## பகவத்கீதை.

### ஆறாவது அத்யாயம்.

### ([1]அத்யாத்மயோகம்.)

கர்மங்களுடையபலனைக்கருதாமல் செய்யவேண்டியகர்மத்தை எவன் செய்கிறானோ அவனேஸந்யாஸி; அவனேயோகி. அக்நிகார்யங்களையும் க்ரியைகளையும்விட்டவன் ஸந்யாஸியும் யோகியுமாகான். பாண்டவ! எதை [2]ஸந்யாஸம்என்று சொல்லுகிறார்களோ அதை நீ [3]யோகம்என்றுஅறி. ஸங்கல்பத்தை விடாதவன் ஒருவனாவது யோகியாகான். ஞானயோகத்தை அடையவிரும்புகிறயோகிக்குக் கர்மயோகம் காரணமென்று சொல்லப்படுகிறது. ஞானயோகத்தை அடைந்திருக்கிற அவனுக்கே கர்மநிவ்ருத்தியானது காரணமாகக் கூறப்படுகிறது. எப்பொழுது விஷயங்களிலும் கர்மங்களிலும் பற்

---

[1] ஆத்மஸம்யமயோகம் என்றும் யோகாப்யாஸயோகம் என்றும்வழங்கும்.

[2] ஞானயோகம். [3] கர்மயோகம்.

றுதலுள்ளவனுகானே அப்பொழுது எல்லாவிருப்பங்களையும்விட்ட அவன் யோகாரூடனென்று சொல்லப்படுகிறான். மனிதன் தன்மனத்தினால் தன்ஆத்மாவை ஸம்ஸாரத்தினின்றுதூக்கிக் கரைஏற்றிவிட வேண்டும். ஆத்மாவைக் கெடுக்கக்கூடாது. ஏனெனில், தனக்குத் தன்மனமே உறவு; தன்மனமே பகை. எந்தப்புருஷனாலே தன்னாலேயே தன்மனமானது ஜயிக்கப்பட்டதோ அந்தப்புருஷனுக்கு மனமே பந்து. மனத்தை அடக்காதவனுக்குத் தன்மனமே சத்துருவைப்போலத் தனக்குத்தீங்குசெய்வதில் நிலைபெற்றிருக்கும். சீதம்உஷ்ணம் ஸுகம்துக்கம் அவ்வாறே மானம்அவமானம்இவைகளில் வேறுபாட்டை அடையாதமனத்தையுடையவனும் அதிகசாந்தியுள்ளவனுமான மனிதனுடையமனத்தில் பரமாத்மா விசதமான அனுஸந்தானத்துக்கு யோக்கியனாகிறான். ஆத்மஸ்வரூபஜ்ஞானத்தினாலும் விஜ்ஞானத்தினாலும் திருப்தியுள்ளமனத்தையுடையவனும் ஆத்மாவினிடத்தில்நிலைபெற்றவனும் இந்திரியங்களைநன்குஜயித்தவனும் மண்ணாங்கட்டிகல்தங்கம்இவைகளைஸமமாகப்பாவிக்கிறவனுமான யோகியானவன் ஆத்மாவைப்பார்ப்பதான யோகாப்யாஸத்திற்குரியவனென்று சொல்லப்படுகிறான். [1]ஸுஹ்ருத், [2]மித்ரன், [3]சத்ரு, [4]உதாஸீனன், [5]மத்யஸ்தன், [6]த்வேஷி, [7]பந்துஇவர்களிடத்திலும் [8]ஸாதுக்களிடத்திலும் [9]பாபிகளிடத்திலும் ஸமபுத்தியுள்ளவன் மேன்மையுடையவனாகிறான். கர்மயோகநிஷ்டன் ஏகாந்தப்பிரதேசத்தில் ஒருவனாயிருந்து கொண்டு நன்குஅடக்கப்பட்டமனம் தேகம் இந்திரியங்கள் இவைகளையுடையவனும் அபேக்ஷையில்லாதவனும் மமதையற்றவனுமாக எப்பொழுதும் மனத்தை யோகநிஷ்டையில் சேர்ப்பிக்கவேண்டும். பரிசுத்தமானஇடத்தில் அதிகஉயரமில்லாததும் அதிகத்தாழ்வில்லாத

1 கைம்மாறுகருதாமல் உதவிபுரிபவன்; அல்லது பிராயஒப்புமையில்லாமல் ஒருவனுக்குநன்மையைக்கருதுபவன்.

2 அன்புடையவன்; அல்லது, ஒத்தபிராயத்தையுடையநண்பன்.

3 காரணமிருத்தலால் பகைப்பவன்.

4 ஒருவனுடையபக்ஷத்தையும் சேராதவன்; அல்லது, விருப்புவெறுப்பு இரண்டற்கும் காரணமில்லாமையால் இரண்டும் அற்றவன்.

5 விரோதிகளான இரண்டுபக்ஷத்தாருக்கும் நன்மையை நாடுபவன்; அல்லது இயற்கையாகவே விருப்புவெறுப்பு இல்லாதவன்.

6 அப்ரியமானவன்; அல்லது, இயற்கையாகவேபகையானவன்.

7 உறவினன்; அல்லது, இயற்கையாகவே நன்மையைநாடுபவன்.

8 சாஸ்திரங்களில் கூறியபடிநடப்பவர்; அல்லது தர்மசீலர்கள்.

9 நூல்களால் விலக்கப்பட்டவற்றைச்செய்பவர்.

தும் ஒன்றின்மீதொன்ருகப்போடப்பட்டதுமான தர்ப்பம், மான் தோல், வஸ்திரம்இவைகளையுடைய ஸ்திரமானஆஸனத்தைத் தனக்காகஏற்படுத்திக்கொண்டு அந்தஆஸனத்தில் உட்கார்ந்து மனத்தை ஒரேநிலையில்நிறுத்தி மனத்தையும்இந்திரியங்களையும்இந்திரியவியாபாரங்களையும்அடக்கி அந்தக்கரணசுத்தியின்பொருட்டு யோகத்தைச் செய்யக்கடவன். யோகியானவன் சரீரம்தலைகழுத்துஇவைகளை ஸமமாகவும் அசைவற்றனவாகவும் தரித்துக்கொண்டு, [1]உறுதியுள்ளவனுக இருந்து, தன்மூக்குநுனியைப்பார்த்துக்கொண்டு திக்குக்களைப் பாராமல் மனத்தைமிக அடக்கிப் பயமற்றவனும் பிரம்மசர்யவிரதத்தில் நிலைபெற்றவனும் மனத்தை அடக்கி என்னிடத்திலேயே அம்மனதைச் செலுத்தினவனும் என்னையே நினைக்கிறவனுமாயிருக்கவேண்டும். இவ்வாறு மனத்தை எப்பொழுதும் (என்னிடத்தில்) சேர்த்தவனும் அசைவற்றமனமுடையவனுமானயோகியானவன் ஆனந்தத்தினுடையமேலானநிலைமையும் என்னிடத்தில் நிலைபெற்றதுமான சாந்தியை அடைகிருன். அர்ஜுன! தியானயோகமானது ஆகாரத்தை அதிகமாக உட்கொள்பவனுக்கும் ஸித்தியாது. முழுதும் உணவற்றவனுக்கும் ஸித்திபெருது; அதிகத்தூக்கத்தைஸ்வபாவமாகக் கொண்டவனுக்கும் ஸித்தியாது; எப்பொழுதும்விழித்திருக்கிறவனுக்கும் கைகூடாது. மிதமானஉணவு ஸஞ்சாரம்இவைகளையுடையவனும் அவசியமானஅளவு கார்யங்களைச்செய்கிறவனும் மிதமான தூக்கம்விழிப்பு இவைகளையுடையவனுமான மனிதனுக்குத்துக்கங்களைப்போக்குகிற ஸ்வபாவமுள்ளயோகமானது நிறைவேறுகிறது. எப்பொழுது மனம் நன்ருக அடக்கப்பட்டு ஆத்மாவினிடத்திலேயே அசைவற்றுநிற்குமோ அப்பொழுதுதான் எல்லாவிஷயங்களினின்றும்ஆசையைவிட்டவனுன அவன் யோகத்துக்குத்தகுந்தவனென்று கூறப்படுகிருன். மனத்தையடக்கி ஆத்மஸாக்ஷாத்காரத்தைச் செய்துகொண்டிருக்கிறயோகிக்குக் காற்றில்லாதஇடத்தில் அசைவற்றிருக்கிறதீபமானது உபமானமென்று எண்ணப்பட்டிருக்கிறது. யோகாப்யாஸபலத்தினுல் (வேறுவிஷயங்களில் செல்லாமல்) தடுக்கப்பட்டிருக்கிறமனம் எதில் மிக்கஆனந்தத்தை அடைகிறதோ, எதில் யோகியானவன் மனத்தினுலே ஆத்மஸ்வரூபத்தைஸாக்ஷாத்கரித்து ஆத்மாவினிடத்திலேயே ஸந்தோஷமடைகிருனே, எதில் இந்திரியங்களுக்கு அகோசரமும் புத்தியினுலே கிரஹிக்கத்தக்கதும் அந்தமில்லாததுமான ஸுகத்தை அறிகிருனே, எதில் நிலைபெற்றுத் தத்வத்

1 'ஸ்திரம்' என்னும்பாடம்; அதற்கு 'ஸ்திரமாகவும்' என்பதுபொருள்.

தினின்றுஅசையானோ, எதை அடைந்து அதைக்காட்டிலும்மேலான வேறுலாபத்தைக் கருதானோ, எதில் நிலைபெற்றுப் பெரியதுக்கத்தினாலும் அசைக்கப்படானோ துக்கஸம்பந்தத்தைவிட்டுவிலகினதான அதை யோகமென்றுபெயருள்ளதாக அறியவேண்டும். அந்தயோகமானது மனத்தில்களிப்புடன் நிச்சயமாக அநுஷ்டிக்கத்தக்கது. ஸங்கல்பத்தினாலுண்டாகிற எல்லாக்காமங்களையும் முழுதும்விட்டு மனத்தினாலேயே இந்திரியக்கூட்டத்தை எல்லாவிஷயங்களினின்றும் அடக்கி மெள்ளமெள்ளத் தைர்யத்துடன் கூடியபுத்தியினால்ஒழிவடைந்து மனத்தைஆத்மாவினிடத்தில்நிலைபெறச்செய்து வேறொன்றையும் நினைக்காமலிருக்கவேண்டும். சஞ்சலஸ்வபாவமுள்ளதும் நிலையற்றதுமான மனமானது எந்தஎந்தவிஷயங்களில் செல்லுகிறதோ அந்த அந்தவிஷயங்களினின்றும் அதைஅடக்கி ஆத்மாவினிடத்திலேயே வசப்பட்டிருக்கும்படிசெய்யவேண்டும். மிக்கசாந்தமானமனத்தையுடையவனும் பாவமற்றவனும் ரஜோகுணம்நசித்தவனும் பிரம்மமாயிருக்கின்றவனுமான இந்தயோகியை உத்தமமான ஸுகமானது நாடுகிறதன்றோ? இவ்வாறு எப்பொழுதும் மனத்தை யோகத்தில் செலுத்துகிறவனும் பாவங்களைநீக்கியவனுமானயோகியானவன் அளவற்றப்ரம்மாநுபவஸுகத்தை எளிதில்அடைகிறான். யோகத்தில் மனத்தைச்செலுத்தினவனும் எல்லாப்பிராணிகளிடத்திலும்ஸமமானஆத்மபாவனையுள்ளவனுமான யோகியானவன் ஆத்மாவை எல்லாவஸ்துக்களிலுமிருப்பவனும் ஸகலவஸ்துக்களையும் ஆத்மாவினிடமிருப்பனவுமாகப் பார்க்கிறான். எவன் என்னை எல்லாவஸ்துக்களிடத்திலும்பார்க்கிறானோ, எல்லாவஸ்துக்களையும் என்னிடத்தில் பார்க்கிறானோ அவனுக்கு யான் காணப்படாமலிரேன். அவனும் எனக்குக் காணப்படாமலிரான். எல்லாப்பிராணிகளிடங்களிலும் நிலைபெற்றிருக்கிற என்னை எந்தயோகியானவன் அபேதத்தைஆஸ்ரயித்து ஆராதிக்கிறானோ அந்தயோகியானவன் எவ்விதமிருந்தாலும் என்னிடத்திலேயே இருக்கிறான். ஓ! அர்ஜுன! எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸுகத்தையாவது துக்கத்தையாவது தன்னிடத்தில்போல ஸமமாகவே எவன் பார்க்கிறானோ அந்தயோகிதான் சிரேஷ்டனென்றெண்ணப்படுகிறான்' என்றுசொன்னார்.

அர்ஜுனன், 'மதுஸூதனரே! உம்மால் சொல்லப்பட்ட எல்லா இடத்திலும்ஸமதர்சனரூபமான யோகத்தினுடைய ஸ்திரமான நிலையை மனத்தினுடையசாஞ்சல்யத்தினால் நான் காணவில்லை. கிருஷ்ண! மனமானது ஓரிடத்திலும்நிலைத்திராததும் இந்திரியங்களைக்

கலங்கச்செய்கிறதும் அதிகபலமுள்ளதும் உறுதியானபற்றுள்ளதுமாயிருக்கிறதன்றோ? அந்தமனத்தை அடக்குவது காற்றைஅடக்குவதுபோல மிகவும்அஸாத்யமென்று நான் நினைக்கிறேன்' என்று சொன்னான்.

ஸ்ரீபகவான், 'நீண்டகைகளையுடையவனே! சஞ்சலமானமனமானது அடக்கமுடியாதது. ஸம்சயமில்லை. குந்தீபுத்ர! அப்யாஸத்தாலும் வைராக்யத்தாலும் அடக்கப்படுகிறது. அடக்கப்படாதமனத்தையுடையவனாலே யோகமானது அடையக்கூடியதன்றென்பது என்னுடையஎண்ணம். மனத்தைவசப்படுத்தி முயற்சிசெய்பவனாலோ உபாயத்தினாலே அடையத்தக்கது' என்றுசொன்னார்.

அர்ஜுனன், 'கிருஷ்ண! ஸ்ரத்தையுடன் யோகத்தில்பிரவேசித்து அதைப்பூர்த்திசெய்வதில்முயற்சியில்லாதவனாகி யோகத்திலிருந்துநழுவி விஷயத்தில்பிரவேசித்தமனத்தையுடையவன் யோகஸித்தியைப்பெறாமல் என்னகதியை அடைகிறான்? மிக்கபாகுபலமுள்ளவரே! கர்மயோகத்தில்நிலைபெறாமல் ப்ரம்மத்தை அடையும்வழியான யோகமார்க்கத்திலும் ஞானமற்று உபயபிரஷ்டனாயிருக்கிறவன் சிதறஅடிக்கப்பட்டமேகம்போல அழியாமலிருப்பனா? கிருஷ்ண! என்னுடையஇந்தஸம்சயத்தை முழுதும் போக்குவதற்கு நீர் தகுந்தவர். தேவரீரைத்தவிர மற்றவன் இந்தஸம்சயத்தை நிவ்ருத்திசெய்வானென்பது பொருந்தாதன்றோ?' என்றுகேட்டான்.

பகவான், 'பார்த்த! அந்தயோகப்ரஷ்டனுக்கு இம்மையிலும் மறுமையிலும் ஒருகாலும் கெடுதியுண்டாகாது. அப்பா! நல்லகாரியத்தைச்செய்தஒருவன் ஒருகாலும் கெடுதியடையமாட்டான். யோகத்தினின்றும்தவறியவன் புண்ணியஞ்செய்தவர்களுக்குரியஉலகங்களையடைந்து (அங்கு) அநேகவருஷகாலம்வஸித்து நல்லொழுக்கமுள்ளவர்களான ஸ்ரீமான்களுடையவீட்டில் பிறக்கிறான். அல்லது ஞானிகளான யோகிகளுடையகுலத்திலேயே பிறக்கிறான். உலகத்தில் இப்படிப்பட்டபிறப்பை அடைவது மிகஅரிது. குருநந்தன! அந்தஜன்மத்தில் பூர்வதேகத்திலுண்டான அந்தப்புத்திஸம்பந்தத்தைப் பெறுகிறான். பிறகு மறுபடியும் யோகஸித்தியை அடைவதின்பொருட்டு முயற்சிசெய்கிறான். உடன்படாதவனாயிருந்தாலும் அந்தப்பூர்வாப்பியாஸத்தினாலேயே அவன் பலாத்காரமாக இழுக்கப்படுகிறான். யோகஸ்வரூபத்தை அறியவிருப்பமுள்ளவனானாலும் (தேவன் மனிதன், பூமி, ஆகாயம், ஸ்வர்க்கமுதலான) [1]சப்தங்களால்வ்ய

[1] 'சப்தப்ரம்ம' என்பதுமூலம்; (ச-ம்) வேதோக்தகர்மானுஷ்டானபலம்.

வஹரிக்கத்தக்கப்ரக்ருதியை அதிக்ரமிக்கிறான். முயற்சியினால்யோ காப்பியாஸம்செய்யும்யோகியானவன் அநேகஜன்மங்களால் நல்ல ஸித்தியை அடைந்தவனாகிப் பிறகு உத்தமமானகதியை அடைகிறான். அர்ஜுன! யோகியானவன், தபஸ்விகள் ஞானிகள் (அஸ்வமேதமுத லான) கர்மங்களை அனுஷ்டிப்பவர்கள் இவர்களெல்லோரையுங்காட்டி லும் மேலானவனாக எண்ணப்படுகிறான். ஆதலால் நீ யோகியாகக் கடவாய். எல்லாயோகிகளுள்ளும் எவன் என்னிடத்திலேயே மன த்தை நிலைநிறுத்தி ஶ்ரத்தையுடன் என்னை உபாஸிக்கிறானோ அவன் மிகவும்சிறந்தவனென்பது என்கருத்து.

---

## முப்பத்தோராவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)

## பகவத்கீதை.

### ஏழாவது அத்யாயம்.

### ([1] ஞானயோகம்.)

பார்த்த! என்னிடத்தில் பற்றுள்ளமனத்தையுடையவனும் என்னையே ஆதாரமாகப்பற்றினவனும் யோகாப்யாஸம்செய்யமுயன் றவனுமானநீ என்னை ஸம்பூர்ணமாக ஸம்சயமின்றி எதனால்அறி வாயோ அந்தஞானத்தைக் கேள். எதையறிந்தால் மீண்டும் என்னி டத்திலிருந்து அறியத்தக்கது வேறொன்றும் மிச்சமிராதோ அப்படிப் பட்ட [1]விஜ்ஞானத்துடன்கூடினஞானத்தை மிச்சமின்றி யான் உனக் குச்சொல்லப்போகிறேன். மனிதர்களுள் ஆயிரத்தில்ஒருவன் ஸித்தி யின்பொருட்டுமுயற்சிக்கிறான். முயற்சித்துஸித்திபெற்றவர்களான ஆயிரவர்களுள்ஒருவன் என்னை உள்ளபடியறிகிறான். என்னுடைய இந்தப்ரகிருதியானது பூமி, ஜலம், அக்னி, காற்று, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம்என எட்டாகப் பிரிந்திருக்கிறது. மிக்கதோள் வன்மையுள்ளவனே! இந்தப்பிரகிருதியானது அப்ரதானமாயுள்ளது. எந்தப்ரகிருதியினால் இவ்வுலகம் தாங்கப்பட்டிருக்கிறதோ இதைக் காட்டிலும்சிறந்ததும் ஜீவஸ்வரூபமுமான என்னுடைய அந்த வே

---

[1] பரமஹம்ஸவிஜ்ஞானயோகம்என்றும் விஜ்ஞானயோகம்என்றும்ஞான விஜ்ஞானயோகம் என்றும் வழங்கும்.

2 (ச-ம்) ஸ்வானுபவம். 3 (ரா-ம்) விவிக்தாகாரவிஷயகஜ்ஞானம்.

றெருப்ரகிருதியையும் நீ தெரிந்துகொள். எல்லாப்பூதங்களும் இவ்விரண்டுவிதமானப்ரகிருதிகளைக் காரணமாகக் கொண்டிருக்கின்றனவென்று நீ அறி. யான் எல்லாவுலகங்களுக்கும் உத்பத்திகாரணமும் அவ்வாறே லயத்திற்குக்காரணமுமாயிருக்கிறேன். ஓ! தனஞ்சய! என்னைக்காட்டிலும்சிறந்தது வேறொன்றுமில்லை. நூலில் மணிகளுடையகூட்டங்கள் கோக்கப்பட்டிருப்பதுபோல என்னிடத்தில் இவை அனைத்தும் கோக்கப்பட்டிருக்கின்றன. குந்திபுத்திர! நான் ஜலத்தில் ரஸமும் சந்திரசூரியர்களிடத்தில் ஒளியும் எல்லாவேதங்களிலும் ப்ரணவமும் ஆகாயத்தில் சப்தமும் மனிதர்களிடத்தில் பௌருஷமுமாயிருக்கிறேன். நான் பூமியில் பரிசுத்தகந்தமும் அக்னியினிடத்தில் ஒளியும் எல்லாப்பிராணிகளிடத்திலும் உயிரும் தபஸ்விகளிடத்தில் தவமுமாயிருக்கிறேன். பார்த்த! சாஶ்வதனாயிருக்கிறஎன்னை எல்லாப்பிராணிகளுக்கும்வித்தாக அறி. புத்திசாலிகளுடையபுத்தியும் தேஜஸ்விகளுடையதேஜஸுமாக நான் இருக்கிறேன். பாரதகுலத்தில்பிறந்தவர்களுள்உத்தமனே! பலசாலிகளுடைய காமத்தாலும் ராகத்தாலும்விடுபட்டிருக்கிறபலமும் பிராணிகளிடங்களில் தர்மத்துக்குவிரோதமில்லாதகாமமுமாக நான் இருக்கிறேன். எந்தவஸ்துக்கள் ஸத்வகுணத்தால்உண்டானவைகளோ, எவைகள் ரஜோகுணத்தால்உண்டானவைகளோ, எவைகள் தமோகுணத்தால் உண்டானவைகளோ அவைகளை என்னிடத்தினின்றே உண்டானவைகளென்று நீ அறி. நான் அவைகளில் இருக்கவில்லை. அவைகளோ என்னிடத்தில் நிலைபெற்றிருக்கின்றன. குணமயமானஇந்த மூன்றுபதார்த்தங்களாலே மதிமயங்கியிருக்கிறஇந்தப்பிரபஞ்சமனைத்தும் இவைகளைக்காட்டிலும்வேறாகவும் அழிவற்றவனாகவுமிருக்கிற என்னை அறிகிறதில்லை. முக்குணமயமானதும் தேவனானஎன்ஸம்பந்தம்பெற்றதுமான என்னுடைய இந்தமாயையானது ஒருவராலும் தாண்டக்கூடாதது. என்னையே எவர்கள் சரணமடைகிறார்களோ அவர்கள் இந்தமாயையைத் தாண்டுகிறார்கள். பாவிகளும் மூடர்களும் மாயையினாலேகவரப்பட்ட ஆத்மஞானத்தையுடையவர்களும் ஆஸுரஸ்வபாவத்தைநாடினவர்களுமான கீழ்மக்கள் என்னைச் சரணமடைகிறதில்லை. பாரதகுலத்தில்பிறந்தவர்களுள்சிறந்தவனே! அர்ஜுன! வியாதியினால்வருந்துகிறவன், என்ஸ்வரூபத்தை அறியஇச்சிக்கிறவன், ஐஶ்வரியத்தில்விருப்பமுள்ளவன், ப்ரம்மஞானிஇந்தநான்குவிதபுண்ணியசாலிகளானஜனங்களும் என்னைப் பஜிக்கிறார்கள். அவர்களுள் எப்பொழுதும் என்னுடையஸம்பந்தம்பெற்றவனும் என்னிடத்

திலேயேபக்தியுள்ளவனுமானஞானியே சிறந்தவன். அந்தஞானிக்கு நான் மிகவும்பிரியமானவன். அவனும் எனக்குப்பிரியன். இவர்கள் எல்லோருமே உதாரர்கள். ஞானியோஎன்றால் நானென்பதே என்னுடையஎண்ணம். ஏனெனில், அவன் என்னிடத்திலேயேமனத்தைச் சேர்த்தவனும் என்னையேமிகஉத்தமமானகதியென்று அடைந்தவனுமாயிருக்கிறான். அனேகஜன்மங்கள்எடுத்தபிறகு யாவும்வாஸு தேவஸ்வரூபமென்கிறஞானமுடையவன் என்னை அடைகிறான். அப்படிப்பட்டமகாபுருஷன் கிடைக்கமிகஅரியவன். (மனிதர்கள்) தங்களுடையப்ராகிருதியினால்ஏவப்பட்டு அந்தஅந்தக்காமங்களாலேகவரப்பட்டஞானத்தையுடையவர்களாகி அந்தஅந்தநியமத்தைஆஶ்ரயித்து இதரதேவதைகளைப் பஜிக்கின்றனர். எந்தஎந்தப்பக்தன் (என்னுடைய) எந்தஎந்தச்சரீரத்தை ஶ்ரத்தையுடன் பூஜிப்பதற்குவிரும்புகிறானோ அந்தஅந்தப்பக்தனுக்கு அந்தஅந்தஶ்ரத்தையையே ஸ்திரமாக நான் ஏற்படுத்துகிறேன். அவன்அந்தஶ்ரத்தையோடு அந்தத்தேவதையினுடையஆராதனத்தைச்செய்யவிரும்புகிறான். என்னாலேயேஏற்படுத்தப்பட்டஅவ்விதமானஅபீஷ்டங்களை அந்தத்தேவதையினிடத்தினின்று அடைகிறான். அல்பபுத்தியுள்ளஅவர்களுக்கு அதனாலுண்டாகும் பயன் முடிவையுடையதாகவேஆகிறது. ஏனெனில், இதரதேவர்களை ஆராதிக்கின்றவர்கள் இதரதேவர்களை அடைகிறார்கள். என்னுடைய பக்தர்களோ என்னையேஅடைகிறார்கள். அழிவில்லாததும் ஸர்வோத்தமமும் லோகவிலக்ஷணமுமான என்னுடையஸ்வரூபத்தை அறியாதவர்களானஅறிவீனர்கள் என்னை முன்பு கண்ணுக்குப்புலப்படாதவனென்றும் இப்பொழுது கர்மவசத்தினாலே ஜன்மவிசேஷத்தைப்பெற்றுப் பிரகாசத்தைஅடைந்திருக்கின்றவனென்றும் நினைக்கிறார்கள். யோகமாயையினாலே மறைக்கப்பட்டிருக்கிறயான் எல்லோருக்கும் விளங்குவதில்லை. (ஆதலால்) விவேகமற்றஇவ்வுலகம் என்னைப் பிறப்பற்றவனென்றும் அழிவில்லாதவனென்றும் அறிகிறதில்லை. ஓ! அர்ஜுன! நான், சென்றவைகளும் தற்காலத்தில்இருக்கின்றவைகளும் இனிவருபவைகளுமான பூதங்களை அறிவேன். என்னையோ ஒருவனும் அறியான். பரதகுலத்தில்உதித்தவனே! சத்ருக்களைத்தபிக்கச் செய்பவனே! ராகத்வேஷங்களாலேஉண்டான த்வந்துவநிமித்தமான மோகத்தினாலே எல்லாப்பிராணிகளும் பிறக்கும்பொழுதே மிக்கமயக்கத்தை அடைகின்றன. புண்ணியகர்மங்களையுடையவர்களான எந்த ஜனங்களுக்குப் பாவமான து நசித்ததோ அவர்கள் ஸுகதுக்கமுதலிய த்வந்துவமோகத்தினின்று விடுபட்டு உறுதியானவிரதத்துடன்

என்னைப்பஜிக்கிறார்கள். எவர்கள் என்னை ஆஸ்ரயித்து மூப்பு சாவு இவ்விரண்டினின்றும்விடுபடமுயற்சிக்கிறார்களோ அவர்கள் அந்தப் பிரம்மத்தையும் ஸகலமான [1]அத்யாத்மத்தையும் எல்லாக்கர்மத்தையும்அறிகிறார்கள். எவர்கள் என்னை அதிபூதத்துடனும் அதிதெய்வத்துடனும் அதியஜ்ஞத்துடனும்கூடியவனாகஅறிகிறார்களோ அவர்கள் மரணகாலத்திலும் என்னிடத்தில் மனத்தைச் சேர்த்தவர்களாக என்னைஅறிகிறார்கள்' என்றுகூறினார்.

---

## முப்பத்திரண்டாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)

### பகவத்கீதை.

### எட்டாவது அத்யாயம்.

### ([2] தாரகப்ரம்மயோகம்.)

அர்ஜுனன், 'புருஷோத்தமரே! அந்தப்பிரம்மமென்பது யாது? அத்யாத்மம்என்பது யாது? கர்மமென்பது யாது? அதிபூதமென்றுசொல்லப்பட்டதும் யாது? எது அதிதெய்வமென்றுசொல்லப்படுகிறது? ஓ! மதுஸூதனரே! இந்தத்தேகத்தில் அதியஜ்ஞன் யார்? அவன் எப்படிப்பட்டவன்? மனத்தை அடக்கினவர்களாலே மரணகாலத்தில் எவ்வாறு நீர் அறியத்தக்கவராகிறீர்?' என்றுகேட்டான்.

ஸ்ரீபகவான், 'பிரகிருதியினின்றுவிடுபட்டிருக்கிற அழிவற்ற உத்தமமான ஆத்மஸ்வரூபம் பிரம்மமென்றுசொல்லப்படுகிறது. ஸ்வபாவமானது (பிரகிருதி) அத்யாத்மமென்றுசொல்லப்படுகிறது. மனிதர்முதலியபிராணிகளுடையஉற்பத்திக்குக்காரணமான [3]விஸர்க்கமானது கர்மமென்றுசொல்லப்படுகிறது. தேகமுடையவர்களுள் உத்தமனே! அழிவுள்ளவஸ்துவானது அதிபூதமெனச் சொல்லப்படுகிறது. புருஷன் அதிதெய்வதமென்று சொல்லப்படுகிறான். இந்தத்தேகத்தில் அந்தர்யாமியாயிருக்கிறநானே அதியஜ்ஞனென்று சொல்லப்படுகிறேன். எவன் மரணகாலத்தில் என்னையேநினைத்துக்

---

1 (ச-ம்) ப்ரத்யகாத்மவிஷயமானவஸ்து. (ரா-ம்) ப்ரகிருதி.

2 அக்ஷரபரப்ரம்மயோகமென்றும் அக்ஷரப்ரம்மயோகமென்றும் வழங்கும்.

3 'யஜ்ஞம்' என்றும், 'இந்திரியஸேகம்' என்றும்பொருள்கூறுவர்.

கொண்டு சரீரத்தைவிடுகிறானோ அவன் என்னுடைய [1]தன்மையை அடைகிறான். இந்தவிஷயத்தில் ஸம்சயமில்லை. குந்தீபுத்திர! மனிதன் நிர்யாணகாலத்தில் எந்தஎந்தரூபத்தைநினைத்துக்கொண்டு சரீரத்தைவிடுகிறானோ எப்பொழுதும் அந்தஅந்தரூபத்தின் ஸ்மரணமே உடையவனாகி அந்தஅந்தரூபத்தையே அடைகிறான். ஆதலால், எக்காலத்திலும் என்னையே நீ ஸ்மரித்துக்கொண்டிரு. யுத்தமும் செய். மனத்தையும்புத்தியையும்என்னிடத்தில்வைப்பதனால் என்னையே அடைவாய்; ஸம்சயமில்லை. பார்த்த! அப்யாஸமும் த்யானமுமுள்ளதும் வேறுவிஷயங்களில் பிரவேசமற்றதுமான மனத்தினாலே நினைப்பவன் [2]திவ்யனானபரமபுருஷனை அடைகிறான். எவன் பக்தியும் யோகபலமுமுள்ளவனாகி அசைவற்றமனத்தினாலே நிர்யாணகாலத்தில்இரண்டுபுருவங்களினிடையில் ப்ராணவாயுவை நன்குநிலைநிறுத்தி, ஸர்வஜ்ஞனும் அநாதிகாலமாயிருக்கிறவனும் (ஸகலமானபிரபஞ்சத்தையும்) தன்னாஜ்ஞையினால் அடக்கிஆளுகிறவனும் அணுவைக்காட்டிலும் அணுவாயிருக்கிறவனும் எல்லாப்பிரபஞ்சங்களையும்ஸ்ருஷ்டிக்கிறவனும் மனத்தினால்எண்ணவுமுடியாதரூபமுள்ளவனும் சூரியனைப்போலவிளங்குகிறவனும் பிரகிருதியைக்காட்டிலும்அப்புறத்திலிருக்கிறவனுமான பரமபுருஷனைத் தியானம்செய்வனோ அவன் திவ்யஸ்வரூபியான அந்தப்பரமபுருஷனை அடைகிறான். வேதங்களை அறிந்தவர்கள் எதை அழிவற்றதாகச் சொல்லுகிறார்களோ, விஷயவிருப்பமற்றயதிகள் எதில் பிரவேசிக்கிறார்களோ, எதைஅடையவிருப்பமுள்ளவர்கள் பிரம்மசர்யத்தை அநுஷ்டிக்கிறார்களோ என்னுடைய அந்தப் [3]பதத்தை உனக்கு நான் சுருக்கமாகஉரைப்பேன். எவன் எல்லாஇந்திரியத்வாரங்களையும்அடக்கி மனத்தைஹ்ருதயத்திலுள்ள என்னிடத்தில் நிறுத்திச் சிரஸில்தன்னுடையபிராணனைவைத்து ஸ்திரமானயோகநிலையை அடைந்து பிரம்மத்தைச்சொல்லுவதான, 'ஓம்' என்கிற ஓர் அக்ஷரத்தைஉச்சரித்து என்னையேதியானம்செய்துகொண்டு, தேகத்தைவிட்டுச் செல்லுகிறானோ அவன் சிறந்தகதியை அடைகிறான். பார்த்த! எவன் எப்பொழுதும் வேறிடத்தில்மனம்பற்றாமல் பிரதிதினமும் என்னையே நினைக்கிறானோ நித்யயோகத்தை விரும்பின அந்தயோகிக்கு நான் பிரயாஸமின்றி அடையத்தக்கவன்.

---

1 'பாவ꞉' என்பதுமூலம்; (ச-ம்) வைஷ்ணவம் தத்வம். (ரா-ம்) எந்தரூபமாகஸ்மரிக்கிறானோஅந்தரூபத்தை.

2 (ச-ம்) ஸூர்யமண்டலவர்த்தியான.

3 (ரா-ம்) என்னுடையஸ்வரூபம்.

சிறந்தஸித்தியை அடைந்தமகாத்மாக்கள் என்னையடைந்து மறுபடியும் துக்கங்களுக்குஇருப்பிடமும் நிலையற்றதுமானபிறப்பை அடையார். அர்ஜுன! பிரம்மலோகபரியந்தமுள்ள எல்லாஉலகங்களும் அடிக்கடிதோன்றுவதும் அழிவதுமாயிருக்கின்றன. குந்திபுத்திர! என்னை அடைந்தவர்களுக்கோ மீண்டும் பிறப்புக்கிடையாது. (மனிதன்முதல் நான்முகன் ஈறுகவுள்ள எல்லாப்பிராணிகளுக்கும் என்னால் ஏற்படுத்தப்பட்டிருக்கிற) பகல் இரவுகளின்பாகுபாடுகளை அறிந்தஜனங்கள், பிரம்மதேவரின்பகல் ஆயிரம் சதுர்யுகங்களையும் இரவு ஆயிரம்சதுர்யுகங்களையும் முடிவாகக்கொண்டவையென்று அறிகிறார்கள். அந்தநான்முகனுடையபகல்வரும்பொழுது பிரத்யக்ஷமாகக்காணப்படும்ஸ்தூலபிரபஞ்சங்கள் அனைத்தும் அவ்யக்தத்தினின்று உண்டாகின்றன; ராத்ரிவரும்பொழுது அவ்யத்தமென்றுபெயர்கொண்ட அந்தநான்முகனுடையதேகத்திலேயேஒடுங்குகின்றன. பார்த்த! அப்படிப்பட்ட இந்தப்பூதஸமூகமே பாவசமாயிருந்துகொண்டு பகல்வரும்பொழுது தோன்றுகிறது; இரவுவரும்பொழுது அழிகிறது; இவ்விதம் தோன்றித்தோன்றி அழிகிறது. எது அசேதனப்ராக்ருதிரூபமான அந்த அவ்யக்தத்தைக்காட்டிலும்சிறந்ததும் அதைக்காட்டிலும் விலக்ஷணமும் ஒருவிதமானப்ராமாணத்தாலும்புலப்படாததும் நித்யமுமாயிருக்கிறதோ எந்த அந்த அக்ஷரஸ்வரூபமானது எல்லாப்பூதங்களும்அழியும்போதும் அழிவதில்லையோ அது அவ்யக்தமென்றும் அக்ஷரமென்றும் சொல்லப்படுகிறது. அதை ஸர்வோத்தமமான கதியென்று சொல்லுகிறார்கள். எதைஅடைந்து மீண்டும் திரும்பமாட்டார்களோ மிகவும்உத்தமமான அந்தஸ்தானமானது என்னுடையது. பார்த்த! பூதங்கள் எவனுள்ளிருக்கின்றனவோ, எவனால் இந்தப்பிரபஞ்சமுழுதும் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ அந்தப்பரமபுருஷன் வேறிடத்தில்பற்றுதலில்லாதபக்தியினால் அடையத்தக்கவன். பரதஸ்ரேஷ்ட! எந்தமார்க்கத்தில்செல்லுகிறயோகிகள் திரும்பாமலிருத்தலையும் திரும்பிவருதலையும் அடைகிறார்களோ அந்த [1]மார்க்கத்தைஉரைப்பேன். அக்நியபிமானிதேவதை, பிரகாசத்திற்குஅபிமானிதேவதை, பகலுக்குஅபிமானிதேவதை, சுக்லபக்ஷாபிமானிதேவதை, ஆறுமாதங்களடங்கியஉத்தராயணத்திற்கு அபிமானிதேவதை ஆகிய இவர்கள்வஸிக்கும்உலகங்களின்வழியாகச்செல்லுகிற பிரம்மவித்துக்களானஜனங்கள் பிரம்மத்தை அடைகிறார்கள். புகைக்குஅபிமானிதேவதை, இராக்காலத்திற்குஅபிமானிதேவதை, அவ்வாறேகிருஷ்ண

1 'காலம்' என்பதுமூலம்.

பக்ஷாபிமானிதேவதை, ஆறுமாதங்களடங்கிய தக்ஷிணாயனாபிமானி தேவதை ஆகியஇவர்களுக்குவாஸஸ்தானங்களான உலகங்களின்வழியாகச்செல்லுகிறயோகியானவன் சந்திரப்ரகாசத்துடன்கூடின ஸ்வர்க்கலோகத்தையடைந்து திரும்புகிறான். இந்தஇரண்டுகதிகள் ஞானிகள்கர்மிகளென்கிறஅதிகாரிகளடங்கிய உலகத்துக்கு நிலையானவையென்று எண்ணப்பட்டிருக்கின்றன. ஒருவழியினால்செல்பவன் மீண்டும் ஸம்ஸாரத்தில் திரும்புகிறதில்லை. மற்றொருவழியினால்செல்பவன் மறுபடியும் ஸம்ஸாரமார்க்கத்தில் திரும்பிவருகிறான். பார்த்த! இவ்விரண்டுமார்க்கங்களையும் அறிந்தயோகி ஒருவனாவது மோகத்தையடையான். அர்ஜுன! ஆதலால், எல்லாக்காலங்களிலும் அர்ச்சிராதிமார்க்கத்தைச்சிந்தித்தலாகிற யோகத்துடனிருப்பாயாக. யோகியானவன் இதையறிந்து வேதங்களிலும் யஜ்ஞங்களிலும் தவங்களிலும் தானத்திலும் எந்தப்புண்ணியபலன் சொல்லப்பட்டிருக்கிறதோ அது முழுமையையும் அதிக்ரமிக்கிறான்; சிறந்ததும் ஆதிகாரணமுமான ஸ்தானத்தையும் அடைகிறான்.

---

## முப்பத்துமூன்றாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)

## பகவத்கீதை.

### ஒன்பதாவது அத்யாயம்.

### (ராஜவித்யா ராஜகுஹ்யயோகம்.)

நீ எதைஅறிந்தால் அமங்களமான ஸம்ஸாரபந்தத்தினின்று விடுபடுவாயோ அப்படிப்பட்ட அதிரஹஸ்யமாயிருப்பதும் விஜ்ஞானத்துடன்கூடியதுமான இந்தப்ரம்மஞானத்தை அஸூயையற்றவனானஉனக்குச் சொல்லுகிறேன். இந்தஞானமானது வித்தைகளுளெல்லாம் சிறந்தது; ரஹஸ்யங்களுளெல்லாம் சிறந்தது; மிக்கபரிசுத்தமானது; பிரத்யக்ஷமாகஅறியத்தக்கது; தர்மத்தினின்று விலகாதது; பிரயாஸமின்றி ஸுகமாகச்செய்யத்தக்கது; குறைவற்றது. சத்துருக்களைத்தபிக்கச்செய்பவனே! இந்தத்தர்மத்தில் சிரத்தையில்லாதமனிதர்கள் என்னையடையாமல் மிருத்யுஸ்வரூபமான ஸம்ஸாரமார்க்கத்தில் திரும்புகிறார்கள். அப்ரகாசமானஸ்வரூபத்துடன்கூடின என்னாலே இப்பிரபஞ்சமனைத்தும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. [1]ஸகல

---

1 'அவைகள் என்னால் நிலைபெறுகின்றன; நான் அவைகளால் நிலைபெறவில்லை' என்பது கருத்து.

பூதங்களும் என்னிடத்தில் நிலைபெற்றிருக்கின்றன. அந்தப்பூதங்களிடத்தில் நான் நிலைபெற்றிருக்கவில்லை. பூதங்கள் என்னிடத்திலிருப்பவையுமல்ல. ஸர்வேஸ்வரனான என்னுடைய யோகமகிமையைப் பார். பூதங்களை நான் வகிக்கிறேன்; நான் பூதங்களை ஆதாரமாகக் கொண்டிருக்கவில்லை. மனோமயமான என்னுடையஸங்கல்பமானது பூதங்களை நிலைபெறும்படிசெய்கிறது. எல்லா இடத்திலும்செல்லுகின்றபெரியவாயுவானது எப்பொழுதும் எவ்வாறு ஆகாயத்தில் நிலைபெற்றிருக்கிறதோ அவ்வாறே எல்லாப்பூதங்களும் என்னிடத்தில் நிலைபெற்றிருக்கின்றனவென்று நீ அறிந்துகொள். குந்திபுத்ரா! எல்லாப்பிராணிகளும் கல்பம்முடியுங்காலத்தில் என்னுடைய பிரகிருதியை அடைகின்றன. அந்தப்பூதங்களையே கல்பாதியில் மறுபடியும் நான் ஸ்ருஷ்டிக்கிறேன். என்னுடையபிரகிருதியை ஆதாரமாகக் கொண்டு பிரகிருதிக்குவசப்பட்டிருத்தலால் பரவசமாயிருக்கிற இந்தப்பூதஸமூகம் அனைத்தையும் அடிக்கடி ஸ்ருஷ்டிக்கிறேன். தனஞ்சய! அப்படிப்பட்டவிஷமஸ்ருஷ்டிமுதலான கர்மங்கள் ஸம்பந்தமற்றவனைப்போலிருக்கின்றவனும் அக்கர்மங்களில்பற்றுதலற்றவனுமானஎன்னைக் கட்டுப்படுத்துகிறதில்லை. குந்திபுத்திர! பிரகிருதியானது அத்யக்ஷனானஎன்னால் (பார்க்கப்பட்டுச்) சராசராத்மகமானஉலகத்தை உண்டுபண்ணுகிறது. இக்காரணத்தினாலே உலகம் சுழன்றுகொண்டுவருகின்றது. என்னுடையஉத்தமமான பரமாத்மதத்வத்தை அறியாதமூடர்கள் பூதங்களுக்கெல்லாம்மஹேஸ்வரனாக இருப்பவனும் (எல்லாப்பிராணிகளும்என்னை ஆஸ்ரயிப்பதின்பொருட்டு) மனுஷ்யதேகத்தைத்தரித்தவனுமாயிருக்கின்ற என்னை (ஸாமான்யமான மனிதனாகஎண்ணி) அவமதிக்கிறார்கள். மயக்கத்தையுண்டுபண்ணுகின்றதன்மையுள்ளதும் ஆஸுரமும் ராக்ஷஸமுமானப்ரக்ருதியைஆஸ்ரயித்தவர்கள் வீணான ஆசையையுடையவர்களும் பயனற்றகர்மங்களையுடையவர்ளும் வீணானஞானத்தையுடையவர்களும் புத்தியையிழந்தவர்களுமாகின்றார்கள்.

பார்த்த! தேவஸம்பந்தம்பெற்ற பிரக்ருதியை ஆஸ்ரயித்தவர்களானமஹாத்மாக்களோவென்றால் என்னை ப்ரபஞ்சத்திற்கு ஆதியாயிருக்கின்றவனென்றும் அழிவற்றவனென்றும்அறிந்து வேறிடத்தில்மனத்தைச் செலுத்தாதவர்களாகி என்னையேபஜிக்கின்றார்கள். என்னுடன்நித்யஸம்பந்தத்தைவிரும்புகின்றவர்கள் எப்பொழுதும் என்னைச்சொல்லுகின்றவர்களும் முயற்சியுள்ளவர்களும் திடமான விரதமுள்ளவர்களும் பக்தியோடுஎன்னைநமஸ்கரிக்கின்றவர்க

ளுமாக என்னையே உபாஸிக்கின்றார்கள். [1](கீர்த்தனாதிகளாலும்)ஞான யஜ்ஞத்தினாலும் ஆராதிக்கின்றவர்களானமற்றும்சிலர் வெகுவிதமாக வும் தனித்தனியாகவும் ஜகத்ஸ்வரூபியாயிருக்கிறஎன்னை ஒருவனாக எண்ணி உபாஸிக்கின்றார்கள். நான் ஜ்யோதிஷ்டோமாதிரூபமான க்ரது. நான் யஜ்ஞம். நான் ஸ்வதாஎன்கிறமந்திரம். நான் ஔஷதம். மந்திரமும் நானே. நானே நெய். நான் அக்னி. நான்ஹோமம். நான் இந்தஉலகத்துக்குத்தந்தையாகவும் தாயாகவும் போஷகனாகவும் பிதா மஹனாகவுமிருப்பவன். வேதத்தாலறியத்தக்கதும் பரிசுத்தமுமான வஸ்து எதுவோ அதுவும் நானே ஓங்காரமும் ரிக்கும் ஸாமமும் யஜுஸும் நானே. அடையத்தக்கவனும் போஷகனும் ப்ரபுவும் ஸாக்ஷியும் இருப்பிடமும் ரக்ஷகனும் ஹிதத்தைச்செய்பவனும் ஸ்ரு ஷ்டிகர்த்தாவும் ஸ்திதிகர்த்தாவும் நாசத்தைச்செய்பவனும் ப்ரபஞ்சம னைத்தும்லயமடையும்ஸ்தானமும் அழிவற்றகாரணவஸ்துவும் நானே. அர்ஜுன! நானே தாபத்தை உண்டுபண்ணுகிறேன். நானே மழையை த்தடுத்துக்கொண்டிருக்கிறேன். நானே மழையைப்பொழிகிறேன். நானே உலகம்ஜீவித்திருக்கவும் அழியவும் காரணமானவன். மேலும் ஸத்தானவஸ்துவும், அஸத்தானவஸ்துவுமாகிய அவ்விரண்டும்நானே. மூன்றுவேதங்களை அறிந்தவர்கள் யஜ்ஞங்களால் என்னை ஆராதித்து ஸோமரஸத்தைப்பானம்செய்தவர்களும் பாபத்தினின்றுவிடுபட்டவர் களுமாகி ஸ்வர்க்கலோகத்தை விரும்புகிறார்கள். அவர்கள் புண்ணிய பலமான இந்திரலோகத்தைநாடி அவ்விடத்தில் திவ்யமானதேவபோ கங்களை அனுபவிக்கின்றார்கள். அவர்கள் விஸ்தீர்ணமான அந்தஸ்வர்க் கலோகத்தை அனுபவித்துப் புண்ணியம்குறைந்தவுடனே மனித லோகத்தை அடைகிறார்கள். இவ்விதமான வேதோக்ததர்மங்களை அனுஸரித்தவிஷயேச்சையுள்ளவர்கள் போக்குவரவை(பிறப்பிறப்பை) அடைகிறார்கள். எந்தஜனங்கள் என்னைச்சிந்திப்பதைத்தவிர வேறு பிரயோஜனத்தைக் கருதாதவர்களாக என்னையேசிந்தித்துக்கொண்டு உபாஸிக்கிறார்களோ எப்பொழுதும் என்னை உபாஸிப்பதிலேயே நோக்கமுள்ள அவர்களுடையயோகக்ஷேமங்களை நான்வஹிக்கிறேன். குந்திபுத்ர! எவர்கள் வேறுதேவதைகளிடம் பக்தியுள்ளவர்களா கச் சிரத்தையோடு அந்தஇந்திராதிதேவதைகளை உபாஸிக்கின்றார் களோ அவர்களும் முறைதவறி என்னையே ஆராதிக்கின்றார்கள். நான்

---

[1] (ச. ம்)ஞானயஜ்ஞத்தினால் ஆராதிக்கின்றவர்களானமற்றும்சிலர் என்னை ஒருவனென்றும் ஸூர்யசந்த்ராதிரூபமாகத் தனித்தனியாயிருப்பவனென்றும் விஸ்வரூபியென்றும் பலவாறாக உபாஸிக்கிறார்கள்.

அல்லவோ ஸர்வயஜ்ஞங்களையும் அனுபவிக்கின்றவனும் பிரபுவுமாக இருப்பவன். என்னை (அவிவேகிகள்) உள்ளபடி அறியார்கள். ஆதலால் அவர்கள் (ஜனனமரணமார்க்கத்தில்) நழுவிவிழுகிறார்கள். தேவதைகளை உத்தேசித்து விரதங்களை அனுஷ்டிப்பவர்கள் தேவர்களை அடைகிறார்கள். பித்ருக்களைக்குறித்து விரதங்களை அனுஷ்டிப்பவர்கள் பித்ருக்களை அடைகிறார்கள். பூதங்களைஉபாஸிக்கின்றவர்கள் பூதங்களை அடைகிறார்கள். என்னைப்பூஜிக்கின்றவர்களோ என்னை அடைகின்றார்கள். எவன் என்பொருட்டுப் பத்ரத்தையாவது புஷ்பத்தையாவது பழத்தையாவது ஜலத்தையாவது பக்தியோடு கொடுக்கிறானோ பரிசுத்தமான அந்தக்கரணமுள்ள அந்தப்பக்தனுடைய பக்தியினால்கொடுக்கப்பட்ட அந்தப்பத்ரபுஷ்பாதிகளை நான் அனுபவிக்கிறேன். கௌந்தேய! நீ எதைச் செய்கிறாயோ, எதைப் புஜிக்கிறாயோ, எதை ஹோமம்செய்கிறாயோ, எதைத் தானம்செய்கிறாயோ, எந்தத்தவத்தைச் செய்கிறாயோ அதை எனக்கு அர்ப்பணம்செய். இவ்விதம் (கர்மங்களை என்னிடத்தில்ஒப்பித்தல்என்கிற) ஸந்யாஸயோகத்தோடுசேர்ந்த அந்தக்கரணத்துடன்கூடியநீ சுபாசுபபலங்களோடுகூடின பிராசீன கர்மபந்தங்களினின்றும் விடுபடுவாய். (அவ்வாறு) விடுபட்டநீ என்னையேஅடைவாய். நான் எல்லாப்பிராணிகளிடமும் ஸமமாயிருக்கிறவன். எனக்குப் பகைவனுமில்லை; நண்பனுமில்லை. எவர்கள் என்னைப் பக்தியினால் பஜிக்கிறார்களோ அவர்கள் என்னிடத்திலிருக்கின்றார்கள். நானும் அவர்களிடத்திலிருக்கிறேன். அதிகதுராசாரமுள்ளவனானாலும் [1]வேறுஒன்றையும்கருதாமல் என்னையேபஜிப்பானானால் அவன் ஸாதுவென்றே எண்ணத்தக்கவன். ஏனெனில், அவன் நல்ல நிச்சயபுத்தியுள்ளவனன்றோ? அவன் சீக்கிரம் தர்மத்தில்மனத்தைச் செலுத்தினவனாகிறான்; (கெட்டநடக்கையினின்று) அடிக்கடி ஒழிவையும்அடைகிறான். குந்திபுத்திர! என்னுடையபக்தன் கெட்டுப் போகிறதில்லை என்று நீபிரதிஜ்ஞைசெய். பார்த்த! ஸ்திரீகளும் வைஸ்யர்களும் அவ்வாறேசூத்ரர்களும் நீசஜாதியில்பிறந்தவர்களும் என்னை விசேஷமாகஆஸ்ரயித்து உத்தமமானகதியை அடைகிறார்களன்றோ? புண்ணியசாலிகளும் பக்தியுள்ளவர்களுமானபிராம்மணர்களும் அவ்வாறேராஜரிஷிகளும் உத்தமகதியை அடைகிறார்களென்பதில் ஸந்தேகமென்ன? நிலையற்றதும் ஸுகமற்றதுமான இவ்வுலகத்தை அடைந்திருக்கின்றநீ என்னை அடையக்கடவாய். என்னிடத்தில்மனமுள்ளவனும் என்னிடத்தில்பக்தியுள்ளவனும் என்னைஆராதிக்கின்றவனும்

[1] 'அநந்யபாக்' என்பது மூலம்; (ச-ம்) வேறுதேவதையைப்பஜியாமல்.

ஆகக்கடவாய். எனக்கு வந்தனம்செய்வாயாக. இவ்விதம் என்னையே முக்கியமானகதிஎன்று எண்ணி மனத்தை என்னிடத்தில் சேர்த்து என்னையே அடைவாய்.

---

முப்பத்துநான்காவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)

## பகவத்கீதை.

### பத்தாவது அத்யாயம்.

[1](விபூதியோகம்.)

மிக்கபாஹுபலமுள்ளவனே! பிரீதியுள்ளவனான உனக்கு ஹிதத்தைச்செய்யவேண்டுமென்கிறவிருப்பத்தினால் மறுபடியும் நான் சொல்லப்போகிறஎன்னுடையஉத்தமமானவசனத்தைக் கேள். தேவஸமூகங்களும் மஹரிஷிகளும் என்னுடையபிரபாவத்தை அறியார். ஏனெனில் தேவர்களுக்கும் மஹரிஷிகளுக்கும் எல்லாவிதங்களாலும் நான் முந்தினவனாயிருக்கிறேன். எந்தமனிதன் என்னைப் பிறப்பற்றவனென்றும் அநாதியாயிருப்பவனென்றும் எல்லா உலகங்களுக்கும் மஹேஸ்வரனென்றும் அறிகிறானோ மனிதர்களுள் மோகத்தைஇழந்த அவன் எல்லாப்பாவங்களினின்றும் விடுபடுகிறான். வஸ்துக்களுடையஸ்வரூபத்தைநிர்ணயிக்கக்கூடியஸாமர்த்தியம், ஞானம், மோகமின்மை, பொறுமை, உண்மை, அந்தக்காணத்தையடக்குதல், வெளிஇந்திரியங்களையடக்குதல், ஸுகம், துக்கம், உற்பத்தி, நாசம், பயம், பயமின்மை, பிறருக்குத்துன்பத்தையுண்டுபண்ணாமை, எங்கும்ஸமமாயிருத்தல், ஸந்தோஷம், தவம், தானம், கீர்த்தி, அபகீர்த்திஇப்படிப்பட்ட வெவ்வேறுவிதமானமனோபாவங்கள் எல்லாப்பூதங்களுக்கும் என்னிடத்தினின்று உண்டாகின்றன. உலகத்திலுள்ளஇந்தப்பிரஜைகள் எவர்களைச்சார்ந்தவைகளோ முன்னோர்களும் (பிரம்மாவினுடைய) மனத்திலிருந்துஉண்டானவர்களுமான அந்தஏழுமஹரிஷிகளும் அவ்வாறே நான்குமனுக்களும் என்னுடைய ஸங்கல்பத்தை அநுஸரித்தவர்களே; (அல்லது) என்னிடத்தில் புத்தியைச்செலுத்தினவர்கள். என்னுடைய இந்தஐஸ்வரியத்தையும் யோகத்தையும் எவன் உள்ளபடிஅறிகிறானோ அவன் அசைக்கமுடியாதபக்தியோகத்தோடு சேர்க்கப்படுகிறான். இதில் ஸம்சயமில்லை. நான் எல்லா

---

1 விபூதிவிஸ்தரயோகமென்றும் வழங்கும்.

உலகங்களுடைய உத்பத்திக்கும்காரணம். என்னிடத்தினின்றேஅனை த்தும் பிரவ்ருத்திக்கின்றனவென்றெண்ணி அறிஞர்கள் ப்ரீதியு டன் என்னைப் பஜிக்கின்றனர். அவர்கள் என்னிடத்தில் மனத்தை வைத்தவர்களும் என்னிடத்திலேயே உயிரைவைத்தவர்களும் (என் னுடையகுணங்களை) ஒருவருக்கொருவர் தெரிவிக்கின்றவர்களும் என்னைச் சொல்லுகின்றவர்களுமாக எப்பொழுதும் ஸந்தோஷிக் கிறார்கள். ஸுகத்தையும் அடைகிறார்கள். எப்பொழுதும் என்ஸம் பந்தத்தை விரும்புகின்றவர்களும் பிரீதியுடன் என்னைப்பஜிக்கின்ற வர்களுமான அவர்களுக்கு அவர்கள் என்னை அடைவதற்குக்காரண மான புத்தியோகத்தை நான் கொடுக்கிறேன். அவர்களை அனுக்ர ஹிப்பதின்பொருட்டே அவர்களுடையஹ்ருதயகமலத்தில் நான் நிலைபெற்றுப் பிரகாசிக்கின்றஞானமாகிறவிளக்கினாலே அவர்களு டையஅஜ்ஞானத்தால் உண்டானஇருளை நாசம்செய்கிறேன்' என்று சொன்னார்.

அர்ஜுனன், 'நீர் பரப்ரம்மம்; உத்தமமானதேஜஸ்; மிக்க பரிசுத்தமானவஸ்து. தேவரீரை எல்லாப்பிராணிகளுடையசரீரத்தி லும் அந்தர்யாமியாகஇருப்பவரும் நித்யரும் பிரகாசஸ்வரூபியும் தேவ தைகளுக்குஆதியும் பிறப்பில்லாதவரும் விபுவுமாக எல்லாரிஷிகளும் அவ்வாறேதேவரிஷியானநாரதரும் அஸிதரும் தேவலரும் வ்யாஸ ரும் சொல்லுகிறார்கள். அப்படியே நீரும் எனக்குச் சொல்லுகிறீர். கேசவரே! என்னைநோக்கி நீர்சொல்லுமனைத்தும் ஸத்தியமென்று எண்ணுகிறேன். பகவானே! உம்முடைய அவதாரமகிமையைத் தேவர்களும் அறியவில்லை; அஸுரர்களும் அறியவில்லை. புருஷோத் தமரே! பூதங்களைப்படைத்தவரே! எல்லாப்பூதங்களுக்கும்ஸ்வாமி யாயிருப்பவரே! தேவதைகளுக்கெல்லாம் தேவதையாயிருப்பவரே! ஜகந்நாதரே! உமதுஸ்வரூபத்தை நீரே உமதுஞானத்தால் அறிகிறீர். தேவரீருடைய ஐஸ்வர்யங்கள் அத்புதங்களல்லவா? எந்தஐஸ்வர்யங்க ளாலே இவ்வுலகங்களை வியாபித்துக்கொண்டிருக்கிறீரோ அவைகளை முழுதும் தேவரீர் எனக்குஉரைக்கவேண்டும். நான் பக்தியோகத்தில் நிலைபெற்றுத் தேவரீரை ஒழிவில்லாமல்சிந்தித்துக்கொண்டு தேவரீ ரை எவ்வாறு அறிவேன்? பகவானே! எந்தஎந்தவஸ்துக்களில் என் னால் சிந்திக்கத்தக்கவராக இருக்கிறீர்? ஜநார்த்தனரே! உம்முடைய யோகத்தையும் விபூதியையும் ஸவிஸ்தாரமாக மறுபடியும்சொல்லும். ஏனெனில், உம்முடைய (வாக்கியமாகிய) அம்ருதத்தைக்கேட்கின்ற எனக்குத் திருப்தியுண்டாகவேயில்லை' என்றுகேட்டான்.

ஸ்ரீபகவான், 'குருசிரேஷ்ட! மங்களகரமானஎன்னுடையவிபூதி களுள் முக்கியவிபூதிகளை அதிகஸந்தோஷத்துடன் யான் உனக்குச் சொல்வேன். என்னுடைய (விபூதி) விஸ்தாரத்திற்கு முடிவுஇல்லை. குடாகேச! எல்லாப்பிராணிகளுடைய ஹ்ருதயத்திலும்வஸிக்கின்ற ஆத்மா நானே. பூதங்களுக்குஆதியும் மத்தியும் அந்தமும் நானே. நான் ஆதித்யர்களுள் விஷ்ணுவும் ஒளிகளுள் கிரணங்களுள்ளரவியும் மருத்துக்களுள் மரீசியும் நக்ஷத்திரங்களுக்குச் சந்திரனுமாயிருக்கி றேன்; வேதங்களுள் ஸாமவேதமாயிருக்கிறேன்; தேவர்களுள் இந் திரனாயிருக்கிறேன்; இந்திரியங்களுள் மனமாயிருக்கிறேன்; பிரா ணிகளுடைய சைதன்யமாகவும் நானிருக்கிறேன்; ருத்ரர்களுள் சங்கரராயிருக்கிறேன்; யக்ஷராக்ஷஸர்களுள் குபேரனாயிருக்கிறேன்; வஸுக்களுள் பாவகனாயிருக்கிறேன்; பர்வதங்களுள் மேருவா யிருக்கிறேன்; பார்த்த! நீ என்னைப் புரோஹிதர்களுள் சிரேஷ் டரான பிருஹஸ்பதியாக அறி. நான் ஸேனாபதிகளுள் ஸ்கந்த னும், ஜலாதாரங்களுள் சமுத்திரமுமாயிருக்கிறேன். நான் மக ரிஷிகளுள் ப்ருகுமகரிஷியும், சொற்களுள் ஓரெழுத்தானபிரண வமுமாயிருக்கிறேன். யஜ்ஞங்களுள் ஜபயஜ்ஞமும் ஸ்தாவரங்க ளுள் இமயமலையுமாயிருக்கிறேன். நான் எல்லாமரங்களுள்ளும் அரச மரமும், தேவரிஷிகளுள் நாரதரும், கந்தர்வர்களுள் சித்ரரதனும், ஸித்தர்களுள் கபிலமஹரிஷியுமாயிருக்கிறேன். குதிரைகளுள் அமிரு தத்துடன்தோன்றினஉச்சைசிரவம் என்கிறகுதிரையும் சிறந்தயானை களுள் ஐராவதம்என்கிறயானையும் மனிதர்களுள் அரசனுமாக என்னை நீ அறி. ஆயுதங்களுள் வஜ்ராயுதமும் பசுக்களுள் காமதேனுவுமாயி ருக்கிறேன். பிரஜைகளுடையஉத்பத்திக்குக்காரணமான மன்மதனாக வுமிருக்கிறேன். [1]ஸர்ப்பங்களுள் வாஸுகியாயிருக்கிறேன். [2]நாகங் களுள் அநந்தனாகஇருக்கிறேன். ஜலதேவதைகளுள் வருணனாக இருக்கிறேன். பித்ருக்களுள் அர்யமாவாக இருக்கிறேன். தண்டனை விதிப்பவர்களுள் யமனாகஇருக்கிறேன். தைத்யர்களுள் பிரஹ்லாத னாகஇருக்கிறேன். கணக்கிடுகிறவர்களுள் நான் காலனாகஇருக்கி றேன். மிருகங்களுள் நான் ஸிம்மம். பக்ஷிகளுள் யான் விநதா புத்ரனானகருடன், பரிசுத்தம்செய்யும்வஸ்துக்களுள் நான் வாயு வாகஇருக்கிறேன். சஸ்திரதாரிகளுள் நான் ராமனும் மீன்களுள் சுறாமீனுமாயிருக்கின்றேன். நதிகளுள் கங்காநதியாயிருக்கிறேன். அர்ஜுன! எப்பொழுதும் ஸ்ருஷ்டிக்கப்படுகின்றஎல்லாவஸ்துக்க

1 ஒருதலையுள்ளவைகள். 2 அநேகம்தலையுள்ளவைகள்.

ளுக்கும் நான் முதலும் ஈறும் நடுவுமாயிருக்கிறேன். வித்தைக ளுள் அத்யாத்மவித்தையாகவும் வாதம்செய்பவர்களுடையவாதமா கவும் நானே இருக்கிறேன். அக்ஷரங்களுள் நான் அகாரமாகவும் ஸமாஸங்களுள் த்வந்துவஸமாஸமாகவும் நானிருக்கிறேன். அக்ஷ யமானகாலமும் நானே. பிரபஞ்சமனைத்தையும்சிருஷ்டித்த நான் முகனுனஹிரண்யகர்ப்பன் நானே. நான் எல்லோரையும்அபஹரிக் கிற ம்ருத்யுவும் பிறக்கும்வஸ்துக்களுடையபிறவியும் ஸ்திரீகளுள் கீர்த்திஅபிமானிதேவதையும் ஐசுவர்யாபிமானிதேவதையானலக்ஷமி யும் வாக்குக்குஅபிமானிதேவதையானஸாஸ்வதியும் ஞாபகத்துக்கு அபிமானிதேவதையும் புத்திக்குஅபிமானிதேவதையும் தைர்யம் பொறுமைஇவ்விரண்டுக்கும் அபிமானிதேவதைகளுமாயிருக்கிறேன். அவ்வாறே ஸாமங்களுள் பிருஹத்ஸாமமென்கிறஸாமமும் சந்தஸு களுள் காயத்ரிஎன்கிறசந்தஸுமாக இருக்கிறேன். மாதங்களுள் நான் மார்கழிமாதம். ருதுக்களுள் நான் வஸந்தருது. நான் பிறரைவஞ்சிக்கின்றவர்களுடைய சூதாட்டமும் தேஜஸையுடைய வர்களுடையதேஜஸும் ஜயசீலர்களுடையஜயமும் பிரயத்னம்செய் பவர்களுடையபிரயத்னமும் ஸாத்விகர்களுடையஸத்வகுணமுமாயி ருக்கிறேன். விருஷ்ணிகளுள் நான் வாசுதேவனுகஇருக்கிறேன். பாண்டவர்களுள் நான் தனஞ்சயனுகஇருக்கிறேன். முனிவர்களுள் வ்யாஸரும், கவிகளுள் சுக்ராசாரியருமாயிருக்கிறேன். நான் தண் டிக்கிறவர்களுடைய தண்டனையாகஇருக்கிறேன். ஜயிக்கஇச்சையுள் ளவர்களுடைய (ஜயத்துக்குஉபாயமான) நீதியாயிருக்கிறேன். ரகஸ் யங்களுள் மௌனமாயிருக்கிறேன். தத்வஜ்ஞானிகளுடையஞான மும் நானே. ஓ! அர்ஜுன! ஸகலபூதங்களுக்கும் எதுகாரணமோ அது நானே. ஜங்கமஸ்தாவராத்மகமான எந்தவஸ்து இருக்கிறதோ அது என்னையன்றிவேறில்லை. சத்ருக்களைத்தபிக்கச்செய்பவனே! திவ்யமான என்னுடையவிபூதிகளுக்கு முடிவுகிடையாது. என்விபூதி யினுடையஇந்தவிஸ்தாரமானது என்னுல் சுருக்கமாக உனக்குச் சொல்லப்பட்டது. ஐஸ்வர்யத்தையுடையதும் காந்தியையுடையதும் நல்லமுயற்சியுள்ளதுமான எந்தஎந்தவஸ்துவுண்டோ அதுஅது என் னுடையதேஜஸின் ஓர்அம்சத்தினுல் உண்டானதென்று நீ அறிய வேண்டும். அர்ஜுன! அப்படியின்றி விஸ்தாரமாகத்தெரிந்துகொள் ளப்பட்ட இந்தவிபூதியினுல் உனக்கு யாதுபயன்? யான் இவ்வுல கமனைத்தையும் ஓரம்சத்தினுலே தரித்துக்கொண்டிருக்கிறேன்' என்றுசொன்னுர்.

---

## முப்பத்தைந்தாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



## பகவத்கீதை.

### பதினோராவது அத்யாயம்.

### ([1] விஸ்வரூபதர்சனயோகம்.)

அர்ஜுனன், 'என்னையனுக்ரஹிப்பதின்பொருட்டு அத்யாத்மஸ்வரூபத்தைவிளக்கக்கூடியதும் சிறந்ததும் ரஹஸ்யமுமான எந்த வசனம் உம்மால் உரைக்கப்பட்டதோ அந்தவசனத்தினுலே என்னுடைய இந்தமோகம் நீங்கியது. செந்தாமரையிதழ்போன்ற கண்களையுடையவரே! பிராணிகளுடையஉத்பத்திவிநாசங்களைத் தேவரீரிடமிருந்து விஸ்தாரமாக நான்கேட்டேன். குறைவற்றதான தேவரீருடையமகிமையும் என்னுல் கேட்கப்பட்டது. பரமேஸ்வரரே! நீர் உம்மைப்பற்றிக் கூறியதுஉண்மையே. புருஷோத்தமரே! ஈஸ்வரஸ்வபாவத்துக்குரிய உம்முடையரூபத்தை நான் பார்க்கவிரும்புகிறேன். பிரபுவே! யோகேஸ்வரரே! அந்தரூபமானது என்னுல் பார்ப்பதற்குத்தகுதியுள்ளதென்று எண்ணுவீராகுல் அழிவற்ற திவ்யாத்மஸ்வரூபத்தை எனக்குக் காண்பிப்பீராக' என்றுகேட்டான்.

ஸ்ரீபகவான், 'பார்த்த! பலவிதமும் திவ்யமும் பற்பலவர்ணங்களோடும் பற்பலவடிவங்களோடும்கூடினவைகளும் நூறுவிதங்களும் பின்னும்ஆயிரம்விதங்களுமாயிருக்கின்ற என்னுடையரூபங்களை நீ பார். பாதகுலத்திற்பிறந்தவனே! ஆதித்யர்களையும் வஸுக்களையும் ருத்ரர்களையும் அஸ்வினிதேவதைகளையும் மருத்துக்களையும் பார். இதற்குமுன்பார்த்திராதபலஆச்சரியங்களையும் நீபார். ஆலஸ்யமற்றவனே! சராசராத்மகமானவஸ்துக்களுடன்கூடியஉலகமனைத்தையும் மற்றும் நீபார்க்கவிரும்புகிறதையும் இப்பொழுது இந்தஎன்னுடையதேகமாகிறஒரிடத்தில் நிலைபெற்றவையாகப்பார். நீ உன்னுடையஇந்தக்கண்ணுல் (விஸ்வரூபியான) என்னைபார்ப்பதற்குச் சக்தனுகமாட்டாய். ஞானஸ்வரூபமானகண்ணை நான் உனக்குக்கொடுக்கிறேன். ஈசுவரனுனஎனக்கேஉரியதும் சிறந்ததுமான யோகசக்தியைப் பார்' என்றுர்.

---

[1] விஸ்வரூபஸந்தர்சனயோகமென்றும்வழங்கும்.

ராஜனே! மஹாயோகங்களுக்குஈஸ்வரரான ஸ்ரீகிருஷ்ணன் இவ்விதம்சொல்லிப் பிறகு அநேகமுகங்களையும் கண்களையுமுடையதும் அநேகஅத்புதமானகாட்சியையுடையதும் அநேகதிவ்யாபரணங்களுள்ளதும உயரத்தூக்கிப்பிடிக்கப்பட்டதிவ்யமானபலஆயுதங்களையுடையதும் திவ்யமானமாலைகளையும்ஆடைகளையுமணிந்ததும் திவ்யமானவாஸனைபொருந்தியசந்தனங்களை அணிந்ததும் எல்லோருக்கும் ஆச்சரியமயமாகஇருக்கின்றதும் பிரகாசிக்கின்றதும் முடிவில்லாததும் எல்லாத்திக்குக்களிலும்முகங்களுள்ளதும் சிறந்ததுமான ஈசுவரஸ்வரூபத்தைக் குந்தியின்குமாரனை அர்ஜுனனுக்குக் காண்பித்தார். ஆகாயத்தில் ஆயிரம்ஸூர்யர்களுடையகாந்தியானது ஒரேஸமயத்தில்உண்டாகுமானல அந்தக்காந்தியானது (விஸ்வரூபத்தைத் தரித்த) மஹாத்மாவான அந்த ஸ்ரீகிருஷ்ணனுடையகாந்திக்கு ஒப்பாகும். அப்பொழுது பாண்டவன் பலவிதமாகவும் தனித்தனியாகவுமிருக்கின்றஎல்லாப்பிரபஞ்சத்தையும் தேவர்களுக்கெல்லாம் தேவரான ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அந்தச்சரீரத்தில் ஓரிடத்தில்நிலைபெற்றிருப்பதாகப் பார்த்தான். பிறகு, அந்தத்தனஞ்சயன் ஆச்சர்யமடைந்து தேகம்புளகித்து (விஸ்வரூபத்தைத்தரித்த) பரமாத்மாவைத் தலையால்வணங்கிக் கைகளைக்குவித்துப் பின்வருமாறு வசனிக்கலானன்.

'தேவரே! உம்முடையதேகத்தில் தேவர்களையும் எல்லாப்பூதவிசேஷங்களுடைய கூட்டங்களையும் [1]நான்முகனையும் கமலத்தை ஆஸனமாகவுடையப்ரம்மாவினிடத்திலிருக்கின்ற ஈஸ்வரரையும் எல்லாத்தேவரிஷிகளையும் திவ்யமானஸர்ப்பங்களையும் பார்க்கிறேன். விஸ்வேஸ்வரரே! உலகமனைத்தையும் வடிவமாகக்கொண்டவரே! அநேகம்கைகள், வயிறுகள், முகங்கள், கண்கள் இவைகளையுடையவரும் அனந்தமானரூபங்களையுடையவருமானஉம்மை எவ்விடத்திலும பார்க்கிறேன். உமமுடையஆதியையும் மத்தியையும் முடிவையும் நான பாரக்கவில்லை. கிரீடம், கதை, சக்ரம் இவைகளையுடையவரும் தேஜோராசியாயிருப்பவரும் நான்குபக்கத்திலும்பிரகாசத்தையுடையவரும பார்க்கமுடியாதவரும் ஜ்வலிக்கின்றநெருப்புஸூர்யன் இவர்களுடையகாந்திக்குச்சமமானகாந்தியுடையவரும் அளவிடமுடியாத

1 'பிரம்மாணமீசம் கமலாஸநஸ்தம்' என்பதுமூலம்.

(ச-ம்) பிரஜைகளுக்குத்தலைவரும் பூமியாகிய தாமரையின் மேருவாகிய கர்ணிகையிலிருப்பவருமான பிரம்மாவை.

(ரா-ம்) 'கமலாஸநஸ்தம்' என்பதற்கு, ப்ரம்மாவின்கருத்தின்படி ஒழுகுகின்ற.

வருமானஉம்மை நாற்புறங்களிலும் பார்க்கிறேன். உபநிஷத்துக்களில் அறியத்தக்கதாகச்சொல்லப்பட்டிருக்கிறதும் மிகச்சிறந்ததும் அழிவில்லாததுமானவஸ்துவும் நீர். நீர் இந்தஎல்லாஉலகத்துக்கும் உத்தமமான ஆதாரம். அழிவற்றவரும் நிலைத்ததர்மங்களைப்பாதுகாப்பவரும் நீர். தேவரீர் எப்பொழுதுமுள்ளவரென்றும் பரமபுருஷரென்றும் நான் எண்ணுகிறேன். தேவரீரை ஆதிமத்தியாந்தமில்லாதவரும் முடிவற்றவீர்யமுள்ளவரும் முடிவில்லாதகைகளையுடையவரும் சூரியசந்திரர்களைக் கண்களாகவுடையவரும் ஜ்வலிக்கின்றஅக்னியைமுகமாகவுடையவரும் தேஜஸினாலேஇவ்வுலகமனைத்தையும்தபிக்கச்செய்கின்றவருமாகப் பார்க்கிறேன். மஹாத்மாவே! ஆகாய பூமிகளுடைய இந்தஇடைவெளியும் எல்லாத்திக்குக்களும் தேவரீர்ஒருவரால் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. பயங்கரமும்ஆச்சர்யகரமுமான உம்முடைய இந்தரூபத்தைக்கண்டு மூவுலகங்களும் மிக்கபயத்தை அடைந்தன. இந்தத்தேவகணங்கள் உம்மை வந்துசரணமடைகின்றன. சிலர் பயந்து கூப்பிக்கொண்டு துதிக்கின்றனர். மஹரிஷிகள்ஸித்தர்களின் கூட்டங்கள் மங்களமுண்டாகவேண்டுமென்று சொல்லிக்கொண்டு பரிபூர்ணமானஸ்துதிகளாலே உம்மை ஸ்தோத்திரம்செய்கின்றன. ருத்திரர்கள், ஆதித்யர்கள், வஸுக்கள், ஸாத்யர்கள், விஸ்வேதேவர்கள், அஸ்வினிதேவதைகள், மருத்துக்கள், பித்ருதேவதைகள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், அஸுரர்கள், ஸித்தர்களுடையகூட்டங்கள் இவர்கள் எல்லோரும் ஆச்சரியம்அடைந்து உம்மைப் பார்க்கின்றார்கள். மிக்கபுஜபலமுள்ளவரே! அனேகமுகங்களையும் நேத்திரங்களையுமுடையதும் அனேகம்கைகளையும் தொடைகளையும் பாதங்களையுமுடையதும் அனேகவயிறுகளுள்ளதும் அனேககோரப்பற்களாலே பயங்கரமாயுள்ளதுமான உமதுபெரியரூபத்தைப்பார்த்து உலகங்கள் அதிகபயத்தையடைந்திருக்கின்றன. அவ்வாறே நானும் பயமடைந்திருக்கிறேன். உலகமனைத்தையும்வியாபித்திருக்கின்றவரே! ஆகாயத்தைஅளாவிக்கொண்டிருக்கிறவரும் ஜ்வலிக்கின்றவரும் அனேகவர்ணங்களுள்ளவரும் திறந்தவாயுள்ளவரும் பிரகாசிக்கின்றவிசாலமானநேத்திரங்களுள்ளவருமான உம்மைப்பார்த்து மனத்தில்மிக்கபயமடைந்திருக்கின்றநான் தைரியத்தையும் மனச்சமாதானத்தையும் அடையவில்லை. தேவதைகளுக்கெல்லாம்ஈஸ்வரரே! உலகங்களுக்கு வாஸஸ்தானமாயிருப்பவரே! கோரப்பற்களால்பயங்கரமானவைகளும் பிரளயகாலாக்னிக்குச்சமமானவைகளுமான உம்முடையமுகங்களைக் கண்டே திக்குக்களை நான் அறியவில்லை; ஸுகத்தையும் நான் அடைய

வேயில்லை. நீர் பிரஸன்னராகக்கடவீர். இந்தத்ருதராஷ்டிரபுத்திரர்களனைவரும் பீஷ்மரும் துரோணரும் ஸூதபுத்ரனனகர்ணனும் அரசர்களுடையகூட்டங்களுடனும் அவ்வாறே நம்மைச்சேர்ந்தயுத்தவீரர்களுள் தலைவர்களாயிருக்கிற வீரர்களோடும் கோரப்பற்களால் குரூரமாயிருக்கின்றவைகளும் பயங்கரமாயிருக்கின்றவைகளுமான உம்முடையமுகங்களைநோக்கி விரைவாகச் செல்லுகின்றனர். சிலர் பற்களின்சந்துகளில்அகப்பட்டுக்கொண்டு பொடிபண்ணப்படுகிறதலைகளுடன் காணப்படுகிறார்கள். நதிகளுடையஅனேகஜலவேகங்கள் எவ்வாறு ஸமுத்திரத்தையேநோக்கி ஓடுகின்றனவோ அவ்வாறே இந்தநரலோகத்திலுள்ளவீரர்கள் நான்குபக்கங்களிலும்ஜ்வலிக்கின்ற உம்முடையமுகங்களில் பிரவேசிக்கின்றனர். நன்குஜ்வலிக்கின்றநெருப்பில் விட்டில்கள் தாம்அழிவதன்பொருட்டு அதிகவேகத்துடன் பிரவேசிப்பதுபோல உலகங்கள் தாம்அழிவதன்பொருட்டு மிக்கவேகத்துடன் உம்முடையமுகங்களில் பிரவேசிக்கின்றன. எல்லாஉலகங்களையும் ஜ்வலிக்கின்றவாய்களால் விழுங்கிக்கொண்டு நான்குபக்கத்திலும் நாக்கினல் அடிக்கடி நக்கிக்கொள்ளுகிறீர். விஷ்ணுவே! தேவரீருடையஉக்கிரமானகிரணங்கள் ஒளிகளாலே உலகமனைத்தையும்நிரப்பிக்கொண்டுதவிக்கச்செய்கின்றன. தேவஸ்ரேஷ்டரே! உக்கிரமானஸ்வரூபமுள்ளதேவரீர் யார்? சொல்லவேண்டும். உமக்கு வந்தனம். பிரஸன்னராகக்கடவீர். ஆதியாயிருக்கின்ற தேவரீரை நன்றாகத்தெரிந்துகொள்வதற்கு விரும்புகிறேன். தேவரீருடையபிரவ்ருத்தியை நான் அறியவில்லை' என்றுசொன்னன்.

ஸ்ரீபகவான், 'உலகத்திற்குக்ஷயத்தையுண்டுபண்ணுவதற்காக விருத்தியடைந்திருக்கின்றகாலனாக நானிருக்கிறேன். உலகங்களை ஸம்ஹரிப்பதற்காக இப்பொழுது நான் பிரவ்ருத்தித்திருக்கிறேன். சத்துருக்களுடையபடைகளில் நிற்கின்ற யுத்தவீரர்கள் அனைவரும், நீ (முயற்சி) இல்லாமலிருந்தாலும் உயிரோடிருப்பதில்லை. ஆதலால், நீ எழுந்திரு. கீர்த்தியை அடைவாயாக. பகைவர்களை ஜயித்து நிறைந்தராஜ்யத்தை நீ அனுபவிப்பாயாக. இந்தவீரர்கள் முன்னமே என்னலேயே கொல்லப்பட்டுவிட்டார்கள். ஸவ்யஸாசியே! நீ நிமித்தமாத்திரமாகஇரு. என்னல் கொல்லப்பட்டிருக்கிறதுரோணரையும் பீஷ்மரையும் ஜயத்ரதனையும் கர்ணனையும் இன்னும்மற்றுமுள்ளதலைவர்களானபோர்வீரர்களையும் நாசம்செய். மனவருத்தமடையாதே. போர்புரி. யுத்தத்தில்பகைவர்களை ஜயிப்பாய்' என்றுசொன்னர்.

கிரீடியானவன் கேசவருடையஇந்தவார்த்தையைக்கேட்டு இரு

காங்களையும் குவித்துக்கொண்டு நடுக்கமுற்று அவரை நமஸ்கரித்து மிகப்பயந்தவனாக மறுபடியும்வணங்கித் தழுதழுத்தகுரலுடன் பின் வருமாறுகூறலானான்.

'ஹ்ருஷீகேசரே! உலகமானது தேவரீருடையமகிமையைக் கீர்த்தனம் செய்வதனால் அதிகஸந்தோஷமடைகின்றது; அனுராக முள்ளதாகவும் ஆகின்றது. ராக்ஷஸர்கள் பயந்துகொண்டு திக்குக் களைநோக்கி ஓடுகின்றார்கள். ஸித்தர்களுடைய கூட்டங்கள்யாவும் தேவரீரை நமஸ்கரிக்கின்றன. இவைகள் அனைத்தும் தக்கவைதாம். மஹாத்மாவே! மிக்க கௌரவம்பொருந்தியவரும் பிரம்மதேவ ருக்கும் ஆதிகர்த்தாவுமானஉம்மை (அவர்கள்) ஏன் வணங்காம லிருப்பார்கள்? அழிவில்லாதவரே! தேவேசரே! உலகங்களுக் கெல்லாம் வாஸஸ்தானமாயிருப்பவரே! நீரே அழிவில்லாதஜீவாத் மதத்வம். ஸத், அஸத் என்கிறசப்தங்களால் சொல்லப்பட்டபிரகி ருதிதத்வமும் நீரே; அந்தப்பிரகிருதிதத்வம், அதனுடன்ஸம்பந்தம் பெற்றஜீவாத்மதத்வம் இவைகளைக்காட்டிலும் எது வேறானமுக்தாத் மதத்வமோ அதுவும் நீரே. அந்தமில்லாதரூபமுள்ளவரே! தேவ ரீர் தேவதைகளுக்கெல்லாம் ஆதியானதேவதையும் புராணபுருஷ ருமாயிருக்கிறீர். நீர் இந்தப்பிரபஞ்சத்துக்குச் சிறந்தஆதாரமாக வுமிருக்கிறீர்; அறிகிறவரும் அறியத்தக்கவஸ்துவும் உத்தமஸ்தான முமாயிருக்கிறீர். ப்ரபஞ்சமனைத்தும் உம்மால் வியாபிக்கப்பட்டிருக் கிறது. வாயுவும் யமனும் அக்னியும் வருணனும் சந்திரனும் நான் முகனும் தேவரீரே. தேவரீர், பிதாமஹருக்கும் பிதாவாயிருக்கி றீர். தேவரீருக்கு ஆயிரந்தடவை நமஸ்காரம்; நமஸ்காரம். மறுபடி யும் மறுபடியும் தேவரீருக்கு நமஸ்காரம்; நமஸ்காரம்; நமஸ் காரம். முன்புறத்திலும் பின்புறத்திலும் உமக்கு வந்தனம். ஸர்வ ஸ்வரூபரே! நாற்புறங்களிலும் உமக்கு வந்தனம். அந்தமில்லாதவீர் யமுள்ளவரே! அபரிமிதமானவிக்ரமமுள்ளதேவரீர் எல்லாப்பொரு ள்களையும் வ்யாபித்திருத்தலால் ஸர்வஸ்வரூபியாயிருக்கிறீர். அச் சுதரே! தேவரீருடையஇவ்விதமானமகிமையை அறியாதவனான என் னால் தவறுதலாலாவது நட்பினாலாவது தோழமென்றுஎண்ணி அல க்ஷ்யமாக, 'ஓ! கிருஷ்ணா! ஓ! யாதவ! ஓ! நண்ப!' என்று கூறப் பட்டதும், மேலும்விளையாடும்பொழுதோ, படுக்கும்பொழுதோ, உட் காரும்பொழுதோ, போஜனம்செய்யும்பொழுதோ தனித்திருக்கும் பொழுதோ, எதிரிலோ பரிஹாஸார்த்தமாக என்னால் அவமதிக்கப் பட்டதுமாகியஎல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ளும்படிபெரியமகி

மைபொருந்தியதேவரீரை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். ஒப்பற்ற பிரபாவமுடையவரே! தேவரீர் ஜங்கமஸ்தாவராத்மகமானஇவ்வுலகத்துக்குப் பிதாவும், பூஜிக்கத்தக்கவரும், கௌரவமுள்ளகுருவுமாயிருக்கிறீர். மூவுலகிலும் உமக்குச்சமமானவன் ஒருவனுமில்லை. அவ்வாறிருக்க உமக்குமேலானவேறொருவன் ஏது? ஆதலால் ஈசுவரரும் ஸ்தோத்திரம்செய்யத்தக்கவருமாயிருக்கிறதேவரீரை நான் சரீரத்தைநன்குபடியச்செய்து வணங்கி க்ஷமிக்கும்படி பிரார்த்திக்கிறேன். தேவரே! புத்திரனுடையகுற்றத்தைத் தந்தையும், சிநேகிதனுடையகுற்றத்தைச் சிநேகிதனும் பொறுப்பதுபோலப் பிரியானதேவரீர் பிரியனானஎன்னுடையகுற்றங்களைப் பொறுக்கவேண்டும். இதற்குமுந்திப்பாராமலிருந்த இந்தவிஸ்வரூபத்தைக்கண்டு நான் ஸந்தோஷமடைந்தேன். பயத்தினாலும் என்மனமானது மிகவருந்துகிறது. தேவரே! முன்னம்இருந்தஅந்தரூபத்தையே எனக்குக் காண்பியும். தேவர்களுக்குஈசரே! உலகங்களுக்குஆதாரமாயிருப்பவரே! கருணைபுரிவீராக. முன்போலவே தேவரீரைக் கிரீடத்தையுடையவரும் கதாயுதத்தையுடையவரும் சக்ராயுதத்தைக்கையில்கொண்டவருமாக யான் பார்க்கவிரும்புகிறேன். ஆயிரங்கைகளையுடையவரே! உலகமனைத்தையும்வடிவமாகக்கொண்டவரே! நான்குகைகளுடன் கூடின அந்தரூபத்தோடே எனக்குப் பிரஸன்னராகக்கடவீர்' என்றான்.

ஸ்ரீபகவான், 'அர்ஜுன! பிரகாசமயமானதும் ஸகலபிரபஞ்சத்தையும்வியாபித்திருக்கின்றதும் நாசமற்றதும் ஆதியிலுள்ளதும் உன்னைத்தவிர வேறுஒருவராலும்இதற்குமுன்பார்க்கப்படாததுமான என்னுடைய மிகச்சிறந்தரூபமானது உன்விஷயத்தில் பிரஸன்னனான என்னால் என்னுடையயோகமாயாஸாமர்த்தியத்தினால் உனக்குக் காண்பிக்கப்பட்டது. கௌரவர்களுள் சிறந்தவீரனே! மானிடஉலகத்தில் உன்னைத்தவிர வேறொருவனால் இவ்விதஉருவத்தையுடையவனானநான் வேதங்களாலும் யஜ்ஞங்களாலும் அத்யயனங்களாலும் தானங்களாலும் கிரியைகளாலும் உக்கிரமானதவங்களாலும் காணத்தக்கவனல்லேன். இப்படிப்பட்டபயங்கரமானஎன்னுடைய இந்தரூபத்தைக்கண்டு உனக்குத்துன்பமுண்டாகவேண்டாம்; மதிமயக்கமும் உண்டாகவேண்டாம். நீ பயமற்றவனும் மனக்களிப்புற்றவனுமாயிருந்துகொண்டு என்னுடையதான அதேரூபத்தை மறுபடியும்நன்குபார்' என்றுசொன்னார்.

ஸ்ரீவாஸுதேவர் அர்ஜுனனைநோக்கி இவ்வாறுசொல்லிவிட்டு

அவன்பிரார்த்தித்தவண்ணமே தம்முடையரூபத்தைமறுபடியும்காண்பித்தார். மகாத்மாவான ஸ்ரீவாஸுதேவர் மறுபடியும்சாந்தமானரூபமுள்ளவராகிப் பயந்துகொண்டிருக்கிற அந்த அர்ஜுனனை ஸமாதானம் செய்தார்.

அர்ஜுனன், 'ஜனார்த்தனரே! தேவரீருடைய சாந்தமான இந்தமனுஷ்யரூபத்தைக்கண்டு இப்பொழுது மனம்தெளிந்தவனும் ஸ்வபாவத்தைஅடைந்தவனும் ஆகிறேன்' என்றான்.

ஸ்ரீபகவான், 'நீ பார்த்த என்னுடையஇந்தவிஸ்வரூபமானது எவ்விதத்தாலும் ஒருவராலுங்காணமுடியாதது. தேவர்களுங்கூட எப்பொழுதும் இந்த ரூபத்தினுடையதரிசனத்தில் விருப்பமுற்றவர்களாயிருக்கிறார்கள். என்னை எவ்விதமாக நீபார்த்தாயோ இப்படிப்பட்ட ஸ்வரூபத்துடன்கூடியநான் வேதங்களாலும் தவத்தினாலும் தானத்தினாலும் யாகத்தினாலும் பார்க்கத்தக்கவனல்லேன். பகைவர்களைத் தபிக்கச்செய்பவனே! அர்ஜுன! இவ்விதமகிமையுள்ளநான் என்னிடத்திலேயேவைக்கப்பட்டபக்தியினாலேயே யதார்த்தமாக அறிவதற்கும் காண்பதற்கும் அடைவதற்கும் தகுந்தவன். பாண்டுநந்தன! எவன் என்னையேஉத்தேசித்துக் கர்மங்களைச்செய்கிறவனும் என்னையேகதியாகக்கொண்டவனும் என்னிடத்திலேயேபக்தியையுடையவனும் எல்லாவிஷயாபிமானங்களையும்விட்டவனும் எல்லாப்பிராணிகளிடத்திலும் துவேஷமற்றவனுமாயிருக்கிறானோ அவன் என்னை அடைகிறான்' என்றுகூறினர்.



முப்பத்தாறுவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



## பகவத்கீதை.

### பன்னிரண்டாவது அத்யாயம்.

### (பக்தி யோகம்.)

அர்ஜுனன், 'இவ்விதமாக உம்மிடத்திலேயேஎப்பொழுதும் மனத்தைச்சேர்த்தவர்களாக உம்மை உபாஸிக்கிறவர்களும் அவ்யக்தமான ப்ரத்யகாத்மஸ்வரூபத்தை உபாஸிக்கிறவர்களுமான அவ்விரண்டு வகையானபக்தர்களுள் யோகத்தை நன்குஅறிந்தவர்கள் யார்?' என்றுகேட்டான்.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறார். 'எவர்கள் மனத்தைஎன்னிடத்தில் வைத்து அதிகச்ரத்தையுள்ளவர்களாகவும் என்னோடுநித்யமானஸம்பந்தத்தை விரும்புகிறவர்களாகவும் என்னை உபாஸிக்கின்றார்களோ அவர்கள் யோகநிஷ்டையில் தேர்ச்சிபெற்றவர்களென்று என்னால் எண்ணப்பட்டிருக்கிறார்கள். எவர்கள் இந்திரியங்களின் கூட்டத்தை நன்கு அடக்கி எல்லா இடத்திலும்ஸமபுத்தியுள்ளவர்களும் ஸர்வபிராணிகளுக்கும் நன்மைசெய்வதில்விருப்பமுள்ளவர்களுமாக இவ்விதமென்றுகுறிக்கத்தகாததும் அவ்யக்தமும் எங்கும்நிரம்பியதும் சிந்திக்கமுடியாததும் ஸர்வஸாதாரணமாயிருப்பதும் சலனமற்றதும் நித்யமாயிருப்பதுமான [1]அக்ஷரஸ்வரூபத்தை உபாஸிக்கிறார்களோ அவர்கள் என்னையே அடைகிறார்கள். அவ்யக்தமான ஆத்மதத்வத்தினிடத்தில்பற்றிநிற்கிறமனத்தையுடையவர்களான அவர்களுக்குத் துன்பமானது மிகஅதிகமாகஉண்டாகிறது. தேகத்தினிடத்தில் ஆத்மாபிமானமுள்ள அவர்களால் அவ்யக்தவிஷயமானமனோவிருத்தியானது வருத்தத்தால் அடையப்படுகிறது. பார்த்த! எவர்கள் எல்லாக்கர்மங்களையும் என்னிடத்தில்ஸமர்ப்பணம்செய்து என்னைப்பிரதானமாகக் கொண்டு வேறுபிரயோஜனத்தைக்கருதாதயோகத்தினால் என்னைத் தியானம்செய்துகொண்டு உபாஸிக்கின்றார்களோ என்னிடத்தில் வைக்கப்பட்டமனத்தையுடையவர்களான அந்தப்பக்தர்களை ம்ருத்யுஸ்வரூபமானஸம்ஸாரமாகிறஸமுத்ரத்திலிருந்து நான் விரைவாகக் கரையேற்றுகிறேன். என்னிடத்திலேயே மனத்தை நிலையாகவை. என்னிடத்தில் புத்தியை நிலைநிறுத்து. இதற்குமேல் என்னிடத்திலேயே வாஸம்செய்வாய். ஸந்தேகமில்லை. தனஞ்சய! ஒருகால் என்னிடத்தில்மனத்தைநிலைநிறுத்துவதற்கு நீ சக்தியற்றவனாயிருந்தால் பிறகு அப்யாஸயோகத்தால் என்னை அடைவதற்குவிரும்பு. அப்யாஸம்செய்வதிலுங்கூட நீஸாமர்த்தியமில்லாதவனாயிருந்தால் எனக்குப்ரீதியை உண்டுபண்ணுங்கர்மங்களையே உத்தமமென்றுதெரிந்து அனுஷ்டிக்கின்றவனாகக்கடவாய். என்னுடையபிரீதியைக்கருதியாவது கர்மங்களைச்செய்கின்றநீ ஸித்தியை அடைவாய். என்விஷயமான பக்தியோகத்தை ஆச்ரயித்து இந்தக்கர்மாக்களையும்செய்வதற்குச் சக்தியற்றவனாயின் அதற்குப்பின் மனத்தைஅடக்கி [2]எல்லாககர்மங்களுடையபலனையும் எனக்குஅர்ப்பணம்செய். அப்யாஸத்தைக்காட்டிலும் ஞானம் சிறந்தது. ஞானத்தைக்காட்டிலும் தியானம்சிறந்தது. தியானத்தைக்

1 (ச-ம்)பிரம்மம். (ரா-ம்) ஜீவாத்மா.

2 'ஸர்வகர்மபலத்யாக:' என்பதுமூலம்.

காட்டிலும்}கர்மபலத்தைப்பகவதர்ப்பணம்செய்வது சிறந்தது. தியாகத்தினல் காலவிளம்பமின்றிச் சாந்தியுண்டாகிறது. என்னுடையஎந்தப்பக்தன் எல்லாப்பிராணிகளிடத்திலும்த்வேஷமில்லாதவனும் நேசமுள்ளவனும் கருணையுள்ளவனும் அஹங்காரமமகாரங்களை விட்டவனும் ஸுகதுக்கங்களைஸமமாகஎண்ணுகிறவனும் பொறுமையுள்ளவனும் எப்பொழுதும்ஸந்தோஷமுள்ளவனும் யோகியும் மனமடங்கினவனும் உறுதியானநிச்சயமுள்ளவனும் என்னிடத்தில்மனம்புத்திகளை வைத்தவனுமாயிருக்கிருனே அவன் எனக்குப் பிரியன். எவனிடமிருந்து ஜனங்கள் பயமடைகிறதில்லையோ,எவன் ஜனங்களிடமிருந்துபயமடைகிறதில்லையோ, எவன் ஸந்தோஷம், கோபம், பயம், மனக்குழப்பம்இவைகளால் விடுபட்டிருக்கிருனே அவனும் எனக்குப் பிரியன். எவன் அபேக்ஷை இல்லாதவனும் சுத்தனும் ஸமர்த்தனும் (மற்றவைகளில்) உதாஸீனனும் (சாஸ்திரீயகர்மானுஷ்டானங்களால்ஸம்பவிக்கக்கூடியசீதோஷ்ணபருஷஸ்பர்சாதிதுக்கங்களால்) மனவருத்தமடையாதவனும் (விஹிதகர்மங்களைத்தவிரமற்ற) எல்லாக்கர்மங்களையும்ஒழித்தவனுமாயிருக்கிருனே அந்தஎன்பக்தன் எனக்குப்பிரியன். எவன் ஸந்தோஷிக்கிறதில்லையோ, த்வேஷத்தைப்பாராட்டுகிறதில்லையோ, துக்கமடைகிறதில்லையோ, (ஒன்றையும்) விரும்புகிறதுமில்லையோ, எவன் சுபாசுபங்களில்பற்றற்றவனுகி என்னிடத்தில்பக்தியுள்ளவனே அவன் எனக்குப் பிரியன். எந்தமனிதன், பகைவனிடத்திலும் நண்பனிடத்திலும் அவ்வாறேமானவமானங்களிலும் சீதோஷ்ணஸுகதுக்கங்களிலும் ஸமமாயிருந்துகொண்டு (ஒன்றிலும்) பற்றில்லாதவனும் இகழ்தல் புகழ்தலிரண்டையும்ஸமமாக எண்ணுகிறவனும் மௌனவிரதமுடையவனும் கிடைத்ததைக்கொண்டுஸந்தோஷமடைந்தவனும் வீடில்லாதவனும் நிலையானபுத்தியுள்ளவனுமாயிருக்கிருனே சிறந்தபக்தியுள்ள அவன் எனக்குப்பிரியன். தர்மத்தைவிட்டுவிலகாததும் மோக்ஷத்தைக்கொடுப்பதுமான இவ்விதபக்தியோகத்தைச் சாஸ்திரத்தில் சொல்லியபடி எவர்கள் உபாஸிக்கிருர்களோ சிரத்தையுள்ளவர்களும் என்னையே பரமபுருஷார்த்தமென்றுநம்பினவர்களுமான அந்தப்பக்தர்கள் எனக்கு மிகவும்பிரியமானவர்கள்' என்றுகூறினர்.

---

## முப்பத்தேழாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)

---

## பகவத்கீதை.

### பதின்மூன்றாவது அத்யாயம்.

### (க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞவிபாகயோகம்.)

அர்ஜுனன், 'கேசவரே! பிரகிருதி, புருஷன், க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன், ஞானம் ஞேயம்இவைகளை அறியவிரும்புகிறேன்' என்றுகேட்டான்.

ஸ்ரீபகவான், 'குந்திபுத்திர! (போகஸாதனமான) இந்தச்சரீரமானது க்ஷேத்ரமென்று சொல்லப்படுகிறது. இந்தக்ஷேத்ரத்தை எவன் அறிகிறானோ அவனை க்ஷேத்ரஜ்ஞனென்று அதையறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். பாதகுலத்திலுதித்தவனே! என்னை எல்லா க்ஷேத்திரங்களிலுமுள்ள க்ஷேத்திரஜ்ஞனாகவும் தெரிந்துகொள். க்ஷேத்திரம்க்ஷேத்திரஜ்ஞன்இவைகளுடையஞானம் எதுவோ அதுதான் ஞானமென்பதுஎன்னுடையநிச்சயம். அந்தக்ஷேத்திரமானது எந்தத்திரவ்யங்களால் உண்டாயிருக்கிறதோ, எவைகளுக்கு ஆஸ்ரயமோ, எவ்விதமானவிகாரங்களையுடையதோ, எந்தப்ரயோஜனத்தின் பொருட்டு உண்டானதோ, எவைகளுடையகூட்டமோ, அந்தக்ஷேத்திரஜ்ஞனும் எவ்விதமானஸ்வரூபமுடையவனோ, எவ்விதமானமகிமையுடையவனோ, அவைகளைச் சுருக்கமாக என்னிடத்தினின்று கேள். அந்தக்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞதத்வமானது பலவாறாக ரிஷிகளாலும் பற்பலவிதமானவேதங்களாலும் யுக்திகளுடன்கூடியவைகளும் ஸந்தேகமற்றஅர்த்தங்களைநிலைநாட்டுகின்றவைகளுமான பரம்மஸூத்ரங்களிலுள்ளபதங்களாலும் தனித்தனியாகப்பகுத்துக் கூறப்பட்டிருக்கிறது. மஹாபூதங்கள், அகங்காரம், மஹத்தத்வம், மூலபிரகிருதி, ஞானகர்மேந்திரியங்கள்பத்து, மனம்ஒன்று, இந்திரியங்களுடையவிஷயங்களாகிய சப்தஸ்பர்சரூபரஸகந்தங்கள்ஐந்து, இச்சை, த்வேஷம், ஸுகம், துக்கம், [1]சேதனனுக்கு ஆதாரமாயிருக்கின்ற பூதஸங்காதரூபமானசரீரம்என்ன விகாரங்களோடுகூடின இந்தக்ஷேத்ரமானது சுருக்கமாக உரைக்கப்பட்டது. மேன்மைபெற்றமனிதர்

---

[1] (ச-ம்) 'ஸங்காத:' தேகம்இந்திரியங்கள் இவைகளுடைய சேர்க்கை; 'சேதநா' அந்தக்கரணவிருத்தி; 'த்ருதி:' தைர்யம்.

களை அவமதிக்காமலிருத்தல், டம்பமில்லாமை, மூன்றுகாணங்களா லும்பிறர்க்குத்தீங்குசெய்யாமை, பொறுமை, (காணத்ரயங்களிலும்) ஒரேவிதமான பிரவிர்த்தியோடிருத்தல், ஆசார்யனை உபாஸித்தல், சுத்தி, உறுதியோடிருத்தல், மனத்தை அடக்குதல், இந்திரியங்களால் கிரஹிக்கத்தக்கவிஷயங்களில் வெறுப்படைதல், அகங்காரமின்மை, பிறப்பு இறப்பு மூப்பு வியாதி துக்கம்ஆகியதோஷங்களைவிலக்கமுடி யாதவைகளென்று அறிதல், பற்றின்மை, புத்திரன்மனைவிவீடுமுத லானவைகளில் அபிமானமில்லாமலிருத்தல், இஷ்டாநிஷ்டங்கள்நேரி டுங்காலத்திலும் எப்பொழுதுமே ஒரேவிதமானமனத்தோடிருத்தல், வேறுதேவதையினுடையஸம்பந்தமின்றி என்னிடத்திலேயேதவறாத பக்தியைச்செய்தல், ஜனமில்லாதஇடத்தில்வாஸம்செய்தல், ஜனங்க ளுடையகோஷ்டியில்விருப்பமற்றிருத்தல், ஆத்மதத்வஞானத்தில் எப் பொழுதும்நிலைபெற்றிருத்தல், தத்வஞானத்திற்கு எது பிரயோஜன மோ அதைச்சிந்தித்தல் இவை ஞானமென்று கூறப்பட்டிருக்கின் றன. இவற்றைக்காட்டிலும்வேறுயுள்ளது அஜ்ஞானம். [1]எது அறி யத்தக்கதோ, எதையறிந்து [2] அமிர்தத்தை அடைகிறானோ அதை நான் உரைப்பேன். அந்த [3] ஆத்மாவானது அனாதியாகஉள்ளது; என்னையே பிரதானமாகக்கொண்டது; சரீரத்தினால் பரிச்சேதிக்க முடியாதபடி பெரிதாகஇருக்கிறது. அது ஸத்தென்றாவது அஸத் தென்றாவது சொல்லவொண்ணாதது. அந்த ஆத்மஸ்வரூபமானது எல்லாஇடத்திலும் கைகளையும் கால்களையுமுடையது; எல்லாஇடத்தி லும் கண் தலை வாய்இவைகளையுடையது; எல்லாஇடத்திலும் காது களையுடையது; உலகத்திலுள்ள எல்லாவஸ்துக்களையும் வியாபித்துக் கொண்டிருக்கிறது. அந்தச்சுத்தாத்மஸ்வரூபமானது எல்லாஇந்திரி யங்களாலும் விடுபட்டிருந்தாலும் எல்லாஇந்திரியங்களுடையதொ ழில்களாலும் விஷயங்களை அறிவதற்கு ஸாமர்த்தியமுடையது; ஒன்றி லும்ஸம்பந்தமில்லாதிருந்தாலும் எல்லாவற்றையும்தரிப்பதில் ஸாமர்த் தியமுடையது; குணங்களால்விடுபட்டிருந்தாலும் குணங்களை அனுப விப்பதில் திறமையுள்ளதாகவுமிருக்கிறது. ப்ருதிவிமுதலான ஐந்து மஹாபூதங்களுடைய உள்ளும்புறமும் அந்தச்சுத்தாத்மஸ்வரூபம் வியாபித்திருக்கிறது; ஸ்வபாவமாகவே ஸ்தாவரரூபமாகவும் ஜங்கம ரூபமாகவுமிருக்கிறது. அதிகஸூக்ஷ்மமாயிருப்பதால் அது அறிய

1 இங்கு சங்கரபாஷ்யம் வேறுபடுகிறது.

2 (ச-ம்) மரணமின்மையை. (ரா-ம்) ஆத்மாவை.

3 (ச-ம்) பரப்ரம்மம். (ரா-ம்) ஜீவாத்மா.

முடியாதது. அது தூரத்திலும் ஸமீபத்திலும் இருக்கின்றது. அது பிராணிகளிடம்பேதமின்றி எங்கும்ஒரேவிதமாயிருந்தாலும் தனித் தனியாகப்பிரிக்கப்பட்டதுபோலிருக்கின்றது. அது பிருதிவிமுதலான பூதங்களைத்தரிக்கின்றதும் அன்னுதிகளைப்பக்ஷிக்கின்றதும் அவைக ளுடையபரிணமத்துக்கு ஹேதுவாயிருப்பதுமாக அறியத்தக்கது. அந்தச்சுத்தாத்மஸ்வரூபமானது ஜ்யோதிர்மயமான வஸ்துக்களுக் கும் பிரகாசத்தைபுண்டுபண்ணுகிறது;ஸூக்ஷ்மாவஸ்தையுள்ள [1] தம ஸைக்காட்டிலும் வேறாகஇருக்கிறதென்றும் சொல்லப்படுகிறது. அதுஞானரூபமும் அறியத்தக்கவஸ்துரூபமும் ஞானத்தால்அடையத் தக்கதும் எல்லாப்பிராணிகளின் ஹ்ருதயத்திலும் நிலைபெற்றதுமாயிரு க்கிறது. இவ்விதமாக க்ஷேத்திரதத்துவமும் ஆத்மதத்வஜ்ஞானமும் அறியத்தக்க (க்ஷேத்ராஜ்ஞனுடையயாதாத்மியமும்) சுருக்கமாக உரை க்கப்பட்டன. என்னுடையபக்தன் இவற்றையறிந்து என்னுடையஸ்வ பாவத்தை அடைவதற்குத் தகுந்தவனுகிறுன். பிரகிருதிபுருஷன்இவ் விரண்டினையும் அனுதிகளாக அறி. விகாரங்களையும் குணங்களையும் பிரகிருதியினிடத்தினின்று உண்டானவையாக நீ அறி. சரீரத்துக் கும்இந்திரியங்களுக்கும்செய்கைகளை உண்டுபண்ணும்விஷயத்தில் பிர கிருதியானது காரணமென்று கூறப்படுகிறது. (அந்தப்பிரகிருதியை அதிஷ்டானமாகக்கொண்ட) ஆத்மாவானவன் ஸுகதுக்கங்களை அனு பவிப்பதில் காரணமாகச்சொல்லப்படுகிறுன். பிரக்ருதிஸம்பந்தம்பெற் றபுருஷன் பிரக்ருதிஸம்ஸர்க்கத்தாலுண்டானகுணங்களை அனுபவிக் கிறுன். உத்தமஜாதிகளிலும் நீசஜாதிகளிலும் பிறப்பைஅடைய இந்த ஜீவனுக்குக் குணஸம்பந்தமே காரணமாகஇருக்கிறது. இந்தத்தேகத் தில்இருக்கின்ற அளவிடமுடியாதஞானசக்தியுள்ளபுருஷன் (தேகத் தின்செய்கைகளைச்) சமீபத்தினின்றுபார்ப்பவனும் அனுமதிகொடுப்ப வனும் (தேகத்தைத்) தரிப்பவனும் (ஸுகதுக்கங்களை) அனுபவிப்பவ னுமாகிறுன். (இவ்வாறுதேகத்தைநியமிப்பதினுலும்,தரிப்பதினுலும், தேகத்திற்குத்தலைவனுயிருப்பதினுலும் இவன் இந்தத்தேகம், இந்தி ரியங்கள், மனம்இவைகளைக்குறித்து)மஹேஸ்வரனென்றும் பரமாத் மாவென்றும் சொல்லப்படுகிறுன். எவன் இவ்விதம் புருஷனையும் ஸத் வாதிகளானமுக்குணங்களோடுகூடின பிரகிருதியையும் அறிகிறுனே அவன் எவ்விதமானநிலைமையிலிருந்தாலும் மறுபடியும் பிறக்கிற தில்லை. யோகத்தில்நிலைபெற்றசிலர் சரீரத்திலிருக்கின்றஆத்மாவை மனத்தினுல் தியானயோகத்தால் ஸாக்ஷாத்கரிக்கின்றூர்கள். மற்ற

[1] (சம்) அஜ்ஞானம். (ரா-ம்) ஸூக்ஷ்மாவஸ்தையிலிருக்கிறபிரக்ருதி.

வர்கள் ஞானயோகத்தாலும் வேறுசிலர் கர்மயோகத்தாலும் அறிகிறார்கள். இவ்வாறு அறியாதமற்றவர்களோ ஞானிகளிடத்தினின்று உபதேசத்தைக்கேட்டு (கர்மயோகாதிகளால்) உபாஸிக்கின்றார்கள். எவர்கள் குருவின்உபதேசத்தைக்கேட்பதையே முக்கியமாகக்கொண்டிருக்கிறார்களோ அவர்களும் ஸம்ஸாரபந்தத்தைத் தாண்டவேதாண்டுகிறார்கள். பரதசிரேஷ்ட! (உலகத்தில்) ஸ்தாவரஜங்கமஸ்வரூபமாக உண்டாகிறவஸ்துக்களெல்லாம் க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களுடையஸம்பந்தத்தினால் உண்டாகின்றனவென்று அறி. எல்லாப்பூதங்களிடமும் பரமேஸ்வரனாயிருக்கின்றஆத்மாவை எங்கும்ஸமமாகஇருப்பவனென்றும் தேகாதிகள்அழிந்தாலும் அழியாமலிருக்கிறவனென்றும் எவனறிகிறானோ அவனே உள்ளபடி ஆத்மாவை அறிகிறான். எல்லாப்பிராணிகளிடத்திலும்நன்குநிலைபெற்றிருக்கின்றஆத்மாவை ஸமமாகப் பார்க்கிறவன் தன்னாலே தன்னைத் தீங்குக்கு உட்படுத்திக்கொள்ளான்; அதனால் உத்தமமானகதியை அடைகிறான். எல்லாவிதக் கர்மங்களும் ப்ரக்ருதியினாலேயேசெய்யப்படுகின்றவையென்றும் அவ்வாறே ஆத்மா கர்த்தா அல்லனென்றும் எவன் அறிகிறானோ அவன் ஆத்மாவை அறிகிறான். தேவர் மனிதர்முதலான பிராணிகளாகத் தனித்தனிஇருக்கும்ப்ரபஞ்சமனைத்தையும் ப்ரக்ருதிஒன்றினிடத்திலேயேஇருப்பதாகவும் அதனிடத்தினின்றேவிஸ்தாரத்தையடைகிறதாகவும் எப்பொழுது பார்க்கிறானோ அப்பொழுது ப்ரம்மத்தை அடைகிறான். குந்தீபுத்ர! இந்தப் பரமாத்மாவானவன் சரீரத்தில் நிலைபெற்றிருந்தாலும் அநாதியாயிருப்பதினால் அழிவற்றவனாயிருக்கிறான்; ஸத்வாதிகளானகுணங்களால்விடுபட்டிருத்தலால் ஒன்றையும் செய்கிறதில்லை; ஒன்றோடும்ஒட்டுகிறதுமில்லை. எல்லாஇடத்திலும்வ்யாபித்திருக்கின்றஆகாசமானது ஸூக்ஷ்மமாயிருத்தலால் எவ்வாறு ஒன்றினாலும் பற்றப்படுகிறதில்லையோ அவ்வாறே எல்லாத்தேகங்களிலும்நிலைபெற்றுள்ள ஆத்மாவானவன் அந்தஅந்தத் தேகஸ்வபாவங்களால் பற்றப்படுகிறதில்லை. பாரத! ஒருஸூர்யன் இந்த உலகமனைத்தையும் எவ்வாறுவிளக்குகிறானோ அவ்வாறு க்ஷேத்திரஜ்ஞன் எல்லாச்சரீரத்தையும் பிரகாசிப்பிக்கிறான். ஞானமாகிறகண்ணால் க்ஷேத்ரத்துக்கும் க்ஷேத்திரஜ்ஞனுக்குமுள்ள இவ்விதவேறுபாட்டையும் பூதாகாரமாகப்பரிணமித்திருக்கின்ற ப்ரக்ருதியினிடத்தினின்று விடுவித்துக்கொள்வதற்குஉபாயமான (அமானித்வமுதலான) குணங்களையும் எவர்கள் அறிகிறார்களோ அவர்கள் பரப்ரம்மத்தை அடைகிறார்கள்.

---

## முப்பத்தெட்டாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



## பகவத்கீதை.

### பதினான்காவது அத்யாயம்.

### (குணத்ரயவிபாகயோகம்.)

எதைஅறிந்து எல்லாமுனிகளும் இந்தஸம்ஸாரபந்தத்தினின்று விடுபட்டுச் சிறந்தஸித்தியைப் பெற்றார்களோ வேறானதும் ஞானங்களுள் சிறந்ததுமான அந்த ஞானத்தைத் திரும்பவும் உனக்கு நான் சொல்வேன். இந்தஞானத்தை ஆஸ்ரயித்து என்னுடன் ஸாதர்ம்யத்தைஅடைந்தவர்கள் ஸ்ருஷ்டிகாலத்திலும் பிறப்பதில்லை. பிரளயகாலத்திலும் அழிவதில்லை. பாரத! உலகமனைத்துக்கும் காரணமும் மஹதாதிவிகாரங்களுக்குக்காரணமுமான அசேதன பிரகிருதியில் யான் கர்ப்பத்தை வைக்கிறேன். அதனால் (பிரம்மாதிஸ்தம்பபரியந்தமுள்ள) எல்லாப்பிரபஞ்சங்களுடைய உத்பத்தியும் உண்டாகிறது. குந்தீபுத்திர! (தேவகந்தர்வபசுபக்ஷிகள்முதலான) எல்லாஜாதிகளிலும் எந்தமூர்த்திகள் உண்டாகின்றனவோ அவ்வித மூர்த்திகளுக்குப் பிரகிருதியானது காரணமாயிருக்கிறது. யான் (அந்தப்ரகிருதியில்) விதைபோட்டதந்தையாயிருக்கிறேன். பெரிய கைவன்மையுள்ளவனே! பிரகிருதியினிடத்தினின்றுஉண்டாகிறஸத்வம் ரஜஸ் தமஸ்என்கிறகுணங்களும் தேகத்திலிருக்கின்ற அழிவற்றவனானஆத்மாவைக் கட்டுகின்றன. தோஷமற்றவனே! ஸத்வம், ரஜஸ், தமஸ்என்கிறகுணங்கள்மூன்றனுள் நிர்மலமாயிருப்பதால்பிரகாசிக்குந்தன்மையுள்ளதும் ஆரோக்யஹேதுவுமான ஸத்வகுணமானது ஆத்மாவை ஸுகஸம்பந்தத்தாலும் ஞானஸம்பந்தத்தாலும் கட்டுகிறது. குந்தீபுத்திர! ரஜோகுணத்தை, ஆசைக்குக்காரணமாயிருக்கிறதென்றும் சப்தாதிவிஷயானுபவஇச்சைக்கும் புத்திரமித்திரபந்துக்களோடுசேர்க்கைக்கும் உத்பத்திஸ்தானம்என்றும் அறி. அந்தரஜோகுணமானது தேகியானஆத்மாவைக் கர்மஸம்பந்தத்தால் கட்டுகிறது. பாரதகுலத்திற்பிறந்தவனே! தமோகுணத்தையோவென்றால் அஜ்ஞானத்தால் உண்டாகின்றதென்றும் எல்லாப்பிராணிகளுக்கும்மோகத்தையுண்டுபண்ணுகிறதென்றும் அறி. அந்தத்தமோகுணமானது அஜாக்ரதையாலும் சோம்பலாலும் உறக்கத்தாலும் ஆத்மாவைக்கட்டுகின்றது. பாரதகுலத்திலுதித்தவனே! ஆத்மாவை ஸத்வம்

ஸுகத்திலும் ரஜோகுணம் கர்மத்திலும் சேர்ப்பிக்கின்றன. தமோ குணமோ ஞானத்தைமறைத்துத் தவறுதலில் சேர்ப்பிக்கின்றது. பாரத! ஸத்வகுணமானது ரஜஸையும் தமஸையும், ரஜோகுணமானது ஸத்வத்தையும் தமஸையும், அவ்வாறே தமோகுணமானது ஸத்வத்தையும் ரஜஸையும் அடக்கி வெளிப்படுகின்றன. இந்தத்தேகத்தில் (கண்முதலியஞான) த்வாரங்களெல்லாவற்றிலும் எப்பொழுது பிரகாசஞானமுண்டாகிறதோ அப்பொழுது ஸத்வம் நிச்சயமாக விருத்தியடைந்திருக்கிறதென்றறியவேண்டும். பாதஸ்ரேஷ்டனே! பேராசை (பிரயோஜனத்தைஎதிர்பாராமலே காரியங்களில் ஒழிவற்று) பிரவ்ருத்தித்தல் (பயனுக்குஸாதனங்களான) கர்மாக்களைத்தொடங்குதல் இந்திரியங்களுக்குஅடக்கமின்மை விஷயஇச்சைஇவைகள் ரஜோகுணம் அபிவிருத்தியடைந்தால் உண்டாகின்றன. குருநந்தன! தமோகுணம் விருத்தியடையும் ஸமயத்தில் ஞானம்உதியாமலிருத்தல், செய்ய வேண்டியகார்யங்களில் பிரவிர்த்திஇல்லாமல் ஸ்தம்பித்துநிற்றல், அகார்யத்தில்பிரவிருத்தித்தலைப்பயனாகக்கொண்டதவறுதல், விபரீத ஞானம் இவைகள் உண்டாகின்றன. ஸத்வகுணம் விருத்தியடைந்திருக்கையில் தேகியானவன் உயிரைவிட்டால் உத்தமமானதத்வத்தை அறிந்தஞானிகளுடைய பரிசுத்த உலகங்களை அடைகிறான். ரஜோ குணம்விருத்தியடைந்திருக்கும் தருணத்தில் மாணத்தை அடையவன் பலாபேக்ஷையுடன் கர்மங்களைச்செய்கின்றவர்களான கர்மத்தில்பற்றுள்ளவர்களுடைய குலங்களில் பிறக்கிறான். அவ்வாறே தமோகுணம் தலைமைபெற்றிருக்கும் ஸமயத்தில் உயிரை விடுபவன் நாய்பன்றிமுதலான நீசஜந்துக்களுடையஜாதிகளில் பிறக்கிறான். புண்ணியகர்மத்திற்கு ஸத்வத்தினால் உண்டுபண்ணப்பட்டதாகவும் சிறிதும் துக்கமில்லாததாகவுமிருக்கின்ற ஸுகத்தைப்பலனாகவும், அவ்வாறே ரஜோகுணத்திற்குத் துக்கத்தைப்பலனாகவும், தமோகுணத்திற்கு அஞ்ஞானத்தைப்பலனாகவும் சொல்லுகிறார்கள். ஸத்வகுணத்தினின்று ஞானமுண்டாகிறது. ரஜோகுணத்தினின்று பேராசையுண்டாகின்றது. தமோகுணத்தினின்று அஜாக்கிரதையும் விபரீதஞானமும் அஜ்ஞானமுமுண்டாகின்றன. ஸத்வகுணத்தில்நிலை பெற்றவர்கள் மேலானபதவியை (மோக்ஷத்தை) அடைகிறார்கள். ரஜோகுணமுடையவர்கள் [1]மத்தியிலே வாஸம்செய்கின்றனர். தமோ குணத்தையுடையவர்கள் நீசமானகுணத்திற்குரிய செய்கைகளில் நிலைபெற்று அதோகதியை (நரகத்தை) அடைகின்றார்கள். உத்தம

---

1 பூலோகத்தில்.

மானஸத்வகுணத்தில் நிலைபெற்றவிவேகியானவன் [1]குணங்களைக்காட்டிலும்வேறுயிருக்கின்ற ஆத்மாவைக் கர்த்தா அல்லனென்றும் குணங்களைக்காட்டிலும் வேறானவனென்றும் அறிந்தபொழுது என்னுடையஸ்வரூபத்தை அடைகிறான். தேகியானவன் தேகத்திலுண்டாயிருக்கிற முக்குணங்களையுந்தாண்டிப் பிறப்பிறப்புமூப்புகளால்உண்டு பண்ணப்பட்டதுக்கங்களால் விடுபட்டவனாகி அழிவற்ற ஆத்மாவை அனுபவிக்கிறான்' என்றார்.

அர்ஜுனன், 'பிரபுவே! இந்தமூன்றுகுணங்களையுந்தாண்டியிருக்கிறவன் எவ்விதமான அடையாளங்களோடிருப்பான்? அவன் எவ்விதஆசாரமுடையவன்? இந்தமூன்றுகுணங்களையும் எந்தஉபாயத்தால் தாண்டுகிறான்?' என்றுவினவினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறார். 'பாண்டவ! எவன் ஸம்பவிக்கின்ற பிரகாசத்தையும் பிரவிருத்தியையும் மோகத்தையும் த்வேஷிக்கிறதில்லையோ, எவன் நிவ்ருத்தித்திருக்கின்ற அவைகளை விரும்புகிறதுமில்லையோ, எவன் உதாஸீனன்போலிருந்துகொண்டு குணகாரியங்களான ராகம்துவேஷமுதலானவைகளால் அசைக்கப்படமாட்டானோ, எவன் குணங்களேப்ரவ்ருத்தித்திருக்கின்றனவென்று தெரிந்துகொண்டிருக்கிறானோ, (எவன் அவ்விதமானகுணகார்யங்களுக்கு அனுகுணமாக நிஷ்டையிலிருந்து) சலிக்கிறதில்லையோ, எவன் ஸுகதுக்கங்களில் ஸமமானசித்தவிருத்தியுடையவனும் தன்னுடையஆத்மஸ்வரூபத்திலேயேநிலைபெற்றவனும் மண்ணாங்கட்டியிலும் கல்லிலும் தங்கத்திலும் ஸமமானபாவனையுள்ளவனும் பிரியத்தையும் அப்பிரியத்தையும் ஸமமாகப்பாவிக்கின்றவனும் மனோதைரியமுள்ளவனும் புகழையும்நிந்தையையும் ஸமமாகஎண்ணுகிறவனும் மானத்திலும் அவமானத்திலும் ஸமமாயிருப்பவனும் மித்ரபக்ஷத்திலும்சத்ருபக்ஷத்திலும் ஸமமாயிருக்கின்றவனும் ஸர்வகர்மங்களையும் விட்டவனுமாயிருக்கிறானோ அவன் முக்குணங்களையும் தாண்டினவனென்று சொல்லப்படுகிறான். எவன் என்னையே அசஞ்சலமானபக்தியோகத்தால் உபாஸிக்கிறானோ அவன் இம்முக்குணங்களையுந்தாண்டிப் பிரம்மமாவதற்குத்தக்கவனாகிறான். நான் அழிவற்றதும் குறைவற்றதுமானபிரம்மபாவத்திற்கு ஆஸ்ரயமாயிருக்கிறேன்; சாஸ்வதமான தர்மத்திற்கும் நித்யமானஸுகத்திற்கும் இருப்பிடமாயிருக்கிறேன்.

---

[1] 'எப்பொழுது குணங்களைக்காட்டிலும் வேறுகர்த்தாவைப் பார்க்கவில்லையோ, குணங்களைக்காட்டிலும் மேலானவனை அறிகிறானோ அப்பொழுது' எனினும் பொருந்தும்.

## முப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



## பகவத்கீதை.

### பதினைந்தாவது அத்யாயம்.

### ([1] புருஷோத்தமயோகம்.)

மேலாயிருக்கின்ற (நான்முகனை) வேராகக் கொண்டதும் கீழான (பூமியில்வஸிக்கின்றமனிதன், பசு, புழு, பூச்சி, ஸ்தாவரமுதலானவைகளைக்) கிளைகளாகவுடையதுமான ஸ்திரமில்லாத ஸம்ஸாரமாகிற அரசமரத்தை நாசமற்றதாகச் சொல்லுகிறார்கள். எந்தஸம்ஸாரவிருக்ஷத்திற்கு வேதங்களை இலைகளா அந்தஸம்ஸாரவிருக்ஷத்தை அறிபவனே வேதார்த்தத்தை அறிந்தவன். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிறமுக்குணங்களால் விருத்தியடைந்ததும் ரூபம் ரஸமுதலான விஷயங்களையே தளிராகக்கொண்டிருக்கின்றதுமான அந்தஸம்ஸாரவிருக்ஷத்தினுடையகிளைகள் கீழுலகங்களிலும் மேலுலகங்களிலும் பரவியிருக்கின்றன. அப்படிப்பட்ட ஸம்ஸாரவிருக்ஷத்தினுடைய கர்மரூபமானவேர்கள் கீழாக மனுஷ்யலோகத்தில் மேன்மேலும் கர்மங்களையே தொடர்ச்சியாகக்கொண்டு எங்கும் பரவியிருக்கின்றன. இந்தஸம்ஸாரவிருக்ஷத்தினுடைய மேற்சொன்னவிதமான ஸ்வரூபமானது இந்தஸம்ஸாரத்திலிருக்கின்ற ஜனங்களாலே அறியப்படுகிறதில்லை. இந்த விருக்ஷத்தினுடையமுடிவு, தொடக்கம், நிலைமை இவைகளும அறியப்படுகிறதில்லை. நன்றாக ஆணிவேருடன் கீழேஊன்றியிருக்கின்ற இந்தஸம்ஸாரமாகிற அரசமரத்தை வைராக்யமாகிற உறுதியானகத்தியினாலே வெட்டிப் பிறகு எந்தஇடத்தை நாடினவர்கள் மறுபடியும் ஸம்ஸாரமார்க்கத்தில திரும்பமாட்டார்களோ அப்படிப்பட்டஸ்தானமானது தேடத்தக்கது. எவனிடத்தினின்று வெகுகாலமாய்த்தொடர்ந்துவந்திருக்கிற ஸம்ஸாரப்ரவ்ருத்தி பரவியிருக்கிறதோ அந்தஆதிபுருஷனையே [2]சரணமடையவேண்டும். அகங்காரத்தையும் விபரீதஞானத்தையும் விட்டவர்களும் புத்திரமித்திராதிகளிடத்தில் பற்றுதலென்கிற தோஷத்தை விலக்கியவர்களும்

---

[1] புருஷோத்தமப்ராப்தியோகமென்றும் புராணபுருஷோத்தமயோகமென்றும்வழங்கும்.

[2] 'ப்ரபத்யேத்' என்று பாடம் கொள்ளப்பட்டது.

ஆத்மவிஷயமான ஞானத்தில் எப்பொழுதும் நிலைபெற்றவர்களும் மற்றவஸ்துக்களிடத்தில் ஆசையற்றவர்களும் ஸுகதுக்கமுதலிய த்வந்துவங்களால் விடுபட்டவர்களும் ஆத்மாநாத்மஸ்வபாவங் களையறிந்தவர்களுமான ஞானிகள் நாசமற்ற அந்தப் [1]பதத்தை அடைகிறார்கள். அந்தப்பரிசுத்தமான ஆத்மஜ்யோதிஸை ஸூர்யனாவது சந்திரனாவது அக்னியாவது பிரகாசிப்பிக்கிறதில்லை. எதை அடைந்து மறுபடியும் திரும்புகிறதில்லையோ அது என்னுடைய ஸர்வோத்தமமான ஜ்யோதிஸ். என்னுடையஓர் அம்சமும் அநாதியு மாயிருக்கின்றஜீவாத்மாவானவன் (கர்மத்தினால் சுற்றப்பட்டு) பிரகிருதிபரிணாமவிசேஷமான சரீரத்திலிருக்கின்ற மனத்தை ஆறாவதாகக்கொண்டஇந்திரியங்களை ஜீவலோகத்தில் (கர்மாநுகுணமாக இங்குமங்கும்) இழுக்கிறான். தேகேந்திரியங்களுக்குப்பிரபுவான ஜீவன் எந்தச்சரீரத்தை அடைகிறானோ, எந்தச்சரீரத்தினின்று வெளிப்படுகிறானோ அந்தச்சரீரத்தில், காற்றானது வாஸனைக்குஇருப்பிடமானபுஷ்பத்தினின்று வாஸனைகளைக் கவர்ந்துசெல்வதுபோல இந்தஇந்திரியங்களைக் கவர்ந்துகொண்டு செல்லுகிறான். இந்தஜீவன் காதையும் கண்ணையும் தோலையும் நாவையும் மூக்கையும் மனத்தையும் ஆதாரமாகக்கொண்டு விஷயங்களை அனுபவிக்கிறான். (இவ்வாறு தேகத்திலேயே) இருக்கின்றவனும் (தேகத்தினின்று) வெளிப்படுகின்றவனும் (குணமயமானவிஷயங்களை) அனுபவிக்கின்றவனும் இந்திரியங்களையுடையவனுமான இந்தஜீவனை அஜ்ஞானிகள் (ஞானத்தையேவடிவமாகக்கொண்டவனென்றும் சரீரத்தைக்காட்டிலும் விலக்ஷணனென்றும்) பார்ப்பதில்லை. ஞானக்கண்உள்ளவர்களோ அந்த ஜீவஸ்வரூபத்தைஅறிகிறார்கள். (காமயோகமுதலானயோகங்களில்) முயற்சிக்கின்ற ஞானிகள் தேகத்தில்நிலைபெற்றிருக்கின்ற (இந்த ஜீவாத்மாவை உள்ளபடி) பார்க்கிறார்கள். முயற்சித்தாலுங்கூடச் சித்தசுத்தியற்ற அஜ்ஞானிகள் (இந்தஜீவாத்மாவைக்) காண்கிறார்களில்லை. உலகமனைத்தையும்பிரகாசிக்கச்செய்யும் ஸூர்யன் சந்திரன் அக்நி இவர்களின்தேஜஸை என்னுடையதென்று அறியக்கடவாய். நான் பூமியில்பிரவேசித்து என்னுடைய ஸாமர்த்தியத்தினாலே பிராணிகளைத் தரிக்கிறேன். நான் ரஸஸ்வரூபியான சந்திரனாயிருந்துகொண்டு எல்லாஓஷதிகளையும் போஷிக்கிறேன். நான் பிராணிகளுடைய தேகத்தைஆஸ்ரயித்து அக்னியாயிருந்துகொண்டு பிராணாபானன்களுடன்கூடி (பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம், சோஷ்

[1] (ச-ம்) ஸ்தானத்தை. (ரா-ம்) பரிசுத்தாத்மஸ்வரூபத்தை.

யம்' என்கிற) நான்குவிதமான உணவுகளைப் பக்வம்செய்கிறேன். நான் எல்லாப்பிராணிகளுடைய ஹ்ருதயத்திலும் அந்தர்யாமியாயிருக்கிறேன். என்னாலேயே நினைவும் அறிவும் மறப்பும் உண்டாகின்றன. எல்லாவேதங்களாலும் நானே அறியத்தக்கவன். வேதத்தில்கூறப்பட்டுள்ளபலன்களைக் கொடுக்கிறவன் நானே. வேதங்களை அறிந்தவனும் நானே. உலகத்தில் க்ஷரமென்றும் அக்ஷரமென்றும் இருவகைப்பட்ட இந்தப்புருஷர்களுண்டு. எல்லாப்பிராணிகளும் க்ஷரமென்று சொல்லப்படுகின்றன. தனக்கு இயற்கையாயிருக்கிறரூபத்துடன்விளங்குகின்றமுக்தாத்மா அக்ஷரனென்று சொல்லப்படுகிறான். நாசமற்றவரும் ஈசுவரருமான எந்தஆத்மா மூவுலகங்களிலும் அனுப்ரவேசித்து அவைகளை ஸம்ரக்ஷிக்கிறாரோ அந்த உத்தமபுருஷர் (க்ஷராக்ஷரசப்தங்களால் சொல்லப்பட்ட பத்தமுக்தபுருஷர்களைக்காட்டிலும்) வேறாயிருக்கிறவரும் பரமாத்மாவுமாக (வேதவேதாந்தங்களில்) கூறப்பட்டிருக்கிறார். நான் க்ஷரமானபிரபஞ்சத்தை அதிக்ரமித்திருப்பதனாலும் அக்ஷரமானமுக்தாத்மாக்களைக் காட்டிலும் உத்தமனாயிருப்பதனாலும் உலகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமனென்று பிரஸித்திபெற்றிருக்கிறேன். பாதகுலத்தில் உதித்தவனே! எவன் மதிமயக்கமற்றவனாகி என்னை இவ்விதம் புருஷோத்தமனென்று அறிகிறானோ எல்லாவற்றையும் அறிந்தவனான அவன் என்னை ஸகலவிதத்தாலும் ஆராதிக்கிறான். பாரத! தோஷமற்றவனே! இவ்விதம் அதிரஹஸ்யமான இந்தச்சாஸ்திரம் என்னால் உரைக்கப்பட்டது. இதையறிந்த மனிதன் நல்லஞானமுடையவனும் செய்யவேண்டியகார்யங்களைச்செய்துகொண்டவனுமாவான்.

---

## நாற்பதாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)

---

## பகவத்கீதை.

### பதினாறாவது அத்யாயம்.

### (தேவாஸுரஸம்பத்விபாகயோகம்.)

பரதகுலத்திலுதித்தவனே! பயமின்மை, அந்தக்காணசுத்தி, ஞானயோகத்தில்நிலைபெற்றிருத்தல், தானம், மனத்தை அடக்குதல், யஜ்ஞத்தைஅநுஷ்டித்தல், வேதாப்யாஸம், தவம், நேர்மை, பிறருக்

குத்தீங்குசெய்யாமை, உண்மை, கோபமின்மை, (ஆத்மஹிதவிரோதியானவஸ்துக்களை) விடுதல், (பாஹ்யேந்திரியங்களை) அடக்குதல், கோட்சொல்லாமை, பிராணிகளிடத்தில்தயை, விஷயங்களில் ஆசையற்றிருத்தல், மென்மை, (அகார்யத்தைச்செய்வதில்) வெட்கம், (ஆசைப்படத்தக்கவஸ்து பக்கத்திலிருந்தாலும்) மனநிலைதவறாமை, துர்ஜனர்களாலே அவமதிக்கத்தகாமலிருத்தல், பொறுமை, தைர்யம், சுத்தி, பிறருக்குத்ரோகம்செய்யாமலிருத்தல், அதிககர்வமின்மை இவைகள் அனைத்தும் (பகவதாஜ்ஞானுவர்த்திரூபமான) தேவஸம்பத்தைநிறைவேற்றுவதற்காகப்பிறந்தவனுக்கு உண்டாகின்றன. பார்த்த! பிறர்தன்னைத்தார்மிகனென்றுதெரிந்துகொள்வதற்காகவே தர்மத்தை அனுஷ்டித்தல், ஐஸ்வர்யத்தினாலும் கல்வியினாலும் உண்டாகிற செருக்கு, அகங்காரம், கோபம், ஸாதுக்களுக்குவருத்தத்தையுண்டுபண்ணும் ஸ்வபாவம், அஜ்ஞானம்இவைகள் அஸுரஸம்பத்தை நிறைவேற்றுவதற்காகப்பிறந்தவனுக்கு உண்டாகின்றன. தேவஸம்பந்தமானஸம்பத்தானது பந்தநிவிருத்திக்கும் ஆஸுரஸம்பத்தானது பந்தத்துக்கும் காரணம்என்றுநிச்சயிக்கப்பட்டிருக்கின்றன. பாண்டவ! நீ தெய்வஸம்பத்தை அடைவதற்காகப் பிறந்தவனாயிருக்கிறாய். நீ துயரமடையாதே. பார்த்த! இவ்வுலகத்தில் தெய்வமென்றும், ஆஸுரமென்றும் பூதங்களுடையசிருஷ்டிகள் இரண்டுவிதமாயிருக்கின்றன. தெய்வஸ்ருஷ்டியானது விஸ்தாரமாகக்கூறப்பட்டுவிட்டது. அஸுரஸ்ருஷ்டியை என்னிடத்தினின்று கேள். அஸுரஸ்வபாவமுள்ளஜனங்கள் இம்மையில் நன்மைக்குச்சாதனமான விஷயங்களையும் மோக்ஷஸாதனமான வைதிகதர்மங்களையும் அறியமாட்டார்கள். உள்ளும் புறமுமுள்ளசுத்தியும் ஆசாரமும் ஸத்தியமும் அவர்களிடமில்லை. அந்த அஸுரஸ்வபாவமுடையஜனங்கள் உலகத்தை அஸத்யமென்றும் பிரம்மத்தினிடத்தில் நிலைபெறாததென்றும் ஈஸ்வரனற்றதென்றும் ஸ்திரீபுருஷஸம்பந்தத்தினாலன்றி வேறுகாரணத்தினால் உண்டாகாததென்றும் ஸ்திரீபுருஷர்களுடைய காமத்தையே காரணமாகக்கொண்டதென்றும் வேறுஎன்னகாரணம் இருக்கிறதென்றும் சொல்லுகிறார்கள். இவ்விதமானஞானத்தைப்பற்றிக்கொண்டு (தேகத்தைக்காட்டிலும்வேறான) ஆத்மாவையறியாதவர்களும் அல்பபுத்தியுடையவர்களும் க்ரூரமான கர்மங்களுள்ளவர்களும் உலகத்திற்கே அமங்களஸ்வரூபிகளுமான (துஷ்ருஷ்டிகள்) உலகநாசத்தின்பொருட்டுத் தோன்றுகிறார்கள். எவ்விதத்தினாலும்நிரப்பமுடியாதகாமத்தைஆஸ்ரயித்து டம்பம் மானம் மதம் இவைகளையு

டையவர்களும் அசுத்தமானவிரதங்களை அனுஷ்டிக்கின்றவர்களுமான (அறிவீனர்கள்) அஜ்ஞானத்தினால் கெட்டபிடிவாதங்களைப்பற்றிக்கொண்டுபிரவ்ருத்திக்கின்றார்கள். அளவிடமுடியாததும் பிரளயம்வரையில் தொடர்ந்திருக்கின்றதுமான மனக்கவலையை அடைந்தவர்களும் காமஸுகானுபவத்தையே பரமபுருஷார்த்தமென்றெண்ணுகிறவர்களும் ‘(இதற்குமேல்புருஷார்த்தம் இல்லை;) இவ்வளவுதான்’ என்று நிச்சயித்தவர்களும் ஆசைகளாகிறபலகயிறுகளால் கட்டப்பட்டவர்களும் காமக்குரோதங்களையே முக்கியமாகக் கொண்டவர்களுமாயிருப்பவர்கள் காமஸுகானுபவத்தின்பொருட்டு அநீதியினால் பொருட்குவியல்களைவிரும்புகின்றார்கள். ‘இந்தப்பொருள் இப்பொழுது என்னால் அடையப்பட்டுவிட்டது. இந்தவிருப்பத்தை அடையப்போகிறேன். இந்தப்பொருள் இருக்கின்றது. இந்தப்பொருளும் இனி திரும்பவும் எனக்குண்டாகும். இந்தச்சத்துரு என்னால் கொல்லப்பட்டான். மற்றவர்களையும் கொல்லுவேன். நான் பிரபு. நான் போகத்தைஅனுபவிக்கிறவன். நான் நினைத்தபடியெல்லாம் காரியஸித்தியைப்பெறுபவன். நான் பலமுள்ளவன். நான் ஸுகமுடையவன். நான் ஸம்பத்துடையவன். நான் உயர்குலத்தோன். எனக்கு ஒப்பானவன் வேறுளவன் இருக்கிறான்? நான் யாகம்செய்யப்போகிறேன்; தானம் செய்யப்போகிறேன். ஸந்தோஷமடையப்போகிறேன்’ என்று இவ்விதம் அஜ்ஞானத்தினால் மதிமயக்கங்கொண்டவர்களும் அனேகவிதமானசித்தப்ரமமுடையவர்களும் மோகவலையினால் சூழப்பட்டவர்களும் விஷயபோகங்களில் அதிகப்பற்றுதலுடையவர்களுமாயிருப்பவர்கள் அசுத்தமான நரகத்தில் வீழ்கின்றார்கள். தம்மைத்தாம் புகழ்ந்துகொள்ளுகிறவர்களும் வணக்கமற்றவர்களும் செல்வத்தினால் உண்டானசெருக்கும் மதமுமுள்ளவர்களுமான அவர்கள் டம்பத்தினாலே பிரஸித்தியைப்பெறுதலே முக்கியபிரயோஜனமாகக் கொண்டயாகங்களாலே சாஸ்திரத்தில் சொல்லிய முறையைமீறி என்னை ஆராதிக்கின்றார்கள். எவர்கள் அகங்காரத்தையும் தேகபலத்தையும் இறுமாப்பையும் காமத்தையும் குரோதத்தையும் உடையவர்களாகித் தம்தேகத்திலும் பிறர்தேகங்களிலும் நிலைபெற்றிருக்கின்ற என்னைத் துவேஷித்து என்னிடத்தில்அஸூயையுள்ளவர்களாயிருக்கிறார்களோ குரூரர்களும் சத்ருக்களும் அமங்களகரர்களுமாயிருக்கின்றஅந்தநராதமர்களை (ஜன்மஜராமரணரூபமாக அடிக்கடிசுழன்றுகொண்டிருக்கின்ற) ஸம்ஸாரங்களில் ஆஸுரஸ்வபாவமுடைய ஜன்மங்களிலேயே நான் எப்பொழுதும் தள்ளுகிறேன். குந்தீபுத்திர!

ஆஸுரமானஜன்மத்தை அடைந்தவர்கள் பிறவிதோறும்விபரீதஞான முடையவர்களாக என்னை அடையாமலே அதைக்காட்டிலும்தாழ்ந்த தானகதியை அடைகிறார்கள். காமம் குரோதம் லோபம்எனமூன்று விதமானஇவைகள் நரகத்துக்குவாயிலும் தனக்குக்கெடுதலைவிளைவிக்கின்றவையுமாயிருக்கின்றன. ஆதலால் இந்தமூன்றையும் விட்டுவிட வேண்டும். குந்தீபுத்திர! நரகத்துக்குவாயிலாயிருக்கின்றஇம்மூன்றிலும் விடுபட்டமனிதன் தனக்கு நன்மையைச் செய்துகொள்ளுகிறான். அதனால் உத்தமமானகதியை (மோக்ஷத்தை) அடைகிறான். எவன் சாஸ்திரத்தில்சொல்லப்பட்டமுறையைவிட்டுத் தன்இஷ்டப்படி நடக்கிறானோ அவன் ஒருவிதமான ஸித்தியையும் அடையமாட்டான்; ஸுகத்தையும் அடையமாட்டான்; உத்தமமானகதியையும் அடையமாட்டான். ஆதலால், செய்யத்தக்கது செய்யத்தகாதது என்கிறவியவஸ்தையில் உனக்குச் சாஸ்திரமானது பிரமாணமாயிருக்கிறது. சாஸ்திரவிதியினால் சொல்லப்பட்டதை அறிந்து இவ்வுலகத்தில் கர்மத்தைச்செய்வதற்கு நீ தகுந்தவனாயிருக்கிறாய்' என்று சொன்னார்.

---

நாற்பத்தோராவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)

## பகவத்கீதை.

### பதினேழாவது அத்யாயம்.

### (ச்ரத்தாத்ரயவிபாகயோகம்.)

அர்ஜுனன், 'கிருஷ்ண! எவர்கள் சாஸ்திரமுறையைவிட்டு ச்ரத்தையோடு (பகவானை) ஆராதிக்கின்றார்களோ அவர்களுக்கு ஸத்வகுணத்திலா அல்லது ரஜோகுணத்திலா அல்லது தமோகுணத்திலா எந்தக்குணத்தில் ஸ்திதிஏற்பட்டிருக்கிறது?' என்றுவினவினான்.

ஸ்ரீ பகவான் சொல்லலானார். 'தேகத்தையுடையவர்களுக்கு (பூர்வகர்மவாஸனையினால்) தானாகவேஉண்டாகிற அந்தச்ரத்தையானது ஸாத்விகமென்றும் ராஜஸமென்றும் தாமஸமென்றும் மூன்று விதமாயிருக்கிறது. அதைக் கேள். பாரத! எல்லாமனிதர்களுக்கும் அவரவர்களுடையஅந்தக்கரணத்துக்குத்தக்க ச்ரத்தை உண்டாகி

றது. இந்தப்புருஷனுனவன் ஶ்ரத்தையினுடையபரிணமமாயிருப்ப வன். எந்தப்புருஷன் எவ்விதமானஶ்ரத்தையுடன்கூடியவனுகிறனே அவன் அப்படிப்பட்டஶ்ரத்தையைஉடையவனே. ஸத்துவகுண முடையவர்கள் தேவர்களையும் ரஜோகுணமுடையவர்கள் யக்ஷர்களை யும் ராக்ஷஸர்களையும் தமோகுணமுடைய மற்றஜனங்கள் பிரேதர்களை யும் பூதகணங்களையும் பூஜிக்கின்றுர்கள். டம்பத்தையும் அகங்காரத் தையுமுடையவர்களும் காமம் ராகம் பலம் இவைகளையுடையவர்க ளும் விவேகமற்றவர்களும் சரீரத்திலிருக்கின்ற பூதஸங்காதத்தையும் அச்சரீரத்தினுள் இருக்கின்றஎன்னையும் துன்பத்துக்குஉள்ளாக்கு கின்றவர்களுமாகி எந்த ஜனங்கள் சாஸ்திரத்தினுல்விதிக்கப்படாத தும் குரூரமுமாயிருக்கின்றதவத்தைச் செய்கின்றுர்களோ அவர்களை அஸுரஸம்பந்தமானநிச்சயமுடையவர்களென்று அறி. எல்லாப் பிராணிகளுக்கும் (ஸத்வமுதலானமுக்குணங்களுடையஸம்பந்தத்தி னுல்) பிரியமானஆகாரமும் மூன்றுவிதமாயிருக்கிறது. அவ்வாறே யஜ்ஞமும் தவமும் தானமும் மூன்றுவிதமாயிருக்கின்றன. அவைக ளுடைய இப்படிப்பட்டபேதத்தைக் கேள். ஸத்வகுணமுள்ளவர்க ளுக்கு ஆயுள், ஞானம், பலம், ஆரோக்கியம், ஸுகம், பிரீதி இவை களை விருத்திசெய்கின்றவைகளும் மதுரரஸமுள்ளவைகளும் பசை யுள்ளவைகளும் ஸ்திரமானவைகளும் மனத்திற்கினியவைகளுமான ஆகாரங்கள் (பிரியமானவை.) உறைப்பு, புளிப்பு, உப்பு, அதிகஉஷ் ணம், தீக்ஷணம், வரட்சி, தாபம்இவைகளுள்ளவையும் துக்கம்சோகம் ரோகம் இவைகளைஉண்டாக்கத்தக்கவையுமான ஆகாரங்கள் ராஜஸ ஸ்வபாவமுடையவனுக்கு இஷ்டமானவைகள். [1]பக்குவமாய் அதிக காலம் சென்றதும் ஸாரமற்றதும் துர்க்கந்தமுள்ளதும் பக்குவம் செய்து ஓரிரவுசென்றதும் ஒருவன்சாப்பிட்டுமிச்சம்வைக்கப்பட்ட தும் அசுத்தமுமாயிருக்கிறஆகாரமானது தமோகுணமுள்ளவர்களுக் குப் பிரியமானது. பயனில் விருப்பமில்லாதவர்களானமனிதர்களால் அவஶ்யமாக யஜ்ஞம்செய்யவேண்டுமென்று மனத்தைஸ்திரப்படுத்திக் கொண்டு சாஸ்திரத்தினுலறியப்பட்டஎந்தயஜ்ஞமானது அனுஷ்டிக் கப்படுகிறதோ அது ஸாத்விகயஜ்ஞம். பாரதகுலசிரேஷ்டனே! பலனைக் கருதியாவது டம்பத்துக்காவது எது செய்யப்படுகிறதோ அந்த யஜ் ஞத்தை ராஜஸமென்றுஅறி. விதிப்படியில்லாததும் ப்ராம்மணர் களுக்கு அன்னமிடாததும் மந்திரங்களைவிட்டுவிலகியதும் தக்ஷிணை இல்லாததும் ஶ்ரத்தையின்றிச்செய்யப்படுகின்றதுமானயஜ்ஞத்தைத்

1 'யாதயாமம்' என்பதுமூலம்; (ச-ம்) மந்தபக்வம்.

தாமஸமென்றுசொல்லுகிறார்கள். தேவதைகள், பிராம்மணர்கள், ஆசார்யர்கள், அறிவில்சிறந்தவர்கள் இவர்களைப்பூஜிப்பதும் சுத்தியும் நேர்மையும் பிரம்மசர்யமும் பிறருக்குத்துன்பம்செய்யாமையும் சரீரத்தினால்செய்யத்தக்கதவமென்று கூறப்படுகின்றன. பிறருக்குமனவருத்தத்தைஉண்டுபண்ணாததும் யதார்த்தமானதும் இன்பமானதும் வருங்காலத்தில் நன்மையைப்பயக்கக்கூடியதுமான வார்த்தையும் வேதசாஸ்திராப்யாஸமும் வாக்கினால்செய்யத்தக்க தவமென்றுசொல்லப்படுகின்றன. மனத்தினுடையதெளிவும் [1]பிறர்ஆக்கத்தில்மகிழ்ச்சியும் மௌனமும் மனத்தை அடக்குதலும் ஆன்மாவைத்தவிரவேறு விஷயங்களில் சிந்தைஇல்லாமலிருத்தலும் மனத்தினால்செய்யத்தக்க தவமென்றுகூறப்படுகின்றன. பலனில் ஆசையற்றவர்களும் மனத்தையடக்கியவர்களுமான மனிதர்களாலே உத்தமமானஶ்ரத்தையுடன் மனோவாக்குக்காயங்களால் செய்யப்பட்ட அந்தமூன்றுவிதமானதவத்தையும் ஸாத்விகமென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். மனத்தினால் ஆதரித்தல், வாக்கினால்புகழ்தல், நமஸ்காரம் இவைகளைஉத்தேசித்தும் டம்பத்தினாலும் எந்தத்தவம் செய்யப்படுகிறதோ சஞ்சலமானதும் ஸ்திரமில்லாததுமான அந்தத்தவமானது இவ்வுலகத்தில் ராஜஸமென்று சொல்லப்படுகிறது. அவிவேகமூலமான துராக்கிரஹத்தினாலேயாவது தனக்கு அதிகமானவருத்தத்தை உண்டுபண்ணிக்கொள்வதினாலேயாவது பிறருடையநாசத்தின் பொருட்டாவது எந்தத்தவம் செய்யப்படுகிறதோ அது தாமஸமென்று சொல்லப்படுகிறது. கொடுக்கவேண்டுமென்கிற நிச்சயத்துடன் எந்தத்தானமானது (பிரதியுபகாரம்கருதாமல்) உபகாரம்செய்யாததக்கவனுக்குப் புண்ணியதேசத்திலும் புண்ணியகாலத்திலும் கொடுக்கப்படுகிறதோ அந்தத்தானமானது ஸாத்விகமென்று எண்ணப்பட்டிருக்கிறது. பிரதிப்ரயோஜனத்தை உத்தேசித்தாவது பலனைக்கருதியாவது மனவருத்தத்தோடுகூடியாவது எந்தத்தானமானது செய்யப்படுகிறதோ அது ராஜஸமென்றுஎண்ணப்பட்டிருக்கின்றது. அசுத்தமானதேசத்திலும் காலத்திலும் அயோக்கியர்களின்பொருட்டு மர்யாதைஇல்லாமலும் அவமதிப்புடனும் எந்தத்தானம் செய்யப்படுகிறதோ அது தாமஸமென்று சொல்லப்பட்டிருக்கிறது. 'ஓம்' என்றும், 'தத்' என்றும், 'ஸத்' என்றும் மூன்றுவித சப்தங்கள் வேதோக்தங்களான யாகமுதலியகர்மங்களை ஒட்டினவைகளாயிருக்கின்றன. அந்தச் சப்தங்களால் [2]பிராம்மணர்

[1] 'ஸௌம்யத்வம்' என்பதுமூலம். [2] (ரா - ம்) மூன்று வர்ணத்தார்களும்,

களும் மூன்று வேதங்களும் யஜ்ஞங்களும் ஆதிகாலத்தில் (என்னாலேயே) ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் வேதத்தைச்சொல்லுகிறவேதியர்களுடைய சாஸ்திரோக்தமான யாகமும் தானமும் தவமுமாகியகிரியைகள், 'ஓம்' என்கிறசப்தத்தின் உச்சாரணத்தை முன்னிட்டே எப்பொழுதும் ஆரம்பிக்கப்படுகின்றன. மோக்ஷத்தில்விருப்பமுள்ளவர்களால், 'தத்' என்கிறசப்தத்தைஉச்சரித்துப் பலனைக்கருதாமல் பற்பலவிதமான்யஜ்ஞங்களும் தவங்களும் கிரியைகளும் தானங்களும் அனுஷ்டிக்கப்படுகின்றன. பார்த்த! 'ஸத்' என்கிற இந்தச்சப்தமானது இருத்தல்என்கிறஅர்த்தத்திலும் மங்களமென்கிறஅர்த்தத்திலும் (எல்லாவஸ்துக்களிலும்) பிரயோகிக்கப்படுகிறது. அவ்வாறே சிறந்தகர்மாவினிடத்திலும், 'ஸத்' என்கிறசப்தம் பிரயோகிக்கப்படுகிறது. யஜ்ஞத்திலும் தவத்திலும் தானத்திலும் நிலைபெற்றிருத்தலானது (மங்களகாமாயிருப்பதால்) ஸத்என்றுசொல்லப்படுகிறது. பகவதர்ப்பணமாகச்செய்யும்யஜ்ஞம் தானமுதலான கர்மங்களும், 'ஸத்' என்றே சொல்லப்படுகின்றன. பார்த்த! அஶ்ரத்தையினால்செய்யப்படும்ஹோமம், தானம், தவம்இவைகள் அஸத் என்றுசொல்லப்படுகின்றன. அவை மோக்ஷத்தின்பொருட்டாவது ஸம்ஸாரஸுகத்தின் பொருட்டாவது பயன்படா' என்றுசொன்னார்.

---

## நாற்பத்திரண்டாவது அத்யாயம்.

## பகவத்கீதாபர்வம். (தொடர்ச்சி.)



## பகவத்கீதை.

### பதினெட்டாவது அத்யாயம்.

( [1]ஸந்யாஸயோகம்.)

அர்ஜுனன், 'மிக்கபுஜபலமுள்ளவரே! ஹ்ருஷீகேசரே! கேசிஎன்னும்அஸுரனைநாசம்செய்தவரே! ஸந்யாஸம்த்யாகம் இவற்றின் தத்வத்தை நான் தனித்தனி தெரிந்துகொள்ளவிரும்புகிறேன்' என்றுகேட்டான்.

ஸ்ரீபகவான் சொல்லலானார். '(சில) வித்வான்கள் காம்யகர்மங்களை விடுவதை ஸந்யாஸம்என்றுஅறிகிறார்கள். (சில) பண்டிதர்கள் எல்லாக்

---

1 மோக்ஷஸந்யாஸயோகம்என்றும், ஸகலசாஸ்த்ரார்த்த ஸங்க்ரஹமோக்ஷோபதேசயோகம்என்றும் வழங்கும்.

கர்மங்களுடையபலத்யாகத்தையும் த்யாகம்எனக்கூறுகின்றனர். சில பண்டிதர்கள் (காபிலர்களும் அவர்களை அனுஸரிக்கின்றவைதிகர்களும் ராகாதி) தோஷங்கள்போல (பந்தத்துக்குக்காரணமாயிருத்தலால்) கர்மாவானது (முமுக்ஷுவினால்) விடத்தக்கதென்றும் வேறுசிலர் யாகம் தானம் தவம்இந்தக்கர்மங்கள்விடத்தக்கனவல்லவென்றும் சொல்லுகிறார்கள். பாதவம்சத்தில் பிறந்தவர்களுள் உத்தமனே! முன்கூறப்பட்டுள்ளதியாகவிஷயத்தில் என்னுடையநிச்சயத்தைக் கேள். புருஷஸ்ரேஷ்ட! தியாகமானது மூன்றுவிதமென்று கூறப்பட்டிருக்கிறது. யாகம், தானம், தவங்களாகிறகர்மங்கள் விடத்தக்கவையல்ல. அவை செய்யத்தக்கனவே.யஜ்ஞமும் தானமும் தவமும் மனனசீலர்களுக்குப் பாவனமாயிருப்பவைகள். பார்த்த! ஆனாலோ, மமதையையும் பயன்களையும்விட்டு (முமுக்ஷுவினால்) இந்தக்கர்மங்கள் அவஶ்யம் அனுஷ்டிக்கத்தக்கனவென்பது நிச்சயமானஎன்னுடையசிறந்த அபிப்பிராயம். அவசியம்செய்யவேண்டியதாகவிதிக்கப்பட்ட கர்மத்தைவிடுவது கூடாது. அவிவேகத்தினால்அதைவிடுவது தாமஸமென்றுசொல்லப்படுகிறது. எவன் கஷ்டப்பட்டுஸாதிக்கத்தக்கதாயிருப்பதினால் சரீரப்ரயாஸத்துக்குப்பயந்து செய்யத்தக்கதை விடுகிறானோ அவன் ரஜோகுணமூலமான தியாகத்தைச்செய்து தியாகபலனை அடைகிறதேயில்லை. அர்ஜுன! நித்யநைமித்திகஸ்வரூபமானகர்மாவானது அவஶ்யம்செய்யத்தக்கதென்றே மமதையையும் பலாபேக்ஷையையும்விட்டு எதுசெய்யப்படுகிறதோ அது ஸாத்விகத்யாகமென்று எண்ணப்பட்டிருக்கிறது. ஸத்வகுணத்தினால்அடையப்பட்டவனும் தத்வஜ்ஞானமுடையவனும் ஸம்சயமற்றவனுமான தியாகியானவன் துக்ககாமானகர்மத்தை த்வேஷிக்கிறதுமில்லை; க்ஷேமகாமானகர்மத்தில் ஒட்டுகிறதுமில்லை. சரீரத்தைத்தரித்திருக்கின்றவனால் கர்மங்கள் முழுதும்விடுவதற்கு ஸாத்தியமாகா. எவன் கர்மபலனைவிட்டவனோ அவன் தியாகிஎன்று சொல்லப்படுகிறான். பலாபேக்ஷையுடன் கர்மங்களைச் செய்பவர்களுக்குக் கர்மானுஷ்டானத்துக்குப் பிறகாலத்தில் துக்ககாமானநாகம் ஸுககாமானஸ்வர்க்கம் ஸுகதுக்கங்களோடு கலந்திருக்கின்ற பசுபுத்திராதிகள் என மூன்றுவிதமானகர்மபலன்கள் உண்டாகின்றன; பலாபேக்ஷயின்றிக் கர்மம்செய்பவர்களுக்கு ஒருபோதும் உண்டாகிறதில்லை. மிக்கபாஹுபலமுள்ளவனே! உள்ளபடி தத்வநிர்ணயத்தின்பொருட்டுப்ரவ்ருத்தித்திருக்கிற வேதபாகத்தில் எல்லாக்கர்மங்களின்ஸித்தியின்பொருட்டும் சொல்லப்பட்டிருக்கிற இந்தஐந்துகாரணங்களையும் என்னிடமிருந்து தெரிந்துகொள். சரீரமும், அவ்வாறே

ஜீவாத்மாவும், தனித்தனிமாதிரியுள்ள இந்திரியங்களும், பலவிதங்களும் வெவ்வேருனசெய்கைகளையுடையவைகளுமான பிராணன்முதலானவாயுக்களும் காரணங்கள். இவைகளில் தெய்வமும் ஐந்தாவதாயிருக்கிறது. மனிதன் சரீரத்தாலும் வாக்கினாலும் மனத்தினாலும் நியாயமாகவோ அல்லது நியாயத்தவருகவோ எந்தக்கார்யத்தைச்செய்யத்தொடங்குகிருனே அந்தக்கர்மத்துக்குக் கீழேகூறப்பட்டஇவ்வைந்தும் காரணங்களாயிருக்கின்றன. இவ்வாறு பரமாத்மாவினுடையஅநுமதியைமுன்னிட்டே ஜீவாத்மாவுக்குக் கர்த்ருத்வம்ஸித்தித்திருக்க, கெட்டபுத்தியுள்ளஎந்தமனிதன் அந்தஅந்தவினைகளில் தன்னையே கர்த்தாவென்று அறிகிருனே அவன் விவேகமற்றபுத்தியையுடையவனாதலால் உள்ளபடி கர்த்தாவை நன்குஅறிவதில்லை. எவனுக்கு, 'நான்' என்கிறஎண்ணமில்லையோ, எவனுடையபுத்தியானது (கர்மபலவிருப்பத்தினால்)பற்றப்படவில்லையோ அவன் இவ்வுலகத்தார்களைக்கொன்றாலும் கொன்றவனாகான். அவன்(கர்மபலத்தினால்) கட்டப்படுகிறதுமில்லை. கர்மங்களைப்பற்றியவிதியானது அறிவு, அறியத்தக்ககர்மம், அறிகிறவன்என மூன்றுவிதமாயிருக்கிறது. கர்மஸங்கிரஹமும் ஸாதநபூதமானத்ரவ்யம், கர்மம், கர்த்தாஎன இவ்வாறு மூன்றுவிதமாயிருக்கிறது. குணகார்யங்களை எண்ணுங்கால் ஞானம், கர்மம், கர்த்தா (இம்மூன்றும் ஸத்வம், ரஜஸ், தமஸ்என்கிறமூன்று) குணங்களுடையபேதத்தினால் மூன்றுவிதமாகவே சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளையும் உள்ளபடி கேள். வெவ்வேருயிருக்கிறஎல்லாப்பிராணிகளிடத்திலும் தனித்தனியாகப் பிரிக்கப்படாததும் ஒன்ருயிருப்பதும் விகாரமற்றதுமானஆத்மஸ்வரூபத்தை எதனால் பார்க்கிருனே அந்தஞானத்தை ஸாத்விகமென்றுஅறி. வஸ்துக்களுடையவேறுபாட்டினால் எல்லாப்பூதங்களிலுமிருக்கின்றஆத்மஸ்வரூபங்களையும் நானாவிதங்களாகவும் தனித்தனிமாதிரியுள்ளவைகளாகவும் எந்தஞானம் அறிகிறதோ அந்தஞானத்தை ராஜஸமென்று அறி. எந்தஞானமானது (அற்பப்பயனுள்ள) ஒருகார்யத்தில், நிறைந்தபயன்களுடன்கூடினகாரியத்தில்போலக் காரணமின்றிப் பற்றுதலுள்ளதாயிருக்கிறதோ உண்மையில்லாத அர்த்தங்களையுடையதும் அல்பமுமானஅந்தஞானமானது தாமஸமென்று சொல்லப்பட்டிருக்கிறது. தத்தம்வர்ணாச்ரமங்களுக்குரிய எந்தக்கர்மாவானது பயனில் பற்றுதலில்லாதஒருவனால் கர்த்ருத்வம், மமதைமுதலியவற்றையிழந்தும் ராகத்வேஷங்களைவிட்டும் அனுஷ்டிக்கப்படுகிறதோ அது ஸாத்விகமானகர்மமென்று கூறப்பட்டிருக்கிறது. பயனில்விருப்பமுள்ள

வனுலாவது அகங்காரமுள்ளவனுலாவது அதிகஆயாஸத்துடன்கூடிய எந்தக்கர்மம் செய்யப்படுகிறதோ அந்தக்கர்மாவானது ராஜஸமென்று கூறப்படுகிறது. செய்யப்படும்காரியத்தில் தொடர்ச்சியாகப் பின்னே ஸம்பவிக்கக்கூடியதுக்கத்தையும் பொருட்செலவையும் பிராணிஹிம்ஸையையும் தன்னுடையவல்லமையையும் ஆலோசியாமல் மோகத்தினுல் எந்தக்காரியம் தொடங்கப்படுகிறதோ அந்தக்கார்யமானது தாமஸமென்று சொல்லப்படுகிறது. பலாபேக்ஷை இல்லாதவனும் கர்த்ருத்வாபிமானத்தைஇழந்தவனும் தைர்யமுடையவனும் உத்ஸாஹமுள்ளவனும் கார்யத்தினுடையஸித்தியிலும் அஸித்தியிலும் ஹர்ஷசோகங்களை இழந்தவனுமான கர்த்தாவானவன் ஸாத்விகனெனக் கூறப்படுகிறுன். (புகழ்ச்சியில்) விருப்பமுள்ளவனும் வினைப்பயனை விரும்பியவனும் க்ருபணனும் பிறருக்குத்துன்பஞ்செய்து அவர்களால்தன்கார்யத்தைமுடிக்கிறவனும் (கர்மங்களுக்குஉரிய) சுத்தியில்லாதவனும் (கர்மங்களுடையஸித்திஅஸித்திஇவைகளில்) ஹர்ஷசோகங்களைஅடைகிறவனுமான கர்த்தாவானவன் ராஜஸன்என்று சொல்லப்படுகிறுன். மனத்தில்ஸமாதானமற்றவனும் அவிவேகியும் வணக்கமில்லாதவனும் [1]அபிசாராதிகர்மங்களில் ருசிஉள்ளவனும் வஞ்சனையைப்பிரதானமாகக்கொண்டவனும் சோம்பலுள்ளவனும் அதிகமாக மனவருத்தத்தைப்பாராட்டுகிறவனும் காலவிளம்பம்செய்கிறவனுமானகர்த்தா தாமஸனென்றுசொல்லப்படுகிறுன். தனஞ்சய! விவேகத்தை முன்னிட்டநிச்சயரூபமானஞானம் தைர்யம்இவ்விரண்டுக்கும் ஸத்வாதிகுணங்களால்ஏற்பட்டிருக்கும்மூன்றுவிதபேதங்கள் என்னுல்தனித்தனியாக முழுதும் எடுத்துஉரைக்கப்படப்போகின்றன. அவைகளை நீ கேள். ஓ! பார்த்த! ப்ரவ்ருத்திநிவ்ருத்திதர்மங்களையும் கார்யாகார்யங்களையும் பயாபயங்களையும் பந்தத்தையும் மோக்ஷத்தையும் எந்தப்புத்தியானது அறிகிறதோ அந்தப்புத்தியானது ஸாத்விகமானது. பார்த்த! எந்தப்புத்தியினுல் தர்மத்தையும் அதர்மத்தையும் கார்யத்தையும் அகார்யத்தையும் உள்ளபடியன்றி அறிகிறுனே அந்தப்புத்தியானது ராஜஸமானது. அர்ஜுன! எந்தப்புத்தியானது அஜ்ஞானத்தினுல்மூடப்பட்டு அதர்மத்தைத் தர்மமென்றும் தர்மத்தை அதர்மமென்றும் ஸகலவஸ்துக்களையும் விபரீதங்களாகவும் எண்ணுகிறதோ அந்தப்புத்தியானது தாமஸமானது. அர்ஜுன! மோக்ஷஸாதனமானஏகவஸ்துபாஸநத்தின்பொருட்டு மனம் பிராணன் இந்திரியங்கள் இவைகளுடையசெய்கைகளைத் தவறுமலிருக்கிற எந்தத்தைர்

[1] 'சடஃ' என்பதுமூலம். (ச-ம்) மாயாவி.

யத்தினால் நிலைநிறுத்துகிறானோ அந்தத்தைர்யம் ஸாத்விகமானது. அர்ஜுன! குந்திபுத்திர! பயனில்விருப்பமுள்ளமனிதன் அதிகப்பற்றுதலோடு தர்மகாமார்த்தஸாதனங்களான பிராணன்இந்திரியங்கள்மனம் இவைகளுடையசெய்கைகளை எந்தத்தைர்யத்தினால் தவறவிடாமலிருப்பானோ அந்தத்தைர்யமானது ராஜஸமானது. ஓ! பார்த்த! துஷ்டபுத்தியை உடையவன் எந்தத்தைர்யத்தினாலே உறக்கம், பயம், சோகம், வ்யஸனம், மதம் இவைகளை விடுவதில்லையோ அந்தத்தைர்யம் தாமஸமானது. பரதகுலத்தில்பிறந்தவர்களுள் உத்தமனே! புருஷன் எந்தஸுகத்தில் பழக்கத்தினால் ரமிக்கிறானோ, ஸகலதுக்கங்களுடையமுடிவையும் அடைகிறானோ அப்படிப்பட்ட ஸுகமும் மூன்றுவிதமாயிருக்கிறது. அதை இப்பொழுது என்னிடமிருந்து கேள். எந்தஸுகமானது தொடக்கத்தில்விஷம்போலவும் முடிவில் அமிருதம்போலவும் ஆகிறதோ ஆத்மவிஷயமான புத்தியினுடைய தெளிவினால்உண்டானஅந்தஸுகம் ஸாத்விகமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அனுபவிக்குங்காலத்தில் விஷயேந்திரியங்களுடையஸம்பந்தத்தினால் எந்தஸுகமானது அமிருதத்துக்குஒப்பானதும் முடிவில்விஷம்போன்றதுமாகிறதோ அந்தஸுகமானது ராஜஸமென்று எண்ணப்பட்டிருக்கிறது. எந்தஸுகமானது தொடக்கத்திலும் முடிவிலும் தனக்குமோகத்தை உண்டாக்குவதும் நித்திரைஆலஸ்யம் அஜாக்ரதைஇவைகளால் உண்டானதுமாயிருக்கிறதோ அந்தஸுகமானது தாமஸமென்று சொல்லப்பட்டிருக்கிறது. பூமியில் (மனுஷ்யாதிகளிலாவது) தேவலோகத்தில் தேவர்களுள்ளாவது பிரகிருதியினிடத்திநின்று உண்டான இந்தமுக்குணங்களாலும் விடுபட்டபிராணியானது இல்லை. பகைவர்களைவாட்டுபவனே! பிராம்மணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் வைசியர்களுக்கும் சூத்ரர்களுக்கும் பிராசீனமானகர்மவிசேஷங்களால்உண்டாயிருக்கிற ஸத்வம்ரஜஸ்தமஸ் என்னும்மூன்றுகுணங்களாலும் கர்மங்கள் தனித்தனி பிரிக்கப்பட்டிருக்கின்றன. சமம், தமம், தவம், சுத்தி, பொறுமை, நேர்மை, ஞானம், விஜ்ஞானம், வைதிகார்த்தங்கள்முழுமையும்ஸத்தியம்என்கிறநிச்சயம்இவைகளெல்லாம் பிராம்மணனுக்கு ஸ்வபாவத்தினாலுண்டான கர்மங்களாயிருக்கின்றன. சௌர்யம், பிறரால் அவமதிக்கக்கூடாமலிருத்தல், தொடங்கினகார்யத்தை எவ்விதமான இடையூறுகள்வந்தாலும் முடிக்குந்திறமை எல்லாக்கார்யங்களையும் நிறைவேற்றும்வல்லமை, யுத்தத்தில்புறங்காட்டிஓடாமலிருத்தல், கொடை, எல்லாப்பிராணிகளையும்அடக்கிஆளும்திறமைஇவைகளனைத்தும் க்ஷத்திரியர்

களுக்கு ஸ்வபாவஸித்தமான கர்மங்கள். பயிரிடுதல், பசுக்காத்தல், வர்த்தகஞ்செய்தல் இவையனைத்தும் வைசியர்களுக்கு இயற்கையா லமைந்த தொழில்கள். ப்ராம்மணர்கள்முதலான மூன்றுவருணத் தார்களுக்கும் ஊழியம்செய்வது சூத்திரனுக்கு ஸ்வபாவத்தினலுண் டான கர்மமாயிருக்கிறது. மனிதன் அவனவனுக்கு விதித்திருக் கின்ற கர்மத்தில் ச்ரத்தையோடிருந்தால் ஸித்தியை அடைகிறான். தனக்குரிய கர்மங்களில் நிலைபெற்றவன் எவ்வாறு ஸித்தியை அடை கிறானென்பதை நீ கேள். எவனிடத்திலிருந்து பிராணிகளுக்கு ப்ரவ்ருத்தி உண்டாகிறதோ, எவனால் இவ்வுலகம் அனைத்தும் வ்யா பிக்கப்பட்டிருக்கிறதோ அந்தப் பரமாத்மாவை மனிதன் தனக்குரிய கர்மங்களால் அர்ச்சித்து ஸித்தியை அடைகிறான். பிறருடைய தர் மத்தை நன்றாக அநுஷ்டிப்பதைக்காட்டிலும், தன்னுடைய தர்மத்தை முறைப்படி அனுஷ்டியாமையால் குணக்குறைவுள்ளதாகச் செய் வதும் சிறந்ததே. ஸ்வபாவஸித்தமான கர்மத்தைச்செய்கிறவன் பாவத்தை அடையமாட்டான். குந்தீபுத்ர! தோஷமுள்ளதா யிருந்தாலும் தனக்குரிய கர்மத்தை விடக்கூடாது. எல்லாக்கர்மங் களும் புகையினால் அக்நி சூழப்பட்டுவதுபோலத் தோஷத்தினால் சூழப் பட்டிருக்கின்றன. பயன் முதலானவைகளில் பற்றுதலற்ற மனத்தை யுடையவனும், மனத்தையடக்கினவனும், ஆசையற்றவனும், ஸந்யா ஸத்தையுடையவனுமாயிருப்பவன் உத்தமமான ஞானயோகத்துக்கும் பயனாயிருக்கிற த்யானநிஷ்டையை அடைகிறான். குந்தீபுத்ர! கர்ம யோகத்தினால் ஸாதிக்கத்தக்க த்யானஸித்தியைப்பெற்றவன் த்யானாத் மகமான ஞானத்தினால் முக்கியமாக அடையத்தக்க ப்ரம்மத்தை அடைகிறவிதத்தை என்னிடமிருந்து நீ சுருக்கமாகத்தெரிந்துகொள். பரிசுத்தமான புத்தியுள்ளவனும், தைரியத்தினால் மனத்தை அடக்கிச் சப்தமுதலான விஷயங்களை விட்டு விருப்புவெறுப்புக்களை விலக்கி ஏகாந்தஸ்தலத்தில் இருப்பவனும், மிதமான ஆகாரத்தை உட்கொள் பவனும், மனமொழிமெய்களை அடக்கினவனும், எப்பொழுதும் த்யான யோகத்தில் பற்றுள்ளவனும், வைராக்யத்தை நன்றாகஅடைந்தவனும், அகங்காரம், பலம், இறுமாப்பு, காமம், குரோதம், புத்திரமித்திராதி களிடம் அபிமானம் இவைகளை இழந்து மமதையற்றவனும், சாந் தனுமாயிருக்கின்ற மனிதன், ப்ரம்மபாவத்தை அடைவதற்குச் சக்தி யுள்ளவனாகிறான். ப்ரம்மமானவனும், தெளிந்த மனமுள்ளவனும், எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமத்ருஷ்டியுள்ளவனுமான ஒருவன், விசனப்படுகிறதுமில்லை; விரும்புகிறதுமில்லை; சிறந்ததான என்

னுடைய பக்தியை அடைகிறான். (ஸ்வரூபத்தாலும், ஸ்வபாவத்தி னாலும்) நான் எப்படிப்பட்டவனென்பதையும், (குணங்களாலும், விபூதியினாலும்) நான் எவ்வளவு பரிமாணமுள்ளவனென்பதையும் (இவ் விதமான) பக்தியினால் உள்ளபடியறிகிறான். என்னை உள்ளபடி அறிந்து அவ்வித தத்வஞானம் வந்தபிறகு அந்தப் பக்தியினால் என்னை யடைகிறான். என்னையே ஆஸ்ரயித்தவனாகி எல்லாக்கர்மங்களையும் எப்பொழுதும் செய்கிறவன் என்னுடைய அருளால் சாஸ்வதமும் [1] அழிவற்றதுமான பதத்தை அடைகிறான். நீ எல்லாக்கர்மங்களை யும் மனத்தினால் என்னிடத்தில் ஒப்பித்து என்னையே பயனாக அடை யத்தக்கவனென்று அநுசந்தானம்செய்பவனும் (இவ்விதமான) புத்தியோகத்தைநாடி எப்பொழுதும் என்னிடத்திலேயே மனத்தை வைத்தவனுமாகக்கடவாய். நீ என்னிடத்திலேயே சித்தத்தைச் செலுத்தினவனாகி எல்லாக்கஷ்டங்களையும் என்னுடைய அநுக்ர ஹத்தினால் தாண்டப்போகிறாய். அவ்விதமின்றி நீ அகங்காரத்தினால் கேளாவிடின் விநாசத்தையடைவாய். அகங்காரத்தை அடைந்து, 'நான் யுத்தம் செய்யமாட்டேன்' என்று நீ நினைத்தால் இப்படிப்பட்ட உன்னுடைய நிச்சயமானது வீணாகும். ப்ரக்ருதியானது உன்னை யுத்தத்தில் ப்ரவ்ருத்திக்கும்படிசெய்யும். குந்தீபுத்ர! எந்த யுத்தத் தை அஜ்ஞானத்தினால் இப்பொழுது நீ செய்யவிரும்பவில்லையோ, அந்தயுத்தகாரியத்தையே ஸ்வபாவஸித்தமான உன்னுடைய கர்மத்தி னால் கட்டுப்பட்டுப் பரவசனாகச் செய்யப்போகிறாய். அர்ஜுன! ஈஸ்வரன், யந்திரத்தில் ஏறிய வஸ்துக்களைப்போல் எல்லாப்பிராணி களையும் (தன்னுடைய) மாயாசக்தியினால் (கர்மங்களில்) சுழன்று வரும்படி செய்துகொண்டு எல்லாப்பிராணிகளுடைய ஹ்ருதயத் திலும் இருக்கின்றான். பரதவம்சத்தில் பிறந்தவனே! மனம்வாக் குக்காயங்களால் (ஹ்ருதயகமலவாஸியான) அந்த ஈஸ்வரனையே நீ சரணமடைவாயாக. அந்த ஈஸ்வரனுடைய அருளால் ஸர்வகர்ம பந்த நிவ்ருத்தியையும் சாஸ்வதமான ஸ்தானத்தையும் அடைவாய். ரகஸ்யத்தைக்காட்டிலும் அதிரகஸ்மாயுள்ள ஞானம் இவ்வாறு உனக்கு என்னால் உரைக்கப்பட்டது. இதை முழுதும் ஆலோ சித்து எவ்வாறு நீ விரும்புகிறாயோ அவ்வாறு செய். எல்லா ரஹஸ்யங்களிலும் பரமரஹஸ்யமாயிருக்கிற என்னுடைய சிறந்த வசனத்தை மறுபடியும் நீ கேள். நீ எனக்கு மிகவும் இஷ்டனாக

1 'அவ்யயம்' என்பது மூலம். 'பரமஸர்வோத்க்ருஷ்டம்' என்பது பழைய உரை.

இருக்கிறாயென்கிற காரணத்தினால் உனக்கு ஹிதத்தைச் சொல்லப் போகிறேன். என்னிடத்தில் மனத்தைவைத்தவனும், என்னிடத்தில் பக்தியுள்ளவனும், என்னை ஆராதிக்கிறவனுமாகக்கடவாய். என்னை வந்தனம் செய். என்னையே நீ அடைவாய். எனக்கு ப்ரியனாக இருக்கிறாய். உனக்கு உண்மையாகப் பிரதிஜ்ஞை செய்கிறேன். எல்லாத் தர்மங்களையும் (முற்கூறியபடி பலம் கர்மம் கர்த்ருத்வம்முதலானவைகளுடைய பரித்யாகத்தினால்) த்யாகம்செய்து என்னை ஒருவனையே சரணமாக அடைவாயாக. நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் விடுவிப்பேன். நீ விசனமடையாதே. இந்த (பரமரஹஸ்யமான) சாஸ்திரமானது என்னால் உனக்கு உரைக்கப்பட்டது. இந்தச் சாஸ்திரமானது தவமில்லாதவன், ஆசார்யபக்தியில்லாதவன், கேட்கவிருப்பமில்லாதவன், என்னிடம் அஸூயையுள்ளவன் இவர்களுக்கு ஒருபொழுதும் சொல்லத்தக்கதன்று. எவன் இந்தப்பரமரஹஸ்யமான கீதாசாஸ்திரத்தை என்னுடைய பக்தர்களிடங்களில் சொல்லுவனோ அவன் என்னிடத்தில் சிறந்த பக்தியைச்செய்து என்னையே அடைவான்: ஸம்சயமில்லை. மனிதர்களுள் அவனைக் காட்டிலும் எனக்கு மிக்கப்ரியஞ்செய்பவன் ஒருவனும் இல்லை. பூமியில் அவனைக்காட்டிலும் எனக்கு மிக்க ப்ரீதிக்கு விஷயமானவன் வேறொருவன் உண்டாகப்போவதுமில்லை. எவன் நம்மிருவர்களுக்கும் நடந்ததும், தர்மத்தைவிட்டு விலகாததுமான இந்த ஸம்வாதத்தை அத்தியயனம் செய்வனோ அவனால் ஞானயஜ்ஞத்தினால் நான் ஆராதிக்கப்பட்டவனாவேனென்பது என்னுடைய எண்ணம். எந்த மனிதன் சிரத்தையுடனும் அஸூயையில்லாமலும் இந்தச் சாஸ்திரத்தைக் கேட்பானோ அவனும், ஸம்ஸாரபந்தத்தினின்று விடுபட்டுப் புண்யகர்மங்களைச் செய்தவர்களுக்குரிய நல்ல உலகங்களை அடைவான். பார்த்த! என்னால் உபதேசிக்கப்பட்ட இந்தச் சாஸ்திரார்த்தமானது உன்னால் மனவூக்கத்துடன் கேட்கப்பட்டதா? தனஞ்சய! அஜ்ஞானத்தினாலுண்டான மதிமயக்கமானது உனக்குப் போய் விட்டதா?' என்றார்.

அர்ஜுனன், 'அச்சுதரே! விபரீதஞானம் ஒழிந்துவிட்டது. உள்ளபடி தத்வஜ்ஞானமானது உம்முடைய அநுக்ரஹத்தினால் என்னால் அடையப்பட்டது. ஸந்தேகங்கள் நீங்கி ஸ்வஸ்தனாக இருக்கிறேன். உம்முடைய வசனத்தை அநுஷ்டிக்கப்போகிறேன்' என்று சொன்னான்.

இவ்வாறு வாஸுதேவருக்கும் மஹாத்மாவான பார்த்தனுக்கும் நடந்தேறியதும், ஆச்சரியத்தை உண்டுபண்ணுகின்றதும், மயிர்க் கூச்சத்தையுண்டுபண்ணுகிறதுமான இந்த ஸம்வாதத்தை நான் உள்ளபடி கேட்டேன். வ்யாஸருடைய அநுக்ரஹத்தினால் (எனக்கு ஞானக் கண்ணும் காதும் கிடைத்தமையால்) தாமே சொல்லுகின்ற யோகேசுவரரான ஸ்ரீ வாஸுதேவரிடத்தினின்று இந்தப் பரமாஹஸ்யமான யோகத்தை நான் நேரில் கேட்டேன். ராஜரே! கேசவருக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த பரிசுத்தமும் ஆச்சரியகரமுமான இந்த ஸம்வாதத்தை நான் நினைத்து நினைத்து அடிக்கடி சந்தோஷமடைகிறேன். அரசரே! (அர்ஜுனனின் பொருட்டுக் காட்டப்பட்டதும்) அத்யாச்சரியகரமுமாயுள்ள ஸ்ரீ ஹரியினுடைய அந்த விச்வரூபத்தை நினைத்து நினைத்து எனக்கு அதிகமான ஆச்சரியமானது உண்டாகிறது. அடிக்கடி ஸந்தோஷத்தையும் அடைகிறேன். எந்த இடத்தில் யோகங்களுக்கு ஈசுவரரான கிருஷ்ணபகவானும் எந்த இடத்தில் வில்லைத்தரித்த அர்ஜுனனும் இருக்கிறார்களோ அந்த இடத்தில் லக்ஷ்மி, விஜயம், அபிவிர்த்தி, நீதி இவைகள் சாச்வதமாக நிலைபெற்றிருக்குமென்பது என்னுடைய அபிப்பிராயம்' என்றான்.

பகவத்கீதை முற்றிற்று.

பகவத்கீதாபர்வம் முற்றிற்று.

## நாற்பத்துமூன்றாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம்.

(யுதிஷ்டிரர், பீஷ்மர்முதலானவர்களை வணங்கித் தம்பிமாருடன் தேரேறியதும், யுத்தபேரிகள் முழங்கியதும்.)

ஸ்ரீபத்மநாபருடைய முகாரவிந்தத்தினின்று தானாகவே வெளியில்வந்த அந்தக் கீதாசாஸ்திரமானது நன்றாகப் பாராயணம் செய்யத் தக்கது. வேறுசாஸ்திரங்களைப் படிப்பதினாலும் மநநஞ்செய்வதினாலும் யாதுபயன்? கீதாசாஸ்திரமானது ஸர்வசாஸ்திரஸ்வரூபம். ஹரியானவர் ஸர்வதேவஸ்வரூபி. கங்கையானது ஸர்வதீர்த்தஸ்வரூபம். மந்திரமானது ஸர்வவேதமயம். கீதா, கங்கா, காயத்ரீ, கோவிந்த என்கிற (க) காரத்துடன்கூடின நான்குபதங்களும் மனத்தில் நிலைபெற்றிருக்குமானால் மறுபடியும் பிறப்புக் கிடையாது. ஸ்ரீகேசவர் அறுநூற்றிருபதுசுலோகங்களைச் சொன்னார்.

அர்ஜுனன் ஐம்பத்தேழுசுலோகங்களைச் சொன்னான். ஸஞ்சயன் அறுபத்தேழுசுலோகங்களை உரைத்தான். திருதராஷ்டிரன் ஒரு சுலோகத்தைச் சொன்னான். ஆக எழுநூற்றுநாற்பத்தைந்து சுலோகங்கள் ஸ்ரீபகவத்கீதையிலுடைய அளவுஎன்று சொல்லப்படுகின்றன. பாரதமாகிற திருப்பாற்கடலைக் கடைந்து அதன் ஸர்வஸ்வமாகிற கீதையென்கிற சிறந்த அம்ருதத்தையெடுத்து ஸ்ரீவியாஸதேவர் அர்ஜுனனுடைய முகத்தில் ஹோமஞ்செய்தார். ஓ! அரசரே! பிறகு பாணங்களையும் காண்டீவத்தையும் தரித்தவனான தனஞ்சயனைக்கண்டு மஹாரதர்கள் திரும்பவும் மிக்க ஆரவாரஞ்செய்தார்கள். பாண்டவர்களும் ஸோமகர்களும் இன்னும் இவர்களை அநுஸரித்துவந்திருக்கிற வீரர்களும் மகிழ்ச்சியுற்று ஸமுத்திரத்தினின்று உண்டான சங்கங்களை ஊதினார்கள். பிறகு பேரிகைகளும் காளங்களும் ஜயமங்களைகளும் பசுவின் கொம்பினால் செய்யப்பட்ட வாத்யங்களும் விரைவாக நான்குபக்கங்களிலும் முழக்கப்பட்டன. அதனால் மிகுந்த சப்தம் உண்டாகியது. அரசரே! அவ்வாறே கந்தர்வர்களும் தேவர்களும் பித்ருக்களும் அந்த ஸித்தசாரணர்களுடைய கூட்டங்களும் யுத்தத்தைப்பார்க்க எண்ணங்கொண்டு ஒருங்கு கூடினார்கள். மிக்க பாக்யசாலிகளான ரிஷிகளும் சேர்ந்து இந்திரனை முன்னிட்டுக்கொண்டு அந்தப் பெரிய யுத்தத்தைப்பார்ப்பதற்காக அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். கங்கையமுனைகளுடைய வேகமானது ஒன்றையொன்று அடைந்து எவ்வாறு இருக்குமோ அவ்வாறே அவ்விரண்டு ஸேனைகளும் ஸன்னத்தமாக ஒன்றைஒன்று பார்த்துக்கொண்டு அசைவற்றிருந்தன. இவ்வாறு முயற்சிக்கின்றவைகளும் ஜனக்கூட்டத்தில் சப்தமில்லாதவைகளுமான அவ்விரண்டுஸேனைகளும் படத்தில் எழுதப்பட்ட சித்திரங்கள்போலப் பார்க்க மிக்கஅழகும் மங்களகரமுமாயிருந்தன. அரசரே! பிறகு வீரரும் தீரரும் தர்மராஜருமான யுதிஷ்டிரர் யுத்தத்திற்கு ஆயத்தமாக நிற்கின்றவையும் சமுத்திரம்போன்றவையும் அடிக்கடி நன்கு ஜ்வலிக்கின்றவையுமான அந்த இரண்டு சேனைகளையுங்கண்டு கவசத்தைக்கழற்றி உத்தமமான ஆயுதத்தையும் வைத்துவிட்டுத் தேரினின்றும் விரைவாகக் கீழேஇறங்கிக் கைகளைக்குவித்து மௌனத்துடன் பிதாமஹரை நோக்கப்பார்த்துக்கொண்டு கிழக்குமுகமாகக் கால்களாலேயே நடந்து பகைவர்களுடைய படையைக்குறித்துச் சென்றார். செல்லுகின்ற அந்தத் தர்மபுத்திரரைப் பார்த்துக் குந்தீபுத்திரனான தனஞ்சயன் தேரினின்றும் விரைவாக இறங்கிச் சகோதரர்

களுடன் அவரைப் பின்தொடர்ந்து சென்றான். பகவானான வாஸுதேவரும் அவரைப் பின்தொடர்ந்து சென்றார். அவ்வாறே முக்கியர்களான அரசர்களும் அந்தத் தர்மநந்தனரிடத்தில் மனத்தைச் செலுத்தியவர்களும் குதூகலமுள்ளவர்களுமாகச் சென்றார்கள். அர்ஜுனன், 'அரசரே! எங்களை விட்டுவிட்டுக் கிழக்குமுகமாகப் பகைவர்களுடைய படையைநோக்கிக் காலால் நடந்து செல்லுகின்றீர். உம்முடைய முயற்சியானது யாது?' என்று வினவினான். பீமஸேனன், 'ராஜேந்திரரே! பார்த்திவரே! சத்துருசேனைகள் கவசம் பூண்டிருக்குங்காலத்தில் கவசத்தையும், ஆயுதங்களையும் வைத்துவிட்டுத் தம்பிமார்களையும் விட்டுவிட்டு நீர் எங்கே போகிறீர்?' என்று வினவினான். நகுலன், 'பாரதரே! எனக்கு மூத்ததமையனாரானநீர் இவ்விதநிலைமையடைந்திருக்கையில், [1] பயமானது என்மனத்தை வருத்துகிறது. நீர் எங்கே போகின்றீர்? சொல்லும்' என்று கேட்டனன். ஸஹதேவன், 'வேந்தரே! மிக்க பயங்கரமான இந்தப்போர் வீரர்களின்கூட்டமானது இருக்கையில் (இதனை) விட்டுவிட்டுப் பகைவர்களுக்கெதிராக எங்கே போகிறீர்?' என்று வினவினான். குருநந்தனரான யுதிஷ்டிரர் ஸஹோதரர்கள் இவ்வாறு கேட்கவும் மௌனத்துடன் ஒன்றும் சொல்லாமல் சென்றுகொண்டேயிருந்தார். பேரறிவாளரும் மனவுறுதியுள்ளவருமான வாஸுதேவர் அவர்களைப்பார்த்து, 'நான் இவருடைய கருத்தை அறிந்துகொண்டேன்' என்று நகைத்துக்கொண்டே உரைக்கலானார். 'இந்த அரசர் பீஷ்மரையும் துரோணரையும் கிருபரையும் சல்யனையும் மற்றெல்லாப்பெரியோர்களையும் அனுமதிகொடுக்கும்படி செய்வித்துக்கொண்டு பகைவர்களோடு போர் புரியப்போகிறார். 'பெரியோர்களிடம் அனுமதிபெறாமல் யுத்தம் செய்கின்றவன் பெரியோர்களால் வெளிப்படையாகவே நிந்திக்கப் படுகின்றான்' என்று பழையநூல்களில் கேட்கப்படுகிறதன்றோ? எவன் சாஸ்திரத்தில் சொல்லியபடி (பெரியோர்களால்) அனுமதி கொடுக்கப்பட்டு மிக்க பலசாலிகளோடும் யுத்தம்செய்வானோ அவனுக்கு யுத்தத்தில் ஜயம் நிச்சயமாக உண்டென்பது என்னுடைய எண்ணம்' என்றார். அந்தஸமயத்தில் கிருஷ்ணபகவான் இவ்வாறு சொல்லுகையில் கௌரவர்களுடைய சேனையில் பெரிய ஆரவாரம் உண்டாயிற்று. மற்றவர்கள் பேசாமலிருந்தார்கள். துரியோதனனுடைய சேனையிலுள்ளவர்கள் தூரத்திலிருந்தே யுதிஷ்டிரரைப்பார்த்து 'இவன் குலத்தில் இழிவானவன். இந்த யுதிஷ்டிரராஜன் சகோதரர்

[1] வேறு பாடம்.

கமீளாடு பயந்தவன்போலத் தன் ரக்ஷணத்தைவேண்டிப் பீஷ்மருடைய பக்கத்தில் வருகிறான். இது நிச்சயம். தனஞ்சயனும் பாண்டுநந்தனனுன விருகோதரனும் நகுலனும் ஸஹதேவனும் ரக்ஷகர்களாக இருக்கையில் இந்தப்பாண்டவனை எவ்வாறு பயம் வந்துஅணுகியது? வன்மையற்றவனுன இவனுடைய மனமானது யுத்தத்தில் பயமடைந்ததால் பூமியில் மிக்க பிரஸித்திபெற்ற க்ஷத்திரியகுலத்தில் இவன் பிறந்தவனல்லனென்பது திண்ணம்' என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள். பிறகு உம்முடைய சேனையிலுள்ளவர்களெல்லாம் ஸந்தோஷமுள்ளவர்களும் நல்ல மனஉறுதியுடையவர்களுமாகிக் கௌரவர்களைப் புகழ்ந்தார்கள்; வஸ்திரங்களையும் வீசினார்கள். வேந்தரே! உம்முடைய யுத்தவீரர்கள் அனைவரும் ஸகோதரர்களோடும் கேசவரோடும்கூடின யுதிஷ்டிரரை அவ்வாறுநிந்தித்தார்கள். அரசரே! பிறகு அந்தக்கௌரவஸேனையானது யுதிஷ்டிரரை நிந்தித்துவிட்டு மறுபடியும் பேசாமலிருந்தது. 'இந்த யுதிஷ்டிரராஜர் என்னசொல்லப்போகிறாரோ? பீஷ்மர் என்ன மறுமொழி கூறப்போகிறாரோ? யுத்தத்தைப்புகழுகின்ற பீமனும் கிருஷ்ணார்ஜுனர்களும் என்ன சொல்லப்போகிறார்களோ? இந்த யுதிஷ்டிரர் எந்தவிஷயம் சொல்ல விரும்பியிருக்கிறாரோ?' என்று யுதிஷ்டிரர்விஷயத்தில் இரண்டு சேனைகளுக்கும் அப்பொழுது மிகப்பெரியஸந்தேகம் உண்டாயிற்று. அவர் பாணங்களாலும் சக்திகளாலும் நிறைந்திருக்கிற பகைவர் படையில் நுழைந்து பிராதாக்களால் சூழப்பட்டவராகப் பீஷ்மரை நோக்கியே விரைவாகச் சென்றார். அரசரான பாண்டவர் போருக்கு வந்திருக்கின்ற சந்தனுபுத்திரரான பீஷ்மருடைய இரண்டு பாதங்களையும் இருகரங்களாலும் பிடித்துக்கொண்டு பிறகு அவரைப்பார்த்துப் பின் வருமாறு சொல்லலானார். 'ஜயிக்கமுடியாதவரே! உம்மைக் கேட்டுக்கொள்ளுகிறேன். உம்மோடு யுத்தம்செய்யப்போகிறோம். ஐயா! எனக்கு அனுமதிகொடும்; ஆசீர்வாதங்களையும் செய்யும்' என்று வேண்ட, பீஷ்மர், 'மஹாராஜனே! பரதகுலத்தில் உதித்தவனே! இவ்வாறு யுத்தகளத்தில்(வந்தனஞ்செய்தற்காக) என்னை நோக்கி வாராதிருப்பாயாகில் அவமானத்தையடையும்படி உன்னைச் சபித்திருப்பேன். பாண்டவ! குழந்தாய்! நான் ப்ரீதியை அடைகிறேன். நீ யுத்தம்செய்; நீ ஜயத்தை அடைவாயாக. யுத்தத்தில் நீ வேறு எதனை விரும்புகிறாயோ அதனையும்அடைவாயாக. பார்த்த! நம்மிடத்தினின்று நீ விரும்புகிற வரத்தைக்கேட்கலாம். மகாராஜனே! நீ இப்படிச் செய்திருப்பதால் உனக்குத்தோல்வி உண்டாகாது. மஹாராஜனே! 'மனிதன் தனத்திற்கு

அடிமைப்பட்டவன். தனம் ஒருவனுக்கும் அடிமையானதன்று' என்கிறவசனம் உண்மையே. ஆதலால் யான் கௌரவர்களால் தனத்தால் கட்டப்பட்டிருக்கிறேன். குருநந்தன! ஆதலால், நான் சக்தியற்றவனைப் போல உன்னைப்பார்த்து (இவ்விதமான) வாக்யத்தைச் சொல்லுகிறேன். குருகுலத்தில் பிறந்தவனே! நான் துரியோதனனால் பொருளால் போஷிக்கப்பட்டவனாயிருக்கிறேன். யுத்தத்தைத்தவிர வேறெதை நீ விரும்புகிறாய்? என்று வினவினர். யுதிஷ்டிரர், 'மிக்கபாஹுபலமுள்ளவரே! துரியோதனன் நிமித்தமாக நீர் யுத்தம் செய்யும். எப்பொழுதும் எனக்கு நன்மையைத்தேடுகிற ஸ்வபாவமுள்ளவராகவே ஆலோசியும். இதுதான் எனக்கு எப்பொழுதும் வேண்டியவரான்' என்று விண்ணப்பம் செய்தார். பீஷ்மர், 'ராஜனே! குருநந்தன! இந்த யுத்தத்தில் உனக்கு யான் எவ்விதமாக உதவி புரிவேன்? உனக்குச் சத்துருவான துரியோதனன் நிமித்தம் கடுமையாகப் போர்புரியப்போகிறேன். நீ சொல்ல விரும்பியதைச் சொல்' என்று கூறினர். யுதிஷ்டிரர், 'ஜயிக்கப்படாதவரான உம்மை யுத்தத்தில் எவ்வாறு ஜயிப்பேன்? எனக்கு நன்மையைக் கருதுவீராகில் இந்த நன்மையை ஆலோசியும்' என்று விஜ்ஞாபனம் செய்தார். பீஷ்மர், 'குந்தீபுத்திர! ஸாக்ஷாத் இந்திரனாயிருந்தாலும் யுத்தகளத்தில் போர்புரிகின்ற என்னை ஜயிக்கிறபுருஷனைப் பார்க்கவில்லை' என்று கூறினர். யுதிஷ்டிரர், 'பிதாமஹரே! ஆதலால், தேவரீரை ஸந்தோஷத்தோடு கேட்கிறேன். உமக்கு வந்தனம்; யுத்தத்தில் தேவரீருக்குப் பகைவர்களால் எந்த உபாயத்தால் வதம் ஏற்படக்கூடுமென்பதைச சொல்லும்' என்றார். பீஷ்மர், 'அப்பா! யுத்தத்தில் என்னை ஜயிக்கக்கூடியவனை நான் காணவில்லை. மேலும் எனக்கு மரணகாலமும வரவில்லை. மறுபடியும் என்னிடம் வருவாயாக' என்று கூறினர். பிறகு மிக்க புஜபலமுள்ள யுதிஷ்டிரர் பீஷ்மருடையவாக்கியத்தைத் தலையினால் ஏற்றுக்கொண்டு மறுபடியும் அவருக்கு அபிவாதனம்செய்து பார்த்துக்கொண்டிருக்கும் எல்லாஸைனிகர்களுக்கும் நடுவோடு தம்பிமார்களுடன் ஆசார்யருடைய ரதத்தைக்குறித்து மறுபடியும் சென்றார். அந்த அரசர் துரோணரை வணங்கிப் பிரதக்ஷிணம் பண்ணி ஒருவராலும் ஜயிக்கமுடியாத அவரைப் பார்த்துத் தமக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணக்கூடியவார்த்தையைச் சொன்னர்.

'பகவானே! உம்மைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அந்தணரே! உம்மால் அனுமதிகொடுக்கப்பெற்று எல்லாச்சத்துருக்களையும் எவ்வாறு ஜயிப்பேன்? கபடமில்லாமல் சொல்லும்' என்று வினவினர். துரோணர், 'மகாராஜனே! போர்புரிய நிச்சயித்த நீ என்னிடம் வரா

மிருந்தால் எல்லாவிதத்தாலும் அபஜயமடையும்படி உன்னை நான் சபித்திருப்பேன். யுதிஷ்டிர! இப்படிவந்ததால் நான் ஸந்தோஷமுடையவனாகிறேன். குற்றமற்றவனே! உன்னால் யான் பூஜிக்கப்பட்டேன். நான் அனுமதிகொடுக்கிறேன். யுத்தம்செய். விஜயத்தை அடைவாயாக. நான் உன்னுடைய விருப்பத்தை நிறைவேற்றக்கடவேன். உன் விருப்பத்தைச்சொல். மகாராஜனே! இவ்வாறானபிறகு யுத்தத்தைத் தவிர வேறெதை விரும்புகிறாய்? மகாராஜனே! 'மனிதன் பொருளுக்கு அடிமைப்பட்டவன். ஒருவனுக்கேனும் பொருள் அடிமையன்று' என்பது உண்மை. நான் கௌரவர்களால் தனத்தால் கட்டப்பட்டிருக்கிறேன். நான் அசக்தனைப்போல உன்னைக்குறித்து இதனைச்சொல்லுகிறேன். யுத்தத்தைத்தவிர வேறெதை நீ விரும்புகிறாய்? கௌரவன்நிமித்தமாக நான் யுத்தம் செய்யப்போகிறேன். நான் உனக்கு ஜயத்தை விரும்புகிறேன்' என்று கூறினார். யுதிஷ்டிரர், 'பிராம்மணரே! எனக்கு ஜயத்தை விரும்பும். எனக்கு நன்மையையும் ஆலோசியும். கௌரவனுக்காகப் போர்புரியும். இந்தவரன் என்னால் வரிக்கப்பட்டது' என்று வேண்ட, துரோணர், 'ராஜனே! ஹரியை மந்திரியாகவுடைய உனக்கு ஜயம் நிச்சயம். யான் உனக்கு அனுமதிகொடுக்கிறேன். யுத்தத்தில் சத்துருக்களைஜயிப்பாய். எங்கு தர்மம் உள்ளதோ அங்கு கிருஷ்ணன்உளன். எங்கு கிருஷ்ணனுளனோ அங்கு ஜயம்உண்டு. கௌந்தேய! போ; யுத்தம்செய். உனக்கு யான் என்னசொல்லவேண்டும்? என்னைக் கேள்' என்று சொன்னார். யுதிஷ்டிரர், 'பிராம்மணோத்தமரே! நான் விரும்பியதைக்குறித்து உம்மைக் கேட்கிறேன். யுத்தத்தில் பகைவர்களால் ஜயிக்கப்படாத தேவரீரை எவ்வாறு ஜயிப்பேன்?' என்று வினவ, துரோணர், 'யுத்தகளத்தில் நான் எவ்வளவுகாலம்வரையில் யுத்தம்செய்வேனோ அவ்வளவுகாலம்வரையில் உனக்கு ஜயம் கிடையாது. ராஜனே! என்னைக் கொல்லும்விஷயத்தில் நீ தம்பிமார்களுடன் சீக்கிரம் முயற்சிசெய்' என்று சொன்னார். யுதிஷ்டிரர், 'மிக்கபுஜபலமுள்ளவரே! ஸந்தோஷம். அவ்விதமானால் தேவரீரை வதஞ்செய்யக்கூடிய உபாயத்தைச் சொல்லும். ஆசார்யரே! இதோ நான் வந்தனஞ்செய்து உம்மைக் கேட்கிறேன். தேவரீருக்கு நமஸ்காரம்' என்று வேண்ட, துரோணர், 'ஜயனே! ரதத்திலிருந்துகொண்டு போர்புரிகின்றவனும் அதிகப் பரபரப்புள்ளவனும் மிகுந்த சரமாரியைப்பொழிகின்றவனுமான என்னைக் கொல்லுகின்ற சத்துருவை நான் காணவில்லை. ராஜனே! நான் சஸ்திரங்களைக் கீழேவைத்து யோகபலத்தினால் சரீரத்தில் பற்

றற்று மரணத்தின்பொருட்டு, நிச்சயம்செய்திருந்தாலன்றி என்னை யுத்தவீரர்களுள் ஒருவனாவது போரில் கொல்லத் திறமையுள்ளவனாகான். இது ஸத்யமென்று உனக்குச்சொல்லுகிறேன். நம்பத்தக்க வார்த்தையுள்ள ஒரு மனிதனிடத்தினின்று பெரிய அப்ரியமானவார்த்தையைக் கேட்பேனாகில் நான் யுத்தத்தில் சஸ்திரங்களை எறிந்துவிடுவேன். இது ஸத்யமென்று யான் உனக்குச்சொல்லுகிறேன்' என்று சொன்னார். மகாராஜரே! புத்திமானான பாரத்வாஜருடைய இந்த வார்த்தையைக்கேட்டு அவரிடம் அநுமதிபெற்றுக்கொண்டு ஆசார்யரான அந்த க்ருபரிடம் சென்றார். வாக்கியங்களை அறிந்தவர்களுள் உத்தமரான அந்த யுதிஷ்டிரமஹாராஜர் (பகைவர்களால்) எவ்விதத்திலும் அமைதிக்சமுடியாத க்ருபரை அபிவாதனஞ்செய்து பிரதக்ஷிணம்பண்ணி ஒருவார்த்தைசொல்லலானார். 'குற்றமற்றவரே! குருவே! எனக்கு யுத்தம்செய்வதற்கு அநுமதிகொடுக்கும்படி உம்மை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்; நான் கல்மஷமில்லாதவனாகப் போர்புரியப் போகிறேன். உம்மால் அநுமதிகொடுக்கப்பெற்று எல்லாச் சத்துருக்களையும் ஜயிக்கவேண்டும்' என்று வேண்ட, கிருபர், 'மஹாராஜனே! யுத்தத்துக்காக நிச்சயம்கொண்ட நீ என்னை நாடாமலிருப்பாயாயின் எல்லாவிதத்திலும் அவமானம் உண்டாகும்படி உன்னைச் சபித்திருப்பேன். மஹாராஜனே! 'மனிதன் பொருளுக்கு அடிமைப் பட்டவன். பொருளானது ஒருவனுக்கும் அடிமைப்பட்டதன்று' என்பது உண்மை. யான் கௌரவர்களாலே பொருளால் கட்டப்பட்டிருக்கிறேன். மஹாராஜனே! அந்தக் கௌரவர்களின்நிமித்தமாக யுத்தம் செய்யத்தக்கதென்பது என்னுடைய எண்ணம். ஆதலால், சக்தியற்றவன்போல உன்னிடத்தில் பேசுகிறேன். யுத்தத்தைத்தவிர வேறு எதை விரும்புகிறாய்?' என்று வினவினர். யுதிஷ்டிரர், 'ஆசார்யரே! ஸந்தோஷம். அதற்காகத்தான் தேவரீரை நான் கேட்கிறேன். என்னுடைய வார்த்தையை நீர் கேளும்' என்று சொல்லிவிட்டு ராஜாவான தர்மநந்தனர் மனவருத்தமுற்றுப் பிரஜ்ஞையிழந்து யாதொன்றும் சொல்லாமலிருந்தார். கௌதமர் அவருடைய மனத்திலுள்ள அவ்விதமான விருப்பத்தை அறிந்து, 'அரசனே! யான் (ஒருவனாலும்) கொல்லத்தகாதவன். நீ யுத்தம்செய். ஜயத்தை அடைவாயாக. நீ என்னைவந்து நாடினதினால் உன்விஷயத்தில் பிரீதியுள்ளவனாகிறேன். அரசனே! எப்பொழுதும் ஊக்கத்துடனிருந்துகொண்டு உனக்கு ஜயத்தை விரும்பப்போகிறேன். இது ஸத்தியமென்று உனக்குச் சொல்லுகிறேன், என்றார். மகாராஜனே! கௌதமருடைய இந்த

வார்த்தையைக்கேட்டு, அரசரான தர்மநந்தனர் அவரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு மத்ரராஜன் இருக்குமிடத்திற்குச்சென்றனர். பிறகு அந்தத் தர்மநந்தனர் சல்யனை அபிவாதனம்பண்ணிப் பிரதக்ஷிணம் செய்து ஒருவராலும் அவமதிக்கமுடியாத சல்யனைநோக்கித் தமக்கு க்ஷேமகரமான ஒருவார்த்தையைச் சொல்லலானர். 'எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாதவரே! அனுமதிகொடுக்கும்படி தேவரீரை வேண்டுகிறேன். கபடமற்றவனுக யுத்தம்செய்யப்போகிறேன். ராஜரே! உம்மால் அனுமதிகொடுக்கப்பெற்று நான் [1] சிறந்தவல்லமையுடையவர்களை ஜயிக்கவேண்டும்' என்று வேண்ட, சல்யன், 'மஹாராஜனே! போர்புரிய நிச்சயித்த நீ என்னை நாடாமலிருப்பாயாகில் யுத்தத்தில் அவமானம் உண்டாகும்படி உன்னைச் சபித்திருப்பேன். நான் ஸந்தோஷமுள்ளவனுகிறேன். உன்னால் பூஜிக்கப்பட்டவனுமாகிறேன். நீ எதை விரும்புகிறுயோ அது உனக்கு உண்டாகட்டும். உனக்கு நான் அனுமதிகொடுக்கிறேன். யுத்தம்செய்; ஜயத்தை அடைவாய். வீரனே! மேல் நடக்கவேண்டிய விஷயத்தைச் சொல். உனக்கு என்னவேண்டும்? உனக்கு எதைக் கொடுப்பேன்? மகாராஜனே! இவ்வாறு நடந்த பிறகு யுத்தத்தைத்தவிர வேறுஎதை விரும்புகிறுய்? 'மனிதன் பொருளுக்கு அடிமைப்பட்டவன். பொருள் ஒருவனுக்கும் அடிமையன்று' என்பது உண்மை. மகாராஜனே! கௌரவர்களால் தனத்தால் நான் கட்டப்பட்டிருக்கிறேன். மருமானே! விரும்பியதை விரும்பியபடி நிறைவேற்றுவேன். ஆதலால், அசக்தனைப்போல யான் உன்னைக் குறித்துச் சொல்லுகிறேன். யுத்தத்தைத்தவிர வேறெதை நீ விரும்புகிறுய்?' என்றுன். யுதிஷ்டிரர், 'மஹாராஜரே! எப்பொழுதும் எனக்குச் சிறந்தநன்மையையே நீர் ஆலோசியும். சத்ருவுக்காக நீர் நன்கு யுத்தம்செய்யும். இந்த வரத்தைத்தான் நான் வரிக்கிறேன்' என்று கேட்க, சல்யன், 'ராஜசிரேஷ்டனே! இந்த யுத்தகளத்தில் உனக்கு எவ்விதமாக உதவி புரிவேன்? சொல். சத்ருவுக்காக நன்றுக யுத்தம் செய்வேன். ஏனெனில், கௌரவர்களால் அர்த்தத்தினுல் நான் கட்டப்பட்டவனுயிருக்கிறேன்' என்றுன். யுதிஷ்டிரர், 'சல்யராஜரே! போருக்கு முயற்சித்தபொழுது, எந்தவரன் உம்மால் அளிக்கப்பட்டதோ அதேவரன் எனக்கு வேண்டும். (அதாவது) போர்க்களத்தில் ஸூதபுத்திரனை கர்ணனுடைய ஊக்கமானது உம்மால் கெடுக்கப்படவேண்டும்' என்று வேண்ட, சல்யன், 'குந்தீபுத்திர! உன்னுடைய இந்த விருப்பமானது நீ விரும்பியபடி நிறைவேறப்போகிறது. போ;

[1] ஒருசொல் விட்டப்பட்டது.

மனக்கவலையற்று யுத்தம்செய். உன்விஷயத்தில் இந்தவசனத்தைப் பிரதிஜ்ஞைசெய்கிறேன்' என்று கூறினன். பிறகு, குந்திபுத்திரர் மாதுலனான மத்ரதேசாதிபதியிடம் விடைபெற்றுக்கொண்டு பிராதாக்களால் சூழப்பட்டவராக மஹாஸைனியத்தினின்று வெளியில்வந்தார்.

வாஸுதேவரோ யுத்தகளத்தில் கர்ணனைநோக்கிச் சென்றார். பிறகு அவர் பாண்டவர்களுக்காகக் கர்ணனைப்பார்த்துப் பின்வருமாறு சொல்லலானார். 'கர்ண! பீஷ்மருடைய த்வேஷத்தினால் நீ யுத்தம் பண்ணப்போகிறதில்லையென்று நான் கேள்வியுற்றிருக்கிறேன். ராதையின்புத்திரனே! பீஷ்மர் கொல்லப்படாமலிருக்கும்வரையில் எங்களைச்சேர்ந்திரு. ராதேய! பீஷ்மர் கொல்லப்பட்டபிறகு துரியோதனனுக்கு உதவிசெய்வது யுக்தமென்று உனக்குத் தோன்றினால் மறுபடியும் யுத்தத்திற்காகப்போ' என்று சொல்ல, கர்ணன், 'கேசவரே! துர்யோதனனுக்கு விருப்பமில்லாதகாரியத்தை நான் செய்யமாட்டேன். என்னைத் துரியோதனனுக்கு நன்மையைச்செய்வதில் விருப்பமுள்ளவனென்றும் (அவனுக்காக) உயிரைக்கொடுத்துவிட்டவனென்றும் நீர் அறிவீராக' என்று கூறினன். பாரதரே! வாஸுதேவர் அந்த வார்த்தையைக்கேட்டு யுதிஷ்டிரரை முதன்மையாகக்கொண்ட பாண்டவர்களோடு சேர்ந்து திரும்பினர். பிறகு பாண்டவரில்மூத்தவரான தர்மநந்தனர் சேனையின்நடுவிலிருந்துகொண்டு, 'எங்களை எவன் விரும்புகிறானோ அவனை நான் உதவிக்காக விரும்புகிறேன்' என்று இரைந்து கூறினர். பிறகு, அவர்களைப்பார்த்துப் பிரியமான மனமுள்ள யுயுத்ஸுவானவன் தர்மராஜரும் குந்திபுத்திரருமான யுதிஷ்டிரரைநோக்கி இந்தவார்த்தையைச் சொன்னான். 'மஹாராஜரே! குற்றமற்றவரே! நீர் விரும்பினால் உமக்காக நான் உம்முடைய யுத்தத்தில் திருதராஷ்டிரபுத்திரர்களோடு போர்புரிவேன்' என்றான். யுதிஷ்டிரர், 'யுயுத்ஸுவே! வா; வா; நாம் அனைவரும் மூர்க்கர்களான உன்னுடைய பிராதாக்களோடு போர்புரிவோம்; வாஸுதேவரும் நாங்களும் ஸர்வவிதத்தாலும் சொல்லுகிறோம். மிக்க புஜபலமுள்ளவனே! உன்னை நான் வரிக்கிறேன். எனக்காக நீ யுத்தம் செய். உன்னிடத்தில் பிதிர்யஜ்ஞமும் திருதராஷ்டிரருடையஸந்ததியும் காணப்படுகின்றன. ராஜபுத்திர! மிக்க காந்தியுடையவனே! (உன்னை) நாடுகின்ற எங்களை நீ அடைவாயாக. கெட்டபுத்தியுள்ளவனும் மிக்க பொறுமையுள்ளவனுமான துர்யோதனன் இனி இருக்கப்போகிறதில்லை' என்றார். பிறகு யுயுத்ஸுவானவன் கௌரவசேனையிலுள்ள

உம்முடைய புத்திரர்களை விட்டுவிட்டு, துந்துபிவாத்யத்தை முழக்கிக் கொண்டு, பாண்டுபுத்திரர்களுடைய சேனையை அடைந்தான். பிறகு, யுதிஷ்டிரமகாராஜர் தம்பிமார்களோடு மிக்கமனக்களிப்புற்றுக் காந்தியுள்ளதும் ஸ்வர்ணத்தால் பிரகாசிக்கின்றதுமான கவசத்தை மறுபடியும் அணிந்துகொண்டார். புருஷசிரேஷ்டர்களான அந்த வீரர்கள் எல்லோரும் தங்கள் தங்கள் ரதங்களில் ஏறினார்கள். பிறகு, அவர்கள் மறுபடியும் முன்போலவே வ்யூஹக்கிரமமாக எதிரணிவகுத்து நின்றார்கள். புருஷசிரேஷ்டர்களான பாண்டவவீரர்கள் துந்துபிவாத்யங்களையும் நூற்றுக்கணக்கான காகளவாத்தியங்களையும் முழக்கினார்கள்; பலவித ஸிம்மநாதங்களையும் செய்து கர்ஜித்தார்கள். திருஷ்டத்யும்னன்முதலான எல்லா அரசர்களும் ரதங்களின்மீதேறியிருக்கின்ற புருஷசிரேஷ்டர்களான பாண்டவர்களைப்பார்த்து அப்பொழுது ஸந்தோஷத்தையடைந்தார்கள். பூஜிக்கத்தக்க அரசர்களைப் பூஜிக்கின்ற பாண்டுபுத்திரர்களுடைய கௌரவத்தைக்கண்டு வேந்தர்கள் அந்த யுத்தரங்கத்தில் பாண்டவர்களை மிகவும் பூஜித்தார்கள். அரசர்கள், மகாத்மாக்களான பாண்டவர்களுடைய அக்காலத்துக்குரிய நட்பையும் அருளையும் தங்கள்ஞாதிகளிடமுள்ள அதிகமான அன்பையும் சொன்னார்கள். மனத்தையும் ஹ்ருதயத்தையும் மகிழ்ச்சியடையச் செய்கின்றவையும் பரிசுத்தமானவையும் புகழப்பட்டவையுமான கீர்த்திமான்களுடைய, 'நல்லது நல்லது' என்கிறவாக்குக்கள் எல்லா இடத்திலும் வெளிப்பட்டன. அப்பொழுது பாண்டுபுத்திரர்களுடைய அந்தநடக்கையைக் கண்டவர்களும் கேட்டவர்களுமான மிலேச்சர்களும் ஆர்யர்களும் தழுதழுத்தகுரலுடன் ரோதனம்செய்தார்கள். பிறகு உதாரமனமுள்ளவீரர்கள் மகிழ்ந்து நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் பெரியபேரிகைகளை அடித்தார்கள். பசுவின்பால்போன்ற (வெண்ணிறமுள்ள) சங்கங்களையும் ஊதினார்கள்" என்று கூறினான்.

---

## நாற்பத்துநான்காவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(கௌரவபாண்டவசேனைகள் போர்செய்யத்தொடங்கியது.)

திருதராஷ்டிரன், "(ஸஞ்சய!) இவ்வாறு என்னுடைய ஸேனைகளும் இதரஸேனைகளும் அணிவகுக்கப்பட்டபோது அந்த யுத்தத்தில் எவர்கள் முதலில் ஆயுதப்ரயோகம் செய்தார்கள்? கௌரவர்களா? பாண்டவர்களா?" என்றுவினவ, ஸஞ்சயன், "ராஜரே! உம்முடைய புத்

திரனை துச்சாஸனன் பிராதாக்களோடுகூடிப் பீஷ்மரை முன்னிட்டுக் கொண்டு சேனையுடன்சென்றான். அவ்வாறே எல்லாப்பாண்டவர்களும் பீமஸேனனை முன்னிட்டுக்கொண்டு மனமகிழ்ந்து பீஷ்மரோடு யுத்தம்செய்ய விருப்பமுற்றுச் சென்றார்கள். இருதிறத்துச் சேனைகளிலும் ஸிம்மநாதங்களும் கிலகிலாசப்தங்களும் ஜயமங்களையென்னும் வாத்யங்களின் ஒலிகளும் பசுவின்கொம்புகளால் செய்யப்பட்ட வாத்தியங்களுடையஒலிகளும் பேரிவாத்தியங்கள் மிருதங்கங்கள் மேளங்கள் இவைகளுடைய முழக்கங்களும் குதிரைகளின் கனைப்புக்களும் யானைகளினுடைய பிளிறுதல்களும் உண்டாயின. பிறகு, அவர்கள் எங்களைநோக்கி எதிர்த்து விரைவாக வந்தார்கள். நாங்களும் கர்ஜித்துக்கொண்டு அவர்களை விரைவாக எதிர்த்துச்சென்றோம். அப்பொழுது கைகலந்த பெரும்போர் நடக்கஆரம்பித்தது. பாண்டவகௌரவர்களுக்கு நேர்ந்த மிகப்பெரியயுத்தத்தில் சங்கமிருதங்கங்களுடைய ஒலிகளால் பெரும்படைகள், காற்றினால் மிகவும் அலைக்கப்பட்ட காடுகள்போல் நடுங்கின. ராஜேந்திரரே! யானைகள் குதிரைகள் தேர்கள் இவைகளால் வியாபிக்கப்பட்டவையும் அமங்களகரமான முகூர்த்தத்தில் (பகைவர்களை) எதிர்த்துவந்திருக்கின்றவையுமான ஸைன்யங்களுடைய நெருங்கியசப்தமானது, காற்றினால்அலைக்கப்பட்ட ஸமுத்திரங்களுடைய சப்தம்போல் உண்டாகியது. நெருங்கியதும் மயிர்க்கூச்சத்தை உண்டுபண்ணுகின்றதுமான அந்தச்சப்தமானது தோன்றினவுடனே மிக்கபுஜபலமுள்ளபீமஸேனன் பெரிய விருஷபம்போல உரக்கக்கர்ஜித்தான். பீமஸேனனுடையகர்ஜனையானது சங்கவாத்தியங்களுடையஓசையையும் துந்துபிவாத்தியங்களுடையகோஷத்தையும் யானையினுடையகர்ஜனத்தையும் ஸைன்யங்களுடையஸிம்மநாதத்தையும் கீழ்ப்படுத்தியது. கர்ஜிக்கின்ற பீமனுடையசப்தமானது ஸைனியங்களில் ஆயிரம் ஆயிரமாகக் கனைக்கின்ற குதிரைகளினுடைய எல்லாச்சப்தங்களையும் கீழ்ப்படுத்தியது. கர்ஜிக்கின்ற மேகம்போன்ற பீமஸேனனுடைய இடிக்கொப்பான அந்த ஸிம்மநாதத்தைக்கேட்டு உம்முடைய ஸைனிகர்கள் பயந்தார்கள். ஸிம்மத்தினுடைய த்வனியினாலே மற்ற மிருகங்கள்போல வீரனான அந்தப் பீமஸேனனுடைய சப்தத்தினால் எல்லாவாகனங்களும் ஜலமலங்களைப்பெருக்கின. பீமஸேனன் தன்ஸ்வரூபத்தைக் கோரமாகக்காண்பித்துக்கொண்டும் பெரியமேகம்போலக் கர்ஜித்துக்கொண்டும் உம்முடையகுமாரர்களை அதிகபயமடையும்படி செய்துகொண்டும் எதிர்த்துவந்தான். அவ்வாறுவரும் பெரியவில்லாளியான பீம

ஸேனனை உம்முடையபுத்திரனான துர்யோதனனும் அவனுடைய சகோதரர்களான துர்முகன், துஸ்ஸஹன், சலன், அதிரதனான துச்சாஸனன், அரசனான துர்மர்ஷணன், விவிம்சதி, சித்ரஸேனன், மஹாரதனான விகர்ணன் ஆகியஇவர்களும் புருமித்ரனும் ஜயனும் போஜனும் வீர்யமுடையவனான ஸோமதத்தனுடைய குமாரனும் மின்னலுடன் கூடிய மேகங்கள்போலப் பெரியவிற்களை அசையும்படி செய்து கொண்டு சட்டையுரித்த ஸர்ப்பங்களுக்குஒப்பான அம்புகளைக் கையிலெடுத்து மேகங்கள் சூரியனை மூடுவதுபோல அம்புக்கூட்டங்களால் மூடிக்கொண்டு நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு அந்தத்ரௌபதிகுமாரர்களும் மஹாரதனான அபிமன்யுவும் நகுலனும் ஸஹதேவனும் துருபதன்குமாரனான த்ருஷ்டத்யும்னனும் மிக்கவேகமுள்ள வஜ்ராயுதங்களாலே மலைகளினுடையசிகரங்களைப் பிளப்பதுபோலக் கூர்மையுள்ள அம்புகளாலே கௌரவர்களைப்பிளந்து கொண்டு எதிர்த்தார்கள். பயங்கரமான நாணொலிகளோடும் கைபுறைகளின் சப்தங்களோடுங்கூடின அந்த முதல்யுத்தத்தில் உம்மைச் சேர்ந்தவர்களுள்ளாவது பிறர்களுள்ளாவது ஒருவனும் புறங்காட்டியோடவில்லை. பாதர்களுள்சிறந்தவரே! லக்ஷ்யத்தை அடிக்கின்றவர்களும் பாணங்களை மிகுதியாகத்தொடுப்பவர்களுமான துரோண சிஷ்யர்களுடைய லாகவத்தை நான் பார்த்தேன். அவ்வாறு ஒலிக்கின்ற விற்களுடைய ஓசையானது ஓயவில்லை. ஜ்வலிக்கின்ற அம்புகள் ஆகாயத்திலிருந்து (விழுகின்ற) நக்ஷத்திரங்கள்போல் வெளிப்பட்டன. பாரதரே! மற்ற எல்லாஅரசர்களும் பார்க்கிறவர்கள் போலிருந்துகொண்டு பார்க்கத்தக்கதும் பயங்கரமுமான அந்தத் தாயாதிகளுடையயுத்தத்தைக் கண்டார்கள். அரசரே! பிறகு மிகுந்த கோபமுள்ளவர்களும் ஒருவருக்கொருவர் குற்றஞ்செய்தவர்களுமான அந்தமகாரதர்கள் ஒருவரையொருவர் மிஞ்சும்விருப்பத்துடன் போர்புரிந்தார்கள். யானைகளாலும் குதிரைகளாலும் ரதங்களாலும் நெருங்கின அந்தக்கௌரவபாண்டவசேனைகள் இரண்டும், சித்திரப்படத்தில் எழுதப்பட்டவைபோல் யுத்தரங்கத்தில் மிகப்பிரகாசித்தன. பிறகு, உம்முடையபுத்திரனதுகட்டளையினால் எல்லாஅரசர்களும் வில்லைக்கையில்கொண்டு சேனைகளோடுகூட யுத்தத்துக்காக வந்தார்கள். யுதிஷ்டிரராலே கட்டளையிடப்பட்ட ஆயிரக்கணக்கான அந்த அரசர்கள் ஸிம்மநாதம்செய்துகொண்டு உமது புத்திரனுடைய சேனையை வந்தடைந்தார்கள். இரண்டுசேனைகளிலுமுள்ள ஸைனிகர்கள் தீவ்ரமாகப்போர்செய்தற்கு எதிர்த்தார்கள். ஸூர்யனும்சேனை

யில்உண்டானபுழுதியினால் மூடப்பட்டு மறைந்தான். இந்தயுத்தத்தில் போர்செய்து தோல்வியடைந்தவர்களும், மீண்டும் (யுத்தத்தைக் குறித்துத்) திரும்பிவருபவர்களுமான நம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பிறர்களுக்கும் வேற்றுமை காணப்படவில்லை. கைகலந்ததும் மகா பயங்கரமுமான அந்தயுத்தம் நடக்கும்பொழுது உம்முடைய பிதாவானவர் எல்லாஸைன்யங்களையும்விட மேலாகப் பிரகாசித்தார்.

---

## நாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(கௌரவபாண்டவ சேனைகளுடைய துவந்துவயுத்தம்.)

அரசரே! பயங்கரமான அந்தப்பகலினுடைய முன்பாகத்தில் அரசர்களுடையதேகங்களை அறுக்கின்றதும் மகாகோரமுமானயுத்தம் நடக்க ஆரம்பித்தது. பரஸ்பரம் ஜயிப்பதில் விருப்பமுள்ளவர்களான கௌரவர்களுடைய அட்டஹாஸமும் ஸ்ருஞ்சயர்களுடைய அட்டஹாஸமும் ஸிம்மங்களுடைய கர்ஜனைபோல ஆகாயத்தையும் பூமியையும் எதிரொலியிடும்படிசெய்தன. கையுறைகளின் ஒலிகளோடும் சங்கவாத்யங்களுடையகோஷங்களோடும் கலகலவென்று சப்தம் தோன்றியது. எதிராகக்கர்ஜிக்கின்றசூரர்களுடைய ஸிம்மநாதங்களும் தோன்றின. பரதர்களிற்சிறந்தவரே! கையுறையில் மோதுகின்ற நாண்கயிறுகளின்ஒலிகளும் காலாட்களுடைய பாதசப்தமும் குதிரைகளினுடைய உரத்தகனைப்பும் சவுக்குக்கள் அங்குசங்கள் இவைகள் விழும்சப்தமும் ஆயுதங்களினுடைய சப்தமும் ஒன்றையொன்றுஎதிர்த்தோடிவருகின்ற யானைகளினுடைய மணியோசையும் எங்கும் பரவின. இடைவெளியற்றதும் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணுகிறதுமான அந்தச்சப்தம் மிகத்தோன்றிய போது மேகத்தினுடைய இடிமுழக்கத்திற்கொப்பான தேரொலியானது உண்டாயிற்று. உயரத்தூக்கிக்கட்டப்பட்ட த்வஜத்தையுடையவர்களான அந்தக்கௌரவவீரர்கள் எல்லோரும் உயிரையிழக்க நன்கு துணிந்தவர்களாகி மனத்தைக் குரூரமாகச்செய்துகொண்டு பாண்டவர்களை எதிர்த்தார்கள். மன்னரே! பிறகு பீஷ்மர் யுத்தகளத்தில் காலதண்டத்திற்கொப்பான கோரமானவில்லைக் கையிலெடுத்து அர்ஜுனனை எதிர்த்துவந்தார். தேஜஸையுடையவனான அர்ஜுனனும் லோகப்பிரசித்தமான காண்டீவம்என்கிறவில்லைக்

கையிலெடுத்தாயிர்க்குமுனையில் கங்காபுத்திரரை எதிர்த்து ஓடிவந்தான். கௌரவசிரேஷ்டர்களான அவ்விருவரும் ஒருவரையொருவர் கொல்வதில் விருப்பமுள்ளவர்களாயிருந்தார்கள். பலசாலியான காங்கேயர் யுத்தத்தில் பார்த்தனை அடித்தும் அசையச்செய்யவில்லை. அரசரே! அவ்வாறே பாண்டவனும் யுத்தத்தில் பீஷ்மரை அசையச்செய்யவில்லை. சிறந்தவில்லாளியான ஸாத்யகியோ கிருதவர்மாவை எதிர்த்தான். அவ்விருவருக்கும் மயிர்க்கூச்சமுண்டுபண்ணக்கூடிய கைகலந்த யுத்தம் நடந்தது. ஸாத்யகி கிருதவர்மாவையும் கிருதவர்மா ஸாத்யகியையும் கொடியபாணங்களால் ஒருவரைஒருவர்பிளந்து துன்பஞ்செய்துகொண்டார்கள். அம்புகளாலே நான்குபுறங்களிலும் நிரப்பப்பட்ட எல்லாஅங்கங்களையுமுடையவர்களும் மிக்கபலசாலிகளுமான அவ்விருவரும் வஸந்தகாலத்தில் புஷ்பங்களால் விசித்திரங்களான பூக்கள்நிரம்பிய இரண்டுபலாசமரங்கள்போல் விளங்கினார்கள். அபிமன்யுவானவன் பெரிய வில்லாளியான ப்ருஹத்பலனை எதிர்த்துப் போர்புரிந்தான். வேந்தரே! அந்தக்கோசலதேசத்தரசன் போரில் அபிமன்யுவினுடைய கொடியை அறுத்து ஸாரதியையும் கீழேதள்ளினான். மஹாராஜரே! பிறகு ஸுபத்ராபுத்திரனும், ரதத்திலுள்ள ஸாரதி கீழேதள்ளப்பட்டவுடன் கோபமிக்கு ப்ருகத்பலனை ஒன்பதுபாணங்களால் அடித்தான். பகைவரைக்கொல்பவனான அபிமன்யு பின்னும் கூர்மையுள்ள இரண்டு பாணங்களையெடுத்து ஒன்றினால் கொடியையும், மற்றொன்றினால் பின்பக்கத்திலிருந்தஸாரதியையும் துண்டித்தான். ஒருவர்மீதொருவர்கோபங்கொண்ட அவ்விருவரும் அம்புகளால் ஒருவரைஒருவர் பிளந்தார்கள். யுத்தத்தில் மானியாயிருப்பவனும் கர்வமுள்ளவனும் விரோதம்செய்தவனும் மகாரதனும் உம்முடையகுமாரனுமான துரியோதனனைப் பீமஸேனன் எதிர்த்துப்போர்புரிந்தான். நரசிரேஷ்டர்களும் கௌரவர்களுள்முதன்மையர்களும் மஹாபலசாலிகளுமான அவ்விருவரும், போர்க்களத்தில் ஒருவர்மீதொருவர் சரமாரிகளைப் பொழிந்துகொண்டார்கள். பாரதரே! மிக்கபலசாலிகளும் ஸமர்த்தர்களும் விசித்திரமாக யுத்தம் செய்கின்றவர்களுமான அவ்விருவர்களையும்பார்த்து எல்லாப்பிராணிகளுக்கும் ஆச்சரியமுண்டாயிற்று. துச்சாஸனனோ மகாபலசாலியானநகுலனை எதிர்த்துக் கூர்மையுள்ளவைகளும் மர்மஸ்தானங்களைப் பிளக்குந்திறமையுள்ளவைகளுமான அனேகபாணங்களால் அடித்தான். பாரதரே! மாத்ரிகுமாரன் அட்டஹாஸம்செய்துகொண்டு கூர்மையுள்ள பாணங்களாலே அவனுடையகொடியையும் பாணங்களையும் வில்லையும் அறுத்தான்; பிறகு இருபத்தைந்து க்ஷுத்ரக

பாணங்களால் அவனை அடித்தான். உம்முடைய குமாரனுன துர்த்தர்ஷனே மகாயுத்தத்தில் பாணங்களாலே நகுலனுடைய குதிரைகளையும் அறுத்து த்வஜத்தையும் கீழேதள்ளினன். துர்முகன் மிக்கபலசாலியான ஸஹதேவனை எதிர்த்து யுத்தத்தில் மிக்கமுயற்சியுடையவனை அவனைச் சரமாரியினல் அடித்தான். பிறகு வீரனை ஸஹதேவனும் மகாயுத்தத்தில் மிக்ககூர்மையுள்ள அம்பினலே துர்முகனுடைய ஸாரதியைக் கீழேதள்ளினன். யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களும், செய்ததற்குப் பிரதிசெய்யவிருப்பமுள்ளவர்களுமான அவ்விருவரும் யுத்தகளத்தில் ஒருவரையொருவர்நாடிக் கொடிய அம்புகளாலே பயமுறுத்தினர்கள். யுதிஷ்டிரராஜர் மத்ரதேசாதிபதியான சல்யனைத் தாமாகவே எதிர்த்தார். மத்ரதேசாதிபதி அவருடையவில்லை இரண்டாகத் துண்டித்தான். குந்தீபுத்திரரான யுதிஷ்டிரராஜர் அறுக்கப்பட்ட அந்தவில்லை எறிந்துவிட்டு வேகமுள்ளதும் மிக்கபலமுள்ளதுமான வேறுவில்லைக் கையிலெடுத்து வணங்கினகணுக்களுடன்கூடின அம்புகளாலே மத்ரதேசாதிபதியை மூடி மிக்க கோபமுண்டவராகி, ‘நில் நில்’ என்றும்சொன்னர். பாரதரே! பிறகு திருஷ்டத்யும்னன் துரோணரை எதிர்த்தான். துரோணர் மிகுந்த கோபங்கொண்டு அந்தப் பாஞ்சாலராஜகுமாரனுடைய பகைவர்களுடைய உயிரை வாங்கும்தன்மையுள்ள திடமானவில்லை யுத்தத்தில் மூன்றுகத்துண்டாக்கி மிகக்கொடியதும் வேறொருகாலதண்டம்போன்றதுமான பாணத்தைப் பிரயோகித்து அவனுடையதேகத்தில் அதை அழுந்தும்படிசெய்தார். துருபதபுத்திரன் பிறகு வேறுவில்லை எடுத்து அதில் பதினன்குகணைகளைப்பூட்டிப் போரில் துரோணரைத் திருப்பியடித்தான். அவ்விருவரும் ஒருவர்மேல்ஒருவர் கோபித்து மிகவும் பயங்கரமான யுத்தத்தைச் செய்தார்கள். மஹாராஜரே! போரில் பரபரப்புள்ள சங்கன் பரபரப்புள்ள ஸௌமதத்தியை யுத்தத்தில் எதிர்த்தான்; ‘நில் நில்’ என்றும் சொன்னன். வீரனை சங்கன் யுத்தத்தில் அந்த ஸௌமதத்தியினுடைய வலக்கையைப் பிளந்தான். அவ்வாறே ஸௌமதத்தியும் சங்கனைத் தோள்பூட்டில் நன்முய் அடித்தான். முற்காலத்தில் கர்வமுடையவர்களான விருத்திரனுக்கும் இந்திரனுக்கும் போர்க்களத்தில் யுத்தம்நடந்ததுபோல அவ்விருவருக்கும் அப்படிப்பட்ட கொடியயுத்தம் நடந்தது. அளவற்ற பராக்கிரமமுள்ளவனும், மகாரதனுமான திருஷ்டகேது கோபங்கொண்ட பாஹ்லீகனை எதிர்த்து மிக்க கோபத்துடன் விரைவாகவந்தான். மன்னரே! கோபமுள்ள பாஹ்லீகனே திருஷ்டகேதுவை அனேக பாணங்களால்

பிடித்துப் பிறகு ஸிம்மநாதம்செய்தான். சேதிராஜனோ மிகுந்த கோபங்கொண்டு மதயானையை மதயானை எதிர்ப்பதுபோல எதிர்த்துப் பாஹ்லிகனை ஒன்பதுபாணங்களால் யுத்தத்தில் விரைவாக அடித்தான். அந்தயுத்தத்தில் கோபங்கொண்டவர்களும் அடிக்கடி கர்ஜிக்கின்றவர்களுமான அவ்விருவரும் அதிககோபங்கொண்ட அங்காரகனும் புதனும்போல எதிர்த்தார்கள். யுத்தத்தில் வலன்என்கிறஅஸுரனை இந்திரன் எதிர்த்ததுபோலக் கொடிய செய்கைகளையுடைய கடோத்கசன் ரௌத்ரமானசெய்கையுள்ள அலம்புஸன் என்கிற ராக்ஷஸனை எதிர்த்தான். பாரதரே! பிறகு கோபங்கொண்ட கடோத்கசன் மகாபலசாலியான அந்த ராக்ஷஸனைக் கூர்மையான தொண்ணூறு பாணங்களால் பிளந்தான். அலம்புஸனோ அழுந்தியகணுக்களுள்ளபாணங்களாலே யுத்தத்தில் மிக்கபலசாலியானகடோத்கசனைப் பலவாறு பிளந்தான். பிறகு யுத்தத்தில் பாணங்களாலே மிகவும் காயப்படுத்தப்பட்ட அவ்விருவரும் தேவாஸுரயுத்தத்தில் மிக்க பலசாலிகளான பலாஸுரனும் இந்திரனும் விளங்கியதுபோல விளங்கினர். வேந்தரே! பலசாலியான சிகண்டி யுத்தத்தில் துரோணபுத்திரரை எதிர்த்தான். பிறகு அஸ்வத்தாமா கோபமுற்று அருகில்வந்த சிகண்டியை மிக்க கூர்மையுள்ள நாராசத்தால் நன்றாக அடித்து நடுங்கும்படிசெய்தான். அரசரே! பிறகு சிகண்டியும் நன்றாகத் துவைந்ததும் நுண்ணிய முனையுள்ளதும் சாணையில்தீட்டப்பட்டதுமான அம்பினாலே துரோணபுத்திரரை அடித்தான். அவ்விருவரும் அப்பொழுது யுத்தத்தில் பலவிதமான அம்புகளாலே ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். அரசரே! சேனைத்தலைவனான விராடராஜன் விரைவுடன் போர்க்களத்தில் சூரனான பகதத்தனை எதிர்த்தான். பிறகு யுத்தம் நேர்ந்தது. பாரதரே! விராடன் அதிககோபமுண்டு மேகம் மலையின்மீது மழையைப் பொழிவதுபோலப் பகதத்தன்மீது சரமாரியைப்பொழிந்தான். பிறகு பகதத்தன், மேகமானது, உதித்த சூரியனை மறைப்பதுபோல, ரணகளத்தில் விராடராஜனை விரைவாக மூடினன். பாரதரே! கேகயதேசத்தரசனான பிருஹத்க்ஷத்திரனைச் சரத்வானுடைய குமாரரான கிருபர் எதிர்த்து அம்புமழையினாலே அவனை மூடினர். கேகயராஜனான பிருகத்க்ஷத்திரன் கோபமுண்டு கிருபாசாரியரைச் சரமாரியினால் நான்குபுறங்களிலும் நிரப்பினன். கோபமுள்ளவர்களான அவ்விருவரும் ஒருவர்ஒருவருடைய குதிரைகளைக் கொன்றும் விற்களை வெட்டியும் தேர்களையிழந்தவர்களாகிக் கத்திச்சண்டையின்பொருட்டு எதிர்த்தார்கள். அவ்விருவருக்கும் கொடிதும் மிக்க பயங்கரமுமான

அவ்விதயுத்தம் நடந்தது. அரசரே! பிறகு சத்துருக்களைத் தபிக்கச் செய்பவனான துருபதனே அதிக ஸந்தோஷத்துடன், மிக்கஸந்தோஷமுள்ளவனும் விந்துதேசாதிபதியுமான ஜயத்ரதனை எதிர்த்துச்சென்றான். பிறகு ராஜாவான ஸைந்தவன் துருபதனை மூன்றுபாணங்களால் அடித்தான். அவனும் அவனை யுத்தத்தில் திருப்பியடித்தான். சுக்கிரனுக்கும், அங்காரகனுக்கும் யுத்தம் நேர்வதுபோல (பார்ப்பவர்களுடைய) கண்களுக்கு ப்ரீதியுண்டுபண்ணக்கூடியதும், கொடியதும் மிக்க அச்சத்தைத்தருவதுமான அந்தயுத்தம் அவ்விருவருக்கும் நடந்தேறியது. விகர்ணன்என்கிற உமதுபுத்திரனே மகாபலசாலியானஸுதஸோமனை அதிவேகமுள்ளகுதிரைகளோடு எதிர்த்துவந்தான். பிறகு யுத்தம் நடந்தது. விகர்ணன் ஸுதஸோமனையும் ஸுதஸோமன் விகர்ணனையும் அம்புகளால் அடித்தும் (ஒருவரையொருவர்) நடுங்கும்படிசெய்யவில்லை. அது ஆச்சரியமாயிருந்தது. நரசிரேஷ்டனும் மகாரதனும் பராக்கிரமசாலியுமானசேகிதானன் பாண்டவன்நிமித்தமாக அதிககோபங்கொண்டு ஸுசர்மாவை எதிர்த்தான். மகாராஜரே! ஸுசர்மாவும் மகாரதனான சேகிதானனைப் பெரியசரமாரியினாலே யுத்தத்தில் தடுத்தான். சேகிதானனும் பரபரப்புடன் அந்தப்பெரும்போரில் ஸுசர்மாவை, மகாமேகம் மலையை (மழைத்தாரையினால்) மூடுவதுபோல அம்புகளால் நன்றாக மூடினான். ராஜேந்திரரே! பராக்கிரமசாலியான சகுனி பராக்கிரமசாலியான பிரதிவிந்தியனை, கொழுத்த ஸிம்மமானது யானையை எதிர்த்தோடுவதுபோல எதிர்த்து ஓடினான். யுதிஷ்டிரபுத்ரனான பிரதிவிந்தியனே மிகுந்தகோபங்கொண்டு யுத்தத்தில் இந்திரன் அஸுரனைப் பிளந்ததுபோலக் கூர்மையான அம்புகளால் சகுனியைப் பிளந்தான். மகாபிராஜ்ஞனான சகுனி யுத்தத்தில் தன்னைத்திருப்பியடிக்கின்ற பிரதிவிந்தியனை அமிழ்ந்தகணுக்களுள்ள பாணங்களால் பிளந்தான். ராஜேந்திரரே! காம்போஜர்களுள் மஹாரதனும் பகைவர்களை ஆக்ரமிக்கின்றவனுமான ஸுதக்ஷிணனை ஶ்ருதகர்மாவானவன் போரில் எதிர்த்துவந்தான். ஸுதக்ஷிணனே மஹாரதனும் மைநாகபர்வதம்போன்றவனுமான ஸஹதேவபுத்திரனை யுத்தத்தில் அடித்தும் அசையும்படிசெய்யவில்லை. பிறகு கோபங்கொண்ட ஶ்ருதசர்மாவானவன் காம்போஜர்களுள் மகாரதனான ஸுதக்ஷிணனை நாற்புறங்களிலும் பிளக்கிறவன்போல அநேக பாணங்களாலே அடித்தான். பிறகு யுத்தத்தில் முயற்சியுள்ளவனும் சத்துருக்களைத்தபிக்கச்செய்கிறவனுமான இராவான் மிகுந்தகோபங்கொண்டு அதிகமுயற்சியுள்ள

வனும் பகைவர்களை அடக்குகிறவனுமான ச்ருதாயுஸை எதிர்த்தான். பலசாலியும் மஹாரதனுமான அர்ஜுனகுமாரன் யுத்தத்தில் அவனுடைய குதிரைகளைக்கொன்று ஸிம்மநாதஞ்செய்து அவனுடைய ஸைன்யத்தை நிரப்பினான். பிறகு ச்ருதாயுஸும் கோபமுண்டவனாகி யுத்தத்தில் பல்குனகுமாரனுடைய குதிரைகளைக் கதாயுதத்தின் முனையினால் அடித்துக் கொன்றான். பிறகு யுத்தம் நடந்தது. அவந்திதேசத் தரசர்களான விந்தானுவிந்தர்கள் ஸேனையோடும் புத்திரர்களோடுங் கூடினவனும் மகாரதனும் வீரனுமான குந்திபோஜனைப் போரில் எதிர்த்தார்கள். அந்த இடத்தில் ஆச்சரியகரமும் கோரமுமான அவர்களின் பராக்கிரமத்தைக் கண்டோம். அவ்விருவரும் பெரியஸேனையுடன்கூட உறுதியாகஇருந்து யுத்தம்செய்தார்கள். அனுவிந்தனோ கதாயுதத்தினால் குந்திபோஜனை அடித்தான். குந்திபோஜனும் பாணக் கூட்டங்களை விரைவாக அவன்மீது இறைத்தான். குந்திபோஜனுடையபுத்திரனும் பாணங்களால் விந்தனை அடித்தான். அந்தவிந்தனும் குந்திபோஜனுடையபுத்திரனைத் திருப்பியடித்தான். அது ஆச்சரியமாயிருந்தது. சேனைகளையுடையவர்களும் ஸஹோதரர்களுமான ஐந்துகேகயதேசத்துராஜர்கள் படைகளுடன்கூடின ஐந்துகாந்தார தேசத்துவீரர்களோடு யுத்தரங்கத்தில் போர்புரிந்தார்கள். உம்முடைய புத்திரனான வீரபாகுவும் ரதிகர்களுள் உத்தமனும் விராடபுத்திரனுமான உத்தரனை எதிர்த்துப் போர்புரிந்து கூர்மையான பாணங்களால் அடித்தான். உத்தரனும் அந்தவீரனைக் கூர்மையுள்ள அம்புகளாலே அடித்தான். அரசரே! யுத்தத்தில் சேதிதேசத்துராஜன் உலூகனையெதிர்த்து விரைவாகவந்து சரமாரியினால் அவனை நன்றாக அடித்தான். உலூகனும் கூரியவைகளும் சிறகுகளுள்ளவைகளுமான பாணங்களாலே அவனை நன்றாகஅடித்தான். அரசரே! அவ்விருவருக்கும் மிகக் கொடியபோர் நடந்தது. பகைவர்களால் ஜயிக்கப்படாத அவ்விருவரும் மிக்ககோபங்கொண்டு ஒருவரைஒருவர் பிளந்தார்கள். இவ்விதம் உம்முடையஸேனவீரர்களுக்கும் அவர்களுக்கும்நேர்ந்த கைகலந்தயுத்தத்தில் ரதிகர்களுக்கும் யானைகளுக்கும் குதிரைகளுக்கும் காலாட்களுக்கும் ஆயிரக்கணக்கான த்வந்துவயுத்தங்கள் நடந்தன. அந்த யுத்தமானது ஒருமுகூர்த்தகாலம் பார்ப்பதற்கு இனிமையாக இருந்தது. வேந்தரே! பிறகு பைத்தியம்பிடித்ததுபோல் ஆயிற்று. ஒன்றுமே அறியப்படவில்லை. அந்தயுத்தத்தில் யானை யானையை எதிர்த்தது. ரதிகன் ரதிகனைஎதிர்த்தான். குதிரை குதிரையைஎதிர்த்தது. காலாள் காலாளை எதிர்த்தான். பிறகு அந்தயுத்தரங்கத்தில் ஒருவரையொரு

வர் எதிர்த்த சூரர்களுக்கு மிகநெருங்குதற்கரியதும் கைகலந்ததுமான யுத்தம் நடந்தது. அந்தஇடத்தில் தேவரிஷிகளும் ஸித்தர்களும் சாரணர்களும் ஒன்றுகூடிப் பூமியில் தேவாஸுரயுத்தத்திற்கொப்பாயும் கோரமாயுமிருக்கின்ற அந்தயுத்தத்தைப் பார்த்தார்கள். பிறகு ஆயிரக்கணக்கானயானைகளும் தேர்களும் குதிரைக்கூட்டங்களும் மனிதர்களுடையகூட்டங்களும் யுத்தமுறையைக்கடந்து எதிர்த்தன. நரசிரேஷ்டரே! தேர்களும் யானைகளும் காலாட்களும் குதிரைக்காரர்களும் அடிக்கடி ஆங்காங்கு யுத்தம்பண்ணுகின்றவர்களாகக் காணப்பட்டார்கள்.

---

## நாற்பத்தாறுவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குல யுத்தம்.)

அரசரே! பாரதரே! ஆங்காங்கு லக்ஷம்காலாட்படைகள்வரம்பு கடந்து யுத்தம்செய்தன. அதனை உமக்குச் சொல்வேன். அந்த யுத்தத்தில் புத்திரன் தகப்பனை அறியவில்லை. பிதாவும் தன் புத்ரனை அறியவில்லை. பிராதாவும் பிராதாவை அறியவில்லை. அம்மான் மருகனை அறியவில்லை. மருகனும் அம்மானை அறியவில்லை. அவ்வாறே ஸ்நேகிதனும் ஸ்நேகிதனை அறியவில்லை. பாண்டவர்கள் (பிசாசத்தால்) பிடிக்கப்பட்டவர்கள்போலக் கௌரவர்களோடு போர்புரிந்தார்கள். சிலபுருஷசிரேஷ்டர்கள் தேர்ப்படையைத் தேர்களாலேயே எதிர்த்தார்கள். பரதர்களிற்சிறந்தவரே! நுகத்தடிகள் நுகத்தடிகளாலே நொறுக்கப்பட்டன. தேரின் ஏர்க்கால்களால் தேரின் ஏர்க்கால்களும் தேரைச்சார்ந்தநுகத்தடியிலுள்ள இருப்புமுளைகளால் இருப்புமுளைகளும் நாசம்செய்யப்பட்டன. ஒருவரைஒருவர் கொல்ல எண்ணங்கொண்டசிலர் எதிர்த்துஅருகில்வந்தவர்களோடு எதிர்த்தார்கள். சிலதேர்வீரர்கள் தேர்வீரர்களோடு போர்புரிவதற்காக எதிர்த்துத்தாக்கி அசைவதற்குச்சக்தியற்றவர்களானார்கள். மதப்பெருக்குக்கொண்டவையும், பெரியதேகத்தையுடையவையுமான யானைகள் கோபங்கொண்டு யானைகளோடுஎதிர்த்துக் கொம்புகளால் ஒன்றைமற்றொன்று பலவாறாகக்கிழித்தன. மஹாராஜரே! அந்தயுத்தத்தில் யானைகள் தோரணங்களையும் கொடிகளையுமுடைய சிறந்தயானைகளோடு எதிர்த்து வேகமுள்ளமஹாகஜங்களாலே தந்தங்களால் அடிக்கப்பட்டு மிக்கதுன்பமுற்றவைகளாக வீரிட்டு அலறின. சிக்ஷைகளால்

நன்றாகப்பழக்கப்பட்டவைகளும் [1] வேணுகங்களாலும் [2] அங்குசங்களாலும் அடிக்கப்பட்டவைகளும் மதப்பெருக்கில்லாதவைகளுமான யானைகள் மதப்பெருக்குக்கொண்டயானைகளுக்கு எதிராகச்சென்றன. அந்தயுத்தத்தில் சிலமஹாகஜங்கள் மதப்பெருக்குக்கொண்டயானைகளோடு சேர்ந்துசண்டைசெய்கின்றவைகளாகி அன்றில்பக்ஷிகள்போல அலறிக்கொண்டு நான்குதிக்குக்களிலும் ஓடின. நன்றாகயுத்தத்தில் பழக்கப்பட்டவைகளும் மதப்பெருக்குக்கொண்டகன்னத்தையும் முகத்தையுமுடையவைகளுமான [3] யானைகள் ரிஷ்டிகளாலும்தோமரங்களாலும் நாராசங்களாலும் அடிக்கப்பட்டு மர்மஸ்தானங்கள்உடைந்து அலறின; உயிர்களை இழந்தும் கீழேவீழ்ந்தன. சிலயானைகள் பயங்கரமானசப்தங்களைவெளியிட்டுக்கொண்டு திசைகளில் விரைவாகஓடின. மகாராஜரே! அசன்றமார்பையுடையவர்களும் பகைவர்களை அடிக்கும் திறமைவாய்ந்தவர்களுமான கஜங்களுடைய பாதரக்ஷகர்கள் ரிஷ்டிகளையும் விற்களையும் பளபளப்புள்ள கோடாலிகளையும் கதாயுதங்களையும் உலக்கைகளையும் பிண்டிபாலங்களையும் தோமரங்களையும் இரும்புமயமானபரிகாயுதங்களையும் தீட்டப்பட்டவையும் பளபளப்புள்ளவையும் நீண்டவையுமான (முப்பது அங்குலத்துக்கு அதிகமானநீளமுள்ள) கத்திகளையும் கையில் வந்தியவர்களும் மிகுந்த பரபரப்புள்ளவர்களும் ஒருவரைஒருவர் கொல்ல எண்ணங்கொண்டவர்களும் ஆங்காங்கு ஓடுகின்றவர்களுமாகக் காணப்பட்டார்கள். ஒருவரையொருவர் எதிர்த்தோடிவரும்சூரர்களுடையகத்திகள் மனிதர்களுடையஉதிரங்களால் நன்குநனைக்கப்பட்டு விளங்குகின்றவைகளாகக் காணப்பட்டன. வீரர்களுடைய கைகளாலே சுழற்றி வீசப்பட்டிருக்கின்றவைகளும் பகைவர்களுடைய மர்மஸ்தானங்களில் வீழ்கின்றவைகளுமான கத்திகளினுடைய ஓயாத சப்தமானது உண்டாயிற்று. பாரதரே! கதாயுதங்களாலும், முஸலங்களாலும் அடிக்கப்பட்டும், சிறந்தகத்திகளால் வெட்டப்பட்டும், யானைகளினுடைய கொம்புகளால் பிளக்கப்பட்டும், யானைகளால் அடிக்கப்பட்டும் ஆங்காங்கு ஒருவரைஒருவர் அலறி அழைக்கின்ற யுத்தவீரர்கூட்டங்களுடைய குரூரமான சொற்களை நரகத்தில் இருக்கின்ற பிராணிகளுடைய சொற்களைப்போல (ஜனங்கள்) கேட்டார்கள். குதிரைக்காரர்கள், சாமரத்தைத் தலையலங்காரமாகத்தரித்தவைகளும் மிக்க வேகமுள்ளவைகளும் அன்னப்பறவைகள்போன்றவைகளுமான குதிரைகளோடு ஒருவரைஒருவர் எதிர்த்து விரை

---

[1], [2] யானையோட்டுங்கருவி.

[3] கூறியது கூறலால் ஒருசொல் விடப்பட்டது.

வாக ஓடினார்கள். அவர்களால் பிரயோகிக்கப்பட்டவைகளும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டுள்ளவைகளும் விரைவாகச்செல்பவைகளும் கூர்மையுள்ளவைகளும் பளபளப்புள்ளவைகளும் ஸர்ப்பங்களுக்கு ஒப்பானவைகளுமான பெரியஈட்டிகள் (லக்ஷ்யங்களில்) நன்றாகப்பாய்ந்தன. சில குதிரைவீரர்கள் சிறந்த வேகமுள்ள குதிரைகளிலிருந்து துள்ளிப்பாய்ந்து ரதிகர்களுடைய தலைகளைப் பெரிய ரதத்தினின்று பறித்தெறிந்தார்கள். ஒரு தேர்வீரன் அழுத்திய கணுக்களையுடைய [1]பல்லங்களாலே பாணத்திற்கு எதிர்ப்பட்டிருக்கும் நிலைமையை அடைந்துள்ள அனேகம் குதிரைக்காரர்களைநாடி அவர்களைக்கொன்றான். புதியமேகங்களுக்கு ஒப்பானவைகளும் மதங்கொண்டவைகளும், ஸ்வர்ணாபரணங்களையணிந்தவைகளுமான யானைகள் குதிரைகளைத் தள்ளிக் கால்களாலேயே மிதித்தன. ஈட்டிகளாலே துன்பஞ்செய்யப்படுகின்ற சிலயானைகள் மஸ்தகங்களும் விலாப்புறங்களும் பிளக்கப்படுமளவில் மிகுந்த துன்பமுற்று வீரிட்டு அலறின. உத்தமமான யானைகள் குதிரைக்காரர்களோடுகூடியிருக்கிற சிலகுதிரைகளை அடித்து நெருங்கினதும் பயங்கரமுமான அந்தயுத்தத்தில் விரைவாகத்தூக்கி எறிந்தன. கஜங்கள் கொம்புமுனைகளாலே குதிரைக்காரர்களோடு குதிரைகளைத் தூக்கியெறிந்து கொடிகளுடன்கூடின ரதக்கூட்டங்களை நான்குபக்கங்களிலும் அடித்துக்கொண்டு நாற்புறத்திலும் ஸஞ்சரித்தன. அந்தப்போர்க்களத்தில் சிலபெரியயானைகள் ஆண்மைத்தனத்தினாலும் மிக்கமதத்தினாலும் குதிரைவீரர்களையும் குதிரைகளையும் துதிக்கைகளாலும் கால்களாலும் நாசஞ்செய்தன. யுத்தத்தில் குதிரைவீரர்களாலும் யானைமீதேறியிருக்கின்ற வீரர்களாலும் பிரயோகிக்கப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளும் பரிசுத்தமானவைகளும் ஸர்ப்பங்கள்போன்றவைகளுமான பாணங்கள் யானைகளினுடைய நெற்றிகளிலும் சரீரங்களிலும் விலாப்பக்கங்களிலும் விழுந்தன. அரசரே! வீரர்களுடைய கைகளால்விடப்பட்டவைகளும் பளபளப்பானவைகளும் பெரியகுறைக்கொள்ளிகள்போன்றவைகளும் கோரமுள்ளவைகளுமான சக்திஆயுதங்கள் ஆங்காங்கு மனிதர்களுடைய சரீரங்களையும் குதிரைகளுடைய சரீரங்களையும் இருப்புக்கவசங்களையும் உடைத்துக்கொண்டு கீழே விழுந்தன. (வீரர்கள்) புலித்தோல்களால் கட்டப்பட்டவைகளும் புலித்தோலால்உறைபோடப்பட்டவைகளும் உறையினின்று உருவப்பட்டவைகளும் மாசற்றவைகளுமான கத்திகளாலே பகைவர்களை யுத்தகளத்தில் அடித்தார்கள். வீரர்கள் தைர்யத்துடன்

[1] பிறைவடிவமான முனையுள்ள பாணம்.

எதிரில்வருகின்றவனையும் கோபத்தோடெதிரில்நிற்பவனையும் இடப் பக்கத்தைஅடுத்துநிற்கிறவாகனத்தையும் பார்த்துக்கொண்டு கத்தி களோடும் கேடகங்களோடும் கோடாலிகளோடும் விரைவாகஓடிவந்தார் கள். சிலயானைகள் துதிக்கைகளாலே குதிரைகள்பூட்டப்பட்ட தேர் களைக்கீழேதள்ளி இழுத்துக்கொண்டே எல்லாருடைய ஒலிகளையும் அனுசரித்து எல்லாத்திக்குக்களிலும்ஓடின. சிலமனிதர்கள் முளை களால் பிளக்கப்பட்டார்கள். சிலர் கோடாலிகளால் பிளக்கப்பட்டார் கள். சிலர் யானைகளால் நசுக்கப்பட்டார்கள். சிலர்குதிரைகளாலே தூளி யாக்கப்பட்டார்கள். இன்னும்சிலர் தேருருளைகளால் அரைக்கப்பட் டார்கள். சிலர் கோடாலிகளாலே வெட்டப்பட்டார்கள். அரசரே! ஆங்காங்கு மனிதர்கள் உறவினர்களை அலறியழைத்தார்கள். சிலர் புத்திரர்களையும், வேறுசிலர் தந்தையர்களையும், பந்துக்களையும், பிரா தாக்களையும், மாதுலர்களையும், மருகர்களையும், பகைவர்களையும் உரக்க அழைத்தனர். பாரதரே! அனேகமனிதர்கள் நரம்புகள்சிதறியும் துடைகள் ஒடிந்தும் காணப்பட்டார்கள். சிலர் கைகள்அறுக்கப்பட் டும் விலாப்புறங்கள்பிளக்கப்பட்டும் ஜீவித்திருப்பதில்விருப்பமுற் றுத் தாகத்துடன் அலறுகிறவர்களாகக் காணப்பட்டார்கள். தாகங் கொண்டவர்களும் அல்பமானபிராணனையுடையவர்களுமான சிலர் யுத்தத்தில் பூமியில்விழுந்து ஜலத்தைத் தேடினார்கள். பாரதரே! ரக்த வெள்ளத்தால்நான்குபக்கங்களிலும்நனைக்கப்பட்டவர்களும் துன்ப மடையும்படிசெய்விக்கப்படுகின்றவர்களுமானவீரர்கள் தங்களையும் ஒன்றுசேர்ந்திருக்கின்ற உம்முடையபுத்திரர்களையும் மிகவும்நிந்தித் தார்கள். சூரர்களானசிலக்ஷத்திரியர்கள் ஒருவரிடத்தொருவர் பகை யுள்ளவர்களாயிருந்தும் ஆயுதங்களைப் பிரயோகிக்கவில்லை; அலறவு மில்லை. சூரர்கள் ஊக்கத்துடன் ஆங்காங்கு ஒருவரைஒருவர் வெருட் டினார்கள். குரோதத்தினால் பற்களால் தங்கள்உதட்டைக்கடித்துக் கொண்டு புருவநெறித்தலுடன்கூடியமுகங்களுடன் ஒருவரைஒருவர் பார்த்துக்கொண்டார்கள். திடமானமனமுள்ளவர்களும் மிக்கபலசாலி களுமானசிலர் பாணங்களால்துன்பமுற்றும் காயத்தினால்பீடிக்கப்பட் டும் க்லேசத்தைஅடைவிக்கப்பட்டுமிருந்தும் சப்தம்செய்யாமலிருந் தனர். மஹாராஜரே! ரதத்தையிழந்து போர்க்களத்தில் அன்னியரு டையரதத்தைவிரும்பும் சிலசூரர்கள் சிறந்தயானைகளாலே கீழேதள்ளி நொறுக்கப்பட்டுப் பூத்தபலாசமரங்கள்போல விளங்கினார்கள். மிக்க பயத்தைச்செய்வதும் சிறந்தவீரர்களுக்கு நாசத்தைஉண்டுபண்ணு கின்றதுமான அப்படிப்பட்டயுத்தம் நடக்கையில் சேனைகளில் அனே

கர் பயங்கரமான சப்தங்களைச் செய்தார்கள். போரில் தகப்பன் பிள்ளையைக் கொன்றான்; பிள்ளையும் தகப்பனைக் கொன்றான்; மருகன் மாமனைக் கொன்றான்; மாமனும் மருகனைக் கொன்றான்; தோழன் தோழனைக் கொன்றான்; ஸம்பந்தி ஸம்பந்தியைக் கொன்றான். இவ்வாறு அந்தயுத்தத்தில் கௌரவர்கள் பாண்டவர்களோடு சமர்புரிந்தார்கள். அப்படி வரம்புகடந்ததும் அச்சந்தருவதுமான அந்தப்போர்நடக்குங்கால் பாண்டவர்களுடையபடையானது பீஷ்மரையடைந்து மிக்க நடுக்கமுற்றது. பரதர்களுள்சிறப்புற்றவரே! வேந்தரே! அப்பொழுது மிக்கபாகுபலமுள்ளபீஷ்மர் பெரியரதத்தின்மீது உயர்த்தி நிறுத்தப்பட்டதும் ஐந்துநக்ஷத்திரப்பிரதிமைகளுள்ளதும் வெள்ளிமயமுமான பனைமரக்கொடியோடு மேருவில் சந்திரன்விளங்குவதுபோல விளங்கினார்.

---

## நாற்பத்தேழாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(உத்தரகுமாரனுடையவதம்.)

பெரும்பான்மையாக முற்பகல் முழுதுங்கழிந்த அந்தப்பயங்கரமான தினத்தில் மிகக்கொடிதும் சிறந்தபெரியவீரர்களுக்குக்ஷயத்தை உண்டுபண்ணுகின்றதுமான (யுத்தம்) அவ்விதமாகநடக்கையில் துர்முகன், கிருதவர்மா, கிருபர், சல்யன், விவிம்சதி இவர்கள் உமதுபுத்திரனால் தூண்டப்பட்டுப் பீஷ்மரைஅடைந்து அவரைப்பாதுகாத்தார்கள். பரதசிரேஷ்டரும் மகாரதருமானபீஷ்மர் அதிரதர்களான இவ்வைவர்களாலே பாதுகாக்கப்பட்டுப் பாண்டவர்களுடைய சேனைகளில் புகுந்தார். பாரதரே! சேதிதேசத்தார்கள், காசிதேசத்தார்கள், கரூசர்கள், பாஞ்சாலர்கள் இவர்களுக்கிடையில் அசைகிற பீஷ்மருடையபனைமரக்கொடியானது பலவாறுகக்காணப்பட்டது. அந்தப்பீஷ்மர் யுத்தத்தில் அதிகவேகமுள்ளவைகளும் அமிழ்ந்தகணுக்களுள்ளவைகளுமான பல்லங்களாலே பகைவர்களுடையதலைகளையும் நுகத்தடிகளும் கொடிகளுமுள்ளரதங்களையும் அறுத்தார். பரதர்களிற்சிறந்தவரே! நர்த்தனம்செய்பவர்போலிருக்கும் பீஷ்மருடையதேர்செல்லும்வழிகளில் யானைகள் மர்மஸ்தானத்தில்அடிக்கப்பட்டு அதிகமாக அலறின. அபிமன்யு மிக்ககோபமுற்றுப் பொன்னிறமுள்ளசிறந்தகுதிரைகள் பூட்டியதேரின்மீதேறிப் பீஷ்மருடையரதத்தைநோக்கிச் சென்றான்.

ஜாம்பூநதத்தினால் சித்திரவேலைசெய்த [1] கோங்குமரக்கொடியோடு அந்தஅபிமன்யு பீஷ்மரையும் அங்குள்ளஉத்தமர்களானரதிகர்களையும் எதிர்த்தான். வீரனான அபிமன்யு கூரியஒருகணையினால் பீஷ்மருடைய கொடியை அடித்து அவரோடும் அவரை அடுத்துவருகின்றவீரர்களோடும் போர்புரிந்தான். கிருதவர்மாவை ஒருபாணத்தினாலும் சல்யனை ஐந்துபாணங்களாலும் அடித்துக் கூரியமுனையுள்ள ஒன்பதுபாணங்களாலே பிரபிதாமகரானபீஷ்மரையும் அடித்தான். காதுவரையில்நன்கு இழுத்துவிடப்பட்டதும் நன்குபிரயோகிக்கப்பட்டதுமானஒருபாணத்தினால் பொன்னால் அலங்கரிக்கப்பட்டகொடியையும் அடித்தான். எல்லாக்கவசங்களையும் உடைக்குந்திறமையுள்ளதும் அமிழ்ந்தகணுக்களுள்ளதுமான ஒருபாணத்தினால் துர்முகனுடையஸாரதியின்தலையைத் தேகத்தினின்றுஅறுத்தான். கூர்மையானநுனியுள்ளபல்லத்தினால் பொன்னால்அலங்கரிக்கப்பட்டகிருபருடையவில்லை அறுத்தான். மகாரதனான அபிமன்யு அதிககோபங்கொண்டு நர்த்தனஞ்செய்கின்றவன்போலஇருந்துகொண்டு கூரியமுனையுள்ளஅம்புகளால் அந்தவீரர்களையும் அடித்தான். அவனுடையலாகவத்தைக்கண்டு தேவர்களும் சந்தோஷமடைந்தார்கள். பீஷ்மரைமுதன்மையாகக்கொண்டஎல்லாரதிகர்களும் அர்ஜுனகுமாரனான அபிமன்யு லக்ஷ்யந்தவறாமல்அடித்தலால் அவனை மஹாபலசாலியானஸாக்ஷாத் தனஞ்சயனாகவே எண்ணினார்கள். அவனுடையகைத்தேர்ச்சியின்வழிநிற்பதும் கொள்ளிவட்டம்போன்றகாந்தியுள்ளதும் ஒலியுள்ளதுமானவில்லானது காண்டீவம்போல் நான்குபக்கத்திலும்ஆக்ரமித்தது. பகைவீரர்களை அழிப்பவரானபீஷ்மர் அந்தஅர்ஜுனகுமாரனை அடைந்து யுத்தரங்கத்தில் மஹாவேகமுள்ளஒன்பதுபாணங்களால் விரைவாகஅடித்து அதிகபலசாலியான அவனுடையத்வஜத்தையும் மூன்றுபாணங்களால் அறுத்தார். விரதத்தைஅநுஷ்டிப்பவரானபீஷ்மர் மூன்றுகணைகளால் ஸாரதியையுங்கொன்றார். அவ்வாறே கிருதவர்மாவும், கிருபரும், சல்யனும் அர்ஜுனகுமாரனான அபிமன்யுவை ஹிம்ஸித்தும், மைநாகபர்வதத்தைப்போல அசைக்கவியலவில்லை. சூரனான அந்தஅபிமன்யு மஹாரதர்களான அந்தக்கௌரவர்களாலே சூழப்பட்டு ஐந்துரதங்களின்மீதும் சரமாரிகளைப் பொழிந்தான். பிறகு அர்ஜுனகுமாரனும் பலசாலியுமான அபிமன்யு சரமாரிகளாலே ஆயிரக்கணக்கான வீரர்களைத்தடுத்துக்கொண்டும் பீஷ்மரின்மீது கணைகளைவிடுத்துக்கொண்டும் ஸிம்மநாதஞ்செய்தான். அரசரே! யுத்தத்தில்முயற்சியுள்ளவனும் அம்பு

[1] 'கர் ணிகாரம்' என்பது மூலம்.

களால்பீஷ்மரை அடிப்பவனுமான அந்த அபிமன்யுவினுடைய கை வன்மையானது மிகப்பெரிதாகக் காணப்பட்டது. பீஷ்மரும் பகைவர்களைக்கவர்கின்ற அந்த அபிமன்யுவின்மீது அம்புகளைத் தொடுத்தார். அந்த அபிமன்யுவும் சமரில் பீஷ்மருடைய வில்லினின்றும்விடுபடுகின்ற அம்புகளைத் துண்டாடினான். பிறகு பழுதற்றபாணங்களையுடையவனும் வீரனுமான அபிமன்யு யுத்தத்தில் ஒன்பது பாணங்களாலே பீஷ்மருடைய கொடியை அறுத்தான். பிறகு ஜனங்கள் பெருங்கூச்சலிட்டார்கள். பாரதரே! வெள்ளியாலாகியதும் அடிபருத்ததும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டதுமான அந்தப்பனைமரக்கொடியானது அபிமன்யுவினுடைய அம்புகளாலே அறுக்கப்பட்டுப் பூமியில் விழ்ந்தது. பரதர்களிற்சிறந்தவரே! அபிமன்யுவினுடைய அம்புகளால் அந்தப்பனைக்கொடி வீழ்ந்ததைக்கண்டு அவனைமகிழ்விப்பதற்காகப் பீமன் உரத்தஸிம்மநாதஞ்செய்தான். பிறகு, மிக்க பலசாலியானபீஷ்மர் மகாபயங்கரமான அந்தயுத்தத்தில் திவ்யமான அநேகம் மஹாஸ்திரங்களை வெளிப்படுத்தினர். பிறகு அளவிடமுடியாதபலமுள்ளபிரபிதாமகர் அபிமன்யுவின்மீது ஆயிரம் அம்புகளை இறைத்தார். அது ஆச்சரியம்போலிருந்தது. பிறகு பெரியவில்லாளிகளும் மகாரதர்களுமானவிராடன், விராடபுத்திரன், துருபதகுமாரனை திருஷ்டத்யும்னன், பீமன், கேகயர்கள், ஸாத்யகி ஆகியபாண்டவர்களைச்சேர்ந்தபதின்மர் விரைவுடன் ஸுபத்திராபுத்திரனைக்காப்பதற்காகத் தேர்களோடு எதிர்த்து ஓடிவந்தார்கள். சந்தனுகுமாரரான பீஷ்மர் போர்க்களத்தில் வேகத்துடன்வருகின்ற அவர்களுள் பாஞ்சாலராஜபுத்திரனை மூன்றுபாணங்களாலும் ஸாத்யகியைஒன்பது பாணங்களாலும் அடித்தார். காதுவரையில்இழுத்துவிடப்பட்டதும் கூர்மையுள்ளதுமான க்ஷுரம்என்கிற ஒருபாணத்தினாலே பீமஸேனனுடையகொடியையும் அறுத்தார். பொன்மயமானதும் ஒளிபொருந்தியதுமான பீமனுடைய அந்தஸிம்மக்கொடியானது பீஷ்மரால் நாசம்பண்ணப்பட்டு ரதத்தினின்று கீழேவிழ்ந்தது. பிறகு பீமன் ரணகளத்தில் சந்தனுபுத்திரரானபீஷ்மரை மூன்றுபாணங்களால்அடித்தும், கிருபரைஒருபாணத்தாலும் கிருதவர்மாவைஎட்டுப்பாணங்களாலும் அடித்தான். விராடபுத்திரனானஉத்தரனும் துதிக்கைமுனையைவளைத்துக்கொண்டிருக்கும்யானையோடு மத்ரதேசாதிபதியான அரசனை எதிர்த்து ஓடிவந்தான். வேகத்தோடுவருகின்ற அந்தச் சிறந்த யானையின்ஒப்பற்றவேகத்தைத் தேரின்மீதுள்ளசல்யன் பாணங்களால் தடுத்தான். அந்தச்சல்யன்மீதுகோபங்கொண்ட அந்தச்சிறந்தயானை

நன்குரதத்தைவஹிக்கின்ற பெரிய நான்குகுதிரைகளைக் காலால் நுகத்தடியைமிதித்துக்கொன்றது. குதிரைகள்கொல்லப்பட்டதேரிலிருக்கும்அந்தமத்ரதேசாதிபதி இரும்பாலானதும் உத்தரனுடைய உயிரைவாங்கக்கூடியதும் ஸர்ப்பம்போன்றதுமான ஒருசக்தியை எறிந்தான். உத்தரன் அந்தச்சக்தியினால்கவசம்பிளக்கப்பட்டு அதிகமூர்ச்சையடைந்து அங்குசமும்தோமரமும்நழுவ யானையினின்று விழுந்தான். சல்யனும் கத்தியைக்கையிலெடுத்துக்கொண்டு சிறந்ததேரினின்று கீழேகுதித்துப் பிறகு அந்தயானையரசின்பெரியதுதிக்கையைவெட்டியெறிந்தான். பலகணைகளால் மர்மம்பிளந்ததும் துதிக்கையறுபட்டதுமான அந்தயானையானது பயங்கரமான தீனஸ்வரத்தை வெளியிட்டுக்கொண்டு கீழேவிழுந்துமரித்தது. அரசரே! மத்ரராஜன் இவ்விதமான இந்தக்காரியத்தைச்செய்துவிட்டுப் பிரகாசிக்கின்றகிருதவர்மாவினுடையரதத்தின்மீது விரைவாகஏறினான். விராடபுத்திரனான ஸ்வேதன் அப்பொழுது பிராதாவானஉத்தரன்கொல்லப்பட்டதையும் சல்யன் கிருதவர்மாவோடுசேர்ந்திருப்பதையும்கண்டு ஹவிஸினாலே அக்னிஜ்வலிப்பதுபோலக் கோபத்தால்நன்குஜ்வலித்தான். பலவானான அந்தஸ்வேதன் இந்திரனுடையவில்லுக்கொப்பானபெரியவில்லை நாணொலியிடும்படிசெய்துகொண்டு மத்ரதேசாதிபனான சல்யனைக்கொல்வதற்கு எதிர்த்தோடிவந்தான். ஸ்வேதன் பெரியதேர்க்கூட்டத்தால் நாற்புறமும் சூழப்பட்டுப் பாணமயமானமழையைப் பொழிந்துகொண்டு சல்யனுடையரதத்தைநோக்கி விரைந்துசென்றான். அரசரே! மதங்கொண்டயானையினுடையபலம்போன்றபலமுடையவனும் எதிர்த்துவருகின்றவனுமான அந்தஸ்வேதனைக்கண்டு உம்மைச்சேர்ந்தவர்களுள் கோஸலதேசாதிபதியானபிருஹத்பலன், மகததேசாதிபதியான ஜயத்ஸேனன், பிரதாபசாலியும் சல்யபுத்திரனுமானருக்மரதன், அவந்திதேசாதிபர்களானவிந்தானுவிந்தர்கள், காம்போஜதேசாதிபதியான ஸுதக்ஷிணன், ப்ருஹத்க்ஷத்ரனுடையகுமாரனும் ஸிந்துதேசாதிபதியுமானஜயத்ரதன் ஆகியஏழுரதிகர்களும் மிருத்யுவினுடையகோரப்பற்களின்நடுவை அடைந்திருக்கின்ற மத்ரராஜனான சல்யனைமீட்கஎண்ணங்கொண்டு நாற்புறமும் சூழ்ந்துகொண்டார்கள். மிக்கபலசாலிகளானவீரர்களுடைய பலவிதவர்ணங்களால்விசித்ரமானவைகளும் நாணொலிசெய்யப்பட்டவைகளுமானவிற்கள் மேகங்களில்மின்னல்கள்போலக் காணப்பட்டன. அவர்களோ கார்காலத்தில் காற்றினால்அலைக்கப்பட்டமேகங்கள் மலையின்மீது ஜலத்தைப்பொழிவதுபோல அம்புமழையை ஸ்வேதனுடையதலையின்மீது பொழிந்தார்கள். பிறகு பெரியவில்லாளியும் ஸே

னுபதியுமான ஸ்வேதன் கோபங்கொண்டு நன்குதீட்டப்பட்டஏழுகணை களால் அவர்களுடையவில்லுகளையறுத்து நாசம்பண்ணினான். பாரத ரே! அவர்களுடையவில்லுகள் அறுக்கப்பட்டவைகளாகவே காணப் பட்டன. பிறகு அந்தஏழுவீரர்களும் அரைநிமிஷத்திற்குள்ளாகவே வேறுவிற்களைக்கையில்கொண்டு ஏழுகணைகளை ஸ்வேதன்மீதுதொடுத் தார்கள். பிறகு அளவிடுதற்கு அருமையாகிய வலிமையுள்ளவனும் மிக்கபாகுபலமுள்ளவனுமான ஸ்வேதன் வில்லாளிகளான அவர்களு டையவிற்களை விரைவாகச்செல்கின்றஏழுபல்லங்களாலே மறுபடியும் அறுத்தான். பெரியவில்லுகள் அறுபட்டவுடன், மகாரதர்களான அவர் கள் ரதசக்திகளை விரைந்து கையிலெடுத்துப் பயங்கரமாக ஸிம்மநாதங் களைச்செய்தார்கள். பரதசிரேஷ்டரே! ஏழுரதசக்திகளும் ஸ்வேதனு டையரதத்தைக்குறித்துச்சென்றன. பிறகு மகேந்திரனுடையவஜ்ரா யுதத்தின்ஒலிபோன்றஒலியுள்ளவைகளும் ஜ்வலிக்கின்றவைகளுமான அந்தஏழுசக்திகளும் தன்னை அடைதற்குள்ளாகவே உத்தமமான அஸ்தி ரங்களை அறிந்தவனானஸ்வேதன் ஏழுபல்லங்களாலே அவைகளைத் துண்டாடினான். பரதசிரேஷ்டரே! பிறகு சுவேதன் எல்லாவீரர்களு டையசரீரங்களையும்பிளக்குந்திறமையுள்ள ஓரம்பைஎடுத்து, ருக்மர தனைக்குறித்து எய்தான். வஜ்ராயுதத்தைக்காட்டிலும்அதிகவல்லமை யுள்ளதும் பெரிதுமான அவனுடைய பாணமானது ருக்மரதனுடைய தேகத்தில்விழுந்தது. அரசரே! பிறகு ருக்மரதன் பாணத்தால் உறுதி யாகஅடிக்கப்பட்டுத் தேரின்நடுவினுள் உட்கார்ந்து மிக்கமூர்ச்சையை யும் அடைந்தான். பிரஜ்ஞைதவறியவனும் மனநிலைதவறினவனுமான அவனை ஸாரதியானவன் எல்லாஜனங்களும்பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே ஜாக்ரதையாக வேறிடத்திற்கு விரைந்து கொண்டுசென் றான். மிக்க புஜபலமுள்ளவனானஸ்வேதன் பொன்னால்அலங்கரிக்கப் பட்ட வேறு ஆறுபாணங்களைக் கையிலெடுத்து அந்த ஆறுவீரர்களின் கொடிகளின் தலைகளையும்அறுத்துக் கீழேதள்ளினான். பகைவரைவா ட்டுபவரே! அவர்களுடைய குதிரைகளையும் ஸாரதிகளையும் பிளந்து அம்புகளை அவர்களின்மீது பொழிந்துகொண்டு சல்யனுடைய ரதத் தைக்குறித்துச்சென்றான். பாரதரே! பிறகு சல்யனுடையரதத்தை நோக்கி வேகமாகச்செல்கின்ற ஸேனாபதியான சுவேதனைக்கண்டு உம் முடையபடைகளில் கலகலவென்னும்ஒலி உண்டாயிற்று. பிறகு மிக்க பலசாலியான உமதுகுமாரன் பீஷ்மரைமுன்னிட்டு எல்லாஸைன்யங் களாலும்சூழப்பெற்று ஸ்வேதனுடையதேரைக்குறித்துச் சென்றான்; மிருத்யுவினுடையவாயில்விழுந்திருக்கின்றமத்ரராஜனை விடுவித்தான்.

பிறகு உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பிறருக்கும் பரஸ்பரம் எதிர்த்து ஒன்றசேர்ந்தபோர்புரிகின்றதேர்களையும் யானைகளையுமுடையதும் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணுகிறதும் கைகலந்ததுமானயுத்தம் நேர்ந்தது. கௌரவர்களுள்பிராயமுதிர்ந்தவரும் பிதாமஹருமான பீஷ்மரானவர் மனிதரிற்சிறந்தவர்களான அபிமன்யு, பீமஸேனன், மஹாரதனானஸாத்யகி, கேகயன், விராடன், த்ருபதகுமாரனானதிருஷ்டத்யும்னன் இவர்கள்மீதும் சேதி தேசத்தரசர்கள்மீதும் மச்சநாடர்கள் மீதும் சரமாரிகளைப் பொழிந்தார்" என்று கூறினன்.

---

## நாற்பத்தெட்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஶ்வேதன் போர்புரிந்ததும், பீஷ்மர் அவனைக் கொன்றதும்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! சிறந்தவில்லாளியான சுவேதன் இவ்வாறு சல்யனுடையதேரைநோக்கிவந்திருக்கையில் கௌரவர்களும் பாண்டவர்களும் என்னசெய்தார்கள்? சந்தனுகுமாரரான பீஷ்மரும் யாது செய்தார்? கேட்கும்எனக்கு அதைச்சொல்" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானன்.

"அரசரே! பாரதரே! பிறகு ஸேனுபதியும் சூரனுமான ஶ்வேதனைமுன்னிட்டுக்கொண்டு மஹாரதர்களாகிய லக்ஷக்கணக்கானக்ஷத்திரியசிரேஷ்டர்கள் அரசனானஉமதுபுத்திரனுக்குப் பலத்தைக் காண்பிப்பவர்களாகிச் சிகண்டியை முன்னிட்டுக்கொண்டு (தங்களை) பாதுகாப்பதற்கு விரும்பினர்கள். மஹாரதர்கள் கொல்ல விருப்பமுள்ளவரும் போர்வீரர்களுள் சிறந்தவருமான பீஷ்மரைஜயிக்க எண்ணிப் பொன்னல்அலங்கரிக்கப்பட்டபீஷ்மருடைய ரதத்தை எதிர்த்துவந்தார்கள். அப்பொழுது கைகலந்தபெரும்போர்நடந்தது. விரதம்தவறுதவரே! உம்மைச்சேர்ந்தவீரர்களுக்கும் பகைவர்களுக்கும் நடந்த பெரியயுத்தத்தை உமக்கு நான் நன்குசொல்வேன். சாந்தனவர் அந்த யுத்தகளத்தில் அநேகரதமத்தியங்களைச் சூன்யமாக்கினர். அந்தயுத்தத்தில் பீஷ்மர் பெரியஆச்சரியத்தைச்செய்தார்; அம்புகளாலே உத்தமர்களான தேர்வீரர்களைத் துன்பமடையச்செய்தார். ஸூர்யனைப் போன்றபிரதாபமுள்ளபீஷ்மர் அம்புகளாலே ஸூர்யனை மூடினர். உதிக்கின்றசூரியன் இருளைநாசம்செய்வதுபோல யுத்தத்தில் நான்கு பக்கங்களிலும் (சத்ருக்களை) ஓடும்படி செய்தார். அரசரே! அந்தப்

பீஷ்மராலே யுத்தத்தில் லக்ஷம்லக்ஷமாகத் தொடுக்கப்பட்டவைகளும் போரில் க்ஷத்ரியர்களுக்கு நாசத்தையுண்டுபண்ணுகின்றவைகளும் மிக்கவேகமுள்ளவைகளும் பெரியபலமுள்ளவைகளுமான பாணங்கள் வீரர்களுடையதலைகளை நூறு நூறாக யுத்தபூமியில் கீழேவிழும்படி செய்தன. வஜ்ராயுதத்தால் அடிக்கத் தள்ளப்பட்ட பர்வதங்களைப்போல முட்களமைந்த இரும்புக்கவசங்கள் பூண்ட யானைகளையும் கீழேவீழ்த்தினார். அரசரே! ரதங்கள் ரதங்களோடு சேர்க்கைபெற்றனவாகக்காணப்பட்டன. சிலகுதிரைகள், குதிரைகளுடன்கூடினரதத்தையிழுத்தன. சிலகுதிரைகள், கொல்லப்பட்டு வில்லுடன்தொங்கிக்கொண்டிருக்கிற யுவாவான வீரனைப்பொறுத்து அதிகவேகத்துடன் அங்குமிங்கும் சென்றன. கத்திகளும்அம்பறாத் தூணிகளும் கட்டப்பெற்றவீரர்கள் அடிக்கப்பட்டுத் தலைசிதறி நூறு நூறாகப் பூமியில்விழுந்து வீரசயனங்களில் படுத்தார்கள். அந்தப்போர்க்களத்தில் போர்வீரர்கள் ஒருவரையொருவர்எதிர்த்து ஓடுகின்றவர்களும் கீழேவிழுந்தவர்களும் மறுபடியும்எழுந்தவர்களும் எழுந்துவிரைவாகஓடுகின்றவர்களும் மீண்டும்ஒருவரையொருவர் துன்பப்படுத்திப்புரளுகின்றவர்களுமாகி த்வந்த்வயுத்தஞ்செய்தார்கள். வில்லும்அம்புக்கூடுமுடையவர்களும் ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டவர்களும் பயமற்றவர்களும் கொல்லப்பட்ட துணைவீரர்களையுடையவர்களுமான வீரர்கள் நூறு நூறாக நாலு பக்கங்களிலும் துன்புறுத்தப்பட்டுக் கணைகளைத்தொடுத்துக்கொண்டு ஆங்காங்கு பகைவர்களை எதிர்த்தோடினார்கள். பாரதரே! மதங்கொண்டயானையானது, குதிரைவீரர்கள்கொல்லப்பட்ட குதிரைகளை நாற்புறத்திலும் துரத்தி அடித்தது. ரதிகர்கள் ரதிகர்களை நான்குபக்கத்திலும் அடித்தார்கள். ஒருவன் மற்றொருவனால் அம்புகளால் அடிக்கப்பட்டுத் தேரினின்றும் கீழேவிழுந்தான். கொல்லப்பட்ட ஸாரதியையுடைய உயர்ந்தஒருரதமானது கட்டைபோலக் கீழேவீழ்ந்தது. அணிவகுக்கப்பட்டசேனைகளால்நிறைந்த அந்தயுத்தகளத்தில் புழுதி மேலெழுந்திருத்தலால் யுத்தம்செய்கின்றஒருவீரனும் எதிர்யுத்தம்செய்கின்றமற்றொருவீரனும் பரஸ்பரம் விற்களினுடைய ஓசையினால் அறிந்துகொண்டார்கள் யுத்தவீரர்கள் எதிரியைச் சரீரத்தின் ஸ்பர்சத்தினால் அறிந்துகொண்டார்கள். அரசரே! யுத்தவீரர்கள்பாணங்களைப்பிரயோகித்துக்கொண்டு போர்புரியுங்கால் அவர்களாலே செய்யப்பட்டவீரவாதத்தாலும் நாண்கயிற்றின்ஒலியினாலும் சேனையினுடையஒலியினாலும் ஒருவரோடொருவர்கேட்கவில்லை. யுத்தரங்கத்தில் காதைப்பிளக்கும் தன்மையுள்ள படகவாத்தியம் ஒலிக்கும்பொழுது

யுத்தத்தில்தன்னுடைய ஆண்மையை வெளிப்படுத்திக்கொண்டு யுத்தம் செய்கின்றவீரனுடையபெயர்களையும் வம்சங்களையும் பரஸ்பரம்(செய்யப்படும்) கீர்த்தனத்தையும் நான் கேட்கவில்லை. யுத்தத்தில் பீஷ்மருடைய வில்லினின்றுவெளிப்பட்டபாணங்களாலே பீடிக்கப்பட்டவர்களும் ஒருவரோடொருவர்போர்புரிகின்றவர்களுமான இந்தவீரர்களுடையமனங்கள் அதிகநடுக்கமுற்றன. அதிபயங்கரமானதும் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணுகின்றதும் மிக்கமனக்குழப்பத்தையுண்டுபண்ணுகின்றதுமான அந்தயுத்தரங்கத்தில் தகப்பன் ஒருவனாவது தன்பிள்ளையை யுத்தத்தில் அறிந்துகொள்ளவில்லை. சக்கரம் உடைக்கப்பட்டு நுகத்தடியும்வெட்டப்பட்டு ஒருபக்கத்தையிழுக்கின்றகுதிரையும்கொல்லப்பட்டவுடனே பாணங்களாலே ஸாரதியுடன் அடிக்கப்பட்டஒருவீரன் தேரிலிருந்து கீழே தள்ளப்பட்டான். இவ்வாறு அந்தயுத்தத்தில் எல்லாவீரர்களும் ரதத்தையிழந்து அந்த அந்தவழியினாலே நான்குபக்கத்திலும்ஓடுகின்றவர்களாகக் காணப்பட்டார்கள். யானை கொல்லப்பட்டது. தலை அறுக்கப்பட்டது. மர்மஸ்தானம் பிளக்கப்பட்டது. குதிரை கொல்லப்பட்டது. பீஷ்மர்சத்ருக்களைக்கொல்லும்பொழுதுகொல்லப்படாதவன் ஒருவனுமில்லை. அந்தமகாயுத்தத்தில் ச்வேதன் கௌரவர்களுக்குக்ஷயத்தை உண்டுபண்ணினான். பரதர்களிற்சிறந்தவரே! ஸ்வேதன் ரதிகர்களில்சிறந்தராஜபுத்திரர்களை நூறுநூறாகவும் கூட்டம்கூட்டமாகவும் கொன்றான்; ரதிகர்களுடையதலைகளைப் பாணங்களால் அறுத்தான். வேந்தரே! பாரதரே! ஸ்வேதனாலே தோள்வளைகளையணிந்த கைகளும் விற்களும் ரதத்தின்ஏர்க்காலும் தேருருளைகளும் அம்பறாத்தூணிகளும் நுகத்தடிகளும் உத்தமமானகுடைகளும் கொடிகளும் குதிரைக்கூட்டங்களும் தேர்க்கூட்டங்களும் மனிதர்களுடையகூட்டங்களும் யானைகளும் நூறுநூறாக நாற்புறங்களிலும் கொல்லப்பட்டன. குருநந்தனரே! நம்மைச்சேர்ந்தவர்கள் ச்வேதனிடத்தினின்று உண்டானபயத்தினால் பயந்து சிறந்ததேர்களைவிட்டுவிட்டு ஓடினார்கள்; பிறகு ஓர் அம்புசெல்லக்கூடியதூரந்தாண்டித் தைரியத்துடன் கௌரவர்களாகியநாங்கள் பிரபுவானபீஷ்மரைக் கண்டோம். யுத்தத்தில், சந்தனுபுத்திரரானபீஷ்மரை நான்குபுறத்திலும்சுற்றிஇருந்துகொண்டுகண்டோம். மஹாயுத்தத்தில் எங்களுக்குத்தளர்ச்சியுண்டான ஸமயத்தில் புருஷசிரேஷ்டரானபீஷ்மர் ஒருவரே மகாமேருமலைபோல் அசைவற்றத் தைர்யத்துடன் நின்றார். சிசிரருதுவினுடைய முடிவில் அதிதியின்குமாரனான ஸூர்யன் கிரணங்களால் ஜலத்தை உறிஞ்சுவதுபோலக் கிரணங்கள்போன்றஅம்புகளையுடையபீஷ்மர்

பாணங்களால் பகைவர்களுடையஉயிர்களைவாங்குகின்றவராக நின்றார். மகாவில்லாளியான அந்தப்பீஷ்மர் வஜ்ரபாணியான இந்திரன் அசுரர்களைக்கொல்வதுபோல யுத்தத்தில் பகைவர்களைக் கொன்றுகொண்டு அம்புக்கூட்டங்களைப் பலபலவாகத்தொடுத்தார். பீஷ்மராலே கொல்லப்படும்அந்தவீரர்கள் மிக்கபலசாலியான அந்தஸ்வேதனை விட்டு ஓடினார்கள். பகைவர்களைத்தவிக்கச்செய்பவரே! தன்னுடையசேனைக்கூட்டத்தினின்றுவிடுபட்டதுபோல உம்முடையஸேனாஸமூகத்தினின்றும்விடுபட்டவனாக யுத்தபூமிகளில் மிக்கக்ரூரனாயிருக்கின்ற அந்தஸ்வேதனை இவ்விதமாகக்கண்டு, பீஷ்மர்ஒருவரே ஸந்தோஷமுள்ளவரும் புஷ்டியுள்ளவருமாயிருந்தார். அரசரே! துர்யோதனனுக்குப் பிரியத்தைச்செய்வதில் முயற்சியுள்ளவரும் பாண்டவர்கள் வருத்தமடையும்படி செய்கின்றவருமான பீஷ்மர் நல்லமஹாயுத்தத்தில் எவ்விதத்தாலும்விடமுடியாததான [1] உயிரையும்பயத்தையும்விட்டுப் பாண்டவர்களுடையசேனைகளைக் கீழேதள்ளினார். கௌரவஸைநியங்களை அழிக்கும்ஸேனாதிபதியான ஸ்வேதனைக்கண்டு தேவவிரதரென்றுபிரஸித்திபெற்ற உம்முடையபிதாவானபீஷ்மர் அவனை விரைந்துஎதிர்த்தார். அந்தஸ்வேதன் பீஷ்மர்மீது அளவற்றஅம்புக்கூட்டத்தை நன்கு இறைத்தான். அவ்வாறே பீஷ்மரும் ஸ்வேதன்மீது அம்புக்கூட்டங்களை நன்குஇறைத்தார். அவ்விருவரும் இரண்டுகாளைகள்போலும், மதங்கொண்ட இரண்டுபெரியயானைகள்போலும் கர்ஜித்துக்கொண்டு புலிகளைப்போல மிகுந்தபரபரப்புடன் ஒருவரோடொருவர் அடித்துக்கொண்டார்கள். பிறகு, புருஷசிரேஷ்டர்களான அந்தப்பீஷ்மர் ஸ்வேதன்இருவரும் ஒருவரைஒருவர்கொல்லவிரும்பி அஸ்திரங்களாலே அஸ்திரங்களைத்தடுத்துக்கொண்டு போர்புரிந்தார்கள். மிகுந்தகோபங்கொண்டஸ்வேதன் அம்புகளால் பாதுகாத்திரானாயின் பாண்டவர்களுடையஸேனையைப் பீஷ்மர் ஒருபகலிலேயே எரித்துவிடுவார். பிறகு ஸ்வேதனால் பீஷ்மர் தோல்வியுற்றதைக்கண்டு பாண்டவர்கள் அதிகஸந்தோஷமடைந்தார்கள். உம்முடையபுத்திரன் மனவருத்தமடைந்தான். பிறகு துரியோதனன் கோபமுற்று அரசர்களால் சூழப்பட்டுச் சைனியங்களுடன்சேர்ந்து யுத்தத்தில் பாண்டவசேனையைஎதிர்த்து விரைந்துசென்றான். உம்முடையபுத்திரனாலே ஏவப்பட்டவர்களான துர்முகன், கிருதவர்மா, கிருபர், சல்யன் இந்நால்வரும் பீஷ்மரைநாடி அவரைப் பாதுகாத்தார்கள். துரியோதனனைமுதன்மையாகக்கொண்ட எல்லாஅரசர்களாலும் யுத்தத்தில்கொல்லப்படும்பாண்டவர்களுடைய

[1] உயிரில் அபிமானத்தையும் என்பது.

ஸேனைகளைக்கண்டு ஸ்வேதன் பீஷ்மரைவிட்டுவிட்டுக் காற்றானது பலத்
தாலே மரங்களைமுறிப்பதுபோல உமதுபுத்திரனுடையசேனையை
வேகத்தால் நாசஞ்செய்தான். அரசரே! விராடபுத்திரன் கோபமுண்டு
உமதுசேனையைத்துரத்தியடித்துவிட்டு, பீஷ்மர் முயற்சியுள்ளவராக
இருந்த இடத்திற்கு மறுபடியும் விரைவாகவந்தான். மஹாராஜரே!
அந்தயுத்தகளத்தில் கிட்டநெருங்கியவர்களும் அம்புகளால்ஜ்வலிக்கின்
றவர்களும் மகாபலசாலிகளும் மகாத்மாக்களுமான அவ்விருவரும்
ஒருவரையொருவர்கொல்லவிரும்பி விருத்திரனும்இந்திரனும்போல
ஒருவரோடொருவர் போர்புரிந்தார்கள். ஸ்வேதன் விற்பிடித்து ஏழுபா
ணங்களால் பீஷ்மரை அடித்தான். பிறகு பராக்கிரமசாலியான பீஷ்மர்
பராக்கிரமத்தைவெளியிட்டு மதயானையை மதயானைதடுப்பதுபோலப்
பலத்தினால் அந்தஸ்வேதனுடையபராக்கிரமத்தைத் தடுத்தார். ஸ்வே
தன் சந்தனுகுமாரரானபீஷ்மரை அமிழ்ந்தகணுக்களுள்ளஇருபத்தை
ந்து அம்புகளால் மறுபடியும் அடித்தான். அது ஆச்சரியமாயிருந்தது.
சந்தனுபுத்திரரானபீஷ்மர் அப்பொழுது அவனைப் பத்துக்கணைகளால்
திருப்பியடித்தார். அந்தப்பீஷ்மரால் அடிக்கப்பட்ட பலவானான அந்த
ஸ்வேதன் மலைபோல அசைவற்றுநின்றான். பிறகு க்ஷத்திரியர்களை
மகிழ்விக்கும் விராடபுத்திரனான ஸ்வேதன் யுத்தத்தில் மிகுந்தகோபங்
கொண்டு வில்லைவளைத்துப் பீஷ்மரை அடித்தான். பிறகு ஸ்வேதன்
மிகஅட்டஹாஸஞ்செய்து இரண்டுகடைவாய்களையும்நக்கிக்கொண்டு
ஒன்பதுபாணங்களால் பீஷ்மருடையவில்லைப் பத்தாகத் துண்டாக்கி
னான். சிறகுகளுள்ள கூர்மையானஓரம்பை (வில்லில்) பூட்டி மகாத்மா
வானபீஷ்மருடைய கொடிநுனியிலுள்ள பனைமரத்தையும் அறுத்துத்
தள்ளினான். பீஷ்மரதுகொடிகீழேவிழுந்ததைப்பார்த்து உமதுபுத்தி
ரர்கள் பீஷ்மரைக் கொல்லப்பட்டாரென்றும் ஸ்வேதனுக்குவசப்பட்
டாரென்றும் எண்ணினார்கள். பாண்டவர்களும் ஸந்தோஷத்தை
யடைந்து மிகுந்த உத்ஸாஹத்துடன் சங்கங்களை ஊதினார்கள். பிறகு
மகாத்மாவானபீஷ்மருடைய பனைக்கொடிகீழேவிழுந்ததைக்கண்டு
துரியோதனன் கோபத்தினால் தன்சேனையைநோக்கி, 'நீங்கள் முயற்சி
யுடன் பீஷ்மரை நாற்புறமும் சூழ்ந்துகொண்டு காப்பாற்றுங்கள். நாம்
பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீஷ்மர்ஸ்வேதனிடத்தினின்றும்
மரணமடையவேண்டாம். சந்தனுகுமாரரானபீஷ்மர் சௌர்யமுடைய
வர். உங்களுக்கு நான் உண்மையாகச்சொல்லுகிறேன்' என்றுசொல்லி
யனுப்பினான். துரியோதனராஜனுடைய வார்த்தையைக்கேட்டு மகாரதர்
கள் விரைவாகச் சதுரங்கசேனையுடன் கங்காபுத்திரரான பீஷ்மரை

ரக்ஷித்தார்கள். பாரதரே! பாஹ்லீகன், கிருதவர்மா, சலன், சல்யன்,
ஜலஸந்தன், விகர்ணன், சித்திரஸேனன், விவிம்சதி இவர்கள் விரைய
வேண்டியகாலத்தில் அதிகவிரைவுடன் நான்கு பக்கங்களிலும் சூழ்ந்து
கொண்டு ஸ்வேதன்மீது மிகவும் நெருக்கமானசரமாரியைப் பொழிந்தார்
கள். அளவிடமுடியாத பலத்தையுடையவனும் மகாரதனுமான ஸ்வே
தன் மிக்கபரபரப்புடனும் கோபத்துடனும் கைத்தேர்ச்சியைவெளி
யிட்டுக்கொண்டு அவர்களைக் கூர்மையுள்ளபாணங்களால் தடுத்தான்.
அந்த ஸ்வேதன், ஸிம்மம் யானைகளைத்தடுப்பதுபோலப் பெரியசரமாரி
யினாலே அவர்கள் அனைவரையும் தடுத்துப் பீஷ்மருடையவில்லைத்
துணித்தான். ராஜேந்திரரே! பிறகு சந்தனுகுமாரரானபீஷ்மர் யுத்தத்
தில் வேறுவில்லையெடுத்துக் கழுகிறகுகளுடன்கூடியவைகளும் கூர்மை
யுள்ளவைகளுமான அம்புகளாலே ஸ்வேதனை அடித்தார். அரசரே!
பிறகு ஸேனாபதியான ஸ்வேதன் கோபமுற்று யுத்தத்தில் எல்லாஜனங்
களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே இரும்புமயமான அநேக
பாணங்களால் பீஷ்மரை அடித்தான். பிறகு, எல்லாஉலகங்களுள்ளும்
சிறந்தவீரரான பீஷ்மர் அப்பொழுது யுத்தத்தில் ஸ்வேதனாலேதடுக்
கப்பட்டாரென்பதைக் கண்டு துரியோதனராஜன் மிக்கவருத்தமடைந்
தான். உம்முடையஸைனிகர்களுடைய பெரிய ஒலியானது மிகப்
பெரிதாகத் தோன்றியது. ஸ்வேதனால் தடுக்கப்பட்டவரும் அம்பு
களால்மிகவும்காயப்படுத்தப்பட்டவரும் அவனுக்கு வசப்பட்டவரும்
வீரருமான அந்தப்பீஷ்மரைப்பார்த்து எல்லோரும் ஸ்வேதனால்சொல்
லப்பட்டவரென்றே எண்ணினார்கள். பிறகு உம்முடையபிதாவான
தேவவிரதர் தமது கொடி அறுக்கப்பட்டதையும் அப்படிப்பட்டசேனை
தடுக்கப்பட்டதையுங்கண்டு குரோதத்தை அடைந்தார். மகாராஜரே!
உடனே பீஷ்மர் ஸ்வேதனைலக்ஷ்யம்வைத்துப் பலகணைகளைஎய்தார்.
தேராளிகளிற்சிறந்தவனான ஸ்வேதனும் யுத்தத்தில் பீஷ்மருடைய
அந்தக்கணைகளையும் தடுத்து மறுபடியும் பல்லமென்கிறபாணத்தினால்
உம்முடையபிதாவின் வில்லைத் துண்டித்தான். அரசரே! கங்காபுத்தி
ரானபீஷ்மர் கோபமுண்டு வில்லையெறிந்துவிட்டுப் பெரிதும் மிக்கபல
முள்ளதுமான வேறுவில்லைக் கையிலெடுத்து அதில் சாணைபிடிக்கப்
பட்ட ஏழு பெரியபாணங்களைத் தொடுத்து நான்குபாணங்களாலே
படைத்தலைவனான ஸ்வேதனுடைய குதிரைகளையும் இரண்டுபாணங்க
ளால் அவன்கொடியையும் ஏழாவதுபாணத்தினால் அவன் ஸாரதியி
னுடையதலையையும் அறுத்தார். அதிககோபங்கொண்டவனும் மிகு
ந்தவிக்ரமமுடையவனும் மகாபலசாலியுமானஸ்வேதன் குதிரைகளும்

ஸாரதியுங்கொல்லப்பட்டதேரினின்று கீழேகுதித்துக் கோபத்திற்கு டன்பட்டவனும் மனக்கலக்கமுற்றவனுமானுன். ரதிகர்களுள்சிறந் தவனான்ஸ்வேதன்தேரிழந்ததைக்கண்டு பீஷ்மர் கூர்மையுள்ளபாண ஸமூகங்களால் நான்குபுறங்களிலும் அடித்தார். பீஷ்மருடையவில்லி னின் றுவிடுபட்ட அம்புகளாலே யுத்தத்தில் அடிக்கப்படுகிற அந்தஸ்வே தன் வில்லைத் தன்தேரில் வைத்துவிட்டு ஸ்வர்ணமயமானசக்தியைக் கையிலெடுத்தான். பிறகு அவன் பெருமூச்சுவிட்டுக்கொண்டு உக்கிர மானதும் மகாபயங்கரமானதும் காலதண்டம்போன்றதும் கோரமா யுள்ளதும் மிருத்யுவினுடையநாவைப்போன்றதுமானசக்தியைக் கை யிலெடுத்து அப்பொழுது சந்தனுகுமாரரானபீஷ்மரைப்பார்த்து, 'அதிககோபங்கொண்டவரானநீர் இப்பொழுதுநில்லும்; என்னைப் பாரும்; ஆண்பிள்ளையாயிரும்' என்றுசொன்னான். பெரியவில்லா ளியும் பராக்ரமசாலியும் அளவிடமுடியாதபலமுடையவனும் பாண் டவர்களுக்காகப் பகைவர்களின்மீது பராக்கிரமத்தைவெளியிடுகின்ற வனும் உமக்கு அனர்த்தத்தைவிளைவிக்கஎண்ணங்கொண்டவனுமான ஸ்வேதன் போர்க்களத்தில் பீஷ்மரைநோக்கி இவ்வாறுசொல்லிவிட்டுப் பிறகு ஸர்ப்பத்திற்குஒப்பானசக்தியை அவர்மீது விடுத்தான். அரச ரே! மிகக்கொடியதும் யமதண்டம்போன்றதும் ஒளிபொருந்தியதும் சட்டையுரித்தபாம்புக்குஒப்பானதுமான சக்தியானது, ஸ்வேதனு டையகையினின் றுவிடுபட்டதைக்கண்டு உமதுபுத்திரர்கள் பெரிய ஆ! ஆ! ஆ! என்றசத்தத்தைச் செய்தார்கள். அந்தச்சக்தியானது ஆகா யத்தினின்று எரிநக்ஷத்திரம் விழுவதுபோல விரைவாக விழஆரம் பித்தது. வேந்தரே! உமதுபிதாவானதேவவ்ரதர் அப்பொழுது பர பரப்பற்றவராகி ஆகாயத்தில்ஜ்வலிக்கின்றதும் ஜ்வாலைகளால்நன்கு சூழப்பட்டதுபோலிருக்கின்றதுமான அந்தச்சக்தியைப் பதினேழு பாணங்களால் அறுத்தார். சிறந்தபொன்னால் அலங்கரிக்கப்பட்ட அந் தச்சக்தி, கூர்மையுள்ள அம்புகளால்அறுக்கப்பட்டதைக்கண்டு உம் மைச்சேர்ந்தவர்கள் எல்லோரும் பிறகு உரக்க ஆரவாரம்செய்தார் கள். விராடபுத்திரனானஸ்வேதனே சக்திநாசமபண்ணப்பட்டதைக் கண்டு மிகுந்தகோபங்கொண்டு காலத்தினால்மதிகெட்டுச் செய்யத்தக் கது இன்னதென்பதை அறியவில்லை. அரசரே! கோபமுண்டவனான விராடபுத்திரன் அட்டஹாஸம்செய்துகொண்டு பீஷ்மருடையவதத் தைக்கருதி மிக்கஸந்தோஷத்துடன் கதாயுதத்தையெடுத்துக்கொண்டு கோபத் தால்கண்கள்சிவந்து காலதண்டத்தைக்கையில்கொண்டயமன்போன்ற வனாகி ஜலப்ரவாகமானது மலையைத்தாக்குவதுபோலப் பீஷ்மரை

எதிர்த்துத்தாக்கினான். பிரதாபசாலியானபீஷ்மர் அந்தஸ்வேதனு டையவேகம் தடுக்கத்தகாதது என்றெண்ணி அந்த அடியினின்றும் தாம்தப்புவதற்காக உடனே பூமியில் குதித்துவிட்டார். கோபமீறின ஸ்வேதன் தேவனான தனேஸ்வரன்போல் அந்தக்கதாயுதத்தைச்சுழற் றிப் பீஷ்மருடையதேரின்மீது எறிந்தான். பீஷ்மரைநாசம்செய்வதில் நோக்கமுள்ள அந்தக்கதாயுதத்தினாலே அந்தப்பீஷ்மருடையரதமானது கொடிமரத்தோடும் ஸாரதியோடும் குதிரைகளோடும் ஏர்க்காலோடும் தேர்ச்சட்டங்களோடும் சாம்பலாக்கப்பட்டது. ரதிகர்களுள்சிறந்தவ ரானபீஷ்மர் ரதத்தையிழந்ததுகண்டு சல்யன்முதலானமஹாரதர்கள் ஒருங்குசேர்ந்து எதிர்த்துஓடிவந்தார்கள். பிறகு பீஷ்மர் அட்டஹாஸம் செய்துகொண்டு வேறுதேரின்மீதேறி வில்லை நாணொலியிடும்படிசெய்து கலங்கினமனத்துடன் ஸ்வேதனைநோக்கி மெதுவாக எதிர்த்துவந்தார். இதனிடையில், 'பீஷ்மரே! பீஷ்மரே! மிக்கபுஜபலமுள்ளவரே! விரை வாக (இவனைக்கொல்வதில்) முயற்சிசெய்யும். எல்லாஉலகத்துக்கும் காரணபூதரானபரமாத்மாவினாலேஇவனைவெல்லஇதுதான்காலமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது' என்று ஆகாயத்தினின்றுஉச்சரிக்கப்பட் டதும்தேவஸம்பந்தம்பெற்றதும் தமக்குஹிதத்தைச்செய்வதும் அர்த்த கௌரவம்பொருந்தியதுமான வார்த்தையைப் பீஷ்மர் கேட்டனர். பீஷ் மர் தேவதூதன்சொல்லிய இந்தவார்த்தையைக்கேட்டு மனமகிழ்ந்து அவனைக்கொல்வதில் மனத்தைச் செலுத்தினார். ரதிகர்களுள்சிறந்தவ னும் ரதத்தையிழந்துகாலாளாயிருக்கின்றவனுமான ஸ்வேதனைப்பார் த்து மஹாரதர்களானஸாத்யகி, பீமஸேனன், துருபதகுமாரனான திரு ஷ்டத்யும்னன், கேகயதேசத்தரசனான திருஷ்டகேது, வீர்யமுடை யவனானஅபிமன்யுஇவர்கள் ஒருங்குசேர்ந்து அவனைக்காக்க எண் ணங்கொண்டு அந்தப்பீஷ்மருக்கெதிரில் வந்தார்கள். இவ்வாறுவரு கின்றஅந்தஎல்லாவீரர்களையும், அளவற்றபலமுள்ளபீஷ்மர் துரோண ரோடும், சல்யனோடும், கிருபரோடும்சேர்ந்து ஜலத்தினுடையவேகத் தை மலைதடுப்பதுபோலத் தடுத்தார். மிக்கபலசாலிகளான பாண்டவ வீரர்களெல்லாம்தடுக்கப்படவே ஸ்வேதன் கத்தியைஉருவிக்கொண்டு பீஷ்மருடையவில்லை வெட்டினான். அவர் வெட்டப்பட்டஅந்தவில்லை யெறிந்துவிட்டுத் தேவதூதனுடையவார்த்தையைக்கேட்டு ஸ்வேதனை விரைவாகக்கொல்வதில் மனத்தைச்செலுத்தினார். பிறகு விரைவாக ஸஞ்சரிக்கின்ற உம்முடையபிதாவும், மகாரதருமானதேவவ்ரதர் வான விற்போன்றஒளியுள்ளவேறுவில்லை விரைவிலெடுத்து க்ஷணத்திற் குள் நாணேற்றினார். பரதசிரேஷ்டரே! உம்முடையபிதாவானகாங்கே

யர் பீமஸேனனை முதன்மையாகக்கொண்டவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான மகாரதர்களால்சூழப்பட்ட ஸேனாபதியான அந்தஸ்வேதனைக்கண்டு விரைவாக எதிர்த்துவந்தார். பிறகு பிரதாபசாலியும் மகாரதருமானபீஷ்மர் தம்மைஎதிர்த்துவருகின்ற சேனைத்தலைவனான பீமஸேனனை அறுபதுகணைகளால் அடித்தார். பரதர்களில்சிறந்தவரும் உம்முடையபிதாவுமானதேவவ்ரதர் போரில் அபிமன்யுவை அமிழ்ந்த கணுக்களுள்ளமூன்றுபாணங்களால் அடித்தார். பரதவம்சத்தில் தோன்றிய அரசர்களுக்கெல்லாம்பிதாமஹரான அவர் யுத்தத்தில் ஸாத்யகியை நூறுபாணங்களாலும் திருஷ்டத்யும்னனை இருபதுபாணங்களாலும் கேகயராஜகுமாரனை ஐந்துபாணங்களாலும் அடித்தார். உம்முடையபிதாவானதேவவிரதர் அந்தப்பெரியவில்லாளிகளனைவரையும் கோரமானபாணங்களால்தடுத்து ஸ்வேதனைநோக்கி எதிர்த்துஓடினார். பிறகு பலவானான அவர் மிருத்யுவுக்குஒப்பானதும் பெருங்காரியங்களைச்செய்தற்குச்சாதனமாயிருப்பதும் உத்தமமானதும் (பகைவர்களால்) நெருங்கமுடியாததுமானஓரம்பை வில்லில்பூட்டி நன்றாக இழுத்து ஸ்வேதன்மீது விடுத்தார். பிரம்மாஸ்திரத்தோடு நன்குசேர்க்கப்பட்டதும் சிறகுகளுள்ளதுமான அந்தப்பாணத்தைத் தேவர்களும் கந்தர்வர்களும் பிசாசங்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும்கண்டார்கள். அந்தப்பாணமானது அளவற்றவன்மையுள்ள அந்த ஸ்வேதனுடையகவசத்தையுடைத்து மார்பைப்பிளந்துகொண்டும் பெரிய இடிபோலஜ்வலித்துக்கொண்டும் பூமியில் பிரவேசித்தது. அஸ்தமயத்தைஅடைகின்றசூரியன் தன்னொளியை எடுத்துக்கொண்டேசெல்வதுபோல அந்தஅம்பானது அதிவேகத்துடன் ஸ்வேதனுடையதேகத்தினின்று உயிரைக்கவர்ந்துகொண்டே சென்றது. அவ்வாறு யுத்தகளத்தில் பீஷ்மரால்கொல்லப்பட்டு வீழ்ந்திருக்கின்ற புருஷசிரேஷ்டனான அந்தஸ்வேதனைப் பூமியில்நழுவிவிழுந்த ஒருமலையினுடையகொடுமுடியைப்போலக் கண்டோம். அந்தயுத்தகளத்தில் அங்கிருந்தபாண்டவவீரர்களும் மகாரதர்களான க்ஷத்திரியர்களும் மனவருத்தமுற்றனர். உமதுபுத்திரர்களும் கௌரவர்களும் எல்லாவிடத்திலும் ஸந்தோஷமடைந்தார்கள். அரசரே! பிறகு துச்சாஸனன், ஸ்வேதன்கொல்லப்பட்டதைக்கண்டு நாற்புறங்களிலும் கோரமான நான்குவிதவாத்யகோஷங்களோடும் கூத்தாடினான். பெரியவில்லாளியான அந்தஸ்வேதன் போரில் அதிகமாகப்பிரகாசிக்கின்ற பீஷ்மராலே கொல்லப்பட்டவுடனே சிகண்டிமுதலான பெரியவில்லாளிகளான ரதிகர்கள் மிகநடுங்கினர். அரசரே! பிறகு தனஞ்சயனும்

விருஷ்ணிகுலத்தில்தோன்றிய ஸ்ரீக்ருஷ்ணனும் ஸேனாபதிகொல்லப் படவே, எல்லாப்பக்கத்திலும் மெள்ள யுத்தத்தை நிறுத்தினார்கள். பாரதரே! பிறகு உம்முடையபடைகளுக்கும் பகைவர்களுடைய படைகளுக்கும் நேர்ந்திருந்தயுத்தம் நிறுத்தப்பட்டது. அடிக்கடி உம்முடையசேனையிலுள்ளவர்களும் சத்துருசேனையிலுள்ளவர்களும் கர்ஜிக்கும்பொழுது மஹாரதிகர்களும் பகைவர்களைத்தபிக்கச்செய்யுந் திறமையுடையவர்களுமான பார்த்தர்கள் (இரண்டு ரதிகர்களுக்கும்) நடந்த த்வந்த்வயுத்தத்தினால் நேர்ந்த கோரமான (ஶ்வேதனுடைய) வதத்தைநினைந்து மிகுந்தமனவருத்தமுற்றுத்திரும்பினார்கள்" என்று கூறினான்.

---

## நாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(சங்கனுடைய யுத்தவர்ணனம்.)

திருதராஷ்டிரன், "ஐயனே! ஸேனாபதியான ஶ்வேதன் யுத்தத்தில் பகைவர்களால் கொல்லப்பட்டவுடன் சிறந்தவில்லாளிகளான பாஞ்சாலர்கள் பாண்டவர்களுடன்சேர்ந்து யாதுசெய்தனர்? ஸஞ்சய! யுத்தத்தில் ஸேனாபதியானஶ்வேதன்கொல்லப்பட்டதையும் பகைவர்கள் அவனிமித்தம்முயற்சித்தும் பயந்தோடினதையும் கேட்கின்ற என்னுடையமனத்தை ஐயமானஉன்னுடையவாக்யமானது ப்ரீதியை அடையும்படிசெய்கிறது. என்னுடைய கபடோபாயத்தைநினைத்து ஸாதுஜனங்கள் (என்னிடத்தினின்று) அதிகமாக விலகுகிறார்கள். வீரரும் பிராயமுதிர்ந்தவருமான அந்தப்பீஷ்மர் அக்காலத்தில் அன்புள்ளவராகவிருந்தாரன்றோ? புத்திசாலியான அவன் (என்) பிதாவினிடத்தில் எப்பொழுதும் விரோதம்பாராட்டிவந்தான். அவருடைய விரோதத்தினாலுண்டானபயத்தினாலேயே அவன் முற்காலத்தில் பாண்டவர்களை அடுத்து எல்லாப்பயத்தையும்விட்டுத் துர்க்கத்தை அடைந்து வஸித்தான். பாண்டவர்களுடையபிரதாபத்தினால் (பிறர்களால்) எவ்விதத்தாலும்பிரவேசிக்கமுடியாத வாஸஸ்தலத்தை ஏற்படுத்திக்கொண்டும் பகைவர்களைஎப்பொழுதும்பீடித்துக்கொண்டும் சிறந்தவிருத்தியை அனுஷ்டித்துவந்தான். ஸஞ்சய! முற்காலத்தில் அந்தஅரசர்களிடத்தில் எப்பொழுதுமேஅதிகக்கெட்டஎண்ணமுள்ளவனும் அதனால் யுதிஷ்டிரனிடத்தில் பக்தியுள்ளவனுமாயிருந்த

அந்தஸ்வேதன் எவ்வாறுகொல்லப்பட்டான்? ஆச்சரியம். ஸஞ்சய! என்புத்திரன் (ஸாறர்களால்) மிகவும்விலக்கப்பட்டவனென்றே நான் நினைக்கிறேன். மேலும் அவன் அற்பன்; மனிதருள் மிகஇழிவானவன். பீஷ்மராவது ஆசாரியரான துரோணராவது கிருபராவது போர் செய்வதற்கு எவ்விதத்தாலும் பிரியப்படவேயில்லை; காந்தாரிக்கும் பிரியமில்லை; நானும் பிரியப்படவில்லை; அவ்வாறே விருஷ்ணிகுலத்திற்பிறந்த ஸ்ரீவாஸுதேவரும் பாண்டுகுமாரனான தர்மராஜனும் பீமனும் அர்ஜுனனும் புருஷசிரேஷ்டர்களானநகுலஸஹதேவர்களும் பிரியப்படவேயில்லை. ஸஞ்சய! எப்பொழுதுமேயுத்தம்செய்வதில்நோக்கங் கொண்டவனும் பாபியுமானதுரியோதனன் எப்பொழுதும் என்னாலும் காந்தாரியினாலும் விதுரனாலும் ஜமதக்னியினுடையகுமாரரானபரசுராமராலும் மகாத்மாவானவ்யாஸராலும் தடுக்கப்பட்டும் கர்ணன், ஸௌபலனான சகுனி, துச்சாஸனன் இவர்களுடைய கருத்துக்கிணங்கிப் பாண்டவர்களை மதிக்கவில்லை. ஸஞ்சய! அந்தஸ்வேதனுடையநாசத்தினாலும் பீஷ்மருடைய விஜயத்தினாலும் அந்த அர்ஜுனனுக்குக் கொடுந்துயர் வந்துவிட்டதென்றே எண்ணுகிறேன். கிருஷ்ணனோடுகூடின பார்த்தன் மிகுந்தகோபங்கொண்டு யுத்தத்தில் யாது செய்தான்? அப்பா! அர்ஜுனனிடத்தினின்று எனக்கு உண்டான அதிகபயம் தணியவில்லை. அந்தக்குந்திபுத்ரனான தனஞ்சயனே மிகுந்த சூரன்; மிக்கசுறுசுறுப்புள்ளவன். அம்புகளால் பகைவர்களின்சரீரங்களை அழிப்பானென்று நான் எண்ணுகிறேன். உபேந்திரனுக்கு ஒப்பானவனும் பலத்தில் மகேந்திரனுக்கு ஒப்பானவனும் கோபமும் விருப்பமும்வீணாகாதவனுமான இந்திரகுமாரனைப்பார்த்து உங்கள் மனம் எவ்வாறிருந்தது? ஸஞ்சய! அவ்வாறே வேதத்தை அறிந்தவனும் சூரனும் அக்னிக்கும்ஸூர்யனுக்கும் ஸமமான காந்தியுடையவனும் ஐந்திராஸ்திரத்தையறிந்தவனும் அளவிடமுடியாதபலமுள்ளவனும் பகைவர்கள்மீது எதிர்த்துச்செல்லுகிறவனும் யுத்தத்தில்ஜயம்பெறுபவனும் வஜ்ராயுதம்போன்ற மிகக்கொடிய அஸ்திரங்களைத்தொடுப்பவனும் மகாரதனும் கத்தியைக்கையால்சுழற்றிக்கொண்டிருப்பவனும் அட்டஹாஸஞ்செய்பவனும் சிறந்தஅறிவுள்ளவனும் துருபதனுடைய புத்திரனும் பலசாலியுமான த்ருஷ்டத்யும்னன், யுத்தத்தில் ஸ்வேதன் கொல்லப்பட்டவுடனே என்னசெய்தான்? முன்புசெய்யப்பட்ட குற்றத்தினாலும் ஸேனாபதியினுடையவதத்தினாலும், மிக்கபலசாலிகளான பாண்டவர்களுடையமனமானது (கோபத்தால்) மிகப்பொங்கியிருக்குமென்றே நான் எண்ணுகிறேன். துரியோதனனுடைய செய்

கையினல் உண்டுபண்ணப்பட்ட அப்பாண்டவர்களுடையகோபத்தைப் பகற்காலங்களிலும் இராக்காலங்களிலும் நான் நினைத்துக் கொண்டு மனம்ஆறுதலை அடையவில்லை. ஸஞ்சய! அந்தமகாயுத்தம் எவ்வாறுநடந்தது? அதைஎல்லாம் எனக்குச்சொல்'' என்றுவினவ, ஸஞ்சயன், "அரசரே! ஸ்திரமாயிருந்து கேளும்; உம்முடைய அநீதியானது பெரிது. நீர் துர்யோதனன்மீதுகுற்றஞ்சுமத்துவது தகாது. உமதுபுத்தியானது வெள்ளம்போனபிறகு அணைபோடுவதுபோலிருக்கிறது. வீடுபற்றியெரியும்போது கிணறுவெட்டுவது எப்படியோ அப்படியே உம்முடையபுத்தி இருக்கிறது. பெரும்பான்மையாகச் சென்றுபோன முற்பகலோடுகூடின அதிகபயங்கரமான அந்தப்பகலில் உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் சத்துருக்களுக்கும் மறுபடியும் போர்நடந்தது. விராடனுடைய சேனாதிபதியாயிருந்த ஶ்வேதன் கொல்லப்பட்டதையும் சல்யன் கிருதவர்மாவுடன்கூடி (போருக்கு) வந்துநிற்பதையும்கண்டு சங்கன், ஹவிஸினல் அக்னிஜ்வலிப்பதுபோலக் கோபத்தினல் மிகஜ்வலித்தான். பலசாலியான அந்தச்சங்கன் போர்க்களத்தில் இந்திரனுடையவில்லைஒத்த தன்னுடையபெரியவில்லை நாணெலியிடும்படிசெய்துகொண்டு மத்ரதேசாதிபதியானசல்யனைக் கொல்லநினைத்து அவனை எதிர்த்தான். சங்கன் பெரியரதக்கூட்டத்தால் நாற்புறமும்காக்கப்பட்டுச் சரமாரியைப்பொழிந்துகொண்டு சல்யனுடையரதத்தைக்குறித்துச் சென்றான். வேந்தரே! எதிர்த்துவருகின்றவனும் மதயானையின்விக்ரமம்போன்ற விக்ரமமுடையவனுமான அந்தச்சங்கனைக்கண்டு மிருத்யுவினுடையகோரப்பல்லின்நடுவையடைந்தவன்போன்ற மத்ரராஜனைக்காப்பாற்றுவதற்கு மிகுந்த ஆவல்கொண்டு உம்மைச்சேர்ந்தவர்களான கோஸலதேசாதிபதியான பிருகத்பலன், மகததேசாதிபதியானஜயத்ஸேனன், கௌரவந்தங்கியவனும் சல்யபுத்திரனுமானருக்மரதன், அவந்திதேசாதிபதிகளான விந்தானுவிந்தர்கள், காம்போஜதேசாதிபதியானஸுதக்ஷிணன், பிருகத்க்ஷத்திரனுடையகுமாரனும் ஸிந்துதேசாதிபதியுமான ஜயத்ரதன் இந்தஏழுரதிகர்களும் அவனை நாற்புறத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். நானாவிததாதுக்களால் விசித்திரமானவைகளும் நாணெலியுடன்கூடியவைகளுமான அந்தமகாத்மாக்களுடையவிற்கள் மேகங்களில் மின்னல்கள்போலக் காணப்பட்டன. அவர்கள் வர்ஷாகாலத்தில் காற்றினல்அலைக்கப்பட்டமேகங்கள் மலையின்மீது ஜலத்தைப் பொழிவதுபோலச் சங்கனுடையதலையில் அம்புமழையைப்பொழிந்தார்கள். பிறகு பெரியவில்லாளியும் ஸேனாபதியுமானசங்கன்

கோபமுண்டு நன்குதீட்டப்பட்டஏழுபல்லங்களாலே அவர்களுடைய விற்களைவெட்டிக் கர்ஜித்தான். பிறகு மிக்கபுஜபலமுள்ளவரான பீஷ்மர் மேகம்போல்ஸிம்மநாதம்செய்து ஒருபனைமரத்தினளவுள்ளவில்லை எடுத்து யுத்தகளத்தில் சங்கனை விரைவாக எதிர்த்தார். பிறகு முயற்சியுள்ளவரும் மஹாவில்லாளியும் மஹாபலசாலியுமான அந்தப்பீஷ்மரைப்பார்த்துப் பாண்டவசேனையானது, காற்றின்வேகத்தால்அடிக்கப்பட்டஓடம்போல மிகநடுக்கமுற்றது. பிறகு அர்ஜுனன், 'இந்தச்சங்கனைப் பீஷ்மரிடத்தினின்று இப்பொழுது காப்பாற்றவேண்டும்' என்றுஎண்ணி மிகவிரைந்து சங்கனுக்குமுன்னின்றான். பிறகு யுத்தம் நடந்தது. போர்க்களத்தில் போர்செய்கிறவீரர்களுடைய மிக்க பேரொலி உண்டாயிற்று. (அங்குள்ளவீரர்கள்) 'தேஜஸ் தேஜஸோடு இவ்வாறு நன்றாகச்சேர்க்கைபெற்றது' என்று ஆச்சரியத்தைஅடைந்தார்கள். பரதர்களிற்சிறந்தவரே! பிறகு சல்யன் கதாயுதத்தைக்கையிற்கொண்டு பெரியரதத்தினின்றுகீழேஇறங்கிச் சங்கனுடையநான்கு குதிரைகளையும் கொன்றான். அந்தச்சங்கன் குதிரைகள்கொல்லப்பட்டரதத்தினின்று கீழேகுதித்து விரைவாகக் கத்தியையெடுத்துக்கொண்டு ஓடி அர்ஜுனனுடையரதத்தையடைந்து மறுபடியும் மனத்தேறுதலை அடைந்தான். பிறகுபீஷ்மருடையரதத்தினின்று பாணங்கள் அதிவேகமாக வெளிப்பட்டன; அவ்வம்புகளாலே ஆகாயமும் பூமியும் எல்லாப்பக்கங்களிலும் வியாபிக்கப்பட்டன. பகைவர்களை அடிக்கும் திறமையுடையவீரர்களுள்சிறந்தபீஷ்மர், பாஞ்சாலர்களையும் மாத்ஸ்யர்களையும் கேகயர்களையும் பிரபத்திரகர்களையும் பாணங்களால்அடித்துத் தள்ளினர். அரசரே! பீஷ்மர் யுத்தத்தில பாண்டுபுத்திரனைஸவ்யஸாசியைவிட்டுவிட்டுப் பாஞ்சாலதேசத்தரசனும் சேனையினால்சூழப்பட்டவனும் பிரியமானஸம்பந்தியுமான துருபதராஜன்மீது அனேகஅம்புகளையிறைத்துக்கொண்டு அவனை எதிர்த்தார். பீஷ்மருடையஅம்புகளாலேஎரிக்கப்பட்ட அந்த(துருபதனுடைய)ஸேனைகள் சிசிரருதுவின் முடிவில் காட்டுத்தீயினால்மிகவும்எரிக்கப்பட்டகாடுகள்போலக் காணப்பட்டன. பீஷ்மர் போர்க்களத்தில் புகையில்லாதநெருப்புப்போல் நின்றார். பாண்டவவீரர்கள்,உச்சிப்போதில் தேஜஸினால்தபிக்கச்செய்கின்ற ஸூர்யனைப் பார்க்கமுடியாததுபோலப் பீஷ்மரைப் பார்க்கச் சக்தியுள்ளவர்களாகவில்லை. குளிரினால்பிடிக்கப்பட்டபசுக்கள்போல அந்தப்பாண்டவவீரர்கள் பயத்தால்பீடிக்கப்பட்டு நான்குபக்கங்களிலும் பார்த்தார்கள்; ரக்ஷகனை அடையவில்லை. அந்தயுதிஷ்டிரருடையசேனையானது ஸிம்மத்தினால்பிளக்கப்பட்ட இடையனுடையவெள்ளைப்

பசுப்போலக் கங்காபுத்திரரானபீஷ்மருடைய அம்பினால் பீடிக்கப்பட்டது. பாரதரே! பாண்டவஸைனியம் கொல்லப்பட்டும் நன்கு அடிக்கப்பட்டும் உத்ஸாகத்தையிழந்தும் ஓடும்பொழுது அவற்றில் ஆ! ஆ! என்னும்பேரொலி உண்டாயிற்று. பிறகு எப்பொழுதும்வட்டமான வில்லையுடைய சந்தனுபுத்திரரான பீஷ்மர் பற்களில்விஷத்தைக்கொண்டஸர்ப்பங்களைப்போல ஜ்வலிக்கின்றநுனிகளுள்ளபாணங்களைப் பிரயோகித்தார். பாரதரே! கடுமையானவிரதத்தை அனுஷ்டிக்கின்ற பீஷ்மர் எல்லாத்திக்குக்களையும் அம்புகளாலே ஒரேவழியுள்ளவைகளாகச்செய்துகொண்டு குறிப்பிட்டுக்குறிப்பிட்டுப் பாண்டவரதிகர்களைக் கொன்றார். பிறகு படைகள் நாற்புறங்களிலும் அடித்து நாசம்பண்ணப்பட்டு ஸூர்யனும்அஸ்தமிக்கவே ஒன்றுமே அறியப்படவில்லை. பாதர்களிற்சிறந்தவரே! பெரும்போரில் பராக்ரமத்தால் நன்கு விருத்தியடைகின்ற பீஷ்மரைக்கண்டு பார்த்தர்கள் சேனைகளுடையயுத்தத்தை நிறுத்தினார்கள். **முதல்நாள் யுத்தம் முடிந்தது.**

---

## ஐம்பதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(த்ருஷ்டத்யும்னன் கிரௌஞ்சவ்யூஹம் வகுத்தது.)

பரதர்களிற்சிறந்தவரே! அரசரே! சேனைகளுக்கு முதலாவதான போர்நிறுத்தமானது ஏற்படுத்தப்பட்டுப் பீஷ்மர் போரில்அதிகப்பரபரப்புடனும் துரியோதனன் ஸந்தோஷத்துடனுமிருக்கையில் தர்மராஜர் பீஷ்மருடையவிக்ரமத்தைப்பார்த்து (தமது) தோல்வியையும் நினைத்து அதிகதுக்கத்தோடு, விருஷ்ணிகுலத்தில்உதித்தவரும் ஜனார்த்தனருமான ஸ்ரீகிருஷ்ணரை எல்லாஸகோதரர்களோடும் எல்லா அரசர்களோடும் விரைவிலடைந்து, 'கிருஷ்ண! வெய்யிற்காலத்தில் உலர்ந்தகாட்டைக்கொளுத்தும் நெருப்பைப்போல அம்புகளால் என்னுடையசேனையைக்கொளுத்துகிறவரும் சிறந்தவில்லாளியும் பயங்கரமானபராக்ரமமுள்ளவருமானபீஷ்மரைப் பாரும். அக்னியானது ஹவிஸைப்பக்ஷிப்பதுபோல என்னுடையபடையை அடிக்கடிபக்ஷிக்கிறவரும் மஹாத்மாவுமான இந்தப்பீஷ்மரை எதிர்த்துப் பார்ப்பதற்கு எவ்வாறு வல்லமையுள்ளவர்களாவோம்? வில்லைக் கையில்பிடித்தவரும் மிக்கபலமுள்ளவருமான இந்தப்புருஷசிரேஷ்டரைக்கண்டு யுத்தத்தில்பாணங்களால்அடிபட்ட (என்னுடைய)

படையானது ஓடிவிட்டது. யுத்தத்தில் யமனையும் கோபங்கொண்ட வஜ்ரபாணியான இந்திரனையும் பாசத்தைத்தரித்தவருணனையும் கதாதரனான குபேரனையும் ஜயிக்கலாம். மிக்கதேஜஸுள்ளவரும் மிக்கபலசாலியுமானபீஷ்மரையோ ஜயிக்கஇயலாது. கேசவரே! நான் என்னுடையபுத்தியின்குறைவினால், பீஷ்மரையடைந்து, இவ்விதநிலைமையைஅடைந்திருக்கிறதும் தெப்பமில்லாததுமான பீஷ்மராகிய ஆழ்ந்தஜலத்தில் மூழ்கிவிட்டேன். விருஷ்ணிகுலத்திற்பிறந்தவரே! நான் கானகம்செல்வேன். அங்குஜீவிப்பது எனக்கு மேன்மை. நான் இந்தஅரசர்களைப் பீஷ்மராகிற மிருத்யுவுக்குக்கொடுக்கப் பிரியப்படவில்லை. கிருஷ்ண! பெரியஅஸ்த்ரங்களை அறிந்தவரானபீஷ்மர் என்னுடையஸேனையை நாசம்செய்வார். நன்றாகஜ்வலிக்கின்றநெருப்பை விரைவாகஎதிர்த்தோடிவருகின்றவிட்டில்பூச்சிகள் நாசத்தின்பொருட்டே நாடுவதுபோல என்னுடையபடைகள் பீஷ்மரை வந்துநாடுகின்றன. சிறந்தபராக்கிரமசாலியானநான் ராஜ்யநிமித்தம் குறைவை அடைந்தேன். வீரர்களானஎன்னுடையதம்பியர்களும் பாணங்களால் பீடிக்கப்பட்டுத் துன்பப்படுத்தப்பட்டார்கள். என்னிமித்தமாக இவர்கள் ஸஹோதரவாத்ஸல்யத்தினாலே ராஜ்யத்தினின்றும் சுகத்தினின்றும் நழுவிவிட்டார்கள். நான் உயிரையே பெரிதாக நினைக்கிறேன். அவ்வுயிர்தான் இப்பொழுது துர்லபமாயிருக்கிறது. கேசவரே! மிச்சமுள்ளவாழ்நாட்களில் கடுமையான தவம்புரியப்போகிறேன். இந்தமித்திரர்களை நான் இந்தயுத்தத்தில் கொல்லப்போகிறதில்லை. மிக்கபலசாலியான பீஷ்மர் அடிக்குந்திறமையுள்ளவர்களும் மிக்கசிறப்புற்றவர்களுமான (வீரர்களுடைய) பல்லாயிரம்ரதங்களைச் சிறந்தஅஸ்த்ரங்களால் ஓயாமல் நாசம்செய்கிறார். மாதவரே! எதுசெய்தால் எனக்குநன்மையோ அதைக் காலதாமதமின்றிச் சொல்லும். யுத்தத்தில் ஸவ்யஸாசியை மத்யஸ்தனைப்போலக் காண்கிறேன். மிக்கபுஜபலமுள்ளபீமன்ஒருவனே க்ஷத்ரியதர்மத்தை நினைத்துப் புஜபலம் ஒன்றினாலேயே அதிகவல்லமையோடு போர்புரிகிறான். மனவலிமிக்கபீமஸேனன் தன்உத்ஸாகத்துக்குத்தக்கபடி வீரர்களைக்கொல்லுந்திறமையுடையகதாயுதத்தினாலே தேர்கள் குதிரைகள் காலாட்கள் இவைகளுடையவரிசைகளில் செய்யமுடியாதகாரியத்தைச்செய்கிறான். வீரரே! நூறுவருஷங்கள்போர்செய்தாலும், ருஜுவானயுத்தத்தினாலே பகைவர்சேனையை நாசம்செய்வதற்கு இவன் திறமையுடையவனாகான். உமக்குநண்பனும் அஸ்திரங்களையறிந்தவனுமான இந்தஅர்ஜுனன் ஒருவன்தான் ஸமர்த்தன். அவனும் மஹாபலசாலியான பீஷ்மராலும்

துரோணராலும் கொளுத்தப்படுகின்றநம்மை மிகஉபேக்ஷைபண்ணு கிறான். அடிக்கடிபிரயோகிக்கப்படும் மஹாத்மாக்களான பீஷ்மதுரோணர்களுடையதிவ்யாஸ்திரங்கள் எல்லாக்ஷத்ரியர்களையும் எரிக்கப்போகின்றன. பீஷ்மருடையபராக்கிரமத்தைப்பார்க்குங்கால் மிக்கபரபரப்புள்ளவரான அவர் எல்லா அரசர்களுடனும்கூடி நிச்சயமாகவே நம்மை நாசம்செய்வார். யோகேஸ்வரரே! காட்டுத்தீயை மேகம்தணிப்பது போல யுத்தத்தில்பீஷ்மரைத்தணிக்கும்மஹாரதனைநீர்பாரும்;கோவிந்தரே! உம்முடையஅருளினாலே பாண்டவர்கள் பகைவர்களைக்கொன்று தம்ராஜ்யத்தை மீண்டும்அடைந்து பந்துக்களோடு ஸந்தோஷிக்கப் போகிறார்கள்' என்றுசொன்னார். பெரியமனமுள்ளதர்மபுத்ரர் இவ்வாறு சொல்லிவிட்டுப் பிறகு நெடுநேரம்கவலையுற்றுத் துக்கத்தால்ப்ரஜ்ஞை தவறித் தியானம்செய்துகொண்டிருந்தார். பிறகு கோவிந்தர் அந்தத் தர்மநந்தனரைச் சோகத்தால்பீடிக்கப்பட்டவரென்றும் துக்கத்தால் மனங்கலங்கியவரென்றும்அறிந்து பாண்டவர்களெல்லாரையும் ஸந்தோஷிக்கச்செய்துகொண்டு அந்தச்சமயத்தில்கூறலானார். 'பரதஸ்ரேஷ்டரே!நீர் துயரப்படாதீர். எல்லாஉலகங்களிலும் வில்லாளிகளென்று ப்ரஸித்திபெற்றவர்களும் சூரர்களுமான தம்பிமார்களையுடையநீர் துக்கிக்கத்தகாது. அரசர்களுள்சிறந்தவரே! விரும்பியதைச்செய்பவனான நானும் பெருங்கீர்த்தியுடையவனான ஸாத்யகியும் இந்தவிராடனும் துருபதனும் பார்ஷதனான த்ருஷ்டத்யும்னனும் சேனைகளையுடையஇந்தஅரசர்களும் உம்மிடத்தில் பக்தியுள்ளவர்களாகி உமதருளை எதிர்பார்க்கிறோம். மிக்கபலமுள்ள இந்த த்ருபதகுமாரனான த்ருஷ்டத்யும்னனும் எப்பொழுதும் உமக்குப்ப்ரியத்தையும் நன்மையையும்செய்வதில் முயற்சியுள்ளவனாகி உம்முடையஸேனாபதியாயிருக்கும்நிலைமையை அடைந்திருக்கிறான். சிகண்டியும் பீஷ்மருடைய நாசத்திற்குக்காரணமன்றோ?' என்றுகூறினார். பிறகு இந்தவார்த்தையைக்கேட்டுத் தர்மராஜர் அந்தஸபையில் வாஸுதேவர்கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே மஹாரதனானத்ருஷ்டத்யும்னனைநோக்கி, 'த்ருஷ்டத்யும்ந! ஐயா! நான்உன்னைநோக்கிச்சொல்லுகிறதை நீ தெரிந்துகொள்; நான்சொல்லுகிறஅந்தவார்த்தையை நீ தாண்டக்கூடாது. என்னுடையஸேனாபதியாயிருக்கின்ற நீ வாஸுதேவருக்கொப்பானவன். புருஷஸ்ரேஷ்டனே! முற்காலத்தில் ஸுப்ரம்மண்யர் தேவர்களுக்கு எப்பொழுதும்ஸேனாதிபதியாயிருந்ததுபோல நீயும் பாண்டவர்களுக்கு ஸேனாபதியாயிருக்கிறாய். நீ உன்பராக்ரமத்தைவெளியிட்டுக் கௌரவர்களை நாசம்செய். புருஷர்களிற்சிறந்தவ

னே! நான் உன்னைப் பின்தொடரப்போகிறேன். பீமனும் அர்ஜுனனும் இணைபிரியாதவர்களான மாத்ரீபுத்திரர்களும் கவசம்பூண்டவர்களான த்ரௌபதிகுமாரர்களும் இன்னும்பிரதானர்களான அரசர்களும் உன்னைப் பின்தொடரப்போகின்றனர்' என்று கூறினர். பிறகு த்ருஷ்டத்யும்னன் எல்லாரையும்மிகமகிழ்வித்துக்கொண்டு சொல்லலானன். 'பார்த்தரே! நான் முற்காலத்தில் ருத்ரரால் துரோணருக்கு யமனாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறேன். அரசரே! போர்க்களத்தில் பீஷ்மரையும் கிருபரையும் துரோணரையும் சல்யனையும் ஜயத்ரதனையும் கொழுப்புள்ளஎல்லோரையும் இப்பொழுது எதிர்த்துப்போர்புரியப் போகிறேன்' என்றான். பிறகு ராஜஸ்ரேஷ்டனும் பகைவர்களை அழிப்பவனுமான பார்ஷதன் நல்லமுயற்சியுள்ளவனாயிருக்கையில் பெரிய வில்லைக்கையில்தாங்கினவர்களும் யுத்தத்தில்கொடியமதங்கொண்டவர்களுமானபாண்டவர்களாலே உரத்தஸிம்மநாதம் செய்யப்பட்டது. பிறகு யுதிஷ்டிரர் ஸேனாபதியான அந்தப்பார்ஷதனைநோக்கி, 'முற்காலத்தில் தேவாஸுரயுத்தத்தில் பிருகஸ்பதிஇந்திரனுக்குச்சொல்லிய க்ரௌஞ்சாருணமென்கிறஅந்தவ்யூகம் பகைவர்களைஎல்லாம் நாசம் செய்யும்தன்மையுள்ளது.யுத்தமுறைப்படிஏற்படுத்தப்பட்டதும் பகைவர்களுடையபடையைநாசம்செய்வதும் இதற்குமுன்பார்க்கப்படாததும் ப்ரதிவ்யூஹமாகஏற்படுத்தப்பட்டதுமான அந்தக்ரௌஞ்சாருண வ்யூகத்தை அரசர்கள் கௌரவர்களோடு பார்க்கட்டும்' என்றுசொன்னார். இந்திரனால்சொல்லப்பட்டஉபேந்திரன்போல அரசரான தர்மநந்தனராலேசொல்லப்பட்டத்ருஷ்டத்யும்னன் விடிந்தவுடனே, எல்லாச்சேனைகளுக்கும்முன்னணியில் தனஞ்சயனை அமர்த்தினான். இந்திரனுடையகட்டளையினாலே விஸ்வகர்மாவினால்ஏற்படுத்தப்பட்டதும் ஆச்சரியகரமானதும் மனத்திற்கினியதுமான அவனுடையகொடியானது ஸூர்யனுடையவழியைஅளாவிகின்றது. இந்திராயுதத்தின் நிறம்போன்றநிறமுடையகொடித்துணிகளால் அலங்கரிக்கப்பட்டதும் கந்தர்வநகரம்போன்றதுமான அந்தத்வஜமானது ஆகாயத்தில் பறக்கின்றபட்சிபோலவே இருந்தது. ரதமார்க்கங்களில் அக்கொடியானது நர்த்தனம்செய்கிறதுபோல விளங்கிற்று. சிறந்தரத்னமயமான அந்தக்கொடியினாலே பார்த்தன் மிகப்பிரகாசித்தான். சூரியனால் மஹாமேரு காந்தியுள்ளதாவதுபோலக் காண்டீவத்தைவில்லாகக் கொண்டஅர்ஜுனனாலே அந்தக்கொடியும் அதிககாந்தியுடையதாகியது. துருபதராஜன் பெரியசேனையினால்சூழப்பட்டு (அந்தவ்யூஹத்துக்கு) தலையானன். அரசர்களான அந்தக்குந்திபோஜனும் சைத்யனு

மாகியஇருவரும் அந்தக்ரௌஞ்சவ்யூகத்திற்கு இரண்டுகண்களாயினர். பரதர்களிற்சிறந்தவரே! ப்ரபத்ரர்களும் ஆநூபகர்களும் கிராதர்களும் தாஸேரகர்களுடையகூட்டங்களோடு வ்யூஹக்ரௌஞ்சத்தினுடையகழுத்திலிருந்தார்கள். யுதிஷ்டிரர் படச்சரர்களோடும் பௌண்ட்ரர்களோடும் பௌரவகர்களோடும் நிஷாதர்களோடும்சேர்ந்து அந்த வ்யூஹக்ரௌஞ்சத்தினுடைய பின்பாகமானார். பீமஸேனனும் துருபத ராஜகுமாரனான த்ருஷ்டத்யும்னனும்ஆகியஇருவரும் இரண்டுசிறகுகளானார்கள். பாரதரே! த்ரௌபதிபுத்ரர்கள், அபிமன்யு, மஹாரதனான ஸாத்யகி, பிசாசர்கள், தாரதர்கள், குண்டீவிஷர்கள், புண்ட்ரர்கள், மாருதர்கள், தேனுகர்கள், தங்கணர்கள், பரதங்கணர்கள், பாஹ்லீகர்கள், தித்திரர்கள், சோழர்கள், பாண்டியர்கள் ஆகியஇந்தத்தேசத்தார்கள் அந்தவ்யூஹக்ரௌஞ்சத்தினுடைய வலப்பக்கத்துச்சிறகிருக்கும் இடத்தை அடைந்தனர். அக்னிவேசர்களும் ஹூண்டர்களும் மாளவர்களும் தானபாரிகளும் சபரர்களும் உத்பஸர்களும் நாகுலர்களும் வத்ஸர்களும் நகுலஸஹதேவர்களும் அந்தவ்யூஹக்ரௌஞ்சத்தின் இடப்பக்கத்துச்சிறகின்ஸ்தானத்தைஅடைந்து நின்றார்கள். அந்தவ்யூஹக்ரௌஞ்சத்தினுடைய இரண்டுசிறகுகளும் பதினாயிரந் தேராளிகளை அடக்கிக்கொண்டிருந்தன. அவ்வாறே அதனுடைய தலையும் லக்ஷம்வீரர்களை அடக்கிக்கொண்டிருந்தது. பின்புறத்தில் ஓர் அர்ப்புதத்திற்குமேல் இருபதினாயிரம்படைகள் அடங்கியிருந்தன. கழுத்தில் லக்ஷத்தெழுபதினாயிரம் படைகள் அடங்கியிருந்தன. சிறகுகளின்முனைகளிலும் அடிப்புறங்களிலும் மத்தியிலும் யானைகள், நடக்கும்மலைகள்போல (சைனியங்களால்) சூழப்பட்டுச் சென்றன. விராடன் கேகயர்களோடுகூட அதனுடையஇடைப்ரதேசத்தைப் பாதுகாத்தான். காசிராஜனும் சிபிதேசத்தரசனும் முப்பதினாயிரம்தேர்களோடு அந்தவ்யூஹத்திலிருந்தார்கள். பரதகுலத்திலுதித்தவரே! அந்தப்பாண்டவர்கள் இவ்விதம் இந்தமஹாவ்யூஹத்தைஏற்படுத்திக் கவசம்பூண்டு ஸூர்யோதயத்தை எதிர்பார்த்துக்கொண்டு யுத்தத்திற்கு ஸஜ்ஜமாயிருந்தார்கள். சூரியனுடையநிறம்போன்றநிறமுடையவைகளும் நிர்மலமானவைகளும் பெரியவைகளுமான அவர்களுடையவெள்ளைக்குடைகள் யானைகளின்மீதும் ரதங்களின்மீதும் பிரகாசித்தன.

---

## ஐம்பத்தோராவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர்முதலியோர் எதிரணிவகுத்தது.)

அரசரே! பாரதரே! பிறகு, உமதுகுமாரன், அளவற்றபராக்கிரமமுள்ளபார்த்தனால்காக்கப்படுவதும் மிக்ககோரமானதும் உடைக்கமுடியாததுமான க்ரௌஞ்சவ்யூகத்தைப்பார்த்து, ஆசாரியரானதுரோணரையும் கிருபரையும் சல்யனையும் அடைந்து, ஸோமதத்தகுமாரனையும் விகர்ணனையும் அஸ்வத்தாமாவையும் துச்சாஸனன்முதலான தம்பியர்களனைவரையும் போருக்காகவந்திருக்கின்ற கணக்கிலடங்காத மற்றச்சூரர்களையும் [1] ஸந்தோஷமடையும்படி செய்துகொண்டு, அச்சமயத்தில் பின்வரும் வார்த்தையைச் சொல்லலானான். 'நீங்கள் அனைவரும் பற்பலசஸ்த்ரங்களைத்தரித்திருக்கின்றீர்கள்; யுத்தத்தில் ஸமர்த்தர்கள். மஹாரதர்களானநீங்கள் ஒவ்வொருவருமே சேனைகளையுடைய பாண்டுபுத்திரர்களை யுத்தத்தில்கொல்வதற்கு வல்லமையுடையவர்கள். அவ்வாறிருக்க, ஒருங்குகூடியிருக்கின்றநீங்கள்அனைவரும் பாண்டவர்களை ஜயிக்கும்விஷயத்தில் ஸந்தேகமென்னஇருக்கிறது? பீஷ்மரால்பாதுகாக்கப்படும்நம்முடையசேனையானது கணக்கிலடங்காததாயிருக்கிறது. பீமனால்ரக்ஷிக்கப்பட்ட பாண்டவர்களுடையஅந்தச்சேனையானது சிறிதாயிருக்கின்றது. படைகளைமுன்னிட்டவர்களானஸம்ஸ்தானர்களும் சூரஸேனர்களும் வேத்ரிகர்களும் குகுரர்களும் ஆரோசகர்களும் திரிகர்த்தர்களும் மத்ரகர்களும் யவனர்களும், சத்ருஞ்சயனோடும் துச்சாஸனனோடும் வீரனானவிகர்ணனோடும் நந்தோபநந்தகர்களோடும் சித்ரஸேனனோடும் பாரிபத்ரகர்களோடும் சேர்ந்து பீஷ்மரையே நான்குபுறங்களிலும்சூழ்ந்து ரக்ஷிக்கட்டும்' என்றான். பிறகு பீஷ்மரும் துரோணரும் உம்முடையபுத்திரர்களும் பாண்டவர்களைஎதிர்த்து அடிக்கக்கூடிய பெரிதானவ்யூகத்தை ஏற்படுத்தினார்கள். பீஷ்மர் பெரியஸேனையினால் நாற்புறமும் சூழப்பட்டுப் பெரியஸேனையை நன்குநடத்திக்கொண்டு தேவராஜன்போலச் சென்றார். சிறந்தவில்லாளியும் பிரதாபசாலியுமானத்ரோணர் அவரைப் பின்தொடர்ந்தார். அரசரே! குந்தலர்களோடும் தசார்ணதேசத்து வீரர்களோடும் மாகதர்களோடும் விதர்ப்பர்களோடும் மேகலர்களோடும் கர்ணப்பிராவரணர்களோடும் எல்லாஸைனியங்களையுமுடையவர்

[1] இரண்டுசொற்கள் விடப்பட்டன.

களான காந்தாரர்களும் ஸிந்துதேசத்துவீரர்களும் ஸெளவீரர்களும் சிபிகளும் வஸாதிகளும் யுத்தத்தில்விளங்குகின்றபீஷ்மரைப் பின்தொடர்ந்தார்கள். சகுனியும் தன்சேனையுடன் த்ரோணரைப் பாதுகாத்தான். பிறகு, துரியோதனனுனவன் தம்பியர்கள்,அஸ்வாதகர்கள்,விகர்ணர்கள், அம்பஷ்டர்கள், கோஸலர்கள், தரதர்கள், சகர்கள், க்ஷுத்ரகர்கள், மாலவர்கள்ஆகியஇவர்களோடுசேர்ந்து மிகுந்தஸந்தோஷத்துடன் ஸெளபலனுனசகுனியினுடைய சேனையைப் பாதுகாத்தான். பூரிஸ்ரவஸும் சலனும் சல்யனும் பூஜ்யனுனபகதத்தனும் அவந்திதேசராஜகுமாரர்களானவிந்தானுவிந்தர்களும் பீஷ்மருடையஇடப்பக்கத்தைப் பாதுகாத்தார்கள். ஸோமதத்தகுமாரனும் சுசர்மாவும் காம்போஜதேசாதிபதியானஸுதக்ஷிணனும் ஸ்ருதாயுவும் அச்யுதாயுவும் வலப்பக்கத்தில் நின்றுர்கள். அஸ்வத்தாமாவும் க்ருபரும் ஸாத்வதனுனகிருதவர்மாவும் பெரியசேனையுடன் படையினுடைய பின்பக்கத்தில் நின்றுர்கள். பற்பலதேசங்களுக்குத்தலைவர்களான அரசர்களும் கேதுமானும் வஸுதானனும் காசிராஜகுமாரனுன அபிபூவும் அந்தவ்யூகத்தினுடையபின்புறத்தைக்காக்கின்றவர்களானுர்கள். பரதகுலத்திற்பிறந்தவரே! பிறகு உம்மைச்சேர்ந்தவர்களான அவர்கள்எல்லோரும் யுத்தத்திற்கு உத்ஸாஹத்துடனும் ஸந்தோஷத்துடனும் சங்கங்களை ஊதினுர்கள்; அவ்வாறே ஸிம்மநாதங்களையும் செய்தார்கள். மனக்களிப்புற்ற அந்தவீரர்களுடைய (அவ்வொலியைக்) கேட்டுப் பிரதாபசாலியும் பிராயமுதிர்ந்தவரும் கௌரவர்களுக்குப்பிதாமஹருமான பீஷ்மர் ஸிம்மநாதத்தைச்செய்து சங்கத்தையும் மிகமுழக்கினுர். பிறகு பகைவர்களாலும் சங்கங்கள் ஊதப்பட்டன; பேரிகைகளும் பலவிதமானகாகளங்களும் ஆனகங்களும் அடிக்கப்பட்டன. அவ்வொலியானது நெருங்கினதாயிற்று. பிறகு வெண்ணிறமுள்ளகுதிரைகளையுடைய பெரியதேரில்வீற்றிருக்கின்ற க்ருஷ்ணனும் தனஞ்சயனுமாகியஇருவரும் பொன்னுலும் மணிகளாலும்இழைக்கப்பட்ட பாஞ்சஜன்யம் தேவதத்தம்என்கிற இரண்டுஉத்தமசங்கங்களையும் முழக்கினுர்கள். பயங்கரமானசெய்கையையுடையவ்ருகோதரனும் பௌண்ட்ரமென்னும்மகாசங்கத்தை ஊதினுன். குந்தீபுத்திரரானயுதிஷ்டிரமகாராஜர் அநந்தவிஜயம்என்கிறசங்கத்தை ஊதினுர். நகுலனும் ஸஹதேவனும் ஸுகோஷம் மணிபுஷ்பகம் என்னுமிரண்டுசங்கங்களையும் ஊதினுர்கள். காசிராஜனும் சிபிதேசத்தரசனும் மகாரதனுனசிகண்டியும் திருஷ்டத்யும்னனும் விராடனும் மகாரதனுனஸாத்யகியும் பாஞ்சாலதேசத்தரசர்களும் சிறந்தவில்லாளிகளான த்ரௌபதியினு

டையஜந்துகுமாரர்களும் எல்லோரும்ஒன்றுசேர்ந்து மகாசங்கங்களை முழக்கினார்கள் ; ஸிம்மநாதங்களையும் செய்தார்கள். அந்தஸமயத்தில் அந்தவீரர்களாலேஉண்டுபண்ணப்பட்டதும் மிகப்பெரிதும் மிகநெருங்கியதுமான அந்தச்சப்தமானது ஆகாயத்தையும் பூமியையும் எதிரொலியிடும்படிசெய்தது. மகாராஜரே! இவ்வாறு இந்தக்கௌரவ பாண்டவவீரர்கள் மிக்கமனக்களிப்புற்று ஒருவரைஒருவர்தவிக்கச் செய்யஎண்ணங்கொண்டு யுத்தத்திற்கு மறுபடியும் ஒன்றாகச்சேர்ந்தார்கள்" என்றுகூறினான்.

---

## ஐம்பத்திரண்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மார்ஜுனர்களுடைய யுத்தம்.)

திருதராஷ்டிரன், "இவ்வாறு நம்முடையஸேனைகளும் பிறருடையஸேனைகளும் அணிவகுக்கப்பட்டபோது, போரில்திறமையுள்ள வீரர்களுள்சிறந்தஅரசர்கள் எவ்வாறுபோர்செய்தார்கள்?" என்று வினவ, ஸஞ்சயன் கூறலானான். "அவ்வாறு சேனைகள் அணிவகுக்கப்பட்டபொழுது ஸன்னத்தமான அழகியத்வஜங்களையுடைய உம்மைச்சேர்ந்தவீரர்கள் பாண்டவர்களோடு எவ்வாறு போர்புரிந்தார்களென்பதைக்கேளும். அரசரே! கரையற்றகடல்போன்ற சேனையைப்பார்த்து உமதுபுத்திரனானதுரியோதனன் அவர்களினிடையில் நின்றுகொண்டு உம்மைச்சேர்ந்தவர்களெல்லோரையும்பார்த்து, 'கவசமணிந்தவர்களானநீங்களனைவரும் யுத்தம்செய்யுங்கள்' என்றுசொன்னான். உயரஎடுத்துக்கட்டப்பட்டத்வஜமுள்ள அவர்களனைவரும் உயிரைவிடத்துணிந்தவர்களாகி மனத்தைக்க்ரூரமாகச்செய்துகொண்டு பாண்டவர்களை எதிர்த்தார்கள். பிறகு உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் சத்துருவீரர்களுக்கும் நெருங்கியதும் மயிர்க்கூச்சத்தைஉண்டுபண்ணக்கூடியதும் ஒன்றோடொன்று எதிர்த்திருக்கின்றரதங்களோடும் யானைகளோடுங்கூடினதுமானபோர் தொடங்கியது. ரதிகர்களாலே விடப்பட்டவையும் ஸ்வர்ணமயமானகனுக்களுள்ளவையும் நன்றாகத்தீட்டப்பட்டவையும் மழுங்காத முனையுள்ளவையுமான பாணங்கள் யானைகளின்மீதும் குதிரைகளின்மீதும்விழுந்தன. அவ்வாறுபோர் நடக்கையில் பெரியகைவன்மையுள்ளவரும் பயங்கரமானபராக்ரமமுள்ளவரும் கௌரவர்களுக்குப்பாட்டனும் முதியவருமானபீஷ்

மர் கவசமணிந்து வில்லைக்கையிலெடுத்துப் பகைவர்படையைஎதிர்த்து வந்து பகைவர்களை அலக்ஷ்யம்செய்து ஸுபத்திராபுத்திரனான அபிமன்யு, பீமஸேனன், மகாரதனான ஸாத்யகி, கேகயராஜன், விராடன், பார்ஷதனான திருஷ்டத்யும்னன் ஆகியஇந்தவீரர்களின்மீதும் சைத்யர்களின்மீதும் மாத்ஸ்யர்களின்மீதும் சரமாரிகளைப் பொழிந்தார். பிறகு, அப்படிப்பட்டவீரர்கள் சேர்ந்துபோர்புரியும்பொழுது வ்யூகம் பிளக்கப்பட்டது. படையிலிருந்தவர்களெல்லாருக்கும் பெரியயுத்தம் நேர்ந்துவிட்டது. பாண்டவசேனையிலுள்ள குதிரைவீரர்களும் ரதிகர்களும், சிறந்தகுதிரைகள் கொல்லப்பட்டவர்களும் நான்குபுறங்களிலும் சிதறியோடுகின்றதேர்ப்படைகளுள்ளவர்களுமானார்கள். நரசிரேஷ்டனான அர்ஜுனனோ மகாரதரானபீஷ்மரைப்பார்த்துக் கோபங்கொண்டு விருஷ்ணிகுலத்தில்தோன்றியஸ்ரீகிருஷ்ணனைநோக்கி, 'எவ்விடத்தில் பிதாமஹர் இருக்கின்றாரோ அவ்விடத்திற்குச் செல்லும். துரியோதனனுக்குநன்மைஉண்டாவதில் ஆவலுள்ள இந்தப்பீஷ்மர் மிக்ககோபமுற்று நமதுசேனையை நிச்சயமாக நாசம்செய்வார். ஜனார்த்தனரே! உறுதியானவில்லைக்கையில்கொண்டபீஷ்மராலேகாக்கப்பட்ட துரோணரும் கிருபரும் சல்யனும் விகர்ணனும் துரியோதனனை முதலாகக்கொண்டஅவன்தம்பியர்களும் பாஞ்சாலர்களைக் கொல்வார்கள். ஜனார்த்தனரே! நான் (நமது) சைனியங்களைப்பாதுகாப்பதற்காகவே பீஷ்மரை வதம்பண்ணப்போகிறேன்' என்றுகூறினன். வாஸுதேவர் அந்தஅர்ஜுனனைநோக்கி, 'தனஞ்சய! நீ முயற்சியுள்ளவனாக இரு. இதோ யான் உன்னைப் பிதாமஹருடையரதத்தையடையும்படி செய்வேன்' என்றுகூறினர். ஸ்ரீவாசுதேவர் இவ்வாறுசொல்லிப் பிறகு உலகத்தில்பிரஸித்திபெற்ற அந்தரதத்தைப் பீஷ்மருடையரதத்தைக் குறித்துநடத்தினர். தீனர்களை ரக்ஷிப்பவனும் ஸுஹ்ருத்துக்களுக்கு ஸந்தோஷத்தைவிருத்திபண்ணுகிறவனும் பாண்டுகுமாரனுமான அர்ஜுனன் அசைந்துகொண்டிருக்கிற அனேகம்கொடிச்சீலைகளுள்ளதும் கொக்குப்போல வெண்ணிறமுள்ளகுதிரைகளுள்ளதும் உயரத்தூக்கிக்கட்டப்பட்ட மகாபயங்கரமாய்ச்சப்திக்கின்றவானரக்கொடியுள்ளதும் மேகத்தினுடையஇடிமுழக்கம்போன்றஒலியுள்ளதும் அளவற்றஒளியுள்ளதுமானபெரியதேருடன் கௌரவர்களுடைய சேனையையும் சூரஸேனர்களையும் அழித்துக்கொண்டு விரைவாகச்சென்றான். அவ்வாறுவேகத்தோடுவருகின்றவனும் மதயானைபோன்றவனும் யுத்தத்தில் (பகைவர்களைப்) பயமடையும்படிசெய்கின்றவனும் அம்புகளாலே சூரர்களை அடிப்பவனுமான அர்ஜுனனைச் சந்தனுபுத்ரரானபீஷ்

மர் ஸைந்தவனை முதன்மையாகக்கொண்டு கீழ்நாட்டுவீரர்களாலும் ஸௌவீரர்களாலும் கேகயர்களாலும் பாதுகாக்கப்பட்டு விரைவாக எதிர்த்துவந்தார். காண்டீவத்தைவில்லாகக்கொண்ட அர்ஜுனனைக் கௌரவர்களுக்குப்பிதாமஹரானபீஷ்மர், துரோணர், கர்ணன் இம் மூவரையுந்தவிர வேறெந்தத்தேர்வீரன் எதிர்ப்பதற்குத் தகுதியுள்ள வன்? மகாராஜரே! பிறகு ஸர்வலோகமகாரதரானபீஷ்மர் பாண்டு குமாரனான அர்ஜுனனை எழுபத்தேழுநாராசங்களால் நன்கு அடித்தார். துரோணர் இருபத்தைந்துபாணங்களாலும், கிருபர் ஐம்பதுபாணங்க ளாலும், துரியோதனன் அறுபத்துநான்குபாணங்களாலும், சல்ய னும் ஸைந்தவனும் ஒன்பதொன்பதுபாணங்களாலும், சகுனி ஐந்து பாணங்களாலும், விகர்ணன் பத்துப்பல்லங்களாலும் அடித்தார்கள். பெரியவில்லைக்கையில்கொண்டவனும் மிக்ககைவன்மையுடையவனு மான அந்தஅர்ஜுனன் அவர்களால்விடப்பட்டகூர்மையான அம்புக ளாலே நான்குபக்கங்களிலும்அடிக்கப்பட்டும் மலைபோலத் துன்பம டையவில்லை. பரதர்களிற்சிறந்தவரே! அளவிடமுடியாதபராக்ரம முள்ளவனும் நரஸ்ரேஷ்டனுமான அந்தக்கிரீடியானவன் பீஷ்மரை இருபத்தைந்துபாணங்களாலும், க்ருபரை ஒன்பதுபாணங்களாலும், துரோணரை அறுபதுபாணங்களாலும், விகர்ணனை மூன்றுபாணங்க ளாலும், சல்யனை மூன்றுபாணங்களாலும், (துரியோதன)ராஜனை ஐந்து பாணங்களாலும் திருப்பியடித்தான். அந்தத்தனஞ்சயனை, ஸாத்யகி யும் விராடனும் பார்ஷதனானதிருஷ்டத்யும்னனும் ஸுபத்ராபுத்ர னானஅபிமன்யுவும் த்ரௌபதீபுத்திரர்களும் நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு பீஷ்மருக்குப் பிரியத்தைத்தேடுவதில் அதிகநாட்டமுள்ளவரும், மகாவில்லாளியுமான துரோணரைப் பாஞ் சாலராஜகுமாரனானதிருஷ்டத்யும்னன் ஸோமகர்களோடுகூடி எதிர்த் தான். அரசரே! ரதிகர்களுள்சிரேஷ்டரானபீஷ்மரோ கூர்மையுள்ள எண்பதுபாணங்களாலே பாண்டவனை அடித்தார். பிறகு பாண்டவர் கள் அலறினார்கள். ஒன்றுசேர்ந்தஅவர்களுடையசப்தத்தைக்கேட்டுப் பிரதாபசாலியானஅர்ஜுனன் அந்தவீரர்களுடையமத்தியில் மிக்க மனக்களிப்புடன் புகுந்தான். மன்னரே! அந்தத்தனஞ்சயன் மஹா ரதர்களான அந்தவீரர்களுக்கு நடுவில்சென்று மகாரதர்களைக்குறி வைத்து வில்லோடு விளையாடினான். அப்பொழுது மகாரதனானபல்கு னன் கொடியபடைகளால் க்ஷத்திரியர்களுடையதலைகளை அறுத்துத் தேர்களின்நடுவிடங்களைச் சூன்யமாகச்செய்துகொண்டு ஸஞ்சாரம் செய்தான். பிறகு ஜனங்களுக்குநாதனானதுரியோதனராஜன் போரில்

தன்சேனை பார்த்தனால் பீடிக்கப்படுகின்றதைக்கண்டு பீஷ்மரைப்பார்த்து, 'கங்காபுத்ரரே! பாண்டுபுத்திரனும் பலசாலியுமான இந்த அர்ஜுனன் கிருஷ்ணனோடுகூடி, நீரும் ரதிகர்களுள்சிறந்த துரோணரும் ஜீவித்திருக்கும்பொழுதே முயற்சியுள்ள நம்முடையஎல்லாச் சேனைகளின் வேரையும் அறுக்கிறான். அரசரே! உமக்காகவே அஸ்த்ர ஸந்யாஸம்செய்தவனான கர்ணனும், எனக்கு எப்பொழுதும் நன்மை செய்ய விருப்பமுள்ளவனாகஇருந்தும் இப்பொழுது பார்த்தர்களை எதிர்த்துப் போர்புரியவில்லை. பல்குனன் கொல்லப்படுதற்குரிய உபாயத்தை நீர் செய்யும்' என்றுகூறினான். அரசரே! பிறகு இவ்வாறு சொல்லியதைக்கேட்ட உமதுபிதாவானதேவவ்ரதர், 'க்ஷத்ரியதர்மம் நிந்திக்கத்தக்கது' என்றுசொல்லிவிட்டுப் பார்த்தனுடையரதத்தை எதிர்த்துச்சென்றார். வேந்தரே! வெள்ளைக்குதிரைகளையுடையஅவ் விருவரும் எதிர்த்ததைக்கண்டு அரசர்கள் உரத்தஸிம்மநாதம் செய்தார்கள்; சங்கங்களையும் ஊதினார்கள். துரோணபுத்திரரும் துரியோதனனும் உமதுகுமாரனானவிகர்ணனும் யுத்தகளத்தில் பீஷ்மரைச்சூழ்ந்துகொண்டு யுத்தத்திற்காகநின்றார்கள். அவ்வாறே பாண்டவர்களெல்லாரும் தனஞ்சயனைச்சூழ்ந்துகொண்டு பெரிதாகப் போர்புரியும்பொருட்டுநின்றார்கள். பிறகு யுத்தம்நடந்தது. பீஷ்மரோ போர்க்களத்தில் ஒன்பதுபாணங்களைஎய்து அர்ஜுனனைத் துன்பமடையும்படிசெய்தார். அர்ஜுனன் அந்தப்பீஷ்மரை மர்மஸ்தானங்களைப்பிளக்கின்றபத்துக்கணைகளால் திருப்பியடித்தான். பிறகு யுத்தத்தைக்கொண்டாடுபவனும் பாண்டுபுத்ரனுமான அர்ஜுனன் நன்குதொடுக்கப்பட்டஆயிரம்பாணங்களால் பீஷ்மரைத் திசைதெரியாமல் மறைத்தான். பிறகு சந்தனுபுத்திரரானபீஷ்மரும் அப்பொழுது அர்ஜுனனுடையசரக்கூட்டத்தைச் சரக்கூட்டத்தால் தடுத்தார். அதிகஸந்தோஷத்தையடைந்தவர்களும் போரில்மகிழ்கின்றவர்களும் செய்ததற்குப்பிரதிசெய்வதில்விருப்பமுள்ளவர்களுமான அவ்விருவரும் ஸமமாகவேயுத்தம்செய்தனர். பீஷ்மருடையவில்லினின்று விடுபட்டபாணஸமூகங்கள் கூட்டங்கூட்டமாக அர்ஜுனனுடைய பாணங்களால் பிளக்கப்பட்டுச் சிதறினவைகளாகக் காணப்பட்டன. அவ்விதமே நான்குபக்கங்களிலும் அர்ஜுனனால் விடப்படும்அம்புக்கூட்டங்கள் பீஷ்மருடையஅம்புகளாலேஅறுக்கப்பட்டுப் பூமியில்விழுந்தன. அர்ஜுனன் கூர்மையுள்ளஇருபத்தைந்துபாணங்களாலே பீஷ்மரையடித்தான். பீஷ்மரும் யுத்தத்தில் கூர்மையுள்ளபாணங்களால் பார்த்தனையடித்தார். அதிகபலசாலிகளும் பகைவர்களைஅழிக்குந்

திறமையுடையவர்களுமான இருவரும் ஒருவர் ஒருவருடையகுதிரை களையும் கொடிமரங்களையும் தேர்களின்ஏர்க்கால்களையும் தேருரு ளைகளையும் நாசம்செய்துகொண்டு விளையாடினார்கள். மகாராஜரே! போர்செய்பவர்களுள்சிறந்தபீஷ்மர் பிறகு கோபங்கொண்டு வாஸுதேவரை மூன்றுபாணங்களால் நடுமார்பில் அடித்தார். அரசரே! பீஷ்மருடைய வில்லினின்றுவிடுபட்ட அந்தஅம்புகளால் நன்குஅடிக் கப்பட்ட மதுஸூதனர் யுத்தகளத்தில் பூத்திருக்கிறபலாசமரம்போல விளங்கினர். பிறகு அர்ஜுனன் மாதவர்நன்குபிளக்கப்பட்டதைக் கண்டு அதிககோபங்கொண்டு பீஷ்மருடையஸாரதியைக் கூர்மையுள்ள அம்புகளால் பிளந்தான். ஒருவரையொருவர் கொல்வதில்முயற்சி யுள்ள அவ்விருவீரரும் யுத்தத்தில் அப்பொழுது ஒருவரையொருவர் வஞ்சிக்கத்திறமையுள்ளவர்களாகவில்லை. அவ்விருவீரர்களும் ஸாரதிக ளுடையஸாமர்த்தியத்தாலும் சுறுசுறுப்பினாலும் விசித்திரமானமண் டலகதிகளையும் பலவாறானபோக்குவரவுகளையும் காண்பித்தார்கள். அரசரே! அவ்விருவரும் ஒருவரையொருவர் அடிக்கும்விஷயத்தில் தகுந்தஸமயத்தைச்சிந்திக்கின்றவர்களும் அடிக்கடி துன்பம்விளை விக்கும்ஸமயத்தைத் தேடுவதிலேயே நோக்கமுள்ளவர்களுமாயிருந் தார்கள். மஹாரதர்களான அவ்விருவீரர்களும் ஸிம்மநாதத்தோடு சங்கவாத்யகோஷங்களையும் விற்களினின்றுண்டாகிறநாணொலியை யும் உண்டுபண்ணினார்கள். அவ்விருவருடையசங்கநாதத்தாலும் தேரு ருளைகளின்ஒலியாலும் விரைவாகப்பிளக்கப்பட்டபூமியானது நடுங்கி யது; சப்தமுள்ளதும் ஆயிற்று. பரதர்களிற்சிறந்தவரே! அவ் விருவருக்குமுள்ளதாரதம்யத்தை ஒருவனாவது காணவில்லை. அவ் விருவரும் பலசாலிகள்; யுத்தத்தில் (எவ்விதத்தினாலும்பகைவர்க ளால்) அவமதிக்கமுடியாதவர்கள். ஒருவரோடொருவர் ஒப்பானவர் கள். அவ்விடத்தில் கௌரவர்கள் பீஷ்மரை த்வஜத்தினால்மாத்திரம் அறிந்துகொண்டார்கள். அவ்வாறே பாண்டுபுத்திரர்கள் பார்த்தனைக் கொடியினால்மாத்திரம் அறிந்தார்கள். பாரதரே! யுத்தத்தில் அவ் விருவீரர்களுடைய அவ்விதபராக்கிரமத்தையும்பார்த்து எல்லாப் பிராணிகளும் ஆச்சரியத்தைஅடைந்தன. தர்மத்தில்நிலைபெற்றிருக் கின்ற ஒருமனிதனிடத்தில் பாவத்தை ஒருவனாவது ஒருபொழுதும் எவ்வாறு பார்க்கமுடியாதோ அவ்வாறே அந்தயுத்தரங்கத்தில் அவ்விரு வருக்கும்நேரக்கூடியதவறுதலை ஒருவனும் காணமுடியவில்லை. யுத்தத் தில் அவ்விருவீரர்களும் சரக்கூட்டத்தினால் கண்ணுக்குப்புலப்படாத வர்களானார்கள். மறுபடியும் அவ்விருவரும் விரைவில் பிரகாசமுள்ள

வர்களானார்கள். அவ்விடத்தில் கந்தர்வர்களும் தேவர்களும் ரிஷிகளும் சாரணர்களும் அவ்விருவருடையபராக்கிரமத்தையும்கண்டு, 'யுத்தத்தில்அதிககோபமுள்ளவர்களும் மகாரதர்களுமான இவ்விருவீரர்களும் தேவர்களோடும் அஸுரர்களோடும் கந்தர்வர்களோடுங்கூடின (எல்லா) உலகங்களாலும்கூட எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாதவர்கள். மிகவும் வியக்கத்தக்கஇந்தயுத்தமானது உலகங்களில் ஆச்சர்யகரமாயுள்ளது. இவ்விதயுத்தங்கள் எவ்விதத்தாலும் உண்டாகா. வில்லையும் ரதத்தையும் குதிரைகளையுமுடையவரும் அம்புகளைப் போர்க்களத்தில் வாரியிறைக்கிறவருமான இந்தப்பீஷ்மர் புத்திசாலியானபார்த்தனாலே யுத்தத்தில் ஜயிப்பதற்குமுடியாதவர். அவ்வாறே தேவர்களாலும் யுத்தத்தில்அணுகமுடியாதவனும் வில்லைக்கையில்பிடித்தவனுமான இந்தப்பாண்டவனைப் பீஷ்மரும் யுத்தத்தில் ஜயிப்பதற்குச் சக்தியுள்ளவராகார். இவ்வுலகமுள்ளவரையில் இவ்விருவருடையயுத்தமும் ஸமமாகவேயிருக்கும்' என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள். அரசரே! இவ்வாறு பீஷ்மார்ஜுனரிருவருஞ்செய்யும் யுத்தத்தைக் குறித்துச்சொல்லப்படும்புகழ்மொழிகள் போர்க்களத்தில் ஆங்காங்கு கேட்கப்பட்டன. பாரதரே! அந்தஇரண்டுவீரர்களும்சேர்ந்து சண்டைசெய்யுங்காலத்தில் உம்முடையயுத்தவீரர்களும் பாண்டவர்களைச் சேர்ந்தயுத்தவீரர்களும் கூரியமுனையுள்ளசத்திகளாலும் பளபளப்பான கோடாலிகளாலும் வேறுபலஅம்புகளாலும் பலவிதசஸ்த்ரங்களாலும் ஒருவரையொருவர் அப்பொழுது அடித்தார்கள். அவ்வாறு கோரமும் மிக்கபயங்கரமுமான அந்தயுத்தம்நடக்கையில் இருதிறத்துச் சேனைகளிலுமுள்ளசூரர்கள் ஒருவரையொருவர் வெட்டினார்கள். அரசரே! துரோணருக்கும் திருஷ்டத்யும்னனுக்கும் பெரும்போர் நடந்தது" என்றுகூறினான்.

---

## ஐம்பத்துமூன்றாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(துரோணருக்கும் த்ருஷ்டத்யும்னனுக்கும் யுத்தம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பெரியவில்லாளியான துரோணர் பாஞ்சாலராஜபுத்ரனானத்ருஷ்டத்யும்னன் ஆகிய யுத்தமுயற்சியுள்ள இருவரும் எவ்வாறு எதிர்த்தார்கள்? அதனை எனக்குச் சொல்வாயாக. சந்தனுபுத்ரரானபீஷ்மர் யுத்தத்தில் பாண்டவனைப்பெருமையால்

மனிதனுடைய வல்லமையைக்காட்டிலும் தெய்வமேசிறந்ததென்று நான் நினைக்கிறேன். இது என்னுடையஎண்ணம். பீஷ்மரோ யுத்தத்தில் கோபங்கொண்டால் சராசரமானஉலகங்களை நாசஞ்செய்வார். ஸஞ்சய! அவர் யுத்தத்தில் பலத்தினால் பாண்டவனை ஏன் அதிக்கிரமிக்கவில்லை?" என்றுகேட்க, ஸஞ்சயன் சொல்லலானான்.

"ராஜரே! உறுதியுடனிருந்துகொண்டு அதிபயங்கரமான இந்த யுத்தத்தை நீர் கேளும். பாண்டவர்கள் இந்திரனோடுகூடியதேவர்களாலும் ஜயிக்கமுடியாதவர்கள். துரோணரோ கூர்மையுள்ளபாணங்களால் திருஷ்டத்யும்னனை அடித்து அவனுடையஸாரதியையும் ஒரு பல்லத்தினால் அடித்துத் தேர்த்தட்டினின்றுகீழேதள்ளினர். துரோணர் அதிககோபமுண்டு உத்தமமானநான்குபாணங்களால் திருஷ்டத்யும்னனுடையநான்குகுதிரைகளையும் துன்புறுத்தினர். பிறகு வீரனானதிருஷ்டத்யும்னன் சிரித்துக்கொண்டு துரோணரைக் கூர்மையுள்ளதொண்ணூறுபாணங்களால்அடித்து, 'நில்லும்;நில்லும்' என்றும் சொன்னான். பிறகு அளவிடமுடியாதமனோதைரியத்தையுடையவரும் பிரதாபசாலியுமான பாரத்வாஜர் கோபங்கொண்டவனானதிருஷ்டத்யும்னனை அம்புகளால்மூடி, அவனைவதம்செய்யவேண்டுமென்கிறஎண்ணத்தினால் கோரமானதும் இந்திரனுடையவஜ்ராயுதத்துக்குஸமமான ஸ்பர்சமுள்ளதும் வேறானகாலதண்டம்போன்றதுமான ஓரம்பைக் கையிலெடுத்தார். பரதகுலத்தில்பிறந்தவரே! துரோணரால் போரில் தொடுக்கப்பட்டஅந்தக்கணையைக்கண்டு எல்லாஸைனியங்களிலும் பெரியகூக்குரல் உண்டாயிற்று. அந்தச்சமயத்தில் யுத்தபூமியில் சூரனானதிருஷ்டத்யும்னன்ஒருவன்மாத்திரம் மலைபோல அசைவற்று நின்றான். ஆச்சரியகரமான அவனுடையஆண்மையை நாங்கள் கண்டோம். அவன் அவ்வாறுஜ்வலித்துக்கொண்டு தன்னைநோக்கி வருகின்றதும் கோரஸ்வரூபமுள்ளதும் தனக்குமிருத்யுவாயிருப்பதுமான அந்தஅம்பைத்துண்டித்துப் பாரத்வாஜரின்மீது சரமாரியையும் பொழிந்தான். பிறகு செய்தற்கரியதும் திருஷ்டத்யும்னனால்செய்யப்பட்டதுமான அச்செய்கையைக்கண்டு பாஞ்சாலர்களனைவரும் பாண்டவர்களோடுசேர்ந்து உரக்கஆரவாரித்தார்கள். பிறகு பராக்கிரமசாலியான திருஷ்டத்யும்னன் துரோணரைக்கொல்லும்விருப்பத்துடன் மிக்கவேகமுள்ளதும் பொன்னாலும் வைடூர்யத்தினாலும் அலங்கரிக்கப்பட்டதுமான சக்தியாயுதத்தைவிடுத்தான். வேகமாக வருகின்றதும் ஸ்வர்ணத்தினால்அலங்கரிக்கப்பட்டதுமான சக்தியாயு

தத்தைப் பாரத்வாஜர் யுத்தத்தில் சிரிப்பவர்போலத்தோற்றிக்கொண்டு மூன்று துண்டாக்கினர். வேந்தரே! பிரதாபசாலியான திருஷ்டத்யும்னன் தனது சக்தியானது அழிக்கப்பட்டதுகண்டு துரோணரின்மீது சரமாரிகளைப் பொழிந்தான். பிறகு மகாகீர்த்திசாலியான துரோணர் அந்தஅம்புமழையைத்தடுத்து த்ருபதபுத்திரனுடையவில்லை நடுவில் வெட்டினர். அறுக்கப்பட்டவில்லையுடையவனும் மிக்ககீர்த்திபொருந்தியவனும் பலசாலியுமான அந்தத்திருஷ்டத்யும்னன் மலைபோலஉறுதியானதும் பெரிதுமான ஒருகதாயுதத்தைத் துரோணர்மீது பிரயோகித்தான். துரோணரைக்கொல்லும்எண்ணத்தோடு வேகமாகவிடப்பட்ட அந்தக்கதாயுதமானது விரைவாகச்சென்றது. அத்தருணத்தில் துரோணர் பொன்னால்அலங்கரிக்கப்பட்டஅந்தக்கதாயுதத்தை லாகவத்தினாலே தம்மீதுதாக்காதபடி செய்துகொண்டார். ஆச்சரியகரமான அவருடையஆண்மையை அப்பொழுது நாங்கள் கண்டோம். அவ்வாறு அந்தக்கதாயுதத்தை நாசம்செய்துவிட்டுப் பார்ஷதனைக்குறித்து மிக்ககூர்மையுள்ளவைகளும் துவையப்பட்டவைகளும் ஸ்வர்ணமயமானகணுக்களுள்ளவைகளும் மிகவும்அச்சத்தைத் தருபவைகளுமானபல்லங்களைத் தொடுத்தார். அந்தஅம்புகள் யுத்தத்தில் அவனுடையகவசத்தைப்பிளந்து ரக்தத்தைப் பானம்செய்தன. பிறகு மகாரதனானதிருஷ்டத்யும்னன் வேறுவில்லைஎடுத்து யுத்தத்தில்பராக்கிரமத்தைவெளிப்படுத்தித் துரோணரை ஐந்துபாணங்களால்அடித்தான். ராஜரே! ரக்தத்தால்நனைக்கப்பட்டவர்களான அந்தப் புருஷசிரேஷ்டர்களிருவரும் வசந்தகாலத்தில் பூத்திருக்கின்ற இரண்டுபலாசவிருக்ஷங்கள்போல விளங்கினர்கள். பிறகு, படைமுகத்தில் கோபங்கொண்ட துரோணர் பராக்கிரமத்தைவெளிப்படுத்தி மறுபடியும் துருபதகுமாரனுடையவில்லை அறுத்தார். அளவிடமுடியாத பராக்கிரமமுள்ளஅவர் மேகம் நீர்த்தாரையை மலையில் பொழிவதுபோல வில்லறுபட்டஅந்தத்ருஷ்டத்யும்னன்மீது வணங்கினகணுக்களையுடையஅம்புகளை வர்ஷித்தார். பிறகு ஒருபிறைக்கணையால் அவனுடையஸாரதியைத் தேர்த்தட்டினின்று கீழேதள்ளினர். பின்பு அவனுடையநான்குகுதிரைகளையும் கூர்மையுள்ளநான்குபாணங்களாலேஅடித்துக்கீழேதள்ளி யுத்தத்தில் ஸிம்மநாதம்செய்தார். பிறகு வேறொரு பல்லத்தினாலே அவன்கையிலிருந்தவில்லை வெட்டினர். வில்அறுபட்டு ரதத்தையும் குதிரைகளையும் ஸாரதியையுமிழந்த அந்தத்திருஷ்டத்யும்னன் கதாயுதத்தைக்கையிலெடுத்து மிக்கஆண்மையைவெளியிட்டுக்கொண்டு கீழேகுதித்தான். தேரினின்றுகீழே

இறங்குவதற்குள்ளாகவே அவன்கதாயுதத்தைத் துரோணர் பாணங்க ளால் விரைவாகக்கீழேதள்ளினர். அது ஆச்சரியமாயிருந்தது. வலிய கைகளையுடையவனும் பலசாலியுமான த்ருஷ்டத்யும்னன் பிறகு பெரி தும் காந்தியுள்ளதும் நூறுசந்திரப்பிரதிமைகளுள்ளதுமானகேடகத் தையும் பெரிதும் சிறந்ததுமானகத்தியையும் கையில்கொண்டு துரோ ணரை வதஞ்செய்யும்விருப்பத்தோடு காட்டில் மாம்ஸத்தில் விருப்ப முள்ளஒருஸிம்மம் மதங்கொண்டயானையை எதிர்த்துவருவதுபோல வேகத்தோடு எதிர்த்தோடிவந்தான். துரோணர் இந்தப்பார்ஷதனைச் சரமாரியினால் தடுத்துவிட்டார். அந்தச்சமயத்தில் ஆச்சரியகரமான த்ரோணருடையபௌருஷத்தையும் சுறுசுறுப்பையும்அஸ்த்ரப்பிரயோ கத்திலுள்ளதிறமையையும் கைவன்மையையும் நாங்கள் கண்டோம். பிறகு பலசாலியாயினும் த்ருஷ்டத்யும்னன் யுத்தத்தில் நடப்பதற்குச் சக்தியற்றவனானன். துரோணராலேதடுக்கப்பட்ட மகாரதனானதிருஷ் டத்யும்னன் ஹஸ்தலாகவத்துடன் கேடகத்தாலே அந்தஅம்புக்கூட் டங்களைத் தடுத்தான். பிறகு மிக்கபுஜபலமுள்ளவனும் அதிகபல சாலியுமானபீமன் யுத்தத்தில் மிக்கபலசாலியான த்ருஷ்டத்யும்ன னுக்கு உதவிசெய்யநினைத்து விரைவாக அவனுக்குஎதிரில் வந்தான். அரசரே! அவன் துரோணரைக் கூர்மையுள்ளஏழுபாணங்களால் அடித்தான்; அப்பொழுது பார்ஷதனையும் தன்தேரின்மீது விரை வாக ஏற்றிவைத்துக்கொண்டான். பிறகு துரியோதனன் பெரிய சேனையுடன் கலிங்கனை த்ரோணரைக்காப்பதற்காக ஏவினன். பிறகு களிங்கர்களுடைய அந்தப்பெரியபடையானது உமதுகுமாரனுடைய ஆஜ்ஞையினால் விரைவாகப் பீமனை எதிர்த்துச்சென்றது. பிறகு தேராளிகளுட்சிறந்ததுரோணரும் த்ருஷ்டத்யும்னனை விட்டுவிட்டுக் கிழவர்களான விராடனையும் துருபதனையும் யுத்தத்தில் எதிர்த்தார். திருஷ்டத்யும்னனும் போர்க்களத்தில் தர்மபுத்ரருக்கெதிரில் சென் ருன். பிறகு யுத்தகளத்தில் களிங்கர்களுக்கும் மகாபலசாலியான பீமனுக்கும் உலகத்திற்கு அதிகநாசத்தையுண்டுபண்ணக்கூடியதும் கொடியதும் பயங்கரமானதும் மயிர்க்கூச்சத்தைஉண்டாக்குவதும் கைகலந்ததுமானபோர் நடந்தேறியது" என்றுகூறினன்.

---

## ஐம்பத்துநான்காவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீமஸேனன், கலிங்கன்முதலானவர்களைக் கொன்றது.)

திருதராஷ்டிரன், "என்புத்திரனால் ஏவப்பட்ட சேனாபதியான களிங்கன், ஆச்சரியகரமானசெய்கையும் மிக்கபலமுமுடையவனும் கதாயுதத்தோடுசஞ்சரிப்பவனும் வீரனும் காலதண்டத்தைக்கையில் கொண்டயமன்போன்றவனுமான பீமஸேனனைச் சேனையோடுபோர்க் களத்தில் எவ்வாறு எதிர்த்துப்போர்செய்தான்?" என்றுகேட்க, ஸஞ் சயன் சொல்லலானான்.

"ஓ! ராஜேந்திரரே! உம்முடையபுத்திரனால் அவ்வாறுகட்டளை யிடப்பட்ட மிக்கபலசாலியான அந்தக்களிங்கன் பெரியபடையினால் காக்கப்பட்டுப் பீமனுடைய ரதத்தைக்குறித்துச்சென்றான். பாரதரே! அவ்வாறு தன்னைநோக்கிவருகின்றதும் ரதங்களாலும் குதிரைகளா லும் யானைகளாலும்நெருங்கியதும் கையில்பிடிக்கப்பட்ட பெரிய ஆயுதங்களையுடையதுமான களிங்கர்களுடைய பெரும்படையையும் எதிர்த்துவருகின்ற நிஷாதர்களுக்குத்தலைவனான கேதுமானையும் பீமஸேனன் சேதிதேசத்துவீரர்களோடுசேர்ந்து[1] எதிர்த்தான். பிறகு அணிவகுக்கப்பட்டிருக்கிற சேதிவீரர்களினிடையிலுள்ள பீமனை அதிககோபங்கொண்ட ச்ருதாயு கேதுமானென்னும் அரச னோடுசேர்ந்து போரில் எதிர்த்துச்சென்றான். ஓ! அரசரே! கேது மானென்னுமரசன் அநேகஆயிரக்கணக்கான களிங்கர்களுடைய தேர்களோடும் பதினாயிரம்யானைகளோடும் நிஷாதர்களோடும்சேர்ந்து போரில் பீமஸேனனை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டான். பீமஸேனனை அனுஸரித்துவந்திருக்கின்ற சேதிதேசத்தார்களும் மச்ச தேசத்தார்களும் கரூசதேசத்தார்களும் யுத்தத்தில் அரசர்களுடன் சேர்ந்து நிஷாதர்களை எதிர்த்தார்கள். பிறகு, அச்சத்தைத்தரும் கொடியபோர் தொடங்கியது. போர்வீரர்கள் ஒருவரையொருவர் கொல்லும்விருப்பத்தினால் தம்மைச்சேர்ந்தவர்களையே தாங்கள் அறிய வில்லை. பெரிய அஸுரஸேனையோடு இந்திரனுக்குப் போர்நடப்பது போலவே பீமனுக்குப் பகைவர்களுடன் மிகக்கொடியபோர் நடந்தது. பாரதரே! ரணகளத்தில்போர்புரிகின்ற அந்தஸைனியத்தினுடைய மிக்கபேரொலியானது முழங்குகின்றகடலினுடைய ஒலிபோல் உண்

[1] கூறியதுகூறலால் இரண்டுசொற்கள் விடப்பட்டன.

டாகியது. ராஜரே! அப்பொழுது யுத்தவீரர்கள் ஒருவரையொருவர் நன்கு இழுத்துக்கொண்டு (படைகளால்) நிறைக்கப்பட்ட யுத்தபூமிமுழுமையும் முயலினுடையரக்தம்போன்ற நிறமுள்ளதாகச் செய்தார்கள். யுத்தவீரர்கள் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தினால் தம்மைச்சேர்ந்தவர்களையும் பிறரையும் தெரிந்துகொள்ளவில்லை. எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாதவர்களானவீரர்கள் தங்களைச்சேர்ந்த வீரர்களைத் தாங்களே கொன்றார்கள். அரசரே! குறைந்தவர்களான சேதிதேசத்துவீரர்களுக்கு மிகுந்தவர்களான களிங்கர்களோடும் நிஷாதர்களோடும் மிகப்பெருஞ்சண்டை நடந்தது. மிக்கபலசாலிகளான சேதிதேசத்துவீரர்கள் சக்திக்கேற்றபடி பௌருஷத்தைவெளியிட்டுப் பீமஸேனனைவிட்டுவிட்டுத் திரும்பினார்கள். அவ்வாறு சேதிநாட்டு வீரர்கள் திரும்பியபொழுது களிங்கர்கள் கைத்திறத்தைக்காட்டிப் பீமஸேனன்மீது சரமாரியைப்பொழிந்தார்கள். மிக்கபலசாலியான பீமஸேனன் தேரின்நடுவிலிருந்தும் அசையவில்லை; கூரியஅம்புகளைக் களிங்கனுடைய சேனையின்மீது வாரியிறைத்தான். சிறந்தவில்லாளியானகாளிங்கனும் சக்ரதேவன்எனப் பெயர்பெற்ற மகாரதனான அவனுடையபுத்திரனும் பீமஸேனனை அம்புகளால் அடித்தார்கள். பிறகு மிக்கபுஜபலமுள்ளபீமன் தன்தோள்வலியைத் துணையாகக்கொண்டும் அழுகியவில்லை அசைத்துக்கொண்டும் காளிங்கனோடு போர்புரிந்தான். சக்ரதேவனோ பலகணைகளைத்தொடுத்து அவற்றால் பீமஸேனனுடைய குதிரைகளைக் கொன்றான். அந்தரணகளத்தில் பகைவர்களையழிக்குந்திறமையுள்ள பீமஸேனன் தேரையிழந்ததைக்கண்டு சக்ரதேவன் கூர்மையான அம்புகளை இறைத்துக்கொண்டு எதிர்த்தோடிவந்தான். ராஜேந்திரரே! கார்காலத்தில் மேகம் மழையைப்பொழிவதுபோல மிக்கபலமுள்ள சக்ரதேவன் பீமன்மீது சரமாரிகளைப் பொழிந்தான். குதிரைகள்கொல்லப்பட்டதேரிலிருக்கும்மிக்கபலசாலியானபீமஸேனனும் சக்ரதேவன்மீது முழுதும்எஃகினாலாகியகூரியகதாயுதத்தை எறிந்தான். கதையினால்அடிக்கப்பட்டகளிங்கபுத்ரன் தேரினின்றுதவறி ஸாரதியோடுகூடவே பூமியில் விழுந்தான். களிங்கர்களுக்குத்தலைவனானஅரசன் தன்புத்திரன் கொல்லப்பட்டதைக்கண்டு பதினாயிரம் யானைகளாலும் நிஷாதர்களாலும் நாற்புறத்திலும்சூழப்பட்டுப் பல ஆயிரக்கணக்கான ரதங்களோடு பீமனை நாற்றிசைகளிலும் சூழ்ந்துகொண்டான். பிறகு, பீமன் மிக்கவேகமுள்ள பெரியமஹாகதையை எறிந்துவிட்டுக் குரூரமானகாரியத்தைச்செய்யஎண்ணிப் பயங்கரமான கத்தியைக் கையிலெடுத்தான். புருஷஸ்ரேஷ்டரே! ஸ்வர்ணமயமான

நக்ஷத்திரபிம்பங்களாலும் அர்த்தசந்திரபிம்பங்களாலும் நிறைக்கப்பட்டதும் காளையினுடையதோலினால்செய்யப்பட்டதும் ஒப்பற்றதுமானகேடகத்தையும் கையிலெடுத்தான். பிறகு களிங்கராஜன் கோபங்கொண்டு பீமஸேனனைக்கொல்லஎண்ணி வில்லில்கட்டியநாண்கயிற்றைஉருவிக் கோரமானதும் ஸர்ப்பத்தினுடையவிஷத்திற்குஒப்பானதுமான ஒருபாணத்தையெடுத்துத்தொடுத்துப் பீமஸேனன்மீது விடுத்தான். அரசரே! விடப்பட்டதும் வேகத்தோடுவருகின்றதும் கூர்மையுள்ளதுமான அந்தஅம்பைப் பீமஸேனன் பெரியகத்தியினால் இரண்டாகத் துண்டாடினான். பிறகு, காளிங்கன் யுத்தத்தில் பீமஸேனன்மீது கோபமுற்று அதிகஉத்ஸாகத்தோடு பகைவர்படையை நடுங்கச்செய்துகொண்டு பெரியஸிம்மநாதம்செய்தான்; சாணையில்தீட்டப்பட்ட பதினான்குதோமராயுதங்களையும் விரைவாகப் பிரயோகித்தான். மிக்கபுஜபலமுள்ள பாண்டவன் பரபரப்பில்லாமல் அந்தத் தோமராயுதங்கள் தன்னிடம்வருமுன், சிறந்தகத்தியினால் ஆகாயமார்க்கத்திலேயே அவைகளை விரைவாகத் துண்டாடினான். ஆண்மையில் சிறந்தவனானபீமன் யுத்தகளத்தில் பதினான்குதோமரங்களையும் அறுத்தெறிந்துவிட்டுப் பிறகு பானுமானைக்குறித்து எதிர்த்துச்சென்றான். பானுமானோ சரமாரியினால் பீமனைமூடி ஆகாயத்தை எதிரொலியிடும்படிசெய்துகொண்டு உரக்க ஸிம்மநாதம்செய்தான். பீமன் மகாயுத்தத்தில் அந்த ஸிம்மநாதத்தைப்பொறுக்கவில்லை. பிறகு, மிக்கஆரவாரஞ்செய்யும் பீமஸேனன் பேரொலியோடு ஸிம்மநாதம்செய்தான். பரதர்களிற்சிறந்தவரே! களிங்கனுடையசேனையானது அந்தஸிம்மநாதத்தினாலேயே மிக்கநடுக்கமுற்று யுத்தத்தில் பீமஸேனனை ஒருமனிதனாக எண்ணவேயில்லை. பிறகு, மிக்கதோள்வலிமையுள்ளபீமன் பேரொலியோடு ஸிம்மநாதம்செய்து கத்தியுடன் உத்தமமானயானையினுடைய இரண்டுதந்தங்களையும் பிடித்துக்கொண்டு வேகமாகத்துள்ளிக் கஜராஜனுடைய [1] முதுகின்மீது ஏறினான். பிறகு காளிங்கன் ஒருசக்தியைப் பீமன்மீது விடுத்தான். அந்தச்சக்தியைப் பீமன் பெரியவாளினால் நடுவில் இரண்டுதுண்டாக்கினான்; பிறகு பானுமானையும் இரண்டுதுண்டாக்கினான். பகைவர்களையழிப்பவனான அந்தப்பீமஸேனன் யானையின்மீதிருக்கும்போர்வீரனைக்கொன்று மிக்கசுமையைத்தாங்கக்கூடிய யானையின்பிடரில் கத்தியால் வெட்டினான். பிடர்வெட்டப்பட்ட அந்தச்சிறந்தயானையானது விந்துவின்வேகத்தினால் நான்குபக்கத்திலும் இடிக்கப்படும் தாழ்வரைகளையுடைய மலைபோல மிகஅலறிக்

[1] 'மத்யம்' என்பது மூலம்.

கொண்டு கீழே விழுந்தது. பாரதரே! பரதகுலத்தில்பிறந்தவனும் கம்பீரமான ஸ்வபாவமுள்ளவனும் நல்லகவசமணிந்தவனுமான பீமன் கத்தியைக்கையில்கொண்டு அந்தயானையினின்று துள்ளிக் கீழேகுதித்துப் பூமியில் நின்றான். அந்தப்பீமன் நான்குபக்கங்களிலும் யானைகளை மடியும்படிசெய்துகொண்டு பலவிதமானயுத்தகதிகளில் ஸஞ்சாரம்செய்தான். நாற்புறத்திலும்சுற்றும் அவனுடைய கதியானது சுழற்றப்படும்கொள்ளிவட்டம்போலக் காணப்பட்டது. பகைவர்களை அவமதிக்கின்றவனும் இரத்தத்தினால் நனைக்கப்பட்டவனும் பலத்தினால்அதிகரித்தவனும் மகாபலசாலியும் மிகுந்தகோபங்கொண்டவனும் பகைவர்களுக்குப்பயத்தைவிருத்திபண்ணுகின்றவனும் பிரளயகாலத்தில் எல்லாப்பிராணிகளையும்அழிக்கின்றயமனுக்கு ஒப்பானவனுமானபீமன் குதிரைகள் யானைகள் தேர்கள் காலாட்கள் ஆகியஇவர்களுடையகூட்டங்களை நாசஞ்செய்கின்றவனும் ரணகளத்தில் பகைவர்களின்மீது பருந்துபோல நான்குபக்கத்திலும் வட்டமிடுகின்றவனும் யானையின்மீதேறிப்போர்புரிகின்றஅவர்களுடையசரீரங்களையும் தலைகளையும் கூரியமுனையுள்ளகத்தியினால் துண்டாக்குகின்றவனும் ஸகாயமற்றவனும் காலாளுமாயிருந்துகொண்டே அவர்களை மயங்கச்செய்தான். புத்திமயக்கமுற்றஅந்தப்பகைவர்கள் கர்ஜித்துக்கொண்டு பெரும்போரில் கத்தியுடன் மிகவேகமாகஸஞ்சரிக்கின்ற அந்தப்பீமனைக்குறித்தே எதிர்த்தோடிவந்தார்கள். பலமுள்ளவனும் பகைவர்களைஅடிக்கிறவனுமானபீமன் யுத்தத்தில் தேராளிகளுடைய தேரைச்சேர்ந்த ஏர்க்கால்களையும் நுகத்தடிகளையும்வெட்டி ரதிகர்களையுங்கொன்றான். பீமஸேனன் அனேகவிதமானயுத்தமார்க்கங்களில் ஸஞ்சரிக்கிறவனாகக் காணப்பட்டான். பாண்டுபுத்திரனானபீமன் [1] ப்ராந்தம், [2] ஆவித்தம், [3] உத்ப்ராந்தம், [4] ஆப்லுதம், [5] ப்ரஸ்ருதம், [6] ப்லுதம், [7] ஸம்பாதம், [8] ஸமுதீர்ணம் என்கிற பலவிதமான கத்திசுழற்றும்வகைகளையும் காண்பித்தான். சிலர் மகாபலசாலியானபாண்டவனாலே கத்திமுனையினால்வெட்டுண்டு மர்மஸ்தானங்கள் பிளக்கப்பட்டுஅலறிக்கொண்டு உயிர்போய்க்கீழேவிழுந்தார்கள். பாரதரே! தந்தங்களும் துதிக்கைநுனிகளும் அறுக்கப்பட்டுக் கும்பஸ்தலங்களும் பிளக்கப்பட்டுப் போர்வீரர்களையிழந்த வேறுயானைகள் தங்கள்சேனை

[1] வட்டமாகச் சுழற்றுதல். [2] நாற்புறத்திலும் பகைவர்கள் துன்பமடையும்படி வீசுதல். [3] மேலாகச்சுழற்றுதல். [4] நான்குபக்கங்களிலும்மேலாகச்சுழற்றுதல். [5] நேராகநீட்டல். [6] தள்ளும்படிசெய்தல். [7] நன்றாக லக்ஷ்யங்களில் தாக்கும்படிசெய்தல். [8] நன்றாக வீசுதல்.

களையே கொன்றன; அவ்வாறே பேரொலிகளை வெளியிட்டுக்கொண்டு பூமியிலும் வீழ்ந்தன. தோமரங்களும் மாவுத்தர்களுடையதலைகளும் விசித்ரமானமேல் விரிப்புக்களும் ஸ்வர்ணத்தால்பிரகாசிக்கின்ற கச்சைகளும கழுத்தணிகளும் சக்திகளும் கொடித்துணிகளும் உலக்கைகளும் அம்புப்பெட்டிகளும் யந்திரங்களும் விசித்திரமான வில்லுகளும் பிண்டிபாலங்களும் நிர்மலமான வேணுகங்களும் மாவெட்டிகளும் பற்பலவிதமானமணிகளும் மத்தியில்தங்கத்தால்இழைக்கப்பட்டகத்திப்பிடிகளும் அறுக்கப்பட்டதையும் குதிரைகள் வீழ்த்தப்பட்டுக் குதிரைக்காரர்களோடுகூடவே கீழேவிழுவதையும் நாங்கள் கண்டோம். அரசரே! சரீரத்தினுடைய முன்புறமும் கீழ்ப்புறமும் துதிக்கையும் அறுக்கப்பட்டுக் கொல்லப்பட்டயானைகளாலே நன்றாக நான்குபக்கத்திலும் பரப்பப்பட்டயுத்தபூமியானது கீழேவீழ்ந்திருக்கின்றமலைகளால் சூழப்பட்டதுபோலாயிற்று. மகாபலசாலியானபீமன் இவ்வாறு பெரியயானைகளை அடித்துவிட்டுக் குதிரைகளையும் அடித்தான். சிறந்தவர்களானகுதிரைவீரர்களையும் யுத்தத்தில் கீழேதள்ளினான். பாரதரே! அந்தப்பீமனுக்கும் அவர்களுக்கும் அதிபயங்கரமானயுத்தம் நடந்தது. அந்தப்பெரியயுத்தத்தில் கீழேதள்ளப்பட்ட கடிவாளங்களும் பூட்டாங்கயிறுகளும் பொன்னொளிவீசுகின்றகச்சைகளும் யானையின்மேல்விரிப்புகளும் ஈட்டிகளும் மிகுந்தவிலைமதிப்புள்ளரிஷ்டியாயுதங்களும் கவசங்களும் கேடகங்களும் விசித்ரமானவிரிப்புக்களும் ஆங்காங்கு காணப்பட்டன. அந்தப் பீமன் [1] பிராஸங்களாலும் விசித்திரமானயந்திரங்களாலும் பளபளப்பானசஸ்திரங்களாலும் யுத்தபூமியைப் பற்பலநிறமுள்ளபுஷ்பங்களாலே வியாபிக்கப்பட்டதுபோலச் செய்தான். மகாபலசாலியான பாண்டவன் துள்ளிச் சிலதேர்வீரர்களைக் கத்தியினாலேவெட்டி அவர்களைக் கொடிமரங்களோடுகூடவே கீழேதள்ளினான். அடிக்கடி யுத்தரங்கத்தில் மேலேகிளம்புகிறவனும் திக்குகளில்ஓடுகின்றவனும் கீர்த்திபொருந்தியவனும் விசித்திரமானகதிகளுடன் ஸஞ்சரிக்கின்றவனுமான பீமனைக்கண்டு ஜனங்கள் ஆச்சரியமடைந்தார்கள். அந்தப்பீமன் காலால் சிலரைக் கொன்றான். மற்றவர்களை விசேஷமாகக் கீழேதள்ளி நாசஞ்செய்தான். மற்றவர்களைக் கத்தியினாலே வெட்டினான். மற்றும் சிலரை விம்மநாதத்தினாலே பயமுறுத்தினான். இன்னும்சிலரைத் துடையினிடத்திலுண்டானவேகத்தினாலே பூமியில் வீழ்த்தினான். சிலர் இவனைப்பார்த்துப் பயத்தினாலேயே மரணமடைந்தனர். இவ்

---

[1] சுருள்கத்தி.

வாறு வேகமுள்ளகளிங்கர்களுடைய அந்தப்பெரும்படையானது ரணகளத்தில் பீஷ்மரைச்சூழ்ந்துகொண்டு பீமனை எதிர்த்து அவனுக்கருகில்ஓடிவந்தது. பாரதர்களிற்சிறந்தவரே! பிறகு பீமஸேனன் காளிங்கனுடையஸைன்யங்களுக்குமுன்நிற்கின்ற ஶ்ருதாயுவைக்கண்டு எதிர்த்தான். அவ்வாறுவருகின்றபீமஸேனனைக்கண்டு அளவிடமுடியாத பராக்கிரமமுள்ளகாளிங்கன் ஒன்பதுபாணங்களால் அவனது நடுமார்பிலடித்தான். காளிங்கனுடையபாணத்தால் அடிக்கப்பட்டபீமஸேனன் வேணுகம்என்கிறஆயுதத்தினால் துன்பப்படுத்தப்பட்டயானை போலவும் விருத்திபண்ணப்பட்டநெருப்புப்போலவும் கோபத்தினால் மிகஜ்வலித்தான். பிறகு தேர்ப்பாகனான அசோகன் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட ரதத்தைக்கொண்டுவந்து பீமனை அதிலேறும்படிசெய்தான். பகைவர்களை அழிப்பவனானகௌந்தேயன் விரைவாக அந்தத்தேரின்மீதேறிக் காளிங்கனை எதிர்த்தோடிவந்து, 'நில்; நில்' என்றுசொன்னான். பிறகு பலசாலியானசுருதாயு மிக்ககோபமுற்றுக் கைத்தேர்ச்சியைக்காண்பித்துக்கொண்டு பீமன்மீதுகூர்மையானகணைகளையெய்தான். மகாராஜரே! மகாபலசாலியானகளிங்கனுலே சிறந்த வில்லினின்றுவிடப்பட்ட கூரிய ஒன்பதுபாணங்களாலே அடிக்கப்பட்டஅந்தப்பீமன் தடியினால்அடிக்கப்பட்டஸர்ப்பம்போல மிகப்பெரியஆரவாரம்செய்தான். பலசாலிகளுள்உத்தமனும் ப்ருதையின்புதல்வனுமானபீமன் கோபங்கொண்டு உறுதியானவில்லைவளைத்து உருக்குமயமானஏழுபாணங்களால் களிங்கனைக் கொன்றான். மஹாபலசாலிகளும் களிங்கனுடையசக்ரரக்ஷகர்களுமான ஸத்தியதேவனும்ஸத்யனுமாகியஇருவரையும் இரண்டு [1] க்ஷுரங்களாலே யமனுடையவீட்டிற்கனுப்பினான். பிறகுஅளவிடமுடியாதபலமுடையபீமன் கூர்மையுள்ள மூன்றுநாராசங்களாலே கேதுமானை யுத்தத்தில் யமனுடையவீட்டிற்கனுப்பினான். பிறகு களிங்கர்கள் ஸன்னத்தர்களாகிக் கோபமுள்ள பீமனை அனேக ஆயிரக்கணக்கானபடைகளோடு நன்றாகச்சூழ்ந்துகொண்டார்கள். பிறகு களிங்கர்கள் பீமஸேனன்மீது சக்திகளையும் கதைகளையும் வாள்களையும் தோமரங்களையும் ரிஷ்டிகளையும் கோடாலிகளையும் இறைத்தார்கள். மகாபலசாலியானபீமன் மிகுதியான அந்தக் கொடியபடைமாரியைத் தன்பலத்தால்தடுத்துக் கதையைக்கையிலெடுத்து அதிவேகத்தோடு எதிர்த்துவந்து எழுநூறுவீரர்களை யமனுடையவீட்டிற்கனுப்பினான். பகைவர்களை அழிப்பவனானபீமன் மறுபடியும் இரண்டாயிரம்களிங்கர்களை யமலோகத்துக்கு அனுப்பினான்.

[1] பட்டாக்கத்தி.

அது ஆச்சரியமாயிருந்தது. இவ்வாறு அந்தப்பீமஸேனன் போர்க்களத்தில் மகாரதரானபீஷ்மரை அடிக்கடி பார்த்துக் களிங்கர்களுடையஅந்தஸேனைகளை விரைவாகப் பிளந்தான். யுத்தகளத்தில் பாண்டவனாலே பாகர்கள்கொல்லப்பட்ட யானைகள் பாணங்களால்பீடிக்கப்பட்டு அதிகமாகக்கர்ஜித்துத் தம்ஸேனைகளையே அடித்துக்கொண்டு காற்றினால்சிதற அடிக்கப்பட்டமேகங்கள்போல ஸேனைகளில் அங்குமிங்கும் ஓடின. பிறகு, மிக்கபுஜபலமுள்ளவனும் நீண்டகைகளையுடையவனும் வாளைக்கையில்பிடித்தவனும் அளவற்றஊக்கமுள்ளவனும் மகாபலசாலியுமானபீமன் பேரொலியுள்ளசங்கத்தைஉரக்கஊதிக் கலிங்கப்படையிலுள்ளஎல்லாருடைய மனங்களையும் நடுங்கச்செய்தான். சத்துருக்களைத்தவிக்கச்செய்பவரே ! களிங்கர்களை மோகமும் வந்துசூழ்ந்தது. படைகளும்வாகனங்களும் எல்லாஇடங்களிலும் நடுக்கமுற்றன. போர்க்களத்தில் கஜராஜன்போல நான்குபக்கங்களிலும் பலவிதமான யுத்தகதிகளோடுஸஞ்சரிக்கின்றவனும் ஆங்காங்குஓடுகின்றவனும் அடிக்கடிமேலேதுள்ளிக்குதிக்கின்றவனுமான பீமனாலே களிங்கஸேனைகளுக்கு மதிமயக்கமானது உண்டுபண்ணப்பட்டது. முதலையினாலே தடையற்றுக் கலக்கப்படும்பெரியதடாகம்போலக் களிங்கசேனையானது பீமஸேனனிடத்தினின்றுண்டானபயத்தால் பயந்து மிக நடுக்கமுற்றது. ஆச்சரியகரமானசெய்கையுள்ள பீமனாலே காளிங்கனைச்சேர்ந்த எல்லாயுத்தவீரர்களும் பயமுறுத்தப்பட்டு யுத்தத்தை விட்டுத் திரும்பிக் கூட்டங்கூட்டமாக ஓடுகையில் பாண்டவஸேனாபதியான பார்ஷதனான திருஷ்டத்யும்னன், 'யுத்தம்செய்யுங்கள்' என்று தன்னுடையபடைகளைப்பார்த்துக் சட்டளையிட்டான். சேனாபதியினுடையவார்த்தையைக்கேட்டுச் சிகண்டியைத்தலைவனாகக்கொண்டசேனைக்கூட்டங்கள் (பகைவர்களை) அடிக்கும் திறமையுள்ள தேர்ப்படைகளோடுகூடவே பீமனையே தொடர்ந்துசென்றன. பாண்டுபுத்ரரானதர்மராஜரும் மேகம்போன்றநிறத்தையுடைய பெரியயானைப்படையோடு பின்புறத்தில் அந்தஸைனிகர்கள் அனைவரையும் அனுஸரித்தார். இவ்வாறு த்ருஷ்டத்யும்னன் தன்னுடையஎல்லாச்சேனைகளையும் யுத்தம்செய்யும்படி ஏவிவிட்டுச் சிறந்தவீரர்களால்சூழப்பட்டவனாகப் பீமஸேனனுடையபின்பக்கத்தைநாடி நின்றான். உலகத்தில் பாஞ்சாலராஜனுக்கு உயிரைவிட்டாவது பிரியத்தைச்செய்பவன் பீமனையும் ஸாத்யகியையும்விட வேறொருவனுமில்லை. பகைவர்களை அழிப்பவனும் உத்தமவீரர்களைக்கொல்லுகின்றவனுமான அந்த த்ருஷ்டத்யும்னன் களிங்கவீரர்களுடையபத்தியில்ஸஞ்சரித்துக்கொ

ண்டிருக்கின்ற மிக்கபுஜபலமுள்ள பீமஸேனனைப் பார்த்தான். அரசரே! பகைவர்களைத்தவிக்கச்செய்பவனான த்ருஷ்டத்யும்னன் பலவாறு கர்ஜித்தான்; ஸந்தோஷமுடையவனுமானான்; சங்கத்தையும் ஊதினான்; யுத்தத்தில் ஸிம்மநாதத்தையும் செய்தான். அந்தப் பீமஸேனன் புறாநிறமானகுதிரையையுடைய த்ருஷ்டத்யும்னனுடைய ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்ற ரதத்திலுள்ள [1] கோவிதாரக்கொடியைக்கண்டு மனத்தேறுதலையடைந்தான். அளவிடமுடியாதபராக்ரமமுள்ள திருஷ்டத்யும்னன், களிங்கர்களாலே நன்றாகஎதிர்த்துத் தாக்கப்பட்டபீமஸேனனைக்கண்டு யுத்தத்தில் அவனைக் காப்பாற்றுவதற்காக அவனுக்கு எதிராகச்சென்றான். உதாரமானமனமுள்ளவர்களும் வீரர்களுமான அந்தத்திருஷ்டத்யும்னன் பீமனிருவரும் தூரத்தில் ஸாத்யகியைக்கண்டு களிங்கர்களோடு போர்புரிந்தார்கள். ஜயசீலர்களுட்சிறந்தவனும் புருஷச்ரேஷ்டனுமான ஸாத்யகி வேகமாக அவ்விடத்திற்சென்று பீமனுக்கும் த்ருஷ்டத்யும்னனுக்கும் பின்புறத்தில் நின்றான். கையில்விற்பிடித்த அந்தஸாத்யகி உக்கிரமானகார்யத்தைச்செய்துவிட்டுப் பயங்கரமான வடிவத்துடன் களிங்கர்களைப் பார்த்தான். அந்தயுத்தகளத்தில் பீமன் களிங்கர்களிடத்தினின்று உண்டானதும் மாம்ஸங்களாலும் ரக்தங்களாலும் சேறுபட்டதும் ரக்தவெள்ளத்துடன்கூடியதுமான ஒருநதியை உண்டுபண்ணினான். மஹாபலசாலியானபீமஸேனன் களிங்கவீரர்களுக்கும் பாண்டவவீரர்களுக்குமிடையில் பெருகுகின்றதும் எவ்விதத்தாலும் தாண்டமுடியாததுமான அந்தரக்தநதியைத் தாண்டினான். ராஜரே! அவ்வாறு யுத்தம்செய்கின்றபீமஸேனனைக்கண்டு உம்மைச்சேர்ந்தவீரர்கள், ‘காலனே பீமஸேனஉருவத்துடன் களிங்கர்களோடு யுத்தம்செய்கிறான்’ என்று அலறினார்கள். பிறகு நான்குபக்கங்களிலும் அணிவகுக்கப்பட்டிருக்கிற சேனைகளையுடைய சந்தனுகுமாரரானபீஷ்மர் போர்க்களத்தில் அந்தச்சப்தத்தைக்கேட்டு விரைவாகப் பீமனை எதிர்த்துவந்தார். பொன்னால்அலங்கரிக்கப்பட்ட பீஷ்மருடைய அந்த ரதத்தை ஸாத்யகி பீமஸேனன் பார்ஷதனானதிருஷ்டத்யும்னன் ஆகிய மூவரும் எதிர்த்துவந்தார்கள். அவர்களனைவரும் ரணகளத்தில் கங்காபுத்திரரானபீஷ்மரை விரைவாகச்சூழ்ந்துகொண்டு வன்மையோடு தொடுக்கப்பட்ட மும்மூன்றுகொடிய அம்புகளாலே பீஷ்மரை மூடினார்கள். உம்முடையபிதாவான பீஷ்மர் அவ்வாறுமுயற்சிக்கின்ற பெரிய வில்லாளிகளை மும்மூன்றுபாணங்களால் திருப்பியடித்தார். பிறகு

[1] ஒருவகைமரம்.

ஆயிரக்கணக்கான அம்புகளாலே அந்தமகாரதர்களைத்தடுத்து ஸ்வர்ண மயமானகவசத்தையணிந்த பீமனுடையகுதிரைகளை அம்புகளால் கொன்றார். குதிரைகள்கொல்லப்பட்டதேரின்மீது வீற்றிருக்கின்ற வனும் பிரதாபசாலியுமானபீமஸேனன் காங்கேயருடையரதத்தைக் குறித்து ஒருசக்தியை விரைவாக எறிந்தான். உம்முடையபிதாவான தேவவ்ரதர் அந்தச்சக்தி தம்மிடம்வருவதற்குள் அதை மூன்றுதுண் டாக்கினார். அந்தச்சக்தி யுத்தபூமியில் சிதறியது. புருஷசிரேஷ்டரே! பிறகு பலசாலியான பீமஸேனன் எஃகினாற்செய்த மிகக்கூரிய ஒரு பெரியகதாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு அந்தரதத்தினின்று விரைவாகத் துள்ளிக் கீழேகுதித்தான். பிறகு ஸாத்யகியும் விரை வாகப் பீமனுக்குப் பிரியத்தைச்செய்யவேண்டுமென்கிறவிருப்பத் தோடு காங்கேயருடையஸாரதியை விரைவாகக் கணைகளால்அடித் துக் கீழேதள்ளினான். தேராளிகளுட்சிறந்தபீஷ்மரோ அந்தஸாரதி கொல்லப்பட்டவுடனே காற்றைப்போலச்செல்லுகின்றகுதிரைகளா லே யுத்தபூமியினின்று வேறிடத்திற்குக் கொண்டுபோகப்பட்டார். அரசரே! பிறகு பெரியவிரதமுள்ளபீஷ்மர் விலகிப்போனவுடன் பீம ஸேனன் உலர்ந்தகாட்டைக்கொளுத்துகிறபெருநெருப்புப்போல அதிக மாகஜ்வலித்தான். அவன் எல்லாக்காளிங்கர்களையும்கொன்றுவிட்டு ஸேனையின்மத்தியில்நின்றான். பரதர்களிற்சிறந்தவரே! அப்படிப்பட்ட பீமனை உம்மைச்சேர்ந்தவர்களுள்ஒருவனாவது எதிர்க்கச்சக்தியுள்ள வனாகவில்லை. தேராளிகளுட்சிறந்த திருஷ்டத்யும்னன் கீர்த்திமானான அந்தப்பீமனைத் தன்தேரின்மீதேற்றிக்கொண்டு எல்லாச்சேனைகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே வேறிடத்திற்குச் சென்றான். பரதர்களிற்சிறந்தவரே! அந்தப்பீமஸேனன் பாஞ்சாலவீரர்களாலும் மத்ஸ்யதேசத்துவீரர்களாலும் புகழப்பட்டு த்ருஷ்டத்யும்னனைத்தழு விக்கொண்டு பிறகு ஸாத்யகியிடம்சென்றான். பிறகு உறுதியான வலியுள்ளவனும் யதுகுலத்தில்பிறந்தவீரர்களுள்சிறந்தவனுமான ஸாத் யகி திருஷ்டத்யும்னன்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீமஸே னனைநோக்கி அவன்சந்தோஷிக்கும்படி பின்வருமாறுகூறலானான். 'பாக்யவிசேஷத்தினாலே களிங்கராஜனும் ராஜபுத்திரனானகேதுமானும் களிங்கராஜகுமாரனானசக்ரதேவனும் மற்றக்களிங்கர்களும் யுத்தத்தில் (உன்னால்) கொல்லப்பட்டார்கள். யானைகளாலும்குதிரைகளாலும் தேர்களாலும்சூழப்பட்டதும் மகாபுருஷர்களாலேநிரம்பியதும் தைர்ய முடையவர்களானயுத்தவீரர்களால்அடையப்பட்டதுமான களிங்கர் களுடையபெரியஸேனாவ்யூகமானது ஏகாகியானஉன்னால் உன்புஜ

பலத்தினாலும் வீர்யத்தினாலும் அடிக்கப்பட்டது' என்றான். பகைவர்களை அழிக்குந்திறமையுள்ளவரே! நீண்டகைகளையுடையவனான சிநியினுடைய [1] பௌத்திரன் இவ்வாறுசொல்லிவிட்டுத் தன்ரதத்தினின்று (திருஷ்டத்யும்னனுடைய ரதத்தில் விரைவாகத்தாவிப் பாண்டவனைக் கட்டிக்கொண்டான். பிறகு மகாரதனானஸாத்யகி மீண்டும் தன் ரதத்தை அடைந்து பீமனுக்குப்பலத்தைவிருத்திசெய்துகொண்டு அதிகோபத்துடன் உம்மைச்சேர்ந்தவீரர்களை நாசம்செய்தான்.

---

## ஐம்பத்தைந்தாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனனுடைய யுத்தம்.)

பரதகுலத்திற்பிறந்தவரே! பிறகு அந்தப்பகலில் [2] பிற்பகுதித் தொடக்கத்தில், தேராளிகள் யானைகள் குதிரைகள் காலாட்படைகள் குதிரைக்காரர்கள் ஆகிய இவர்களுக்கு அதிகமானக்ஷயம்உண்டாகவே பாஞ்சாலராஜகுமாரனான திருஷ்டத்யும்னன், அஸ்வத்தாமா சல்யன் மகாத்மாவானகிருபர் இந்தமூன்றுமகாரதர்களோடும் யுத்தத்திற்காக எதிர்த்தான். மிக்கபலசாலியான அந்தப்பாஞ்சாலராஜகுமாரன் கூர்மையுள்ளபத்துக்கணைகளால் உலகப்ரஸித்திபெற்றவைகளான அஸ்வத்தாமாவினுடையகுதிரைகளைக் கொன்றான். வாகனங்கள்கொல்லப்பட்டதுரோணபுத்திரர் பிறகு சல்யனுடையரதத்தின்மீது விரைவாக ஏறி த்ருஷ்டத்யும்னன்மீது அம்புகளைப்பொழிந்தார். பரதகுலத்தில் உதித்தவரே! த்ருஷ்டத்யும்னன் அஸ்வத்தாமாவையெதிர்த்ததைக் கண்டு அபிமன்யுவும் கூர்மையுள்ளபாணங்களை இறைத்துக்கொண்டு விரைவாகஎதிர்த்துவந்தான். புருஷஸிரேஷ்டனான அந்தஅபிமன்யு சல்யனை இருபத்தைந்துபாணங்களாலும் கிருபரைஒன்பதுபாணங்களாலும் அஸ்வத்தாமாவைஎட்டுப்பாணங்களாலும் அடித்தான். பிறகு அஸ்வத்தாமா அபிமன்யுவை ஒருபாணத்தால்விரைவாகஅடித்தான்; பிறகு சல்யன் பத்துக்கணைகளாலும் கிருபர் கூர்மையுள்ள மூன்றுகணைகளாலும் அடித்தார்கள். உம்முடையபௌத்ரனானலக்ஷ்மணன் (யுத்தபூமியில்) நிற்கின்றஅபிமன்யுவை மிகுந்தஊக்கத்துடன் எதிர்த்தான். பின்பு யுத்தம் நடந்தது. சத்துருவீரர்களை அழிப்பவ

---

[1] ஸாத்யகி. [2] 'அபராஹ்ண' என்பது மூலம்; பகல் 18 - நாழிகைக்குமேல் 24 - நாழிகைவரையிலுள்ள காலம்.

னைலக்ஷ்மணன் அதிககோபங்கொண்டு அபிமன்யுவை அடித்தான். அது ஆச்சரியம்போலிருந்தது. பரதர்களிற்சிறந்தவரே! கைதேர்ந் தவனான அபிமன்யுவும் அதிககோபங்கொண்டு பிராதாவானலக்ஷ்ம ணனை ஐம்பது பாணங்களால் அடித்தான். மகாராஜரே! லக்ஷ்மண னும் அபிமன்யுவினுடையவில்லைப் பிடிக்குமிடத்தில் ஒருபாணத்தால் இரண்டாகத் துண்டாக்கினான். பிறகு எல்லாஜனங்களும் கூச்சலிட் டார்கள். பகைவீரர்களை அழிப்பவனான அபிமன்யு வெட்டப்பட்ட அந்தவில்லையெறிந்துவிட்டு விசித்ரமாயும் மிக்கவேகமுள்ளதாயுமிருக் கின்ற வேறுவில்லைக் கையிலெடுத்தான். புருஷசிரேஷ்டர்களான அவ்விருவரும் அந்தயுத்தத்தில் ஒருவரையொருவர்எதிர்த்துச் செய்த தற்குப் பிரதிசெய்வதில்விருப்பத்துடன் கூரியசரங்களால் அடித்துக் கொண்டார்கள். பிறகு பிரஜைகளுக்கெல்லாம்தலைவனும் அரசனு மான துரியோதனன் மகாரதனான தன்புத்திரன் உம்முடையபௌத்ர னை அபிமன்யுவினாலே பீடிக்கப்படுவதைக்கண்டு விரைவாக அவ்வி டம்சென்றான். உமது குமாரன் அங்குதிரும்பிவந்தவுடன் எல்லா அரசர் களும் அனேகரதங்களோடு அபிமன்யுவை நான்குபுறங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். வேந்தரே! கிருஷ்ணனுக்குச்சமமானபராக் ரமமுடைய சூரனான அந்த அபிமன்யு யுத்தத்தில் எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாத அப்படிப்பட்டசூரர்களால் சூழப்பட்டும் மனவருத்த மடையவில்லை. பிறகு, தனஞ்சயனும் அந்தயுத்தத்தில் தன்புத்ரனான அபிமன்யு வீரர்களைஎதிர்த்ததுகண்டு அவனைக்காப்பதில்ஆவலோடு எதிரில் விரைவாக ஓடிவந்தான். பிறகு பீஷ்மரையும் துரோணரை யும்முதன்மையாகக்கொண்ட அரசர்கள் ஒன்றுசேர்ந்து தேர்களோடும் யானைகளோடும் குதிரைகளோடும் அர்ஜுனனைஎதிர்த்தார்கள். யானை களாலும் குதிரைகளாலும் தேர்களாலும் காலாட்படைகளாலும் விரை வாகத்தூற்றப்பட்டுப் பூமியிலுண்டானபுழுதியானது சூரியனுடைய ரதத்தையடைந்ததாகக் காணப்பட்டது. அப்படிப்பட்டஆயிரக்கணக் கானயானைகளும் அனேகஅரசர்களும் எவ்விதத்தாலும் அவனுடைய பாணமார்க்கத்தையடைந்து எதிர்க்கவில்லை. எல்லாப்பிராணிகளும் அலறின; திசைகள் இருளடர்ந்தவையாயின. கௌரவர்களுடையபயங் கரமானகொடியஅநீதியானது நன்குகாணப்பட்டது. பரதசிரேஷ் டரே! அர்ஜுனனுடையஅம்புக்கூட்டங்களாலே ஆகாயமும் திக்குக் களும் பூமியும் சூரியனும் காணப்படவில்லை. தேர்களும் யானைகளும் அழிக்கப்பட்டன. சிலதேராளிகள் போரில் கொல்லப்பட்டகுதிரை களையுடையவர்களானார்கள். சிலதேர்ப்படைத்தலைவர்கள் அதிவேக

மாக ஓடுகின்ற ரதமுடையவர்களாகவும் காணப்பட்டார்கள். சிலரதிகர்கள் தேர்களையிழந்தவர்களும் நான்குபக்கங்களிலும் ஓடுகின்றவர்களும் தோள்வளைகளையணிந்த கைகளாலே ஆயுதங்களைப்பிடித்தவர்களுமாக ஆங்காங்குக்காணப்பட்டார்கள். அரசரே! அர்ஜுனனிடத்தினின்று உண்டானபயத்தினாலே குதிரைவீரர்களும் யானைவீரர்களும் முறையே குதிரைகளையும் யானைகளையும் இழந்து நான்குபக்கத்திலும் ஓடினார்கள். அரசர்கள் அர்ஜுனன்பாணங்களால் தேர்களினின்றும் யானைகளினின்றும் குதிரைகளினின்றும் கீழேவிழுந்தவர்களும் வீழ்த்தப்படுகின்றவர்களுமாகக் காணப்பட்டார்கள். அர்ஜுனன் ஆங்காங்கு யுத்தத்திற்காக எடுக்கப்பட்ட கதைகளையும் வாள்களையும் ஈட்டிகளையும் அம்புப்பெட்டிகளையும் பாணங்களையும் விற்களையும் அங்குசங்களையும் கொடித்துணிகளையும் ஏந்தியமனிதர்களுடையகைகளைக் கொடியஅம்புகளாலே துணித்தான். பயங்கரமானதோற்றமுள்ளவனாகவுமிருந்தான். பரதகுலத்திற்பிறந்தராஜரே! அந்தயுத்தத்தில் கீழே (அறுத்துத்தள்ளப்பட்டு) ஜ்வலிக்கின்றஈட்டிகள், உலக்கைகள், பிராஸங்கள், பிண்டிபாலங்கள், பட்டாக்கத்திகள், கூர்மையுள்ளகோடாலிகள், தோமரங்கள், அடித்துத்தள்ளப்பட்டபொற்கவசங்கள், த்வஜங்கள், கேடகங்கள், விசிறிகள், பொற்காம்புகளுள்ள குடைகள், [1] தாற்றுக்கோல்கள், பூட்டாங்கயிறுகள், சாட்டைகள்ஆகியஇவற்றின்குவியல்கள் போர்க்களத்தில் இறைந்தனவாகக்காணப்பட்டன. பாரதரே! அந்தப்போரில் சூரனான அர்ஜுனனை எவ்விதத்தாலாவது எதிர்க்கக்கூடியமனிதன் உமதுபடையில் ஒருவனும் இல்லை. அரசரே! எந்தஎந்தமனிதன் யுத்தத்தில் பார்த்தனை எதிர்த்தானோ அந்தஅந்தமனிதன் கூர்மையுள்ள பாணங்களால் பரலோகத்திற்கனுப்பப்பட்டான். உம்மைச்சேர்ந்த அந்தயுத்தவீரர்கள் நாற்புறங்களிலும்ஓடும்பொழுது அர்ஜுனனும் வாஸுதேவரும் சிறந்தசங்கங்களை ஊதினார்கள். அந்தஸேனைமுழுதும் தோல்வியடையும்படி செய்யப்பட்டதைக்கண்டு உமதுபிதாவானபீஷ்மர், யுத்தத்தில்சூரரானத்ரோணரைநோக்கிப் புன்னகையுடன் பின்வருமாறு வசனிக்கலானார். 'வீரரே! பலசாலியான இந்தப்பாண்டுபுத்திரன் கிருஷ்ணனோடுசேர்ந்து (நம்முடைய) ஸைன்யங்களை நெருப்புப்போல எரிக்கிறான். இவனுடையரூபமானது காலனுக்கும் அந்தகனுக்கும் யமனுக்கும்ஒப்பாகக் காணப்படுதலால் இந்தஅர்ஜுனன் யுத்தத்தில் எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாதவன். இந்தப்பெரியசேனையானது நம்மால் திருப்பமுடியாதது. இந்தஸேனையானது ஒன்றை

[1] இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.

ஒன்றுபார்த்துக்கொண்டு நான்குபக்கங்களிலும் ஓடுகிறது. நீர் பாரும். இதோ ஸூர்யனும் ஸர்வவிதத்தினாலும் எல்லாப்பிராணிகளுடைய கண்களையும்கவர்கிறவன்போலச் சிறந்ததான அஸ்தகிரியை நாடுகிறான். புருஷசிரேஷ்டரே! ஆகலால், இந்தஸமயத்தில் யுத்தத்தைநிறுத்துவதேஉசிதமென்று நான் எண்ணுகிறேன். களைத்தவர்களும் பயந்தவர்களுமான நம்முடையயுத்தவீரர்கள் எவ்விதத்தாலும் போர்புரியமாட்டார்கள்' என்றனர். அரசரே! மஹாரதரானபீஷ்மர் ஆசார்யசிரேஷ்டரான துரோணரைப்பார்த்து இவ்வாறுசொல்லிவிட்டுப் பிறகு உம்மைச்சேர்ந்தயுத்தவீரர்களை யுத்தத்தைவிட்டொழியும்படிசெய்தார். பிறகு ரதங்களோடும் யானைகளோடும் தேர்களோடுங்கூடினபாஞ்சாலர்களும் பாண்டவர்களும் ஸோமகர்களோடு ஜயத்தைப்பெற்று அடிக்கடி விம்மநாதம்செய்தார்கள். தனஞ்சயன்முதலானமகாரதர்கள் மனக்களிப்புற்று நான்குவிதவாத்யகோஷங்களால் எதிரொலியிடும்படி செய்துகொண்டு பாசறையைக்குறித்துச் சென்றார்கள். பரதகுலத்திற்பிறந்தவரே! பிறகு சூரியன்மறைந்து ஸந்தியாகாலம்வரவே, உமது சேனைகளுக்கும் அந்தப்பாண்டவவீரர்களுக்கும் யுத்தம் நின்றுவிட்டது.

இரண்டாவதுநாள் யுத்தம் முடிந்தது.



## ஐம்பத்தாறுவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(இருதிறத்துச்சேனைகளும் அணிவகுக்கப்பட்டது.)

பாரதரே! இரவுமுடிந்தவுடனே சந்தனுபுத்திரரானபீஷ்மர் அப்பொழுது திரும்பவும் யுத்தத்திற்காகப்புறப்படும்படி சேனைகளைக் கட்டளையிட்டார். கௌரவர்களுக்கெல்லாம்பிதாமஹரும் சந்தனுபுத்திரருமானபீஷ்மர் அப்பொழுது உம்முடையபுத்திரர்களுக்குஜயத்தை விரும்பிப் பெரிதானகருடவ்யூகத்தை ஏற்படுத்தினார். உமதுபிதாவானபீஷ்மர் தாம் அந்தவ்யூககருடனுடையமுகத்தில் நின்றார்; த்ரோணரும் ஸாத்வதனான கிருதவர்மாவும் இரண்டுகண்களானார்கள்; கீர்த்திசாலிகளான அஸ்வத்தாமாவும் கிருபரும் தலையானார்கள். ஐயா! பிறகு யுத்தத்தில் த்ரிகர்த்தர்களோடும் கேகயர்களோடும் வாடதானர்களோடுங்கூடின பூரிஸ்ரவஸ், சலன், சல்யன், பகதத்தன், மத்ரகர்கள், ஸைந்தவர்கள், ஸௌவீரர்கள், பஞ்சநதர்கள் ஆகியஇவர்கள் ஜயத்ரதனோடும் கூட (அந்தவ்யூகத்தின்) கழுத்தில் அமர்த்தப்பெற்றனர். துரியோதன

ராஜன் பரிவாரங்களோடுகூடின ஸஹோதரர்களால் சூழப்பெற்று (வ்யூஹத்தின்) பின்புறத்திலிருந்தான். மஹாராஜரே! அவந்திதேசத் தாசர்களாகியவிந்தானுவிந்தர்களும் சகர்களோடுகூடியகாம்போஜனும் சூரஸேனர்களும் (அதன்) வாலானார்கள். கவசம்பூண்டமாகதர்களும் களிங்கர்களும் தாஸேரகர்களின்கூட்டங்களோடு வியூஹத்தின்வலப் புறத்தை அடைந்திருந்தார்கள். காகரூசர்களும் விகுஞ்சர்களும் முண் டர்களும் குண்டீவ்ருஷர்களும் பிருகத்பலனோடுகூடி அதற்குஇடப் புறத்தில் நின்றார்கள். அந்தக்கௌரவசேனை அணிவகுக்கப்பட்டது கண்டு பகைவர்களைவருத்துபவனான ஸவ்யஸாசி த்ருஷ்டத்யும்னனோடு யுத்தகளத்தில் தன்ஸைனியத்தைஎதிரணிவகுத்தான். பீமஸேனன் பற்பலஆயுதத்திரள்களோடுகூடியவர்களும் பற்பலதேசங்களில்தோன் றியவர்களுமான அரசர்களால்சூழப்பட்டு, அர்த்தசந்திரவடிவமாக அணிவகுக்கப்பட்டு அதிபயங்கரமாயிருக்கின்றஅதன்வலப்பக்கத்துக் கொம்பையடைந்து பிரகாசித்தான். அவனுக்குப்பின்புறத்தில் விராட னும் மகாரதனான துருபதனும் இருந்தனர். அவர்களுக்குப்பின் நீலன் கறுத்தஆயுதங்களுள்ள வீரர்களுடன் நின்றான். மிக்கபலவானான திரு ஷ்டகேது நீலனை அடுத்துநின்றான். பாரதரே! சேதிதேசத்துவீரர்க ளாலும் காசியர்களாலும் கரூஷர்களாலும் பௌரவர்களாலும் சூழப்பட்டதிருஷ்டத்யும்னன், சிகண்டி, பாஞ்சாலர்கள், பிரபத்ர கர்கள் ஆகியஇவர்கள் பெரியசேனையின் மத்தியத்தில் யுத்தம் செய்ய நின்றார்கள். அவ்விடத்திலேயே தர்மராஜரும் யானைப் படையால் சூழப்பட்டு நின்றார். மன்னரே! பிறகு ஸாத்யகியும் த்ரௌபதிபுத்ரர்களைவரும் பின்புறத்தில் நின்றார்கள். அவர்களுக்குப் பின்புறத்தில் சூரனானஅபிமன்யு இருந்தான். அவனுக்கப்புறத்தில் இராவான் நின்றான். மஹாராஜரே! அவனுக்குமப்புறத்தில் பீமஸே னனுடையகுமாரனும் மகாரதர்களானகேகயவீரர்களுமாகியஎல்லோ ரும் அதன் இடவிலாப்புறத்தை அடுத்துநின்றார்கள். எல்லாஉலகங் களையும்ரக்ஷிக்கின்றவரானஜனார்த்தனரைரக்ஷகராகவுடையவனும் ரதி கர்களுள்சிரேஷ்டனுமான அந்தஅர்ஜுனன் அந்தவ்யூகசந்திரனு டையஇடக்கொம்பில் நின்றான். உம்முடையபுத்திரர்களைக்கொல்வ தின்பொருட்டு அந்தக்கக்ஷியில்சேர்ந்துகொண்டவர்களும் பாண்ட வர்களும் இவ்வாறானஇந்தப்பெரியஎதிரணியை அமைத்தார்கள். பிறகு ஒருவரையொருவர்கொல்லுகின்றவர்களான உம்மைச்சேர்ந்தபடையி லுள்ளவர்களுக்கும் மற்றவர்களுக்கும் ஒருவரைஒருவர் எதிர்க்கிற தேராளிகளுடனும் யானைகளுடனுங்கூடினபோர் நடக்கஆரம்பித்தது.

அரசரே! பரஸ்பரம்கொல்லுகிற அந்தக்குதிரைக்கூட்டங்களும் தேராளிகளுடையகூட்டங்களும் ஆங்காங்கு விழுகின்றவைகளாகக் காணப்பட்டன. ஓடுகின்றவைகளும் தனித்தனியாகஇடித்துக்கொள்ளுகின்றவைகளுமான ரதக்கூட்டங்களுடைய நெருங்கினஒலியானது துந்துபிவாத்யங்களினுடையசப்தங்களோடுசேர்ந்துஒலித்தது. பரதகுலத்தில்உதித்தவரே! உம்முடையபடைவீரர்களுக்கும் அவர்களுக்கும்நடந்த மிக்ககைகலந்தயுத்தத்தில் ஒருவரையொருவர்கொல்லுகின்றவர்களான வீரர்களுடையமுழக்கமானது ஆகாயத்தைஅளாவியது.

---

## ஐம்பத்தேழாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தவர்ண்ணனம்.)

பாரதரே! பிறகு உம்முடையபடைகளும் மற்றவர்களுடையபடைகளும்அணிவகுக்கப்பட்டிருக்கும்பொழுது தனஞ்சயன் உமது தேராளிகளுடையபடையைக் கொன்றான். அதிரதனான அந்தத் தனஞ்சயன் யுத்தத்தில் தேர்ப்படையை அம்புகளால் பிளந்தான். யுகம்முடியுங்காலத்துக் காலன்போன்ற அர்ஜுனனால் கொல்லப்படுகின்ற அந்தக்கௌரவர்கள் யுத்தத்தில்முயற்சியுடனே பாண்டவர்களையெதிர்த்துப் போர்புரிந்தார்கள். அவர்கள் பிரகாசமானகீர்த்தியைவிரும்பி மிருத்யுவே யுத்தத்தினின்று நிவிர்த்திப்பதற்குக் காரணமென்றுஎண்ணி ஒரேமனத்துடன் பாண்டவர்களுடைய ஸேனையைப் பலவாறாக நாசம்செய்தார்கள். அவர்களும் யுத்தத்தில் (பகைவர்களை) நன்றாய் எதிர்த்தார்கள். ஓடுகின்றவர்களும் அடிக்கப்பட்டவர்களும் நாற்புறங்களிலும் சுற்றிவருகின்றவர்களுமான பாண்டவர்களாலும் கௌரவர்களாலும் ஒன்றுமே அறியப்படவில்லை. அந்தத்தருணத்தில் சூரியனைமறைக்கும்பெரும்புழுதி யுத்தபூமியினின்றும் மேலேஎழுந்தது. அந்தயுத்தபூமியில் ஒருங்குகூடியிருக்கின்றவீரர்கள் திசைகளையாவது திசைக்கோணங்களையாவது அறியவில்லை. அரசரே! யுத்தத்தில் த்வஜமுதலானஅடையாளத்தினாலும் ஸங்கேதங்களாலும் பெயர்களாலும் கோத்திரங்களாலும் ஒருவரையொருவர்தெரிந்துகொண்ட வீரர்களுக்கு அப்பொழுது ஆங்காங்கு யுத்தம் நடந்தது. ஸத்யஸந்தரானத்ரோணராலேகாக்கப்பட்ட கௌரவவ்யூகமானது அந்தயுத்தத்தில் எவ்விதத்தாலும் உடைக்க

முடியவில்லை. அவ்வாறே ஸவ்யஸாசியினாலும் பீமனாலும் நன்றாகப் பாதுகாக்கப்பட்ட பாண்டவர்களுடையபெரியவ்யூகமானது (கௌரவர்களால்) எவ்விதத்தாலும் உடைக்கப்படவில்லை. அந்தயுத்தத்தில் இரண்டுபடைகளிலும் ஒன்றோடொன்று எதிர்த்துப்போர்புரிகின்ற ரதங்களையும் யானைகளையுமுடையவர்களான யுத்தவீரர்கள் படைமுகத்தினின்றும் வெளியில்வந்துதாக்கி நன்றாகப் போர்புரிந்தார்கள். பெரும்போரில் குதிரைக்காரர்கள் பளபளப்பானரிஷ்டிகளாலும் ஈட்டிகளாலும் [1] குதிரைவீரர்களால் (குத்திக்) கீழேதள்ளப்பட்டார்கள். அதிபயங்கரமான அந்தயுத்தத்தில் தேராளி தேராளியைஎதிர்த்துப் பொன்னாலலங்கரிக்கப்பட்டஅம்புகளாலே யுத்தபூமியில் அடித்துத் தள்ளினான். உமதுபடையிலும் சத்துருவின்படையிலுமுள்ள யானையின்மீதுள்ளவர்கள் எதிர்த்துப்போர்புரிகின்றயானைக்காரர்களை நாராசங்களாலும் பாணங்களாலும் தோமரங்களாலும் நான்குபக்கத்திலும் தள்ளினார்கள். ஒருவன் போரில் பாய்ந்து உத்தமமானயானையின்மீதேறி (அதிலிருப்பவனுடைய) தலைமயிரைக் கையால்பிடித்துத் தலையை [2] அறுத்தான். யானையினுடையகொம்புமுனையினால் மார்பு பிளக்கப்பட்டமற்றவீரர்கள் யுத்தத்தில் எல்லாப்பக்கங்களிலும் பெருமூச்சுவிட்டுக்கொண்டே உதிரத்தைக்கக்கினார்கள். யானையினுடைய கொம்பிலிருக்கின்றவனும் யுத்தத்தில்ஸமர்த்தனுமான ஒருவீரன் கஜசிக்ஷையையும் அஸ்திரங்களையும் அறிந்தஒருவீரனாலே சக்தியினால் பிளக்கப்பட்டு அதிகநடுக்கமுற்றான். ஒன்றற்கொன்றுதீங்கிழைப்பனவான காலாட்கூட்டங்கள் போரில் மிகுந்தஊக்கத்துடன் பிண்டிபாலங்களாலும் கோடாலிகளாலும் காலாட்களைவீழ்த்தின. பாரதர்களிற் சிறந்தவரே! யுத்தத்தில் இரண்டுசேனைகளிலும், தேராளியும், கஜயூதபதியைஅடைந்து அதனை நாசம்செய்தான். யானைக்காரனும் ரதிகர்களுள்சிறந்தவனை அடித்துக் கீழேதள்ளினான். குதிரைமீதுள்ளவன் ஈட்டியினால் ரதிகனைக் கீழேதள்ளினான். ரதிகனும் குதிரைமீதுள்ளவனைப் போரில் தள்ளினான். காலாள் தேராளியையும், தேராளி காலாளையும் கூர்மையானசஸ்திரங்களாலே அடித்துத் தள்ளினார்கள்; யானையின்மீதுள்ளவர்கள் குதிரையின்மீதுள்ளவர்களைத் தள்ளினார்கள்; அப்பொழுது குதிரையின்மீதுள்ளவர்கள் யானையின்மீதுள்ளவர்களைக் கீழேதள்ளினார்கள். அது ஆச்சரியமா

---

[1] கூறியதுகூறலால் ஒருசொல் விடப்பட்டது.

[2] ஒருசொல் விடப்பட்டது.

யிருந்தது. யானையின்மீதுள்ள உத்தமவீரர்களாலே ஆங்காங்கு காலாட்கள் தள்ளப்பட்டவர்களாகக் காணப்பட்டார்கள். அவர்களா லும், யானையின்மீதேறியுத்தம்செய்பவர்கள் தள்ளப்பட்டவர்களாகக் காணப்பட்டார்கள். குதிரைக்காரர்களாலே காலாட்கூட்டங்களும், காலாட்களாலே குதிரைக்காரர்களுடையகூட்டங்களும், நூறுநூறாக வும் ஆயிரமாயிரமாகவும் தள்ளப்பட்டவைகளாகக் காணப்பட்டன. பரதசிரேஷ்டரே! முறித்துத்தள்ளப்பட்டிருக்கின்ற கொடிமரங்களா லும் விற்களாலும் தோமரங்களாலும் ஈட்டிகளாலும் கதாயுதங்க ளாலும் பரிகங்களாலும் கம்பனங்களாலும் சக்திகளாலும் சித்ர மானகவசங்களாலும் கணபங்களாலும் அங்குசங்களாலும் நிர்மல மாயிருக்கின்றபட்டாக்கத்திகளாலும் பொற்கட்டுகளுள்ள அம்புகளா லும் பெரியசித்திரகம்பளங்களாலும் சிறியகம்பளங்களாலும் மிக்க விலைபொருந்திய ஆட்டுரோமகம்பளங்களாலும் அந்தயுத்தபூமியானது விசித்திரமானமாலைகளாலே சித்திரிக்கப்பட்டதுபோல் விளங்கியது. மகாயுத்தத்தில் மாம்ஸத்தினாலும் ரக்தத்தினாலும்சேறுள்ளதான யுத்த பூமியானது கீழேவீழ்ந்திருக்கின்ற மனிதர்களுடையதேகங்களாலும், குதிரைகளினுடையஉடல்களாலும் யானைகளின்சரீரங்களாலும், நாடுவ தற்குஇயலாததாகியது. யுத்தபூமியில்உண்டானபுழுதியானது யுத்தத் திலுண்டானரக்தங்களால் நன்றாகநனைக்கப்பட்டுத்தணிந்தது. எல்லாத் திசைகளும் மாசற்றவையாயின. பாரதரே! எண்ணிறந்ததலையில்லா முண்டங்கள் உலகத்தினுடையவிநாசத்திற்கு அறிகுறியாக நான்கு பக்கங்களிலும் எழுந்து கூத்தாடின. மிகக்கொடிதும் அச்சத்தைத் தருவதுமான அந்தயுத்தம் நடக்குமளவில் ரதிகர்கள் நாற்புறங்களி லும் ஓடுகின்றவர்களாகக் காணப்பட்டார்கள். பிறகு ஸிம்மத்திற் கொப்பானபராக்ரமமுள்ளவர்களும் யுத்தத்தில் ஒருவராலும்ஜயிக்க முடியாதவர்களுமானபீஷ்மரும் துரோணரும் ஸிந்துதேசாதிபதியான ஜயத்ரதனும் புருமித்திரனும் ஜயனும் போஜனும் சகுனியுடன்கூ டினசல்யனும் அடிக்கடி பாண்டவர்களுடையபடைகளை நாசம்செய் தார்கள். அவ்வாறே பீமஸேனனும், ராக்ஷஸனானகடோத்கசனும் ஸாத்யகியும் சேகிதானனும் திரௌபதிபுத்திரர்களும் எல்லாஅர சர்களோடுங்கூடின உம்மைச்சேர்ந்தவர்களையும் உமதுபுத்திரர்களை யும் யுத்தரங்கத்தில் தேவர்கள் அஸுரர்களைத்துரத்தியதுபோலத் துரத்தினார்கள். அவ்வாறே யுத்தத்தில் ஒருவரையொருவர் அடித் துக்கொள்ளும் க்ஷத்திரியசிரேஷ்டர்கள் ரக்தத்தால்நனைக்கப்பட்டவர்க ளாகவும் கோரரூபிகளாகவும் அசுரர்கள்போல் விளங்கினார்கள். இரு

திறத்துச்சேனைகளிலுமுள்ள பிரதானவீரர்கள் சத்துருக்களைஜயித்து ஆகாயத்தில் விளங்கும்கிரகங்கள்போலக் காணப்பட்டார்கள். பிறகு உமதுபுத்திரனான துரியோதனன் ஆயிரம்ரதங்களோடு யுத்தத்தில் பாண்டுபுத்திரனானபீமஸேனனையும் ராக்ஷஸனான கடோத்கசனையும் எதிர்த்தான். அவ்வாறே பாண்டவர்கள் அனைவரும் பெரியசேனையுடன் யுத்தத்தில்முயற்சியுள்ளவர்களும் சத்துருக்களை அழிப்பவர்களுமான துரோணரையும் பீஷ்மரையும் எதிர்த்தார்கள். அர்ஜுனன் கோபங்கொண்டு சிறந்த அரசர்களை நான்குபக்கங்களிலும் எதிர்த்தான். அர்ஜுனகுமாரனும், ஸாத்யகியும் ஸௌபலனான சகுனியினுடையஸைனியத்தை எதிர்த்துச்சென்றார்கள். பிறகு யுத்தத்தில் விஜயத்தைவிரும்புகின்றவர்களானஉம்மைச்சேர்ந்தவர்களுக்கும், பிறருக்கும் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணக்கூடிய யுத்தமானது மறுபடியும் நடந்தது.

---

## ஐம்பத்தெட்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன்முதலானவீரர்களுடையயுத்தம்.)

பிறகு, கோபங்கொண்டவர்களான அந்தஅரசர்களும் யுத்தத்தில் பல்குனனைப்பார்த்து அனேகஆயிரக்கணக்கான ரதங்களோடு நான்குபக்கங்களிலும் சுற்றிக்கொண்டார்கள். பாரதரே! பிறகு அந்தவீரர்கள் அனைவரும் அந்தஅர்ஜுனனைத் தேர்க்கூட்டத்தால் சூழ்ந்துகொண்டு அனேகஆயிரக்கணக்கான அம்புகளால் எப்பக்கத்திலும் தடுத்தார்கள். கோபங்கொண்ட கௌரவவீரர்கள் பல்குனனுடையரதத்தைக்குறிவைத்துப் பளபளப்புங்கூர்மையுமுள்ள சக்திகளையும் கதாயுதங்களையும் பரிகங்களையும் ஈட்டிகளையும் கோடாலிகளையும் முத்கரங்களையும் உலக்கைகளையும் எறிந்தார்கள். விட்டிற்பூச்சிகளுடைய கூட்டத்தைப்போலவருகின்ற அந்தச்சஸ்திரவர்ஷத்தைப் பார்த்தன் பொன்னலலங்கரிக்கப்பட்ட அம்புகளாலே நாற்புறங்களிலும் தடுத்தான். அந்தயுத்தகளத்தில் மனிதர்களுடையவல்லமைக்கு மேற்பட்டிருக்கின்ற அர்ஜுனனுடைய அந்தத்திறமையைக்கண்டு, அவனை, தேவர்களும் அஸுரர்களும் கந்தர்வர்களும் பிசாசர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும், 'நல்லது நல்லது' என்று புகழ்ந்தார்கள். ஸாத்யகியும் அபிமன்யுவுமாகியஇருவரும் பெரிதானஸேனையினால்

சூழப்பட்டுச் சகுனியுடன்கூடின சூரர்களான காந்தாரவீரர்களை யுத்தத்தில் எதிர்த்தார்கள். அந்தயுத்தத்தில் சகுனியைச்சேர்ந்தவீரர்கள் கோபங்கொண்டு பற்பலஆயுதங்களாலே விருஷ்ணிகுலத்தில்தோன்றியஸாத்யகியினுடையசிறந்ததேரை எள்ளளவுஎள்ளளவாகக் கோபத்தால் வெட்டியெறிந்தார்கள். பகைவர்களைவருத்துகிறவனான ஸாத்யகியோ பயங்கரமானயுத்தம்நடந்துவரும்தருணத்தில் தனதுதேரை இழந்து அபிமன்யுவினுடையதேரில் விரைவாக ஏறினான். ஒரேரதத்தின்மீதேறியவர்களான அவ்விருவரும் ஸௌபலனுடையசேனையை அமிழ்ந்தகணுக்களுள்ள கூர்மையான அம்புகளாலே விரைவாக நாசம் செய்தார்கள். அந்தயுத்தத்தில் முயற்சியுடையவர்களான துரோணர் பீஷ்மர்இருவரும், கூர்மையுள்ளவைகளும் கழுகுஇறகுகள்பூண்டவைகளுமானஅம்புகளாலே தர்மராஜருடையஸேனையை நாசஞ் செய்தார்கள். பிறகு, ராஜாவானதர்மநந்தனரும் மாத்ரீபுத்திரர்களானநகுலஸகதேவர்களும், சேனையிலுள்ளவர்களனைவரும்பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே துரோணருடையபடையைநோக்கி எதிர்த்து அருகில்சென்றார்கள். முற்காலத்தில் அதிபயங்கரமான தேவாஸுரயுத்தம்நடந்ததுபோல மயிர்சிலிர்க்கச்செய்வதும், மிகப்பெரியதும், கைகலந்ததுமானயுத்தமானது நடந்தேறியது. பீமஸேனன் கடோத்கசன் இவ்விருவரும் மிகவும்பெரிதானகாரியத்தைச் செய்தார்கள். பிறகு, துரியோதனன் அவ்விருவரையும் எதிர்த்து வந்து தடுத்தான். பாரதரே! கடோத்கசன், பிதாவானபீமஸேனனைக்காட்டிலும் மேலாகப் போர்புரிந்தான். ஆச்சரியகரமான ஹிடிம்பாபுத்ரனுடைய அந்தப்பராக்கிரமத்தை நாங்கள் அந்தயுத்தத்தில் கண்டோம். பாண்டுபுத்திரனானபீமஸேனனோ மிக்ககோபங்கொண்டு அட்டஹாஸஞ்செய்து ரோஷமுள்ளதுரியோதனனை ஒருபாணத்தால் மார்பிலடித்தான். பிறகு துரியோதனராஜன் வலிமைபொருந்திய அந்தஅடியினாலே துன்பமடைந்து ரதத்தின்மத்தியில் உட்கார்ந்தான்; மூர்ச்சையுமடைந்தான். அரசரே! துரியோதனன் பிரஜ்ஞையிழந்ததைஅறிந்து அவனுடையஸாரதியானவன் மிகவிரைவாக அவனைப் போர்க்களத்தினின்று வேறிடத்திற்குக்கொண்டுபோனான். பிறகு சேனையானது முறியஅடிக்கப்பட்டது. பிறகு நான்குபக்கங்களிலும் ஓடும் அந்தக்கௌரவசேனையைப் பீமன் கூர்மையுள்ளஅம்புளால் அடித்துக்கொண்டு அதன்பின்புறத்தில் அதனுடன்கூடவே ஓடினான். துரோணரும் காங்கேயரும் அந்தச்சேனையைப் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, தேராளிகளுள் சிறந்தவனான த்ருஷ்டத்யும்ன

னும், பாண்டுபுத்திரரானதர்மநந்தனரும் பகைவர்களுடையபடையை அழிக்குந்திறமைபொருந்திய கூர்மையுள்ளபாணங்களால் அடித்தார்கள். ஓடுகின்ற உமதுபுத்திரனைச்சேர்ந்த அந்தச்சேனையை மகாரதர்களானபீஷ்மரும் துரோணரும் தடுப்பதற்குச் சக்தியுள்ளவர்களாகவில்லை. பீஷ்மராலும் மிக்கபலசாலியான துரோணராலும் தடுக்கப்படுகின்றஅந்தச்சேனையானது அவ்விருவரும்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஓடிக்கொண்டேயிருந்தது. பிறகு ஆங்காங்கு ரதிகர்கள் ஆயிரக்கணக்காகஓடும்பொழுது ஒரேரதத்தின்மீதேறியிருக்கின்ற அபிமன்யுஸாத்யகி இருவரும் யுத்தத்தில் சகுனியினுடையசேனையை நான்குபுறத்திலும் நாசஞ்செய்தார்கள். அப்பொழுது அந்தஸாத்யகி அபிமன்யுஇருவரும், அமாவாஸ்யைதிதியைஅடைந்து ஆகாயத்தில் சந்திரசூரியர்களிருவரும் விளங்குவதுபோலவிளங்கினர். வேந்தரே! அர்ஜுனனோ பிறகு கோபமுற்று மேகமானது நீர்த்தாரைகளைப்பொழிவதுபோல உம்முடையசேனையின்மீது சரமாரியைப்பொழிந்தான். பிறகு, அந்தயுத்தத்தில் பார்த்தனுடையஅம்புகளால் வதம்செய்யப்படும் கௌரவசேனையானது துக்கத்தினாலும் பயத்தாலும் நடுக்கமுற்று ஓடியது. அந்தச்சேனைகள் ஓடுவதைக்கண்டு துரியோதனனுக்குநன்மையைச்செய்வதில் விருப்பமுள்ளவர்களும் மகாரதர்களுமான பீஷ்மரும் துரோணரும் பரபரப்புடன்தடுத்தார்கள். பிறகு அரசனை துரியோதனன் தேறுதல்அடைந்து நான்குபக்கத்திலும்ஓடுகின்ற அந்தஸைனியத்தைத் திருப்பினான். பாரதரே! க்ஷத்திரியர்களுள் மகாரதர்களான எவரெவர்கள் எந்தஎந்தஇடத்தில் உமதுகுமாரனைப் பார்த்தார்களோ அவரவர்கள் அந்தஅந்தஇடத்தில் திரும்பினார்கள். திரும்பினவர்களான அந்தவீரர்களைக்கண்ணுற்று அவர்களைக்காட்டிலும்வேறாயிருக்கின்ற மற்றஜனங்களும் அன்யோன்யம் பகையோடும் லஜ்ஜையோடுமிருந்தார்கள். அரசரே! சந்திரோதயகாலத்தில் விருத்தியடைகின்றகடலினுடையவேகம்போல மறுபடியும்மீண்டுவருகின்ற அவர்களுக்கு வேகமுண்டாயிற்று. ராஜாவான துரியோதனன் யுத்தத்தில் அவர்கள் திரும்பிவருவதைப்பார்த்து விரைவாகச் சந்தனுகுமாரரான பீஷ்மரையடைந்து, 'பாரதரே! பிதாமஹரே! நான் உம்மிடம் ஒன்று சொல்லுகிறேன்; அதனை நீர் தெரிந்துகொள்ளும். கௌரவரே! நீரும், அஸ்த்ரங்களையறிந்தவர்களுள் உத்தமரும் புத்திரரையும் மித்திரவர்க்கங்களையுமுடையவருமான துரோணரும், மகாவில்லாளியான கிருபரும் ஜீவித்திருக்கும்பொழுதே சேனை ஓடுகிறதென்பதை நான் தக்கதென்று எண்ணவில்லை. யுத்தத்தில் உமக்கும்

துரோணருக்கும் துரோணபுத்திரருக்கும் கிருபருக்கும் எவ்விதத்தாலும் பாண்டவர்கள் தகுந்தஎதிராளிகளென்று நான்எண்ணவில்லை. பிதாமஹரே! வீரரே! பாண்டவர்களாலே இந்தச்சேனை கொல்லப்படுவதை நீர்பொறுத்துக்கொண்டிருத்தலால் அவர்களிடத்து அருளுள்ளவராகிறீர். இது நிச்சயம். அரசரே! முன்னரே சேர்ந்துஆலோசிக்குங்காலத்தில், 'யுத்தத்தில் பாண்டவர்களையும் த்ருஷ்டத்யும்னனையும் ஸாத்யகியையும் நான் எதிர்த்துப் போர்புரியேன்' என்று நீங்கள் எனக்குச் சொல்லியிருக்கவேண்டும். தேவரீர், ஆசாரியர், கிருபர் ஆகியஉங்களுடையவார்த்தையைக்கேட்டன்றோ கர்ணனோடுசேர்ந்து செய்யவேண்டியகாரியத்தைப்பற்றி அப்பொழுதே நான் ஆலோசித்திருக்கிறேன். புருஷசிரேஷ்டர்களே! உங்களிருவராலும் இந்தயுத்தத்தில் நான் கைவிடத்தகாதவனாயின் தக்கவல்லமையோடு நீங்கள் போர்புரியவேண்டும்' என்றுசொன்னான். பீஷ்மர் இந்தவார்த்தையைக் கேட்டு அடிக்கடி மிகநகைத்துக் கோபத்தினால் இரண்டுகண்களையும் புரட்டிவிழித்து உம்முடையபுத்திரனைப்பார்த்து, 'அரசனே! யுத்தத்தில் பாண்டவர்கள் இந்திரனுடன்கூடினதேவர்களாலும் ஜயிக்கத்தகாதவர்களென்று பலவாறாக உண்மையாயும் ஹிதமாயுமுள்ளவார்த்தையை நான் உனக்குக் கூறியிருக்கிறேன். பிராயமுதிர்ந்தவனும் வாழ்நாட்கள்சென்றவனுமானஎன்னாலே எது இப்பொழுது செய்ய முடியுமோ அதை என்சக்திக்குத்தக்கபடி செய்யவேபோகிறேன். நீ பந்துக்களுடன் இப்பொழுது பார். அப்படிப்பட்டயான் எல்லா ஜனங்களும்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஒருவனாயிருந்து கொண்டு ஸைனியங்களுடன்கூடினபாண்டவர்களைப் பந்துக்களுடன் கூட இப்பொழுது தடுக்கப்போகிறேன்" என்றுகூறினார். பீஷ்மர் இவ்வாறுசொல்லியவுடன் உமதுபுத்திரர்கள் ஸந்தோஷத்தோடு சங்கங்களையூதினார்கள்; பேரிகைகளையும் மிகவும்அடித்தார்கள். வேந்தரே! பிறகு பாண்டவர்கள் பெரிதானஅந்தமுழக்கத்தைக்கேட்டுச் சங்கங்களையூதினார்கள்; பேரிகைகளையும் முரசங்களையும் அடித்தார்கள்" என்றுகூறினான்.

---

## ஐம்பத்தோன்பதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(தமதுபிரதிஜ்ஞையைமீறிக் கண்ணபிரான் பீஷ்மரைக்கோல்லச்சென்றதும், அர்ஜுனன்தடுத்ததும்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பயங்கரமான அப்படிப்பட்டயுத்தமானது பீஷ்மராலேபிரதிஜ்ஞைபண்ணப்பட்டவளவில், அதிகதுக்கத்தையடைந்திருக்கின்ற என்புத்திரனாலே கோபமூட்டப்பட்டபீஷ்மர் அந்தயுத்தத்தில் பாண்டவவீரர்களின்விஷயத்தில் யாதுசெய்தார்? [1] அல்லது பாஞ்சாலர்களாவது பிதாமஹரானபீஷ்மர்விஷயத்தில் யாதுசெய்தனர்? அதை எனக்குச் சொல்" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பாரதரே! அன்றைக்குப் பெரும்பான்மையாக முற்பகல்சென்று சூரியனும் மேற்றிசையை அடைந்து மகாத்மாக்களான பாண்டவர்களும் ஜயம்பெற்று மகிழ்ந்திருக்கையில் எல்லாத்தர்மவிசேஷங்களையுமறிந்தவரான உம்முடையபிதாவானபீஷ்மர் பெரியசேனையினாலும் உமதுபுத்திரர்களாலும் நான்குபக்கங்களிலும்ரக்ஷிக்கப்பட்டு வேகமுள்ளகுதிரைகளோடு பாண்டவர்களுடையசேனையை எதிர்த்துச்சென்றார். பாரதரே! பிறகு உமது அநீதியினாலே நமக்குப் பாண்டவர்களுடன் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணக்கூடிய கைகலந்த போர் நடக்கஆரம்பித்தது. அந்தயுத்தத்தில் சப்திக்கின்றவிற்கள் அடிக்கப்படுகின்றகையுறைகள்இவற்றின் பெரியசப்தமானது பிளக்கப்படுகின்றமலைகளினுடையசப்தம்போலத் தோன்றியது. அந்த யுத்தரங்கத்தில் நாற்புறங்களிலும், 'நில்; நிற்கிறேன்; இவனைத்தெரிந்துகொள்; திரும்பு; உறுதியாகநில்; உறுதியாயிருக்கிறேன்; அடி' என்கிற சப்தம் கேட்கப்பட்டது. கீழேவிழுகின்றபொன்மயமானகவசங்களிலும் கிரீடங்களிலும் கொடிமரங்களிலும், மலைகளின்மீது கற்கள்வீழ்ந்தால் எவ்விதமானசப்தம் உண்டாகுமோ அவ்விதசப்தம் உண்டாயிற்று. பிறகு நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் விழுகின்ற தலைகளும் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றகைகளும் பூமியைஅடைந்து துடித்தன. சிலபுருஷசிரேஷ்டர்களின்தலைகள் அறுக்கப்பட்டன. சிலர் விற்களைக்கையில்எடுத்தும் மற்றஆயுதங்களைஏந்தியும் நின்றார்கள். பின்பு, உத்தமமானகுதிரைகள் மனிதர்கள் யானைகள் இவைகளினுடைய சரீரத்

[1] பொருந்தாமையால் ஒருசொல் விடப்பட்டது.

தினின்றுஉண்டாகியதும் யானைகளுடைய அங்கங்களாகிறகற்களையுடையதும் பயங்கரமானதும் மாம்ஸங்களாலும்ரக்தங்களாலும் சேறுள்ளதும் பரலோகமாகிறஸமுத்திரத்தைநோக்கிச்செல்லுகின்றதும் கழுகுகளையும் நரிகளையும்ஆனந்திக்கச்செய்கின்றதும் மிக்கவேகமுள்ளதும் உதிரவெள்ளம்பெருகுகின்றதுமான ஒருநதியானது ஓடஆரம்பித்தது. பரதகுலத்திற்பிறந்தமன்னவரே! உமதுபுத்திரர்களுக்கும் பாண்டவர்களுக்கும் நடந்ததுபோன்றயுத்தம் ஜனங்களாலே பார்க்கப்பட்டதுமில்லை; கேட்கப்பட்டதுமில்லை. அந்தயுத்தத்தில் தள்ளப்பட்டிருக்கிறபோர்வீரர்களாலும் மலையின்கொடுமுடிகள்போலவிழுந்திருக்கின்ற கறுத்தயானைகளாலும் சூழப்பட்ட அந்தயுத்தபூமியில் ரதம்செல்வதற்கு வழியேயில்லை. இறைந்திருக்கின்ற அழகியகவசங்களாலும் தலைப்பாகைகளாலும் அந்தப்போர்க்களம் சரத்காலத்திலுள்ளஆகாயம்போல விளங்கியது. கொழுப்புள்ளவர்களும் அம்புகளால்அதிகமாகப்பிளக்கப்பட்டவர்களுமானசிலர் (வெளியில்வந்திருக்கின்ற) நரம்புக்குவியல்களை நன்றாகஇழுத்துக்கொண்டே பயமற்றவர்களாக யுத்தத்தில் பகைவர்களை எதிர்த்துச்சென்றார்கள். அந்தயுத்தத்தில் விழுகின்றமற்றவர்கள், 'ஐயா! சகோதர! மித்திர! பந்துவே! என்சினேகித! மாமா! என்னைவிடாதே' என்றுகூச்சலிட்டனர். இன்னும்மற்றவர்கள், 'என்னை எதிர்த்துவா. நீ இங்குவா. ஏன் பயப்படுகிறாய்? எங்கு நீ செல்வாய்? நான் இதோ இருக்கிறேன். யுத்தத்தில் நீ பயப்படாதே' என்று கூச்சலிட்டார்கள். அந்தயுத்தத்தில் எப்பொழுதும் மண்டலாகாரமானவில்லையேந்தியவரும் சந்தனுகுமாரருமானபீஷ்மர் பற்களில்விஷமுள்ளஸர்ப்பங்கள்போல விளங்குகின்றமுனையுள்ள அம்புகளைத் தொடுத்தார். பரதசிரேஷ்டரே! கடுமையானவிரதத்தையுடையபீஷ்மர் எல்லாத்திக்குக்களையும் அம்புகளால் ஒரேவழியாகச் செய்துகொண்டு பாண்டவர்களின்தேராளிகளைக் குறிவைத்துக் கொன்றார். அந்தப்பீஷ்மர் ரதமத்தியத்தில் நர்த்தனம்செய்கின்றவராகவும் கையின்தேர்ச்சியைக்காண்பிக்கின்றவராகவும் கொள்ளிவட்டம்போல ஆங்காங்கு காணப்பட்டார். யுத்தத்தில் ஸ்ருஞ்சயர்களுடன்கூடினபாண்டவர்கள் சூரரானஅந்தப்பீஷ்மர்ஒருவரை லாகவத்தினால் அனேகலக்ஷம்பீஷ்மராகக் கண்டார்கள். அந்தயுத்தத்தில் பீஷ்மரை மாயையினாலேஉண்டுபண்ணப்பட்டஉருவங்களையுடையவர்போலவே எல்லாஜனங்களும் எண்ணினார்கள். ஜனங்கள் அந்தப்பீஷ்மரைக் கிழக்குத்திக்கிலும்கண்டு மேற்குத்திசையிலும் கண்டனர்; பிரபுவே! அவ்வாறே வடக்குத்திக்கிலுங்கண்டு மீண்டும் தெற்குத்திக்கிலும்

கண்டார்கள். சூரரான அந்தக்காங்கேயர் இவ்வாருக யுத்தத்தில் காணப்பட்டார். பாண்டவர்களைச்சேர்ந்தவர்களுள்ஒருவனுவது இவரைப்பார்ப்பதற்குச் சக்தியுள்ளவனுகவில்லை. பலகணைகள் பீஷ்மருடையவில்லினின்றுவிடுபட்டுவருவதைமட்டுமே பாண்டவர்கள் கண்டார்கள். யுத்தத்தில் செய்யத்தக்கதைச்செய்கின்றவரும் ஸேனையையழிப்பவரும் அமானுஷரூபத்தோடுஸஞ்சரிப்பவரும் உம்முடைய பிதாவுமானபீஷ்மரைப்பார்த்து, அந்தயுத்தத்தில் பலவிதமானமனிதர்கள் அதிகமாகக் கூச்சலிட்டார்கள். அரசர்கள் தெய்வத்தால்தூண்டப்பட்டு (பகைவர்களை) நோக்கி மிக்ககோபங்கொண்டிருக்கின்ற அக்னிபோன்றபீஷ்மர்மீது விட்டில்பூச்சிகள்போல ஆயிரம்ஆயிரமாக விநாசத்தின்பொருட்டு வீழ்ந்தார்கள். லாகவத்தினுல் விரைவாகப் போர்புரிகின்ற அந்தப்பீஷ்மருடையயுத்தத்தில் மனிதர்கள்யானைகள் குதிரைகள்ஆகியஇவர்களின்சரீரங்களில் விழுகின்ற ஓரம்பாவது வீணுகவில்லை. அந்தப்பீஷ்மர் நல்லகூர்மையுள்ளதும் இறகுகள்கட்டியதுமானஓரம்பினுல் வஜ்ராயுதத்தால் மலையைப்பிளப்பதுபோலக் கவசத்தால்மூடப்பட்டிருக்கின்றயானையைப் பிளந்தார். உம்முடைய பிதாவானபீஷ்மர் கவசம்பூண்டு ஒன்றுசேர்ந்திருக்கின்றஇரண்டு மூன்றுயானைவீரர்களையும் நன்குவிடப்பட்ட ஒருநாராசத்தால் கொன்ருர். யுத்தத்தில் எந்தஎந்தமனிதன் நரசிரேஷ்டரானபீஷ்மரை எதிர்த்துவந்தானே அந்தஅந்தமனிதன் ஒருமுகூர்த்தகாலத்தில் யுத்தபூமியில் வீழ்ந்திறந்ததை நான் பார்த்தேன். இவ்வாறு ஒப்பற்றவீரரான பீஷ்மராலே கொல்லப்படுகின்ற தர்மராஜனுடையஅந்தப்பெரும்படையானது ஆயிரம்விதமாகச் சிதறஅடிக்கப்பட்டது. வாஸுதேவரும் பார்த்தனும் சிகண்டியும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே (பீஷ்மருடைய) சரமாரியினுலே தவிக்கும்படிசெய்யப்பட்டு (பாண்டவர்களுடைய) பெரும்படையானது மிக்கநடுக்கமுற்றது. பீஷ்மருடையபாணத்தால் நன்குபீடிக்கப்பட்டு ஓடுகின்றமகாரதர்களை அந்த வீரர்கள் முயற்சியைச்செய்தும் தடுப்பதற்குச்சக்தியற்றவர்களாயினர். மகாராஜரே! மகேந்திரனுக்குஒப்பானவீர்யமுள்ளபீஷ்மராலே கொல்லப்படும்பெருஞ்சேனையானது தோல்வியடைவிக்கப்பட்டது. இருவர்கள்சேர்ந்து ஓடவில்லை. மனிதர்களும் யானைகளும் குதிரைகளும் கொல்லப்பட்டுக் கொடிகளும் கூபரங்களும் வீழ்த்தப்பட்ட பாண்டுபுத்திரர்களுடையசேனையானது ஹாஹாகாரத்துடன்மதிமயங்கியதாயிற்று. அந்தயுத்தத்தில் பிதா புத்திரனைக் கொன்ருன்; அவ்வாறே புத்திரனும் பிதாவைக் கொன்ருன்; தெய்வத்தினுலே பலாத்

காரமாகத்தூண்டப்பட்டு மித்திரன் பிரியமானமித்திரனைக் கொன்றான். பாரதரே! பாண்டவருடையபடையிலுள்ளவர்களிற்சிலர் கவசங்களையிழந்து விரித்தமயிர்களுடன் ஓடுகின்றவர்களாகக் காணப்பட்டார்கள். அதிகமாகநிலைதவறியிருக்கின்றரதயூதபதிகளுள்ளதும் தீனஸ்வரத்துடன்கூடியதுமான பாண்டுபுத்திரனுடைய அந்தச்சேனையானது அப்பொழுது பசுக்கூட்டம்போல் அதிகமாகச்சுழலுகின்றதாகக் காணப்பட்டது. அதிகமாகத்துன்புறுத்தப்படுகின்ற சேனையைக்கண்டு யாதவநந்தனரான ஸ்ரீகிருஷ்ணர் சிறந்தரதத்தைநிறுத்திக்கொண்டு பிருதையின்புத்திரனான அர்ஜுனனைப்பார்த்து, 'பார்த்த! உன்னால் விரும்பப்பட்டதானகாலம் இதோ வந்துவிட்டது. நரசிரேஷ்ட! நீ மோகத்தால் மதிமயக்கம்கொள்ளாதவனாயிருந்தால் யுத்தஞ்செய். குந்திபுத்ர! வீர! முன்பு அரசர்கள்சேர்ந்திருக்கும்சமயத்தில், 'போரில் என்னைஎதிர்க்கும் பீஷ்மர் துரோணர்முதலான கௌரவவீரர்களனைவரையும் பந்துமித்ரர்களுடனே கொல்லப்போகிறேன்' என்று நீசொல்லியவார்த்தையை நீ உண்மையாகச்செய். பகைவர்களை அழிப்பவனே! அர்ஜுன! உன்னுடையபடை ஆங்காங்கு நாசம் செய்யப்படுகின்றதைப் பார். யுதிஷ்டிரருடையபடையில் அரசர்கள் ஓடுவதைப் பார். போர்க்களத்தில் வாயைத்திறந்துகொண்டிருக்கும் யமன்போன்றபீஷ்மரைக்கண்டு நம்முடையசேனையிலுள்ளவர்கள் அனைவரும் பயத்தால்பீடிக்கப்பட்டு ஸிம்மத்தினிடத்தினின்றுபயந்த அல்பமிருகங்கள்போல அதிகமாக ஓடுகின்றார்கள்' என்றுகூறினார். இவ்வாறுசொல்லியதைக்கேட்டதனஞ்சயன் வாஸுதேவரைப்பார்த்து, 'கிருஷ்ண! பீஷ்மரிருக்குமிடத்திற்குக் குதிரைகளை ஓட்டும். அந்த ஸேனாஸமுத்திரத்தில் பிரவேசிக்கிறேன். பிராயமுதிர்ந்தவரும் ஒருவராலும்அவமதிக்கமுடியாதவரும் கௌரவர்களுக்குப்பிதாமகருமான பீஷ்மரை அடித்துத்தள்ளப்போகிறேன்' என்றுமறுமொழிகூறினான். அரசரே! பிறகு எந்தவிடத்தில் பீஷ்மருடையரதமானது சூரியனைப் போலப் பார்க்கமுடியாததாயிருந்ததோ அவ்விடத்திற்கு மாதவர் வெள்ளிபோலப்பிரகாசிக்கின்றகுதிரைகளை நடத்தினர். குருசிரேஷ்டரே! பிறகு யுதிஷ்டிரருடையபெரியஸேனை மறுபடியும் திரும்பிவந்ததையும் மிக்ககைவன்மையுள்ளஅர்ஜுனன் பீஷ்மரைக்கொல்வதற்கே போரில்முயற்சித்துவருவதையுங்கண்டு பீஷ்மர் ஸிம்மம்போல அடிக்கடிகர்ஜித்துக்கொண்டு அர்ஜுனனுடையரதத்தின்மீது விரைவாகச் சரமாரியைப் பொழிந்தார். குதிரைகளோடும்ஸாரதியோடுங்கூடின அந்த அர்ஜுனனுடையதேரானது ஒருக்ஷணத்திற்குள்பெரியசரமாரி

யினால்மூடப்பட்டுக் கண்ணுக்குத்தோன்றாமலிருந்தது. சிறந்தமுயற்சியையுடையவரான வாஸுதேவரோ பரபரப்பில்லாமல் தைரியத்தை அடைந்து பீஷ்மருடைய அம்புகளால்பிளக்கப்பட்ட அந்தக்குதிரைகளை நடத்தினர். பிறகு பார்த்தன் மேகம்போலக்கர்ஜிக்கின்ற திவ்யமானவில்லைக்கையிலெடுத்து மூன்றுபாணங்களாலே பீஷ்மருடைய வில்லையறுத்துத்தள்ளினன். வில்அறுக்கப்பட்டஉமதுபிதாவானஅந்தப்பீஷ்மர் மீண்டும் பெரிதானவேறொருவில்லைஎடுத்து ஓரிமைப்பொழுதுக்குள்ளாகவே நாணேற்றி உடனே இரண்டுகைகளாலும் மேகமுழக்கம்போலப் பேரொலிஇடும்படி அதனை நன்றாகஇழுத்துவிட்டார். பிறகு அர்ஜுனன் கோபங்கொண்டு அந்தவில்லையும்துண்டாக்கினன். அந்த அர்ஜுனனுடைய அப்படிப்பட்டலாகவத்தைக்கண்டு சந்தனுபுத்திரர், 'பார்த்த! நல்லது: மஹாபாகுபலமுள்ளவனே! பாண்டுநந்தன! நல்லது; தனஞ்சய! இத்தகையபெரியசெய்கையானது உனக்கேதகுந்தது. மிகவும் பிரீதியடைகிறேன். என்னுடன் யுத்தம்செய்' என்று புகழ்ந்தார். யுத்தத்தில் அர்ஜுனனை இவ்வாறுபுகழ்ந்து பிறகு பெரிதான வேறொருவில்லைக்கையிலெடுத்து வீரரானஅவர் பார்த்தனுடையரதத்தைக்குறித்துக் கணைகளைத் தொடுத்தார். வாஸுதேவர் குதிரைகளை நடத்துவதில் மிக்கதிறமையைக்காண்பித்துக்கொண்டும் அந்தப்பீஷ்மருடையபாணங்களை வீணாகச்செய்துகொண்டும் அதிலாகவத்தோடு மண்டலகதிகளுடன் ஸஞ்சரித்தார். பாரதரே! பீஷ்மரோவெனில் அவ்வாறே வாஸுதேவர்தனஞ்சயன்இருவரையும் எல்லாஅவயவங்களிலும் கூர்மையுள்ளபாணங்களால் மிக்கவலிமையுடன் அடித்தார். பீஷ்மருடையபாணங்களாலே அடிக்கப்பட்ட நரசிரேஷ்டர்களானஅவ்விருவரும் கொம்புகளால்கிழிக்கப்பட்டுக் காயத்துடன்கூடிய பரபரப்புள்ள இரண்டுகாளைகள்போல விளங்கினர்கள். யுத்தத்தில் கிருஷ்ணார்ஜுனர்களின்மீது கோபமுற்றபீஷ்மர் மீண்டும் அதிகப் பரபரப்புடன் லக்ஷக்கணக்கானஅம்புகளால் திசைகளைமூடினர். அர்ஜுனனும் பீஷ்மரிடத்தில்கோபங்கொண்டு (அம்புகளால்) திசைகளைமூடினன். கோபமுற்றபீஷ்மர் அப்பொழுது உரக்கஅட்டஹாஸஞ்செய்து கூர்மையுள்ளஅம்புகளால் அடிக்கடிஅடித்துக்கொண்டு கிருஷ்ணனையும் நடுங்கச்செய்தார். பிறகு மிக்கபுஜபலமுள்ளகண்ணபிரான் யுத்தத்தில் பீஷ்மருடையபராக்கிரமத்தையும் அர்ஜுனன்மெதுவாகயுத்தம்செய்வதையும்கண்டு, சரமாரிகளை ஓயாமல்பொழிகின்றவரும் நடுப்பகலையடைந்தசூரியனைப்போல் இருதிறத்துச்சேனைகளுக்கும்இடையிலிருந்து (பகைவர்களை) மிகஎரிக்கின்றவரும் மிகவும்சிறப்புற்றபாண்டுபுத்திர

னுடையபடைகளை அதிகமாகக்கொல்லுகின்றவரும் யுதிஷ்டிருடைய சேனையில் பிரளயத்தையுண்டுபண்ணுகிறவர்போன்றவருமான பீஷ்மரைப் பொறுக்கவில்லை. சத்ருவீரர்களையழிப்பவரும் பகவானும் கேசவரும் அளவிடமுடியாதபலமுள்ளவருமான ஸ்ரீவாஸுதேவர், 'யுதிஷ்டிருடையசேனை இனியில்லை' என்றெண்ணினர். 'பீஷ்மர் ஒருபகலிலே தேவர்களையும் அஸுரர்களையும் யுத்தத்தில் அழிப்பார். படைகளையும்பரிவாரங்களையுமுடையபாண்டுபுத்திரர்களை அழிப்பதில் ஐயம் என்னஇருக்கிறது? மஹாத்மாவான பாண்டவனுடைய பெரியசேனை ஓடுகிறது. இந்தக்கௌரவர்களும், ஸோமகர்கள் விரைவாகத்தோல்வியடைவிக்கப்பட்டதைப்பார்த்துப் பிதாமஹரைக்கண்டு அவரைஸந்தோஷிக்கச்செய்துகொண்டு யுத்தத்தில் விரைவாக நான்குபக்கத்திலும் ஓடுகிறார்கள். நான் பாண்டவனிமித்தம் கவசமணிந்து இப்பொழுது பீஷ்மரைக் கொல்லுகிறேன். மஹாத்மாக்களானபாண்டவர்களுடைய இந்தப்பாரத்தை நீக்கப்போகிறேன். அர்ஜுனன் யுத்தத்தில் கூர்மையான அம்புகளால் அடிக்கப்பட்டாலும் பீஷ்மரிடத்திலுள்ளகௌரவத்தினல் யுத்தத்தில்செய்யவேண்டியவிஷயத்தை அறியவில்லை' என்று எண்ணினர். அவ்வாறு அந்தவாஸுதேவர் ஆலோசித்துக்கொண்டிருக்கும்பொழுதே பிதாமஹர் மிக்ககோபங்கொண்டு அர்ஜுனனுடையரதத்தின்மீது திரும்பவும் கணைகளைத்தொடுத்தார். அந்தக்கணைகள் அதிகமாயிருப்பதினலே எல்லாத்திக்குக்களும் நன்குமூடப்பட்டனவாயின. ஆகாயமும் திக்குக்களும் பூமியும் கிரணங்களோடுபிரகாசிக்கின்றசூரியனும் காணப்படவில்லை. நெருங்கினகாற்றும் வீசிற்று. திக்குகளனைத்தும் புகையுடன்கூடிக் கொந்தளிப்புற்றவையாயின. பிறகு துரோணர், விகர்ணன், ஜயத்ரதன், பூரிஸ்ரவஸ், கிருதவர்மா, கிருபர், சுருதாயு, அம்பஷ்டதேசாதிபதி, விந்தானுவிந்தர்கள், ஸுதக்ஷிணன், கீழ்நாட்டுவீரர்கள், ஸௌவீரர்களுடையகூட்டங்கள், வஸாதிகள், க்ஷுத்ரகர்கள், மாலவர்கள் ஆகியஇவர்களனைவரும் அரசரான பீஷ்மருடையகட்டளைக்குக் கீழ்ப்படிந்து விரைவாக அர்ஜுனனை எதிர்த்தார்கள். அனேகலக்ஷக்கணக்கானகுதிரைகளாலும் காலாட்படைகளாலும் தேர்க்கூட்டங்களாலும் கஜயூதபதிகளாலும் அந்த அர்ஜுனன் நான்குபுறங்களிலுஞ்சூழப்படுகின்றதைச் சினியின்பேரனை ஸாத்யகி கண்ணுற்றான். பிறகு காலாட்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் தேர்களாலும் நான்குபக்கங்களிலும் எதிர்த்துப் போர்புரியப்பட்டவர்களும் சஸ்திரங்களைத்தரிக்கின்றவீரர்களுள் உத்தமர்களுமான அர்ஜுனனையும் கண்ணபிரானையும்பார்த்துச் சினிகுலத்

தில்பிறந்தவீரர்களுள்உத்தமனுனஸாத்யகி விரைவாக அவர்களுக்கு எதிரில் வந்தான். உறுதியானவில்லைக்கையில்கொண்ட அந்தஸாத்யகி விரைவாகச் சத்துருப்படைகளைஎதிர்த்துவந்து விருத்திரனுக்குப் பகைவனுனஇந்திரனுக்கு விஷ்ணுஉதவிசெய்ததுபோல அர்ஜுனனுக்கு உதவிசெய்தான். யுதிஷ்டிரருடையபடையிலுள்ளயானைகள், குதிரைகள், தேர்கள், கொடிமரங்கள்ஆகியஇவற்றின்கூட்டங்கள்சிதறின. பீஷ்மரால்பயமுறுத்தப்பட்டபோர்வீரர்களெல்லாம் நான்கு பக்கங்களிலும்ஓடினுர்கள். சினிபுங்கவனுனஸாத்யகியானவன் அந்தப் படையைப்பார்த்து, 'க்ஷத்திரியர்களே! எங்கே போகப்போகிறீர்கள்? புராணங்களாலே ஸாதுக்களுடையமுன்னிலையில் இது தர்மமென்று சொல்லப்படவில்லை. சிறந்தவீரர்களே! உங்கள்பிரதிஜ்ஞையை விட்டுவிடாதீர்கள். உங்களுக்குரியவீரதர்மத்தைக் காப்பாற்றுங்கள்' என்றுசொன்னுன். அவ்வாறு ராஜஸ்ரேஷ்டர்கள் எல்லாப்பக்கங்களிலும்ஓடுகின்றதையும் அர்ஜுனன்மெதுவாகயுத்தம்செய்கின்றதையும் பீஷ்மர் யுத்தத்தில் அஸாத்தியமாகப் பராக்ரமத்தால்விருத்தியடைகின்றதையும் எல்லாக்கௌரவர்களும் எதிர்த்துவருகின்றதையும்பார்த்துப் பொறுதவரும் மஹாபலசாலியும் தாசார்கர்களையெல்லாம்காப்பவரும் இந்திரனுடையஇளையஸஹோதரருமான அந்தக்கண்ணபிரான் மஹாகீர்த்திசாலியானஸாத்யகியைப்புகழ்ந்து பின்வருமாறு வசனிக்கலானுர். 'சினிகுலத்தில்பிறந்தஉத்தமவீர! எவர்கள் போகின்றுர்களோ அவர்கள் போகட்டும்; எவர்களிருக்கிறுர்களோ அவர்களும் செல்லட்டும்; இப்பொழுது யுத்தகளத்தில் ரதத்தினின்று என்னுல் பீஷ்மரும் பரிவாரங்களுடன்கூடினதுரோணரும் கீழேதள்ளப்படுவதைப் பார். ஸாத்வத! கோபித்துக்கொண்டிருக்கின்ற பார்த்தஸாரதியானஎன்னிடத்தினின்று இந்தயுத்தகளத்தில் கௌரவர்களுள் ஒருவனுவது இப்பொழுது விடுபடமாட்டான். ஸாத்யகியே! ஆதலால், நான் உக்கிரமானசக்ரத்தைக்கையிலேந்திப் பெரியவிரதமுள்ளபீஷ்மருடையஉயிரைக் கவரப்போகிறேன். தேராளிகளுள்சிறந்தவர்களானபீஷ்மரையும் துரோணரையும் பரிவாரங்களுடன் யுத்தத்தில்கொன்று தனஞ்சயனுக்கும் தர்மராஜருக்கும் பீமனுக்கும் அஸ்வினீபுத்திரர்களுக்கும் பிரீதியை உண்டுபண்ணப்போகிறேன். மேலும் திருதராஷ்டிரபுத்திரர்களனைவரையும் இன்னும் அவர்கள்பக்கத்திலசேர்ந்தராஜஸ்ரேஷ்டர்களையுங் கொன்று ஸந்தோஷத்துடன் யுதிஷ்டிரராஜரை ராஜ்யத்தையடையும்படி செய்யப்போகிறேன்' என்றுசொன்னுர். இவ்வாறு இந்தவார்த்தையைச்சொல்லிவிட்டு மஹானுபாவரான அந்தக்கண்ணபிரான் கூர்மை

யுள்ளதும் புராதனமுமானசக்ராயுதத்தை நினைத்தார். ஸுதர்சன மென்னும்சக்கரமானது நினைத்தமாத்திரத்திலேயே அவருடையகைந் நுனியில் தானகவே ஏறிக்கொண்டது. நாராயணருடையபாகுவாகிற காம்புள்ளதும் யுத்தத்தில்பிடிக்கப்பட்டிருக்கின்றதுமான அந்தச்சக்ர மாகிறபத்மமானது (முற்காலத்தில்) ஸ்ரீமந்நாராயணருடையநாபியி லுண்டானதும் பாலசூரியனுக்குஒப்பானவர்ணமுள்ளதுமான ஆதி பத்மம்போல விளங்கியது. அந்தக்கிருஷ்ணனுடையதேகமாகிறபெரிய தடாகத்தில்முளைத்ததும் அவருடையகையாகிறகாம்புள்ளதும் வாள் போலக்கூர்மையான நுனிகளாகிறஅழகியஇதழ்களுள்ளதுமான அந் தச்சக்ரமாகிறபத்மமானது கிருஷ்ணனுடையகோபமாகிற உதயகா லத்துஸூர்யனால் மலர்த்தப்பட்டு விளங்கியது. பிறகு மகாத்மாவும் வஸுதேவபுத்திரருமானகிருஷ்ணன் நடுஅழகியதும் சூரியனுடைய ஒளிபோன்றஒளிபொருந்தினதும் வஜ்ராயுதம்போன்றமகிமையுள்ள தும் கத்திகளை நுனிகளில்கொண்டதுமானசக்ரத்தைக் கையினால்எடுத் துக் குதிரைகளைவிட்டுவிட்டு ரதத்தினின்றுதுள்ளிக்குதித்துக் காலடி களாலே பூமியை அதிரச்செய்துகொண்டு பீஷ்மரைநோக்கி விரைந்து சென்றார். யுத்தத்தில்இருக்கும்மதத்தினால்ஒன்றுமறியாதவரும் கர்வ மிஞ்சினவருமானபீஷ்மரை, (சத்துருக்களை)அழிப்பவரும் உபேந்தி ரருமான அந்த ஸ்ரீவாஸுதேவர் கோபங்கொண்டு கஜயூதபதியைக் கொல்லஎண்ணியஸிம்மம்போல ஸேனமத்தியத்தில் எதிர்த்துஓடி வந்து, தொங்குகிறபீதாம்பரத்துடன் ஆகாயத்தில் மின்னலோடு கூடியமேகம்போல விளங்கினார். சக்கரத்தைக்கையிலேந்தியவரும் உரக்கஸிம்மநாதம்செய்கின்றவரும் கோபங்கொண்டவரும் உபேந்தி ரருமான ஸ்ரீவாஸுதேவரைப்பார்த்து எல்லாப்பிராணிகளும் கௌர வர்களுக்குஅழிவுநேர்ந்ததுபோலே எண்ணி அதிகமாகஆரவாரித்தன. சக்கரத்தைக்கையிலேந்தியவரும் எல்லாஉலகங்களையும்அழிப்பவர் போன்றவரும் பீஷ்மரைஎதிர்த்துப்பாய்கின்றவரும் லோகநாதரு மானஅந்தவாஸுதேவர் பிராணிகளைஎரிக்கப்போகிற (ஊழித்) தீப் போல விளங்கினார். அங்ஙனம்தம்மைஎதிர்த்துவருகின்றவரும் கை யில்சக்கரம்பிடித்தவருமானகண்ணபிரானைக்கண்டு சந்தனுபுத்திரரான பீஷ்மர் காண்டீவம்போன்றஒலியுள்ளஅந்தப்பெரியவில்லை இரண்டு கைகளாலும் பரபரப்பின்றி அப்பொழுது இழுத்தார். யுத்தத்தில் மயக்கமற்றமனத்தையுடையபீஷ்மர் முடிவற்றபௌருஷத்துடன் கூடினகோவிந்தனைப்பார்த்து, 'தேவநாதரே! ஜகந்நிவாஸரே! வாரும்; வாரும்; மாதவரே! சக்ரபாணியே! உமக்குவந்தனம். லோகநாதரே!

ஸர்வசரண்யரே! யுத்தத்தில் உத்தமமானரதத்தினின்று என்னைப் பலாத்காரமாய்க் கீழேதள்ளும். இப்பொழுது உம்மால் கொல்லப்பட்டாலுங்கூட எனக்கு இம்மையிலும் மறுமையிலும் நன்மையே. அந்தகர்களுக்கும் விருஷ்ணிகளுக்கும்நாதரே! வீரரே! நீர்எதிர்த்துவந்ததால் மூவுலகங்களாலும் நான் கௌரவப்படுத்தப்பட்டவனாகிறேன்' என்றுவிஜ்ஞாபனம்செய்தார். பிறகு, மிகநீண்டும்பருத்துமிருக்கின்ற கைகளுள்ளபார்த்தனும் அதிகவேகத்துடன் ரதத்தினின்றுபாய்ந்து கீழேகுதித்து யதுக்களுள்சிறந்தவீரரும் பருத்துத்தொங்கும்சிறந்த கைகளுள்ளவருமான ஸ்ரீஹரியைப் பின்தொடர்ந்துஓடிக் கைகளில் பிடித்துக்கொண்டான். தேவதைகளுக்கெல்லாம்ஆதியானவரும் யோகியுமான ஸ்ரீவிஷ்ணுவானவர் அப்பொழுது (அர்ஜுனனால்) தடுக்கப்பட்டு மிகுந்தகோபங்கொண்டு பெருங்காற்றானது ஒருமரத்தைக் கொண்டுபோவதுபோல வேகத்தோடு அர்ஜுனனை இழுத்துக்கொண்டே சென்றார். அரசரே! பிருதைபின்புத்திரனான அர்ஜுனனோ பீஷ்மருடையபக்கத்தைக்குறித்து விரைவாகஎதிர்த்துஓடுகின்ற ஸ்ரீகிருஷ்ண பகவானைப் பலத்தினாலே இரண்டுகால்களையுங்கட்டிக்கொண்டு அதிப்ரயாஸத்தினாலே பத்தாவதுஅடியில் போகவொட்டாமல்பலாத்காரமாகத்தடுத்தான். பொன்னால்அலங்கரிக்கப்பட்டமாலையையுடையஅர்ஜுனன் அவ்வாறுநிற்கின்றகிருஷ்ணனை ப்ரீதியுடன் ஸாஷ்டாங்கமாக வணங்கி, 'கேசவரே! நீர் கோபத்தை விலக்கவேண்டும். பாண்டவர்களுக்கெல்லாம் தேவரீரல்லவோ முக்கியமானகதி. கேசவரே! புத்திரர்கள்மீதும் ஸகோதரர்கள்மீதும் நான் ஆணையிடுகிறேன். பிரதிஜ்ஞை செய்யப்பட்டபடி இந்தக்காரியத்தை நான் விடப்போகிறதில்லை. உபேந்திரரே! நான் உம்மால்தூண்டப்பட்டுக் கௌரவர்களுக்கு நாசத்தையுண்டுபண்ணுவேன்' என்று கூறினான். பிறகு அந்தஅர்ஜுனனுடையபிரதிஜ்ஞையையும் ஸங்கேதத்தையும்கேட்டு மனமகிழ்ந்தஜனார்த்தனர் கௌரவசிரேஷ்டனான அர்ஜுனனுக்குப்பிரியத்தைச்செய்வதில் உறுதியாகநின்று சக்கரத்துடன் மறுபடியும் ரதத்தின்மீதேறினார். [1] பிறகு பகவான் பாஞ்சஜன்யத்தின்ஓசையினாலே எல்லாத்திக்குக்களையும் எதிரொலிபிடும்படிசெய்தார். கழுத்திலுள்ளபொன்னணிகளும் தோள்வளைகளும் குண்டலங்களும் நிலைகுலைந்திருப்பவரும் புழுதியடர்ந்த அழகிய தாமரைமலர்போன்றகண்களையுடையவரும் மாசற்ற பற்களையுடையவரும் சங்கத்தைக்கையில்கொண்டவருமான ஸ்ரீவாஸு

[1] பொருந்தாமையால் அதிகபாடமான இரண்டுப்லோகங்கள் விடபட்டன.

தேவரைப்பார்த்துக் கௌரவவீரர்கள் அதிகமாகஆரவாரித்தார்கள். பிறகு கௌரவர்களுடையஎல்லாச்சேனைகளிலும் மிருதங்கங்கள், பேரிவாத்யங்கள், பணவங்கள் இவைகளுடையநாதங்களும் தேருருளை நுனியினல்உண்டுபண்ணப்பட்டசப்தங்களும் துந்துபிவாத்யகோஷங்களும் உக்கிரமானஸிம்மநாதங்களும் தோன்றின. இடிமுழக்கத்திற்கு ஒப்பான பார்த்தனுடையகாண்டீவத்தின்ஒலியானது ஆகாயத்தையும் திக்குக்களையும் அடைந்தது. பாண்டவனுடையவில்லினல்விடப்பட்ட மாசற்ற பளபளப்பானபாணங்கள் எல்லாத்திக்குக்களிலும்சென்றன. கௌரவர்களுக்கெல்லாம்அதிபனுன துர்யோதனன் அதிவேகத்துடன் பீஷ்மரோடும் பூரிஸ்ரவஸோடும்சேர்ந்து கையில்பாணத்தைஎடுத்து உலர்ந்தகாட்டைஎரிக்கஎண்ணங்கொண்டஅக்னிபோல அர்ஜுனனை எதிர்த்துவந்தான். பிறகு பூரிஸ்ரவஸ் பொற்கணுக்களுள்ள ஏழுபல்லங்களை அர்ஜுனன்மீது விடுத்தான். துரியோதனனும் கொடியவேகமுள்ளதோமரத்தைப் பிரயோகித்தான். சல்யனும் சந்தனுபுத்திரரானபீஷ்மரும் கதையையும் சக்தியையும் பிரயோகித்தனர். அந்த அர்ஜுனன் பூரிஸ்ரவஸ்விடுத்தசிறந்தஏழுபாணங்களை ஏழுபாணங்களால்தடுத்துக் கூர்மையானக்ஷுரத்தினலே துரியோதனன்கையினல் வீசியதோமரத்தையும் நாசம்செய்தான். பிறகு வீரனுன அந்தஅர்ஜுனன் சாந்தனவரால்விடப்பட்டமின்னலொளிபோல்பிரகாசிக்கின்றதும் அதிவேகமாய்வருகின்றதும் மங்களகரமுமான அந்தச்சக்தியையும் மத்ரதேசாதிபனது கையினல்விடப்பட்டகதையையும் இரண்டுஅம்புகளால் அறுத்தான். பிறகு ஆச்சரியகரமானதும் மனத்தினல்எண்ணமுடியாததுமான காண்டீவமென்கிறவில்லைக் கைகளால்திடமாகஇழுத்து அதிகோரமானதும் ஆச்சரியகரமாயிருப்பதுமான மஹேந்திராஸ்திரத்தை முறைப்படி ஆகாயத்தில் வெளிப்படுத்தினன். பிறகு மிக்கபலசாலியும் சிறந்தவில்லைக்கையிலேந்தியவனும் கிரீடமுடையவனுமான அர்ஜுனன் அந்த உத்தமமான அஸ்த்ரத்தாலும் பளபளப்புடன் அக்நிபோலப்பிரகாசிக்கின்றசரக்கூட்டங்களாலும் எல்லாச்சேனைகளையும் தடுத்தான். பார்த்தனுடைய வில்லினின்றுவிடுபடும்அம்புகள் தேர்களையும் கொடிமுனைகளையும் விற்களையும் கைகளையும் அறுத்துப் பகைவர்களானஅரசர்கள், சிறந்தயானைகள், குதிரைகள் இவைகளினுடலில் புகுந்தன. கிரீடமும் மாலையும்அணிந்தஅர்ஜுனன் நல்லமுனைகளுள்ளஅம்புகளாலே யுத்தத்தில் திக்குக்களையும் திக்கோணங்களையும் நிரப்பிக் காண்டீவத்தின்ஒலியினலே பகைவர்களுடையமனத்தையும் துன்பமுறும்படிசெய்தான். மிகவும்கோரமான அந்தயுத்தமானது அவ்

வாறுநடக்கையில் சங்கொலிகளும் துந்துபியொலிகளும் உக்கிரமான குதிரைகளினுடையசப்தங்களும் தேரொலிகளும் காண்டீவத்தினுடையஒலியினாலே மறைக்கப்பட்டன. பிறகு அந்தக்காண்டீவத்தின் ஒலியைக்கேட்டுச் சிறந்தபலமுள்ள விராடன்முதலான உத்தமவீரர்களும் வீரனும் பாஞ்சாலநாட்டுக்கிறைவனுமான துருபதனும் அவ்விடம் வந்தனர். எந்தஎந்தஇடத்தில் காண்டீவத்தினின்றும்உண்டாகின்றபேரொலியானது கேட்கப்படுகின்றதோ அந்தஅந்தஇடங்களிலுள்ள உம்மைச்சேர்ந்தஎல்லாச்சேனைகளும் வணக்கத்தையே அடைந்தன. அவனுக்குவிரோதியாக ஒருவனும் நேரில் வரவில்லை. அரசரே! மிக்ககோரமானஅந்தயுத்தத்தில் தேர்களோடும் குதிரைகளோடும் ஸாரதிகளோடுங்கூடின வீரர்கள் கொல்லப்பட்டார்கள். பெரியகொடிகளையுடையவைகளும் மங்களகரமானபொற்கச்சைகளையுடையவைகளுமானயானைகளும் நாராசங்கள் (மேலே) விழுவதனால்தவிக்கும்படிசெய்யப்பட்டன. (வீரர்கள்) குந்தீபுத்திரனான அர்ஜுனனால் கடியவேகமுள்ளவைகளும் இறகுகளுள்ளவைகளும் நிர்மலமானவைகளும் கூரியமுனையுள்ளவைகளுமானபல்லங்களாலே நன்குஅடிக்கப்பட்டுக் கவசங்களும் சரீரங்களும் பிளக்கப்பட்டு உயிரையிழந்து விரைவாகவிழுந்தார்கள். படைமுகங்களில் பெரியத்வஜங்கள் யந்திரங்கள் அறுக்கப்பட்டுப் பேர்த்துத்தள்ளப்பட்டஇந்திரத்வஜங்கள்போலக் கீழேவிழுந்தன. யுத்தத்தில் காலாட்களுடையகூட்டங்களும் தேர்ப்படைகளும் குதிரைகளும் யானைகளும் அர்ஜுனன்தொடுக்கும்அம்புகளால்அடிபட்டு விரைவாகஉயிரையிழந்து அங்கங்களைஒடுக்கிக்கொண்டு பூமியில் வீழ்ந்தன. அரசரே! அப்பெரும்போரில் சிறந்தஅந்தஐந்திராஸ்திரத்தினால் (வீரர்கள்) கவசங்களும் உடல்களும் பிளக்கப்பட்டவர்களானார்கள். பிறகு சஸ்திரங்களால்காயப்படுத்தப்பட்ட மனிதர்களுடைய தேகங்களினின்றுபெருகுகின்றரக்தத்தை ஜலமாகக்கொண்டதும் மனிதர்களுடையமாம்ஸங்களையேநுரையாகக்கொண்டதும் மரித்திருக்கின்றயானைகள்குதிரைகளுடையசரீரங்களாகிறகரைகளுள்ளதும் அரசர்களுடையமஜ்ஜையும் அதிகமானமாம்ஸங்களுமாகிறசேறுள்ளதும் மயிர்கள்நிறைந்திருக்கும் மண்டையோடுகளாகிறபுல்தரைகளுள்ளதும் சிதறிக்கிடக்கின்றபற்பலகவசங்களாகிறஅலைகளாலேவியாபிக்கப்பட்டதும் அறுக்கப்பட்டிருக்கிறமனிதர்கள்குதிரைகள்யானைகள் இவைகளின் எலும்புகளாகிறசுக்கான்கற்களுள்ளதும் அதிவேகமுள்ளதும் பெரிய பிரவாகத்தையுடையதும் அநேகராக்ஷஸக்கூட்டங்களாலும்பூதங்களாலும்அடையப்பட்டதும் ஆயிரக்கணக்கானசரீரக்குவியல்களைஇழுத்

துச்செல்லுகின்றதும் மஹாகோரமானதுமான ஒருநதியானது அர்ஜுனனால் அந்தயுத்தகளத்தில் கூர்மையானசரக்கூட்டங்களால் உண்டு பண்ணப்பட்டது. நாய்களாலும் [1] கங்கங்களாலும் செந்நாய்களாலும் [2] க்ருத்ரங்களாலும் காக்கைகளாலும் ஊனுண்ணும்மிருகங்களினுடையகூட்டங்களாலும் சிறுத்தைப்புலிகளாலும் அணுகப்பட்ட கரைகளுள்ளதும் க்ரூரமானதும் பெரிதானவைதரணீநதிபோல விளங்குவதும் அர்ஜுனனுடையஅம்புக்கூட்டங்களால்உண்டுபண்ணப்பட்டதும் மாம்ஸம், ஊனீர், ரக்தம் இவைகளோடுபெருகுகின்றதும் மிக்கபயங்கரமுமான அந்தரக்தநதியை மனிதர்கள் கண்டார்கள். பிறகு பல்குனனாலே சிறந்தவீரர்களழிக்கப்பட்ட கௌரவர்களுடைய சேனையைக்கண்டு அந்தச்சேதிதேசத்துவீரர்களும் பாஞ்சாலர்களும் கரூஷர்களும் மச்சதேசத்தார்களும் ஜயத்தைஅடைவதில்ஸமர்த்தர்களும், புருஷர்களுள்உத்தமவீரர்களுமான பாண்டவர்களும் ஆகிய அனைவரும் ஒன்றுசேர்ந்து கௌரவசேனையிலுள்ளபோர்வீரர்களை மிக்கபயமடையும்படிசெய்துகொண்டு உரக்கஸிம்மநாதம்செய்தார்கள். பகைவர்களுக்குப்பயத்தைஉண்டுபண்ணுகின்ற கிரீடியானவன் உத்தமவீரர்கள்கொல்லப்பட்ட படைகளைக்கண்டு மான்களுடைய பெருங்கூட்டங்களை ஸிம்மமானதுபயமடையச்செய்வதுபோல ஸேனாதிபதிகளுடையஸேனையை அதிகபயமடையும்படிசெய்தான். காண்டீவத்தைவில்லாகக்கொண்ட அந்த அர்ஜுனனும் ஜனார்த்தனரும் அதிக ஸந்தோஷத்துடன் ஸிம்மநாதம்செய்தார்கள். பிறகு பீஷ்மர், துரோணர், துரியோதனன், பாஹ்லிகன் இவர்களோடுகூடின கௌரவர்கள் ஆயுதங்களால்மிக்ககாயப்படுத்தப்பட்டமேனியுடன் சூரியனுடையகிரணக்கூட்டங்கள்மறைவதையும் சூரியனுடையசிவப்பானகாந்தியுடன் கூடியஸந்தியையடைந்திருக்கின்றராத்ரியையும் பரவியிருக்கின்றதும் கொடியதும் பொறுக்கமுடியாததும் யுகாந்தகாலத்திற்கு ஒப்பானதுமான அந்தஐந்திராஸ்திரத்தையும் கண்டு யுத்தத்தைவிட்டு ஓடினார்கள். தனஞ்சயனும் உலகத்தில் கீர்த்தியையும் யசஸையும்பெற்றுப் பகைவர்களைவென்று போர்முடித்து அரசர்களோடும் ஸஹோதரர்களோடும்சேர்ந்து இரவில் சேனைதங்கியிருக்குமிடத்தைக்குறித்துச் சென்றான். பிறகு அந்தராத்திரியின்தொடக்கத்தில் கௌரவர்களுடைய நெருங்கிய அதிகோரமானசப்தமானது உண்டாகியது. அர்ஜுனன் யுத்தத்தில் பதினாயிரம்தேராளிகளையும் எழுநூறுயானைகளையுங்கொன்றான். அவ்வாறே கீழ்நாட்டுவீரர்களும் எல்லாஸௌ

---

[1], [2] கழுகின்வகைகள்.

வீரர்களுடையகூட்டங்களும் க்ஷுத்ரகர்களும் மாலவர்களும் அடித்துத்தள்ளப்பட்டார்கள். வேறொருவன் எந்தக்காரியத்தைச் செய்ய முடியாதோ அப்படிப்பட்டபெரிதானகாரியம் தனஞ்சயனால் செய்யப்பட்டது. பாரதரே! ஸ்ருதாயு, அம்பஷ்டதேசாதிபதி, ராஜாவான துர்யோதனன், துர்மர்ஷணன், சித்ரஸேனன், துரோணர், கிருபர், ஜயத்ரதன், பாஹ்லீகன், பூரிஸ்ரவஸ், சல்யன், சலன், பீஷ்மர், நூற்றுக்கணக்காகக்கூடியிருக்கிற அனேகயுத்தவீரர்கள் ஆகியஎல்லோரும் உலகத்தில்மகாரதனென்றுபிரஸித்திபெற்றவனும் கோபங்கொண்டவனும் பிருதையின்புத்திரனுமான அர்ஜுனனால் போரினிடையில் தன்கைவன்மையால் ஜயிக்கப்பட்டார்கள்' என்றுசொல்லிக்கொண்டே உம்மைச்சேர்ந்தஎல்லாஸைனிகர்களும் ஸேனைதங்குமிடத்திற்குச் சென்றார்கள். கௌரவர்களுடையசேனையானது கிரீடியினால்பயமுறுத்தப்பட்ட எல்லாயுத்தவீரர்களுடனும் நன்றாகஜ்வலிக்கின்ற ஆயிரக்கணக்கான கொள்ளிக்கட்டைகளோடும் பிரகாசிக்கின்ற தீவட்டிகளுடனுங் கூடி வாஸஸ்தானத்தைக்குறித்துச் சென்றது.

மூன்றாவதுநாள் யுத்தம் முடிந்தது.

அறுபதாவது அதயாயம.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(பீஷ்மார்ஜுனர்களுடைய யுத்தவர்ணனம்.)

பாரதரே! மகாத்மாவானபீஷ்மர் இரவுவிடிந்தவுடன் எல்லாச்சேனைகளாலும்சூழப்பட்டுச் சத்துருக்களைக்குறித்துக்கோபங்கொண்டு பாரதர்களுடையஸேனைகளுக்குமுன்னே சென்றார். அந்தப்பீஷ்மரைத் துரோணர், துரியோதனன், பாஹ்லீகர்கள், துர்மர்ஷணன், சித்ரஸேனன், மிக்கபலசாலியானஜயத்ரதன், இன்னும்மற்றஅரசர்கள்ஆகிய எல்லோரும் நாற்புறங்களிலும் (சூழ்ந்துகொண்டு) ஸேனாஸமூகங்களோடு சென்றார்கள். மிக்கமகிமைபொருந்தியவர்களும் மகாரதர்களும் காந்தியுள்ளவர்களும் வீர்யமுள்ளவர்களுமான ராஜசிரேஷ்டர்களாலே சூழப்பட்ட அரசரானபீஷ்மர் தேவர்களால்சூழப்பட்ட வஜ்ரபாணியான இந்திரன்போல் விளங்கினார். அந்தப்படைமுகத்தில் கட்டப்பட்டவைகளும் அடிக்கடிஅசைகின்றவைகளும் நல்லசிவப்பும்மஞ்சளும்கறுப்பும்வெளுப்புமானநிறங்களால் விளங்குபவைகளும் பெரியயானைகளினுடைய பிடரிகளையடைந்தவைகளுமானபெருங்கொடிகள் விளங்கின. பீஷ்மரால்காக்கப்பட்டஅச்சேனையானது மகாரதர்களா

லும் யானைகளாலும் குதிரைகளாலும்நிறைந்து வர்ஷாகாலத்தில்தோன்றியமேகங்களோடும் மின்னலோடும் இடிமுழக்கத்தோடுங்கூடின ஆகாயம்போல விளங்கியது. பிறகு பீஷ்மரால்ரக்ஷிக்கப்பட்டு மிக்க கடுமையுடனிருக்கின்ற அந்தக்கௌரவஸேனையானது அர்ஜுனனைக் குறித்து நதியினுடையபயங்கரமானவேகம்போன்றஅதிவேகத்துடனே யுத்தத்தில்நோக்கங்கொண்டு சென்றது. மஹாபலசாலியும் சிறந்த வானரத்தைக்கொடியாகக்கொண்டவனுமானஅர்ஜுனன், மறைக்கப்பட்டிருக்கிற பற்பலவிதமானபலத்தையுடையதும் தேர்கள், யானைகள், குதிரைகள், காலாட்கள்இவற்றின்கூட்டங்களாகிறசிறகுகளுள்ளதும் பெரியமேகம்போன்றதுமான வ்யாளம்என்கிற அந்தக்கௌரவசேனையின்வ்யூஹத்தைத் தூரத்திலிருந்தேகண்டான். அஸுரசேனைகளை ஜயிப்பதில் தேவராஜன் எவ்வாறு உறுதியுள்ளவனோ அவ்வாறே சத்துருக்களுடைய படையைஜயிப்பதில் நரசிரேஷ்டனான அர்ஜுனன் உறுதியுள்ளவனாகித் தகுந்தசமயத்தில் வெள்ளைக்குதிரைகள்பூட்டியதும் கொடியையுடையதுமானரதத்தோடு புறப்பட்டான். நாராயணரோடுசேர்க்கைபெற்று அவரால்ரக்ஷிக்கப்பட்டஇந்திரனைப்போலவும் சூரியனோடுசேர்க்கைபெற்றசந்திரனைப்போலவும் மஹாத்மாவானஅர்ஜுனன் கேசவரோடுசேர்ந்து ஸேனாமுகத்தில் விளங்கினான். உபகரணங்களோடுகூடியதும் உறையுள்ளஅழகியபார்மரத்துடன்கூடியதும் யதுகுலத்தலைவரால்புத்தாங்கத்தில்நடத்தப்படுகின்றதும் வானரக்கொடிகட்டியதுமான ரதத்தைப்பார்த்துக் கௌரவர்கள் உமதுபுத்திரர்களோடுகூடவே துன்பமுற்றார்கள். நன்றாக அமைக்கப்பட்டதும் லோகங்களுள்மகாரதனும் ஆயுதங்களைக்கையில்எடுத்தவனுமான அர்ஜுனனால்ரக்ஷிக்கப்பட்டதும் பதினாயிரம்மதங்கொண்டயானைகளால்வியாபிக்கப்பட்டதுமான அந்தஉத்தமமானவ்யூஹத்தை உம்மைச்சேர்ந்தவர்கள் பார்த்தார்கள். கௌரவர்களுள்சிறந்தவரான தர்மராஜராலே முற்பகலில்ஏற்படுத்தப்பட்டவ்யூஹம்போல இப்புவியில் உண்டானதேயில்லை; மனிதர்களால் இதற்குமுன்பார்க்கப்பட்டதுமில்லை; கேட்கப்பட்டதுமில்லை. பிறகு தலைவர்களானபாஞ்சாலர்கள் முக்கியர்களான சேதிதேசத்தார்களுடன் கட்டளைப்படி சமீபத்தைநாடி நின்றார்கள். பிறகு ரணகளத்தில் (ஸேனைத்தலைவனுடைய) கட்டளையினால் ஆயிரக்கணக்கானபேரிகைகள் அடிக்கப்பட்டு ஒலித்தன. எல்லாச்சேனைகளிலும் சங்கத்தின்ஒலிகளும் தூர்யவாத்யங்களின்ஓசைகளும் ஸிம்மநாதத்தோடு முழங்கின. பிறகு வீரர்களாலே நாணேஸியிடும்படிசெய்யப்பட்டவைகளும் பேரொலியுள்ளவைகளும்

பாணங்களுடன்கூடியவைகளுமானவிற்கள் ஒருக்ஷணத்திற்குள் பேரீவாத்யங்களினுடையஒலிகளையும் பணவவாத்யங்களினுடையஒலிகளையும் சங்கங்களினுடைய பேரொலிகளையும் மறைத்தன. பிறகு, மஹானுபாவர்களானவீரர்கள்; ஆகாயமானது அவ்விதமான சங்கவாத்யங்களினுடையஒலியினலேநிரம்பியதும் பூமியினின்றஉயரஎழுப்பப்பட்டு விரைவாகப்பரவுகின்ற புழுதிக்கூட்டத்துடன்கூடினதுமாயிருப்பதைவிளக்கமாகக்கண்டு, விரைவாக எதிர்த்தார்கள். தேராளியானவன் தேராளியினுல்அடிக்கப்பட்டு ஸாரதியோடும் குதிரைகளோடும் ரதத்தோடும் கொடிமரத்தோடும் வீழ்ந்தான். யானையும் யானையால்அடிக்கப்பட்டு வீழ்ந்தது. காலாளும் காலாளால்அடிக்கப்பட்டு வீழ்ந்தான். உத்தமமானகுதிரைக்கூட்டங்கள் சுழன்றுவருகின்ற சிறந்தகுதிரைக்கூட்டங்களாலேஅடிக்கப்பட்டும் பயங்கரமானவைகளாகச்செய்யப்பட்டும் ஈட்டிகளாலும்கத்திகளாலும்கொல்லப்பட்டும் சுழன்றுகொண்டு ஆச்சரியமானதோற்றத்துடன் வீழ்ந்தன. பொன்னுற்செய்தநக்ஷத்திரக்கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளும் சூரியனுடையஒளிபோன்றஒளியையுடையவைகளுமான கவசங்கள் கோடாலிகளாலும் ஈட்டிகளாலும் கத்திகளாலும் பிளக்கப்பட்டுப் பூமியில் வீழ்ந்தன. சிலரதிகர்கள் யானைகளாலே கொம்புகளாலும் தேகத்தின்பின்புறத்தாலும் அடிக்கப்பட்டு ஸாரதியுடன் கூடவேவிழுந்தார்கள். உத்தமமானயானைகள் உத்தமமானயானையினுலும் பாணங்களாலும் அடிக்கப்பட்டுப் பூமியில் வீழ்ந்தன. யானைக்கூட்டங்களால் அதிவேகத்தோடுசிதறஅடிக்கப்பட்டவர்களும் கொம்புகளாலும் தேகத்தின்பின்புறத்தாலும் அடிக்கப்பட்டவர்களுமான குதிரைக்காரர்கள் யௌவனமுடையவர்களானகாலாட்கள் இவர்களின் தீனஸ்வரத்தைக்கேட்டு மனிதர்கள் விரைவாகத் துக்கமடைந்தார்கள். பரபரப்புள்ள யானைகளையும் குதிரைகளையும் தேர்களையுமுடையதும் குதிரைக்காரர்களுக்கும்யௌவனமுள்ளவர்களானகாலாட்களுக்கும்மிக்கநாசத்தையுண்டுபண்ணுகிறதுமான அந்தஸமயத்தில் மகாரதர்களாலே நாற்புறத்திலும் சூழப்பட்ட அந்தவானரக்கொடியையுடையஅர்ஜுனனைத் தூரத்தினின்றுபார்த்து ஐந்துபனைகளை அடையாளமாகக்கொண்ட கொடியையுடையவரும் சிறந்தகுதிரைகளுடைய வேகத்தினுலே ஆச்சரியகரமானவீர்யமுள்ள ரதத்தையுடையவருமான பீஷ்மர், மகாஸ்திரங்களாலும் வஜ்ராயுதம்போன்றபாணங்களாலும்விளக்கமுறுகிறஅர்ஜுனனை எதிர்த்தோடிவந்தார். அவ்வாறு இந்திரனுக்குச்சமமானபிரபாவத்துடன்கூடின இந்திரபுத்திர

ஞன அர்ஜுனனைக்குறித்துத் துரோணரைத்தலைவராகக்கொண்டகிரு பாசாரியரும் சல்யனும் விவிம்சதியும் துரியோதனனும் ஸோமதத்த குமாரனும் விரைவாகச் சென்றார்கள். பிறகு ஸர்வாஸ்திரங்களையும் அறிந்தவனும் ஸ்வர்ணத்தினால்விசித்ரமானகவசமணிந்தவனும் சூர னும் அர்ஜுனபுத்திரனுமான அபிமன்யுவானவன் ரதிகர்களுடைய முற்படையிலிருந்து அருகில்வந்து வேகமாக அவர்களனைவரையும் எதிர்த்தான். பொறுக்கமுடியாதசெய்கையுள்ள அபிமன்யு அந்தமகாரதர் களுடையமகாஸ்திரங்களை நாசம்செய்து மகாமந்திரங்களால்ஹோமம் செய்யப்பட்டதும் ஜ்வாலைகிளம்பியதும் யாகசாலையை அடைந்துள் ளதுமான அக்கினியைப்போல்பிரகாசித்தான். பிறகு அதிகபலத் துடன்கூடினபீஷ்மர் யுத்தகளத்தில் சத்துருக்களுடையரக்தமாகிற ஜலத்தையும் நுரையையுமுடையநதியை விரைவாக உண்டுபண்ணி அபிமன்யுவைத்தாண்டி மகாரதனான அர்ஜுனனைக்குறித்து எதிர்த்து விரைவாகச் சென்றார். பிறகு கிரீடதாரியானஅர்ஜுனன் அற்புத மானவிக்ரமத்துடன்கூடியதும் காண்டீவத்தினின்றுவிடுபட்டதும் சாணைக்கல்லில்தீட்டப்பட்டதுமான விபாடங்கள்என்கிறபாணங்களு டையகூட்டத்தால் பீஷ்மருடையமகாஸ்திரஸமூகத்தை அட்டஹா ஸம்செய்துகொண்டு நாசம்செய்தான். தடையற்றசெய்கையுள்ள வனும் சிறந்தவானரத்தைக்கொடியாகக்கொண்டவனும் மிக்கபலசா லியுமானஅர்ஜுனன் எல்லாவில்லாளிகளுள்ளும்உத்தமரானஅந்தப் பீஷ்மரின்மீது பளபளப்புள்ளபாணஸமூகங்களையும் பல்லங்களையும் விரைவாக வர்ஷித்தான். அவ்வாறே ஆகாயத்தில் பீஷ்மரால் அடிக் கப்பட்டுச் சிதறின அர்ஜுனனுடையமகாஸ்திரஸமூகத்தை உம்மைச் சேர்ந்தவர்கள் சூரியனாலேநாசம்செய்யப்பட்டஇருளைப்போலக் கண் டார்கள். ஸத்புருஷர்களும் உத்தமர்களுமானபீஷ்மர்அர்ஜுனனிரு வராலும் உண்டுபண்ணப்பட்டதும் விற்களுடையபயங்கரமானசப்தத் துடன்கூடியதும் தைர்யத்தையுடையதுமான இவ்விதமான அந்த த்வந்துவயுத்தத்தை ஜனங்களும் கௌரவர்களும் ஸ்ருஞ்சயர்களும் பார்த்தார்கள்.

---

## அறுபத்தோராவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(திருஷ்டத்யும்னன் சலனுடையபுத்திரனைக் கொன்றது.)

ஐயா! துரோணபுத்திரரும் பூரிஸ்ரவஸனும் சல்யனும் சித்ரஸேனனும் சலனுடையபுத்திரனும் அபிமன்யுவைச் சூழ்ந்துகொண்டனர். ஒருசிங்கக்குட்டி யானைகளோடு எதிர்த்துயுத்தம்செய்வதுபோல அபிமன்யுவானவன் அதிகபராக்கிரமசாலிகளான ஐந்துபுருஷசிரேஷ்டர்களோடு தனியே போர்புரிவதை ஜனங்கள் கண்டார்கள். தவறுமல் லக்ஷ்யத்தைஅடிக்கும்திறமையுடனிருத்தலால் சௌர்யத்திலும் பராக்கிரமத்திலும் அஸ்திரத்திலும் கைத்தேர்ச்சியிலும் அர்ஜுனகுமாரனை அபிமன்யுவுக்கு ஒருவனும் நிகராகவில்லை. அவ்வாறு போரில் வல்லமையைவெளியிடுகின்றவனும் பகைவர்களை அடக்குகிறவனும் மிகுந்தமுயற்சியுடையவனுமான அப்படிப்பட்டபுத்திரனைக் கண்டு பிறகு அர்ஜுனன் ஸிம்மநாதம்செய்தான். ராஜேந்திரரே! அப்படிப்பட்ட கௌரவஸைன்யத்தைப்பீடிக்கின்ற உம்முடைய பௌத்திரனைக்கண்டு உம்மைச்சேர்ந்தவர்கள் எல்லாப்பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். சத்துருக்களைத்தைன்யமடையச்செய்கின்ற அபிமன்யுவானவன் தைர்யமுடையவனுகித் தேஜஸோடும் பலத்தோடும் கௌரவர்களுடையசேனையை எதிர்த்தான். யுத்தகளத்தில் பகைவர்களோடுசண்டையிடுகின்ற அந்தஅபிமன்யுவினுடைய கைத்தேர்ச்சிவழிநிற்கும்பெரியவில்லானது ஸூர்யனுக்குளப்பான ஒளியுள்ளதாகக் காணப்பட்டது. அந்தஅபிமன்யு துரோணபுத்திரரை ஒருபாணத்தாலும் சல்யனைஐந்துபாணங்களாலும் அடித்துப் பிறகு எட்டுப்பாணங்களாலே சலனுடையபுத்திரனதுகொடியையும் அறுத்தான். ஸோமதத்தகுமாரனுலேபிரயோகிக்கப்பட்டதும் பொன்மயமானதண்டமுள்ளதும் ஸர்ப்பத்திற்குஒப்பாகவிளங்குகின்றதுமான அப்படிப்பட்ட பெரியசக்தியை அபிமன்யு கூர்மையானஓரம்பினுல் எதிர்த்து அடித்தான். பல்குனகுமாரனுன அவன் யுத்தத்தில் மிக்கவேகமுள்ள பாணங்களைப்பிரயோகிக்கின்ற சல்யனுடையவில்லைக் கடியவேகமுள்ள ஒருபல்லத்தால் அறுத்தான். அவன் நான்குபல்லங்களாலே நான்கு குதிரைகளையும் அடித்தான். மிகுந்தகோபமுள்ளவர்களானபூரிஸ்ரவஸ், சல்யன், துரோணபுத்திரர், சலன், அவனுடையகுமாரன் இவர்களனைவரும் அர்ஜுனகுமாரனுனஅபிமன்யுவினுடைய புஜபலத்தினுடைய

மிகுதியினால் அவனை எதிர்த்துச்செல்லவில்லை. ராஜேந்திரரே! பிறகு, தனுர்வேதத்தைஅறிந்தவர்களும் தலைமைபெற்றவர்களும் பகைவர்களால்யுத்தத்தில்ஜயிக்கமுடியாதவர்களுமான இருபத்தையாயிரம்த்ரிகர்த்தவீரர்களும் கேகயர்களோடுகூடினமத்ரதேசத்துவீரர்களும் உம்முடையபுத்திரனால்ஏவப்பெற்று, கொல்லஎண்ணங்கொண்டவனும் புத்திரனுடன்கூடியவனுமான அர்ஜுனனைச் சூழ்ந்துகொண்டார்கள். பகைவர்களையடக்குபவரே! அப்பொழுது நான்குபக்கங்களிலும்சூழப்பட்டவர்களும் மகாரதர்களும் பிதாபுத்திரர்களுமான அவ்விருவரையும் ஸேனாபதியான பாஞ்சாலராஜகுமாரன் பார்த்தான். பகைவர்களை வாட்டுகின்றவரே! அனேக ஆயிரக்கணக்கானயானைகளாலும் தேர்க்கூட்டங்களாலும் குதிரைகளாலும் லக்ஷக்கணக்கானகாலாட்களாலும் சூழப்பட்டவனும் புறாநிறமுள்ளகுதிரைகளையுடையவனும் சத்துருவீரர்களைக்கொல்லுகின்றவனுமான அந்தத்ருஷ்டத்யும்னன் ரதத்தின்மீதேறிவில்வில்நாணொலியெழுப்பி மிகுந்தகோபத்தோடு ஸைன்யத்தை ஏவிக்கொண்டு அந்தமத்ரகர்களுடையபடையையும் கேகயர்களையும் எதிர்த்துச்சென்றான். கீர்த்தியுள்ளவனும் உறுதியானவில்லையுடையவனுமான அந்தத்ருஷ்டத்யும்னனாலேபாதுகாக்கப்பட்டதும் மிகுந்த பரபரப்புடன்கூடினரதங்களையும் யானைகளையும் குதிரைகளையுமுடையதும் யுத்தம்செய்யப்போகின்றதுமான அந்தப்படையானது மிகவும் பிரகாசித்தது. பாஞ்சாலகுலத்தைவிருத்திசெய்பவனான அந்தத்திருஷ்டத்யும்னன் அர்ஜுனனைஎதிர்த்துச்செல்லுகின்றக்ருபரை மூன்று பாணங்களாலே தோள்பூட்டில் அடித்தான். பிறகு திருஷ்டத்யும்னன் பத்துக்கணைகளாலே பத்துமத்ரகர்களைக்கொன்று கிருதவர்மாவின் பின்புறத்தைக்காக்கும்யுத்தவீரனைப் பல்லத்தினால் விரைவாகக் கொன்றான். பகைவர்களைத்தவிக்கச்செய்பவனான அவன் மகாத்மாவான பௌரவனுடையபுத்திரனானதமனனை முனைபளபளப்பான ஒருநாராசத்தினாலே அடித்தான். பிறகு சலனுடையபுத்திரன் யுத்தத்தில் கொடியமதங்கொண்டத்ருஷ்டத்யும்னனை முப்பதுபாணங்களாலடித்து அவனுடைய ஸாரதியையும் பத்துப்பாணங்களால் அடித்தான். அவ்வாறு அதிகமாக அடிக்கப்பட்டவனும் மகாவில்லாளியுமானதிருஷ்டத்யும்னன் இரண்டு கடைவாய்களையும் நக்கிக்கொண்டு மிக்ககூர்மையுள்ளஒருபல்லத்தினாலே அவனுடையவில்லை அறுத்தான். அரசரே!பிறகுஅவன் இருபத்தைந்து பாணங்களை விரைவாக அவன்மீதுபிரயோகித்தான். இருபுறங்களிலுமுள்ளஸாரதிகளையும் குதிரைகளையும் கொன்றான். பரதர்களிற்சிறந்தவரே! குதிரைகள்கொல்லப்பட்டதேரிலிருக்கின்ற அந்தஸாம்யமணியி

னுடையபுத்திரன் மிக்கபலசாலியானபாஞ்சாலராஜகுமாரனைப் பார்த் தான். புருஷசிரேஷ்டனான அந்தஸாம்யமனியினுடையபுத்திரன் மிகக் கொடியதும் எஃகினாற்செய்ததுமான ஒருசிறந்தகத்தியைக் கையில் எடுத்துக்கொண்டு காலாளாகவே ரதத்திலிருக்கின்றதிருஷ்டத்யும்னனை நோக்கி விரைவாக ஓடிவந்தான். பெரியஜலப்பிரவாகம்போலவருகின்ற வனும் ஆகாயத்தினின்று விழுகின்றஸர்ப்பம்போன்றவனும் கேடகத் தையும்கத்தியையும் சுழற்றுகின்றவனும் காலத்தினால்அனுப்பப்பட்ட அந்தகன்போன்றவனும் சூரியன்போலஜ்வலிக்கின்றவனும் மதயானை யின்விக்ரமம்போன்றவிக்ரமத்தையுடையவனுமான சலனுடையபுத்தி ரனை அந்தயுத்தகளத்தில் பாண்டவர்களும் பார்ஷதனானதிருஷ்டத் யும்னனும் பார்த்தார்கள். சேனாதிபதியானபாஞ்சாலபுத்திரன் கோப முற்றுத் தனக்கெதிரியாகிவிரைந்து ஓடிவருகின்றவனும் கூர்மையான கத்தியைக்கையில்கொண்டவனும் கேடகத்தைக்கையில்பிடித்தவனும் அம்பினும் அதிகவேகமுள்ளவனும் அவ்விதமாகத்தன்ஸமீபத்தை அடைந்தவனுமான சலபுத்திரனது தலையைக் கதாயுதத்தால் பிளந் தான். ராஜரே! கொல்லப்பட்டுக் கீழேவிழுகின்ற அந்தஸாம்யமனி புத்திரனுடையகையினின்று கத்தியுடன்கூடியதும் நல்லஒளியுள்ளது மானகேடகமானது விரைவாகப் போர்க்களத்தில் விழுந்தது. மகாபல சாலியும் பயங்கரமானவிக்கிரமமுள்ளவனுமான பாஞ்சாலராஜபுத்திரன் கதையினுடையநுனியினால் அவனைஅடித்து மிக்கஸந்தோஷத்தை அடைந்தான். மகாவில்லாளியும் மகாரதனுமான அந்தச்சலபுத் திரன் கொல்லப்பட்டவுடனே உமதுசேனையினின்று பெரிதானஆர வாரம் தோன்றியது. பிறகு சலன் தன்னுடையபுத்திரன்கொல்லப் பட்டதுகண்டு கோபங்கொண்டு யுத்தத்தில் கொடியமதங்கொண் டவனான பாஞ்சாலராஜகுமாரனை வேகத்தோடெதிர்த்து ஓடிவந்தான். சூரர்களும் யுத்தத்தில்அதிகமதங்கொண்டவர்களும் அவ்வாறு யுத்த களத்தில் போர்புரிவதற்காக எதிர்த்திருப்பவர்களுமான அவ்விருவ ரையும் எல்லாஅரசர்களும் கௌரவர்களும் பாண்டவர்களும் கண் டார்கள். பிறகு சத்துருவீரர்களைக்கொல்லுகின்றவனும் கோபங்கொண் டவனுமான சலன் வேணுகங்களாலே மஹாகஜத்தைஅடிப்பதுபோல மூன்றுபாணங்களாலே த்ருஷ்டத்யும்னனை அடித்தான். அவ்வாறே யுத்தத்தில்ஸமர்த்தனானசல்யனும் கோபங்கொண்டு சூரனானத்ருஷ்டத் யும்னனை மார்பிலடித்தான். பிறகு யுத்தம் நடந்தது" என்றுகூறினான்.

---

## அறுபத்திரண்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீமஸேனன்முதலான வீரர்களுடைய யுத்தம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! என்புத்திரனுடையசேனையானது பாண்டுபுத்திரனாலேகொல்லப்படுதலால் முயற்சியைக்காட்டிலும் ஊழே பெரிதென்று நான் எண்ணுகிறேன். அப்பா! என்னைச்சேர்ந்தவர்களே எப்பொழுதும் கொல்லப்பட்டார்களென்றுசொல்லுகிறாய். பாண்டவர்களையோ கவலையற்றவர்களாகவும் மிகுந்தகளிப்புள்ளவர்களாகவும் நித்தியம் சொல்லுகிறாய். ஸஞ்சய! என்னைச்சேர்ந்தவர்களை விசேஷமாகக்கொல்லப்பட்டவர்களாகவும் அதிகமாகநாசம்அடைந்தவர்களாகவும் எப்பொழுதும் சொல்லுகிறாய். இப்பொழுது என்னைச் சேர்ந்தவர்களை ஆண்மையற்றவர்களும் கீழேதள்ளப்பட்டவர்களும் தள்ளப்படுகின்றவர்களும் கொல்லப்பட்டவர்களுமாகச் சொல்லுகிறாய். சக்திக்குத்தக்கபடியுத்தம்செய்கின்றவர்களும் ஜயத்தைக்குறித்துமுயற்சிக்கின்றவர்களுமான கௌரவர்களைப் பாண்டவர்கள் ஜயிக்கவேஜயிக்கிறார்கள். என்னைச்சேர்ந்தவர்கள் நிச்சயமாகவே ஜயிக்கப்படுகிறார்கள். அப்பா! அப்படிப்பட்டநான் தீவ்ரமானவைகளும் துரியோதனனால்உண்டுபண்ணப்பட்டவைகளும் பொறுக்கமுடியாதவைகளுமான பலதுக்கங்களை எப்பொழுதும் கேட்கப்போகிறேன். ஸஞ்சய! எந்த உபாயத்தினாலே என்னைச்சேர்ந்தவர்கள் பாண்டவர்களைத்தோல்வியடையச்செய்து யுத்தத்தில் விஜயத்தை அடைவார்களோ அவ்வுபாயத்தை யான் காணவில்லை" என்றுசொன்னான்.

ஸஞ்சயன், "வேந்தரே! நீர் உறுதியுள்ளவராக மானிடதேகங்களினுடையநாசத்தையும் யானைகள், குதிரைகள், தேர்கள்இவைகளினுடையநாசத்தையும் கேளும். பெரியஅநியாயம் உம்முடையதே. திருஷ்டத்யும்னனோ சல்யனால் ஒன்பதுபாணங்களால்பீடிக்கப்பட்டு மிகுந்தகோபமுண்டு மத்ரதேசாதிபதியை எஃகுஆயுதங்களால் அடித்தான். யுத்தத்தில் ஸமர்த்தனானசல்யனை விரைவாகத் தடுத்ததாகிய த்ருஷ்டத்யும்னனுடைய அற்புதமானபராக்ரமத்தை நாங்கள் கண்டோம். அந்தயுத்தகளத்தில் அப்பொழுது ரதிகர்களான அவ்விருவருக்கும் வேற்றுமையானது காணப்படவில்லை. அவ்விருவருக்கும் ஒருமுகூர்த்தகாலம் யுத்தம் ஸமமாகநடந்தது. மகாராஜரே! பிறகு சல்யன் துவைந்ததும் கூர்மையுள்ளதுமானபல்லத்தினாலே திருஷ்டத்யும்னனுடையவில்லை அந்தயுத்தத்தில் அறுத்தான்; பிறகு யுத்தத்தில்

வர்ஷாகாலத்தில் மேகங்கள் மலையின்மீது மழையைப் பொழிவது போலவே திருஷ்டத்யும்னனைச் சரமாரியினால் மூடினான். திருஷ்டத்யும்னன் பீடிக்கப்பட்டபொழுது அபிமன்யு கோபங்கொண்டு மத்ர ராஜனுடையதேரைநோக்கி வேகத்துடன் எதிர்த்துவந்தான். பிறகு அதிககோபமுள்ளவனும் அளவிடமுடியாதபராக்கிரமமுடையவனு மான அபிமன்யு மத்ரதேசாதிபனுடையரதத்தைநாடிக் கூர்மையுள்ள அம்புகளாலே ருதாயனனுடையபுத்திரனைசல்யனை அடித்தான். அரசரே! பிறகு உம்மைச்சேர்ந்தவர்கள் ரணகளத்தில் அர்ஜுனபுத்திரனைக்கையகப்படுத்தஎண்ணங்கொண்டு விரைவாக மத்ரராஜனுடைய ரதத்தை நான்குபுறங்களிலும் சூழ்ந்துநின்றார்கள். பாரதரே! உமக்கு மங்களம். துர்யோதனன், விகர்ணன், துச்சாஸனன், விவிம்சதி, துர்மர்ஷணன், துஸ்ஸஹன், சித்ரஸேனன், துர்முகன், ஸத்யவிரதன், புருமித்ரன்இவர்கள் மத்ரதேசாதிபதியினுடையரதத்தைப் பாதுகாத்துக் கொண்டு யுத்தத்தில் நின்றார்கள். ரதிகர்களானஉம்முடையஅந்தப் பத்துக்குமாரர்களை மிகுந்தகோபங்கொண்ட பீமஸேனன், பார்ஷதனை திருஷ்டத்யும்னன், திரௌபதிபுத்திரர்களானஐந்துஉபபாண்டவர்கள், அபிமன்யு, மாத்ரிபுத்திரர்களானஇருவர்கள்இந்தப்பத்துவீரர்களும் பற்பலவிதஆயுதங்களைப்பிரயோகித்துக்கொண்டு எதிர்த்தார்கள். அவர்கள் மிக்கஊக்கமுள்ளவர்களாகவும் ஒருவரையொருவர் கொல்வதில்விருப்பமுள்ளவர்களாகவும் எதிர்த்துப் போர்புரிந்தார்கள். அரசரே! உம்முடையதுராலோசனையைஅடியாகக்கொண்ட இந்தயுத்தத்தில் அந்தவீரர்கள் ஒன்றுகூடினார்கள். மஹாபயங்கரமும் குரோதமுள்ளதுமான அந்தப்பத்துரதிகர்களின்போர்நடக்கையில் உம்மைச்சேர்ந்தஸேனைகளிலும் சத்ருப்படைகளிலும்இருக்கின்றதேரோளிகள் இந்தயுத்தத்தைப்பார்த்துக்கொண்டு நின்றார்கள். மஹாரதர்கள் பற்பலவிதஆயுதங்களைப்பிரயோகம்செய்துகொண்டும் ஒருவரையொருவர் பார்த்துக்கர்ஜித்துக்கொண்டும் யுத்தம்செய்தார்கள். (அந்தவீரர்களனைவரும், அப்பொழுது ரோஷமுள்ளவர்களும் ஒருவரைஒருவர்கொல்லும்எண்ணமுள்ளவர்களும் ஒருவரைஒருவர் அடிக்கின்றவர்களும் பரஸ்பரம்பகையுள்ளவர்களுமாகப் போர்புரிந்தார்கள். அந்யோந்யம்ஸ்பர்த்தையால் ஞாதிகள் ஒருவரோடொருவர்சேர்ந்து மிகுந்தகோபமுள்ளவர்களாகி மஹாஸ்திரங்களைப்பிரயோகித்துக்கொண்டு எதிர்த்தார்கள். துரியோதனனோ மிகுந்தகோபங்கொண்டு கூர்மையுள்ளநான்குபாணங்களாலே திருஷ்டத்யும்னனை மஹாயுத்தத்தில் [1] விரைவாகஅடித்தான்.

[1] ஒருசொல் விடப்பட்டது.

அந்தயுத்தத்தில் திருஷ்டத்யும்னனைத் துர்மர்ஷணனும், சித்ரஸேனனும், துர்முகனும், துஸ்ஸஹனும், விவிம்சதியும், துச்சாஸனனும் முறையே இருபதுபாணங்களாலும், ஐந்துபாணங்களாலும், ஒன்பதுபாணங்களாலும், ஏழுபாணங்களாலும், ஐந்துபாணங்களாலும், மூன்றுபாணங்களாலும் அடித்தார்கள். ராஜேந்திரரே! சத்துருக்களைத்தபிக்கச்செய்கின்றவனான த்ருஷ்டத்யும்னன் ஹஸ்தலாகவத்தைக்காண்பித்துக்கொண்டு ஒவ்வொருவரையும் இருபத்தைந்து இருபத்தைந்துபாணங்களால் திருப்பியடித்தான். பாரதரே! அபிமன்யு யுத்தத்தில் ஸத்யவ்ரதனையும் புருமித்திரனையும் பத்துப்பத்துக்கணைகளால் அடித்தான். மாதாவினுடையமனத்திற்குஸந்தோஷத்தையுண்டுபண்ணுகின்றவர்களான மாத்ரீபுத்திரர்கள் யுத்தத்தில் மாதுலனைசல்யனைக் கூர்மையுள்ள அம்புகளாலே அடித்தார்கள். அது ஆச்சரியமாயிருந்தது. மஹாராஜரே! பிறகு சல்யன் ரதிகர்களுள்சிறந்தவர்களும் செய்ததற்குப்பதில்செய்வதில் விருப்பமுள்ளவர்களுமான மருமான்களை அனேகபாணங்களினாலே அடித்தான். (கணைகளால்) மூடப்படுகின்ற அந்தமாத்ரீபுத்திரர்களிருவரும் அசையவில்லை. பிறகு மஹாபலசாலியும் பாண்டுபுத்திரனுமானபீமஸேனன் துரியோதனனைப்பார்த்து முடிவையுண்டுபண்ண நினைந்து கதாயுதத்தைக் கையில்எடுத்தான். கதாயுதத்தைக்கையில் எடுத்தவனும் கொடுமுடியுடன்கூடின கைலாஸம்போன்றவனும் மிக்க புஜபலமுள்ளவனுமான பீமஸேனனைப்பார்த்து உம்முடையபுத்திரர்கள் பயத்தால் ஓடினார்கள். துரியோதனனோ மிகுந்தகோபங்கொண்டு வேகமுள்ள பதினாயிரம்யானைகளடங்கியபடையுடன் மகதநாதனை (யுத்தத்திற்காக) ஏவினான். துரியோதனராஜன் அந்தயானைப்படையோடு மகதநாதனை முன்னிட்டுக்கொண்டு பீமஸேனனை எதிர்த்துச்சென்றான். பீமன் தன்னையெதிர்த்துவருகின்றயானைப்படையைப்பார்த்துக் கதையைக்கையில்கொண்டு ஸிம்மம்போல உரக்கக்கர்ஜித்துக்கொண்டு ரதத்தினின்று கீழேஇறங்கினான். பீமன் இரும்பாலாகியகனமானபெரியகதையைக் கையில்எடுத்துக்கொண்டு வாயைத்திறந்துகொண்டிருக்கும்அந்தகன்போல யானைப்படையை எதிர்த்துவந்தான். நீண்டகைகளையுடைய பலசாலியான பீமஸேனன் கதையினாலே யானைகளைக்கொன்றுகொண்டு வஜ்ரத்துடன் கூடினஇந்திரன்போல யுத்தத்தில் ஸஞ்சரித்தான். பெரிதும் மனத்தையும்ஹ்ருதயத்தையும்நடுங்கச்செய்கின்றதுமான கர்ஜிக்கின்ற பீமனுடைய அந்தச்சப்தத்தினால் யானைகள் வெருண்டு ஒன்றுகூடி ஒன்றையொன்று தாக்கின. பிறகு த்ரௌபதிபுத்திரர்கள், மகாரதனான

அபிமன்யு, நகுலன், ஸஹதேவன், பார்ஷதனான திருஷ்டத்யும்னன் ஆகியஇவர்கள் பீமஸேனனுடைய பின்புறத்தைப்பாதுகாக்கின்றவர்களாகவும் விரைவாகஓடிவருகின்றவர்களாகவும் மேகங்கள் மலைக்கூட்டங்களின்மீது வர்ஷதாரைகளைப்பொழிவதுபோல யானைகளின்மீது அம்புமழையைப் பொழிந்தார்கள். சத்துருக்களுடையகூட்டங்களை யழிப்பவனும் பாண்டுவின்வம்சத்தில்உதித்தவனும் நகுலபுத்திரனுமானசதாநீகன் யுத்தத்தில் கூர்மையுள்ளவாள்களாலும் க்ஷுரப்ரங்களாலும் துவையப்பட்டபல்லங்களாலும் அஞ்சலிகங்களாலும் யானைகளின்மீதேறிப் போர்புரிகின்றவீரர்களுடையதலைகளை அறுத்தான். கீழேவிழுகின்றதலைகளாலும், அலங்கரிக்கப்பட்டதோள்களாலும் அங்குசங்களுடன்கூடினகைகளாலும் யுத்தபூமியானது கல்மாரியுடன் கூடியது போல விளங்கியது. யானைகளினுடையபிடர்களில் தலையறுபட்டயானைவீரர்கள் மலையுச்சிகளில்கிளைகளொடிந்தமரங்கள்போலக் காணப்பட்டார்கள். மஹாத்மாவும் பார்ஷதனுமான திருஷ்டத்யும்னனாலே கொன்றுவீழ்த்தப்பட்டுக்கீழேவிழுகின்றவேறுபெரியயானைகளையும் கண்டோம். பிறகு அரசனானமகதநாதன் ஐராவதத்திற்கு ஒப்பானஒருயானையை ஸுபத்திராபுத்திரனான அபிமன்யுவினுடையரதத்தைக்குறித்து யுத்தத்தில் தூண்டினான். சத்துருவீரர்களைக்கொல்லுகிற வீரனான ஸுபத்திராபுத்திரன் மகதநாதனுடையபெரியயானை தன்னைஎதிர்த்துவருவதைக்கண்டு ஒருபாணத்தால் அடித்தான். சத்துருபட்டணங்களைஜயிக்கின்றஸ்வபாவமுடைய அபிமன்யுவானவன், யானையைநடத்திவருகின்ற அந்தமகதநாதனுடையதலையை வெள்ளிக்கட்டுடன்கூடின ஒரு பல்லத்தினாலே அறுத்தான். பாண்டுபுத்திரனான பீமஸேனனும் அந்தயானைப்படையில்நுழைந்து இந்திரன் மலைகளைப் பிளப்பதுபோல. யானைகளை அடித்துக்கொண்டு யுத்தரங்கத்தில் ஸஞ்சரித்தான். வஜ்ரத்தால்அடிக்கப்பட்டமலைகளைப்போல அந்தயுத்தகளத்தில் பீமஸேனனுடைய ஒரேஅடியினால் யானைகள்கொல்லப்படுவதைக் கண்டோம். அரசரே! தந்தங்கள்முறிந்தவைகளும் துதிக்கைகளறுபட்டவைகளும் துடைகளடிபட்டவைகளும் முதுகும்முதுகெலும்பினடியும் ஒடிபட்டவைகளும் கொல்லப்பட்டவைகளும் பர்வதங்கள்போன்றவைகளுமான சிலயானைகளையும் கர்ஜிக்கின்றவைகளும் துன்பமடைகின்றவைகளும் யுத்தத்தைஅடைந்துபுறங்காட்டிஓடுகின்றவைகளுமான சிலயானைகளையும் அதிகமாகஓடுகின்றவைகளும் பயத்தினால் மிகநடுக்கமுற்றவைகளும் மிகுதியாகவிஷ்டைபோடுகின்றவைகளும் பீமஸேனனுடையயுத்தமார்க்கங்களில் பர்வதங்கள்போலவீழ்ந்திருக்

கின்றவைகளும் கொல்லப்பட்டவைகளும் நுரைகளைக்கக்குகின்றவைகளுமான அனேகயானைகளையும் நான் கண்டேன். இன்னும் மற்றப் பெரியயானைகள் கும்பஸ்தலம்உடைந்து உதிரத்தைக்கக்கிக்கொண்டும் மிகத்துடித்துக்கொண்டும் பூமியிலிருக்கின்றமலைகள்போல யுத்தபூமியையடைந்திருந்தன. கொழுப்பினாலும்உதிரத்தாலும்பூசப்பட்டஅங்கங்களையுடையவனும் ஊனீரினாலும் மஜ்ஜைகளாலும் நனைக்கப்பட்டவனுமானபீமன் போர்க்களத்தில் தண்டபாணியானஅந்தகன்போல ஸஞ்சாரம்செய்தான். யானைகளினுடையரக்தங்களால்நனைக்கப்பட்ட கதாயுதத்தைக் கையில்கொண்டவனும் கோரரூபமுள்ளவனுமான பீமஸேனன் பிநாகம்என்கிறவில்லைக்கையிலேந்திய பரமசிவன்போலப் பயங்கரனாயிருந்தான். கோபங்கொண்டபீமஸேனனாலே நன்குநாசம் பண்ணப்படும்யானைகள் துன்புறத்தப்பட்டு உம்முடையசேனையை அடித்துக்கொண்டு விரைவாகஓடின. மகாவில்லாளியும் யுத்தம்செய்கின்றவனும் வீரனுமான அந்தப்பீமனை வஜ்ரபாணியானஇந்திரனைத் தேவர்கள்காப்பதுபோல அபிமன்யுமுதலானரதிகர்கள் பாதுகாத்தார்கள். [1] யானையினுடையரக்தங்களால்நனைக்கப்பட்ட கதாயுதத்தைக்கையில்கொண்டபீமஸேனன் யமன்போலப்பயங்கரனாகக்காணப்பட்டான். பாரதரே! கதையோடுகூட எல்லாத்திக்குக்களிலும்ஸஞ்சரித்துப்போர்புரிகின்றபீமனை ரணகளத்தில் நர்த்தனம்செய்கின்ற சங்கரரைப்போலக் கண்டோம். மகாராஜரே! யமதண்டத்திற்குஒப்பானதும் பெரியதும் இந்திரனுடையவஜ்ராயுதத்திற்குஒப்பானஒலியுள்ளதும் கோரமானதும் பகைவர்களை ஹிம்ஸிக்கின்றதும் மயிர்களோடும்மஜ்ஜைகளோடும்கலந்துகொண்டிருக்கின்றதும் ரக்தத்தால்நன்குபூசப்பட்டதுமான அந்தப்பீமனுடையகதாயுதத்தை, கோபங்கொண்டு ஜீவராசிகளைக் கொல்லுகின்றருத்திரருடையபினாகத்தைப்போலக் கண்டோம். இடையன் பசுக்கூட்டங்களைத் தடியினால்ஓட்டுவதுபோலப் பீமன் கதாயுதத்தினாலே யானைப்படையை ஓட்டினான். கதாயுதத்தினாலும் பாணங்களாலும் நான்குபக்கங்களிலும்அடிக்கப்படும்அந்தஉம்முடையயானைகள் தமதுபடைகளையேஅடித்துக்கொண்டு நான்குபக்கங்களிலும் ஓடின. பீமன் பெருங்காற்று மேகங்களைச்சிதறஅடிப்பதுபோல யானைகளைச் சின்னபின்னமாகஅடித்து மயானத்தில் சூலபாணியான ருத்திரர்நிற்பதுபோல நெருங்கினயுத்தகளத்தில் நின்றான்.

---

[1] பொருந்தாமையால் ஒருசொல் விடப்பட்டது.

## அறுபத்துமூன்றாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(ஸாத்யகியும் பூரிஸ்ரவஸும் போர்புரிந்தது.)

அந்தயானைப்படைகொல்லப்பட்டவுடன் உம்முடையபுத்திரனான துரியோதனன், 'பீமஸேனனைக்கொல்லுங்கள்' என்று எல்லாஸைனிகர்களையும் ஏவினான். பிறகு எல்லாப்படைகளும் உமதுபுத்திரனுடையகட்டளையினாலே, பயங்கரமானசப்தங்களைவெளியிட்டுக் கர்ஜிக்கின்றபீமஸேனனை எதிர்த்தோடிவந்தன. எல்லையற்றதும் தேவர்களாலும்மிகவும்ஸஹிக்கமுடியாததும் பர்வகாலத்தில் ஸமுத்திரம்போல நான்குபக்கத்திலும்பொங்கிவருகின்றதும் எவ்விதத்தாலும்அக்கரைகாணமுடியாததும் ரதங்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் நிரம்பியதும் சங்கங்கள் துந்துபிகள் இவைகளின் சப்தங்களால் நிரம்பியதும் எண்ணிறந்தரதங்களோடும்காலாட்படைகளோடுங்கூடியதும் புழுதியினால்நான்குபக்கங்களிலும்சூழப்பட்டதும் வேறொருபெருங்கடல்போன்றதும் நிலைதவறும்படிசெய்யமுடியாததுமான அந்த ஸேனாஸமுத்திரத்தைப் பீமஸேனன் கரைபோலத் தடுத்தான். அரசரே! யுத்தகளத்தில் மஹாபலசாலியும் பாண்டுபுத்திரனுமான பீமஸேனனுடைய ஆச்சரியகரமானதும் மனிதச்செய்கைக்குமேற்பட்டதுமான அந்தச்செய்கையை நாங்கள் கண்டோம். பீமஸேனன் யுத்தத்தில்முயற்சியுள்ளவர்களும், குதிரைகளையும் ரதங்களையும் யானைகளையுமுடையவர்களுமான எல்லா அரசர்களையும் பரபரப்பில்லாமலே கதையினாலே தடுத்தான். ரதிகர்களுள்உத்தமனான அந்தப்பீமன் அந்த ஸைனியஸமூகங்களைக் கதையினால்தடுத்துக்கொண்டு கைகலந்த அந்த யுத்தத்தில் மேருபர்வதம்போல் அசைவற்றுநின்றான். மிகுந்தஸங்கடகரமும் கோரமும் அத்யுக்ரமுமான அந்தக்காலத்தில் ஸஹோதரர்களும் புத்திரர்களும் பார்ஷதனான திருஷ்டத்யும்னனும் த்ரௌபதிபுத்திரர்களான(பிரதிவிந்தியன்)முதலானவர்களும் அபிமன்யுவும் பகைவர்களால்ஜயிக்கப்படாதவனானசிகண்டியும் பயம்நேர்ந்திருக்கின்ற ஸமயத்தில் மஹாபலசாலியானபீமஸேனனை விட்டு விலகவில்லை. பிறகு பீமஸேனன் கூர்மையுள்ளதும் உருக்கினால்செய்யப்பட்டதும் கனமுள்ளதுமான பெரியகதையைக் கையில்எடுத்துக்கொண்டு தண்டபாணியான அந்தகன்போல உம்முடையயுத்தவீரர்களைக்குறித்து ஓடிவந்தான். பகைவரை அடிமதிப்பவனும் பிரபுவுமானபாண்டவன் தேர்க்கூட்டங்களையும் குதிரைக்கூட்டங்களையும்நாசம்செய்துகொண்டும் கைகளின்

வேகத்தாலும் துடைகளின்வேகத்தாலும் தேர்க்கூட்டங்களை[1] இழுத்துக்கொண்டும் யுகாந்தகாலத்தில் காலன்போலக் கொன்றுகொண்டு யுத்தபூமியில் உலாவினன். யானை கோரைக்காடுகளை அழிப்பதுபோலப் பீமன் கௌரவஸைனியங்களை விரைவாக நன்குஅடித்தான். ரதங்களினின்றும் ரதிகர்களையும் யானைகளினின்றும் யானைவீரர்களையும் குதிரைகளினின்றும் குதிரைவீரர்களையும் பூமியில் காலாட்களையும் அடித்துத்தள்ளினன். மிக்கபுஜபலமுள்ளபீமஸேனன் உம்முடையபுத்திரனுடையபடையிலிருக்கின்ற எல்லாவீரர்களையும் காற்றானது வலிமையினல் மரங்களைஒடிப்பதுபோலக் கதையினல் நாசஞ்செய்தான். யானைகளையும் குதிரைகளையும் கீழேவிழும்படிசெய்கின்ற அந்தக்கதாயுதமானது மஜ்ஜையினுலும் ஊனீராலும் மாம்ஸங்களாலும் ரக்தத்தாலும் நன்றாகப்பூசப்பட்டதும் மஹாபயங்கரமுமாகக் காணப்பட்டது. ஆங்காங்கு கொல்லப்பட்டமனிதர்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் யுத்தபூமியானது மிருத்யுவினுடையஇல்லத்திற்குஒப்பாயிற்று. கோபங்கொண்டுஜீவராசிகளைநாசம்செய்கின்றருத்திரருடைய பிநாகம்போன்றதும் யமதண்டம்போன்றதும் உக்ரமாயிருக்கின்றதும் இந்திரனதுவஜ்ராயுதத்திற்குநிகரானஒலியுள்ளதும் நாசஞ்செய்கின்றதும் அச்சத்தைவிளைவிப்பதுமான பீமஸேனனுடையகதாயுதத்தை அனைவரும்கண்டார்கள். கதாயுதத்தைச்சுழற்றுகின்ற மஹாபலசாலியான அந்தக்குந்திபுத்திரனுடையரூபமானது யுகாந்தகாலத்தில் காலனுடையவடிவம்போல் மகாகோரமாக விளங்கியது. அவ்வாறு பெரிய ஸேனையை அடிக்கடிதுரத்திஅடிப்பவனும் மிருத்யுவைப்போலவருகின்றவனுமான பீமனைக்கண்டு எல்லோரும் துக்கமுள்ளவர்களானர்கள். பாரதரே! பாண்டவன் கதையைக்கையில்எடுத்துக்கொண்டு எங்கெங்கஇடத்தில் பார்க்கிறானே அந்தந்தஇடத்தில் எல்லாச்சேனைகளும் பிளக்கப்பட்டன. பலத்தினலே ஸைனியங்களைநன்றாகப்பிளக்கின்றவனும் அளவற்றஆற்றலுள்ளவனும் வாயைத்திறந்துகொண்டிருக்கும்அந்தகன்போலச் சைனியங்களைவிழுங்குகின்றவனும் அவ்வாறுபயங்கரமானகாரியத்தைச்செய்கின்றவனும் கையில்பெரியகதாயுதம்பிடித்தவனுமான அந்தப்பீமனைக்கண்டு பீஷ்மர் மழையுடன் கூடினமேகம்போலச் சரமாரியினல் (பீமனை) மூடிக்கொண்டு பெரிதான தேரொலியுடன் சூரியன்போற்பிரகாசிக்கின்றரதத்தோடு விரைவாக அவனை எதிர்த்துவந்தார். மிக்கபாகுபலமுள்ளபீமன் மிகுந்தகோபங்கொண்டு வாயைத்திறந்துகொண்டிருக்கும்அந்தகன்போல அங்ஙனம்

[1] ஒருசொல் விடப்பட்டது.

வருகின்ற அந்தப்பீஷ்மரைக்கண்டு அவரை எதிர்த்தான். அந்த க்ஷணத்தில் சினிகுலத்தில்பிறந்தவர்களுள்சிறந்தவீரனும் ஸத்யஸந்தனுமான ஸாத்யகி உறுதியானவில்லினால் பகைவர்களை அடித்துக்கொண்டும் உமதுபுத்திரனுடைய ஸைனியத்தை நடுங்கச்செய்துகொண்டும் பிதாமஹரை எதிர்த்தான். பாரதரே! வெள்ளிபோல விளங்குகின்ற குதிரைகளோடுவருகின்றவனும், கூர்மையுள்ளவைகளும் நல்லகணுக்களுள்ளவைகளுமான அம்புகளை வர்ஷிக்கின்றவனுமான அந்தஸாத்யகியை அப்பொழுது உம்மைச்சேர்ந்த எல்லா (வீரர்களுடைய) கூட்டங்களும் தாங்கிநிற்பதற்குச் சக்தியற்றவையாயின. அப்பொழுது அலம்புஸன்என்கிறராக்ஷஸன் இப்படிப்பட்ட ஸாத்யகியைப் பத்துப்பாணங்களால் அடித்தான். சினியினுடையபேரனான ஸாத்யகியும் நான்குபாணங்களால் அவனைத்திருப்பியடித்துத் தேருடன் எதிர்த்துவந்தான். பகைவரினிடையில் நாற்புறங்களிலும் சுழன்றுகொண்டும், குருபுங்கவர்களை (யுத்தரங்கத்தைவிட்டு) ஓட்டிக்கொண்டும், யுத்தத்தில்அடிக்கடிஸிம்மநாதம்செய்துகொண்டும்வருகின்ற வ்ருஷ்ணிவீரனான ஸாத்யகியைக்கண்டு உம்முடையபுத்தவீரர்கள், மேகங்கள் ஜலவேகங்களால் மலையைஅடிப்பதுபோலச் சரமாரிகளைப் பொழிந்தார்கள். ஆனாலும் மத்தியான்னகாலத்தில் நன்றாகப்பிரகாசிக்கின்றசூரியனைப்போல அவனைஸஹிப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். வேந்தரே! அச்சேனையில் ஸோமதத்தனுடையபுத்திரனைத்தவிர வேறு ஒருவனேனும் துக்கத்தையடையவில்லையென்பதில்லை. பாரதரே! மகாத்மாவும் ஸோமதத்தனுக்குக்குமாரனுமான அந்தப்பூரிஸ்ரவஸ் வில்லைக்கையிலெடுத்துத்தன்னைச்சேர்ந்த ரதிகர்கள் துரத்தப்படுவதுகண்டு ஸாத்யகியைஎதிர்த்துப்போர்புரியவிரும்பி அவனை எதிர்த்தான்.

---

## அறுபத்துநான்காவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(பீமன் துரியோதனனுடையதம்பிகள்எண்மரைக்கொன்றதும், கடோத்கசனிடம்பயந்து கௌரவர்கள் போரைநிறுத்தியதும்.)

அரசரே! பிறகு பூரிஸ்ரவஸ் அதிககோபங்கொண்டு வேணுகங்களாலே பெரியயானையைஅடிப்பதுபோல ஒன்பதுபாணங்களாலே ஸாத்யகியை அடித்தான். அளவிடுதற்கரியபராக்கிரமமுள்ள ஸாத்யகியும் எல்லாஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே பதிவான

கணுக்களுடன்கூடின அம்புகளால் கௌரவனைத் தடுத்தான். பிறகு துரியோதனராஜன் தம்பிகளால்சூழப்பட்டு யுத்தத்தில்முயற்சியுடன் பூரிஸ்ரவஸை நாற்புறத்திலும் சூழ்ந்துகொண்டான். அதிகபராக்கிரமமுள்ள பாண்டவர்களனைவரும் யுத்தத்தில் வேகமுடையவனான அந்தஸாத்யகியை நான்குபக்கத்திலும் சூழ்ந்துகொண்டுநின்றார்கள். பாரதரே! பீமஸேனனோ மிக்ககோபங்கொண்டு கதையையெடுத்துத் துரியோதனன்முதலான உம்முடையபுத்திரர்கள் எல்லோரையும் வளைத்துக்கொண்டான். கோபமும் பொறுமையுமுள்ள உம்முடைய புத்திரனானநந்தகனோ அனேகஆயிரக்கணக்கான ரதங்களோடு மகாபலசாலியானபீமஸேனனைக் கழுகிறகுகள்பூண்டவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான ஆறுபாணங்களால் அடித்தான். அரசரே! அப்பொழுது துரியோதனன் கோபங்கொண்டு கூர்மையுள்ள ஒன்பதுபாணங்களாலே மஹாரதனான பீமஸேனனை மார்பில் அடித்தான். பிறகு மிக்கபுஜபலமுள்ளவனும் அளவற்றதேகபலமுள்ளவனுமான பீமன் ரதங்களுட்சிறந்ததன்ரதத்தின்மீதேறி விசோகனென்கிற தன்ஸாரதியைநோக்கி, 'மகாரதர்களும் சூரர்களுமான இந்தத் திருதராஷ்டிரகுமாரர்கள் ஒன்றுசேர்ந்து மிகுந்தகோபங்கொண்டு யுத்தரங்கத்தில் என்னையே கொல்வதற்கு முயற்சித்திருக்கின்றனர். பாகனே! இந்தப்போர்க்களத்தில் இப்பொழுது நான் ஸஹோதரர்களைப் பார்த்தலால் அனேகவருஷகாலங்களாகஎண்ணப்பட்டிருக்கின்ற நம்முடையமனோரதவிருக்ஷம் (இப்பொழுதுதான்) பழத்தோடுகூடியதாயிற்று. அசோக! எந்தவிடத்தில் ரதங்களின்உருளைகளாலே தூற்றப்பட்டபுழுதிகள் திசைகளினிடையில் பாணஸமூகங்களோடு ஆகாயத்தை நாடப்போகின்றனவோ அந்தஇடத்தில் துரியோதனராஜன் தானே யுத்தஸன்னத்தனாக நிற்கிறான். அந்தஇடத்திலேயே அதிகமதமுள்ளவர்களும் குலபுத்திரர்களுமான இவனுடையபிராதாக்களும் யுத்தஸன்னத்தர்களாக நிற்கிறார்கள். இவர்களை இப்பொழுது நீ பார்த்துக்கொண்டிருக்கையிலேயே நான் கொல்லப்போகிறேன்; ஸம்சயமில்லை. ஸாரதியே! ஆதலால் யுத்தத்தில்முயற்சியுள்ளவனாக என்குதிரைகளை இழுத்துநடத்து' என்று கட்டளையிட்டான். ராஜரே! பீமன் இங்ஙனம்கூறிப் பின் உமதுபுத்திரனை நன்றாகத்தீட்டப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளும் பொன்னாலலங்கரிக்கப்பட்டவைகளுமான அம்புகளால் அடித்தான். நந்தகனையும் மூன்றுஅம்புகளால் நடுமார்பிலடித்தான். மகாபலமுள்ளவனான அந்தப் பீமனைத் துரியோதனன் அறுபதுபாணங்களால்அடித்து மிக்ககூர்மை

யான வேறுமூன்றுபாணங்களினாலே விசோகனையும் அடித்தான். அரசரே! துரியோதனன் நகைத்துக்கொண்டு மிக்ககூர்மையுள்ள மூன்று பல்லங்களாலே யுத்தத்திற்பிரகாசிக்கின்ற பீமனுடையவில்லைக் கைபிடிக்குமிடத்தில் துண்டாக்கினான். பரதர்களிற்சிறந்தவரே! மஹாராஜரே! பீமஸேனன் ஸாரதியானவிசோகனை வில்லைக்கையிற்கொண்ட உமதுபுத்ரன் போரில் கூரியஅம்புகளால் வருத்துவதுகண்டு அதனைப் பொறாமல் பரபரப்புடன் உம்முடையகுமாரனைக்கொல்வதற்காகத் திவ்யமானவில்லைக் கையிலெடுத்தான். பீமன் மிகுந்தகோபமுண்டு இறகுகள்பூண்ட க்ஷுரப்ரமென்றபாணத்தை வில்லிற்பூட்டி அதனால் துரியோதனராஜனுடைய சிறந்தவில்லைத் துண்டாக்கினான். உம்முடையபுத்திரனான அந்தத்துரியோதனன் சினமிகுந்து அறுக்கப்பட்ட (அந்த) வில்லையெறிந்துவிட்டு மிகுந்தவேகமுள்ளவேறுவில்லை எடுத்துக் காலமிருத்யுவுக்குச் சமமாகவிளங்குகின்ற கோரமானபாணத்தை அதனில்பூட்டி அதனாலே மிகுந்தகோபத்தோடு பீமஸேனனை நடுமார்பில் அடித்தான். நன்றாகஅடிக்கப்பட்டவனும் வருத்தமுற்றவனுமான அந்தப்பீமன் தேரின்மத்தியில் உட்கார்ந்தான். ரதத்தின் மத்தியில்உட்கார்ந்த அந்தப்பீமன் மூர்ச்சையையடைந்தான். துன்பமுற்ற அந்தப்பீமனைப்பார்த்து அபிமன்யுவைமுதன்மையாகவுடையவர்களும் சிறந்தவில்லாளிகளுமான பாண்டவர்களைச்சேர்ந்த மஹாரதர்கள் பொறுக்கவில்லை. பிறகு அவர்கள் மிகுந்தஊக்கத்துடன் உமதுபுத்திரனுடையமுடியில் உக்ரமானதேஜஸுள்ள சஸ்திரங்களினுடைய நெருங்கினமழையைப் பொழிந்தார்கள். பிறகு பேராற்றலுள்ளவனும் பாண்டுநந்தனனுமான பீமஸேனன் பிரஜ்ஞையையடைந்து துரியோதனனை மூன்றம்புகளாலும் திரும்பவும் ஐந்துஅம்புகளாலும் அடித்துப் பொற்கட்டுக்களுள்ள இருபத்தைந்துபாணங்களால் சல்யனை அடித்தான். அடிக்கப்பட்டவனும் பெரியவில்லாளியுமான அந்தச்சல்யன் யுத்தத்தைவிட்டு விலகினான். பிறகு ஸேனாபதி, ஸுஷேணன், ஜலஸந்தன், ஸுலோசனன், உக்ரன், பீமரதன், பீமன், வீரபாகு, அலோலுபன், துர்முகன், துஷ்ப்ரதர்ஷன், விவித்ஸு, விகடன், ஸமன் என்கிற உமதுபதினான்குபுத்திரர்கள் பீமனை எதிர்த்தார்கள். அவர்கள் கோபத்தினால் கண்கள்மிகச்சிவந்து பலகணைகளைத் தொடுத்துக்கொண்டு ஒன்றுசேர்ந்து பீமஸேனனை எதிர்த்துஓடிவந்து நன்கு அடித்தார்கள். மஹாபலமுள்ளவனும் வீரனும் மிக்கபுஜபலமுள்ளவனும் பாண்டுநந்தனனுமானபீமஸேனன் உம்முடையபுத்திரர்களைப்பார்த்து இரண்டுகடைவாய்களையும் நக்கிக்கொண்டு பசுக்களின்

மத்தியில் செந்நாய் பாய்வதுபோலப் பாய்ந்து கருடன்போன்றவேகத்துடன் க்ஷுரப்ரத்தினால் ஸேனாபதியினுடையதலையை அறுத்தான். நீண்டகைகளையுடையவனான பீமன் மனக்களிப்புடன் உரக்க அட்டஹாஸம்செய்து மூன்றுபாணங்களால் ஜலஸந்தனைப்பிளந்து யமலோகத்துக்கு அனுப்பினான். பிறகு ஸுஷேணனையுங்கொன்று மிருத்யுவினிடம் அனுப்பினான். சந்திரனுக்குஒப்பானதும், குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டதும், தலைப்பாகையுடன்கூடியதுமான உக்கிரனுடையதலையை ஒருபல்லத்தினாலே பூமியில்தள்ளினான். யுத்தத்தில் வீரனானபாண்டவன் எழுபதுபாணங்களாலே குதிரைகளோடும் கொடிமரத்தோடும் ஸாரதியோடும் வீரபாகுவைப் பரலோகத்திற்குஅனுப்பினான். மன்னரே! பீமஸேனன் நகைத்துக்கொண்டு கொடியமதங்கொண்டவர்களும் உம்முடையபுத்திரர்களுமான பீமன் பீமரதனிருவரையும் யமலோகத்தையடையும்படிசெய்தான். பிறகு பீமன் மகாயுத்தத்தில் எல்லாஸைனிகர்களும்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது ஸுலோசனனையும் க்ஷுரப்ரத்தினால் யமனுடையவீட்டிற்கு அனுப்பினான். அரசரே! உம்முடையபுத்திரர்களும் அங்கு மிச்சமாயிருந்தவர்களும் அந்தப்பீமஸேனனுடைய பராக்கிரமத்தைக்கண்டு அவனிடத்தினின்றுண்டான பயத்தினால் பீடிக்கப்பட்டும் மகாபலசாலியான அவனால் அடிக்கப்பட்டும் திசைகளில் ஓடினார்கள். பிறகு, பீஷ்மர் மஹாரதர்களெல்லாரையும்நோக்கி, 'கொடியவில்லைக்கையில்கொண்ட இந்தப்பீமன் யுத்தத்தில் கோபங்கொண்டு சிறப்புடையவர்களையும் பிராயமுதிர்ந்தவர்களையும் ஒன்றுசேர்ந்திருக்கின்றசூரர்களையும் மஹாரதர்களான தார்த்தராஷ்டிரர்களையும் நாசம்செய்தலால் இவனைத் தாமதமின்றிப் பிடியுங்கள்' என்று கூறினார். பிறகு இவ்வாறு சொல்லப்பட்ட துர்யோதனனுடைய ஸைநிகர்களனைவரும் மிகவும் கோபங்கொண்டு மகாபலசாலியான பீமஸேனனைக்குறித்து எதிர்த்து ஓடிவந்தார்கள். அரசரே! பகதத்தனானவன் பீமனிருக்குமிடத்திற்கு மதப்பெருக்குற்ற யானையுடன் விரைவாக எதிர்த்துவந்தான்; யுத்தம்செய்வதற்காகவரும்பொழுதே பீமஸேனனை மேகமானது சூரியனைமூடுவதுபோல அம்புகளாலே யுத்தத்தில் கண்ணிற்குப்புலப்படாமல்செய்தான். அபிமன்யுவை முதன்மையாகக்கொண்டவர்களும் யுத்தத்தில் தங்கள் புஜபலத்தையே துணையாகக்கொண்டவர்களுமான மஹாரதர்கள், பகதத்தன் அம்புகளால் பீமனை அவ்வாறுமூடினதைப் பொறுக்கவில்லை. அவர்கள் இந்தப்பகதத்தனைச் சரமாரியோடு நான்குபக்கத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். அவர்கள் எல்லாப்பக்கங்களிலும் பக

தத்தனுடைய யானையையும் சரமாரியினால் பிளந்தார்கள். வேந்தரே! அந்த எல்லா மகாரதர்களாலும் சஸ்திரவருஷத்தினால் அடிக்கப்பட்டதும், பற்பல அடையாளமுள்ளவைகளும் மிக்ககூர்மையுள்ளவைகளுமான (அம்புகளாலே) பெரியஉதிரப்பெருக்குண்டுபண்ணப்பட்டதுமான அந்தப்ராக்ஜ்யோதிஷதேசத்தரசனுடைய யானையானது, சூரியனுடையகிரணங்களாலே கோக்கப்பட்ட பெரியமேகம்போல யுத்தத்தில் பார்ப்பதற்கு அழகுள்ளதாயிருந்தது. பகதத்தனாலே தூண்டப்பட்டதும் மதஜலத்தைப்பெருக்கும் தன்மையுள்ளதுமான (அந்த) யானையானது இரண்டுமடங்குவேகத்தையடைந்து காலடிகளாலே பூமியை நடுங்கும்படிசெய்துகொண்டு காலனால்அனுப்பப்பட்ட அந்தகன்போல அவர்களனைவரையும் எதிர்த்து ஓடிவந்தது. எல்லாமஹாரதர்களும் அந்தயானையினுடைய மிகப்பெரிதான அந்த ரூபத்தைக் கண்டு (இது ஒருவராலும்) ஸஹிக்கமுடியாததென்று எண்ணி மனவூக்கத்தைஇழந்தனர். மஹாராஜரே! பிறகு அரசன் கோபமூண்டு அமிழ்ந்தகணுக்களுள்ள அம்பினாலே பீமஸேனனை நடுமார்பில் அடித்தான். மஹாரதனும் சிறந்தவில்லாளியுமான அந்தப்பீமன் அவ்வரசனாலே அதிகமாக அடிக்கப்பட்டு மயக்கத்தால் மனநிலைதவறிக் கொடிமரத்தில் சாய்ந்தான். பிரதாபசாலியானபகதத்தன் பயந்தவர்களான அந்தப்பாண்டவவீரர்களையும் மூர்ச்சையடைந்த பீமஸேனனையும் கண்டு உரக்கஸிம்மநாதம்செய்தான். அரசரே! பிறகு ராக்ஷஸனும் கோரரூபமுள்ளவனுமான கடோத்கசன், பீமன்அவ்விதநிலைமையை அடைந்ததைக்கண்டு மிக்ககோபமூண்டு அவ்விடத்திலேயே மறைந்தான். அந்தக்கடோத்கசன் பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை விருத்திபண்ணக்கூடிய குரூரமானமாயையைச்செய்து அரைநிமிஷத்திற்குள் பயங்கரமானஉருவத்தைஅடைந்து தன்மாயையினால் உண்டுபண்ணப்பட்ட ஐராவதத்தின்மீது வீற்றிருப்பவனாகக் காணப்பட்டான். அந்தயானையை மற்றுமுள்ள அநேகதிக்கஜங்கள் பின்தொடர்ந்தன. அஞ்சனம், வாமனம், நல்லொளிபொருந்திய மகாபத்மம் ஆகிய மூன்றுபெரியயானைகளிலும் அரக்கர்கள் வீற்றிருந்தனர். (அந்த யானைகள்) உடல்பருத்து மும்மதங்களையும் மிகப்பெருக்கிக்கொண்டு தேஜஸும் வீரியமும் பலமுமுள்ளனவாகவும் மகாபலபராக்கிரமமுள்ளனவாகவும் காணப்பட்டன. சத்துருக்களைத்தவிக்கச்செய்பவனான கடோத்கசன் யானையையுடைய பகதத்தனைக் கொல்லஎண்ணி அப்பொழுது தன்யானையைத் தூண்டினான். மகாபலசாலிகளான அவ்வரக்கர்களால் தூண்டப்பட்ட நான்குதந்தங்களுள்ள (அந்தயானைக

ளும்) மற்றயானைகளும் நான்குதிக்குகளினின்றும் மிக்ககோபத்தோடு பகதத்தனுடைய அந்தயானையைக் கொம்புகளால் குத்தித் துன்புறுத்தின. அந்தயானைகளால் துன்பமடைந்தும் பாணங்களால்அடிக்கப்பட்டும் வேதனையினால் தைந்யமுற்ற அந்த (பகதத்தனுடைய) யானையானது இந்திரனுடைய வஜ்ராயுதத்தின் ஒலிபோன்ற ஒலியுடன் மிக்கபெரிதான ஒலியைச்செய்தது. பாரதரே! பீமஸேனபுத்திரனை கடோத்கசனுடைய அம்புகளால்அடிக்கப்பட்டு அலறுகின்ற அந்தயானையானது உமதுபுத்திரனுடையஎல்லாச்சேனைகளையும் அடித்துக்கொண்டு ஸஞ்சரித்தது. கர்ஜிக்கின்ற அந்தயானையினுடைய மிகக்கொடிய பயங்கரமான அந்த ஒலியைக்கேட்டு, பீஷ்மர், துரோணரையும் துரியோதனராஜனையும்பார்த்து, 'இதோ மஹா வில்லாளியான பகதத்தன் யுத்தகளத்தில் துராத்மாவான கடோத்கசனோடு போர்செய்கிறான்; கஷ்டமானநிலைமையிலுமிருக்கின்றான். ராக்ஷஸனோ பெரியமாயையுடையவன். அந்தப் பகதத்தராஜனோ அதிககோபமுள்ளவன். காலனும்மிருத்புவும்போன்ற அவ்விருவரும் யுத்தத்தில் எதிர்த்துப் போர்புரிகிறார்கள். ஸந்தோஷமுள்ள பாண்டவர்களுடைய பேரொலியும் கேட்கப்படுகிறது. பயந்திருக்கின்ற யானையினுடைய மிகப்பெரிதான ரோதனசப்தமும் கேட்கப்படுகிறது. உங்களுக்கு மங்களமுண்டாகட்டும். பகதத்தராஜனை ரக்ஷிப்பதற்காக அவ்விடம் செல்வோம். யுத்தத்தில் காக்கப்படாவிடில் (அவன்) விரைவில் உயிரை இழப்பான். மிக்கவீர்யமுடையவர்களே! அப்படிப்பட்ட நீங்கள் வேகமாகப் புறப்படுங்கள். நாம் ஏன் தாமதமாகச்செல்லவேண்டும்? ரௌத்திரமானதும் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணக்கூடியதுமான பெரியயுத்தமல்லவோ நடந்துவருகின்றது? ஸேனாபதியான பகதத்தன் நம்மிடத்தில் பக்தியுள்ளவன்; மேலும் [1] குலபுத்திரன்; சூரன். (பனவுறுதி) [2] தவறாதவர்களே! நாம் அந்தப்பகதத்தனை ரக்ஷிக்கவேண்டும்' என்று மொழிந்தார். பீஷ்மருடைய அந்தவார்த்தையைக்கேட்டு எல்லாமஹாரதர்களும் பகதத்தனைப்பாதுகாக்கவேண்டுமென்கிற எண்ணத்துடனே துரோணரையும் பீஷ்மரையும் முன்னிட்டுக்கொண்டு அதிகவேகத்துடனே அந்தப்பகதத்தனிருக்குமிடம் சென்றார்கள். செல்லுகின்ற அவர்களைப்பார்த்து யுதிஷ்டிரரைத்தலைவராகக்கொண்டபாஞ்சாலர்கள், பாண்டவர்களுடன்சேர்ந்து பகைவர்களைப் பின்புறத்தில்

---

[1] பிறப்பினால் சிறந்தவன்.

[2] வேறு பாடம் கொள்ளப்பட்டது.

அனுஸரித்துச்சென்றார்கள். பிறகு பிரதாபமுடையவனான ராக்ஷஸேந்திரன் அச்சைனியங்களைப்பார்த்து இடிமுழக்கம்போல மிகவும் உரக்கஸிம்மநாதம்செய்தான். அந்தக்கடோத்கசனுடைய அந்தச்சப்தத்தைக்கேட்டும், போர்புரிகின்ற யானைகளைக்கண்டும் சந்தனுகுமாரரானபீஷ்மர் திரும்பவும் துரோணரைப்பார்த்துப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினார். 'துராத்மாவான ஹிடிம்பியின் புத்ரனோடு யுத்தம் செய்வது எனக்கு விருப்பமாயில்லை. இந்தக்கடோத்கசன் பலமும் வீர்யமுமுள்ளவன்; இப்பொழுது உதவியுடனும் கூடினவன். வஜ்ராயுதமேந்திய இந்திரனே நேரில்வந்தாலும் இவனைப் போரினால் வெல்வது முடியாது. இவனோ குறிதவறாமல் ஆயுதப்பிரயோகம்செய்கின்றவன்; நன்றாக அடிக்கின்றவன். நாமோ பகல்முழுதும் பாஞ்சாலர்களாலும் பாண்டவர்களாலும் அடித்துக்காயப்படுத்தப்பட்டவர்களும் களைத்திருக்கின்றவாகனங்களையுடையவர்களுமாயிருக்கின்றோம். அப்படிப்பட்ட இந்த ராக்ஷஸன் யுத்தத்தில் இப்பொழுது ஜயிக்கமுடியாதவன். சூரியனோ அஸ்தமிக்கிறான். இரவில் யுத்தம்செய்யமுடியாது. ஆதலால், யுத்தத்தை நிறுத்துவோம். நாளைத்தினம் பகைவர்களோடு போர்புரிவோம்' என்று கூறினர். பிதாமஹரானபீஷ்மருடையவார்த்தையைக்கேட்டுக் கடோத்கசனிடத்தினின்று உண்டானபயத்தினால் பீடிக்கப்பட்டகௌரவர்கள் அவ்வாறே உபாயத்தால் யுத்தத்தைவிட்டு விலகிவிட்டார்கள். பாரதரே! கௌரவர்கள் திரும்பியவுடனே பாண்டவர்கள் வெற்றியால்விளங்கிக்கொண்டு பெரிய ஸிம்மநாதத்தைச் செய்தார்கள்; சங்கங்களையும் ஊதினார்கள். பரதர்களிற்சிறந்தவரே! கடோத்கசனை முன்னிட்டுக்கொண்டு பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் இவ்விதமான யுத்தமானது பகல்முழுதும் நடந்தது. அரசரே! பிறகு பாண்டவர்களாலே தோல்வியடைவிக்கப்பட்டவர்களும் வெட்கமடைந்தவர்களுமானகௌரவர்கள் இரவில் தங்கள்ஸைனியம் தங்கியிருக்குமிடத்தை அடைந்தார்கள். பாணங்களாலே சரீரத்தில் காயப்படுத்தப்பட்டிருக்கின்ற மகாரதர்களான பாண்டுபுத்திரர்கள் யுத்தத்தில் மனம்குளிர்ந்து தங்கள்ஸைனியம்தங்கியிருக்குமிடத்தை அடைந்தார்கள். பகைவர்களைவாட்டுகின்றவரே! பாண்டவர்படையிலுள்ளவீரர்கள் பீமஸேனனையும் கடோத்கசனையும்முன்னிட்டு அப்பொழுது ஒருவரைஒருவர்புகழ்கின்றவர்களாகவும் அதிகஸந்தோஷத்தோடுகூடியவர்களாகவும் தூர்யவாத்யகோஷங்களோடு பற்பல கோஷங்களை வெளியிடுகின்றவர்களாகவும் சங்கவாத்யகோஷங்களோடு ஸிம்மநாதங்களைச்செய்கின்றவர்களாகவும் அதிகமாக அட்டஹாஸம்

செய்கின்றவர்களாகவும் பெரும்பலமுள்ளவர்களாகவும் பூமியைநடுங்கச்செய்பவர்களாகவும் உமதுப்புத்திரனுடையமர்மஸ்தானங்களை வருத்துகின்றவர்களாகவும் இராக்காலத்தில் தங்கள் பாசறையையே அடைந்தார்கள். துர்யோதனராஜனோ ஸஹோதரவதத்தினாலுண்டானதுக்கத்தால்மெலிந்து கண்களில் நீர்ததும்பக் கலக்கமுற்று ஒருமுகூர்த்தகாலம் சிந்திக்கலானான். தம்பியரின்பிரிவால்வருந்தியவனும் சோகத்தால்மிகவாட்டமுற்றவனுமான துரியோதனன் பாசறைக்கு முறைப்படி எல்லாவிதியையும் செய்துவிட்டு ஆழ்ந்து ஆலோசனைசெய்தான்" என்று கூறினான்.

நான்காம் நாள் யுத்தம் முடிந்தது.

---

## அறுபத்தைந்தாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் துரியோதனனுக்கு விஸ்வோபாக்கியானத்தைக் கூறியது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! தேவர்களாலும் ஒருபோதும் செய்யமுடியாததான பாண்டுகுமாரர்களுடையசெய்கையைக்கேட்டு எனக்கு மிகஅதிகமானபயமும் ஆச்சர்யமும் உண்டாயின. ஸஞ்சய! ஸூத! எல்லாவிதத்தினாலும்என்புத்திரர்களுக்குநேர்ந்தஅவமானத்தைக்கேட்டு, 'எவ்விதமாக இது ஆகுமோ?' என்று எனக்குப் பெரியகவலை உண்டாயிருக்கிறது. ஸஞ்சய! விதுரனுடையவாக்கியங்கள் நிச்சயமாக என்மனத்தை எரிக்கப்போகின்றன. தெய்வவசத்தால் யாவும் அவ்வாறே காணப்படுகின்றன. எந்தக்காரணத்தினால் பீஷ்மரைப்ரதானமாகக்கொண்டவர்களும் சஸ்திரங்களை அறிந்தவர்களும் உத்தமர்களுமான எல்லாப்போர்வீரர்களையும் பாண்டவர்களுடையஸேனைகளில்இருக்கின்றவீரர்கள் எதிர்த்துப்போர்புரிகிறார்கள்? ஐய! மஹாத்மாக்களும் மிக்கபலசாலிகளுமானபாண்டுபுத்திரர்கள் யாதுகாரணத்தால் கொல்லத்தகாதவர்களானார்கள்? யாரால் அவர்களுக்கு அவ்வாறு வரம் அளிக்கப்பட்டது? எவ்விதஞானத்தை அவர்களடைந்திருக்கிறார்கள்? எதனால் ஆகாயத்தில் (நிலைபெற்றிருக்கிற) நக்ஷத்திரங்களுடையகூட்டங்கள்போல அந்தப்பாண்டவர்கள் க்ஷயத்தையடையாமலிருக்கிறார்களோ அதையும் பாண்டவர்களாலே என்சேனை அடிக்கடிகொல்லப்படுவதையும் நான் ஸஹிக்கவில்லை. மிக்க உக்கிரமானதண்டமானது என்மீதே விழுகின்றது. ஸஞ்சய! எந்தக்காரணத்தால் பாண்டுபுத்திரர்கள் கொல்லத்தகாதவர்களாகவும் என்

புத்திரர்கள் கொல்லத்தக்கவர்களாகவும் ஆனார்களோ இவ்விஷயமனைத்தையும் உண்மையாக எனக்கு உரைத்தல்வேண்டும். க்கைகளாலேநீந்துகின்றஒருமனிதன் பெரிதானகடலினுடைய அக்கரையைப் பார்க்கமாட்டாமைபோல எவ்விதத்தினாலும் இந்தத்துக்கத்தினுடையஅக்கரையை நான் காணவில்லை. என்புத்திரர்களால் அதிபயங்கரமானதுயரமானது நிச்சயமாக அடையப்பட்டுவிட்டதென்று எண்ணுகிறேன். என்புத்திரர்களனைவரையும் பீமன் கொல்லப்போகிறான். ஸம்சயமில்லை. என்புத்திரர்களை யுத்தத்தில் பாதுகாக்கத்தக்க வீரனை நான் காணவில்லை. ஸஞ்சய! என்புத்திரர்களுக்கு நிச்சயமாகவே விநாசம் வந்துவிட்டது. ஸூத! ஆதலால் கேட்கிறஎனக்கு (முற்கூறியவிஷயங்களுக்கு) காரணமும் விசேஷித்து (பாண்டவர்களுடைய) வல்லமையுமாகிய அனைத்தையும் உள்ளபடிசொல்வதற்கு நீ தகுந்தவனாயிருக்கிறாய். போரில் தம்ஸேனைகள்புறங்காட்டிஓடுவதைக்கண்டு துரியோதனன், பீஷ்மர், துரோணர், கிருபர், சகுனி, ஜயத்ரதன், மஹாவில்லாளியான துரோணபுத்திரர், மஹாபலசாலியானவிகர்ணன் ஆகிய இவர்கள் யாதுசெய்தனர்? பேரறிவாளனே! ஸஞ்சய! என்புத்திரர்கள் கவலையுற்றிருக்கும்அத்தருணத்தில் மஹாத்மாக்களான அந்தப் பீஷ்மர்முதலியவர்களுக்கு எவ்விதமானநிச்சயம் உண்டாயிருந்தது?' என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

அரசரே! நீர் அவதானத்துடன்கேளும்; கேட்டு மனத்தில் நிலைநிறுத்திக்கொள்ளும். ராஜரே! பாண்டவர்கள் மந்திரத்தினால் செய்யக்கூடியஒன்றையும் செய்யவில்லை. அவ்விதமானமாயையையும் பிறர்பயப்படக்கூடிய ஒருவிதமானசெய்கையையும் அவர்கள் வெளிப்படுத்துவதில்லை. யுத்தத்தில் சிறந்தவல்லமையுள்ளஅவர்கள் நியாயத்தைமீறாமல் யுத்தம்செய்கிறார்கள். பாரதரே! எப்பொழுதுமே பார்த்தர்கள் பெரியகீர்த்தியைவிரும்பித் தர்மத்தினாலேயே ஜீவனோபாயமுதலான எல்லாக்காரியங்களையும் ஆரம்பிக்கிறார்கள். உத்தமமானஸ்ரீயையுடையவர்களும் மஹாபலசாலிகளுமான அந்தப்பார்த்தர்கள் தர்மத்தில்நிலைபெற்று யுத்தத்தினின்று திரும்புகிறதில்லை. எங்கு தர்மமோ அங்கு ஜயம். அரசரே! அதனால், பார்த்தர்கள் யுத்தத்தில்கொல்லத்தகாதவர்களும் ஜயமுள்ளவர்களுமாயிருக்கிறார்கள். உம்முடையபுத்திரர்களோ கெட்டஎண்ணமுடையவர்கள்; எப்பொழுதுமே பாவங்களில் பற்றுதலுள்ளவர்கள்; கொடுந்தன்மையுள்ளவர்கள்; இழிவானதொழிலையுடையவர்கள். ஆதலால், யுத்தத்தில் க்ஷீணிக்கின்றார்கள். அரசரே! நீசர்களானமனிதர்கள்போல உம்முடையபுத்திரர்

கள் இப்புவியில் பாண்டவர்களுக்கு அனேகம்கொடியஅபகாரங்களைச் செய்திருக்கின்றனர். பாண்டுவுக்குமூத்தவரே! உமதுபுத்திரர்களால்செய்யப்பட்ட அந்தஎல்லாக்கொடுஞ்செயல்களையும் கவனியாமல் பாண்டவர்கள் எப்பொழுதுமே தர்மத்தை ஆதாரமாகக்கொண்டிருந்தார்கள். அரசரே! உம்முடையபுத்திரர்கள் இந்தப்பாண்டவர்களை மதிப்பதில்லை. எப்பொழுதும்செய்யப்படுகின்ற அவ்விதப்பாவச்செயலைச்சேர்ந்த மிகப்பெரியகோரமானபலனனது இப்பொழுது அடையப்பட்டுவிட்டது. மஹாராஜரே! அப்படிப்பட்டநீர் புத்திரர்களோடும் மித்திரர்களோடும்சேர்ந்து அந்தப்பலனை அனுபவியும். வேந்தரே! மித்திரவர்க்கங்களால்தடுக்கப்பட்டும் நீர் தெரிந்துகொள்ளவில்லை. மேலும் விதுரராலும் பீஷ்மராலும் மஹாத்மாவான துரோணராலும் அவ்வாறே என்னாலும் அடிக்கடி நீர் தடுக்கப்பட்டிருந்தும் தெரிந்துகொள்ளவில்லை. (சாகப்போகிற) மனிதன் பத்தியமானஔஷதத்தை எவ்வாறு உட்கொள்ளானோ அவ்வாறே நீர் புத்திரர்களுடைய அபிப்பிராயத்திற்கிணங்கி நன்மையும் பத்தியமுமான (பீஷ்மர் முதலியோரின்) சொல்லைஎற்றுக்கொள்ளாமல் பாண்டவர்கள் ஜயிக்கப்பட்டதாகவே எண்ணினீர். பரதஸ்ரேஷ்டரே! பாண்டவர்களுடையஜயத்தைப்பற்றி நீர் என்னைக் கேட்டலால் அந்தக்காரணத்தைத் திரும்பவும் உள்ளபடிகேளும். நான் கேட்டபடி அதனை உமக்குச் சொல்வேன். ஜநேஸ்வரரே! இவ்விஷயத்தைப்பற்றித் துரியோதனன் பிதாமஹரானபீஷ்மரை நன்குகேட்டனன். குருகுலத்தில்உதித்தவனான உம்முடையகுமாரன் மஹாரதர்களானதன்னுடையபிராதாக்களனைவரும் யுத்தத்தில்ஜயிக்கப்பட்டதுகண்டு சோகத்தினால் மிகமனமயங்கி இராக்காலத்தில் பேரறிவாளரானபிதாமஹரைஅடைந்து மிக்கவணக்கத்தோடுசொன்னதை என்னிடத்தினின்று கேளும்.

துரியோனன், 'பிதாமஹரே! நீரும் துரோணரும் கர்ணனும் கிருபரும் அஸ்வத்தாமாவும் ஹ்ருதிககுமாரனானகிருதவர்மாவும் காம்போஜதேசாதிபதியானஸுதக்ஷிணனும் பூரிஸ்ரவஸும் விகர்ணனும் வீர்யசாலியானபகதத்தனும் மகாரதர்களென்றும் குலபுத்திரர்களென்றும் (யுத்தத்தில்) சரீரத்தைவிடத்துணிந்தவர்களென்றும் பிரஸித்திபெற்றிருக்கிறீர்கள். மூவுலகங்களையும் (ஜயிப்பதற்கு) நீங்கள் போதுமானவல்லமையுடையவர்களென்பது என்னுடையஎண்ணம். பராக்கிரமத்தில் பாண்டவர்களனைவரும் ஒன்றுசேர்ந்தாலும் (உங்களுக்கெதிர்) நிற்கமாட்டார்கள். குந்திபுத்திரர்கள் எதைப்பின்பற்றி ஒவ்வொருக்ஷணத்திலும் நம்மை ஜயிக்கிறார்களென்னும்விஷயத்தில் என

க்கு ஐயம் உண்டாயிருக்கிறது. கேட்கின்றஎனக்கு அதனுடைய உண்மையை உரைக்கவேண்டும்' என்றுவினவினன். பீஷ்மர், 'ராஜனே! குருகுலத்திற்பிறந்தவனே! நான்சொல்வதைக் கேள். பலவாறு நான் உனக்குச்சொன்னேன். அப்படிப்பட்டஎன்னுடைய சொல்லை நீ அனுஷ்டிக்கவில்லை. பரதரிற்சிறந்தவனே! பாண்டவர்களோடுகூட ஸமாதானம் செய்யப்படலாம். பிரபுவே! இப்படிச்செய்துகொள்வதை நான் பூமிக்கும் உனக்கும் க்ஷேமமென்று எண்ணுகிறேன். ராஜனே! பிராதாக்களோடுசேர்ந்து எல்லாத்துஷ்டர்களையும் வாட்டிக்கொண்டும் பந்துக்களைமகிழ்வித்துக்கொண்டும் இந்தப்பூமியை ஸுகமாகஅனுபவிப்பாயாகஎன்று முன்னமே நான் உன்னிடத்தில் அலறினேன். ஐயனே! என்வார்த்தையை நீ கேட்கவில்லை. பாண்டவர்களை நீஅவமதித்ததன்பயன் இதோ அடையப்பட்டுவிட்டது. மஹாபாகுபலமுள்ளவனே! பிரபுவே! சிறந்தசெய்கைகளையுடைய அந்தப்பாண்டவர்கள் கொல்லத்தகாதவர்களாயிருத்தற்குக் காரணத்தைச் சொல்லுகிறேன்; என்னிடத்தினின்றுகேள். சார்ங்கத்தைவில்லாகக்கொண்ட ஸ்ரீகிருஷ்ணனாலே காக்கப்பட்டிருக்கின்ற எல்லாப்பாண்டவர்களையும் வெல்லக்கூடியமனிதன் உலகங்களில் (இப்பொழுதும்) இல்லை; முன்னேயுமில்லை; இனிஉண்டாகப்போகிறதுமில்லை. அப்பா! தர்மங்களையறிந்தவனே! பிரம்மநிஷ்டர்களானமஹர்ஷிகளாலே எனக்குச்சொல்லப்பட்டிருக்கிற புராதனமானகீதத்தை உள்ளபடி கேள். முற்காலத்தில் தேவர்களும் எல்லாரிஷிகளும் ஒன்றுசேர்ந்து கந்தமாதனபர்வதத்தில் ப்ரம்மதேவரை அடைந்தனராம். அவர்களுடையமத்தியத்தில்வீற்றிருந்தபிரம்மதேவர் காந்தியினால்ஜ்வலிக்கின்றதும் ஆகாயத்திலிருக்கின்றதும் உத்தமமுமான ஒருவிமானத்தைக் கண்டனராம். அவர் அந்தவிமானத்தைத் தியானத்தினால் அறிந்து நியமத்துடன்கைகளைக்குவித்துக்கொண்டு மனமகிழ்ந்து அவ்விமானத்தில்வீற்றிருக்கின்ற பரமபுருஷரை நமஸ்காரம்செய்தார். பிறகு, எல்லாரிஷிகளும் தேவர்களும் எழுந்திருந்த பிரம்மதேவரைக்கண்டு பெரிதான அவ்வாச்சரியத்தைப்பார்த்துக் கைகளைக்குவித்துக்கொண்டு நின்றார்கள். பிரம்மவித்துக்களுள்சிறந்தவரும் உலகங்களைப்படைத்தவரும் உத்தமமான தர்மங்களையறிந்தவருமானபிரம்மதேவர்,(சாஸ்திரங்களில்)கூறியமுறைப்படி அந்தப்புருஷரைப்பூஜித்துப் பின்வருமாறு கூறலானார்.

'தேவரீர் விஸ்வாவஸு; நீர் உலகத்தையேவடிவமாகக்கொண்டவர். தேவரீர் விஸ்வேதேவர்கள்; விஷ்வக்ஸேனர்; (நித்யநைமித்

திககாம்யரூபங்களான) ஸமஸ்தகர்மஸ்வரூபி; ஜிதேந்திரியர். தேவ
ரீர் விஶ்வேஶ்வரர். நீர் வாஸுதேவர். ஆதலால், யோகஸ்வரூபியும்
தேவருமானதேவரீரை நான் சரணமடைகிறேன். விஶ்வஸ்வரூபரே!
மஹாதேவரே! தேவரீர் ஜயசீலராக விளங்கவேண்டும். உலகங்க
ளுக்குநன்மையைப்பயப்பதில்பற்றுதலுள்ளவரே! தேவரீர் ஜயசீலராக
விளங்கவேண்டும். யோகீஶ்வரரே! உலகங்களைவியாபித்திருக்கின்ற
வரே! நீர் ஜயமடையவேண்டும். யோகஸ்வரூபரே! பரமேஶ்வரரே!
நீர் ஜயமடையவேண்டும். தாமரைமலரின்நடுவிதழ்போல் அகன்றிருக்
கிறகண்களையுடையவரே! லோகேஶ்வரர்களுக்கெல்லாம்ஈஶ்வரரே!
இறந்தகாலம், வருங்காலம், நிகழ்காலம்இவைகளுக்குநாதரே! மங்கள
கரர்களானபுத்திரபௌத்திரர்களையுடையவரே! நீர் ஜயமடைதல்வேண்
டும். கணக்கற்றகுணங்களுக்குஆதாரமாயிருப்பவரே! எல்லாவற்றிற்
கும்முக்கியகதியாயிருப்பவரே! நீர் ஜயசீலராகஇருத்தல்வேண்டும்.
நாராயணரே! எவ்விதத்தாலும்கரைகாணமுடியாத மகிமையுடைய
வரே! சார்ங்கமென்றவில்லைத்தரித்தவரே! நீர் ஜயமடையவேண்டும்.
எல்லாக்குணங்களையுமுடையவரே! உலகத்தையே சரீரமாகக்கொண்ட
வரே! (பிறவிப்)பிணியற்றவரே! நீர் பிரகாசிக்கவேண்டும். விஶ்வேஶ்
வரரே! மஹாபாகுபலமுள்ளவரே! உலகங்களுக்குநன்மையைப்பயப்
பதில்பற்றுதலுள்ளவரே! நீர் ஜயமுள்ளவராகஇரும். ஆதிசேஷஸ்வ
ரூபரே! வராஹமுதலியஉருவமாகஅவதாரம்செய்தவரே! ஹரிகேசரே!
விபுவே! நீர் ஜயமடையவேண்டும். ஆதிசேஷனைவாஸஸ்தானமாக
வுடையவரே! திக்குக்களுக்கெல்லாம்நாதரே! உலகங்களுக்கெல்
லாம் இருப்பிடமாயிருப்பவரே! அளவிடமுடியாதஸ்வரூபத்துடன்
கூடியவரே! நாசமற்றவரே! பிரகாசமாகவும், அப்ரகாசமாகவு
மிருப்பவரே! அமிதமானஸ்தானங்களையுடையவரே! இந்திரியங்களை
யடக்கினவரே! நற்செய்கையுள்ளவரே! கணக்கிடமுடியாதஜீவாத்மாக்
களுடையஸ்வபாவத்தை அறிந்தவரே! ஆழ்ந்தஸ்வபாவமுடையவரே!
வேண்டினவர்க்குவேண்டியவற்றைக்கொடுக்கின்றவரே! நீர் ஜயமடைய
வேண்டும். முடிவற்றவரே! அறிந்தவரே! பிரம்மமே! நித்யமாயிருப்
பவரே! பிராணிகளைவிசேஷமாகப்போஷிக்கின்றவரே! செய்யவேண்
டியகாரியங்களைச்செய்தவரே! பேரறிவாளரே! தர்மங்களையறிந்தவரே!
விஜயமுடையவரே! காணஅரிதானஸ்வரூபமுடையவரே! ஸர்வயோக
ஸ்வரூபரே! வ்யக்தமாகஅவதரிப்பவரே! பூதங்களுக்கெல்லாம்ஆதியா
யிருப்பவரே! உலகத்திலுள்ளதத்வங்களுக்கெல்லாம்ஈசரே! பிராணி
களைரக்ஷிப்பவரே! நீர் ஜயமடையவேண்டும். தம்மையேகாரணமாகக்

கொண்டவரே! மஹாபாக்யமுள்ளவரே! பிரளயகாலத்தில் (உலகத்தை) உபஸம்ஹாரம்செய்வதில் நோக்கமுள்ளவரே! பிரபஞ்சத்தைவெளிப் படுத்துவதில்நாட்டமுள்ளவரே! பிரம்மமே! ஜயத்தில்ப்ரீதியுள்ளவரே! நீர் ஜயமடையவேண்டும். இயற்கையாகவேபடைப்பதில்பற்றுதலுள்ள வரே! அபீஷ்டங்களைப்பூர்த்திசெய்கின்றவரே! பரமேஸ்வரரே! மோக்ஷத்தைஅளிப்பதற்குக்காரணமானஸ்வரூபத்துடன்கூடியவரே! முக்தாத்மஸ்வரூபரே! விஜயத்தைக்கொடுப்பவரே! பிரம்மதேவருக்கும்நாதரே! தேவரே! பத்மநாபரே! மஹாபலமுள்ளவரே! பஞ்சபூதங்களை உமது வடிவமாகக்கொண்டவரே! ஸத்வஸ்வரூபரே! எப்பொழுதும் தேவரீர் ஜயமடையவேண்டும். பூமிதேவி உம்முடையஇரண்டுபாதங்கள்; திக்குக்கள் இரண்டுகைகள்; ஆகாயம் உமதுதலை; யான் உம்முடைய மூர்த்தி;தேவர்கள் உடல்; சந்திரசூரியர்கள் இரண்டுகண்கள்; தவமும் ஸத்யமும் பலம்; உம்முடையசெய்கை தர்மஸ்வரூபமாயுள்ளது; அக்னியானது உம்முடையதேஜஸ்; காற்று உம்முடையசுவாஸம்;ஜலம் உம்முடையவேர்வை; அஸ்வினிதேவர்கள் காதுகள்; எப்பொழுதும் ஸரஸ்வதிதேவி உம்முடையநாக்கு. வேதங்கள் உம்மிடத்திலுள்ளசிறந்தகுணங்களைக்கூறுவதில் நிலைபெற்றிருக்கின்றன. இவ்வுலகம் உம்மையேஆஸ்ரயித்திருக்கின்றது. யோகங்களுக்கும்யோகிகளுக்கும் நாதரே! (உமது) பரிமாணமானது அளவிடமுடியாதது. தேஜஸும் பராக்கிரமமும் அவ்வாறே. பகைவரைவாட்டுபவரே! உம்முடையபலத்தை நாம் அறியோம். தேவரே! விஷ்ணுவே! உம்முடையபக்தியில் நாங்களனைவரும் பற்றுதலுடன் நியமங்களால்உம்மையேநாடி மஹேஸ்வரராகவும் பரமேஸ்வரராகவுமிருக்கின்றதேவரீரை எப்பொழுதும் அர்ச்சிக்கிறோம். ரிஷிகள், தேவர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், பன்னகர்கள், பிசாசங்கள், மனிதர்கள், மிருகங்கள், பக்ஷிகள், ஸர்ப்பங்கள் இவர்களமுதலாகப் பூமியில்என்னுல்படைக்கப்பட்டிருக்கிறஎல்லாவஸ்துக்களும் உம்முடையஅனுக்கிரகத்தினுல்உண்டாயிருக்கின்றன. பத்மநாபரே! விசாலமானகண்களையுடையவரே! கிருஷ்ணரே! துக்கத்தைப் போக்குகிறவரே! எல்லாப்ராணிகளுக்கும் நீரே கதி; நீரே நாதர்;நீரே ஜகத்குரு; தேவேசரே! உம்முடையஅனுக்கிரஹத்தினுலே எப்பொழுதும் தேவர்கள்ஸுகமுடையவர்களாயிருக்கின்றுர்கள். தேவரே! பூமியானது தேவரீருடையஅனுக்கிரஹத்தினுலே எப்பொழுதும் பயமற்றதாகியது. விசாலாக்ஷரே! ஆதலால், தேவரீர் யதுவம்சத்தைவிருத்திபண்ணுகிறவராகவேண்டும். ஸர்வவ்யாபகரே! தர்மத்தை (உலகத்தில்) நிலைநிறுத்துவதற்காகவும் தைத்யர்களை அழிப்பதற்காகவும் உலகத்தைத்தரி

ப்பதற்காகவும் என்விண்ணப்பத்தை நிறைவேற்றுதல் வேண்டும். விபுவே! வாஸுதேவரே! பரமரகஸ்யமான இந்தவிஷயமானது தேவரீருடையஅநுக்கிரஹத்தினாலே என்னால் உள்ளபடி கானம்பண்ணப்பட்டது. கிருஷ்ணரே! நீர் உம்முடையஸங்கல்பத்தினால் உம்முடையஸ்வரூபமானஸங்கர்ஷணதேவரைத் தாமாகவேஸ்ருஷ்டித்துப் புத்திரனான ப்ரத்யும்னனையும் தாமாகவே ஸ்ருஷ்டித்தீர். எவரை விஷ்ணுவென்றும் அழிவற்றவரென்றும் ஞானிகள் அறிகிறார்களோ அந்த அநிருத்தரையும் ப்ரத்யும்னரிடமிருந்து நீர் உண்டுபண்ணினீர். அநிருத்தர் உலகத்தைத்தரிக்கின்ற பிரம்மாவானஎன்னை உண்டுபண்ணினார். அப்படிப்பட்டநான் வாஸுதேவஸ்வரூபி; தேவரீரால்தான் உண்டுபண்ணப்பட்டவனாயிருக்கிறேன். லோகநாதரே! ஆதலால் (வாஸுதேவர், ஸங்கர்ஷணர், ப்ரத்யும்நர், அநிருத்தர் என) நான்குஸ்வரூபத்துடன்விளங்குகின்றதேவரீரை நானாகவே வேண்டுகிறேன். விபுவே! தேவரீர் உம்மைப்பலகூறுகளாகப்பகுத்துக்கொண்டு மனிதத்தன்மையை அடைவீராக. அந்தமனுஷ்யாவதாரத்தில் எல்லாஉலகங்களுக்கும் ஸுகத்தைஉண்டுபண்ணுவதின்பொருட்டு அஸுரவதத்தைச்செய்து தர்மத்தையும் கீர்த்தியையும் அடைந்து பரதத்வஸ்வரூபத்தோடுசேர்க்கையடையப்போகிறீர். அளவிலடங்காதவிக்கிரமத்தையுடையவரே! பரமாத்மஸ்வரூபியானஉம்மை உலகத்தில் பிரம்மரிஷிகளும் தேவர்களும் (உம்மிடம்) மனத்தைச்சேர்த்தவர்களாக அவ்வவ்விதமானநாமாக்களாலே கானம்செய்கிறார்கள். அழகியகைகளையுடையவரே! எல்லாப்பூதஸங்கங்களும் உம்மிடத்தில் நிலைபெற்றுள்ளன. பிராம்மணர்கள் தேவரீரை ஆதாரமாகக்கொண்டு வரதரென்றும் ஆதிமத்யாந்தங்களற்றவரென்றும் கரையற்றயோகமகிமையுடையவரென்றும் உலகத்திற்கு அணைபோன்றவரென்றும் சொல்லுகிறார்கள்' என்று கூறினார்.

---

## அறுபத்தாறாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(விஸ்வோபாக்யானம்.)

பிறகு, ஆறுகுணங்களால் நிறைந்தவரும் தேவரும் லோகநாதர்களுக்கெல்லாம் நாதருமான அந்தவாஸுதேவர் இன்பமாயும் கம்பீரமாயுமுள்ளவாக்கினாலே பிரம்மதேவரைப்பார்த்து, 'உம்முடைய இந்த எல்லாவிருப்பமும் யோகமகிமையினால் என்னால் அறியப்பட்டது.

அது அவ்விதமேயாகும்' என்று மறுமொழிசொல்லிவிட்டு அவ்விடத்திலேயே அந்தர்த்தானம் அடைந்தார்.

பிறகு, தேவர்கள் ரிஷிகள் கந்தர்வர்கள் ஆகியஎல்லோரும் மிக்க வியப்புற்ற அதிககுதூஹலத்துடன் பிதாமஹரைப்பார்த்து, 'விபுவே! பகவானுனநீர் யாரைவணங்கி மகிமைபொருந்தியவாச்குக்களால் விநயத்தோடு துதித்தீர்? நாங்கள் அவரைக்குறித்துக் கேட்கவிருப்பமுள்ளவர்களாயிருக்கிறோம்' என்றுவேண்டினார்கள். இவ்வாறுசொல்லியதைக்கேட்டு, ஷாட்குண்யபரிபூர்ணராணபிதாமஹரும் எல்லாத்தேவர்களையும் ப்ரம்மரிஷிகளையும் கந்தர்வர்களையும் நோக்கி, 'தேவசிரேஷ்டர்களே! எது ஸர்வோத்தமமோ, எது வருங்காலத்திலும் இருக்கக்கூடியதோ, இருக்கத்தக்கதோ, எது பரம்பொருளோ, எது பஞ்சபூதஸ்வரூபியோ, எது பிரபுவோ, எது ப்ரம்மமோ, எது உத்தமமான ஸ்தானமோ பிரஸன்னமான அந்தவஸ்துவோடு ஸம்வாதம் செய்தேன். 'ஜகந்நாதரும் வாஸுதேவரென்று பிரசித்திபெற்றவருமானதேவரீர் உலகத்தை அனுக்ரஹிப்பதற்காக மானிடவுலகத்தை அடைவீராக. அஸுரர்களைக்கொல்வதின்பொருட்டுத் தேவரீர் பூமியில் அவதாரம்செய்யும்' என்று அவர் என்னால் வேண்டப்பட்டார். போரில்கொல்லப்பட்டதைத்யர்கள் தானவர்கள் ராக்ஷஸர்கள் ஆகிய அனைவரும், கோரரூபிகளும் மஹாபலசாலிகளுமாக மனிதர்களில் வந்துதோன்றியிருக்கிறார்கள். உலகமனைத்தையும் தம்வசத்தில்வைத்துக்கொண்டிருக்கிறபகவான் அவர்களைக்கொல்லுதற்பொருட்டு நரனோடு மானிடப்பிறவியைப்பெற்றுப் பூதலத்தில் ஸஞ்சரிக்கப்போகிறார். அளவற்றஒளியுள்ளவர்களும் புராணர்களும் ரிஷிசிரேஷ்டர்களுமான நரநாராயணரிருவரும் ஒன்றுசேர்ந்து மனிதஉலகத்தில் பிறக்கப்போகிறார்கள். யுத்தத்தில்முயற்சியுடையவர்களான இவ்விருவரும் ஒன்றுசேர்ந்ததேவர்களாலும் ஜயிக்கமுடியாதவர்கள். மூடர்கள் இவர்களை நரநாராயணரிஷிகளென்று அறியவில்லை. எல்லாஉலகங்களுக்கும்பிரபுவானயான் அந்தப்பகவானுக்கு முதல்புத்திரன். ஸர்வலோகமஹேஸ்வரரானவாஸுதேவர் உங்களால் அர்ச்சிக்கத்தக்கவர். தேவசிரேஷ்டர்களே! மகாவீர்யமுள்ளவரும் சங்கம், சக்கரம், கதை இவைகளைத்தாங்கியவருமான இந்தப்பகவான் மனிதரென்று ஒருபொழுதும் அலக்ஷ்யம்பண்ணத்தக்கவரல்லர். இது உத்தமமானரகஸ்யம். இது உத்தமமானபதம். இது உத்தமமானப்ரம்மம். இது உத்தமமானகீர்த்தி. இது அழிவற்றது; அப்ரகாசமானது. இது சாஸ்வத

மானதேஜஸ். புருஷனென்றுபெயருள்ளதாகக் கானம்செய்யப்படுவதும் அறியப்படாததுமான உத்தமமானஒளி இதுதான். இதுதான் உத்தமமானஸுகம். இது உத்தமமானஸத்தியமென்று விஸ்வகர்மாவினால் சொல்லப்பட்டிருக்கிறது. அளவற்றவிக்ரமத்தையுடையவரும் பிரபுவுமானவாஸுதேவர் இந்திரனோடுகூடினதேவர்களாலும் எல்லா உலகத்தார்களாலும், 'இவர் மனிதர்' என்று அவமதிக்கத்தக்கவரல்லர். இவரை ஸாமாந்யமனிதரென்றுசொல்லுகிறவன் அறிவில்லாதவன். இந்திரியங்களுக்கு அதிஷ்டாதாவான பரமாத்மாவை அலக்ஷ்யம்செய்கிறவனை மனுஷ்யர்களில் அதமனென்று (விவேகிகள்) சொல்லுகிறார்கள். யோகமகிமையுடையவரும் மஹாத்மாவும் மனிதசரீரத்தில்பிரவேசித்திருப்பவருமான ஸ்ரீவாஸுதேவரை அவமதிப்பவனைத் தமோகுணமுள்ளவனென்று ஜனங்கள்சொல்லுவார்கள். தேவரும் சராசரஸ்வரூபியும் ஸ்ரீவத்ஸம்என்கிறமறுவை அடையாளமாகக்கொண்டவரும் நல்லகாந்தியுள்ளவரும் பத்மநாபருமானபரமாத்மாவைஅறியாதவனைக் கற்றறிந்தவர்கள் தமோகுணமுடையவனென்று சொல்லுகிறார்கள். கிரீடத்தையும் கௌஸ்துபத்தையும்தரித்தவரும் மித்திரர்களுக்கு அபயம்அளிக்கின்றவருமான மகாத்மாவை அவமதிக்கிறவன் கோரமானஅந்தகாரத்தில் முழுகுகிறான். தேவசிரேஷ்டர்களே! இவ்வாறு தத்வார்த்தத்தைஉணர்ந்து உலகங்களிலுள்ள ஈஸ்வரர்களுக்கெல்லாம்ஈஸ்வரரான வாஸுதேவர் எல்லாஉலகத்தார்களாலும்நமஸ்கரிக்கத்தக்கவர். எல்லாஉலகத்திற்கும்நாதனும் ப்ரம்மாஎன்று பிரஸித்திபெற்றவனுமானநான் அந்தப்பரமாத்மாவினுடைய (ஜ்யேஷ்ட)புத்ரன்' என்று மதுரமானவாக்கினால் மறுமொழிகூறினார்.

இவ்வாறு அந்தப்பகவான் முற்காலத்தில் ரிஷிகணங்களுடன் கூடினதேவர்களைப்பார்த்துச் சொல்லி எல்லாப்பிராணிகளையும்விட்டுவிட்டுத் தம்முடையஸ்தானத்திற்கு ஏகினார். பிறகு தேவர்களும் கந்தர்வர்களும் ரிஷிகளும் அப்ஸரஸுகளும் ப்ரம்மதேவரால்கானம்பண்ணப்பட்டிருக்கிற அந்தக்கதையைக்கேட்டுப் பிரீதியடைந்து ஸ்வர்க்கத்தையடைந்தார்கள். ஐயனே! வாஸுதேவரை ஸ்தோத்திரம்செய்கின்ற பிரம்மநிஷ்டர்களானரிஷிகளுடைய ஸபையில் புராதனமான இந்தவிஷயமானது என்னால் கேட்கப்பட்டது. பரதர்களிற்சிறந்தவனே! ஜமதக்னிகுமாரரானபரசுராமர், புத்திமானானமார்க்கண்டேயர், வ்யாஸர், நாரதர் இவர்களிடமிருந்து நான் இவ்வர்த்தத்தைக்கேட்டும் வாஸுதேவரே பிரபுவென்றும் அழிவற்றவரென்றும் மகாத்மா

வென்றும் லோகங்களிலுள்ள ஈசுவரர்களுக்கெல்லாம்ஈசுவரரென்றும் அறிந்துமிருக்கிறேன். எல்லாஉலகங்களுக்கும்பிதாவான பிரம்மதேவர் எவருக்குப் புத்திரரோ அப்படிப்பட்டஇந்தவாஸுதேவர் மனிதர்களாலே ஏன் அர்ச்சிக்கத்தக்கவரல்லர்? ஏன் பூஜிக்கத்தக்கவரல்லர்? ஐயனே! வேதங்களின்கரைகளைக்கண்ட ரிஷிகளாலும் என்னாலும், 'வில்லாளியான அந்தவாஸுதேவரோடும் பாண்டவர்களோடும் நீ போர்புரியவேண்டாம்' என்று தடுக்கப்பட்டாய். அஜ்ஞானத்தினால் நீ உண்மையை அறியவில்லை. நீ கோவிந்தரையும் பாண்டவனான அந்தத்தனஞ்சயனையும் பகைத்தலால் உன்னைக் கொடியராக்ஷஸனென்று யான் எண்ணுகிறேன். அவ்விதமே நீயும் தமோகுணத்தினால் மூடப்பட்டிருக்கிறாய். உன்னைத்தவிர வேறெந்தமனிதன் நரநாராயணஸ்வரூபிகளானதேவர்களைப் பகைப்பான்? அரசனே! ஆதலால், உனக்கு நான் சொல்லுகிறேன். இவர் சாஸ்வதர்; குறைவற்றவர்; ஸர்வலோகமயர்; நித்யர்; உலகத்தையடக்கியாள்கிறவர்; பிராணிகளைப் போஷிக்கின்றவர்; இவ்வுலகத்தைத் தரிக்கின்றவர்; ஸ்திரமாயிருப்பவர்; சராசரங்களுக்குக்குருவும் பிரபுவுமாயிருக்கின்றவர்; மூவுலகங்களையும் தரிக்கின்றவர். மேலும் ஈசுவரரே யுத்தம்செய்பவர்; ஜயம்; ஜயிப்பவர்; ஸர்வவஸ்துக்களுக்கும்மூலகாரணமாயிருக்கிறவர். வேந்தே! தமஸினாலும் ராகத்தாலும் விடுபட்டவரானஇந்தப்பகவான் ஸர்வஸ்வரூபி. எங்கு கிருஷ்ணனோ அங்குதர்மம். எங்கு தர்மமோ அங்குஜயம். அரசனே! பாண்டுபுத்திரர்கள் அவருடையமகிமையின்ஸம்பந்தத்தினாலும் ஆத்மமயமானயோகத்தினாலும் தரிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்களுக்கு ஜயமுண்டாகப்போகிறது. இந்தப்பகவானான ஸ்ரீவாஸுதேவர் எப்பொழுதுமே பாண்டவர்களுடையவிஷயங்களில் சிரேயஸைஉண்டுபண்ணக்கூடியஎண்ணத்தைக் கொண்டிருக்கிறார்; மேலும் யுத்தத்தில் இவர்களுடைய பலத்தையும் நித்யம் போஷிக்கிறார்; பயங்களினின்றும் ரக்ஷிக்கிறார். பாரத! எவர்விஷயமாக என்னை நீ கேட்கிறாயோ அப்படிப்பட்டஇந்தப்பகவான் சாஸ்வதர்; (படைப்புமுதலியவற்றை) விளையாட்டாகவுடையவர்; எல்லாரகஸ்யங்களின்உருவமாயும் மங்களமாயுமிருப்பவர்; வாஸுதேவரென்றுஅறியத்தக்கவர். தங்கள்தங்களுக்குரியகுணங்களால்பிரஸித்திபெற்றவர்களும் எப்பொழுதும் பக்தியில்ஈடுபட்டிருக்கின்றவர்களுமான பிராம்மணர்களாலும் க்ஷத்திரியர்களாலும் வைசியர்களாலும் சூத்திரர்களாலும் தத்தம்கர்மங்களாலே இந்தப்பகவான் உபாஸிக்கப்படுகிறார்; அர்ச்சிக்கப்படுகிறார். இவர் த்வாபரயுகத்தின்முடிவிலும் கலியுகத்தின்தொடக்கத்

திலும் ஸங்கர்ஷணரால் [1] ஸாத்வததந்திரத்தில்சொல்லப்பட்டுள்ள முறைப்படி கானம்செய்யப்பட்டிருக்கிறார். வாஸுதேவரூபியான இந்தக்கண்ணபிரான் ஸமஸ்தமானதேவலோகங்களையும் மனுஷ்ய லோகங்களையும் ஸமுத்திரமாகிறமேகலையையுடைய த்வாரகாநகரியையும் மனுஷ்யலோகவாஸத்தையும் ஒவ்வொருயுகத்திலும் அடிக்கடி ஸ்ருஷ்டிபண்ணுகிறார்' என்றுகூறினார்.

---

## அறுபத்தேழாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், விஸ்வோபாக்யானத்தில் வாஸுதேவனுடையமகிமையையும் அவரைஅடுத்ததனால் யுதிஷ்டிரனுக்குஜயமுண்டாகு மென்பதையும் கூறியது.)

துரியோதனன், 'வாஸுதேவர் மஹாபூதஸ்வரூபியென்று எல்லாவுலகங்களிலும் சொல்லப்படுகிறார். பிதாமஹரே! அவருடையஆகமத்தையும் பிரதிஷ்டையையும் அறிவதற்கு நான் விரும்புகிறேன்' என்றுவினவ, பீஷ்மர் சொல்லலானார்.

'பரதர்களிற்சிறந்தவனே! வாஸுதேவர் மஹாபூதஸ்வரூபி. எல்லாத்தேவதைகளுக்கும்தேவர். புண்டரீகாக்ஷரைக்காட்டிலும் உயர்ந்தது காணப்படவில்லை. ஐயா! இவ்விஷயத்தைப்பற்றிச்சொல்லிய ஜமதக்னிபுத்திரரானபரசுராமரிடத்தினின்றும் தேவரிஷியானநாரதரிடத்தினின்றும் கிருஷ்ணத்வைபாயனரிடத்தினின்றும் நான் கேட்டிருக்கிறேன். அஸிதரும் தேவலரும் கபோதனர்களானவாலகில்யர்களும் மார்க்கண்டேயரும் கோவிந்தர்விஷயத்தில் பெரிதானஆச்சரியத்தைச் சொல்லுகின்றார்கள். ஸர்வபூதங்களுக்கும் ஆதியானபூதஸ்வரூபியும் மகாத்மாவுமானபுருஷோத்தமர் ஜலம், காற்று, தேஜஸ்மூன்றையும் படைத்தார். ஸர்வலோகேஸ்வரரும் பிரபுவும் மகாத்மாவுமான அந்தப் புருஷோத்தமர் பூதேவியையும்ஸ்ருஷ்டித்து ஜலத்தில் சயனம்செய்து கொண்டிருந்தார். ஸர்வதேவஸ்வரூபியான அந்தத்தேவர் சயனத்தில் ஸுகமாகப்படுத்துக்கொண்டவராகவே முகத்தினின்று அக்னியையும் பிராணனிலிருந்து வாயுவையும் ஸ்ருஷ்டித்தார். இந்தஅச்யுதர் மனத்தினின்று ஸரஸ்வதியையும் வேதங்களையும் படைத்தார். இவர்

---

[1] பாஞ்சராத்திரஆகமவிதியினாலே ஸ்ரீமந்நாராயணரைப்பூஜிக்கின்றவர்கள் ஸாத்வதர்கள்; அவர்களுக்குரியதந்திரம் ஸாத்வததந்திரம்.

ஆதியில் உலகங்களையும் ரிஷிகளுடன்தேவர்களையும் மோக்ஷத்தையும் மரணத்தையும் உண்டுபண்ணினர். இவர் பிரஜைகளுடையஉத்பத்திக்கும் பிரளயத்துக்கும் காரணமாயிருப்பவர். இவர் தர்மம்; தர்மத்தையறிந்தவர்; வரத்தைக் கொடுக்கின்றவர்; ஸர்வாபீஷ்டங்களையும் அளிக்கின்றவர். இவர் கர்த்தா; காரியம்; ஆதியான வஸ்துக்களுக்கெல்லாம் ஆதி; தமக்குத்தாமே பிரபுவாயிருப்பவர். ஜனார்த்தனர் முன்னமேயே இறந்தகாலத்தையும் நிகழ்காலத்தையும் வருங்காலத்தையும் படைத்தார். இரண்டுஸந்தியாகாலங்களையும் ஸ்வர்க்கங்களையும் ஆகாயத்தையும் நியமங்களையும் உண்டுபண்ணினர். கோவிந்தர் ரிஷிகளையும் தவத்தையும் படைத்தார். மஹாத்மாவும் அழிவற்றவருமான பிரபுவானவர் உலகத்தைப்படைத்தவரானபிரம்மதேவரையும் எல்லாப்பூதங்களுக்கும்முந்தினவரானஸங்கர்ஷணரையும் ஸ்ருஷ்டித்தார். அறிஞர்கள், தேவனும் அனந்தனென்றுபேர்பெற்றவனுமானசேஷனைப் படைத்தவரென்றும் அவரை அறிகிறார்கள். பிராணிகளையும் பர்வதங்களோடுகூடினஇந்தப்பூமியையும்போஷிக்கிற மகாதேஜஸுள்ள பரமபுருஷரைப் பிராம்மணர்கள் தியானயோகத்தால் அறிகிறார்கள். பிரம்மதேவருக்குப்பிதாவும் மகாத்மாவுமானபுருஷோத்தமர், தம்முடைய கர்ணமலத்தினின்றுஉண்டானவனும் உக்கிரமானசெய்கையுள்ளவனும் உக்கிரமானபுத்தியுள்ளவனும் பிரம்மாவிடத்தினின்று வேதங்களை அபகரித்தவனும் கொடியவனுமான அந்தமதுவென்கிற மஹாஸுரனையும் பிரம்மதேவருக்குப் பூஜையைச்செய்யவேண்டிக் கொன்றார். ஐயனே! தேவர்களும் அஸுரர்களும் மனுஷ்யர்களும் ரிஷிகளும் அந்தமதுவைக்கொன்றதனால் ஜனார்த்தனரை மதுஸூதனரென்று சொல்லுகின்றனர். மேலும் இந்தப்பிரபுவை வராஹரென்றும் நரஸிம்மரென்றும் திரிவிக்கிரமரென்றும் சொல்லுகிறார்கள். ஹரிஸ்வரூபியான இந்தப்பகவான் எல்லாப்பிராணிகளையும் படைக்கின்றவர்; போஷிக்கின்றவர். புண்டரீகாக்ஷரிலும்சிறந்தவஸ்துவானது உலகத்தில்உண்டானதுமில்லை; உண்டாகப்போகிறதுமில்லை. ராஜனே! அந்தப்பகவான் முகத்தினின்றுபிராம்மணர்களையும் இரண்டு புஜங்களினின்றுக்ஷத்திரியர்களையும் தொடையினின்றுவைஶ்யர்களையும் இரண்டுகால்களினின்றுசூத்திரர்களையும் படைத்தார். தவத்தில் நிலைபெற்றவரும் காந்தியுள்ளவரும் எல்லாப்பிராணிகளுக்கும்ஆதாரமானவரும் அமாவாஸ்யையில்பிரம்மரூபியாயும் பூர்ணிமையில்யோகரூபியாயுமிருக்கின்றவருமானகேசவரை உபாசிக்கின்றவன் அதிகமானநன்மையை அடைவான். நராதிப! ரிஷிகள் ஹ்ருஷீகேசரைக்

கேசவரென்றும் உத்தமமானதேஜஸ்வரூபிஎன்றும் எல்லாஉலகங்களுக்கும்பிதாமஹரென்றும் சொல்லுகின்றனர். நீ இந்தவாஸுதேவரை இவ்வாறு ஆசாரியரென்றும் பிதாவென்றும் குருவென்றும் அறிவாயாக. கிருஷ்ணபகவான் எவன்விஷயத்தில் கருணைபுரிவரோ அவனால் அழிவற்றஉலகங்கள்ஜயிக்கப்பட்டவைகளே. பயம்உண்டான இடத்தில் இந்தக்கேசவரைச்சரணமடைபவனும் எப்பொழுதும் இவ்வுபாக்யானத்தைப்படிப்பவனுமான மனிதன் க்ஷேமமும் ஸுகமுமுள்ளவனாவான். கிருஷ்ணனைச்சரணமடையும்மனிதர்கள் மோகத்தை அடையார்கள். ஜனார்த்தனர், பெரும்பயத்தில்மூழ்கினவர்களை எப்பொழுதும் பாதுகாக்கிறார். பரதகுலத்திற்பிறந்தவனே! வேந்தனே! அந்தயுதிஷ்டிரன் அந்தப்பரமபுருஷரை உண்மையாகஅறிந்து மஹாத்மாவும் கேசவரும் ஜகதீஸ்வரரும் யோகங்களுக்குஈஸ்வரரும் பிரபுவுமாயிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணரைச் சரணமடைந்திருக்கிறான்.

---

## அறுபத்தெட்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ரிஷிகள்செய்தகிருஷ்ணஸ்தோத்திரத்தையும் வாஸுதேவர் பாண்டவர்களிடத்தன்புள்ளவராதலின் அவர்களிடம் ஸமாதானத்தோடிருக்கவேண்டுமென்பதையும் துரியோதனனுக்குச் சொல்லியது.)

பரதகுலத்திற்பிறந்தவனே! முற்காலத்தில் பிரம்மரிஷிகளாலும் தேவர்களாலும் புவியில்சொல்லப்பட்டதும் வேதமந்திரத்துடன்கூடினதுமான கிருஷ்ணஸ்தோத்திரத்தைக்கேள். அதாவது:—உம்மை நாரதரானவர், ஸாத்தியர்களுக்கும் தேவர்களுக்கும்பிரபுவென்றும் தேவதேவர்களுக்கெல்லாம் ஈஸ்வரரென்றும் உலகத்திலுள்ளவஸ்துக்களுடையதத்வத்தையறிந்தவரென்றும் சொல்லுகிறார். மார்க்கண்டேயரும் உம்மை முன்னமேஇருந்தவரென்றும் இப்பொழுதுஇருக்கின்றவரென்றும் இனிமேலும்இருப்பவரென்றும் யஜ்ஞங்களுக்கு யஜ்ஞமென்றும் தவங்களுக்குத்தவமென்றும் சொல்லுகிறார். விஷ்ணுவே! பகவானனப்ருகுவானவர், தேவரீர் தேவர்களுக்கெல்லாம் தேவரென்றும் உம்முடையரூபமானது புராதனமென்றும் ஸர்வோத்தமமென்றும் சொல்லுகிறார். தேவரீர் வாஸுதேவர்; அவ்வாறே வஸுக்களுக்குஅதிபனைஇந்திரனை ஸ்தாபித்தவர். தேவர்களுள்

தேவதேவராயிருக்கிறீரென்று கிருஷ்ணத்வைபாயனரும் சொல்லி யிருக்கிறார். முந்தியதான பிரஜாசிருஷ்டியில் தக்ஷனை ஸ்ருஷ்டிகர்த்த னாகச் சொல்லுகின்றார்கள். அங்கிரஸ்மகரிஷியானவர், அவ்வாறே உம்மை எல்லாப்பிராணிகளுக்கும் ஸ்ருஷ்டிகர்த்தராகச் சொன்னார். தேவலரும் அஸிதரும், [1] அவ்யக்தமானது உம்முடையசரீரத்தி னின்று உண்டானதென்றும், [2] வ்யக்தமானது உம்முடையஉள்ளத் தில்நிலைபெற்றிருக்கிறதென்றும், தேவர்கள் உம்மிடத்தினின்று உண் டானார்களென்றும் சொன்னார்கள். ஆகாயம் உம்முடையசிரஸினாலே வியாபிக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறே பூமியும் உம்முடையஇரண்டு கைகளால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. மூவுலகங்களும் உம்முடைய வயிறு. நீர் ஸநாதனபுருஷராயிருக்கிறீர். தவத்தினாலேசிறந்தமஹிமை பெற்றமனிதர்கள் இங்ஙனம் உம்மை அறிகின்றனர். ஆத்மஸாக்ஷாத் காரத்தினால்திருப்தியடைந்திருக்கின்றரிஷிகளுள் நீர் உத்தமராயிருக் கிறீர். மதுஸூதனரே! உதாரஸ்வபாவமுடையவர்களும் யுத்தங்களில் புறங்கொடாதவர்களும் ஸர்வதர்மங்களையும்பிரதானமாகவுடையவர் களுமான ராஜரிஷிகளுக்கெல்லாம் நீர் கதியாயிருக்கிறீர்-என்பது. ஆறு குணங்களாலும்நிறைந்தவரும் புருஷோத்தமருமான ஸ்ரீஹரியானவர் யோகமஹிமையை அறிந்தவர்களான ஸநத்குமாரர்முதலியவர்களாலே இவ்விதம் எப்பொழுதும் துதித்துப்பூஜிக்கப்படுகிறார். ஐயனே! கேசவ ருடைய (மகிமையானது)இதோ விரிவாகவும் சுருக்கமாகவும் உனக்கு உள்ளபடி நன்றாகக்கூறப்பட்டது. நீ அதிகப்பிரீதியுடன் கேசவரைச் சரணமடைவாயாக' என்றுகூறினார். மஹாராஜரே! உம்முடைய குமாரன் பரிசுத்தமானஇக்கதையைக்கேட்டுக் கேசவரையும் மகாரதர்க ளானபாண்டுபுத்திரர்களையும் நன்குமதித்தான். மஹாராஜரே! சந்தனு புத்திரரானபீஷ்மர் திரும்பவும் அந்தத்துரியோதனனைப்பார்த்துப் பின்வருமாறுகூறலானார். 'அரசனே! நீ அந்தமஹாத்மாவானகேசவ ருடையபெருமையையும் நரனுடையபெருமையையும்வினவி உள்ள படி என்னிடமிருந்து கேட்டாய். வேந்தே! மனிதரைக்காப்பவனே! வீரர்களும் யுத்தங்களில் சத்துருக்களால்ஜயிக்கப்படாதவர்களும் கொல் லத்தகாதவர்களுமான நரநாராயணரிஷிகள் எதற்காக மனிதர்களில் வந்துதோன்றினரென்பதையும் மேலும் பாண்டவர்கள்யுத்தத்தில் ஒரு வராலும் கொல்லத்தகாதவர்களானதற்குரியகாரணத்தையும் நீ கேட்ட றிந்தாய். கிருஷ்ணமூர்த்தி, புகழுள்ளவர்களானபாண்டவர்களிடத்தில்

[1] மூலப்ரகிருதி; அல்லது பூதஸூக்ஷ்மம்.

[2] ஸ்தூலமாயிருக்கிற பிரபஞ்சம்.

உறுதியானபிரீதியுள்ளவராயிருக்கிறானன்றோ. ராஜேந்திர! ஆதலால், பாண்டவர்களோடு ஸமாதானம்உண்டாகவேண்டுமென்று யான்சொல்லுகிறேன். நீ பலசாலிகளானபிராதாக்களோடு ஜிதேந்திரியனாகிப் பூமியை அனுபவி. தேவர்களானநரநாராயணர்களை அவமதித்தால் நீ நாசமடைவாய்' என்றுசொன்னார். மன்னரே! இவ்வாறுசொல்லிவிட்டு உமதுபிதா பேசாமல்இருந்தார். அரசனையும் அனுப்பினார். தாமும் சயனத்தில் படுத்துக்கொண்டார். பாரதர்களிற்சிறந்தவரே! அரசனும் மஹாத்மாவான அவரைநமஸ்கரித்துத் தன்சேனைதங்கியிருக்குமிடம் சென்றான்; அவ்விரவுமுழுதும் வெண்ணிறமானபடுக்கையில் படுத்திருந்தான்.

---

## அறுபத்தோன்பதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(கௌரவர் மகரவ்யூஹத்தையும் பாண்டவர் ஸ்யேனவ்யூஹத்தையும் வகுத்துப் போர்தொடங்கியது.)

மஹாராஜரே! இரவுவிடிந்தவுடன் சூரியன்உதிக்கவே, இரண்டு படைகளும் யுத்தத்திற்காகவேஎதிர்த்தன. அவர்களெல்லோரும் ஒன்றுசேர்ந்து மிக்ககோபங்கொண்டு ஒருவரையொருவர்வெல்லக்கருதிப் போரில்ஒருவரையொருவர்நோக்கி எதிர்த்துவந்தனர். ராஜரே! கோபமுள்ளவர்களும் நல்லஉத்ஸாஹமுடையவர்களும் அடிக்குந்திறமையுள்ளவர்களுமான பாண்டவர்களும் உம்முடையதுராலோசனையில் (நிலைபெற்ற) தார்த்தராஷ்டிரர்களும் இரண்டுவியூகங்களைஏற்படுத்திக்கொண்டு யுத்தஞ்செய்யத்தொடங்கினார்கள். ராஜரே! பீஷ்மர் மகரவ்யூஹத்தை நான்குபுறங்களிலும் பாதுகாத்தனர். பாண்டவர்கள் அவ்வாறே தங்களுடைய (ஸ்யேன) வ்யூகத்தைப் பாதுகாத்தார்கள். அஜாதசத்துருவானயுதிஷ்டிரர், தௌம்யருடையவார்த்தையினால் தாம் ஸ்யேனம்போல அந்தவியூகத்தை அணிவகுத்துப் பகைவர்களுடையமனங்களை நடுநடுங்கச்செய்தார். பாரதரே! அந்த (தர்மபுத்திருடைய) ஸ்யேனவ்யூகஅமைப்பானது யாகங்களில் அவரால் நன்கு அறியப்பட்டிருந்தது. புத்திமானானஉமதுகுமாரனுடைய பெரியமகரவ்யூஹமோ அவனாலும் எல்லாச்சேனைகளாலும் துரோணராலும் அப்பொழுது ஸம்மதிக்கப்பட்டிருந்தது. அந்தப் பீஷ்மர் அந்தமகரவ்யூஹத்தை அனுஸரித்தார். மகாராஜரே! ரதிகர்

களுள் உத்தமரும் உமக்குப்பிதாவுமான அந்தத்தேவவிரதர் பெரியதேர்க்கூட்டத்தால் சூழப்பட்டு வெளிவந்தார். தேர்வீரர்களும் காலாட்களும் யானைவீரர்களும் குதிரைவீரர்களும் தாங்கள்இருக்கவேண்டிய இடங்களில் நின்றுகொண்டு ஒருவரையொருவர் அனுஸரித்தார்கள். யுத்தத்தில்முயற்சியுள்ளவர்களான அவர்களைக்கண்டு கீர்த்திசாலிகளான பாண்டவர்கள் ஸ்யேனவியூகத்தால் அணிவகுத்துக்கொண்டு யுத்தத்தில்ஸன்னத்தர்களானார்கள். மிக்கபலசாலியானபீமஸேனன் அந்த ஸ்யேனவியூகத்தின்முகத்தில் பிரகாசித்தான். சிகண்டியும் அவமதிக்கமுடியாத பார்ஷதனான திருஷ்டத்யும்னனும் இரண்டுகண்களாயினார். வீரனும் ஸத்யவிக்கிரமனுமான ஸாத்யகியானவன் அந்தவியூகத்தினுடைய தலையில் இருந்தான். அப்பொழுது பார்த்தன் காண்டீவத்தை நாணொலியிடும்படிசெய்துகொண்டு அந்தவியூகத்தின்கழுத்தில் நின்றான். மகாத்மாவும் ஐசுவர்யமுடையவனுமான துருபதன் புத்திரனுடன்கூடி அந்தயுத்தரங்கத்தில் ஓர் அக்ஷௌஹிணிஸைனியத்துடன் அப்பொழுது (அதனுடைய) இடச்சிறகானான். ஓர் அக்ஷௌஹிணிக்குநாதனானகேகயதேசத்தரசன் வலச்சிறகானான். த்ரௌபதிபுத்திரர்களும் வீர்யமுடையவனான அபிமன்யுவும் பின்புறத்தில் நின்றார்கள். ஐசுவரியமுடையவரும் வீரரும் அழகியவிக்கிரமமுள்ளவருமானயுதிஷ்டிரராஜர் பிராதாக்களானநகுலஸஹதேவர்களோடு தாமே அதற்குப் பின்புறத்தில் நின்றார். பீமன் அப்பொழுது யுத்தத்தில் மகரவியூகத்தின்முகத்தில்நுழைந்து பீஷ்மரையடைந்து ரணகளத்தில் அம்புகளால் மூடினான். பாரதரே! பிறகு பீஷ்மர் மஹாயுத்தத்தில் பாண்டவர்களுடைய அணிவகுக்கப்பட்டிருக்கிற ஸைந்யத்தை மோகிக்கச்செய்துகொண்டு மஹாஸ்திரங்களைப் பிரயோகித்தார். அப்பொழுது சேனைநன்றாகமோகம்அடையவே தனஞ்சயன் விரைந்து யுத்தமுனையில் பீஷ்மரை ஆயிரம்அம்புகளாலே துன்பமுறும்படி அடித்தான். யுத்தத்தில் பீஷ்மரால்பிரயோகிக்கப்பட்ட அஸ்திரங்களைத்திருப்பியடித்து உத்ஸாஹமுள்ளதன்படையோடு தனஞ்சயன் யுத்தத்தின்பொருட்டு (ஸன்னத்தனாகி) அருகில் வந்தான். பிறகு பலசாலிகளுள்சிறந்தவனும் மஹாரதனுமான துரியோதனராஜன் ஆரம்பத்தில் தன்படையின் கோரமானவதத்தைக்கண்டும் யுத்தத்தில் ஸஹோதரர்களுக்கு நேர்ந்தவதத்தைநினைத்தும் துரோணரைநோக்கிப் பின்வருமாறு சொல்லலானான். 'மாசற்றவரே! ஆசாரியரானநீர் எனக்கு எப்பொழுதும் ஹிதத்தைத்தேடுவதில் விருப்பமுள்ளவர். நாம் தேவரீரையும் பிதாமஹரானபீஷ்மரையும் அடுத்து யுத்தத்தில் தேவர்களைக்கூடஜயிப்பதற்குப்

பிரார்த்திக்கின்றோம். ஸந்தேகமில்லை. அவ்வாறிருக்க, அல்பமான வீர்யமும் பராக்ரமமுமுள்ளவர்களான பாண்டுபுத்திரர்களை யுத்தத்தில் ஜயிப்பதில் ஸம்சயமென்ன? எவ்வாறு பாண்டவர்கள் கொல்லப்படுவார்களோ அவ்வாறானஉபாயத்தை நீர் செய்யவேண்டும். உமக்கு மங்களமுண்டாருக' என்றுசொன்னான். உம்முடையபுத்திரனாலே இவ்வாறுசொல்லப்பட்ட துரோணர் பிறகு ராஜாவான அவனை அந்தஸமயத்தில்பார்த்து அதிககோபங்கொண்டவர்போலப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, 'அரசனே! நீ மூர்க்கன்; பாண்டவர்களுடைய பராக்கிரமத்தை நீ அறியவில்லை. மஹாபலசாலிகளானபாண்டவர்கள் ஜயிப்பதற்கு ஸாத்தியப்படாதவர்கள். நான் என்பலத்திற்கும் வீரியத்திற்கும்தக்கபடி உன்னுடையகாரியத்தைச்செய்வேன்' என்றுகூறினார். ராஜரே! துரோணர் உமதுபுத்திரனைப்பார்த்து இவ்வாறுசொல்லிவிட்டுச் சேனையைஅடைந்து ஸாத்யகிபார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பாண்டவஸேனையைப் பிளந்தார். பாரதரே! பிறகு ஸாத்யகியோ துரோணரைத் தடுத்தான். அவ்விருவருக்கும் கோரமாயும் பயங்கரமாயுமுள்ளயுத்தம் நடந்தது. பிரதாபசாலியான துரோணர் நகைத்துக்கொண்டு யுத்தத்தில் கோபத்துடன் ஸாத்யகியைத் தோள்பூட்டில் கூர்மையுள்ளபாணங்களால் அடித்தார். ராஜரே! பிறகு பீமஸேனன் கோபங்கொண்டு வில்லாளிகளுள்உத்தமரான துரோணரிடத்தினின்று ஸாத்யகியைப்பாதுகாக்கஎண்ணித் துரோணரை அடித்தான். பிறகு துரோணரும் பீஷ்மரும் சல்யனும் யுத்தத்தில் கோபங்கொண்டு பீமஸேனனை அம்புகளால் மூடினார்கள். அப்பொழுது மிக்ககோபமுண்ட அபிமன்யுவும் த்ரௌபதிபுத்திரர்களும் ஆயுதங்களைக்கையில்எடுத்தவர்களான அவர்கள் அனைவரையும் கூர்மையுள்ளஅம்புகளால் அடித்தார்கள். மிகுந்தகோபங்கொண்டுவருகின்றவர்களும் மிக்கபலசாலிகளுமான துரோணரும்பீஷ்மருமாகியஇருவரையும் மஹாயுத்தத்தில் பெரியவில்லைக்கையில்தாங்கியசிகண்டி எதிர்த்தான். வீரனானசிகண்டி நல்லபலமுள்ளதும் மேகத்தின்இடிமுழக்கம்போன்றஒலியுள்ளதுமான வில்லைக் கையில்பிடித்து விரைவாகச் சூரியனை அம்புகளால் மறைத்துக்கொண்டு (பாணங்களை) வர்ஷித்தான். பரதகுலத்திற்பிறந்தவர்களுக்குப்பிதாமஹரானபீஷ்மர் சிகண்டியைநாடி அவனுடையஸ்திரீத்தன்மையைநினைத்துக்கொண்டு அவனுடன்போர்புரியாமல் ஒழிந்தார். மஹாராஜரே! பிறகு துரோணர் உமதுபுத்திரனாலேஏவப்பட்டு அப்பொழுது பீஷ்மரைப்பாதுகாத்துக்கொண்டு யுத்தத்தில் அந்தச்சிகண்டியை எதிர்த்தோடினார். சிகண்டியோ யுகாந்தகாலத்துநெருப்புப்போல

உக்கிரமாயிருப்பவரும் சஸ்திரங்களைத்தரிப்பவர்களுள் சிறந்தவருமான துரோணரைப்பார்த்து மிக்கபயமுற்றவனாகி (அவரைவிட்டு) விலகினான். அரசரே! பிறகு உம்முடையபுத்திரன் மிக்ககீர்த்தியை விரும்பிப் பெருஞ்சேனையோடு பீஷ்மரையடைந்து அவரைப்பாதுகாத்தான். ராஜரே! அவ்வாறே பாண்டவர்கள் தனஞ்சயனைமுன்னிட்டுக்கொண்டு ஜயத்தில் உறுதியானஎண்ணத்துடன் பீஷ்மரையே எதிர்த்தார்கள். யுத்தத்தில் ஜயத்தையும் அதிகஆச்சரியகரமானகீர்த்தியையும்விரும்புகின்ற பாண்டவர்களுக்குக் கௌரவர்களோடு தேவர்களுக்கு அஸுரர்களோடு யுத்தம்நடந்ததுபோலக் கோரமானயுத்தம் நடந்தது.

---

## எழுபதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தவர்ணனம்.)



அப்பொழுது, சந்தனுபுத்திரரானபீஷ்மர் உமதுபுத்திரர்களைப் பீமஸேனனிடமுண்டானபயத்தினின்று தாண்டுவிப்பதற்குவிருப்பமுள்ளவராகக் கைகலந்தசண்டைசெய்தார். முக்கியர்களான சூரர்களுக்கு அழிவையுண்டுபண்ணக்கூடிய மஹாபயங்கரமான அந்தயுத்தமானது முற்பகலில் பாண்டவகௌரவஅரசர்களுள் நடந்தது. மிகவும்பயங்கரமான அந்தஸங்குலயுத்தமானது நடக்கையில், ஆகாயத்தையளாவும் நெருங்கியபேரொலியானது தோன்றியது. கர்ஜிக்கின்ற பெரியயானைகளாலும் கனைக்கின்றகுதிரைகளாலும் பேரிகைகள்சங்கங்கள்இவற்றின்ஒலிகளாலும் (யுத்தரங்கமானது) வியாபிக்கப்பட்டது. திறமைவாய்ந்தவர்களும் மிக்கவலிமையுள்ளவர்களுமான அந்தவீரர்கள் போர்புரிவதில்நோக்கமுள்ளவர்களாகப் பசுக்கொட்டில்களில் பெரிய விருஷபங்கள்கர்ஜிப்பதுபோலக் கர்ஜித்துக்கொண்டு வெற்றியின் பொருட்டு ஒருவரோடொருவர் எதிர்த்தார்கள். பரதர்களிற்சிறந்தவரே! யுத்தகளத்தில் கூர்மையானபாணங்களாலேவீழ்த்தப்படும் தலைகளினுடையவர்ஷமானது ஆகாயத்தில் கல்மாரிபோலத் தோன்றியது. பரதர்களிற்சிறந்தவரே! குண்டலங்களையும் தலைப்பாகைகளையுந்தரித்தவைகளும் ஸ்வர்ணத்தால்பிரகாசிக்கின்றவைகளுமானதலைகள் விழுந்தவைகளாகக் காணப்பட்டன. பாணங்களால்சின்னபின்னமாகச்செய்யப்பட்டிருக்கிறசரீரங்களாலும் விற்களைப்பிடித்தகைகளாலும்

ஹஸ்தாபரணங்களுடன்கூடின இன்னும்வேறுபுஜங்களாலும் பூமியானது மறைக்கப்பட்டதாகியது. ராஜரே! கவசங்களால்மூடப்பட்ட சரீரங்களாலும், நன்றாகஅலங்கரிக்கப்பட்டகைகளாலும் சந்திரனுக்கு ஒப்பானவைகளும் சிவந்தகடைக்கண்களையுடையவைகளும் மங்களகரமாயுள்ளவைகளுமான முகங்களாலும் யானைகள், குதிரைகள், மனிதர்கள்ஆகியஇவர்களின்எல்லாஉறுப்புக்களாலும் ஒருமுகூர்த்தகாலத்திற்குள் பூமிமுழுதும் நன்றாகப்பரப்பப்பட்டதாயிற்று. மின்னல்போன்றசஸ்திரங்களால் பிரகாசிக்கின்றதும் நெருங்கியதும் மேகங்கள்போன்றபுழுதியுள்ளதுமான அந்தயுத்தத்தில் ஆயுதங்களுடையசப்தமானது இடிமுழக்கத்திற்கொப்பாகஇருந்தது. பாரதரே! கைகலந்ததும் மிகக்கொடியதும் ரக்தவெள்ளம்நிரம்பியதுமானயுத்தமானது கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் நடந்தது. அச்சத்தைமிகவிளைவிப்பதும் கொடியதும் கைகலந்ததும் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணுவதுமான அந்தயுத்தத்தில் கெட்டயுத்தமதங்கொண்டவர்களானக்ஷத்திரியர்கள் சரமாரிகளைப் பொழிந்தார்கள். பரதர்களிற்சிறந்தவரே! உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் எதிரிகளுக்கும் நடக்கும்அந்தயுத்தத்தில் யானைகள் சரமாரியினால் தவிக்கும்படிசெய்யப்பட்டு வீரிட்டன. கோபமுள்ளவர்களும் தைர்யமுள்ளவர்களும் அளவற்றபராக்கிரமமுள்ளவர்களுமான வீரர்களுடைய விற்களில் பூட்டப்பட்டநாண்கயிறுகள் விரலுறைகளின்ஒலியினால் ஒன்றும் அறியப்படவில்லை. எல்லாப்பக்கங்களிலும்ரக்தவெள்ளத்தோடுகூடியயுத்தத்தில் தலையில்லாமுண்டங்கள் எழுந்திருந்துநிற்கவே, அரசர்கள் சத்துருக்களைவதம்செய்வதில் முயற்சியுடன் போர்க்களத்தில் ஓடினார்கள். அளவுகடந்ததேஜஸுள்ளவர்களும் பரிகாயுதம்போன்றகைகளையுடையவர்களுமான அந்தச்சூரர்கள் பாணங்களாலும் சக்திகளாலும் கதைகளாலும் கத்திகளாலும் யுத்தத்தில் ஒருவரைஒருவர் கொன்றார்கள். அந்தயுத்தபூமியில் பாணங்களால்அடிக்கப்பட்டயானைகள் அங்குசத்தினால்அடித்துத்தடுக்கப்பட்டாலும் அதனைலக்ஷ்யம்செய்யாமல் நான்கு பக்கங்களிலும் சுழன்றன. குதிரைகளும், கொல்லப்பட்டிருக்கிற குதிரைவீரர்களையுடையவைகளாகிப் பத்துத்திக்குக்களிலும் ஓடித்திரிந்தன. உம்முடையசேனையிலும், பகைவருடையசேனையிலுமுள்ள யுத்தவீரர்கள் பாணங்கள்தாக்குவதினால் மிகப்பீடிக்கப்பட்டு உயரத்தள்ளிக்கீழேவீழ்ந்தார்கள். பாரதரே! பீஷ்மரும், பீமனும்எதிர்த்துப் போர்புரிகையில் அந்தரணகளத்தில் சிறந்தஅங்கங்களையுடையகுதிரைகள், விற்கள், கதாயுதங்கள், பரிகங்கள், கைகள், தொடைகள், கால்கள்,

பூஷணங்கள், தோள்வளைகள் இவைகளுடையகுவியல்கள் கூட்டம்கூட்டமாகக் காணப்பட்டன. ராஜரே! யுக்தத்தைவிட்டுத்திரும்பாதவைகளான குதிரைகள், யானைகள், தேர்கள் இவைகளுடையகூட்டங்களும் ஆங்காங்கு காணப்பட்டன. யுத்தஸமயம்வாய்த்தபோது க்ஷத்திரியர்கள் கதைகளாலும் சக்திகளாலும் ஈட்டிகளாலும் அமிழ்ந்தகணுக்களுள்ளபாணங்களாலும் அந்தயுத்தகளத்தில் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். கைச்சண்டையில்ஸமர்த்தர்களான இன்னும்மற்றவீரர்கள் இரும்பினால்செய்யப்பட்டபரிகாயுதம்போன்றகைகளால் யுத்தரங்கத்தில் பலவாறாக ஒருவரையொருவர் தாக்கிக்கொண்டார்கள். அரசரே! உம்மைச்சேர்ந்தவீரர்கள் பாண்டவர்களுடன்கூட முஷ்டிகளாலும் முழங்கால்களாலும் உள்ளங்கைகளாலும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். ஜனேஶ்வரரே! ஆங்காங்கு பூமியில்விழுந்தவர்களும் விழும்படிசெய்விக்கப்படுகின்றவர்களும் வீழ்ந்துபலவாறாகப்புரளுகின்றவர்களுமானவீரர்களாலே யுத்தம்கோரமாக ஆயிற்று. அந்தயுத்தத்தில் தேராளிகள் தேர்களையிழந்தவர்களாகவும் உத்தமமானசக்திகளைக்கையில்கொண்டவர்களாகவும் ஒருவரையொருவர்கொல்வதில் விருப்பமுள்ளவர்களாகவும் ஒருவரையொருவர் எதிர்த்தோடிவந்தார்கள். பிறகு துரியோதனராஜன் கலிங்கதேசத்துவீரர் பலராலேசூழப்பட்டு யுத்தத்தில் பீஷ்மரைமுன்னிட்டுக்கொண்டு பாண்டவர்களை எதிர்த்தான். அவ்வாறே, எல்லாப்பாண்டவர்களும் விருகோதரனைநான்குபக்கத்திலும்சூழ்ந்துகொண்டு வெகுண்டு பீஷ்மரையெதிர்த்தார்கள். பிறகு யுத்தம் நடந்தது.

---

## எழுபத்தோராவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

### (ஸங்குலயுத்தவர்ணனம்.)

பீஷ்மரோடெதிர்த்துநிற்கிறஸஹோதரர்களையும் மற்றஅரசர்களையும் பார்த்துத் தனஞ்சயன் ஆயுதங்களைக்கையிலெடுத்துக் கங்காபுத்திரரானபீஷ்மரை எதிர்த்தோடிவந்தான். பாஞ்சஜன்யத்தினுடையஓசையையும் காண்டீவம்என்னும் வில்லினுடையஒலியையுங் கேட்டும் பார்த்தனுடையத்வஜத்தைப்பார்த்தும் எங்களனைவரையும் பயம்வந்தடைந்தது. மஹாராஜரே! ஸிம்மத்தினுடையவால்போன்றவாலையுடையதும் ஆகாயத்தில்ஜ்வலிக்கின்றமலைபோன்றதும் மரங்

களில்தட்டுப்படாமல் உயரஎழுந்து நெருப்புப்போலப்ரகாசிக்கின்ற தும் அனேகவர்ணங்களையுடையதும் விசித்திரமானதும் திவ்யமான தும் வானரவடிவமுள்ளதுமான காண்டீவத்தைவில்லாகக்கொண்ட அர்ஜுனனுடையகொடியைக் கண்டோம். பரதகுலத்தில்உதித்தவரே! ஆகாயத்தில் மேகமத்தியில்பிரகாசிக்கின்றமின்னல்போலவிளங்குகின் றதும் ஸ்வர்ணமயமானபின்புறத்தையுடையதுமான காண்டீவத்தை யுத்தத்தில் நான் கண்டேன். யுத்தவீரர்கள் மஹாயுத்தத்தில் ஸ்வர்ண மயமானபின்புறத்துடன்கூடியகாண்டீவத்தைக் கண்டார்கள். இந்தி ரன்போலப் பகைவர்களுக்குள திராகக்கர்ஜிக்கின்றவனும் உம்முடைய ஸேனையைநாசம்செய்கின்றவனுமான அந்தஅர்ஜுனனுடைய மிக்க கோரமானகையுறையிலிருந்துஉண்டாகிறசப்தத்தையும் அதிகமாகக் கேட்டோம். சண்டமாருதத்துடன்கூடியதும் மின்னலுடனும் இடி முழக்கத்துடனும்கூடியதுமான மேகம்போல எல்லாத்திக்குகளையும் நான்குபக்கங்களிலும் சரமாரிகளால்நிரப்பிக்கொண்டு தனஞ்சயன் பயங்கரமானஅஸ்திரங்களோடு பீஷ்மரை எதிர்த்துச்சென்றான். அஸ் திரத்தினலேமோகமடைந்தவர்களானநாங்கள் கிழக்குத்திக்கையும் மேற்குத்திக்கையும் அறியவில்லை. பரதர்களிற்சிறந்தவரே! பயந்து நாற்றிசைகளிலும்ஓடுகின்றவர்களும் சிரமத்தையடைந்தவாகனங்க ளையுடையவர்களும் கொல்லப்பட்டகுதிரைகளையுடையவர்களும் மன ஊக்கத்தையிழந்தவர்களுமான உம்முடையயுத்தவீரர்கள் ஒருவரோ டொருவர்சேர்க்கைபெற்று உமதுஎல்லாக்குமாரர்களோடும் பீஷ்ம ரையே வந்தடைந்தார்கள். சந்தனுபுத்திரரானபீஷ்மர் யுத்தத்தில் துன்பமுற்றவர்களானஅவர்களுக்கு ரக்ஷகரானார். ரதிகர்கள் மிகப் பயந்து தேர்களினின்றுநழுவிவிழுந்தார்கள். குதிரைவீரர்களும் குதி ரைகளினுடையமுதுகினின்று நழுவிவிழுந்தார்கள். காலாட்களும் அவ் வாறே பூமியில்நிலைதவறினர்கள். பாரதரே! இடிமுழக்கம்போன்றகாண் டீவத்தினுடையஒலியைக்கேட்டு எல்லாப்படைகளும்பயந்து நான்கு பக்கங்களிலும் பதுங்கின. ராஜரே! பிறகு கலிங்கதேசாதிபன், காம் போஜதேசத்திலுண்டானவைகளும் பெரியவைகளும் விரைவாகச்செ ல்லும்தன்மையுடையவைகளுமானகுதிரைகளாலும் அனேகஆயிரக் கணக்கானகோபர்களாலும் பாலர்களானகோபாயனர்களாலும் மத்தி ரதேசத்துவீரர்களாலும் ஸௌவீரர்களாலும் காந்தாரர்களாலும் திரி கர்த்தர்களாலும் முக்கியர்களானஎல்லாக்காளிங்கர்களாலும் சூழப் பட்டான். துச்சாஸனனை முதன்மையாகக்கொண்ட அரசனானஜயத்ர தனும் பற்பலமனிதர்களுடையகூட்டங்களோடும் எல்லாஅரசர்க

ளாடுங்கூடியவனுனன். உம்முடையபுத்திரனுலேஏவப்பட்ட உத்தமர்களான பதினுலாயிரம்குதிரைவீரர்கள் சகுனியைச் சூழ்ந்துகொண்டார்கள். பரதர்களிற்சிறந்தவரே! பிறகு ஒன்றுசேர்ந்துள்ள உம்மைச்சேர்ந்தவர்களான அவர்களனைவரும் தனித்தனியாகப்பகுக்கப்பட்டிருக்கின்றரதங்களோடும் வாகனங்களோடும்கூடியவர்களாக யுத்தத்தில் அர்ஜுனனை அடித்தார்கள். சேதிதேசத்துவீரர்களோடும் காசிதேசத்துவீரர்களோடும் காலாட்படைகளோடும் ரதங்களோடும்கூடினவர்களும், பாஞ்சாலர்களுடனும் ஸ்ருஞ்சயர்களுடனும்கூடியவர்களுமான திருஷ்டத்யும்னனை முதன்மையாகக்கொண்ட எல்லாப்பாண்டவர்களும் ஒன்றுசேர்ந்து தர்மபுத்திரரால் ஏவப்பட்டு உம்மைச்சேர்ந்தவர்களை யுத்தத்தில் வருத்தினுர்கள். ரதிகர்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் காலாட்படைகளாலும் தூற்றப்பட்டதும் பெரிய மேகம்போன்றதுமானபுழுதியானது யுத்தத்தைப் பயங்கரமாகச்செய்தது. பீஷ்மர், தோமரங்களாலும் ஈட்டிகளாலும் நாராசங்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் தேர்களாலும் போர்புரிகின்றவீரர்களுடையபெரும்படையோடுகூடி அர்ஜுனனோடு எதிர்த்துப்போர்புரிந்தார். அவந்திதேசத்தரசன் காசிராஜனோடும், ஸைந்தவன் பீமஸேனனோடும் போர்புரிந்தார்கள். யுதிஷ்டிரர் புத்திரர்களோடும் மித்ரர்களோடுங்கூடி மத்ரதேசத்துவீரர்களுள் சிறந்தவனும் கீர்த்திபொருந்தியவனுமானசல்யனோடு போர்புரிந்தார். விகர்ணன் ஸஹதேவனோடும் சித்திரஸேனன் சிகண்டியோடும் போர்புரிந்தார்கள். ராஜரே! மத்ஸ்யதேசத்துவீரர்கள் துர்யோதனனையும் சகுனியையும் நாடினுர்கள். துருபதன், சேகிதானன், மகாரதனுனஸாத்யகிஇவர்கள் மஹாபலசாலியும் புத்திரரோடுகூடியவருமானதுரோணரை எதிர்த்தார்கள். கிருபரும் கிருதவர்மாவும் திருஷ்டத்யும்னனை எதிர்த்தார்கள். இவ்வாறு ஓடுகின்றகுதிரைகளோடும் சுழலுகின்றயானைகளோடும் ரதங்களோடும் கூடினஸைனியங்கள் நாற்புறத்திலும் நன்றுகயுத்தங்களைச்செய்வதற்காக நெருங்கின. மேகமில்லாத ஆகாயத்தில் கடுமையான மின்னல்கள் உண்டாயின. திசைகளும் புழுதியினுல் மூடப்பட்டன. இடியுடன்கூடின பெரிதானவால்நக்ஷத்திரமும் தோன்றியது. பெருங்காற்றும் வீசியது. புழுதிமழையும் பொழிந்தது. ஆகாயத்தில் சூரியன் ஸைனியத்தினுலுண்டானபுழுதியினுல் மூடப்பட்டு மறைந்தான். புழுதியினுலே ஆக்ரமிக்கப்பட்டவைகளும் அஸ்திரஸமூகங்களால் பீடிக்கப்பட்டவைகளுமான எல்லாப்பிராணிகளுக்கும் மிக்க மதிமயக்கம் உண்டாயிற்று. வீரர்களுடையகைகளினின்று விடுபட்

டவைகளும், எல்லாக்கவசங்களையும்பிளக்கின்றவைகளுமான பாண ஸமூஹங்களினுடைய கூட்டமானது நெருங்கியதாகியது. பரதர்களிற் சிறந்தவரே! உத்தமமானகைகளாலே எடுக்கப்பட்டவைகளும் நக்ஷத்திரங்கள்போல நிர்மலமானகாந்தியுள்ளவைகளுமான ஆயுதங் கள் ஆகாயத்தைப் பிரகாசமுள்ளதாகச்செய்தன. பரதர்களிற்சிறந்த வரே! விசித்திரங்களும் பொற்புள்ளிகள்நிரம்பினவைகளும் காளை களினுடையதோல்களாலே செய்யப்பட்டவைகளுமான கேடகங்கள் எல்லாத்திக்குகளிலும் கீழேவிழுந்தன. சூரியன்போலப்பிரகாசிக் கின்றகத்திகளாலே நாற்புறங்களிலும் தள்ளப்பட்ட உடல்களும் தலைகளும் எல்லாத்திக்குகளிலும் காணப்பட்டன. சக்கரங்களும் அச்சுக்கட்டைகளும் [1] நீடங்களும் ஒடிக்கப்பட்டும் பெரியத்வஜங்கள் வீழ்த்தப்பட்டும் குதிரைகள் அடிக்கப்பட்டும் பெரியதேர்கள் அங் கங்கே தரையில்வீழ்ந்தன. சிலகுதிரைகள் ஆயுதங்களால் புண்பட் டவையாகி ரதிகர்கள்கொல்லப்பட்டவுடனே ரதங்களை அங்கும் இங்கும்இழுத்துக்கொண்டு யுத்தபூமியில் நான்குபக்கத்திலும் ஓடின. பாரதரே! அம்பினாலேஅடித்துப் பிளக்கப்பட்டதேகமுள்ளவையும் பூட்டப்பட்டவார்களையுடையவையுமான சிறந்தகுதிரைகள் ஆங் காங்கு நுகத்தடிகளை இழுத்துச்சென்றன. வேந்தரே! ஸாரதிகளை யும் குதிரைகளையும் ரதிகர்களையுமுடையரதங்கள் பலமுள்ளஒரு யானையினால் அடிக்கப்பட்டவைகளாகக் காணப்பட்டன. ஸேனாஸமூ கங்கள் போர்புரியுங்காலத்தில் மதங்கொண்டயானையினுடைய மத ஜலப்பெருக்கைமோந்துபார்த்து அனேகயானைகள் யானைகளால் யுத் தத்தில் அடிக்கப்பட்டன. தோமரங்களோடுகூடியவர்களும் உயிரை இழந்துகீழேவிழுந்தவர்களுமான யானைப்பாகர்களாலும் நாராசங்க ளால்அடிக்கப்பட்டயானைகளாலும் யுத்தபூமியானது மறைக்கப்பட்ட தாயிற்று. படைக்கூட்டங்கள்போர்புரியுங்காலத்தில் (பாகர்களால்) தூண்டப்பட்ட உத்தமமானயானைகளால் கொல்லப்பட்ட யானைகள் யுத்தவீரர்களோடும் கொடிகளோடும் யுத்தத்தில் கீழேவீழ்ந்தன. மஹாராஜரே! தேர்களின் ஏர்க்கால்கள் யுத்தத்தில் யானைகளால் பெரிய ஸர்ப்பம்போன்ற துதிக்கைகளாலே பலாத்காரமாகப்பற்றிஇழுத்து நன்றாகஒடிக்கப்பட்டவையாகக் காணப்பட்டன. யானைகளாலே யுத்த ரங்கத்தில் சிதறஅடிக்கப்பட்டதேர்க்கூட்டங்களையுடைய ரதிகர்கள மயிரில் பிடித்திழுக்கப்பட்டு மரத்தின் கிளைகள்போல முறித்துப் பொடி

[1] ரதிகன் தன்னைக்காப்பாற்றிக்கொள்வதற்காக ரதத்தில் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் இடம்.

செய்யப்பட்டார்கள். சிறந்தயானைகள், ரதங்களில்சேர்ந்திருக்கின்ற ரதங்களையிழுத்துக்கொண்டு எல்லாச்சப்தங்களையும் அதிக்கிரமித்தவைகளாக எல்லாத்திக்குகளிலும் சென்றன. அவ்வாறு ரதங்களை இழுக்கும் அந்தயானைகளினுடையரூபமானது (தம்மீது) நன்றாகஓட்டிக்கொண்டிருக்கிற தாமரைக்கொடிகளுடையஸமூஹத்தைத் தடாகங்களில் இழுக்கின்றயானைகளினுடைய உருவம்போலப் பிரகாசித்தது. இவ்வாறு அச்சமயத்தில் பெரியயுத்தமானது குதிரைவீரர்களாலும், காலாட்படைகளாலும், த்வஜங்களையுடைய மஹாரதர்களாலும் நன்கு மூடப்பட்டதாயிற்று.

---

## எழுபத்திரண்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குல யுத்தவர்ணனம்.)

அரசரே! சிகண்டி மத்ஸ்யதேசாதிபதியான விராடனோடு சேர்ந்து சிறந்தவில்லாளியும் எவ்விதத்தாலும்ஜயிக்கமுடியாதவருமான பீஷ்மரை விரைவாக நாடினன். தனஞ்சயன் துரோணரையும் கிருபரையும் மகாவில்லாளியும் மகாபலசாலியுமானவிகர்ணனையும் சூரர்களான இன்னும்மற்றஅநேகஅரசர்களையும் யுத்தத்தில் எதிர்த்தான். ராஜசிரேஷ்டரே! யுத்தத்தில் பீமஸேனன், பெரியவில்லையுடையவனும் மந்திரிகளையும் பந்துக்களையுமுடையவனுமானஸைந்தவனையும் கீழ்நாட்டரசர்களையும் தென்னாட்டரசர்களையும் பெரியவில்லையுடையவனும் அதிககோபமுடையவனும் உம்முடையபுத்திரனுமான துரியோதனனையும் துஸ்ஸஹனையும் எதிர்த்தான். ஸஹதேவன் பெரியவில்லையுடையவர்களும் ஜயிக்கமுடியாதவர்களும் மகாரதர்களும் பிதாபுத்திரர்களுமான சகுனியையும் உலூகனையும் எதிர்த்தான். மகாராஜரே! உம்முடையபுத்திரனாலேவஞ்சிக்கப்பட்டிருக்கிற மகாரதரானயுதிஷ்டிரர் யுத்தத்தில் யானைப்படையை எதிர்த்தார். யுத்தத்தில் சூரர்களை அலறும்படிசெய்கின்றவனும் மாத்ரிபுத்திரனும் பாண்டுபுத்திரனுமான நகுலன் திரிகர்த்தர்களுடையபடைகளோடு எதிர்த்தான். ஸாத்யகியும் சேகிதானனும் மகாரதனான அபிமன்யுவும் கோபங்கொண்டு யுத்தத்தில் ஸால்வர்களையும் கேகயர்களையும் எதிர்த்தார்கள். (ஒருவராலும்) ஜயிக்கமுடியாதவர்களான திருஷ்டகேது, ராக்ஷஸனானகடோத்கசன், ரதிகர்களுள்சிறந்தவனும் நகுலபுத்திரனுமான சதானீகன் இவர்கள் உமது

புத்திரர்களுடையதேர்ப்படையை யுத்தத்தில் எதிர்த்தார்கள். ராஜரே! ஸேனபதியும் அளவிடமுடியாதபராக்கிரமமுள்ளவனும் மஹாபலசாலியுமானதிருஷ்டத்யும்னன் உக்கிரமானசெய்கையுள்ள துரோணரோடு யுத்தத்தில் எதிர்த்துப்போர்புரிந்தான். இவ்வாறு சிறந்தவில்லாளிகளான உம்மைச்சேர்ந்தஇந்தச்சூரர்கள் யுத்தத்தில் பாண்டவர்களோடு நெருங்கி யுத்தம்செய்தனர். சூரியன்நடுப்பகலையடைந்திருக்கவே ஆகாயமும்கலக்கமுற்றிருக்கும்நிலைமையடையவே கௌரவர்களும் பாண்டவர்களும் ஒருவரையொருவர் அடித்தார்கள். கொடிகளையுடையவைகளும் பொன்னால்சித்திரவேலைசெய்யப்பட்டஉறுப்புகளுள்ளவைகளும் கொடித்துணிகளோடுகூடியவைகளும் புலித்தோலால்மூடப்பட்டவைகளுமானரதங்கள் யுத்தரங்கத்தில் பலவாறுஸஞ்சரிப்பவைகளாகவிளங்கின. யுத்தத்தில் ஒன்றுசேர்ந்து ஒருவரைஒருவர்ஜயிக்க எண்ணங்கொண்டவீரர்களுடைய நெருங்கினஒலியானது கர்ஜிக்கின்ற ஸிம்மங்களுடையஒலிபோலத்தோன்றியது. சூரர்களான ஸ்ருஞ்சயர்கள் கௌரவர்களோடுசேர்ந்து யுத்தரங்கத்தில் எதைச்செய்தார்களோ அப்படிப்பட்ட மிக்கபயங்கரமானயுத்தத்தை ஆச்சரியமாக அவ்விடத்தில்கண்டோம். சத்துருக்களைத்தபிக்கச்செய்பவரே! வேந்தரே! பிரயோகிக்கப்பட்டிருக்கின்றஅம்புகளாலே நான்குபக்கங்களும் மூடப்பட்டிருந்தமையால் ஆகாயத்தையாவது திக்குக்களையாவது சூரியனையாவது திக்குக்கோணங்களையாவது நாங்கள் காணவில்லை.(ஆயுதங்களை) ப்ரயோகிக்கின்றவீரர்களுடைய பளபளப்புள்ளமுனையையுடைய சக்திகள் தோமரங்கள் துவையப்பட்டபட்டாக்கத்திகள் இவற்றின்கருநெய்தல்களுக்கொப்பானஒளிகளும் விசித்திரமானகவசங்கள்பூஷணங்கள் இவற்றின் ஒளிகளும் காந்தியினால் ஆகாயத்தையும் திக்குக்களையும் மூலைத்திசைகளையும் விளங்கச்செய்தன. ராஜரே! அப்பொழுது சந்திரசூரியர்களுக்குஒப்பானஒளியுடன்கூடின அரசர்களுடையசரீரங்களால் யுத்தபூமியானது ஆங்காங்கு விளங்கியது. போர்க்களத்தில் வந்திருக்கின்றதேர்க்கூட்டங்களும் புருஷசிரேஷ்டர்களும் ஆகாயத்தில்சோதிமண்டலங்கள்போல் யுத்தரங்கத்தில் விளங்கினார்கள். தேராளிகளுட்சிறந்தபீஷ்மர் மிகுந்தகோபமூண்டு மஹாபலசாலியானபீமஸேனனை எல்லாச்சேனைகளும்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே எதிர்த்தார். பிறகு பீஷ்மரால்தொடுக்கப்பட்டவைகளும் பொற்கட்டுக்களுள்ளவைகளும் எண்ணெயிட்டுச் சாணைக்கல்லில்தீட்டப்பட்டவைகளும் மிக்ககூர்மையுள்ளவைகளுமான பாணங்கள் யுத்தத்தில் பீமனை நேரில்தாக்கித் துன்பத்தை உண்டுபண்ணின. பரதகுலத்திற்பிறந்த

வரே! மிக்கபலசாலியானபீமஸேனன் மகாவேகமுள்ளதும் கோபங்கொண்டஸர்ப்பத்திற்கொப்பானதுமான சக்தியாயுதத்தை அந்தப்பீஷ்மரின்மீது விடுத்தான். விரைவாகவருகின்றதும் ஸ்வர்ணமயமான தண்டமுள்ளதும் எவ்விதத்தாலும் அணுகமுடியாததுமான அந்தச் சக்தியைப் பீஷ்மர் யுத்தத்தில் அமிழ்ந்தகணுக்களுள்ள அம்புகளால் துண்டாக்கினர். பாரதரே! பிறகு துவைந்ததும் கூர்மையுள்ளதுமான வேறொருபல்லத்தினாலே பீமஸேனனுடையவில்லை இரண்டாகத் துண்டாக்கினர். மஹாபலசாலியானபீமஸேனனோ (பீஷ்மரால்) வெட்டப்பட்டவில்லையெறிந்துவிட்டு வேறொருவில்லையெடுத்து அநேகபாணங்களால் சந்தனுகுமாரரானபீஷ்மரை அடித்தான். மகாராஜரே! பிறகு ஸாத்யகியும் யுத்தகளத்தில் உம்முடையபிதாவானபீஷ்மரை விரைவாக அடைந்து காதுவரையில்இழுத்துவிடப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளும் நன்குதீட்டப்பட்டவைகளும் முனைமழுங்காதவைகளுமான அனேகஅம்புகளாலே அவரைஅடித்தான். பிறகு பீஷ்மர் கூர்மையுள்ள மிக்கபயங்கரமானஓரம்பை வில்லிற்பூட்டி விருஷ்ணிவீரனுனஸாத்யகியினுடையஸாரதியை ரதத்தினின்று கீழேவிழும்படிசெய்தார். ராஜரே! ரதத்திலிருந்தஸாரதிகொல்லப்பட்டவுடன் மனமும்காற்றும் போன்றவேகமுள்ள அவனுடையகுதிரைகள் மிக்கவேகத்துடன் அவ்வவ்வழியினுல் ஓடின. பின்பு எல்லாப்படைகளினுடையஒலியும் நெருக்கமாக உண்டாயிற்று. மகாத்மாக்களானபாண்டவர்களும் ஹாஹாகாரம்செய்தார்கள். 'யுயுதானனுடையதேர் எவ்விடத்திலிருக்கிறதோ அவ்விடத்தில் எதிர்த்தோடுங்கள்; பிடியுங்கள்; குதிரைகளைத்தடுங்கள்; ஓடுங்கள்' என்கிற நெருங்கினசப்தம் உண்டாயிற்று. இதனிடையில் சந்தனுபுத்திரரானபீஷ்மர் இந்திரன் அஸுரஸேனையைக் கொல்வதுபோலப் பாண்டவஸேனையை அப்பொழுது வதஞ்செய்தார். பீஷ்மராலேகொல்லப்படுகின்ற அந்தப்பாஞ்சாலர்கள் ஸோமகர்களுடன்கூட யுத்தத்தில் புத்தியைஸ்திரமாகச்செய்துகொண்டு பீஷ்மரையே எதிர்த்தோடினார்கள். திருஷ்டத்யும்னனைமுதன்மையாகக்கொண்டபார்த்தர்கள் உமதுபுத்திரனுடையஸேனையை ஜயிக்கவேண்டுமென்கிறஎண்ணங்கொண்டு யுத்தகளத்தில் பீஷ்மரை எதிர்த்தார்கள். வேந்தரே! அவ்வாறே பீஷ்மரையுந்துரோணரையும்முன்னிட்டவர்களான கௌரவர்கள் வேகத்தோடு(பாண்டவவீரர்களை) எதிர்த்தோடினார்கள். பிறகு யுத்தம் நடந்தது.

---

## எழுபத்துமூன்றுவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(யுத்தவர்ணனம்.)

பிறகு, மஹாரதனுனவிராடன் மஹாரதரானபீஷ்மரை மூன்று பாணங்களால்அடித்து அவருடையகுதிரைகளையும் மூன்றுபாணங்களால் துன்புறும்படிசெய்தான். உறுதியானவில்லைக் கையிலேந்தியவரும் கைப்பழக்கமுள்ளவரும் மஹாபலசாலியும் சந்தனுமஹாராஜகுமாரருமானபீஷ்மர் பொற்கட்டுடன்கூடின பத்துக்கணைகளால் அவனைத் திருப்பியடித்தார். பயங்கரமானவில்லையுடையவரும் மஹாரதரும் உறுதியானகைகளுள்ளவருமான அஸ்வத்தாமா அர்ஜுனனை ஆறுபாணங்களால் நடுமார்பிலடித்தார். பகைவர்களை வருத்திக்கொல்பவனுன அர்ஜுனன் மிக்ககூர்மையுள்ளஅம்புகளாலே அவருடைய வில்லையறுத்து அவரையும் அடித்தான். ராஜரே! வேகமுள்ளவரும் குரோதத்தால்விருத்தியடைந்தவருமான அந்தஅஸ்வத்தாமா யுத்தத்தில் அர்ஜுனனுல்வில்முறிக்கப்பட்டதைப்பொறுமல் வேறுவில்லைக் கையிலெடுத்துக் கூர்மையுள்ளதொண்ணூறுபாணங்களாலே பல்குனனை அடித்து உத்தமமானஎழுபதுபாணங்களாலே வாஸுதேவரையும் அடித்தார். பிறகு, சத்ருருக்களை அழிப்பவனும் காண்டீவத்தை வில்லாகக்கொண்டவனுமான அர்ஜுனன், கிருஷ்ணனுடன் கோபத்தால் கண்கள்சிவந்து நீண்ட உஷ்ணமான பெருமூச்சைவிட்டுக்கொண்டு அடிக்கடி மனக்கவலையுற்று இடக்கையினுல் வில்லை நன்றாக நெருக்கிப்பிடித்து மிகுந்தகோபத்தோடு கூர்மையுள்ளவைகளும் அமிழ்ந்த கணுக்களுள்ளவைகளும் பகைவர்களுடையஉயிரைக் கவரும்திறமையுள்ளவைகளும் கோரமானவைகளுமான அம்புகளைக் கையிலெடுத்தான். பலசாலிகளுள்சிறந்த அர்ஜுனன் விரைவாகத் துரோணபுத்திரரை அம்புகளால் அடித்தான். அவ்வம்புகள் அவருடைய கவசத்தைப்பிளந்து ரணகளத்தில் அவரதுரக்தத்தைப் பானம் செய்தன. அர்ஜுனனுல் அவ்வாறுபிளக்கப்பட்டும் அவர் துன்பமடையவில்லை. மன்னரே! துரோணபுத்திரரும், தளர்ச்சியடையாமல் கணைகளைத்தொடுத்துக்கொண்டு யுத்தத்தில் தம்முடையமஹாவிரதத்தைப் பாதுகாக்கவிருப்பமுள்ளவராக நின்றார். அவர் யுத்தரங்கத்தில் ஒன்றுசேர்ந்தவர்களான க்ருஷ்ணார்ஜுனரிருவரோடும் எதிர்த்ததாகிய பெரியசெய்கையையே குருபுங்கவர்கள் புகழ்ந்தனர். அந்த அஸ்வத்

தாமாவோ துரோணரிடத்தினின்று எவ்விதத்தாலும் அடையமுடியாததும் பிரயோகஸம்ஹாரங்களுடன்கூடியதுமான அஸ்திரஸமூகத்தைப்பெற்று எப்பொழுதும்பயமற்றவராயிருந்துகொண்டு படைகளில் போர்புரிந்தார். பகைவர்களைவாடச்செய்கின்றவனும் தோளிகளுட்சிறந்தவனும் வீரனுமான அர்ஜுனனும் பாரத்வாஜகுமாரரான அஸ்வத்தாமாவைப்பற்றி, 'இவர் எனக்கு ஆசாரியபுத்திரர்; துரோணருக்கும் பிரியமானகுமாரர்; மேலும் பிராம்மணர்; என்னால் விசேஷமாகக் கௌரவிக்கத்தக்கவர்' என்கிறஎண்ணத்தைக்கொண்டு தயைபாராட்டிவந்தான். பிறகு வெண்மையானகுதிரைகளையுடையவனும், பராக்கிரமசாலியுமான குந்திபுத்திரனை அர்ஜுனன் யுத்தத்தில் துரோணபுத்திரரைவிட்டுவிட்டு உம்மைச்சேர்ந்தவர்களை நாசம்செய்துகொண்டு விரைந்துபோர்புரிந்தான். துர்யோதனன் கழுகிறகுகள்பூண்டவைகளும் சாணையில்தீட்டப்பட்டவைகளும் பொற்கட்டுள்ளவைகளுமான பத்துப்பாணங்களாலே மகாவில்லாளியான பீமஸேனனை அடித்தான். பீமஸேனனும் மிகுந்தகோபங்கொண்டு உயிரைக்கவரக்கூடியதும் உறுதியுள்ளதும் விசித்திரமுமான ஒரு வில்லையும், கூர்மையுள்ளபத்துப்பாணங்களையுங்கையிலெடுத்து மிகுந்தஊக்கத்துடன் காதுவரையில் இழுத்துவிடப்பட்டவைகளும், கூர்மையுள்ளவைகளும், வேகமுள்ளவைகளும், லக்ஷ்யத்தில்நோக்கத்தாக்குகின்றவைகளுமான அம்புகளாலே குருராஜனை விசாலமான மார்பில் விரைவாகஅடித்தான். அந்தத் துரியோதனனுடைய மார்பில் பொன்னூலினால்கோக்கப்பட்டுள்ள ஒருமணியானது அம்புகளால்மறைக்கப்பட்டு ஆகாயத்தில் கிரகங்களால்சூழப்பட்டசூரியன்போல விளங்கியது. ஒளியுள்ளஉம்முடையபுத்திரன் பீமஸேனனால்அடிக்கப்பட்டவனாகி மதமிஞ்சிய ஒருயானையானது நாணொலியைப்பொறுததுபோலப் பொறுக்கவில்லை. மஹாராஜரே! பிறகு ஸைன்யத்தைப்பயப்படுத்துகின்றவனும் மிகுந்தகோபமுண்டவனுமான துர்யோதனன் தங்கக்கட்டுக்களுள்ளவைகளும் சாணையில்தீட்டப்பட்டவைகளுமான அம்புகளால் பீமனை அடித்தான். போர்புரிகின்றவர்களும், யுத்தத்தில் ஒருவரால்ஒருவர் அதிகக்காயப்படுத்தப்பட்டவர்களும் மிக்கபலசாலிகளுமான உம்முடையபுத்திரர்களிருவரும் இரண்டுதேவர்களுக்கு ஒப்பானவர்களாக விளங்கினார்கள். சத்ருவீரர்களைக்கொல்லுகின்றவனான அபிமன்யு நரசிரேஷ்டனான சித்திரஸேனனைப் பத்துப்பாணங்களாலும், புருமித்ரனை ஏழுபாணங்களாலும் அடித்தான். யுத்தத்தில இந்திரனுக்கொப்பானவீரனாகிய

அந்த அபிமன்யு ஸத்யவிரதனை எழுபதுபாணங்களால் அடித்து யுத்த ரங்கத்தில் நர்த்தனஞ்செய்கிறவன்போலிருந்துகொண்டு நமக்குத் துன்பத்தையுண்டுபண்ணினான். அந்த அபிமன்யுவைச் சித்திரசேனன் பத்துப்பாணங்களாலும் ஸத்தியவிரதன் ஒன்பதுபாணங்களாலும் புருமித்திரன் எழுபாணங்களாலும் திருப்பியடித்தார்கள். அவ்வாறு அடிக்கப்பட்ட அர்ஜுனகுமாரன் ரக்தத்தைப்பெருக்கிக்கொண்டு பகைவர்களைநன்றாகத்தடுக்குந்திறமையுடையதும் பெரியதும் விசித்திரமாயுள்ளதுமான சித்திரஸேனனுடையவில்லை அறுத்தான்; அவனுடையகவசத்தையுமுடைத்து ஒருபாணத்தால் மார்பிலடித்தான். பிறகு உம்மைச்சேர்ந்தவர்களும் வீரர்களும் மஹாரதர்களுமான அந்த ராஜபுத்திரர்கள் யுத்தத்தில்மிகுந்தகோபமுள்ளவர்களாக ஒன்றுகூடிக் கூர்மையுள்ள அம்புகளாலே அபிமன்யுவை அடித்தார்கள். சிறந்த அஸ்திரங்களையறிந்தவனான அபிமன்யு அவர்களனைவரையும் கூர்மையுள்ள அம்புகளாலே அடித்தான். அவனுடைய அச்செய்கையைப்பார்த்து உமதுபுத்திரர்கள், வெய்யிற்காலத்தில் காட்டில் உலர்ந்தபெரும்புதரைக்கொளுத்துகின்றதும் நன்றாக ஜ்வலிக்கின்றதுமானநெருப்பைப்போல யுத்தத்தில் ஸைன்யத்தைக்கொளுத்துகின்ற அந்த அபிமன்யுவை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டனர். ஸுபத்ராபுத்திரனான அபிமன்யு உமதுசேனைகளை நாசம்செய்துகொண்டு அதிகமாகவிளங்கினான். அரசரே! உம்முடையபௌத்திரனான லக்ஷ்மணன் அவனுடைய அந்தச்செய்கையைப்பார்த்து யுத்தத்தில் அபிமன்யுவை விரைவாக எதிர்த்தான். அபிமன்யு மிக்ககோபமூண்டு கூரியஆறுபாணங்களாலே நல்லலக்ஷணங்களுள்ள லக்ஷ்மணனையும், மூன்றுபாணங்களால் அவன்ஸாரதியையும் அடித்தான். அரசரே! அவ்வாறே லக்ஷ்மணனும் ஸுபத்திராபுத்திரனைக் கூர்மையுள்ள பாணங்களால் அடித்தான். மஹாராஜரே! அது ஆச்சர்யமாயிருந்தது. மிக்கபலசாலியானஸுபத்ராபுத்திரன் கூர்மையுள்ளபாணங்களாலே அவனுடைய நான்குகுதிரைகளையும் ஸாரதியையுங் கொன்று அவனையும் விரைவாகஎதிர்த்துவந்தான். பகைவர்களை அழிப்பவனானலக்ஷ்மணன் குதிரைகள்கொல்லப்பட்டரதத்திலிருந்துகொண்டு மிகுந்தகோபத்துடன் ஸுபத்திராபுத்திரனுடையரதத்தைக் குறிவைத்து ஒருசக்தியாயுதத்தைஎறிந்தான். விரைவாகவருகின்றதும் கோரரூபமுள்ளதும் எவ்விதத்தாலும் அணுகமுடியாததும் ஸர்ப்பத்திற்குஒப்பானதுமான அந்தச்சக்தியாயுதத்தை அபிமன்யுவானவன் கூர்மையுள்ளஅம்புகளாலே துண்டாக்கினான். பிறகு,

க்ருபர் அப்பொழுது லக்ஷ்மணனைத் தம்ரதத்திலேற்றிக்கொண்டு எல்லாச்சேனைகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்தரங்கத்தில் அவனை ரதத்தோடு வேறிடத்திற்குக் கொண்டுசென்றார். பிறகு கைகலந்ததும் மஹாபயங்கரமுமான அந்தயுத்தம்நடக்கையில் (பகைவர்களைக்)கொல்ல எண்ணங்கொண்டவீரர்கள் ஒருவரையொருவர்வதம்செய்வதில் விருப்பத்துடன் எதிர்த்தார்கள். மஹாவில்லாளிகளான உம்மைச்சேர்ந்தவீரர்களும் மஹாரதர்களானபாண்டவர்களும் யுத்தத்தில் பிராணனைஹோமஞ்செய்கின்றவர்களாகி ஒருவரையொருவர் கொன்றார்கள். விரித்ததலைமயிர்களையுடையவர்களும் கவசத்தைஇழந்தவர்களும் ரதத்தையிழந்தவர்களும் அறுக்கப்பட்ட விற்களையுடையவர்களுமான ஸ்ருஞ்சயர்கள் கௌரவர்களுடன்கூடக் கைகளால் மிகுந்தயுத்தம்செய்தனர். பிறகு நீண்டகைகளையுடையவரும் மிக்கபலமுள்ளவருமானபீஷ்மர் மிகுந்தகோபம்கொண்டவராக மஹாத்மாக்களானபாண்டவர்களுடையஸேனையைத் திவ்யாஸ்திரங்களால் அடித்தார். அந்தயுத்தத்தில் கொல்லப்பட்டயானைவீரர்களாலும் யானைகளாலும் வீழ்த்தப்பட்டமனிதர்களாலும் குதிரைகளாலும் ரதிகர்களாலும் குதிரைவீரர்களாலும் பூமியானது பரப்பப்பட்டது.

---

## எழுபத்துநான்காவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பூரிஸ்ரவஸ் ஸாத்யகியின்குமாரர் பதின்மரைக்கொன்றதும் ஸாத்யகிக்கும் பூரிஸ்ரவஸுக்கும் நடந்த யுத்தமும்.)

அரசரே! பிறகு மஹாபாஹுவும்பலமுள்ளவனும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவனுமானஸாத்யகி யுத்தத்தில் பாரத்தைஸஹிக்கக்கூடிய சிறந்தவில்லைநாண்கயிற்றையிழுத்து நண்பனான அர்ஜுனனிடத்தினின்று முன்புகற்றதும் ஆச்சர்யகரமானதும் சுறுசுறுப்புடன்கூடியதுமான ஹஸ்தலாகவத்தை நன்றாகக்காண்பித்துக்கொண்டு கட்டுகளுடன்கூடியவைகளும் ஸர்ப்பங்களுக்கொப்பானவைகளுமானபாணங்களை நன்றாகப்பிரயோகித்தான். வில்லைநாணையிழுத்து விடும்படிசெய்கின்றவனும் அனேகபாணங்களைப்பிரயோகிக்கின்றவனும் பின்னும்வேறுபாணங்களையெடுத்துநாண்கயிற்றில்பூட்டுகின்றவனும் இன்னும் அனேகபாணங்களைப்பிரயோகிக்கின்றவனும் யுத்தத்தில் பகைவர்களைக்கொல்லுகின்றவனுமான அந்தஸாத்யகியினுடையரூப

மானது, அதிகமாகவர்ஷதாரைகளைப்பொழிகின்றமேகத்தினுடைய உருவம்போலக் காணப்பட்டது. பாரதரே! பிறகு ராஜாவானதுரியோதனன் அவ்வாறு பராக்கிரமத்தால்பிரகாசிக்கின்றஅந்தஸாத்யகியைப்பார்த்து அவனைஎதிர்ப்பதற்காகப் பதினாயிரம்தேர்களை அனுப்பினான். ஸத்தியமானவிக்கிரமத்துடன்கூடியவனும் உத்தமமானவில்லையுடையவனும் வீர்யமுடையவனுமானஸாத்யகி திவ்யாஸ்திரத்தினாலே சிறந்தவில்லாளிகளானஅவர்கள் அனைவரையும் கொன்றான். கையில்விற்பிடித்தவீரனான அந்தஸாத்யகி பயங்கரமானகாரியத்தைச் செய்துவிட்டுப் பிறகு யுத்தத்தில் பூரிஸ்ரவஸை நாடினான். கௌரவர்களுக்குக்கீர்த்தியைவிருத்திபண்ணுகிறவனான அந்தப்பூரிஸ்ரவஸ் மிகுந்தகோபங்கொண்டு யுயுதானனாலேதள்ளப்பட்டஉமதுசேனையைக் கண்டு (ஸாத்யகியை) எதிர்த்துவந்தான். மஹாராஜரே! அந்தப்பூரிஸ்ரவஸ் இந்திராயுதத்திற்குச் சமமானவர்ணமுள்ள மிகப்பெரியவில்லை நாணொலியிடும்படிசெய்து கைத்தேர்ச்சியை ஆயிரம்மடங்காகக்காண்பித்துக்கொண்டு வஜ்ராயுதத்திற்குஒப்பானவைகளும் ஸர்ப்பங்களுக்கு ஒப்பானவைகளுமான அம்புகளைப் பிரயோகித்தான். ராஜரே! அப்பொழுது ஸாத்யகியினுடையகாலாட்கள் மிருத்யுவைப்போலத் தாக்குகின்ற அந்தப்பாணங்களை ஸஹிக்கவில்லை. ராஜரே! அவர்கள் யுத்தத்தில்கெட்டமதங்கொண்ட ஸாத்யகியைவிட்டுவிட்டு யுத்தரங்கத்தில் எல்லாப்பக்கங்களிலும் ஓடினார்கள். மஹாரதர்களென்றும்க்கப்ரவித்திபெற்றவர்களும் மிக்கபலசாலிகளும் விசித்திரமான கவசங்கள், ஆயுதங்கள், த்வஜங்கள் இவைகளையுடையவர்களுமான ஸாத்யகியினுடையபத்துக்குமாரர்களும் மிகுந்தபரபரப்புடன் யுத்தத்தில்சிறந்தவில்லாளியும், யூபஸ்தம்பத்தைக்கொடியாகக்கொண்டவனுமான அவனிடம்சென்று மஹாயுத்தத்தில் பின்வருமாறு வசனிக்கலானார்கள். ஓ! ஓ! குருவம்சத்திற்பிறந்தவனே! மிக்கபலசாலியே! வா. எங்கள் அனைவருடனுமாவது தனித்தனியாவது யுத்தம்செய். எங்களையாவது நீ தோல்வியடையும்படிசெய்துவிட்டு யுத்தத்தில் கீர்த்தியைஅடை. அல்லது நாங்களேனும் உன்னைத் தோல்வியடையும்படிசெய்வித்து எங்கள்பிதாவானஸாத்யகிக்குப் ப்ரீதியைவிருத்திபண்ணுகிறோம்' என்றார்கள். இவ்வாறு சூரர்களாலேஅப்பொழுதுசொல்லப்பட்டவனும் மஹாபலசாலியும் வீர்யத்தினால்புகழ்ச்சிபெற்றவனும் ஆண்மையிற்சிறந்தவனுமானபூரிஸ்ரவஸ் ஸன்னத்தர்களாய்நிற்கின்ற அந்தஸாத்யகிபுத்திரர்களைப்பார்த்து, 'சூரர்களே! நீங்கள்சொல்லும்இது நல்லவிஷயம்; இவ்வாறானஎண்ணம் இப்பொழுது உங்களுக்குஇருந்தால் நீங்க

னைவரும் ஒன்றுசேர்ந்து முயற்சியுடன் யுத்தம்செய்யுங்கள். யுத்தத்தில் உங்களை நான் கொல்வேன்' என்றுகூறினன். இவ்வாறுசொல்லியதைக்கேட்டு, மஹாவில்லாளிகளும் மிக்கசுறுசுறுப்புடையவர்களுமான அந்தவீரர்கள் பெரிதான அம்புமழையோடு பகைவரைக்கொல்பவனான பூரிஸ்ரவஸை எதிர்த்து ஓடிவந்தார்கள். மகாராஜரே! ஒருவனான பூரிஸ்ரவஸுக்கும் யுத்தபூமியில் ஒன்றுகூடினவர்களான அனேகவீரர்களுக்கும் பிற்பகலில் கைகலந்தஅவ்விதமானசண்டை நடந்தது. அரசரே! வர்ஷாகாலத்தில் மேகங்கள் எவ்வாறு மேருபர்வதத்தை (வர்ஷதாரைகளால்) நனைக்குமோ அவ்வாறு அவர்கள் ரதிகர்களுள் உத்தமனான பூரிஸ்ரவஸை அம்புகளால் நனைத்தனர். மஹாரதனான பூரிஸ்ரவஸ் அவர்களால்விடப்பட்டவைகளும்கோரஸ்வரூபமுள்ளவைகளும் யமதண்டத்துக்கும் வஜ்ராயுதத்துக்குமொப்பானகாந்தியுள்ளவைகளுமானபாணங்களைத் தன்னைவந்துநாடுவதற்குள் பரபரப்பில்லாமலே விரைவாக அறுத்தெறிந்தான். ஸோமதத்தனுடையகுமாரனான பூரிஸ்ரவஸ் ஒருவனாகஇருந்துகொண்டு யுத்தத்தில் அனேகர்களோடு பயமற்றவன்போல எதிர்த்துப்போர்புரிந்த அத்புதமானபராக்கிரமத்தை அவ்விடத்தில் நாங்கள் அனைவரும் பார்த்தோம். வேந்தரே! பத்து மஹாரதர்களும் அவ்விதமானசரமாரியைப்பொழிந்துகொண்டு மிக்க புஜபலமுள்ளபூரிஸ்ரவஸைச்சூழ்ந்துகொண்டு (அவனை) கொல்லஆரம்பித்தார்கள். பாரதகுலத்திற்பிறந்தவரே! பிறகு கோபங்கொண்டவனானஸோமதத்தகுமாரன் மகாரதர்களானஅவ்வீரர்களோடு போர்புரிந்துகொண்டு யுத்தத்தில் அவர்களுடையவிற்களை வெட்டினன். பரதசிரேஷ்டரே! பிறகு அவன் விற்களறுக்கப்பட்டஅந்தவீரர்களுடைய தலைகளைப் பதிவாணகணுக்களுள்ளஅம்புகளாலே யுத்தத்தில் அறுத்தான். அரசரே! கொல்லப்பட்டஅந்தஸாத்யகிபுத்திரர்கள் இடியினல் முறிக்கப்பட்டமரங்கள்போலக் கீழேவிழுந்தார்கள். மன்னரே! விருஷ்ணிகுலத்தில்தோன்றியவனும் வீரனுமானஸாத்யகி, மஹாபலசாலிகளானதன்புத்திரர்கள் யுத்தத்தில் கொல்லப்பட்டார்களென்பதைக் கண்டு அட்டஹாஸஞ்செய்துகொண்டு பூரிஸ்ரவஸை எதிர்த்தான். மஹாபலசாலிகளும் மஹாரதர்களுமான அவ்விருவரும் யுத்தத்தில் ஒருவர்ஒருவருடையரதங்களைத ரதத்தினல்பிடித்து ரதத்தில்பூட்டியிருக்கின்றகுதிரைகளையும்கொன்று ரதத்தையிழந்தவர்களும் எதிரில்யுத்தப்பரபரப்புள்ளவர்களுமாகஎதிர்த்தார்கள். பெரியகத்தியைக்கையில் பிடித்தவர்களும் உத்தமமானகேடகத்தைத்தரித்தவர்களும் நரசிரேஷ்டர்களுமான அவ்விருவரும் யுத்தத்தின்பொருட்டு ஸன்னத்தர்களாக

நின்றுகொண்டு விளங்கினார்கள். மஹாரதனானவிருகோதரன் யுத்தத்தில் பூரிஸ்ரவஸைக் கத்திச்சண்டையில் பிறரால் ஸஹிக்கத்தகாதவன் என்றுஎண்ணி விரைவாக அவன்அருகில்வந்தான். ராஜரே! பிறகு பீமஸேனன், மிகவிரைந்து உத்தமமானகத்தியைக்கையில்தாங்கின ஸாத்யகிக்குஎதிராகவந்து அப்பொழுதுஅவனைத்தன்தேரில் ஏறும்படி செய்தான். அரசரே! உமதுபுத்திரனும் யுத்தகளத்தில் எல்லாவில்லாளிகளும்பார்த்துக்கொண்டிருக்கும்போதே பூரிஸ்ரவஸை விரைவாகத் தன்ரதத்தின்மீதேறும்படிசெய்தான். அவ்விதமானயுத்தம் நடக்கும் பொழுது பரபரப்புள்ளபாண்டவர்கள் மகாரதரானபீஷ்மரை எதிர்த்துப்போர்புரிந்தார்கள். சூரியன் சிவந்தநிறமுடையவனாகுங்காலத்தில் தனஞ்சயன்விரைவாக இருபத்தையாயிரம்மஹாரதர்களைக்கொன்றான். பார்த்தனைக் கொல்லும்விஷயத்தில் துர்யோதனனால் கட்டளையிடப்பட்ட அந்தவீரர்கள், விட்டில்பூச்சிகள் நெருப்பையடைந்து நாசமுறுவதுபோலஅப்பொழுது அர்ஜுனனை அடைந்தே நாசமடைந்தார்கள். பிறகு தனுர்வேதத்தில்திறமையுள்ளவர்களானமத்ஸ்யதேசத்தார்களும் கேகயர்களும் அப்பொழுது புத்திரனோடுகூடினமஹாரதனானபார்த்தனை நான்குபுறத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். இந்தஸமயத்தில் சூரியன்அஸ்தமயத்தைஅடையவே எல்லாஸைனியங்களுக்கும் மிகுந்தமயக்கம்உண்டாயிற்று. மஹாராஜரே! களைப்புற்றவாகனங்களுடன்கூடின உமதுபிதாவானதேவவிரதர் ஸந்தியாகாலத்தில் ஸைனிகர்களை யுத்தத்தைவிட்டு ஒழியும்படிசெய்தார். பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் பரஸ்பரம்நேர்ந்தயுத்தத்தில் அந்தஇருதிறத்துச்சேனைகளும் மிகுந்ததுன்பமடைந்து தம்தம்இருப்பிடத்தை அடைந்தன. பாரதரே! பிறகு ஸ்ருஞ்சயர்களுடன்கூடினபாண்டவர்களும் கௌரவர்களும் தம்சேனை தங்கியிருக்குமிடத்தையடைந்து அவ்விடத்தில் முறைப்படி தங்கியிருந்தார்கள்.

ஐந்தாம் நாள் யுத்தம் முடிந்தது.

---

## எழுபத்தைந்தாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(கௌரவர் கிரௌஞ்சவ்யூஹத்தையும் பாண்டவர் மகரவ்யூஹத்தையும் வகுத்துப் போர்புரிந்தது.)

வேந்தரே! கௌரவர்களும் பாண்டவர்களும் இனிதுபொழுது போக்கி அவ்விரவுசென்றவுடன் திரும்பவும் யுத்தத்திற்குப் புறப்பட்

டார்கள். பாரதரே! பிறகு உம்முடையவையும், அவர்களுடையவையு மானசேர்ந்திருக்கின்றஉத்தமரதங்கள்,வித்தஞ்செய்யப்படுகின்றயானை கள், ஸன்னஹத்துடன்கூடினகாலாட்கள், குதிரைகள்இவற்றின்சப்த மானது பெரிதாகத் தோன்றியது. பாரதரே! சங்கங்கள் துந்துபிகள் இவற்றின்ஒலியானது நெருக்கமாக எல்லாப்பக்கத்திலும் தோன்றி யது. பிறகு, யுதிஷ்டிரராஜர் திருஷ்டத்யும்னனைப்பார்த்து, 'பாஞ் சால! சத்துருக்களைநாசஞ்செய்யுந்திறமையுள்ளமகரவ்யூஹத்தை ஏற் படுத்து' என்றுசொன்னார். ரதிகர்களுள்உத்தமனும் மகாரதனுமான திருஷ்டத்யும்னன் யுதிஷ்டிரரால்இவ்வாறுசொல்லப்பட்டு ரதிகர்களை நோக்கி யுத்தமுறைப்படி கட்டளையிட்டான். துருபதனும் பாண்டு புத்திரனானதனஞ்சயனும் அதனுடையதலையானார்கள். மகாராஜரே! ஸஹதேவனும் மகாரதனானநகுலனும் (அதனுடைய) கண்களானார் கள்; மஹாபலசாலியானபீமஸேனன் முகமானான்; ஸுபத்ராபுத்திர னானஅபிமன்யு, திரௌபதிபுத்திரர்கள், ராக்ஷஸனானகடோத்கசன், ஸாத்யகி, தர்மராஜர்இவர்கள் கழுத்தில் நின்றார்கள். மகாராஜரே! ஸேனாபதியானவிராடன் பின்புறத்திலிருந்தான். பெரியசேனையினால் சூழப்பட்டதிருஷ்டத்யும்னனும், பிராதாக்களானஐந்துகேகயதேசத்து வீரர்களும் அதனுடையஇடவிலாப்புறத்தையடைந்துநின்றார்கள். புருஷசிரேஷ்டனானதிருஷ்டகேதுவும் வீர்யமுடையவனானசேகிதான னும் அதன்வலப்பக்கத்தையடைந்து வியூகத்தைக்காப்பதில்(ஸன்னத் தர்களாக) நின்றார்கள். மஹாராஜரே! ஐசுவரியமுடையவர்களும் மஹா ரதர்களுமான குந்திபோஜனும் சதாநீகனும் பெரும்படையினால் சூழப் பட்டு (அந்தவியூஹமகரத்தினுடைய) இரண்டுகால்ஸ்தானங்களில் நின்றார்கள். பிறகு, மஹாவில்லாளியும் ஸோமகர்களால்சூழப்பட்டவ னும் பலசாலியுமான சிகண்டியும் இராவானும் (அந்த) வ்யூஹமகரத்தி னுடையவால்பக்கத்தில் நின்றார்கள். பரதகுலத்திற்பிறந்தமஹாராஜ ரே! பாண்டவர்கள் இவ்வாறு பெரிதான இந்தமகரவியூகத்தை ஏற்படுத்திக்கொண்டு கவசம்பூண்டு யானைகளோடும் குதிரைகளோ டும் தேர்களோடும் காலாட்களோடும் தூக்கிக்கட்டப்பட்டகொடிகளோ டும் குடைகளோடும் தீட்டப்பட்டவைகளும் பளபளப்புள்ளவைகளு மான சஸ்திரங்களோடுங்கூடியவர்களாகிச் சூரியஉதயகாலத்தில் மீண் டும் யுத்தத்தின்பொருட்டு விரைவாகக் கௌரவர்களை எதிர்த்துச்சென் றார்கள். அரசரே! அந்தப்பாண்டவஸைனியம் அணிவகுக்கப்பட் டதைக்கண்டு உம்முடையபிதாவானதேவவிரதர் தம்சேனையைப் பெரிதானகிரௌஞ்சபக்ஷியின்வடிவம்போல் எதிரணிவகுத்தார். ஜனே

ஸ்வாரே! பெரியவில்லைக்கையில்கொண்டபாரத்வாஜர் அந்தவ்யூஹ க்ரௌஞ்சத்தினுடையமுகத்தில் விளங்கினர். அஸ்வத்தாமாவும் கிருபரும் இரண்டுகண்களானார்கள். பிறகு நரசிரேஷ்டனும் விற்பிடித்த எல்லாவீரர்களுள்ளும்சிறந்தவனுமான்கிருதவர்மா காம்போஜர்களோடும்பாஹ்லிகர்களோடும் சேர்ந்து (அந்தவ்யூஹக்ரௌஞ்சத்தினுடைய) சிரஸில்நின்றான். மஹாராஜரே! சூரஸேனதேசத்தரசனும் அனேக அரசர்களால்சூழப்பட்ட உம்முடையகுமாரனான துரியோதனனும் (அந்தவ்யூஹக்ரௌஞ்சத்தினுடைய) கழுத்தில் நின்றார்கள். மத்திர தேசத்துவீரர்களோடும் ஸௌவீரர்களோடும் கேகயர்களோடுங்கூடின ப்ராக்ஜ்யோதிஷதேசாதிபதியானவன் பெரும்படையினால்சூழப்பட்டவனாக (அந்தவ்யூஹக்ரௌஞ்சத்தினுடைய மார்பில் நின்றான். பெரிய விற்களையுடையவர்களும் காலாட்களுடன்கூடியவர்களுமான அவந்தி தேசத்தரசர்களிருவரும்(அந்தவ்யூஹக்ரௌஞ்சத்தினுடைய)பின்புறத்தில்நின்றார்கள். பிரஸ்தலாதிபனான ஸுசர்மா கவசமணிந்து தன்சேனையோடு (அந்தவியூகக்ரௌஞ்சத்தினுடைய) இடப்பக்கத்திலுள்ள சிறகையடைந்து நின்றான். பரதகுலத்திற்பிறந்தவரே! துஷாரர்களும் யவனர்களும் சகர்களும் சூசுபர்களோடுசேர்ந்து அந்தவ்யூஹக்ரௌஞ்சத்தினுடைய வலப்பக்கத்தையடைந்து நின்றார்கள். சுருதாயுவும் சதாயுவும் ஸோமதத்தகுமாரனும் ஒருவரைஒருவர்காப்பவர்களாகி அந்தவ்யூஹக்ரௌஞ்சத்தினுடைய இடைப்பக்கத்தில் நின்றார்கள். மஹாராஜரே! பிறகு கௌரவர்கள் பாண்டவர்களோடு யுத்தத்திற்காக எதிர்த்தார்கள். சூரியன்உதயமாகவே ஜனக்ஷயமானது பெரிதாகநடக்க ஆரம்பித்துவிட்டது. ராஜரே! அந்தப்பெரியயுத்தத்தில் தேராளிகள் யானைகளை எதிர்த்துச்சென்றார்கள். யானைகள் தேராளிகளை எதிர்த்தன. தேரிலேறியிருந்தவர்கள் குதிரையின்மீதுள்ளவர்களை எதிர்த்தார்கள். குதிரையின்மீதுள்ளவர்கள் தேரின்மீதிருந்தவர்களை எதிர்த்தார்கள். ராஜரே! குதிரைக்காரர்கள் குதிரைக்காரர்களையும் தேராளிகளையும் எதிர்த்தார்கள். குதிரையின்மீதுள்ளவர்கள் யானையின்மீதுள்ளவர்களையும் அவ்வாறே குதிரைவீரர்கள் ரதிகர்களையும் எதிர்த்தார்கள். (அந்த மகா)யுத்தத்தில் தேராளிகள் கோபங்கொண்டவர்களாகக் காலாட்படைகளோடும் குதிரைக்காரர்கள் காலாட்களோடும் ஒருவரோடொருவர் எதிர்த்துப்போர்புரிந்தார்கள். பீமஸேனனாலும் அர்ஜுனனாலும் நகுல ஸஹதேவர்களாலும் இன்னும்மற்றமகாரதர்களாலும் பாதுகாக்கப்பட்ட பாண்டவசேனையானது நக்ஷத்திரங்களால் இரவுவிளங்குவது போல் விளங்கியது. அவ்வாறே உம்முடையசேனையும் பீஷ்மர், கிரு

பர், துரோணர், சல்யன் துரியோதனன்முதலானவர்களாலே சூழப்பட்டு ஜ்யோதிக்கிரகங்களால் ஆகாயம்விளங்குவதுபோல் விளங்கியது. பராக்கிரமசாலியும் குந்தீபுத்திரனுமான பீமஸேனன் துரோணரைக் கண்டு வேகமுள்ளகுதிரைகளோடு அவருடையசேனையை எதிர்த்து வந்தான். யுத்தத்தில்புகழ்ச்சிபெற்றவரும் வீர்யமுள்ளவருமான துரோணரோ யுத்தத்தில் கோபங்கொண்டு இரும்புமயமான ஒன்பதுபாணங்களால் பீமனை மர்மஸ்தானங்களில் அடித்தார். நையப்புடைக்கப்பட்ட பீமன் பிறகு யுத்தத்தில் பாரத்வாஜருடையஸாரதியை யமனுடைய வாஸஸ்தானத்துக்கு அனுப்பினான். சிறந்தபிரதாபசாலியான பாரத்வாஜர் தாமேகுதிரைகளைநடத்திக்கொண்டு பஞ்சுக்குவியலைத் தீஎரிப்பதுபோலப் பாண்டவசேனையை நாசம்செய்தார். துரோணராலும் பீஷ்மராலும் கொல்லப்பட்ட அந்தப்புருஷசிரேஷ்டர்களானஸ்ருஞ்சயர்கள் கேகயர்களுடன்கூட ஓடுவதில் நோக்கமுள்ளவர்களானார்கள். அவ்விதமாகவே பீமனாலும் அர்ஜுனனாலும் நான்குபக்கங்களிலும் காயப்படுத்தப்பட்ட உம்முடையசேனையானது மதத்துடன்கூடின உத்தமஸ்திரீபோல் ஆங்காங்கு மோஹமடைந்தது. பரதகுலத்தில் பிறந்தவரே! அவ்வாறு உத்தமர்களானவீரர்கள் நாசமடையுங்காலத்தில் அவ்விரண்டுவியூஹங்களும் உடைந்தன. உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பிறருக்கும் கோரமான கைகலந்தயுத்தம் நடந்தது. உம்மைச்சேர்ந்தவர்கள் எல்லோரும் ஒரேநிச்சயமுடையவர்களாகப் பகைவர்களுடன் செய்த அத்புதமானயுத்தத்தை நாங்கள் கண்டோம். ராஜரே! மிக்கபலசாலிகளான பாண்டவர்களும் கௌரவர்களும் அஸ்திரங்களை (அஸ்திரங்களால்) தடுத்துக்கொண்டு ஒருவரோடொருவர் போர்புரிந்தார்கள்” என்றுகூறினான்.

---

## எழுபத்தாறுவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் தன் ஸேனைகளழிந்ததுகேட்டு வருந்தியது.)

திருதராஷ்டிரன், “ஸஞ்சய! இவ்வாறு அநேககுணங்களையுடையதும் இவ்வாறு பலவிதமாயுள்ளதும் சிறப்புற்றதும் சாஸ்திரத்திற்சொல்லியபடி அணிவகுக்கப்பட்டதும் வீணாகாததும் நம்மால்ப்ரீதியோடடையப்பட்டதும் நமக்கு அதிகமாக அபீஷ்டத்தை எப்பொழுதும்விளைவிக்கின்றதும் மிகுந்தஸந்தோஷமுள்ளதும் யுத்தத்

தில்பற்றுதலுள்ளதும் பிரத்தியக்ஷமாகக்காணப்பட்டவலிமையுடையதும் மிகவும்வயதுசெல்லாததும் அதிபால்யமில்லாததும் இளைக்காததும் பருக்காததும் விரைவாகக்காரியங்களைச்செய்கின்றதும் உயர்ந்தமனிதர்களாலேநிறைந்ததும் கடல்போன்றதும் குறைவற்றதும் யுத்தஸன்னாகத்தினால் கையில்எடுக்கப்பட்ட அனேகசஸ்திரங்களையுடையதும் கத்திச்சண்டையிலும், கைச்சண்டையிலும், கதாயுத்தத்திலும் தேர்ச்சியுள்ளதுமான நமதுசேனையானது யுத்தகளத்தில் ஈட்டிகள், ரிஷ்டிகள், தோமரங்கள், இரும்புமயமானபரிகாயுதங்கள், பிண்டிபாலங்கள், சக்திகள், உலக்கைகள், கம்பனங்கள், விற்கள், கணபங்கள், விசித்திரமானக்ஷேபணீயங்கள்ஆகிய இவைகளிலும் முஷ்டியுத்தங்களிலும் மிக்கதிறமையுடையது;மேலும் வித்யைகளில் (ஸாரத்தை) பிரத்யக்ஷமாகக் கண்டறிந்திருக்கிறது; யுத்தத்தில் மிகுந்த உழைப்புடன்கூடியிருக்கிறது; எல்லாச்சஸ்திரக்கிரகணவித்தைகளிலும் பூர்ணமானஸாமர்த்தியமுடையது; யானைமுதலியவைகளின் மீதேறுவதிலும் யானைமுதலியவைகளிலிருந்து இறங்குவதிலும் மத்தியில்துள்ளுதலோடுகூடின (தடையற்ற)ஸஞ்சாரத்திலும் நன்றாகஅடிப்பதிலும்(பகைவர்களை)எதிர்ப்பதிலும் திரும்பிஓடுவதிலும் மிக்கதேர்ச்சியுடையது; யானையேற்றங்களிலும் குதிரையேற்றங்களிலும் ரதாரோஹணங்களிலும் பலவாறு நன்றாகப் பரீக்ஷைபண்ணப்பட்டிருக்கின்றது; பரீக்ஷைசெய்து நியாயப்படி (தகுந்த)வேதனத்தினால் நம்மால் அந்தந்தஸ்தானத்தில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அப்படியின்றி கோஷ்டியினாலும் உபகாரத்தினாலும் உறவின்முறையினாலும் நட்பினாலும் இழிகுலத்திற்பிறந்தவர்களுடைய அங்கீகாரங்களாலும் ஏற்படுத்தப்படவில்லை. ஜனங்களால்நிரம்பியதும் சிறந்ததும் ஸந்தோஷமடைந்த ஸம்பந்திகளோடும் பந்துக்களோடுங்கூடியதும் உபகாரத்தையடைந்த ஜனங்களாலேநிறைந்ததும் புகழ்பெற்றதும் பெருந்தன்மையுள்ளதுமாயிருக்கின்றது. ஐயா! மேலும் நெருங்கியசுற்றத்தார்களாலும் பலவாறுகாணப்பட்டசெய்கைகளையுடையவர்களும் லோகபாலர்களுக்கு ஒப்பானவர்களுமாயிருக்கின்ற முக்கியர்களானமனிதர்களாலும் காக்கப்பட்டும் உலகத்தில்பிரஸித்திபெற்றுமிருக்கிறது. பூமியில் எல்லா ஜனங்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டவர்களும் விருப்பத்தினாலேநம்மையடைந்திருப்பவர்களும் படைகளையுடையவர்களும் காலாட்களையுடையவர்களுமான அனேகக்ஷத்திரியர்களாலே காக்கப்பட்டதும் நதிகளாலேநான்குபுறத்திலும் நிரப்பப்பட்டமகாஸமுத்திரம்போன்றதும் சிறகில்லாதபக்ஷிகளுக்கொப்பானதேர்களாலும் யானைகளாலும்

சூழப்பட்டதும் பலவிதயுத்தவீரர்களாகிறஜலத்தோடுகூடியதும் பயங்கரமானதும் வாகனங்களாகிறஅலைவரிசைகளையுடைதும் க்ஷேபணிகள், கத்திகள், கதைகள், சக்திகள், அம்புகள், ஈட்டிகள் இவைகளால்நிரம்பியதும் த்வஜங்களாலும் பூஷணங்களாலும்நெருங்கியதும் ரத்நபட்டங்களால் நன்றாகநிறைக்கப்பட்டதும் நான்குபக்கங்களிலும்ஓடுகின்ற குதிரைகளாலுண்டுபண்ணப்பட்டகாற்றுவேகத்தினால் அசைக்கப்பட்டதும் கரையற்றஸமுத்திரம்போலப் பெரியதானதும் கர்ஜிக்கின்றதும் துரோணராலும் பீஷ்மராலும் கிருதவர்மாவினாலும் கிருபராலும் துச்சாஸனனாலும் ஜயத்ரதன்முதலானவர்களாலும் பகதத்தனாலும் விகர்ணனாலும் துரோணபுத்திரராலும் ஸௌபலனாலும் பாஹ்லிகனாலும் மிக்கபலமுள்ளவர்களும் மகாத்மாக்களும் சிறந்தவீரர்களுமானஜனங்களாலும் பாதுகாக்கப்பட்டதுமான என்னுடையஸைன்யமானது கொல்லப்பட்டதனால் தெய்வத்தையே இவ்விஷயத்தில் முக்கியமென்று எண்ணுகிறேன். ஸஞ்சய! இவ்விதமானயுத்தத்தை மனிதர்களேனும் ரிஷிகளேனும் மஹாபாக்கியசாலிகளானபூர்வபுருஷர்களேனும் பூமியில் பார்த்திருக்கமாட்டார்கள். ஆயுதங்களைமிகுதியாகக் கொண்ட இவ்விதமானசேனைத்திரளும் யுத்தத்தில் பகைவர்களால் கொல்லப்படுமேயாயின் நமதுதுரதிர்ஷ்டத்தைத்தவிரவேறென்ன இருக்கிறது? ஸஞ்சய! இவ்விதமானகோரமாயிருக்கின்றஇந்தஸைன்யம் யுத்தத்தத்தில் பாண்டவர்களைக்கொல்லாமலிருந்தமையால் இது முழுமையும் எனக்கு விபரீதமாகத்தோன்றுகிறது. ஸஞ்சய! நம்முடைய சேனைகொல்லப்பட்டகாரணத்தால் பாண்டவர்களுக்காகத் தேவர்களே அங்கு ஒன்றுசேர்ந்து நிச்சயமாகப் போர்புரிகிறார்கள். விதுரனால் தினந்தோறும் ஹிதமாயும் பத்யமாயுமுள்ளவார்த்தை சொல்லப்பட்டிருந்தும் புத்திக்குறைவுள்ள என்புத்திரன் துரியோதனன் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. ஐயா! விதுரனால் முன்புகண்டறியப்பட்ட இது அவ்வாறேவந்தமையால் ஸர்வஜ்ஞனான அம்மகாத்மாவினுடைய புத்தியை யதார்த்தமென்று எண்ணுகிறேன். ஸஞ்சய! அன்றேனும் இது எவ்விதத்தாலும் இவ்வாறேஆகும். தெய்வத்தினாலே எது முன்பு எவ்விதமாகவேண்டுமென்று கட்டளையிடப்பட்டிருக்கிறதோ அது அவ்விதமே ஆகத்தக்கது; வேறுவிதமாகாது" என்றுகூறினன்.

---

## எழுபத்தேழாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீமன், துரோணர் இருவருடைய பராக்ரமத்தையும் வர்ணித்தல்.)

ஸஞ்சயன், "ராஜரே! உம்முடையதோஷத்தினாலே இவ்விதத் துயரமானது உம்மால் அடையப்பட்டது. பரதர்களிற்சிறந்தவரே! அரசரே! தர்மஸாங்கர்யத்திற்குக்காரணமாக எந்தத்தோஷங்களைப் பார்க்கிறீரோ அவ்விததோஷங்களைத் துரியோதனன் பார்க்கவில்லை. உம்முடையதோஷத்தினாலே முன்பு இந்தச்சூதாட்டமானது ஏற்பட்டது. உம்முடையதோஷத்தினாலேயே பாண்டவர்களுடன் யுத்தம் நடக்கஆரம்பித்தது. ராஜரே! நீரே கொடுஞ்செய்கையைச்செய்தீர். அதன்பயனை நீரே இப்பொழுது அநுபவியும். தன்னால்செய்யப்பட்ட செய்கையானது தன்னாலேயே இம்மையிலேனும் மறுமையிலேனும் அநுபவிக்கப்படுகிறது. (வினைப்பயன்) உள்ளபடி உம்மால் அடையப் பட்டுவிட்டது. ஆதலால் நீர் இந்தப்பெரியவியஸனத்தையடைந்து ஸ்திரமாயிருந்துகொண்டு சொல்லுகின்றவனிடத்தினின்று அந்த யுத்தம் நடந்தவகையைக் கேளும். பிறகு வீரனானபீமஸேனன் மிக் ககூர்மையுள்ளபாணங்களாலே பெருஞ்சேனையைப்பிளந்து துரியோ தனனுடையஇளையஸஹோதரர்களனைவரையும் நாடினான். மஹாரத னான அவன் துச்சாஸனன், துர்விஷஹன், துஸ்ஸஹன், துர்மதன், ஜயன், ஜயத்ஸேனன், விகர்ணன், சித்ரஸேனன், ஸுதர்சனன், சாரு சித்ரன், ஸுவர்மா, துஷ்கர்ணன், கர்ணன்இவர்களையும் இன்னும் ஸமீபத்திலுள்ள கோபங்கொண்டிருக்கிற மற்றக்கௌரவர்களையும் அனேகமகாரதர்களையும்நோக்கிப் பீஷ்மராலேயுத்தத்தில் காக்கப்பட்ட பெருஞ்சேனையில் பிரவேசித்தான். பிறகு பிரவேசித்தஅந்தப்பீமஸே னனைக்கண்டு, 'அரசர்களானநாம் இவனை உயிரோடு பிடிப்போம்' என்றுசொன்னார்கள். பிரளயகாலத்தில் குரூரமானமஹாகிரஹங்களா லே சூரியன் சூழப்படுவதுபோல நிச்சயங்கொண்டவர்களான அந்தப் பிராதாக்களால் அந்தப்பார்த்தன் சூழப்பட்டான். எவ்வாறு தேவா ஸுரயுத்தத்தில் தானவர்களை அடைந்த மகேந்திரனைப் பயம் அணுக வில்லையோ அவ்வாறே (சத்துரு) ஸைனியத்தினுடையமத்தியத்தை அடைந்த பாண்டுபுத்திரனைப் பயம் அணுகவில்லை. பிரபுவே! பிறகு முயற்சியுள்ளவர்களான லக்ஷக்கணக்கானரதிகர்கள் நான்குபக்கங்களி லும் தீவிரமானபாணங்களோடு ஸஹாயமற்றவனாயிருக்கின்ற அந்தப் பீமஸேனனைச் சூழ்ந்துகொண்டார்கள். சூரனானஅந்தப்பீமன் கௌ

ரவர்களைமதியாமல் அவர்களுடையசிறந்தவீரர்களையும் யானைகளை
யும் குதிரைகளையும் தேர்களையும் குதிரைக்காரர்களையும் யுத்தத்தில்
கொன்றான். அதிகமானமனோதைரியத்தையுடையபீமஸேனன் தன்
னைப்பிடிக்கஎண்ணங்கொண்ட அவர்களனைவருடைய முயற்சியையும்
அறிந்து அவர்களெல்லோரையுங் கொல்வதில்மனத்தைச்செலுத்தினான்.
பிறகு பாண்டுபுத்திரனானபீமன் ரதத்தைவிட்டுவிட்டுக் கதாயுதத்தைக்
கையிலெடுத்துக்கொண்டு ஸாரதியைநோக்கி, 'பரிவாரங்களுடன்கூடின
இந்தத்திருதராஷ்டிரகுமாரர்களை யான் கொல்லுகிறவரையில் நீ
இங்குநில்' என்றுசொன்னான். பீமஸேனன் இவ்வாறுசொல்லிவிட்
டுப் பெரியசேனையில்நுழைந்து கௌரவர்களுடைய மஹாஸமுத்திரம்
போன்ற அந்தஸேனாஸமூகத்தை நாசம்செய்தான். அவனால் கதாயு
தத்தினால்அடிக்கப்பட்ட பெரியதேகத்துடன்கூடினசிறந்தயானைகள்
மத்தகங்களும் முதுகுகளும் உடல்களும்பிளக்கப்பட்டுத் தம்மீதேறி
யிருக்கின்றயுத்தவீரர்களோடு யுத்தகளத்தில் சாய்ந்தன. போர்வீரர்க
ளேறிய நூற்றுக்கணக்கானதேர்கள் யுத்தரங்கத்தில் எள்ளளவெள்ள
ளவாகஉடைக்கப்பட்டன. குதிரைகளும் குதிரைக்காரர்களும் காலாட்
களோடுகூட நாசஞ்செய்யப்பட்டார்கள். பிரளயகாலத்தில் எல்லாப்
பிராணிகளையும்காலதண்டத்தைக்கையில்கொண்ட அந்தகன்எதிர்ப்பது
போல ஒருவனானபீமன் யுத்தத்தில் அநேகவீரர்களோடெதிர்த்துப்
போர்புரிந்தானென்னும் பீமனுடையஆச்சரியகரமானவிக்கிரமத்தை
அந்தவிடத்தில் கண்டோம். அவன்பிரவேசித்தவுடனே பார்ஷதனா
னதிருஷ்டத்யும்னனும் பீமஸேனனிருந்தவிடத்திற்கு விரைவாகத்
துரோணரைவிட்டுவிட்டுச் சென்றான். நரசிரேஷ்டனானதிருஷ்டத்
யும்னன் உம்மைச்சேர்ந்தவர்களுடையபெரியசேனையைப்பிளந்துகொ
ண்டு பீமஸேனனையிழந்துள்ள அவனுடையரதத்தை யுத்தத்தில் நாடி
னான். மஹாராஜரே! திருஷ்டத்யும்னன் யுத்தகளத்தில் பீமஸேனனு
டையஸாரதியான விசோகனைக்கண்டு மனம்நொந்து பிரஜ்ஞையை
யிழந்து கண்ணீரால்மிகவும்மூடப்பட்டுப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு
துக்கத்துடன், 'விசோக! எனக்குப் பிராணன்களைக்காட்டிலும் பிரிய
மானபீமன் எங்கே' என்று(அவனைக்)கேட்டான். விசோகன் கைகளைக்
குவித்துக்கொண்டு அந்தத்திருஷ்டத்யும்னனைப்பார்த்து, 'பலசாலியும்
பராக்கிரமசாலியுமானபாண்டுபுத்திரர் என்னை இங்குநிறுத்திவிட்டுத்
திருதராஷ்டிரகுமாரர்களுடைய இந்தப்படையாகியபெருங்கடலில்
பிரவேசித்திருக்கிறார். புருஷசிரேஷ்டரும் மஹாபலசாலியுமான அவர்,
'ஸூத! என்னைக்கொல்வதில்முயற்சியுள்ளவர்களான இவர்களை இப்பொ

ழுதுயான்கொல்லும்வரையில் குதிரைகளை இழுத்துநிறுத்திக்கொண்டு ஒருமுகூர்த்தகாலம் என்னை எதிர்பார்த்திரு' என்று என்னைப்பார்த்துப் பிரீதியுடன் இந்தவார்த்தையைச் சொல்லிவிட்டு, கதாயுதத்தைக்கையில்கொண்டு அப்படிப்பட்டகௌரவஸேனையைநோக்கி எதிர்த்துவிரைவாகச்சென்றார். பிறகு கதையைக்கையில்கொண்டு விரைவாகச்செல்லும் மஹாபலமுள்ளஅவரைக்கண்டு எல்லாஸைனிகர்களுக்கும் அதிகமானஸந்தோஷம் உண்டாகியது. அரசரே! அதிகமாகக்கைகலந்த பயங்கரமானஅந்தயுத்தம்நடக்கையில் உமதுநண்பரானஅவர் மகாவ்யூஹத்தைப்பிளந்து (அதனுள்ளே) பிரவேசித்தார்' என்றுகூறினன்.

பிறகு மகாபலமுள்ள பார்ஷதனுனதிருஷ்டத்யும்னன் விசோகனுடையவார்த்தையைக்கேட்டு யுத்தரங்கத்தின்நடுவில் அவனைப்பார்த்துப் பின்வருமாறு மறுமொழிகூறலானான். 'யுத்தத்தில் பீமஸேனனைவிட்டுப் பாண்டவர்களோடுஸ்நேஹத்தைஇழந்து யான் உயிரோடிருப்பதினால் (கொஞ்சமேனும்) இப்பொழுது எனக்குப் பிரயோஜனமில்லை. பீமன் (சத்துருஸம்ஹாரரூபமான) ஒருவழியைஅடைந்திருந்து நானும் யுத்தகளத்திலிருக்கையில் பீமனைவிட்டு யான் சென்றால் க்ஷத்திரியர்கள் என்னை என்னசொல்லுவார்கள்? எவன் ஸஹாயர்களையிழந்து விட்டு க்ஷேமத்தோடு வீட்டிற்குச்செல்லுவனே அவனுக்கு இந்திரனை முதன்மையாகக்கொண்டதேவர்கள் க்ஷேமத்தை உண்டுபண்ணார்கள். அப்படிப்பட்டமனிதன் மனிதர்களாலே எவ்விதத்தாலும்தாண்டமுடியாததும் தெப்பமில்லாததுமான ரௌரவநரகத்தில் முழுகுவான். வலிமைமிக்கபீமன் எனக்குநண்பன்; எனக்குஸம்பந்தி; நம்மிடங்களில் அன்புள்ளவன்; பகைவர்களைஅழிப்பவனுனஅவனிடத்தில் நானும் அன்புள்ளவன். ஆதலால்அப்படிப்பட்டநான் எந்தவிடத்தில் அவனிருக்கிறனே அங்கு செல்லப்போகிறேன். அஸுரர்களைக்கொல்லுகின்ற இந்திரன்போலச் சத்துருக்களைக்கொல்லுகின்றஎன்னைப் பார்' என்றான். பிறகு வீரனுனதிருஷ்டத்யும்னன் இவ்வாறுசொல்லிவிட்டுச் சேனையின்நடுவிற்புகுந்து கதாயுதங்களாலேபொடியாக்கப்பட்டயானைகளாலே(தெரிந்துகொண்டு) பீமஸேனனுடையமார்க்கங்களில் சென்றான். அந்தத்திருஷ்டத்யும்னன் சத்துருஸேனையைக்கொளுத்துகின்றவனும் காற்று மரங்களைஒடிப்பதுபோலப் பலாத்காரமாக யுத்தத்தில் சத்துருக்களைநாசம்செய்கின்றவனுமானபீமனை அப்பொழுது கண்டான். யுத்தத்தில் (பீமஸேனனால்) கொல்லப்படுகின்றஅந்தாதிகர்களும் குதிரைக்காரர்களும் காலாட்களும் யானைகளும் மிக்கதீனஸ்வரத்தை வெளியிட்டார்கள். விசித்திரயுத்தம்செய்கின்றவனும் ஸமர்த்

தனுமானபீமனால் கொல்லப்படுகின்றஉம்முடையபடையில் ஹாஹாகாரம் மிகஉண்டாயிற்று. பிறகு அஸ்திரப்பயிற்சியுள்ள அவர்களெல்லோரும் பீமனைச் சூழ்ந்துகொண்டு பயமற்றுச் சரமாரிகளைப் பொழிந்துகொண்டு நின்றார்கள். பகைவர்களைஎதிர்த்துச்சென்றவனும் ஆயுததாரிகளுள்சிறந்தவனும் கோரமானவனும் நன்றாகஒன்றுசேர்க்கப்பட்டஸைனியத்தால்நான்குபக்கங்களிலும்சூழப்பட்டவனும் பாண்டுபுத்திரனுமானபீமஸேனனை லோகவீரனும் பலசாலியுமானத்ருஷ்டத்யும்னன் கண்டான். பிறகு அவன் பாணங்களால்காயப்படுத்தப்பட்ட அங்கங்களையுடையவனும் காலாளாகநிற்கின்றவனும் குரோதமாகிறவிஷத்தைக்கக்குகிறவனும் கதையைக்கையில்கொண்டவனும் பிரளயகாலத்தில்காலன்போலவிளங்குகின்றவனுமான பீமஸேனனைத் தேற்றிக்கொண்டு அருகிற்சென்றான். மிக்கபலசாலியான திருஷ்டத்யும்னன் பீமனை நன்றாகத்தழுவி அவன்தேகத்தின்மீதுபாய்ந்திருக்கிற அம்புகளைவிரைவாகவெளிப்படுத்தித் தன்ரதத்திலேற்றிக்கொண்டு சத்துருக்களுடையமத்தியில் அவனைத் தேறுதலடையும்படிசெய்தான்.

அது அவ்விதமிருக்கும்பொழுது உம்முடையபுத்திரனான துரியோதனனும் அதிவேகத்துடனே தன்பிராதாக்களைவந்தடைந்து நடந்துவருகின்ற[1]ஸங்குலமான அந்தயுத்தத்தில்(அவர்களைப்)பார்த்து, 'இதோ துராத்மாவானதுருபதகுமாரன் பீமஸேனனோடு சேர்ந்திருக்கிறான். நாமனைவரும் பெரும்படையுடன் அவனையெதிர்த்துப் போவோம். அவன்உங்களுடையபடையை (யுத்தத்தின்பொருட்டு)விரும்பவேண்டாம்' என்று இவ்விதமானவாக்கியத்தை உரைத்தான். (துரியோதனனுடைய) அந்தவாக்கியத்தைக்கேட்டுப் பொறுதவர்களானதார்த்தராஷ்டிரர்கள் மூத்தோனான துரியோதனனுடையகட்டளையினால்தூண்டப்பட்டவர்களாக ஆயுதங்களைக்கையில்எடுத்துக்கொண்டு யுகக்ஷயத்தில் உக்கிரமானதூமகேதுக்கள்போல (திருஷ்டத்யும்னனைக்) கொல்வதற்காக வெளிப்பட்டார்கள். அந்தவீரர்கள் அஸ்திரங்களையும் விற்களையும் கையில்பிடித்து வண்டியுருளைகளின்ஒலிகளால் பூமியைநடுங்கும்படிசெய்துகொண்டு மேகங்கள் வர்ஷதாரைகளை மலையின்மீது பொழிவதுபோல அம்புகளைத் துருபதபுத்திரன்மீது வர்ஷித்தார்கள். யுத்தரங்கத்தில் விசித்திரமாகயுத்தம்செய்யும்ஸ்வபாவமுள்ள துருபதகுமாரன் அந்தப்பாணங்களை மிக்ககூர்மையுள்ளபாணங்களாலடித்துத் தான் துன்பமடையாமலிருந்தான். ராஜரே! மகாரதனும் உக்கிரமானவனும் யுவாவுமாயிருக்கிறஅவன் பகைவர்களுக்குஎதிரில் பராக்ரமத்

[1] ஒருசொல் விடப்பட்டது.

தினால் மிகப்பிரகாசிக்கின்றவர்களும் யுத்தகளத்தில் அவ்வாறாகநான்கு பக்கங்களிலும்நிற்கிறவர்களும் வீரர்களுமான உம்முடையகுமாரர்களைக்கண்டு அவர்களைக்கொல்லஎண்ணங்கொண்டு யுத்தத்தில் அஸுரர்களின்மீது மஹேந்திரன் எவ்வாறுகோபங்கொள்வாரோ அவ்வாறே உம்முடையபுத்திரர்களின்மீது அதிககோபங்கொண்டவனாக மோஹனாஸ்திரத்தை ஸந்தானஞ்செய்யஆரம்பித்தான். வேந்தரே! பிறகு மஹாபலசாலியும் செய்கையில்திறமையுள்ளவனுமான அந்தத்துருபதராஜகுமாரன் அந்தயுத்தத்தில் உமதுபடையின்மீது அதிகமான பிரபாவமுள்ளதும் துரோணரால்கொடுக்கப்பட்டதுமான பிரமோஹனாஸ்திரத்தைப் பிரயோகித்தான். பிறகு யுத்தத்திலுள்ள வீரர்கள் பிரமோஹனாஸ்திரத்தினால் புத்தியும்பலமும்கெடுக்கப்பட்டவர்களாகி மோஹமடைந்தார்கள். உமதுபுத்திரர்கள் காலனால்கவரப்பட்டவர்கள்போலப் பிரஜ்ஞையையிழந்து மோஹமடைந்ததைக் கௌரவர்களெல்லாரும்பார்த்துக் குதிரைகளோடும் யானைகளோடும் ரதங்களோடும் கூடியவர்களாக நாலுபக்கங்களிலும் ஓடினார்கள். அடிக்குந்திறமையுள்ளவீரர்களுள்சிறந்தபீமன் இச்சமயத்திலேயே அமிருதம்போலருசியுள்ளஜலத்தைக்குடித்து இளைப்பாறி மறுபடியும் ஸன்னாகஞ்செய்துகொண்டு மிக்ககோபமுடையவனாகி யுத்தத்தில்போர்புரிந்தான். திருஷ்டத்யும்னனோடுகூடி (கௌரவஸேனையை) ஓடச்செய்தான். ராஜரே! சஸ்திரங்களைத்தரித்தவர்களுள் சிறந்தவரான துரோணர் இச்சமயத்தில் துருபதனையெதிர்த்து உக்ரமானமூன்றுபாணங்களால் அவனைத்துன்பமடையும்படி அடித்தார். அரசரே! பிறகு துரோணராலே அதிகமாகஅடிக்கப்பட்ட அந்தத்துருபதராஜன் [1] முன்வைரத்தைநினைத்துக்கொண்டு விலகிச்சென்றான். பிரதாபசாலியான துரோணர் துருபதனைஜயித்துச் சங்கத்தைமுழக்கினார். அவருடையசங்கத்வனியைக்கேட்டு எல்லாஸோமகர்களும் மிகப்பயந்தார்கள். பிறகு சஸ்திரதாரிகளுட்சிறந்தவரும் காந்தியுள்ளவருமான துரோணர் பிரமோகனாஸ்திரத்தினால் யுத்தத்தில் உமதுகுமாரர்கள் மயங்கியிருப்பதைக் கேட்டார். பிறகு துரோணர் விரைவுடன் யுத்தரங்கத்தினின்று (உம்முடையகுமாரர்கள்இருக்குமிடத்தை) நோக்கி வந்தார். மிக்க வில்லாளியும் பிரதாபசாலியும் மகாரதருமான துரோணர் அந்தப்பெரும்போரில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறதிருஷ்டத்யும்னனையும் பீமனையும் மயக்கமடைந்திருக்கிற உம்முடையபுத்திரர்களையும் கண்டார். பிறகு துரோணர் பிரஜ்ஞாஸ்திரத்தையெடுத்துப் பிரயோகஞ்செய்து

[1] ஒருசொல் விடப்பட்டது.

மோகனஸ்திரத்தை நாசஞ்செய்தார். பிறகு மஹாரதர்களான உம்முடைய புத்திரர்கள் மீண்டும் உயிர்பெற்றெழுந்து ரணகளத்தில் ஜயிக்க எண்ணங்கொண்டு மறுபடியும் யுத்தத்திற்காக முயன்றார்கள். பிறகு யுதிஷ்டிரர் தமது படைகளை அழைத்து, 'அபிமன்யுவை முதன்மையாகக் கொண்ட வீரர்களான பன்னிரண்டு ரதிகர்கள் கவசம்பூண்டு பீமத்ருஷ்டத்யும்னர்களின்வழியை யுத்தகளத்தில் வல்லமையுடன் தொடர்ந்து செல்லட்டும்; அவ்விருவருடைய க்ஷேமத்தையும் நன்றாக அறிந்துகொள்ளட்டும்; என் மனம் கலக்கமுற்றிருக்கிறது. யுத்தத்தில் பீமஸேனன் த்ருஷ்டத்யும்னன் இவர்களுடைய விருத்தாந்தத்தை அறிய வேண்டும். சீக்கிரமாக யுத்தத்தில் ரணகளமென்னும் ஸமுத்திரத்தில் பிரவேசியுங்கள். நீங்கள் அதிகவல்லமையுடன் செல்லவேண்டுமென்பது என்னுடைய எண்ணம்' என்று கூறினார். இவ்வாறு அனுமதிகொடுக்கப்பட்டவர்களும் திறமையுடன்போர்புரியுந்தன்மையுடையவர்களும் சூரர்களும் தமது சக்தியில்நம்பிக்கையுள்ளவர்களுமான அந்த எல்லா வீரர்களும், 'இவ்விதமே செய்கிறோம்' என்றுசொல்லிவிட்டு, சூரியன் உச்சிப்பொழுதையடைந்திருக்கும்சமயத்தில் புறப்பட்டார்கள். கேகயர்களும் திரௌபதிகுமாரர்களும் வீர்யமுடையவனான த்ருஷ்டகேதுவும் அபிமன்யுவைமுன் விட்டுக்கொண்டு பெரியசேனையினால்சூழப்பட்டவர்களானார்கள். அவர்கள் யுத்தத்தில் பகைவர்களைத் நாசஞ்செய்யும் திறமையுள்ள ஸூசீமுகமென்னும்வியூகத்தை ஏற்படுத்திக்கொண்டு யுத்தத்தில் கௌரவர்களுடைய அந்தரதப்படையைப் பிளந்தார்கள். எதிர்த்துவருகின்றவர்களும் சிறந்தவில்லாளிகளும் அபிமன்யுவை முதன்மையாகக்கொண்டவர்களுமான அந்தவீரர்களைப் பீமஸேனனிடத்தினின்றுண்டானபயத்தால் ஆக்கிரமிக்கப்பட்டும் த்ருஷ்டத்யும்னனால் அதிகமாகமதிமயக்கமடையும்படி செய்விக்கப்பட்டுமிருக்கின்ற உம்முடைய ஸேனையானது தடுப்பதற்குச்சக்தியற்றதாகி மதத்தோடும் மயக்கத்தோடுங்கூடிய மனத்தையுடைய ஒரு யுவதிபோல வழியில் நின்றது. நற்குலத்திற்சிறந்தவர்களும் மஹாவில்லாளிகளும் ஸ்வர்ணத்தால் சித்திரவேலைசெய்யப்பட்டகொடிகளையுடையவர்களுமான அந்தவீரர்கள் த்ருஷ்டத்யும்னனையும் பீமஸேனனையும் பாதுகாக்க எண்ணிநெருங்கிஓடிவந்தார்கள். சிறந்தவில்லாளிகளான அவ்விருவரும் அபிமன்யுவைமுதன்மையாகக்கொண்ட அவர்களைக்கண்டு சந்தோஷத்துடன் உமதுஸேனையைக்கொல்பவர்களானார்கள். பாஞ்சாலராஜகுமாரனும் வீரனுமானத்ருஷ்டத்யும்னன் அம்புகளிலும் அஸ்திரங்களிலும் அமர்த்தனும் எல்லாவித்தைகளிலும் கைகண்டவனும் விரைவாகத்

தன்னையெதிர்த்துவருகின்றவரும் தன்குருவுமான துரோணரைப்பார்த்து உமதுபுத்திரர்களைக்கொல்லுவதில் பிரியப்படவில்லை. பிறகு திருஷ்டத்யும்னன் மிகுந்தகோபங்கொண்டவனாகப் பீமனைக் கேகயராஜனுடையதேரின்மீதேற்றிக்கொண்டு பாணங்களிலும் அஸ்திரங்களிலும் முழுதும்தேர்ச்சிபெற்றவரான துரோணரை எதிர்த்தோடினான். பிரதாபசாலியும் பகைவர்களை அழிப்பவருமான துரோணர் கோபங்கொண்டு விரைவாகத் தம்மையெதிர்த்துவரும்திருஷ்டத்யும்னனுடையவில்லை ஓரம்பினால் துண்டாக்கி ராஜாவான துரியோதனன் தமக்களித்துவரும்அன்னத்தைநினைத்துத் துரியோதனனுக்குநன்மையைச்செய்வதற்காக த்ருஷ்டத்யும்னன்மீது நூற்றுக்கணக்கானவேறு பாணங்களையும் பிரயோகித்தார். சத்துருவீரர்களைக்கொல்லுகின்ற த்ருஷ்டத்யும்னன் பிறகு வேறுவில்லைக்கையிலெடுத்துத் தங்கக்கட்டுகளுடன்கூடியவையும் சாணையில்தீட்டப்பட்டவையுமான இருபது பாணங்களால் துரோணரையடித்தான். பகைவர்களை அழிக்கும் திறமையுள்ள துரோணர் அந்தத்ருஷ்டத்யும்னனுடையவில்லை மறுபடியும் துண்டாக்கி உத்தமமானநான்குபாணங்களாலே அவனுடையநான்கு குதிரைகளையும் சீக்கிரமாகக் கோரமானயமனுடைய ஸ்தானத்திற்கு அனுப்பி ஒருபாணத்தினாலே அவனுடையஸாரதியையும் மிருத்யுவினிடத்தில் அனுப்பினார். மகாரதனும் மிக்கபுஜபலமுள்ளவனுமான அந்தத்திருஷ்டத்யும்னன் குதிரைகள் கொல்லப்பட்டரதத்தினின்று விரைவாகத்துள்ளிக்குதித்து அபிமன்யுவினுடைய மகாரதத்தின் மீதேறினான். பிறகு பீமஸேனனும் த்ருஷ்டத்யும்னனும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ரதங்களோடும் யானைகளோடும் குதிரைகளோடுங்கூடின (பாண்டவர்களுடைய) சேனையானது நடுக்கமுற்றது. அளவற்றதேஜஸுள்ளவரான துரோணராலே மிகவும்தோல்வியடைவிக்கப்பட்டுள்ள அச்சேனையைக்கண்டு அந்தமகாரதர்களனைவரும் அதைத்தடுப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். துரோணரால் கூர்மையுள்ள அம்புகளாலே கொல்லப்படுகின்ற அந்தஸேனையானது கடையப்பட்டஸமுத்திரம்போல அங்குமிங்கும் சுழன்றது. பாரதரே! பாண்டவசேனை அவ்வாறிருப்பதைக்கண்டு உம்முடையசேனை மனக்களிப்புற்றது. மிக்ககோபங்கொண்டவரும் சத்துருக்களுடையபடையைத்தபிக்கச்செய்கின்றவருமான ஆசாரியரைக்கண்டு நாற்புறங்களிலுமுள்ளயுத்தவீரர்கள், 'நல்லது, நல்லது' என்று ஸ்தோத்திரம்செய்தார்கள்.

---

## எழுபத்தெட்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தவர்ணனம்.)

பிறகு, துரியோதனராஜன் மோகந்தெளிந்து பிரஜ்ஞையடைந்து, (ஜயத்தினின்று) நழுவாதவனான பீமனை மறுபடியும் சரமாரிகளைப்பொழிந்து தடுத்தான். பிறகு மகாரதர்களானஉம்முடையகுமாரர்கள் ஒன்றுசேர்ந்து முயற்சியுடன் யுத்தரங்கத்தில் பீமனைஎதிர்த்துப்போர் புரிந்தார்கள். மிக்கபாகுபலமுள்ளபீமஸேனனும் யுத்தரங்கத்தில் மீண்டு தன்ரதத்தைஅடைந்து அதன்மீதேறிக்கொண்டு எவ்விடத்தில் உம்முடையகுமாரனிருக்கிறானோ அவ்விடம் சென்றான். பீமன் மிக்க வேகமுள்ளதும் பகைவர்களுடையஉயிரைவாங்கக்கூடியதும் உறுதியுள்ளதுமான வில்லைக் கையிற்பிடித்து நாணேற்றி யுத்தத்தில் உம்முடையகுமாரனைப் பாணங்களால் பிளந்தான். பிறகு ராஜாவானதுரியோதனன் மகாபலசாலியானபீமஸேனனை மிக்ககூர்மையுள்ளநாராசத்தினால் மர்மஸ்தானத்தில் நன்றாக அடித்தான். பெரிதானவில்லைக்கையில்கொண்ட அந்தப்பீமன் சிறந்தவில்லையுடையவனான உமதுபுத்திரனாலே மிகஅடிக்கப்பட்டுக் கோபத்தினால் கண்கள்மிகச்சிவந்து வில்லை வேகத்துடன்வளைத்து இழுத்துத் துரியோதனனை மூன்றுபாணங்களினால் இரண்டுகைகளிலும் மார்பிலுமடித்தான். துரியோதனராஜன் அந்தரணகளத்தில் (தன்மீதுபாய்ந்திருக்கிறமூன்றுபாணங்களாலே மூன்று) சிகரங்களோடுகூடிய பர்வதராஜன்போலவிளங்கினான். யுத்தத்தில் கோபங்கொண்டு பரஸ்பரம்அடித்துக்கொள்ளுகின்ற அவ்விருவரையுங்கண்டு உயிரையிழக்கத்துணிந்தவர்களும் சூரர்களுமான துரியோதனனுடையஇளையஸகோதரர்களனைவரும் பயங்கரமானசெய்கையுள்ளபீமஸேனனை நிக்கிரகிக்கும்விஷயத்தில் முந்திய ஆலோசனையைநினைத்துக்கொண்டு ஸ்திரமானநிச்சயத்துடனே (பீமனை) நிக்ரகிக்கஆரம்பித்தார்கள். யுத்தத்தில் தன்னைநோக்கிவருகின்றஅவர்களை மிக்கபலசாலியானபீமஸேனன் ஒருயானை பகையுள்ளயானைகளைஎதிர்ப்பதுபோல எதிர்த்தான். மிக்ககீர்த்திபொருந்தியவனும் தேஜஸ்வியுமானபீமஸேனன் மிக்ககோபங்கொண்டு உம்முடையபுத்திரனான சித்திரஸேனனை நாராசத்தால் அடித்தான். பீமன் தங்கக்கட்டுகளுடன் கூடியவைகளும் நன்றாகத்தீட்டப்பட்டவைகளுமான பலவிதபாணங்களாலே இன்னும்மற்றஉம்முடையபிள்ளைகளையும் யுத்தத்தில் அடித்தான். பின்பு உம்முடையபுத்திரர்களால்சூழப்பட்டபீமஸேனனைக்

தனியாக அடித்தான். அவர்களால்அடிக்கப்பட்டு ரக்தத்தால்நன்ருகநனேக்கப்பட்ட துர்த்தர்ஷன் பலவிததாதுக்களையுடைய அருவிகளோடுகூடிய ஒருமலேபோல விளங்கினுன். பலவானுனபீஷ்மரும் யுத்தரங்கத்தில் பாண்டவர்களுடையஸேனேயை இடையன் பசுக்கூட்டங்களேத் துரத்துவதுபோலத்துரத்தினுர். பிறகு ஸைனியத்திற்குத் தென்பக்கத்தில் சத்துருக்களேக்கொல்லுகின்றபார்த்தனுடைய காண்டீவத்தினின்றுஉண்டாகும்ஓசையானது தோன்றியது. கௌரவ பாண்டவஸைனியங்களில் எல்லாப்பக்கங்களிலும் அந்தயுத்தத்தில் தலேயில்லாமுண்டங்கள் எழுந்தன. புருஷசிரேஷ்டர்கள் ரக்தமாகிற ஜலமும் அம்புகளாகிறசுழல்களும் யானேகளாகிறதிட்டுக்களும் குதிரைகளாகிறஅலேகளுமுள்ள சேனேயாகிறஸமுத்திரத்தை ரதங்களாகிறகப்பல்களாலே தாண்டினுர்கள். கைகளறுக்கப்பட்டவர்களும் கவசமிழந்தவர்களும் தேகத்தையிழந்தவர்களுமான நரசிரேஷ்டர்கள் நூறுநூருகவும் ஆயிரம்ஆயிரமாகவும் அந்தரணகளத்தில் விழுந்தவர்களாகக் காணப்பட்டார்கள். கொல்லப்பட்டும் ரக்தவெள்ளத்தால்நனேக்கப்பட்டுமிருக்கின்ற மதங்கொண்டயானேகளாலே அந்தயுத்தபூமியானது பர்வதங்களால்நிறைக்கப்பட்டதுபோல விளங்கியது. அந்தரணகளத்தில் உம்முடையசேனேயிலும் அந்தப்பாண்டவர்களுடையசேனேயிலும் யுத்தத்தைவிரும்பாதவனுக ஒருவனுமேஇல்லேஎன்கிற இந்தஆச்சரியத்தை அந்தயுத்தத்தில் பார்த்தோம். உம்மைச்சேர்ந்தவீரர்கள் யுத்தத்தில்ஜயத்தையும் பெரியகீர்த்தியையும்விரும்பிப் பாண்டவர்களுடன் இவ்வாறு போர்புரிந்தார்கள்.

---

## எழுபத்தோன்பதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தவர்ணனம்.)

பிறகு, ராஜாவானதுரியோதனன் யுத்தத்தில் பரபரப்புடன் சூரியன்சிவந்திருக்குமளவில் பீமனேக் கொல்லவேண்டுமென்றுஎண்ணி எதிர்த்தோடிவந்தான். அவ்வாறு தன்னே எதிர்த்துவருகின்றவனும் திடமானவைரத்துடன்கூடியவனும் புருஷசிரேஷ்டனுகவிளங்குகின்றவனுமான துரியோதனனேக்கண்டு பீமஸேனன் மிகுந்தகோபங்கொண்டு இந்தவார்த்தையை உரைக்கலானுன்.

'அனேகவருஷகாலமாக என்னால்வேண்டப்பட்ட அக்காலம் இப்பொழுது வந்துவிட்டது. நீ யுத்தத்தைவிட்டு விலகாமலிருப்பாயாயின் இப்பொழுது உன்னைக் கொல்வேன். இப்பொழுது நீ கொல்லப்பட்டாயாகில் குந்தியினுடையகிலேசத்தையும் வனவாஸதுக்கத்தையும் திரௌபதியினுடைய துன்பத்தையும் போகச்செய்வேன். காந்தாரீபுத்திர! முற்காலத்தில் நீ பொறாமையுடையவனாகிப் பாண்டவர்களை அவமதித்தபாவத்தினுடைய (பயனாக இந்த)வ்யஸனமானது வந்துவிட்டது; பார். முற்காலத்தில் கர்ணன்ஸௌபலனான சகுனி இவர்களின் அபிப்பிராயத்துக்குஇணங்கிப் பாண்டவர்களைமதியாமல் ஆசையினால் இஷ்டப்படி செய்தாயல்லவோ? (ஸமாதானத்தை) வேண்டினகிருஷ்ணனை நீ அறியாமையால்அவமதித்ததனாலும் ஸந்தோஷமுள்ளவன் போல உலூகனுக்குக் கட்டளையிட்டதனாலும் உன்னை மித்திரவர்க்கங்களோடும் பந்துவர்க்கங்களோடும் யான் கொல்லப்போகிறேன். முற்காலத்தில் (எங்கள்விஷயத்தில்) எந்தப்பாவத்தைச்செய்தாயோ அந்தப்பாவச்செயலை நான் இப்பொழுது தணிக்கப்போகிறேன்' என்றான். இவ்வாறுசொல்லிக் கோபமூண்டு கோரமானவில்லைஇழுத்து அடிக்கடிசுழற்றிக் கொடியஉருவமுள்ளவைகளும் பெரியவஜ்ராயுதத்திற்குச்சமமான ஒளிபொருந்தியவைகளும் ஜ்வலிக்கின்றஅக்னியினுடைய ஜ்வாலைபோன்றவைகளும் இடிக்கொப்பானவைகளும் நேரில்போய்த் தாக்குகின்றவைகளுமான இருபத்தாறுகணைகளைத்தொடுத்துத் துரியோதனன்மீது விரைவாகவிடுத்துப் பின் இரண்டம்புகளால் அவனுடையவில்லையறுத்துப் பின்னுமிரண்டுசரங்களாலே அவன்ஸாரதியையுங் கொன்று நான்குபாணங்களாலே வேகமுள்ளஅவனதுகுதிரைகளையும் யமலோகத்திற்கனுப்பினான். பகைவர்களையடிக்கின்றஅந்தப்பீமன் யுத்தத்தில் நன்றாகஇழுத்துவிடப்பட்டஇரண்டுபாணங்களாலே அந்தத்துரியோதனராஜனுடையகுடையையும் அறுத்து ஆறுபாணங்களாலே ஜ்வலிக்கின்ற உத்தமமான அவனுடையகொடியையும் அறுத்தான். அவன் கொடியையறுத்துவிட்டு உம்முடையபுத்திரன்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதுதே பெரியஸிம்மநாதம்செய்தான். பலவிதரத்னங்களால்அலங்கரிக்கப்பட்ட ரதத்தினின்று காந்தியுடன்கூடின அந்தத்வஜமானது மேகத்தினின்று மின்னல்விழுவதுபோலப் பூமியில் விரைவாகவீழ்ந்தது. எல்லாஅரசர்களும் ஜ்வலிக்கின்றதும் சூரியனுக்கொப்பானதும் மங்களகரமானதுமான குருராஜனுடைய மணிமயமான அரவக்கொடி அறுத்துக்கீழேதள்ளப்பட்டதைக்கண்டார்கள். பிறகு மகாரதனானபீமஸேனன் மந்தஹாஸத்துடன் வேணுகங்களால்

பெரியயானையைஅடிப்பதுபோலப் பத்துக்கணைகளால் வீரனான துரியோதனனை யுத்தத்தில் அடித்தான். பீமஸேனனாலே யுத்தத்தில் நன்குஅடித்துத்துன்புறுத்தப்பட்ட அந்தத்துரியோதனன் மயக்கத்தினால் அறிவழிந்து ரதமத்தியில் உட்கார்ந்தான். பிறகு தேராளிகளுட்சிறந்தவனும் மிக்கபலசாலியுமான ஸிந்துதேசத்தரசன் தன்னைச்சேர்ந்தமனிதர்களாலேசூழப்பட்டுத் துரியோதனனுடையபின்புறத்தைப் பற்றிக்கொண்டான். வேந்தரே! ரதிகர்களுள்சிறந்தவரானகிருபர் பிரஜ்ஞையிழந்தவனும் கொடுங்கோபமுள்ளவனும் உமதுகுமாரனுமான துரியோதனனைத் தம்ரதத்தின்மீதேற்றிவைத்துக்கொண்டார். பிறகு ஜயத்ரதன் பீமனைஜயிக்கஎண்ணி அனேகஆயிரக்கணக்கானரதங்களாலே அவனைச்சூழ்ந்துகொண்டு திசைதெரியாமல் மறைத்தான். அரசரே! பிறகு திருஷ்டகேதுவும் வீர்யமுடையவனானஅபிமன்யுவும் கேகயர்களும் திரௌபதிபுத்திரர்களும் உமதுபுத்திரர்களைஎதிர்த்துப் போர்புரிந்தார்கள். சித்திரஸேனன், ஸுசித்திரன், சித்திராங்கன், சித்திரதர்சனன், சாருசித்திரன், ஸுசாரு, நந்தோபநந்தகர்கள் ஆகிய இந்தஸுகுமாரர்களும் கீர்த்திசாலிகளுமான எட்டுமகாவில்லாளிகள் அபிமன்யுவின்ரதத்தை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். மிக்கமனோதைரியத்தையுடையஅபிமன்யு பிறகு கூர்மையுள்ளவைகளும் பதிவானகணுக்களுள்ளவைகளும் வஜ்ராயுதத்திற்கும் மிருத்யுவுக்கும்ஒப்பானவைகளும் விசித்திரமானஆயுதங்களோடு வெளிப்படுகின்றவைகளுமான ஐந்துபாணங்களாலே ஒவ்வொருவரையும் விரைவாக அடித்தான். அவர்களெல்லாரும் கோபங்கொண்டு ரதிகர்களுட்சிறந்தஸுபத்திராபுத்திரனை மேகங்கள் மகாமேருவின்மீதுபொழிவதுபோலக் கூர்மையுள்ளஅம்புகளாலே வர்ஷித்தார்கள். அஸ்த்ரத்தில் பயிற்சியுள்ளவனும் யுத்தத்தில்கொடியமதங்கொண்டவனுமான அந்த அபிமன்யுவானவன் யுத்தத்தில் பீடிக்கப்பட்டு, தேவாஸுரயுத்தத்தில் வஜ்ரபாணியானமகேந்திரன் அஸுரர்களைநடுங்கும்படி அடித்ததுபோல உம்மைச்சேர்ந்தவர்களை நடுங்கும்படிஅடித்தான். பிறகு ரதிகசிரேஷ்டனானஅபிமன்யு அச்சந்தரும்உருவமுள்ளவைகளும் ஸர்ப்பங்களுக்கொப்பானவைகளுமான பதினான்குபல்லங்களை விகர்ணன்மீது விடுத்தான். வீர்யமுடையவனான அந்தஅபிமன்யு யுத்தத்தில் நர்த்தனம்செய்கின்றவன்போலிருந்துகொண்டு அந்தக்கணைகளாலே விகர்ணனுடையரதத்தினின்று கொடியையும் பாகனையும் குதிரைகளையும் வீழ்த்தினான். மகாபலசாலியானஅபிமன்யு மறுபடியுங்கோபங்கொண்டு தீட்டப்பட்டவைகளும் முனைமழுங்காதவைகளும்

சாணையில்தீட்டப்பட்டவைகளுமான வேறுபாணங்களை விகர்ணன்மீது பிரயோகம்செய்தான். கழுகிறகுகளையுடையவைகளும் ஜ்வலிக்கின்ற ஸர்ப்பங்கள்போன்றவைகளுமான அவ்வம்புகள் விகர்ணனையடைந்து அவன்தேகத்தைப் பிளந்துகொண்டு பூமியில் பிரவேசித்தன. பொன்னாலாகியகட்டுக்களும் முனைகளுமுள்ளவைகளும் விகர்ணனுடைய ரக்தத்தால்நனைக்கப்பட்டவைகளுமான அவ்வம்புகள் ரக்தத்தைக்கக்குகின்றவைகள்போல யுத்தபூமியில் காணப்பட்டன. விகர்ணன்பிளக்கட்டதைக்கண்டு அவனுடையமற்றஸகோதரர்கள் அபிமன்யுவை முதன்மையாகக்கொண்டரதிகர்களைநோக்கி யுத்தத்தில் எதிர்த்து விரைவாகச்சென்றார்கள். யுத்தத்தில்கெட்டமதங்கொண்டவர்களான அந்த விகர்ணனுடையஸகோதரர்கள் சூரியன்போலவிளங்குகின்ற அந்தரதிகர்களையும் இன்னும்மற்றமகாரதர்களையும் பரபரப்புடன்எதிர்த்து யுத்தத்தில் ஒருவரைஒருவர் அடித்தார்கள். துர்முகனானவன் ஏழு பாணங்களால் ஶ்ருதகர்மாவையடித்து த்வஜத்தைஒருபாணத்தால்அறுத்து ஏழுபாணங்களால் அவனுடையஸாரதியையுமடித்துப் பொற்கவசங்களால்மூடப்பட்டவைகளும் காற்றின்வேகம்போன்ற வேகமுள்ளவைகளுமான அவனுடையகுதிரைகளையுங்கொன்று ஆறுபாணங்களால் அவன்ஸாரதியையும்நாடிக் கீழேதள்ளினான். குதிரைகள்கொல்லப்பட்டரதத்திலிருக்கும் மகாரதனான அந்தஶ்ருதகர்மா அதிககோபங்கொண்டு ஜ்வலிக்கின்றபெரியதூமகேதுவைப்போன்ற சக்தியாயுதத்தை விடுத்தான். தன்னுடையதேஜஸினால்விளங்குகின்ற அந்தச்சக்தியானது கீர்த்திமானான துர்முகனுடைய நிர்மலமானகவசத்தையுடைத்துப் பூமியைப்பிளந்துகொண்டு சென்றது. பிரபுவே! துர்முகன் யுத்தத்தில் துன்பமடைந்து நிலைதவறினவனாகி அந்தரதத்தில் உட்கார்ந்தான். துர்முகன்நினைவுதப்பியதைக்கண்டு அவனுடையபிராதாக்களனைவரும் நான்குபுறங்களிலும் அவனைச்சூழ்ந்துகொண்டார்கள். மகாரதனானஸுதஸோமன் அந்தயுத்தரங்கத்தில் துர்முகன்தேரிழந்தது கண்டு எல்லாஸைனிகர்களும்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அவனைத் தன்ரதத்தின்மீதேற்றிவைத்துக்கொண்டான். வீரனானசுருதகீர்த்தியும், கீர்த்திமானும் உம்முடையபுத்திரனுமானஜயத்ஸேனனைக் கொல்லக்கருதி யுத்தத்தில் எதிர்த்தான். உம்முடையகுமாரனானஜயத்ஸேனன் புன்னகைசெய்துகொண்டு நாண்கயிற்றையிழுத்துவிடுகின்ற அந்தஶ்ருதகீர்த்தியினுடைய பேரொலியுடன்கூடின வில்லை மிக்ககூர்மையுள்ளக்ஷுரப்ரத்தினாலே யுத்தத்தில் விரைவாகத் துண்டாக்கினான். வில்அறுக்கப்பட்ட அந்தஸகோதரனானசுருதகீர்

த்ரியைக்கண்டு தேஜஸ்வியானசதாநீகன் ஸிம்மம்போல அடிக்கடி கர்ஜித்துக்கொண்டு ஜயத்ஸேனனை எதிர்த்துவந்தான். சதாநீகனே யுத்தத்தில் உறுதியானவில்லை நாணொலியிடும்படிசெய்துகொண்டு ஜயத்ஸேனனைப் பத்துக்கணைகளால் விரைவாகத் துன்பமுறும்படியடித்தான்; மதப்பெருக்குக்கொண்ட யானைபோல மிகப்பெரியகர்ஜனைசெய்தான். பிறகு சதாநீகன் எல்லாக்கவசங்களையுமுடைக்குந்திறமையுள்ள மிக்ககூர்மையான வேறோர் அம்பினாலே ஜயத்ஸேனனை மார்பில் அதிகமாக அடித்தான். அவன் அவ்வாறிருக்குமளவில், ஸகோதரனைஜயத்ஸேனனுடையபக்கத்திலிருக்கின்றவனும் கோபமூண்டவனுமான துஷ்கர்ணன் சதாநீகனைலக்ஷ்யம்வைத்து, தீட்டப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளும் ஸர்ப்பங்களுக்கொப்பானவைகளுமான அம்புகளைப்பிரயோகித்து நகுலகுமாரனுடையவில்லை யுத்தத்தில் துண்டாக்கினான். பிறகு மகாபலசாலியானசதாநீகன் பெருஞ்செய்கைக்குத் தக்கசிறந்தவேறொருவில்லையெடுத்துக் கோரமான அம்புகளைப்பூட்டிப் பிராதாவுக்கெதிரில்நிற்கின்றதுஷ்கர்ணனை, ‘நில்நில்’என்றுகூவி(குரோதத்தால்) ஜ்வலிக்கின்றஸர்ப்பங்கள்போலுள்ள கூர்மையானபாணங்களை அந்தத்துஷ்கர்ணன்மீது தொடுத்தான். பிறகு சதாநீகன்யுத்தரங்கத்தில் அந்தத்துஷ்கர்ணனுடையதனுசை ஒருபாணத்தாலும் ஸாரதியைஇரண்டுபாணங்களாலும் அடித்து அவனையும் ஏழுபாணங்களாலே விரைவாகஅடித்து மனோவேகம்போன்றவேகமுள்ளவைகளும் பலவிதநிறமுள்ளவைகளும் காற்றின்வேகம்போன்றவேகமுள்ளவைகளுமான அந்தத்துஷ்கர்ணனுடையகுதிரைகளனைத்தையும் கூர்மையுள்ள பன்னிரண்டுபாணங்களால் விரைவாகஅடித்தான். பிறகு நகுலகுமாரன் கோபங்கொண்டு நன்குபூட்டப்பட்டதும் விரைவாகத்தாக்கும் தன்மையுடையதுமான வேறொருபல்லத்தினாலே துஷ்கர்ணனை மார்பில் மிக்கதுன்பமுறும்படியடித்தான். பிறகு அவன் வஜ்ராயுதத்தினாலடிக்கப்பட்டமரம்போலப் பூமியில் விழுந்தான். துஷ்கர்ணன் துன்பமுற்றதைக்கண்டு ஐந்துமஹாரதர்கள் சதாநீகனைக்கொல்லஎண்ணி நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். அம்புக்கூட்டங்களால் மறைக்கப்படுகின்றவனும் கீர்த்தியுள்ளவனுமானசதாநீகனை ஸகோதரர்களானஐந்துகேகயர்கள் மிகுந்தகோபங்கொண்டு எதிர்த்தோடினார்கள். அந்தக்கேகயர்களெதிர்த்துவருவதைப்பார்த்து மகாரதர்களான உம்முடையபுத்திரர்கள் பெரியயானைகள் யானைகளைஎதிர்ப்பதுபோல எதிர்த்தார்கள். புகழ்பெற்றவர்களும் ஸஹோதரர்களுமான துர்முகன், துர்ஜயன், யுவாவானதுர்மர்ஷணன், சத்துருஞ்

சயன், சத்துருஸஹன் இவர்களனைவரும் கோபங்கொண்டு கேகயர்களை ஒன்றுசேர்ந்தெதிர்த்தார்கள். அம்புகளையும் விற்களையுங்கையில்கொண்டவர்களும் விசித்திரமான கவசங்களையும் கொடிகளையுமுடையவர்களுமான அந்தவீரர்கள் பலவிதவர்ணங்களால்விசித்திரமாயிக்கின்றகொடித்துணிகளாலே அலங்கரிக்கப்பட்டவைகளும் நகரங்களுக்கொப்பானவைகளும் மனோவேகம்போன்றவேகமுள்ளகுதிரைகளையுடையவைகளுமான ரதங்களோடு ஸிம்மங்கள் காட்டினின்று வேறுகாட்டில் நுழைவதுபோலச் சத்துருஸைன்யத்தில் நுழைந்தார்கள். பரஸ்பரம்அடித்துக்கொள்ளுகின்றவர்களும் அன்னியோன்யம் அபராதிகளுமானஅந்தவீரர்களுக்கு அதிகக்கைகலந்ததும் அன்யோன்யமஎதிர்க்கின்ற ரதங்களோடும் யானைகளோடுங்கூடினதும் மகாபயங்கரமானதும் யமனுடையராஜ்யத்தை விருத்திபண்ணக்கூடியதுமானயுத்தமானது நடந்தது: வேந்தரே! சூரியன் ஒருமுகூர்த்தகாலத்திற்குள் அஸ்தமிக்கவே மகாபயங்கரமானயுத்தத்தை (எல்லாவீரர்களும்) செய்தார்கள். தேராளிகளும் குதிரைக்காரர்களும், ஆயிரம் ஆயிரமாகச் சிதறஅடிக்கப்பட்டார்கள். பிறகு சந்தனுபுத்திரரான பீஷ்மர் கோபங்கொண்டு பதிவானகணுக்களுள்ளஅம்புகளாலே மகாத்மாக்களானஅவர்களுடைய அந்தஸேனையை நாசம்செய்தார். பாஞ்சாலர்களுடையபடைகளையும் அம்புகளாலே யமலோகத்திற்கனுப்பினார். சிறந்தவில்லாளியானபீஷ்மர் பாண்டவர்களுடையஸேனையை இவ்வாறுபிளந்து ஸைனியங்களையுத்தத்தினின்றுநிறுத்தித் தம்ஸைனியம்தங்கியிருக்குமிடத்திற்குச்சென்றார். வீரர்களானதிருஷ்டத்யும்னனும் பீமனும் அமிழ்ந்தகணுக்களுள்ளஅம்புகளாலே கௌரவர்களுடையபடைகளை நாசம்செய்தார்கள். தர்மராஜரும் திருஷ்டத்யும்னனையும் பீமனையும்பார்த்து அவர்களைஉச்சிமோந்து மிக்கஸந்தோஷமடைந்து தமதுஸேனைதங்கியிருக்குமிடத்தைக்குறித்துச் சென்றார். அர்ஜுனனும் வாஸுதேவரும் கௌரவர்களுடையஸேனையைக்கொன்றும் பாணங்களால்துரத்தியடித்தும் பாசறையைநோக்கிச்சென்றார்கள்.

ஆறவதுநாள் யுத்தம் முடிந்தது.

---

## எண்பதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(பீஷ்மருக்கும் துரியோதனனுக்கும் நடந்த ஸம்வாதம்.)

மஹாராஜரே! ஒருவருக்கொருவர் தீங்கிழைத்தவர்களான அந்த க்ஷத்திரியர்கள் ரக்தத்தினால்நனைக்கப்பட்டுத் தங்கள் தங்களுடையபாசறைகளையே அடைந்தார்கள். இளைப்பாறி முறைப்படி ஒருவரையொருவர் பூஜித்து மீண்டும் போர்புரியக்கருதி யுத்தம்செய்வதற்குஸன்னத்தர்களாகக் காணப்பட்டார்கள். ராஜரே! பிறகு உம்முடையகுமாரன் மனக்கவலையினால்கவரப்பட்டவனாகவும் மிக்கஉதிரப்பெருக்கினால்நனைக்கப்பட்ட அங்கங்களுள்ளவனாகவும் பிதாமஹரை அடைந்து இவ்வாறு வினவினான். 'கீர்த்திசாலிகளான அந்தப்பாண்டவர்கள் உக்ரமானவைகளும் பயங்கரமானவைகளும் அணிவகுக்கப்பட்டவைகளும் சிறந்த பலகொடிமரங்களுள்ளவைகளுமானஸைனியங்களைப் பிளந்தும் சூரர்களைக்கொன்றும் யுத்தத்தில் நம்மனைவரையும் மோகிக்கச்செய்து வெற்றிபெற்றுமிக்கசந்தோஷமடைந்தார்கள். மிருத்யுவுக்கு ஒப்பான அந்த மகரவ்யூகத்தினுள்புகுந்து யமதண்டங்கள்போலவிளங்குகின்றகொடியஅம்புகளால் பீமனால் யான் யுத்தத்தில் அடிக்கப்பட்டேன். அரசரே! கோபங்கொண்டிருக்கின்ற அந்தப்பீமஸேனன்கோபமுற்றதுகண்டு பயமிஞ்சியநான் இப்பொழுதும் மனத்தில் ஆறுதலையடையவில்லை. ஸத்தியஸந்தரே! உம்முடைய அனுக்கிரகத்தினாலே ஜயத்தை அடைவதற்கும் பாண்டவர்களைக்கொல்வதற்கும் நான்விரும்புகிறேன்' என்றான். இவ்வாறு அந்தத்துரியோதனனால்சொல்லப்பட்டவரும் மஹாத்மாவும் துயரமற்றவரும் உதாரமான மனமுள்ளவரும் ஆயுததாரிகளுட்சிறந்தவரும் கங்காபுத்திரருமானபீஷ்மர் மிகநகைத்துத் துரியோதனன் துக்கத்திற்குஆள்பட்டிருப்பதைஅறிந்து அவனைநோக்கிப் பின்வருமாறு மறுமொழிசொல்லலானார். 'ராஜபுத்திர! நான் அதிகமுயற்சியோடு உன்னுடையஸேனையில்பிரவேசித்து எல்லாவகையாலும் உனக்கு விஜயத்தையும் சுகத்தையுங்கொடுக்கவிரும்புகிறேன். உன்நிமித்தமாக என்ஸ்வரூபத்தை நான் மறைக்கவில்லை. யுத்தத்தில் பாண்டவர்களுக்குஉதவிசெய்கின்றவர்களாகவும் சிரமத்தைப்பொறுக்கின்றவர்களாகவும்இருந்துகொண்டு ரோஷமாகிறவிஷத்தைக்கக்குகிறவர்களும் பயங்கரமானஸ்வபாவமுடையவர்களும் கீர்த்திபொருந்தியவர்களும் மிக்கசூரர்களும் அஸ்திரங்களில்பாண்டித்தியமுள்ளவர்களு

மான அநேகமஹாரதர்கள் இதோநிற்கின்றார்கள். வீர்யத்தினால் கர்வங்கொண்டவர்களும் உன்னால்வைரம்உண்டுபண்ணப்பட்டவர்களுமான பாண்டவர்கள் இப்புவியில் யாரால் விரைவில்ஜயிக்கத்தகுந்தவர்கள்? ராஜனே! வீர! யான் எல்லாவிதத்தினாலும் உயிரை இழந்தாவது இவர்களை எதிர்த்துப் போர்புரியப்போகிறேன். யுத்தத்தில் உனக்காக என்னுடையஉயிரானது இப்பொழுது காப்பாற்றத்தக்கதன்று. தேவர்களோடும் அஸுரர்களோடுங்கூடின எல்லாவுலகங்களையும் உன்னிமித்தமாக எரிப்பேன். அவ்வாறிருக்க, இந்தச்சத்ருஸேனையைஎரிப்பதில் ஸந்தேகமென்ன? அந்தப்பாண்டவர்களை யான் எதிர்த்துப் போர்புரியப்போகிறேன். உனக்கு எல்லாவிதமானவிருப்பத்தையும் நான்செய்கிறேன்' என்றார்.

பிரஸித்திபெற்றதுரியோதனன் உமதுபிதாவினுடையவார்த்தையைக்கேட்டுப் பிரீதியுள்ளமனத்தையுடையவனானான். பிறகு மகிழ்ச்சியுற்று எல்லாப்படைகளையும் எல்லாஅரசர்களையும், '(யுத்தத்திற்குப்) புறப்படுங்கள்' என்றுசொன்னான். அவனுடைய கட்டளையினாலே அந்தஸேனைகள் பதினாயிரக்கணக்கானயானைகளோடும் குதிரைகளோடும் காலாட்படைகளோடும் ரதங்களோடும் விரைவாக வெளிப்பட்டன. அரசரே! உம்முடைய அந்தப்பெரியஸைனியங்கள் மிகுந்த உத்ஸாகமுள்ளவைகளாகவும் பற்பலவிதஆயுதங்களையுடையவைகளாகவும் யானைகளையும்குதிரைகளையும் காலாட்களையுமுடையவைகளாகவும் யுத்தத்தில்நிலைபெற்றவைகளாகவும் விளங்கின. வேந்தரே! சஸ்திரங்களையும் அஸ்திரங்களையும்அறிந்த உத்தமர்களானபோர்வீரர்களாலே உம்முடையபடைகளுடையகூட்டங்கள் அடையப்பட்டிருந்தன. யுத்தமுறைப்படிநடத்தப்பட்டு யுத்தரங்கத்தில்ஸஞ்சரிக்கின்ற தேர்ப்படைகளாலும் காலாட்படைகளாலும் யானைக்கூட்டங்களாலும் குதிரைக்கூட்டங்களாலும் உண்டுபண்ணப்பட்டதும் பாலஸூரியனுடைய நிறம்போன்றதுமான (பூமியிலுள்ள) புழுதியானது ஸூரியகிரணங்களை மறைத்துக்கொண்டு விளங்கியது. அரசரே! அந்தயுத்தத்தில் தேர்களிலும்யானைகளிலுமிருக்கின்றவைகளும் காற்றினால் அலைக்கப்படுகின்றவைகளும் நாற்புறமும் சுழல்கின்றவைகளும் பலவிதஅடையாளங்களுள்ளவைகளுமான கொடித்துணிகள், மேகங்களோடுகூடின மின்னல்கள் ஆகாயத்தில் விளங்குவதுபோல விளங்கின. மிகுதியான யானைக்கூட்டங்கள் நன்றாகயுத்தத்தில்ஏவப்பட்டு நாற்புறங்களிலும் விளங்கின. விற்களைநாணேலியிடும்படிசெய்கின்ற அரசர்களுடைய மிகக்கொடிய நெருங்கியசப்தமானது அப்பொழுது ஆதியுகத்தில் தேவ

கணங்களாலும் பெரிய அசுரக்கூட்டங்களாலும் கடையப்படுகின்ற பாற்கடலினுடைய சப்தம்போலத்தோன்றியது. உக்கிரமானயானைகளையுடையதும் பலவிதஉருவமும்நிறமுமுள்ளதும் மிக்ககோபமுண்டதும் சத்துருக்களுடையஸைனியங்களைக் கொல்லுகின்றதுமான உமதுபுத்திரனுடையஸேனையானது அப்பொழுது யுகாந்தகாலத்தில் மேகக்கூட்டத்திற்கு ஒப்பாக விளங்கியது.

---

## எண்பத்தோராவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் துரியோதனனை மகிழ்வித்ததும் அரசர்கள் த்வந்த்வயுத்தத்திற்காகச் சேர்ந்ததும் அர்ஜுனனுடையபராக்கிரமமும்.)

பாரதகுலத்திற்பிறந்தவர்களுட்சிறந்த கங்காபுத்திரர் உமதுபுத்திரனைக்குறித்து நல்லஉத்ஸாகத்தையுண்டுபண்ணக்கூடிய வார்த்தையைப் பின்வருமாறுகூறலானார். 'ராஜனே! யான், துரோணர், சல்யன், ஸாத்வதனானகிருதவர்மா, அஸ்வத்தாமா, விகர்ணன், பகதத்தன், ஸௌபலனானசகுனி, அவந்திதேசாதிபர்களான விந்தானுவிந்தர்கள், தனதுவீரர்களோடுகூடினபாஹ்லிகன், பலசாலியானதிரிகர்த்தராஜன், எவ்விதத்தாலும் (ஒருவராலும்) ஜயிக்கமுடியாதவனானமகததேசாதிபன், பிருகத்பலன், கோஸலதேசாதிபதி, சித்ரஸேனன், விவிம்சதி, உனதுஸஹோதரர்களோடுகூடியகிருபர் ஆகியநாங்கள் உன்னைப் பின்தொடருகிறோம். பெரியத்வஜங்களையுடைய அழகிய அனேகஆயிரக்கணக்கானரதங்களும், நல்லதேசங்களிலுண்டானவைகளும் குதிரைவீரர்களாலே ஏறப்பட்டிருக்கின்றவைகளுமான குதிரைகளும், மதத்தினாலே அடங்காதவைகளும் மதப்பெருக்குக்கொண்டகன்னங்களையும் முகங்களையுமுடையவைகளுமானசிறந்தயானைகளும், யுத்தத்தில்சௌர்யமுள்ளவர்களும் பற்பலஆயுதங்களையுடையவர்களும் பற்பலதேசத்திலுண்டானவர்களுமான காலாட்களும் உன்னிமித்தமாக யுத்தம்செய்வதற்கு முயற்சியுடனிருக்கின்றார்கள். உன்னிமித்தமாக உயிரையுமிழக்கத்துணிந்தவர்களான இவர்களும், இன்னும்மற்றஅனைவரும் யுத்தத்தில் தேவர்களையும் ஜயிப்பதற்கு வல்லமையுடையவர்களென்பது என்னுடையஎண்ணம். எப்பொழுதுமே என்னால் உனக்கு ஹிதமானது அவஸ்யம்சொல்லத்தக்கது. வாஸுதேவனைஸஹாயமாகக்கொண்டவர்களும் மகேந்திரனுக்கொப்பானவிக்கிரமமுள்ளவர்களு

மானபாண்டவர்கள் இந்திரனுடன்கூடினதேவர்களாலும் ஜயிப்பதற்கு முடியாதவர்கள். யான் எவ்விதத்தாலும் உன்னுடையவார்த்தையை அனுஷ்டிக்கப்போகிறேன். பாண்டவர்களையாவது யுத்தத்தில் யான் ஜயிப்பேன் ; அல்லது பாண்டவர்களாவது என்னை ஜயிப்பார்கள்' என்றுசொன்னார்.

பீஷ்மர் இங்ஙனம்சொல்லிவிட்டு, மங்களத்தையுண்டுபண்ணுகிறதும் வீர்யத்துடன்கூடியதுமான விசல்யகரணிஎன்கிற ஓஷதியை இவனுக்குக் கொடுத்தார். அப்பொழுது சல்யங்கள் நீங்கினவனானன். நன்றாகப்பொழுதுவிடிந்தவுடன், வ்யூஹம்ஏற்படுத்துவதில் ஸமர்த்தரும் சிறந்தவீர்யமுடையவரும் புருஷர்களுள்சிரேஷ்டருமான பீஷ்மர், பற்பலசஸ்திரங்களால் நெருங்கியதும், பிரதானர்களான யுத்தவீரர்களாலேநிறைந்ததும், யானைகளாலும் காலாட்களாலும் அனேகஆயிரக்கணக்கான ரதங்களாலும் நான்குபுறங்களிலும் சூழப்பட்டதும், ரிஷ்டிகளையும் தோமரங்களையும் கையில்கொண்ட பெரிய குதிரைவீரர்களுடையகூட்டங்களால் நிறைந்திருக்கின்றதுமானமண்டலவியூகத்தைத் தாமே தமதுசேனையைக்கொண்டு அணிவகுத்தார். ஒவ்வொருயானை இருக்குமிடத்திலும் எவ்வேழுதேர்களும், ஒவ்வொரு தேருள்ளஇடத்திலும் எவ்வேழுகுதிரைகளும், ஒவ்வொருகுதிரையுள்ளஇடத்திலும் பப்பத்துவில்லாளிகளும், ஒவ்வொருவில்லாளியுள்ளஇடத்திலும் பப்பத்துக்கேடகக்காரர்களுமாக இவ்வண்ணம் பீஷ்மரால் அணிவகுக்கப்பட்டும் கவசம்பூண்டும் யுத்தத்தில் அவரால் காக்கப்படும்ஸேனாவ்யூகமானது பெரும்போருக்கு ஸித்தமாயிருந்தது. பதினாயிரம்குதிரைகளும், பதினாயிரம்யானைகளும், பதினாயிரம்தேர்களும், கவசமணிந்தவர்களும் சூரர்களுமான சித்திரஸேனன்முதலான உம்முடையபுத்திரர்களும் பிதாமஹரைப்பாதுகாத்தார்கள். அந்தச்சூரர்களால்காக்கப்படுகின்றவர்களும் அந்தப்பீஷ்மரால் ரக்ஷிக்கப்படுகின்றவர்களும் மகாபலசாலிகளுமான அந்தஅரசர்கள் யுத்தஸன்னத்தர்களாகக்காணப்பட்டார்கள். துரியோதனன் கவசமணிந்து ரதத்தின்மேலேறிக் காந்தியுடன்கூடியவனாக, ஸ்வர்க்கத்தில் இந்திரன்போல யுத்தத்தில் விளங்கினான். பிறகு உமதுபுத்திரர்களுடைய பெரியசப்தமும் ரதங்களுடையஒலியும் நான்குவிதவாத்யங்களுடையமிக்கமுழக்கமும் தோன்றின. பீஷ்மரால் யுத்தரங்கத்தில் மேற்குமுகமாகஅணிவகுக்கப்பட்டதும் பகைவர்களால் உடைக்கமுடியாததும் சத்துருக்களை நாசஞ்செய்கின்றதும் பகைவர்களால்நாடமுடியாததுமான கௌரவர்களுடைய மண்டலாகார

மான அந்தப்பெரியவ்யூகமானது போர்க்களத்தில் நான்குபக்கங்களி லும் விளங்கியது. யுதிஷ்டிரமகாராஜர் ஒருவராலும்ஜயிக்கமுடியாத அந்தமண்டலாகாரமான வியூகத்தைப்பார்த்து, பிறகு தாம் வஜ்ரவ் யூகத்தை ஏற்படுத்தினர். அவ்வாறு படைகள்அணிவகுக்கப்பட்ட பொழுது அந்தஅந்தஇடங்களில்நிலைபெற்றிருக்கின்ற எல்லாரதிகர்க ளும் குதிரைவீரர்களும் ஸிம்மநாதம்செய்தார்கள். பிறகு ஒருவரை விட ஒருவர் (அதிக) சௌர்யமுள்ளவர்களும் யுத்தத்தை விரும்புகின் றவர்களும் (பகைவர்களை) அடிக்கும்ஸ்வபாவமுள்ளவர்களுமான வீரர்கள் ஸைன்யங்களையுடையவர்களாகி (சத்துருவினால்ஏற்படுத்தப் பட்ட) வியூகத்தைப்பிளக்க எண்ணங்கொண்டு புறப்பட்டார்கள். துரோணர் மச்சதேசாதிபதியானவிராடனையும், துரோணபுத்திரர் சிகண்டியையும் எதிர்த்தார்கள். துரியோதனராஜன் தானே த்ருஷ் டத்யும்னனைக்குறித்து ஸமீபத்தில் ஓடிவந்தான். நகுலஸகதேவரிரு வரும் மத்திரதேசாதிபனானசல்யனை எதிர்த்தார்கள். அவந்திதே சாதிபதிகளானவிந்தானுவிந்தர்கள் யுயுதானனை எதிர்த்தோடிவந்தார் கள். மற்றமன்னரனைவரும் யுத்தத்தில் தனஞ்சயனை எதிர்த்துப் போர்புரிந்தார்கள். திறமையுள்ளபீமஸேனன் யுத்தத்தில்செல்லுகின்ற க்ருதவர்மாவையும் சித்திரஸேனனையும் விகர்ணனையும் துர்மர்ஷ ணனையும் எதிர்த்தான். அர்ஜுனகுமாரன் யுத்தத்தில் உமதுகுமா ரர்களைஎதிர்த்துப் போர்புரிந்தான். மகாவில்லாளியான பிராக்ஜ்யோ திஷதேசத்தரசனானவன் ராக்ஷஸசிரேஷ்டனானகடோத்கசனை, ஒரு மதயானையானது மற்றொருமதயானையைஎதிர்ப்பதுபோல வேகத்து டன் எதிர்த்து ஓடினன். யுத்தத்தில் கோபங்கொண்டவனான அலம் புஸன்என்கிறராக்ஷஸன் சேனைகளையுடையவனும் யுத்தத்தில்கொடிய மதங்கொண்டவனுமான ஸாத்யகியை அப்பொழுது எதிர்த்துச்சென் றான். பூரிஸ்ரவஸானவன் யுத்தத்தில்முயற்சியுடன் திருஷ்டகேது வோடு போர்புரிந்தான். தர்மபுத்திரரானயுதிஷ்டிரர் ராஜாவானசுரு தாயுவை எதிர்த்தார். சேகிதானன் யுத்தத்தில் கிருபரை எதிர்த்துப் போர்புரிந்தான். மற்றவர்கள் முயற்சியுடன் மகாரதரானபீஷ்மரையே எதிர்த்தார்கள். பிறகு சக்திகள், தோமரங்கள், நாராசங்கள், கதை கள், பரிகங்கள் ஆகியஇவைகளைக்கையில்கொண்ட அந்தஅரசக்கூட் டங்கள் தனஞ்சயனைச் சூழ்ந்துகொண்டன. பிறகு அர்ஜுனன் மிகு ந்தகோபத்துடன் கிருஷ்ணனைப்பார்த்து, 'மாதவரே! வ்யூகங்களை அறிந்தவரும் மிக்கபலசாலியுமான கங்காபுத்திரராலே அணிவகுக்கப் பட்ட திருதராஷ்டிரபுத்திரனுடையசேனைகளை யுத்தத்தில் பாரும்.

மாதவரே! யுத்தத்தில் விருப்பமுள்ளவர்களும் சூரர்களும் கவச மணிந்தவர்களுமான இவர்களைப் பாரும். கேசவரே! பிராதாக்களு டன்கூடினதிரிகர்த்தராஜனைப் பாரும். ஜனார்த்தனரே! யதுசிரேஷ் டரே! யுத்தரங்கத்தில் எவர்கள் என்னுடன் யுத்தம்செய்யவிருப்ப முற்றிருக்கிறார்களோ அப்படிப்பட்ட இவர்களை நீர் பார்த்துக்கொண் டிருக்கும்பொழுதே நான் நாசம்செய்யப்போகிறேன்' என்றுசொன் னான். கௌந்தேயன் இவ்வாறுசொல்லிவிட்டு நாண்கயிற்றை உருவிக்கொண்டு ராஜாக்களுடையகூட்டங்களின்மீது சரமாரிகளைப்பொழிந்தான். பெரியவில்லைக்கையில்தாங்கின அவர்களும், மேகங்கள் வர்ஷாகாலத்தில் தடாகத்தை நீர்த்தாரைகளால் நிரப்புவதுபோல அந்தஅர்ஜுனனை அம்புமழைகளால் நிரப்பினார்கள். மகாயுத்தத்தில் அம்புகளால் மூடப்படும் [1] கிருஷ்ணார்ஜுனரிருவரையுங்கண்டு உம்முடையஸைனியத்தில் பெரியகூக்குரல் உண்டாயிற்று. அவ்வித நிலைமையடைந்திருக்கின்ற கிருஷ்ணார்ஜுனர் இருவரையுங்கண்டு தேவர்களும் தேவரிஷிகளும் உரகர்களும் கந்தர்வர்களும் அதிக ஆச்சரியமடைந்தார்கள். அரசரே! பிறகு அர்ஜுனன் கோபங்கொண்டு ஐந்திராஸ்திரத்தைப் பிரயோகித்தான். அந்தயுத்தத்தில் பகைவர்களால்விடப்படும் ஆயுதவர்ஷத்தை அம்புக்கூட்டங்களாலே தடுத்ததாகிய விஜயனுடையஅத்புதமானபராக்கிரமத்தைக் கண்டோம். ராஜரே! அந்தயுத்தத்தில் பிளக்கப்படாதவன் ஒருவனாவது இல்லை. ஐயா! பார்த்தன் ஆயிரக்கணக்கானஅவ்வரசர்களையும் குதிரைகளையும் யானைகளையும் மற்றவர்களையும் இரண்டுபாணங்களாலும் மூன்றுபாணங்களாலும் அடித்தான். பார்த்தனாலே அடிக்கப்படுகின்ற அவர்கள் சந்தனுபுத்திரரானபீஷ்மரை அடைந்தார்கள். ஆழ்ந்ததான (பார்த்தனாகிறகடலில்) முழுகுகின்றவர்களுக்குப் பீஷ்மர் அப்பொழுது தெப்பமானார். வந்துதாக்குகின்ற அந்தப்பாண்டவவீரர்களாலே உமதுசேனையானது மிகவும்நாசம்செய்யப்பட்டு, காற்றுக்களால் பெருங்கடல்போலக் கொந்தளிப்புற்றது.

---

[1] ஒருசொல் விடப்பட்டது.

## எண்பத்திரண்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(துரோணர் சங்கனைக்கொன்றதும், துவந்துவயுத்தமும்.)

யுத்தம்தொடங்கி ஸுசர்மா திரும்பவே மகாபலசாலியானபாண்டவனாலே வீரர்கள் தோல்வியடைவிக்கப்பட்டும் சமுத்திரம்போன்ற உம்முடையசேனையானது விரைவாகக் கலங்கும்படிசெய்யப்பட்டும் கங்காபுத்திரரானபீஷ்மரும் விஜயனைநோக்கி விரைவாகஎதிர்த்துச்சென்றபொழுது துரியோதனராஜன் யுத்தத்தில் பார்த்தனுடையவிக்கிரமத்தைக்கண்டு விரைவாக அந்த எல்லாஅரசர்களுக்கும்எதிரில்வந்து அவர்களுக்குமுன்னிலையில் எல்லாஸைனியங்களுக்கும்மத்தியில் சூரனும் மகாபலசாலியுமான சுசர்மாவை மிகவும் ஸந்தோஷிக்கச்செய்து கொண்டு பின்வருமாறுசொல்லலானான். 'இதோ கௌரவசிரேஷ்டரும் சந்தனுகுமாரருமானபீஷ்மர் எல்லாவிதத்தாலும் உயிரைவிடத் துணிந்து தனஞ்சயனைஎதிர்த்துப் போர்புரிய விருப்பமுள்ளவராயிருக்கிறார். எல்லாஸைனியங்களுடனும் அர்ஜுனனை எதிர்த்துச் செல்லுகின்றவரும் வீர்யமுள்ளவரும் பரதகுலத்தில் தோன்றியவரும் பிதாமஹருமான பீஷ்மரை நீங்கள் [1] அனைவரும் போரில் மிக்கமுயற்சியுடன் காக்கக்கடவீர்' என்றுசொன்னான். அரசர்களுடைய அந்தச் சேனைகளெல்லாம், 'அவ்வாறே ஆகட்டும்' என்றுசொல்லிவிட்டுப் பிதாமஹரை அடைந்தன. பிறகு (யுத்தத்திற்குப்) புறப்பட்டவரும் மஹாபலசாலியும் சந்தனுபுத்திரருமானபீஷ்மர் யுத்தத்தில் தம்மை நோக்கிவருகின்றவனும் பரதகுலத்திற்பிறந்தவனுமான அர்ஜுனனை விரைவாகஎதிர்த்தார். வெள்ளைநிறமுள்ள பெரியகுதிரைகளையுடையதும் பயங்கரமானவானரக்கொடியுள்ளதும் மேகமுழக்கம்போன்ற மிக்கசப்தமுள்ளதும் அதிகமாகப்பிரகாசிக்கின்றதுமான பெரியதேருடன் யுத்தரங்கத்தில் எல்லாஸைனியங்களுடைய ஸமீபத்திலும் வருகின்ற கிரீடியானதனஞ்சயனைக்கண்டு கௌரவசேனையில் பயத்தால் நெருங்கினசப்தம் உண்டாகியது. கௌரவவீரர்கள் கடிவாளங்களைக் கையில்பிடித்தவரும் வேறுசூரியன்போன்றவருமான வாஸுதேவரைக்கண்டு நடுப்பகலைஅடைந்திருக்கின்றசூரியனை எவ்வாறுபார்க்கமுடியாதோ அவ்வாறே யுத்தரங்கத்தில் அவரைப்பார்க்கச் சக்தியற்றவர்களானார்கள். அவ்வாறே வெண்மையானகுதிரைகளையு

[1] ஒருசொல் விடப்பட்டது.

டையவரும் வெண்ணிறமான வில்லைக்கையில்ஏந்தியவரும் சந்தனு புத்திரருமானபீஷ்மரை உதிக்கின்றவெண்ணிறமுள்ள ஜ்யோதிக்கிரகத்தைப்போலப் பாண்டவர்கள் பார்க்கச்சக்தியற்றவர்களானார்கள். அந்தப்பீஷ்மர் ஸகோதரர்களோடும் புத்திரர்களோடுங்கூடின மஹாபலசாலிகளான திரிகர்த்தர்களாலும், இன்னும்மற்றமகாரதர்களாலும் நாற்புறங்களிலும் சூழப்பட்டார். துரோணாசார்யர் மச்சராஜனை விராடனை யுத்தத்தில் ஒருபாணத்தால்அடித்து அவனுடையகொடியையும் ஒருபாணத்தால்அறுத்து வில்லையும்மற்றொருபாணத்தால் அறுத்தார். ஸேனாதிபதியானவிராடன் வெட்டப்பட்டஅவ்வில்லையெறிந்துவிட்டு வேகத்தோடு உறுதியானதும் பெரும்போரைச்செய்தற்குத்தக்கதுமானவேறுவில்லையும் ஸர்ப்பம்போல [1] ஜ்வலிக்கின்ற அம்புகளையுங்கையிலெடுத்துத் துரோணரை மூன்றுபாணங்களாலும், அவருடையகுதிரைகளை நான்குபாணங்களாலும், த்வஜத்தை ஒருபாணத்தாலும், ஸாரதியை ஐந்துபாணங்களாலும், வில்லை ஒருபாணத்தாலும் அடித்தான். அச்சமயத்தில் பிராம்மணோத்தமரான துரோணர் கோபங்கொண்டார். அவர் பதிவானகணுக்களுள்ள எட்டுப்பாணங்களாலே அவனுடையகுதிரைகளையும் ஒருபாணத்தினாலே அவனுடையஸாரதியையுங்கொன்றார். ரதிகர்களுள்உத்தமனானவிராடன் ஸாரதியையும் குதிரைகளையும்இழந்தரதத்தினின்று துள்ளிக்குதித்து விரைவாகத் தன்புத்திரனுடையரதத்தின்மீதேறினான். பிறகு பிதாவும் புத்திரனுமாகியஇருவரும் ஒருதேரிலிருந்துகொண்டு பெரிதானஅம்புமழையினாலே துரோணரைப் பலத்தால் தடுத்தார்கள். பிறகு [2] துரோணர் கோபங்கொண்டு ஸர்ப்பம்போன்றஓரம்பைச் சங்கனைக்குறித்து யுத்தத்தில் விரைவாகத்தொடுத்தார். அந்தப்பாணமானது அவனுடையஹ்ருதயத்தைப்பிளந்து யுத்தத்தில் ரக்தத்தைப் பானம்செய்து ரக்தத்தினால்நனைந்தசிறந்தசிறகுகளுடன் பூமியை அடைந்தது. துரோணருடையஅம்பினாலே அடிக்கப்பட்டசங்கன் யுத்தத்தில் விரைவாக வில்லையும் பாணங்களையும் நழுவவிட்டுப் பிதாவினுடைய அருகிலேயேவிழுந்தான். அந்தக்குமாரன் கொல்லப்பட்டதைக்கண்டு விராடன் திறந்தவாயையுடையஅந்தகன்போல யுத்தத்தில் (பிரகாசிக்கின்ற) துரோணரைவிட்டுவிட்டுப் பயத்தால் ஓடினான். பிறகு துரோணர் யுத்தத்தில் நூறுநூறாகவும் ஆயிரம்ஆயிரமாகவும் பாண்டவர்களுடையபெருஞ்சேனையை விரைவாகப்பிளந்தார். சிகண்டியோ யுத்தத்தில் துரோணபுத்திரரைஎதிர்த்து விரைவாகச்செல்லு

[1] ஒருசொல் விடப்பட்டது. [2] ஒருசொல் விடப்பட்டது.

கின்றமூன்றுபாணங்களாலே புருவங்களினிடையில் அடித்தான். ரதிக சிரேஷ்டரான அந்தஅஸ்வத்தாமா நெற்றியில்பொத்திருக்கின்ற மூன்றுபாணங்களாலே பொன்மயமான உயர்ந்தமூன்றுகொடுமுடிக ளாலே மகாமேருவிளங்குவதுபோல விளங்கினர். பிறகு கோபங் கொண்ட அஸ்வத்தாமா அரைநிமிஷத்திற்குள் அனேகஅம்புகளாலே சிகண்டியினுடையத்வஜத்தையும் ஸாரதியையும் குதிரைகளையும் ஆயுதங்களையும் அறுத்து யுத்தரங்கத்தில் கீழேவிழும்படி செய்தார். ரதிகர்களுள் உத்தமனும் பகைவர்களைத்தபிக்கச்செய்கின்றவனுமான அந்தச்சிகண்டி கோபங்கொண்டு குதிரைகள்கொல்லப்பட்ட ரதத்தி னின்று கீழேதுள்ளிக்குதித்து நன்றாய்த்தீட்டப்பட்டுப் பளபளப் பான ஒருவாளையும்கேடகத்தையும் கையிலெடுத்துக்கொண்டு பரு ந்துபோல வட்டமிட்டான். கத்தியுடன் யுத்தத்தில் ஸஞ்சரிக்கின்ற அந்தச்சிகண்டிக்குத்துன்பம்விளைவிக்கக்கூடியஸமயத்தைத் துரோண புத்திரர் காணவில்லை. அது ஓர்ஆச்சரியமாயிருந்தது. பிறகு அதிக கோபமுள்ளதுரோணபுத்திரர் சிகண்டியின்மீது யுத்தத்தில் பல்லா யிரம்பாணங்களைப் பிரயோகித்தார். பலசாலிகளுள் சிறந்தவனை சிகண்டி யுத்தத்தில் வருகின்றமிகக்கொடிய அந்தச்சரமாரியைக் கூர் மையானமுனையுள்ளவாளால் விலக்கினன். பிறகு துரோணபுத்திரர், அனேகசந்திரபிம்பங்களை அலங்காரமாகக்கொண்டதும் மனத்திற் கினியதும் நிர்மலமானதுமான சிகண்டியினுடையகத்தியையும் கேட கத்தையும் கூர்மையுள்ளபாணங்களாலே யுத்தத்தில் பலவாறுகத் துண்டித்து அவனையும் அடித்தார். சிகண்டியோ பிறகு அந்த அஸ் வத்தாமாவினல் பாணங்களால்துண்டிக்கப்பட்டகத்தியை ஜ்வலிக் கின்றஸர்ப்பம்போல விரைவாகச் சுழற்றியெறிந்தான். வேகத்துடன் வருகின்றதும் ஊழித்தீயைப்போன்ற ஒளிபொருந்தியதுமான அக்கத் தியைத் துரோணபுத்திரர் போர்க்களத்தில் ஹஸ்தலாகவத்தைக்காண் பித்துத்துண்டித்தார்; உருக்குமயமான அனேகபாணங்களால் சிகண் டியையும் அடித்தார். கூர்மையுள்ளஅம்புகளாலே மிகவும் அடிக்கப் பட்டுள்ளசிகண்டி மிக்கவல்லமையுள்ள ஸாத்யகியினுடைய ரதத்தில் விரைவாக ஏறிக்கொண்டான். பலசாலிகளுட்சிறந்தஸாத்யகியும் மிகு ந்தகோபத்துடன் யுத்தத்தில் குரூரனை அலம்புஸனென்னும் ராக்ஷ ஸனைக் கூர்மையுள்ளஅம்புகளால் அடித்தான். பிறகு ராக்ஷஸேந்திர னை அலம்புஸன் யுத்தத்தில் அர்த்தசந்திரபாணத்தால் அந்தஸாத் யகியினுடைய வில்லைத் துண்டாக்கி அவனையும் அம்புகளாலேஅடித் தான். மேலும் ராக்ஷஸர்களுக்குரியமாயையைவெளிப்படுத்திச்சரமாரி

களையும் பொழிந்தான். அந்தயுத்தத்தில் ஸாத்யகியின் அத்புதமான பராக்கிரமத்தை நாங்கள் கண்டோம். யுத்தத்தில் கூர்மையுள்ளபாணங்களாலே ஹிம்ஸிக்கப்படும் ஸாத்யகியானவன் பரபரப்பற்றவனாகி ஐந்திராஸ்திரத்தைப் பிரயோகித்தான். புகழ்பெற்றவனானஸாத்யகியினால் விஜயனிடத்தினின்று அடையப்பட்ட ஐந்திராஸ்திரமானது அப்பொழுது ராக்ஷஸனுடையஅவ்விதமானமாயையைச் சாம்பலாகச்செய்தது. வர்ஷாகாலத்தில் மேகம் நீர்த்தாரைகளை மலையின்மீது வர்ஷிப்பதுபோல ஸாத்யகி அலம்புஸன்மீது நான்குபக்கங்களிலும் வேறு அம்புகளையும் வாரிஇறைத்தான். கீர்த்தியுள்ள அந்தஸாத்யகியினால் அவ்வாறுபீடிக்கப்பட்ட அவ்வரக்கன் யுத்தரங்கத்தில் பயத்தினாலே அவனைவிட்டுவிட்டு ஓடினான். இந்திரனாலும் ஜயிக்கத்தகாதவனான அந்தஅலம்புஸனை, சிநியினுடையபௌத்திரனான ஸாத்யகியானவன் ஜயித்துவிட்டு உம்மைச்சேர்ந்த [1] யுத்தவீரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பலக்கஸிம்மநாதஞ்செய்தான். உண்மையான ஆற்றலுள்ளஅவன் கூர்மையுள்ளஅனேகஅம்புகளாலே உம்மைச்சேர்ந்தவர்களையும் அடித்தான். அவர்கள் பயத்தால்பீடிக்கப்பட்டு ஓடிவிட்டார்கள். இச்சமயத்தில் பலசாலியும் துருபதனுடையகுமாரனுமான திருஷ்டத்யும்னன் ராஜாவானஉம்முடையபுத்திரனைக் கணுக்கள்பதிவான அம்புகளால் மறைத்தான். திருஷ்டத்யும்னனால் அம்புகளாலேமூடப்படும்உம்முடையபுத்திரனானஅந்தத்துர்யோதனன் துன்பத்தையடையவில்லை. பின்பு துரியோதனன் அறுபதுபாணங்களாலும் முப்பது பாணங்களாலும் திருஷ்டத்யும்னனை யுத்தத்தில்விரைவாகஅடித்தான். அது ஆச்சரியமாயிருந்தது. ஸேனாபதியும் மகாபலசாலியுமான திருஷ்டத்யும்னன் கோபங்கொண்டு துரியோதனனுடையவில்லையும் அறுத்து நான்குகுதிரைகளையும் சீக்கிரமாகக்கொன்று மிக்ககூர்மையுள்ள ஏழுபாணங்களாலே அவனையும் துன்பமுறும்படி விரைவாக அடித்தான். மிக்கபுஜபலமுள்ளவனும் பலசாலியுமான அந்தத்துரியோதனன் குதிரைகள் கொல்லப்பட்ட ரதத்தினின்றுகுதித்துக் கத்தியைக்கையில்எடுத்துக்கொண்டு காலாளாகவே த்ருஷ்டத்யும்னனைக் குறித்து விரைவாகஓடிவந்தான். அரசனிடத்தில்அன்புள்ளவனும் மகாபலசாலியுமான சகுனி அவனைநாடி எல்லாஉலகத்துக்கும் அரசனான அந்தத்துரியோதனனைத் தன்ரதத்தின்மீதேறும்படி செய்வித்தான். பிறகு, சத்துருவீரர்களைக்கொல்லுகின்ற த்ருஷ்டத்யும்னன் துரியோதனராஜனைத் தோல்வியடையச்செய்து இந்திரன் அஸுரர்

[1] ஒருசொல் விடப்பட்டது.

களைக்கொல்வதுபோல உமதுபடையை நாசஞ்செய்தான். மகாரத னை கிருதவர்மா, மஹாமேகம் சூரியனைமறைப்பதுபோலப் போர்க்க ளத்தில் அம்புகளால் அந்தப்பீமனை மூடினான். பிறகு, போரில் பகை வர்களைவாட்டும்தன்மையுடையபீமஸேனன் மிகுந்தகோபங்கொண்டு அட்டஹாஸஞ்செய்து கிருதவர்மாவின்மீது அம்புகளைப் பிரயோகஞ் செய்தான். அதிரதனும் சஸ்திரங்களையறிந்தவனுமான கிருத வர்மா அவைகளால் அடிக்கப்பட்டும் நடுக்கமுறவில்லை; பீமனையும் அவன் கூர்மையானஅம்புகளாலே அடித்தான். மகாரதனான பீமஸே னன் அவனுடைய நான்குகுதிரைகளையுங்கொன்று ஸாரதியையும் நன்றாக அலங்கரிக்கப்பட்ட த்வஜத்தையும் கீழேதள்ளினான். சத் ருவீரர்களை அழிப்பவனானபீமஸேனன் பலவிதஅம்புகளாலே கிரு தவர்மாவினுடையதேகத்தை நிரப்பினான். துளைக்கப்பட்டஎல்லா அங்கங்களையுமுடைய கிருதவர்மா முட்களால்நிறைந்த முள்ளம்பன்றி போல விளங்கினான். பிறகு குதிரைகள்கொல்லப்பட்ட கிருதவர்மா உமது புத்திரன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே உமதுமைத் துனனானசகுனியினுடைய ரதத்தைக்குறித்து விரைவாகஓடினான். பீம ஸேனனும் மிகுந்தகோபங்கொண்டு உமது ஸைனியத்தின்பக்கத்தில் ஓடிவந்தான்; தண்டத்தைக்கையில்கொண்டயமன்போலக் கோபங் கொண்டு (கௌரவஸைனியத்தை) நாசஞ்செய்தான்" என்று கூறினான்.

---

## எண்பத்துமூன்றாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(த்வந்த்வயுத்தவர்ணனம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பாண்டவர்களுக்கு நமதுவீரர்க ளுடன்நடந்த அநேகவிசித்திரமான ரதிகர்களுடைய த்வந்த்வயுத் தங்களைச் சொல்லுகின்றவனான உன்னிடமிருந்து நான் கேட்டேன். ஸஞ்சய! என்னைச்சேர்ந்தவஸ்துஒன்றாவது ஸந்தோஷமுள்ளதாயிரு ந்ததென்று நீ சொல்லவில்லை. எப்பொழுதும் பாண்டுபுத்திரர்கள் ஸந் தோஷமுள்ளவர்களென்றும் தோல்வியடையாதவர்களென்றும் நன்கு புகழ்கிறாய். ஸூத! என்னைச்சேர்ந்தவீரர்களை யுத்தத்தில் ஜயிக்கப் படுகின்றவர்களாகவும் மனோதைரியத்தை இழந்தவர்களாகவும் பராக் கிரமத்தைஇழந்தவர்களாகவும்சொல்லுகிறாய். இது தெய்வச்செயலே; ஸம்சயமில்லை" என்றுகூறினான்.

ஸஞ்சயன், "புருஷசிரேஷ்டரே! உம்மைச்சேர்ந்தவீரர்கள் வல்லமையுடன் அதிகபௌருஷத்தைவெளியிட்டுக்கொண்டு சக்திக்கேற்றபடியும் ஊக்கத்திற்குத்தகுந்தபடியும் யுத்தரங்கத்தில் போர்புரிகிறார்கள். தேவநதியானகங்கையினுடைய ருசியுள்ளதீர்த்தமானது மகோததியின் ஸமீபத்தைஅடைந்து உப்பாயிருக்கும்நிலைமையை அடைவதுபோல உம்மைச்சேர்ந்தவீரர்களுடைய அந்தஆண்மையானது வீரர்களான பாண்டுபுத்திரர்களைநெருங்கி யுத்தத்தில்வீணாகின்றது. சக்திக்குத்தக்கபடி யுத்தத்தைச்செய்பவர்களும் செய்யமுடியாதகாரியத்தைச் செய்கின்றவர்களுமான கௌரவர்களின்மீது தோஷத்தைச்சொல்வதற்கு நீர் தகுந்தவரல்லீர். புத்திரர்களுடன் கூடின உம்முடையதோஷத்தினாலே மிக்கபெரிதும் யமனுடைய தேசத்தைவிருத்திபண்ணுகின்றதும் கொடியதுமான பூமியினுடைய க்ஷயமானது நேர்ந்துவிட்டது. உமதுகுற்றத்தினாலே உண்டானதைப்பற்றி நீர் துக்கிக்கத்தக்கவரல்லீர். அரசர்கள் எல்லாவிதத்தினாலும் இப்பொழுதும் உயிரைக் காப்பாற்றவில்லை. ஸ்வர்க்கத்தை அடைவதில்ஆவலுள்ளவர்களானஅரசர்கள் யுத்தத்தில் புண்யசாலிகளுக்குரியஉலகங்களைவிரும்பிச் சேனையில்நுழைந்து எப்பொழுதும் யுத்தம்செய்கின்றனர். முற்பகலில் ஜனங்களுக்கு நாசம் உண்டாகியது. தேவாஸுரயுத்தம்போன்றதான அதனை ஒரேமனமுடையவராயிருந்து நீர் கேளும். யுத்தத்தில் கொழுப்புள்ளவர்களும் பெரியவில்லைக் கையில்தாங்கினவர்களும் பெரியசேனையையுடையவர்களும் மிக்கபலசாலிகளும் அவந்திதேசத்தரசர்களுமானவிந்தானுவிந்தர்கள் யுதாமன்யுவைநோக்கி யுத்தத்திற்காக எதிர்த்துச்சென்றார்கள். அவர்களுக்கு மிகவும்பெரிய மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணக்கூடியயுத்தம் நடந்தது. யுதாமன்யுவும் மிகுந்தகோபம்மூண்டு கூர்மையுள்ளவைகளும் அமிழ்ந்தகணுக்களுள்ளவைகளுமான அம்புகளாலே தேவதைகளுடைய ரூபம்போன்றரூபமுடையவர்களும் ஸஹோதரர்களுமான விந்தானுவிந்தர்களை விரைவாகஅடித்தான். விசித்திரமாகயுத்தம்செய்யும்தன்மையுள்ளவர்களானஅவ்விருவரும் யுத்தத்தில் யுதாமன்யுவைத் திருப்பியடித்தார்கள். அரசரே! பகைவர்களைக்கொல்வதற்கு முயற்சிக்கின்றவர்களும் செய்ததற்குப்பிரதிசெய்வதில்விருப்பமுள்ளவர்களும் போர்புரிகின்றவர்களுமான அவர்களுக்கு வேற்றுமையொன்றும் காணப்படவில்லை. பிறகு யுதாமன்யுவானவன் நான்குபாணங்களாலே அனுவிந்தனுடைய நான்குகுதிரைகளையும் யமலோகத்திற்கனுப்பினான். மேலும் யுதாமன்யு மிக்ககூர்மையுள்ளஇரண்டுபல்லங்களாலே

யுத்தத்தில் அந்தஅனுவிந்தனுடையவில்லையும் கொடியையும் அறுத்தான். அது ஆச்சரியமாயிருந்தது. பிறகு அனுவிந்தன் தன்னுடைய ரதத்தையிழந்து சிறந்ததும் பெரியகாரியங்களைச்செய்யத்தக்கதும் உத்தமமுமானவில்லைக் கையிலெடுத்துக்கொண்டு விந்தனுடையரதத்தின் மீதேறினன். ஒருரதத்தின்மீதேறியிருக்கின்றவர்களும் வீரர்களும் ரதிகர்களுள் உத்தமர்களுமான அந்தஅவந்திராஜகுமாரர்கள் மகாத்மாவானயுதாமன்யுவின்மீது யுத்தத்தில் விரைவாகப் பாணங்களைப் பிரயோகித்தார்கள். அவ்விருவராலும்விடப்பட்டவைகளும் மிகுந்த வேகமுள்ளவைகளும் பொன்னால்அலங்கரிக்கப்பட்டவைகளுமான அம்புகள் சூரியனுடையவழியைஅடைந்து ஆகாயத்தை மறைத்தன. யுதாமன்யு யுத்தத்தில்கோபங்கொண்டு மகாரதர்களும் பிராதாக்களுமான விந்தானுவிந்தர்களின்மீது சரமாரியைப் பொழிந்து ஸாரதியையும்வீழ்த்தினன். அந்தஸாரதிஉயிரையிழந்து கீழேவிழுந்தவுடனே தேரானது மிகவெருண்டகுதிரைகளையுடையதாகித் திக்குக்களில் ஓடியது. யஜ்ஞஸேனகுமாரனும் பிரபுவுமானயுதாமன்யு அவ்விருவரையும் ஜயித்து ஆண்மையை வெளியிட்டுக்கொண்டு உம்முடைய சேனையை விரைவாக நாசம்செய்தான். யுத்தத்தில் கொல்லப்படுகின்ற உமதுஅந்தப்பெரியசேனையானது விஷத்தைப்பானஞ்செய்தஒருமனிதன்போலப் பலவிதவேகங்களைச்செய்தது. மகாபலசாலியும் ராக்ஷஸசிரேஷ்டனுமான ஹிடிம்பாபுத்திரன் சூரியன்போலப்பிரகாசிக்கின்றதும் கொடியுடன்கூடியதுமானரதத்தோடு பகதத்தனை எதிர்த்தான். பிறகு பிராக்ஜ்யோதிஷதேசத்தரசன் பெரியயானையின்மீதேறி முற்காலத்தில் தாரகாஸுரயுத்தத்தில் வஜ்ரத்தைத்தரித்த இந்திரன்பிரகாசித்ததுபோலப் பிரகாசித்தான். அவ்விடத்தில் ஒன்றுகூடியிருக்கின்ற தேவர்களும் கந்தர்வர்களும் ரிஷிகளும் ஹிடிம்பாபுத்திரனுக்கும் பகதத்தனுக்குமுள்ளவித்தியாஸத்தைக் காணவில்லை. தேவர்களுக்கெல்லாம்நாதனனஇந்திரன் எவ்வாறு அஸுரர்களைப் பயமடையும்படிசெய்தானே அவ்வாறே பகதத்தராஜன் யுத்தத்தில் பாண்டவர்களை ஓடும்படியடித்தான். அந்தப்பகதத்தனலே எல்லாத்திக்குக்களிலும்துரத்தியடிக்கப்படுகின்றபாண்டவர்கள் தங்கள்படைகளுள் ஒரு ரக்ஷகனையும் அடையவில்லை. அந்தயுத்தகளத்தில் பீமஸேனகுமாரன் மாத்திரம் தேரிலிருந்ததை நாங்கள் கண்டோம். மற்றமகாரதர்கள் மனோதைரியத்தையிழந்து ஓடிவிட்டார்கள். பாண்டவர்களுடைய ஸைனியங்கள் மறுபடியும் திரும்பிவந்தவுடனே யுத்தரங்கத்தில் உமது படையிலுடைய கோரமான சப்தமானது தோன்றியது. பிறகு

கடோத்கசன் மேகம் மகாமேருகிரியை வர்ஷதாரைகளால் மூடுவது போல மகாயுத்தத்தில் பகதத்தனை அம்புகளாலேமூடினான். பகதத்தன் ராக்ஷஸனுடையவில்லினின்றுவிடுபட்டுவரும் அவ்வம்புகளை நாசஞ் செய்து பீமஸேனபுத்திரனை யுத்தத்தில் எல்லாமர்மஸ்தானங்களிலும் விரைவாகஅடித்தான். ராக்ஷஸேந்திரனான கடோத்கசன் பிளக்கப் படுகின்றமலைபோல, பதிவான கணுக்களுள்ள அனேகஅம்புகளாலே அடிக்கப்பட்டும் வருத்தமடையவில்லை. பிராக்ஜ்யோதிஷதேசத்தரசன் கோபங்கொண்டு பதினான்குதோமராயுதங்களை அந்தக்கடோத்கசன் மீது பிரயோகித்தான். ராக்ஷஸனானகடோத்கசன் யுத்தத்தில் அவை களைத் துண்டாக்கினான். மிக்கபாகுபலமுள்ள கடோத்கசன் அந்தத் தோமராயுதங்களைக் கூர்மையானபாணங்களால் அறுத்துக் கழு கிறகுகள்பூண்டஎழுபதுபாணங்களாலே பகதத்தனையும் அடித்தான். பிறகுபிராக்ஜ்யோதிஷதேசத்தரசன் அட்டஹாஸத்துடன்கூடியவனாகி அம்புகளால் அவனதுநான்குகுதிரைகளையும் யுத்தபூமியில் தள்ளி னான். குதிரைகள்கொல்லப்பட்ட ரதத்தில்வீற்றிருக்கின்ற பிரதாப சாலியான அந்தராக்ஷஸேந்திரன் பிராக்ஜ்யோதிஷாதிபதியினுடைய யானையின்மீது வேகத்துடன் ஒருசக்தியை எறிந்தான். விரைவாக வருகின்றதும் பொற்காம்புள்ளதும் நல்லவேகமுடையதுமான அந் தச்சக்தியாயுதத்தைப் பகதத்தன் மூன்றுகத்துண்டாக்கினான். அது பூமியில்சிதறியது. சக்தியாயுதம் நாசம்செய்யப்பட்டதைக்கண்டு ஹிடி ம்பாபுத்திரன், முற்காலத்தில் இந்திரனுடையயுத்தத்தினின்று அஸுர சிரேஷ்டனான நமுசி எவ்வாறு பயந்தோடினானோ அவ்வாறு பயந் தோடினான். யுத்தத்தில்சௌர்யமுடையவனும் விக்கிரமமுள்ளவனும் பிரசித்தமான பௌருஷத்தையுடையவனும் யுத்தத்தில்யமனாலும் வருணனாலும்ஜயிக்கமுடியாதவனும் வீரனுமான அந்தக்கடோத் கசனைப் பகதத்தன் தோல்வியடையும்படிசெய்து யானையுடன்கூடியவ னாகிப் பாண்டவசேனையை, காட்டுயானை தாமரைஓடையை அழித் துக்கொண்டு ஸஞ்சரிப்பதுபோல அழித்தான். மத்ரதேசத்தரசனான சல்யனோ நகுலஸகதேவர்களோடு போர்புரிவதற்காக எதிர்த்தான்; ஸகோதரீபுத்திரர்களும் பாண்டுநந்தனர்களுமான நகுலஸஹதேவர் களை அம்புக்கூட்டங்களால் மூடினான். ஸஹதேவனோ யுத்தத்தில் (தன்னோடுபோர்புரிவதற்காக) அருகில்வந்திருக்கின்ற மாதுலனான சல்யனைக்கண்டு மேகம் சூரியனைமறைப்பதுபோல அம்புக்கூட்டத் தால் தடுத்தான். பாணஸமூகத்தால்மூடப்படுகின்றசல்யன் மிக்க ஸந் தோஷமுடையவனானான். அவ்விருவர்களுக்கும், மாதாவான மாத்ரி

நிமித்தமாகச் சல்யன்மீது ஒப்பற்றபிரீதியுண்டாயிருந்தது. பிறகு மகாரதனான சல்யன் அட்டஹாஸஞ்செய்துகொண்டு யுத்தத்தில் நகுலனுடையகொடியைஅறுத்து ஓரம்பினால் அவன்வில்லையும் அறுத்தான். பிறகு சல்யன், வில்அறுபட்டநகுலனை (அம்புகளால்) மூடினான். அந்த நகுலனை யுத்தத்தில் அடித்துவிட்டு அவனுடையஸாரதியையும் தள்ளினான். பிறகு மகாரதனானசல்யன் பலாத்காரமாக நகுலனுடைய நான்குகுதிரைகளையும், நான்குசிறந்தபாணங்களாலே யுத்தத்தில் அடித்து யமனுடையவீட்டிற்குஅனுப்பினான். பிறகு மகாரதனான நகுலன் குதிரைகளிறந்தரதத்தினின்று விரைவாகஇறங்கி, கீர்த்திபொருந்திய பிராதாவான ஸகதேவனுடையரதத்தின்மீதேறினான். யுத்தத்தில்சூரர்களும் ஒரேரதத்தில்வீற்றிருப்பவர்களுமான அவ்விருவரும் திடமானவிற்களைஇழுத்து ஒருக்ஷணத்திற்குள் மத்ரராஜனுடையரதத்தை விரைவாகமூடினார்கள். ஸகோதரீபுத்திரர்களான நகுலஸகதேவர்களால் பதிவானகணுக்களுள்ள அனேகஅம்புகளாலேமூடப்படுகின்ற அந்தப்புருஷசிரேஷ்டனானசல்யன் மலைபோல அசைவற்றுநின்றான்; மேலும் அட்டஹாஸத்துடன் அந்தச்சஸ்திரவர்ஷத்தையும் நாசஞ்செய்தான். வீர்யமுடையவனானஸஹதேவன் பிறகு ஓரம்பைக்கையிலெடுத்துக் கோபத்துடன் மத்ரராஜனைக்குறித்து விடுத்தான். கருடனுக்கும் காற்றுக்கும்ஒப்பானவேகமுடைய அந்தஅம்பானது ஸகதேவனால் தொடுக்கப்பட்டவுடனே சல்யனுடையதேகத்தைப்பிளந்துகொண்டு பூமியில் வீழ்ந்தது. நன்றாகஅடிக்கப்பட்டுத் துன்பத்தையடைந்த மகாரதனானஅந்தச்சல்யன் தேர்நடுவிலேயே உட்கார்ந்துமூர்ச்சையடைந்தான். நகுலஸகதேவர்களால் யுத்தத்தில் நன்கு அடிக்கப்பட்டு (ரதத்தில்) அறிவுமயங்கிவீழ்ந்த அந்தமத்திரராஜனை ஸாரதியானவன் யுத்தரங்கத்தில் பார்த்து ரதத்தோடு (அவனை) வேறிடத்திற்குக்கொண்டுசென்றான். திருதராஷ்டிரபுத்திரர்கள் அனைவரும் புறங்காட்டிஓடுகின்ற மத்ரராஜனுடைய ரதத்தைக்கண்டு மனவருத்தமுற்று, 'இது இனிஇல்லை' என்று எண்ணினார்கள். மஹாரதர்களான மாத்ரீபுத்திரர்கள் யுத்தத்தில் மாதுலனைஜயித்து மகிழ்ந்து சங்கங்களை ஊதினார்கள்; ஸிம்மநாதத்தையுஞ்செய்தார்கள். ஸந்தோஷமுற்றஅவ்விருவரும் உம்முடையஸைனியத்தைக்குறித்து, தேவர்களான இந்திரன், உபேந்திரன் இருவரும் அஸுரசேனையைக்குறித்து எதிர்த்துச்செல்வதுபோல எதிர்த்துவந்தார்கள்.

---

## எண்பத்துநான்காவது அத்தியாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர்முதலானவர்களுடைய யுத்தம்.)

பிறகு, யுதிஷ்டிரராஜர் சூரியன்நடுப்பகலேயடைந்திருக்கும்பொழுது சுருதாயுவை லக்ஷ்யம்வைத்துக் குதிரைகளை ஓட்டினர். பிறகு, அவர், பகைவர்களை அடக்குகிறவனைசுருதாயுவைக் கணுக்கள்பதிவாயுள்ள கூர்மையான ஒன்பதுபாணங்களாலே விரைந்துஅடித்தார். மஹாவில்லாளியும் அரசனுமான அந்தஸ்ருதாயு, தர்மபுத்திரரால் தொடுக்கப்படும் அம்புகளைத்தடுத்து யுத்தத்தில் அவர்மீது ஏழுகணைகளைத்தொடுத்தான். அவ்வம்புகள் அவருடையகவசத்தையுடைத்து மஹாத்மாவான அவருடையதேகத்திலுள்ளபிராணன்களைத் தேடுகின்றவைபோல யுத்தத்தில் இரத்தத்தைப்பானம்செய்தன. மஹாபலசாலியான அந்தஸ்ருதாயுவினுல் அதிகமாகஅடிக்கப்பட்ட பாண்டுபுத்திரரோ கோபங்கொண்டு யுத்தத்தில் வராஹகர்ணம்என்கிறபாணத்தினுல் அரசனைசுருதாயுவை மார்பிலடித்தார். பிறகு, தேராளிகளுட்சிறந்தவரான தர்மநந்தனர் மிக்கபலசாலியான சுருதாயுவினுடைய கொடியை வேறொருபல்லத்தினுலே (அறுத்து) ரதத்தினின்று பூமியில் விரைவாகத் தள்ளினுர். கொடிவிழுந்ததைக்கண்டு அரசனை சுருதாயு பாண்டுநந்தனரைக் கூர்மையுள்ள ஏழுபாணங்களால் அடித்தான். பிறகு தர்மபுத்திரரானயுதிஷ்டிரர் யுகாந்தகாலத்தில் பிராணிகளை எரிக்கநினைந்த தீயைப்போலக் கோபத்தால் நன்குஜ்வலித்தார். பாண்டுபுத்திரர்கோபமுற்றதைக்கண்டு தேவர்களும் கந்தர்வர்களும் ராக்ஷஸர்களும் மனத்தில்துன்பமடைந்தார்கள்; உலகமும் மனக்குழப்பமுற்றது. 'மிக்ககோபங்கொண்ட யுதிஷ்டிரராஜர் இப்பொழுது மூவுலகங்களையும்எரிக்கப்போகிறுர்' என்னும் இஃது எல்லாப்பிராணிகளுக்கும் மனத்தில்தோன்றியது. அப்பொழுது யுதிஷ்டிரர் கோபங்கொண்டிருக்கையில், ரிஷிகளும் தேவர்களும் உலகங்களுக்கு (அனிஷ்டம்) தணிவதின்பொருட்டுப் பெரியஆசீர்வாதத்தைச் செய்தார்கள். கோபமூண்டஅந்தத்தர்மநந்தனரும், இரண்டுசடைவாய்களையும் நக்கிக்கொண்டு தம்சரீரத்தை யுகாந்தகாலத்திலுள்ள சூரியன்போலக் கோரமாகத் தரித்தார். பிறகு உம்முடையபடைகளெல்லாம் அந்த யுத்தரங்கத்தில் உயிரைப்பற்றிஆசையற்றவைகளாயின. மிக்கபுகழையுடைய தர்மநந்தனர் தைரியத்தினுல் அந்தக்கோபத்தையடக்கி

ஸ்ருதாயுவினுடையபெரியவில்லைக் கைப்பிடிஉள்ளஇடத்தில் நன்கு அறுத்தார். பிறகு தர்மராஜர் வில்அறுக்கப்பட்ட சுருதாயுவை எல்லாச்சேனைகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்தத்தில் நாராசத்தினல் நடுமார்பில்பிளந்தார். அதிகபலசாலியானதர்மநந்தனர் மஹாத்மாவான அந்தச்சுருதாயுவினுடையகுதிரைகளை யுத்தத்தில் அம்புகளால் விரைவாகக்கொன்று ஸாரதியையும் அப்படியே கொன்றார். அப்பொழுது சுருதாயு குதிரைகள் கொல்லப்பட்டரதத்தைவிட்டு இந்தஅரசருடைய ஆண்மையைக்கண்டு யுத்தத்தில் விரைவாகஓடினன். சிறந்தவில்லாளியான அந்தஸ்ருதாயு யுத்தத்தில் தர்மபுத்திரரால் ஜயிக்கப்பட்டவுடன் துரியோதனனுடையசைனியம்முழுவதும் புறங்காட்டிஓடியது. தர்மபுத்திரரானயுதிஷ்டிரர் இவ்வாறு (சுருதாயுவை) ஜயித்து வாயைத்திறந்துகொண்டிருக்கும் காலன்போலிருந்துகொண்டு உம்முடையசேனைகளைக் கொன்றார். விருஷ்ணிகுலத்தில்பிறந்த சேகிதானனே ரதிகர்களுள்சிறந்தவரானகிருபரை எல்லாஸைனியங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அம்புகளால்மூடினன். சரத்வானுடையகுமாரரானகிருபரும் யுத்தத்தில் அவ்வம்புகளை (அம்புகளால்) தடுத்து யுத்தத்தில்முயற்சியுள்ள சேகிதானனைப் பாணங்களால் அடித்தார். பிறகு யுத்தத்தில்ஹஸ்தலாகவமுள்ளகிருபாசாரியர் வேறொருபல்லத்தினலே சேகிதானனுடைய வில்லைஅறுத்து அவனுடையஸாரதியையும் தள்ளினர். அவர் சேகிதானனுடையகுதிரைகளையுங்கொன்று இருபக்கத்திலுமுள்ளஸாரதிகளையுங்கொன்றார். ஸாத்வதன் தேரினின்று விரைவாகஇறங்கி ஒருகதையைக் கையிலெடுத்தான். கதையைத்தரித்தவர்களுள் உத்தமனன அந்தச்சேகிதானன் வீரர்களைக்கொல்லும் தன்மையுள்ள அந்தக்கதையினலே கிருபருடையகுதிரைகளைக்கொன்று ஸாரதியையும் தள்ளினன். கௌதமர் பூமியில்நின்றுகொண்டு சேகிதானன்மீது பதினறம்புகளை விடுத்தார். அவ்வம்புகள் சேகிதானனைப்பிளந்துகொண்டு பூமியில்பிரவேசித்தன. பிறகு சேகிதானன் கோபங்கொண்டு விருத்திரனுடையவதத்தில் நோக்கங்கொண்ட புரந்தரன்போல, கிருபருடையவதத்தையே விரும்பி அந்தக்கதையை மறுபடியும் எறிந்தான். வஜ்ரங்களிழைத்ததும் பளபளப்புள்ளதும் ரத்னங்களால் நடுவில்இழைக்கப்பட்டதுமான அந்தப்பெரியகதாயுதத்தைக் கிருபர் அனேகஆயிரக்கணக்கான அம்புகளாலே தடுத்தார். சேகிதானன் பிறகு கோபத்தால் கத்தியைஉருவிக்கொண்டு அதிகலாகவத்துடனே கிருபாசாரியருடையபக்கத்தைநோக்கி ஓடிவந்தான். கிருபரும் வில்லை

யெறிந்துவிட்டு மிருந்தஜாக்கிரதையுடன் கத்தியைக்கையிலெடுத்துக்கொண்டு அதிவேகத்துடனே அவனுடையபக்கத்தில் ஓடிவந்தார். பலமுள்ளவர்களும், உத்தமமானகத்தியைக் கையிலேந்தியவர்களுமான அவ்விருவரும், மிக்ககூர்மையுள்ள கத்திகளாலே ஒருவரையொருவர் வெட்டிக்கொண்டார்கள். பிறகு புருஷசிரேஷ்டர்களான அவ்விருவரும் கத்தியின்வேகத்தால் அடிக்கப்பட்டு எல்லாப்பிராணிகளாலும் அடையப்பட்டிருக்கிறபூமியைஅடைந்து யுத்தம்செய்ததினால் மோஹமடைந்தவர்களும் மூர்ச்சையினால் தளர்ச்சியடைந்த அங்கங்களையுடையவர்களுமானார்கள். பிறகு, யுத்தத்தில் கெட்டமதங்கொண்ட பீமஸேனன், அந்தநிலைமையடைந்திருக்கின்ற சேகிதானனைக்கண்டு நேசத்தினால் வேகத்தோடு அவனுக்கெதிராகஓடிவந்து எல்லாச்சைனியங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அவனைத் தன்ரதத்தின்மீதேற்றிவைத்துக்கொண்டான். அவ்வாறே உம்முடையமைத்துனனும், சூரனுமானசகுனி ரதிகர்களுள்உத்தமரான கிருபரை விரைவாகத் தன்ரதத்தில் ஏற்றிவைத்துக்கொண்டான். பிறகு, மிக்கவல்லமையுள்ள திருஷ்டகேது கோபங்கொண்டு ஸோமதத்தகுமாரனைத் தொண்ணூறுபாணங்களாலே மார்பில் விரைவாக அடித்தான். ஸோமதத்தகுமாரன் மார்பில்தைத்திருக்கின்ற அந்தப் பாணங்களாலே உச்சிப்போதில் கிரணங்களாலே சூரியன் பிரகாசிப்பதுபோல அதிகமாகப்பிரகாசித்தான். பூரிஸ்ரவஸோ யுத்தரங்கத்தில் மகாரதனான திருஷ்டகேதுவை, உத்தமமானபாணங்களாலே ஸாரதியையும் குதிரைகளையும்கொன்று தேரையும்இழக்கச்செய்தான்; அவன்தேரிழந்ததையும் அவனதுகுதிரைகளும் ஸாரதியும்கொல்லப்பட்டதையும்கண்டு யுத்தத்தில் பெரியஅம்புமழையினால் அவனை மூடினான். உறுதியானமனமுள்ள திருஷ்டகேது, அந்தரதத்தைவிட்டுச் சதாநீகனுடையரதத்தின்மீதேறினான். ரதிகர்களான சித்திரஸேனனும் விகர்ணனும் துர்மர்ஷணனும் பொற்கவசங்களையணிந்து ஸுபத்திராபுத்திரனான அபிமன்யுவைஎதிர்த்து ஓடினார்கள். பிறகு, வாதம் பித்தம் கபம்என்னும்மூன்றோடு சரீரத்திற்கு யுத்தம் எவ்வாறுநேருமோ அவ்வாறே அபிமன்யுவுக்கு அம்மூவர்களோடு கோரமானயுத்தம் நடந்தது. புருஷசிரேஷ்டனான அபிமன்யுவானவன் பெரும்போரில் உமதுகுமாரர்களை ரதங்களையிழந்தவர்களாகச்செய்து அப்பொழுது பீமனுடையவார்த்தையைநினைத்துக்கொண்டு அவர்களைத் தான்கொல்லவில்லை. பிறகு, யானைகளின்மீதும் குதிரைகளின்மீதும் ரதத்தின்மீதும் ஏறிச்செல்லுகிற அனேகநூற்றுக்கணக்கானஅரசர்களாலே

சூழப்பட்டவரும் தேவர்களாலும்நெருங்கமுடியாதவரும் உமதுகுமாரர்களைக்காப்பாற்றுவதற்காக, பாலனும் தனியாயிருப்பவனும் மகாரதனுமான அபிமன்யுவை லக்ஷியம்வைத்து விரைவாகவருகின்றவருமான பீஷ்மரைக்கண்டு குந்திபுத்திரனை அர்ஜுனன் வாஸுதேவரைப்பார்த்து, 'ஹ்ருஷீகேசரே! ரதங்கள் மிகுதியாயிருக்குமிடத்திற்குக் குதிரைகளைஓட்டும். மாதவரே! சௌர்யமுள்ளவர்களும் அஸ்திரவித்தையில் பாண்டித்யமுள்ளவர்களும் யுத்தத்தில் அடங்காதமதங்கொண்டவர்களுமான இவர்களனைவரும் நம்முடையசேனையைக் கொல்லாவண்ணம் (நம்முடையகுதிரைகளை) நடத்தும்' என்று சொன்னான். அளவுகடந்தபராக்கிரமமுள்ள அர்ஜுனன் இவ்வாறுசொல்ல, அந்தவாஸுதேவர் வெண்மையான குதிரைகளோடுகூடின (அந்த) ரதத்தை யுத்தத்தில் ஓட்டினார். அர்ஜுனன் யுத்தத்தில் கோபங்கொண்டு உம்மைச்சேர்ந்தவர்களை லக்ஷியம்வைத்துப் புறப்பட்டகாரணத்தினாலே உம்முடைய ஸைனியத்தில் பெரியஆரவாரம் உண்டாயிற்று. அர்ஜுனன் பீஷ்மரைரக்ஷிக்கின்ற அந்தஅரசர்களைநாடி ஸுசர்மாவைப்பார்த்துப் பின்வருமாறு வசனத்தை உரைக்கலானான். 'உன்னை நான் போர்வீரர்களுள் மிகச்சிறந்தவனென்றும் பூர்வவைரியென்றும் அறிவேன். அநியாயச்செய்கையினுடைய மிகக்கொடியபயனானது இப்பொழுது உன்னால் அடையப்பட்டது; பார். முன்மரித்தவர்களான உன்பிதாமகர்களை இப்பொழுது உனக்குக்காண்பிக்கப்போகிறேன்' என்றான். இவ்வாறுசொல்லுகின்றவனும் பகைவர்களை அழிக்கின்றவனுமான அந்தஅர்ஜுனனுடைய குரூரமானவார்த்தையைக்கேட்டு ரதயூதபதியான ஸுசர்மாவானவன் அர்ஜுனனைப்பார்த்து நல்லதையோகெட்டதையோ ஒன்றையும் சொல்லவில்லை. மஹாரதனானசுசர்மா அநேக அரசர்களால் சூழப்பட்டவனாக வீரனான அர்ஜுனனை எதிர்த்துவந்து முன்புறத்திலும் பின்புறத்திலும் இரண்டுவிலாப்பக்கங்களிலும் எல்லாப்பக்கங்களிலும் உமதுபுத்திரர்களுடன்சேர்ந்து யுத்தத்தில் அவனைச்சூழ்ந்துகொண்டு மேகங்கள்சூரியனைமூடுவதுபோல அம்புகளால் மூடினான். பிறகு, யுத்தகளத்தில் உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ரக்தவெள்ளத்துடன்கூடின மிகப்பெரியயுத்தம் நடந்தது.

---

## எண்பத்தைந்தாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தவர்ணனம்.)

பலசாலியான அந்தத்தனஞ்சயன் அம்புகளால் அடிக்கப்பட்டவனுகிக் காலால்மிதிக்கப்பட்ட ஸர்ப்பம்போலப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு யுத்தத்தில் மஹாரதர்களுடையபாணங்களைப் பாணத்தால் பலாத்காரமாகத் துண்டாக்கி அவர்களுடையவிற்களையும் வெட்டியெறிந்தான். மஹாத்மாவான அர்ஜுனன் அவர்கள் மிகுதியில்லாமல் நாசமடையவேண்டுமென்றெண்ணி யுத்தத்தில் வீர்யமுடையவர்களான அந்த அரசர்களுடைய அப்படிப்பட்டவிற்களை ஒருக்ஷணத்தில் துண்டித்துச் சரங்களால் (அவர்களனைவரையும்) ஒரேஸமயத்தில் அடித்தான். இந்திரபுத்ரனுலே யுத்தத்தில் அடிக்கப்படும் அந்த அரசர்கள் ரக்தத்தினுல்நன்குபூசப்பட்டும் சரீரம்பிளக்கப்பட்டும் தலைகள்கீழே வீழ்த்தப்பட்டும் கவசங்களும் சரீரங்களும் அறுக்கப்பட்டும் உயிரையிழந்து விழுந்தார்கள். பார்த்தனுடையபலத்தினுலே அவமதிக்கப்பட்டவர்களும் விசித்திரரூபமுள்ளவர்களுமான மன்னர்கள் பூமியை அடைந்தவர்களாக ஒரேஸமயத்தில் நாசமடைந்தார்கள். போரில் கொல்லப்பட்ட அந்தராஜபுத்திரர்களைக்கண்டு திரிகர்த்தராஜன் ரதத்தோடு விரைவாகச்சென்றுன். பிறகு, அந்தரதிகர்களுடைய பின்புறத்தைப் பாதுகாக்கின்ற வேறுமுப்பத்திரண்டுவேந்தர்கள் பார்த்தனையெதிர்த்துவந்து அவனைச்சூழ்ந்துகொண்டு, பெரியசப்தத்துடன் கூடினவிற்களை நாணெலியிடும்படிசெய்து, மேகங்கள் நீர்த்தாரைகளை மலையில்பொழிவதுபோல அம்புமயமானபெருமழையைப் பார்த்தன் மீது பொழிந்தார்கள். தனஞ்சயன் சரக்கூட்டங்களின்மாரியால் நன்குபீடிக்கப்பட்டுக் கோபங்கொண்டு எண்ணெயிட்டுத்தீட்டப்பட்ட அறுபதுபாணங்களாலே அந்தப் பின்புறம்காக்கின்ற வீரர்களையும் கொன்றுன். கீர்த்திமானுன அர்ஜுனன் யுத்தரங்கத்தில் அந்தரதிகர்களைஜயித்து மனக்களிப்படைந்தான். பிறகு, அர்ஜுனன் சேனைகளை நாசம்செய்துவிட்டுப் பீஷ்மரைக்கொல்லச்சென்றுன். திரிகர்த்தராஜன் மஹாபலசாலியான அர்ஜுனனுலே அவர்கள் கொல்லப்பட்டதைக் கண்டு யுத்தத்தில் அந்தஅரசர்களைமுன்னிட்டுக்கொண்டு பார்த்தனைக் கொல்வதின்பொருட்டு விரைவாகச்சென்றுன். அஸ்திரதாரிகளுட் சிறந்தஅர்ஜுனன் ஸுசர்மாவினுல் எதிர்க்கப்பட்டதைக்கண்டு, சிகண்

டியைமுதன்மையாகக்கொண்ட அந்தவீரர்கள் கூர்மையான ஆயுதங்க ளைக்கையில்கொண்டு அர்ஜுனனுடையரதத்தைக்காக்கக்கருதி அதனை நோக்கி வந்துசேர்ந்தார்கள். வில்லாளியானபார்த்தனும் திரிகர்த்த ராஜனோடுகூடிய அந்தவீரபுருஷர்கள் தன்னையெதிர்த்துவருவதுகண்டு காண்டீவத்தினின்றுவிடுபடும் கூர்மையானபாணங்களாலே யுத்தத்தில் அவர்களை நாசஞ்செய்து பீஷ்மரைநோக்கிச்செல்லஎண்ணித் துரியோ தனனையும் ஸைந்தவன்முதலான அரசர்களையும் பார்த்தான். வீர னும் முடிவற்றவீர்யமுடையவனும் பெரியபிரதாபமுள்ளவனும் பயங் கரமானபலமுள்ளவனும் உதாரமனமுள்ளவனும் அம்புகளையும் வில் லையும் கையில்கொண்டவனுமான தனஞ்சயன் நன்ருக எதிர்க்கின்ற வீரர்களை நாலாபக்கத்திலும்தடுத்துப் பலத்தோடு ஒருமுகூர்த்தகாலம் யுத்தம்செய்து துரியோதனராஜனையும் ஜயத்ரதன்முதலான அரசர் களையும் விட்டுவிட்டுப் பிறகு கங்காபுத்திரரானபீஷ்மரைநோக்கிச் சென்ருன். அந்தப்பீஷ்மரும் யுத்தத்தில் அஸ்த்ரங்களில் நல்லபயிற் சியுள்ளவர்களும் (பலத்தினுல்) மிக்கமேன்மைபெற்றவர்களுமான பாண்டவசேனையிலுள்ளரதிகர்களைக்கண்டு யுத்தமுனையில் (அவர்களை) விட்டுவிட்டுப் பிருதையின்புத்திரனுன அர்ஜுனனையே வேகத்தோடு மறுபடியும் எதிர்த்துவந்தனர். அதிகபலசாலியும் மஹாத்மாவும் முடி வற்ற கீர்த்திபெற்றவருமான யுதிஷ்டிரரும் கோபமுண்டவராக விரை வுடனே யுத்தத்தில் தமக்குப்பாகமாகக்கிடைத்திருக்கின்ற மத்ரராஜ னுன சல்யனைவிட்டுவிட்டு மாத்ரிபுத்திரர்களோடும் பீமனோடும்சேர்ந்து யுத்தம்செய்வதின்பொருட்டுச் சந்தனுபுத்திரரானபீஷ்மரை அடைந் தார். பற்பலவிதமாகயுத்தம்செய்யும்ஸாமர்த்தியமுடையவரும் மஹாத் மாவும் கங்காபுத்திரரும் சந்தனுகுமாரருமான அந்தப்பீஷ்மர் மஹாரதி கர்களுட்சிறந்த பாண்டுபுத்திரர்களனைவராலும், ஒன்றுசேர்ந்து (ஆயு தங்களைப்) பிரயோகித்தும் (சிறிதும்)துன்பமுறும்படி செய்யப்படவி ல்லை. பிறகு ஸத்தியஸந்தனும் அத்யுக்கிரமானபலமுடையவனும் நல்ல மனமுள்ளவனும் அரசனுமானஜயத்ரதன் யுத்தத்தில் (சத்துருக்களி டம்)வந்து அந்தமஹாரதர்களுடையவிற்களைத் தன்னுடையசிறந்தவில் லினுல் பலாத்காரமாக அறுத்தான். யுத்தத்தில் கோபங்கொண்டவனும் கோபமாகிறவிஷமுள்ளவனும் மிக்கஉறுதியுள்ளவனுமான துரியோத னன் நெருப்புப்போலப்பிரகாசிக்கின்ற அம்புகளாலே யுதிஷ்டிரரையும் பீமஸேனனையும் நகுலஸஹதேவர்களையும் அர்ஜுனனையும் மாதவனை யும் அடித்தான். மிகவும் விருத்தியடைந்திருக்கின்ற கோபத்தை யுடையவைகளும் ஒன்றுசேர்ந்தவைகளுமான அஸுரக்கூட்டங்களா

லே தேவர்கள் எவ்வாறு அடிக்கப்பட்டார்களோ அவ்வாறே கிருபாரா லும் சல்யனாலும் சலனாலும் அங்ஙனமே சித்திரஸேனனாலும் யுத்தத் தில் அம்புகளால் அவர்களடிக்கப்பட்டார்கள். கோபமூண்ட மஹாத் மாவான யுதிஷ்டிரராஜர், பீஷ்மரால் யுத்தத்தில் சிகண்டியினுடைய ஆயுதங்கள் அறுக்கப்பட்டதுகண்டு அவனைப்பார்த்துக் கோபத்துடன் கூறலானார்.

'சிகண்டியே! 'நிர்மலமான சூரியனுடையவர்ணம்போன்றவர்ண முடைய பாணஸமூகங்களாலே மஹாவிரதத்துடன்கூடின அந்தப்பீஷ் மரை நான் கொல்லுவேன். ஸத்யமாகச்சொல்லுகிறேன்' என்று நீ உன்பிதாவுக்கு முன்னிலையில் என்னைப்பார்த்துச் சொல்லிப் பிரதி ஜ்ஞைசெய்தாய். நீ பீஷ்மரைக்கொல்லாமையால் அவ்விதமான பிரதி ஜ்ஞையைப் பயனுள்ளதாகச்செய்யவில்லை. வீர! நீ இந்தயுத்தத்தில் வீண் பிரதிஜ்ஞையைச்செய்தவனாகாதே. உனக்குரிய தர்மத்தையும் குலத்தையும் கீர்த்தியையும் காப்பாற்றிக்கொள். பயங்கரமானவேக முள்ளவரும் அதியுக்கிரமானவேகமுள்ள பாணஸமூகங்களாலே என் னுடையசேனைக்கூட்டமனைத்தையும் ஒருக்ஷணத்தில்தவிக்கச்செய்கின் றவரும் காலத்தால்ஏற்படுத்தப்பட்ட காலன்போன்றவருமான பீஷ்ம ரைப் பார். அறுக்கப்பட்டவில்லையுடையவனும் யுத்தத்தில் விருப்ப மில்லாதவனும் யுத்தத்தில் சந்தனுபுத்திரரான பீஷ்மரால்தோல்விய டைவிக்கப்பட்டவனுமாகிப் பந்துக்களையும் ஸஹோதரர்களையுமிழந்து நீ எவ்விடம் செல்லப்போகிறாய்? இவ்வண்ணமிருப்பது உனக்குத்த காது. துருபதகுமார! முடிவற்றவீர்யத்துடன்கூடின அந்தப்பீஷ்மரை யும் முறியஅடிக்கப்பட்டு இவ்வாறுகஓடுகின்ற சேனையையும்பார்த்து நிச்சயமாக நீ பயந்துகொண்டிருக்கிறாய். அதனால் உன்முகத்தினு டைய தேஜஸ் சந்தோஷமின்மையைக் காட்டுகிறது. வீர! நன்றாகத் தொடங்கப்பட்டிருக்கிற மஹாயுத்தத்தில் வீரபுருஷனானதனஞ்சயன் பின்புறத்தில்நிற்குங்கால் பூமியில் பீஷ்மரைக்காட்டிலும் பிரஸித்திபெ ற்றவனானநீ எப்படி பயத்தை இப்பொழுது பாராட்டலாம்?' என்றார். மஹாபலசாலியான அந்தச்சிகண்டியானவன் கொடுமையானதும் பிரதிஜ்ஞைதவறியதைத் தெரிவிப்பதுமான தர்மராஜருடையவார்த் தையைக்கேட்டு நிந்தையைநினைந்து பீஷ்மருடையவதத்தின்பொரு ட்டு மிகவிரைந்தான். அதிகமானவேகத்துடனே பீஷ்மரைநோக்கி வருகின்ற அந்தச்சிகண்டியைச் சல்யன் கோரமானதும் எவ்விதத்தா லும்ஜயிக்கமுடியாததுமான அஸ்திரத்தினாலே தடுத்தான். மஹேந் திரனுக்கொப்பான பிரபாவத்தையுடைய அந்தத்துருபதகுமாரனும்

நன்றாகப்பிரயோகிக்கப்பட்டதும் ஊழித்தீப்போன்ற ஒளியுள்ளதுமான அஸ்திரத்தைக்கண்டும் புத்திமயக்கத்தையடையாமல் பெரியவில்லைக் கையிற்பிடித்து அம்புகளாலே அந்த அஸ்திரத்தைத்தடுத்துக்கொண்டு அவ்விடத்திலேயேநின்றான்; பிறகு சிகண்டி அந்தஅஸ்திரத்தைத் தடுக்கக்கூடியதும் உக்கிரமுமான வேறொரு வாருணாஸ்திரத்தை எடுத்தான். வாருணாஸ்திரத்தினால் பிளக்கப்படும் அந்தஆக்னேயாஸ்திரத்தை ஆகாயத்திலிருக்கின்றதேவர்களும் அரசர்களும் கண்டார்கள். மஹாத்மாவும் வீரருமானபீஷ்மரோ அஜமீடனுடையகுலத்தில்தோன்றியவரும் பாண்டுகுமாரருமான யுதிஷ்டிரராஜருடைய ஆச்சரியகரமான வில்லையுங்கொடியையும்அறுத்து ஸிம்மநாதம்செய்தார். பிறகு யுதிஷ்டிரர் பயமடைந்திருப்பதைக்கண்டு பீமஸேனன் பாணத்துடன்கூடின வில்லைப்போட்டுவிட்டுக் கதையைக்கையிலெடுத்துக்கொண்டு ஜயத்ரதனைக்குறித்து யுத்தரங்கத்தில் காலால்நடந்தே எதிர்த்துச்சென்றான். வேகத்துடன் வருகின்றவனும் கதையைஏந்தியவனுமான அந்தப் பீமஸேனனை ஜயத்ரதன் கோரமானவைகளும் யமதண்டம்போன்றவைகளுமான கூர்மையான ஐந்நூறுபாணங்களாலே எல்லாப்பக்கங்களிலும் அடித்தான். பலமுள்ளவனும் குரோதத்தால் மூடப்பட்ட மனமுள்ளவனுமான அந்தப்பீமஸேனன் பாணங்களைக்கவனியாமல் (பலத்தில்) நன்றாகஅலப்புக்கொள்ளப்பட்டிருக்கிற ஸிந்துராஜனுடைய குதிரைகளை யுத்தத்தில் நாற்புறங்களிலும்அடித்தான். பிறகு, நிகரில்லாத பிரபாவத்தையுடையவனும் தேவராஜன்போன்றவனுமான உம்முடையகுமாரன், பீமஸேனனைப்பார்த்து அவனைக்கொல்வதின் பொருட்டு அஸ்திரத்தைக்கையில்எடுத்து ரதத்துடன் விரைவாக எதிர்த்துவந்தான். ஜயத்ரதன் பீமனிடத்தினின்றுண்டானபயத்தினால் மயக்கமுற்ற மனமுள்ளவனாகி அங்கு யுத்தம்செய்வதினின்று பயந்து குதிரைகள் நாசம்செய்யப்பட்ட அந்தரதத்தைவிட்டுவிட்டுச் சகுனியுடன் குருராஜனிருக்குமிடம்சென்றான். பிறகு, பீமனும் விரைவாகஸிம்மநாதம்செய்து ஜயத்ரதனைவெருட்டிக் கதாயுதத்துடன் எதிர்த்தான். பீமனாலே யமதண்டம்போன்ற அந்தக்கதாயுதம் தூக்கப்பட்டதுகண்டு நாற்புறத்திலுமுள்ள அந்தக்கௌரவர்களனைவரும் நெருங்கியதும் நன்றாகஅடிப்பதும் அதிபயங்கரமானதும் புத்திமயக்கத்தையுண்டுபண்ணக்கூடியதுமான அந்தயுத்தத்தில் கதாயுதத்தினுடைய உக்கிரமானவீழ்ச்சியை விலக்கிக்கொள்ளஎண்ணி உமது புத்திரனைவிட்டு ஓடிவிட்டார்கள். பிறகு, மயங்காதமனமுள்ள சித்ரஸேனன் பெரியகதாயுதம் எதிரில்வருகின்றதைக்கண்டு யுத்தகளத்

தில் ரதத்தைவிட்டுவிட்டுக் காலாளாகவே கத்தியையும் பெரிதான கேடகத்தையுங்கையில்கொண்டு மலையினுடையநுனியினின்று குதிக்கின்றஸிம்மம்போலத் துள்ளி வேறோரிடத்தை அடைந்தான். அந்தக்கதாயுதமும் யுத்தத்தில் மிக்கஆச்சரியகரமாயுள்ள ரதத்தையடைந்து குதிரைகளையும் ஸாரதியையுமுடைய அந்தரதத்தைநாசம்செய்து ஜ்வலிக்கின்றபெரியஎரிநக்ஷத்திரம் ஆகாயத்தினின்றுநழுவிப் பூமியில் விழுவதுபோலப் பூமியில்விழுந்தது. மிக்கபெரிய ஆச்சரியகரமாயுள்ள உமதுபுத்திரனுடைய அவ்விதசௌர்யத்தைக்கண்டு உம்மைச்சேர்ந்தவர்களனைவரும் மிகுந்தஸந்தோஷமடைந்து ஸிம்மநாதம்செய்தார்கள். நாலுபக்கங்களிலும் ஒன்றுகூடிப் புகழவும்புகழ்ந்தார்கள்.

---

## எண்பத்தாறுவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தவர்ணனம்.)

ரதத்தையிழந்தவனும் கீர்த்திசாலியுமான அந்தச் சித்ரஸேனனை உமதுபுத்திரனானவிகர்ணன் தன்ரதத்தில் ஏற்றிவைத்துக்கொண்டான். கைகலந்த அந்தஸங்குலயுத்தம் அவ்வாறுநடந்துவருமளவில், சந்தனுபுத்திரரானபீஷ்மர் விரைவாக யுதிஷ்டிரரைஎதிர்த்து ஸமீபத்தில்நெருங்கினர். பிறகு, ரதங்களோடும் யானைகளோடும் குதிரைகளோடுங்கூடின ஸ்ருஞ்சயர்கள் மிக்கநடுக்கமுற்றார்கள்; யுதிஷ்டிரரை மிருத்யுவினுடையவாயைஅடைந்தவரென்றும் எண்ணினர்கள். குருவம்சத்திலுதித்தவரும் பிரபுவுமானயுதிஷ்டிரரும் நகுலஸஹதேவர்களோடு பெரியவில்லைக்கையிற்கொண்டவரும் புருஷசிரேஷ்டரும் சந்தனுபுத்திரருமானபீஷ்மரைக்குறித்துச் சென்றார். பிறகு பாண்டவர் யுத்தத்தில் ஆயிரம்பாணங்களை நன்குதொடுத்துக்கொண்டு மேகம் சூரியனைமூடுவதுபோலப் பீஷ்மரை நன்றாகமூடினர். அந்த யுதிஷ்டிரரால் நூறுநூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும் நன்குதொடுக்கப்படும்அம்புத்திரள்களைப் பீஷ்மர் ஏற்றுக்கொண்டார். பீஷ்மரால் விடப்படும்அம்புத்திரள்கள் ஆகாயத்தில் பக்ஷிகளுடையகூட்டங்கள் போலக் காணப்பட்டன. யுத்தத்தில் சந்தனுபுத்திரரானபீஷ்மர் அரைநிமிஷத்திற்குள் குந்தீபுத்திரரைப் பாணஸமூஹத்தால் கண்ணிற்குப் புலப்படாதபடிசெய்தார். பிறகு ராஜாவானயுதிஷ்டிரர் கோபங்கொண்டு மஹாபலசாலியானபீஷ்மர்மீது ஸர்ப்பத்திற்குஒப்

பானஒருநாராசத்தைப் பிரயோகித்தார். யுத்தத்தில் அவருடையவில்லி னின்றுவிடுபட்ட அந்தநாராசமானது தம்மை வந்து நாடுவதற்குள், மகாரதரானபீஷ்மர் அதனை ஒருக்ஷுரப்ரத்தினால் துண்டாக்கினர். பீஷ்மர் ரணகளத்தில் காலனுக்குஒப்பானஅந்தநாராசத்தைஅறுத்துக் கௌரவேந்திரரான யுதிஷ்டிரருடைய பொன்னணிகள்பூண்ட குதி ரைகளையுங்கொன்றார். தர்மராஜனுடையபுத்திரரான யுதிஷ்டிரர் குதி ரைகள்கொல்லப்பட்ட ரதத்தைவிட்டு மஹாபலசாலியான நகுல னுடையரதத்தில் விரைவாக ஏறிக்கொண்டார். சத்துருபட்டணங் களைஜயிக்கின்றபீஷ்மர் மிகுந்தகோபமுண்டு யுத்தத்தில் அப்பொழுது நகுலஸஹதேவர்களைநாடி அவர்களைஅம்புகளால் மூடினர். பீஷ்மரு டையபாணத்தால் அவ்விருவரும் மிகப்பீடிக்கப்பட்டதுகண்டு தர்ம ராஜர் பீஷ்மரைக்கொல்லவேண்டுமென்கிறஎண்ணத்தால் அதிககவலை யுற்றார். பிறகு யுதிஷ்டிரர் தமக்குவிதேயர்களான அந்தஅரசர்களை யும் ஸ்நேகிதர்களுடையகூட்டங்களையும் பார்த்து, 'சந்தனுபுத்திரரான பீஷ்மரை நீங்களனைவரும் கொல்லுங்கள்' என்று ஏவினர். பிறகு, அந்தஅரசரனைவரும் பார்த்தருடையவார்த்தையைக்கேட்டுப் பெரிய தேர்க்கூட்டத்தோடு பிதாமஹரைச் சூழ்ந்துகொண்டார்கள். உம்மு டையபிதாவானதேவவிரதர் (வீரர்களால்) நான்குபக்கங்களிலும் சூழப்பட்டவராகத் தனுவினால் மகாரதர்களைத்தள்ளி விளையாடினர். காட்டில் மிருகங்களினுடையமத்தியத்தில் பிரவேசித்துச் சிங்கக்குட்டி எவ்வாறுஸஞ்சரிக்குமோ அவ்வாறு யுத்தத்தில்ஸஞ்சரித்துக்கொண்டி ருக்கிற அந்தப்பீஷ்மரைப் பார்த்தர்கள் பார்த்தார்கள். யுத்தத்தில் வீரர்களை அதட்டுகின்றவரும் அம்புகளால் பயப்படுத்துகின்றவரு மான பீஷ்மரைக்கண்டு ஸிம்மத்தைக்கண்ட மான்கூட்டங்கள்போல எல்லோரும் நடுங்கினர்கள். பாரதரே! உலர்ந்தகாட்டைக்கொளுத்த விருப்பமுள்ளதும் காற்றுடன்கூடினதுமான நெருப்பினுடையகதி எவ்விதமோ அவ்விதம் பரதசிரேஷ்டரான பீஷ்மருடையகதியை யுத்தத்தில் க்ஷத்திரியர்கள் கண்டார்கள். பீஷ்மர் யுத்தத்தில் தேர் வீரர்களுடையதலைகளை, பக்குவமான பனம்பழங்களை ஸமர்த்தனை ஒருமனிதன் பனைமரங்களினின்று அடித்துத்தள்ளுவதுபோல அடித் துத்தள்ளினர். விழுகின்றகற்களுடைய சப்தம்போலப் பூதலத்தில் விழுகின்றதலைகளாலே நெருங்கினசப்தமானது உண்டாயிற்று. அவ் வாறு மிக்கநெருக்கமுற்றதும் பயங்கரமுமான அந்தயுத்தம் நடக்கை யில் எல்லாஸைனிகர்களுக்குமே பெரிதானகைகலந்தயுத்தம் நடந்தது. அந்தவ்யூஹங்கள் உடைந்திருக்கையில் க்ஷத்திரியர்கள் பரஸ்பரம்

யுத்தத்துக்காக ஒருவரையொருவர் அழைத்துக்கொண்டு நின்றார்கள். சிகண்டியோ பாரதகுலத்தில்பிறந்தவர்களுக்குப் பிதாமஹரானபீஷ்மரை வேகத்தோடு எதிர்த்து ஓடிவந்து, 'நில்லும், நில்லும்' என்று சொன்னான். பிறகு, பீஷ்மர் யுத்தத்தில் அந்தச்சிகண்டியை அலக்ஷ்யம் செய்து அவனுடையஸ்திரீத்தன்மையை நினைந்து ஸ்ருஞ்சயர்களை நோக்கிக் கோபங்கொண்டுசென்றார். ஸ்ருஞ்சயர்களோ பிறகு மஹாயுத்தத்தில் ஸந்தோஷமுள்ளவரான பீஷ்மரைக்கண்டு சங்கத்வனிகளையும் பற்பலஸிம்மநாதங்களையும் செய்தார்கள். சூரியன் மேற்குத்திசையைநாடிஇருக்கவே, பிறகு ஒன்றோடொன்று எதிர்த்துத்தாக்குகின்ற ரதங்களோடும் யானைகளோடுங்கூடினபோர் தொடங்கியது. பிறகு பாஞ்சாலகுமாரனான திருஷ்டத்யும்னனும் மஹாரதனானஸாத்யகியும் சக்திகள் தோமரங்களுடையவர்ஷங்களால் சத்துருஸைன்யத்தை அதிகமாகத்துன்பமடையச்செய்து யுத்தத்தில் உம்மைச்சேர்ந்தவர்களை அனேகசஸ்திரங்களால் அடித்தார்கள். யுத்தத்தில் அடிக்கப்படுகின்ற உம்மைச்சேர்ந்தவர்களான அந்தவீரர்கள்யுத்தத்தில் உத்தமமானபுத்தியைச்செலுத்தி யுத்தத்தைவிட்டுவிலகவில்லை. உம்மைச்சேர்ந்தவர்கள் யுத்தத்தில் உத்ஸாஹத்திற்குத்தக்கபடி (பகைவர்களைக்)கொன்றார்கள். மஹாத்மாவானத்ருஷ்டத்யும்னனாலே யுத்தத்தில் அடிக்கப்படுகின்ற மஹாபலசாலிகளான உம்மைச்சேர்ந்த யுத்தவீரர்களுக்கு அந்தக்ஷணத்தில் பெரிதானயுத்தம்நடந்தது. உம்மைச்சேர்ந்தவீரர்களுடைய கோரமான அந்தத்வனியைக்கேட்டு மஹாரதர்களும் அவந்திதேசத்தரசர்களுமான விந்தானுவிந்தர்கள் த்ருஷ்டத்யும்னனை எதிர்த்துவந்தார்கள். மஹாரதர்களான அவ்விருவரும் விரைவுடன் அவனுடைய குதிரைகளைக்கொன்று சரமாரியினால் அவனை மூடினார்கள். பிறகு, மஹாபலசாலியான த்ருஷ்டத்யும்னன் ரதத்தினின்று வேகமாகத் துள்ளிக்குதித்து மகாத்மாவானஸாத்யகியினுடையரதத்தில் விரைவாக ஏறினான். பிறகு, யுதிஷ்டிரராஜர் பெரியசேனையினால்சூழப்பட்டுச் சத்துருக்களைத் தபிக்கச்செய்கின்றவர்களும் கோபங்கொண்டவர்களுமான அவந்திதேசத்தரசர்களானவிந்தானுவிந்தர்களை யுத்தத்தில்எதிர்த்தார். அவ்வாறே உம்முடையபுத்திரனும் எல்லாவிதமான முயற்சியோடும் விந்தானுவிந்தர்களை யுத்தத்தில் சூழ்ந்துநின்றான். க்ஷத்திரியர்களுள் சிரேஷ்டனான அர்ஜுனனும் கோபங்கொண்டவனாகி யுத்தத்தில் வஜ்ராயுதத்தைக்கையிற்கொண்ட இந்திரனானவன் அஸுரர்களோடுபோர்புரிந்ததுபோல க்ஷத்திரியர்களோடு போர்புரிந்தான். உம்முடைய புத்திரனுக்குப் பிரியத்தைச்செய்கின்ற துரோணரோ யுத்தத்தில்

கோபங்கொண்டு நெருப்பானது பஞ்சுக்குவியலையெரிப்பதுபோல எல்லாப்பாஞ்சாலர்களையும் எரித்தார். துர்யோதனனைத்தலைவனுகக்கொண்ட உம்முடையபுத்திரர்கள் ரணகளத்தில் பீஷ்மரைச்சூழ்ந்துகொண்டு பாண்டவர்களுடன் போர்புரிந்தார்கள். பிறகு துர்யோதனராஜன் சூரியன்செக்கிறமுடையவனுகையில் உம்மைச்சேர்ந்தவர்களனைவரையும்பார்த்து,'விரைவுசெய்யுங்கள்' என்றுசொன்னுன். அவர்கள் (ஒருவராலும்) செய்யமுடியாதகாரியத்தைச்செய்துகொண்டு அவ்வாறுபோர்புரியச் சூரியனும் அஸ்தகிரியையடைந்து பிரகாசியாமலிருக்க ஒருக்ஷணத்திற்குள் இரவின்தொடக்கத்தில் ரக்தவெள்ளங்களால் அலைமோதுகின்றதும் நரிக்கூட்டங்களால் சூழப்பட்டிருப்பதுமான கோரமான நதியானது பெருகஆரம்பித்துவிட்டது. கோரமானஅந்தயுத்தமானது அமங்களகரமானகுள்ளநரிகளாலும் பயங்கரமானசப்தத்தை வெளியிடுகின்றபூதங்களுடையகூட்டங்களாலும் நெருங்கியதாயிற்று. ராக்ஷஸர்களும் பிசாசங்களும் மாம்ஸங்களைப்புஜிக்கின்ற மற்ற ஜந்துக்களும் நூறுநூருகவும் ஆயிரமாயிரமாகவும் எல்லாப்பக்கங்களிலும் காணப்பட்டன. பிறகு, அர்ஜுனன் காலாட்படைகளையுடைய ஸுசர்மாவை முதன்மையாகக்கொண்ட அந்தஅரசர்களை ஸேனுமத்தியத்தில் ஜயித்துத் தன்சேனை தங்கியிருக்குமிடத்தைக்குறித்துச் சென்றுன். அவ்வாறே குருகுலத்தில்பிறந்தயுதிஷ்டிரராஜரும் இரண்டு ஸஹோதரர்களுடன் இரவில் சேனையினுல்சூழப்பட்டுத் தம்சேனை தங்கியிருக்குமிடம் சென்றுர். பீமஸேனனும் துர்யோதனனைமுதன்மையாகக்கொண்ட ரதிகர்களை யுத்தத்தில்ஜயித்துப் பிறகு தன்ஸேனை தங்கியிருக்குமிடத்தைக்குறித்துச் சென்றுன். துர்யோதனராஜனும் மஹாயுத்தத்தில் சந்தனுபுத்ரரான பீஷ்மரைச்சூழ்ந்துகொண்டு விரைவாகத் தன்சேனைதங்கியிருக்குமிடத்தைக்குறித்துச் சென்றுன். துரோணர், துரோணபுத்திரர், கிருபர், சல்யன், ஸாத்வதனுனக்ருதவர்மா இவர்கள் எல்லாஸைன்யத்தையும் நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு படைவீட்டுக்குப்போய்ச்சேர்ந்தார்கள். அவ்வாறே ஸாத்யகியும் பார்ஷதனுனத்ருஷ்டத்யும்னனும் யுத்தத்தில் போர்வீரர்களைச் சூழ்ந்துகொண்டு தங்களுடையபடைவீட்டை நாடினுர்கள். இராக்காலத்தில் இவ்வாறு ஒன்றுகூடியிருக்கின்ற உம்மைச்சேர்ந்தவர்களான இந்தவீரர்களும் பாண்டவர்களும் (தங்கள்தங்களுடைய படைவீடுகளைநோக்கிச்)சென்றனர். பிறகு, பாண்டவர்களும் அவ்வாறே கௌரவர்களும் தத்தம்பாசறையை அடைந்து ஒருவரைஒருவர் உபசரித்துக்கொண்டு வஸித்தார்கள். பிறகு புகழ்பெற்றசூரர்கள் எல்லோரும்

சேனைகளுக்குப்பாதுகாவலை ஏற்படுத்திச் சாஸ்திரங்களில்சொல்லியபடி காவற்படைகளை அமைத்து உடலில்தைத்திருக்கும் ஆயுதங்களைப் பிடுங்கிப் பற்பலஜலங்களால் ஸ்நானம்செய்து மங்களாசீர்வசனங்கள் செய்யப்பெற்றும் வந்திகளால்ஸ்தோத்திரம்பண்ணப்பட்டும் ஸங்கீதத்வனியோடும் நான்குவிதவாத்யகோஷத்தோடும் உல்லாஸமாகப் பொழுதுபோக்கினார்கள். ஒருமுகூர்த்தகாலம் அதுமுழுவதும் ஸ்வர்க்கத்திற்கொப்பாகஇருந்தது. மஹாரதர்கள் அவ்விடத்தில் யுத்தவிஷயமானவார்த்தைஒன்றையும் பேசவில்லை. அவ்விடத்தில் களைத்திருக்கின்றஜனங்களோடுகூடியவைவயும் யானைகளாலும் குதிரைகளாலும்நெருங்கியவைவயும் நன்றாகஉறங்குகின்றவையுமான அந்தஇருதிறத்துச்சேனைகளும் இராக்காலத்தில் பார்ப்பதற்கு ரமணீயமாயிருந்தன.

ஏழாவது நாள் யுத்தம் முடிந்தது.

---

## எண்பத்தேழாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(இரண்டுசேனைகளும் அணிவகுத்து எதிர்த்தது.)

வேந்தரே! அரசர்களும் கௌரவர்களும் பாண்டவர்களும் ஸுகமாகநித்திரைசெய்து அன்றிரவுசென்றதும் மீண்டும் யுத்தத்திற்காகப் புறப்பட்டார்கள். பிறகு, யுத்தத்திற்காகப்புறப்படுகின்ற அந்த இரண்டுசேனைகளிலும், கரைகடந்துபொங்கிவருகிற இரண்டுகடல்களில் ஒலிஉண்டாவதுபோலப் பேரொலியுண்டாயிற்று. பிறகு, துர்யோதனராஜன், சித்ரஸேனன், விவிம்சதி, ரதிகர்களுள்சிரேஷ்டரானபீஷ்மர், பிராம்மணரானபாரத்வாஜர்இவர்கள் ஒன்றுசேர்ந்து மிகுந்தமுயற்சியுள்ளவர்களாகிக் கவசம்பூண்டவர்களான பாண்டவர்களைநோக்கிக் கௌரவர்களுடையபெரும்படையை அணிவகுப்பதின்பொருட்டு (தகுந்தஒழுங்குகளைச்)செய்தனர். பிறகு உமதுபிதாவும் சந்தனுகுமாரருமானபீஷ்மர் கடல்போலப் பயங்கரமானதும் அதன்அலைகளும் வேகமும்போன்றகுதிரைகளையும் யானைகளையுமுடையதுமான கூர்மவ்யூஹத்தை ஏற்படுத்தி மாளவர்களோடும் தென்னாட்டரசர்களோடும் அவந்திதேசத்துவீரர்களோடும் எல்லாஸைனியத்திற்கும் முன்னிலையில்சென்றார். பிறகு பிரதாபசாலியானபாரத்வாஜர் புளிந்தர்களோ

டும் [1] பாரதர்களோடும் க்ஷுத்ரகமாலவர்களோடும் அந்தப்பீஷ்மரை அடுத்துநின்றார். பிரதாபமுடையவனானபகதத்தன் மகதர்களோடும் களிங்கர்களோடும் [2] பிசாசர்களோடுங்கூடி மிகுந்தமுயற்சியுடன் துரோணரையடுத்துநின்றான். பிறகு கோஸலதேசாதிபதியானபிருஹத்பலன் மேகலர்களோடும் குருவிந்தர்களோடும் திரிபுரவாஸிகளான வீரர்களோடும் பிராக்ஜ்யோதிஷதேசாதிபனையடுத்துநின்றான். பிரஸ்தலதேசாதிபதியானதிரிகர்த்தராஜன் அனேககாம்போஜர்களோடும் ஆயிரக்கணக்கானயவனர்களோடும் பிருகத்பலனையடுத்துநின்றான். சூரரும் அதிவேகமுடையவருமான துரோணபுத்திரரோ ஸிம்மநாதத்தினாலே பூமியை எதிரொலியிடும்படிசெய்துகொண்டு திரிகர்த்தராஜனை அனுஸரித்துச்சென்றார். அவ்வாறே துர்யோதனராஜன் அப்பொழுது தம்பிமார்களால்சூழப்பட்டு எல்லாச்சேனையுடனுங்கூடித் துரோணபுத்திரரை அடுத்துச்சென்றான். பிறகு சரத்வானுடைய குமாரரானகிருபாசாரியரும் துரியோதனனையனுஸரித்துச் சென்றார். இவ்வாறு இந்தமஹாவ்யூஹமானது கடல்போலச்சென்றது. அதில் கொடிகளும் வெண்குடைகளும் விசித்திரமானதோள்வளைகளும் சிறந்தவிற்களும் விளங்கின. மஹாரதரானயுதிஷ்டிரர் உம்மைச்சேர்ந்த வீரர்களுடைய அந்தமஹாவ்யூஹத்தைப்பார்த்துச் சேனாபதியான பார்ஷதனைக்குறித்து, 'மஹாவில்லாளியே! மஹாரத! சூரனே! ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள ஸமுத்திரம்போன்ற ஸேனாவ்யூஹத்தைப்பார். சீக்கிரமாக யுத்தத்திற்காக எதிரணிவகுக்கவேண்டும்' என்று விரைவாகச்சொன்னார். பிறகு சூரனானஅந்தத்திருஷ்டத்யும்னன் சத்துருவ்யூகத்தை அழிக்கக்கூடியதிறமையுள்ளதும் மிக்கபயங்கரமுமான [3] சிருங்காடகம்என்ற வ்யூகத்தை ஏற்படுத்தினான். பீமஸேனனும் மஹாரதனானஸாத்யகியும் அனேகஆயிரக்கணக்கான தேர்களோடும் குதிரைகளோடும் காலாட்படைகளோடும் இரண்டுசிருங்கங்களிலும் நின்றார்கள். நரஸ்ரேஷ்டனும் கிருஷ்ணனைஸாரதியாகக்கொண்டவனுமான அர்ஜுனன் நாபிஸ்தானத்தில் நின்றான். யுதிஷ்டிரராஜரும் மாத்ரீபுத்திரர்களானபாண்டவர்களும் மத்தியில்நின்றார்கள். பெரிய வில்லைக்கையில்தாங்கினவர்களும் வ்யூஹசாஸ்திரத்தில்ஸமர்த்தர்களுமான மற்றஅரசர்கள் ஸைன்யங்களுடன்கூடியவர்களாக அந்தவ்யூகத்தை நிரப்பினார்கள். சூரர்களும் ஜயத்தில்விருப்பமுள்ளவர்களுமான பாண்டவர்கள் இவ்வாறு இந்தமஹாவ்யூகத்தைஏற்படுத்திக்கொண்டு

[1] இவர்கள் ஒருஜாதியார்; பரதவம்சத்தாரல்லர்.
[2] சிலதேசத்தவர். [3] நாற்சந்திவீதிபோன்றது.

யுத்தம்செய்யக்கருதி ரணகளத்தில் நின்றார்கள். ஸ்பஷ்டமாகக்கேட்கப்படுகின்ற பேரிகைமுழக்கங்களோடுகூடின சங்கத்வனிகளாலும் ஸிம்மநாதங்களாலும் தோள்தட்டுகிறத்வனிகளாலும் இரைந்தகூச்சல்களாலும் எல்லாப்பக்கங்களிலும் திசைகள் எதிரொலியிடும்படிசெய்யப்பட்டன. பிறகு, அந்தச்சூரர்கள் யுத்தத்தில் ஒருவரையொருவர் நாடி இமைகொட்டாமல் ஒருவரைஒருவர்பார்த்தார்கள். அந்தயுத்த வீரர்கள் மனத்தினாலேயே யுத்தம்செய்தார்கள். பிறகு அவர்கள் பரஸ்பரம்அழைத்துச் சரீரங்களாலும் போர்புரிந்தார்கள். பரஸ்பரம்வதம்செய்கின்றவர்களானஉம்மைச்சேர்ந்தவர்களுக்கும் சத்துரு வீரர்களுக்கும் கொடியபயங்கரமானயுத்தம் பிறகு நடந்தது. யுத்தத்தில் கூர்மையானநாராசங்கள், திறந்தவாயுடன்கூடியபயங்கரமான ஸர்ப்பங்கள்போலக் கூட்டங்கூட்டமாக வந்துவிழுந்தன. எண்ணெயிட்டுத்தீட்டப்பட்டவைகளும் பளபளப்புள்ளவைகளும் மிக்ககூர்மையுள்ளவைகளுமான சக்தியாயுதங்கள் மேகங்களிலிருந்துபிரகாசிக்கின்றமின்னல்கள்போலப் பிரகாசித்துக்கொண்டு விழுந்தன. நிர்மலமான பட்டங்களால்கட்டப்பட்டவைகளும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டவைகளும் அந்தயுத்தரங்கத்தில் விழுகின்றவைகளும் மங்களகரமானவைகளுமான கதாயுதங்கள் மலைகளின்கொடுமுடிகளுக்குஉவப்பாகக் காணப்பட்டன. நிர்மலமானஆகாயத்திற்குஉவப்பாயுள்ள நீண்டபட்டாக்கத்திகளும் (அங்கு) காணப்பட்டன. எருதுகளுடையதோல்களினால்செய்யப்பட்டவைகளும் அனேகசந்திரப்பிரதிமைகளுள்ளவைகளுமானகேடகங்களும் யுத்தரங்கத்தில் எல்லாப்பக்கங்களிலும் தள்ளப்பட்டவைகளாக விளங்கின. யுத்தரங்கத்தில் ஒன்றோடொன்று சண்டைசெய்கின்ற அந்தஇருசேனைகளும் யுத்தமுயற்சியுடன்கூடின தேவாஸுரசேனைகள்போல விளங்கின. அந்தக்கௌரவபாண்டவ வீரர்கள் யுத்தத்தில் நான்குபக்கத்திலும் அந்யோந்யம் எதிர்த்தார்கள். மஹாயுத்தத்தில் ரதங்கள் ரதிகர்களாலே விரைவாக ஓட்டப்பட்டன. ராஜசிரேஷ்டர்கள் (தத்தம்ரதங்களின்) நுகத்தடிகளால் (சத்துரு ரதங்களின்) நுகத்தடிகளை மோதும்படிசெய்துகொண்டு யுத்தம்செய்தார்கள். யுத்தம்செய்கின்றயானைகளினுடையதந்தங்களில் ஒன்றோடொன்றுஉரைவதினால் புகையுடன்கூடின்நெருப்பு எல்லாத்திக்குகளிலும் உண்டாயிற்று. ப்ராஸங்களாலடிக்கப்பட்டு நாற்புறங்களிலும் விழுகின்ற சிலயானைவீரர்கள் மலையுச்சியினின்றுகீழேவிழுகின்றமரங்கள்போலக் காணப்பட்டார்கள். காலாட்படைகளும் ஒன்றையொன்றெதிர்த்து ஹிம்ஸிக்கின்றவைகளாகக் காணப்பட்டன.

சித்திரரூபங்களைத்தரித்தவர்களும் சூரர்களும் நகங்களாலும் ஈட்டிகளாலும் போர்புரிகின்றவர்களுமான அந்தக்கௌரவபாண்டவஸைனிகர்கள் யுத்தத்தில் நன்றாகஎதிர்த்துத்தாக்கிக் கோரமான நானாவித அஸ்திரங்களால் பரஸ்பரம் யமனுடையவாஸஸ்தானத்தையடையும்படிசெய்தார்கள். பிறகு சந்தனுபுத்திரரானபீஷ்மர் ரதத்தினுடைய சப்தத்தினாலே (திக்குக்களை) எதிரொலியிடும்படிசெய்துகொண்டும் வில்லினுடையஓசையினால் பாண்டவர்களை மோகமடையச்செய்துகொண்டும் யுத்தரங்கத்தில் (பாண்டவவீரர்களை) எதிர்த்துவந்தார். திருஷ்டத்யும்னனை முதன்மையாகக்கொண்ட பாண்டவரதிகர்களும் பயங்கரமானசப்தத்தைவெளியிட்டுக்கொண்டு மூபற்சியுடன் சத்துருஸேனையை எதிர்த்தார்கள். பிறகு உம்முடையமனிதர்களுக்கும் அவர்களுடையமனிதர்களுக்கும் குதிரைகளுக்கும் ரதங்களுக்கும் யானைகளுக்கும் பரஸ்பரம் ஸங்குலமானயுத்தம் நடக்கஆரம்பித்தது.

---

## எண்பத்தேட்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(பீமஸேனன், ஸுநாபன்முதலான எண்மரைக்கொன்றது.)

யுத்தத்தில்கோபங்கொண்டு நான்குபக்கங்களிலும் தபிக்கச்செய்கின்றபீஷ்மரைப் பாண்டவர்கள் தபிக்கச்செய்கின்றசூரியனைப்போலப் பார்ப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். பிறகு எல்லாச்சேனைகளும் கூர்மையான அம்புகளாலே அடிக்கின்றபீஷ்மரைத் தர்மபுத்திருடைய ஆஜ்ஞையினாலே விரைவாகஎதிர்த்தன. யுத்தத்திலபுகழ்ச்சிபெற்ற அந்தப்பீஷ்மரோ ஸ்ருஞ்சயர்களோடுகூடினஸோமகர்களையும் சிறந்த வில்லாளிகளானபாஞ்சாலர்களையும் அம்புகளினால் அடித்துத்தள்ளினர். பீஷ்மராலேவதம்பண்ணப்படுகின்ற அந்தப்பாஞ்சாலர்கள் பாண்டவர்களோடுகூட மரணபயத்தைவிட்டு விரைவாகப் பீஷ்மரையே எதிர்த்தார்கள். வீரரும் சந்தனுபுத்திரருமான அந்தப்பீஷ்மர் யுத்தத்தில் அந்தரதிகர்களுடைய கைகளையுந்தலைகளையும் விரைவாக அறுத்தார். உம்முடையபிதாவானதேவவ்ரதர் ரதிகர்களை ரதத்தையிழந்தவர்களாகச் செய்தார். குதிரைவீரர்களுடையதலைகள் குதிரைகளின் மீதிருந்து கீழேவிழுந்தன. பீஷ்மருடையஅஸ்திரத்தினால்நாசம்பண்ணப்பட்டுப் பாகர்களையிழந்து பர்வதங்கள்போலவிழுந்திருக்கின்ற யானைகளைக் கண்டோம். பாண்டவர்களுள் மஹாபலசாலியும் ரதிகர்

களுள்சிறந்தவனுமானபீமஸேனனைத்தவிர வேறுஒருமனிதனுவது அந்தஇடத்தில்இருக்கவில்லை. அந்தப்பீமஸேனனே பீஷ்மரைஎதிர்த்து அவரைஅம்புகளால்மூடினன். பிறகு பீஷ்மருக்கும் பீமனுக்கும் யுத்தம்நேர்ந்திருக்கும்ஸமயத்தில் கோரமானதும் கோரரூபமுள்ளதும் பயங்கரமுமான எல்லாப்படைவீரர்களுடைய பேரொலியும் தோன்றியது. அவ்வாறே பாண்டவர்கள் மகிழ்ச்சியுடன் ஸிம்மநாதம்செய்தனர். பிறகு யுத்தத்தில் வீரர்கள்நாசமடையும்போது துர்யோதனராஜன் ஸஹோதரர்களால்சூழப்பட்டவனுகப் பீஷ்மரைப் பாதுகாத்தான். ரதிகர்களுள்சிறந்தவனுனபீமனே பீஷ்மருடையஸாரதியைக் கொன்ருன். அந்தப்பீஷ்மருடையரதமானது நாலுபக்கங்களிலும் செல்லும்குதிரைகளையுடையதாக ஓடிக்கொண்டிருக்கையில் ஸுநாபனுடையதலையை ஓரம்பினுலே சீக்கிரமாகத்துண்டாக்கினன். மிக்க கூர்மையுள்ளக்ஷுரப்ரமென்னும்பாணத்தினுலே அவன் அடிக்கப் பட்டுப் பூமியில் விழுந்தான். மஹாரதனுன உம்முடைய அந்தக்குமாரன் கொல்லப்படவே யுத்தத்தில்சூரர்களானஏழுஸஹோதரர்களும் யுத்தரங்கத்தில் பொறுக்கவில்லை. ஆச்சரியகரமானஸன்னுஹத்துடன் கூடியவர்களும் விசித்திரமான கவசமணிந்தவர்களும் த்வஜத்தையுடையவர்களும் யுத்தம்செய்வதில்விருப்பமுள்ளவர்களும் பகைவர்களை அடிக்கின்றவர்களுமான ஆதித்யகேது, பஹ்வாசி, குண்டதாரன், மஹோதரன், அபராஜிதன், பண்டிதகன், எவ்விதத்தாலும்ஜயிக்கமுடியாதவனுனவிசாலாக்ஷன் இந்தஏழுபேர்களும் யுத்தத்தில் பாண்டவனை எதிர்த்தோடிவந்தார்கள். மஹோதரனே விருத்திரசத்துருவான இந்திரன் நமுசியை எவ்வாறுஅடித்தானே அவ்வாறே வஜ்ராயுதம்போன்ற ஒன்பதுபாணங்களால் யுத்தத்தில் பீமனையடித்தான். ஆதித்யகேது, பஹ்வாசி, குண்டதாரன், விசாலாக்ஷன்ஆகியஇவர்கள் பீமனை முறையேஎழுபதுபாணங்களாலும் ஐந்துபாணங்களாலும் தொண்ணூறுபாணங்களாலும் ஐந்துபாணங்களாலும் அடித்தார்கள். மஹாராஜரே! பராஜயம்அடையும்படிசெய்கின்றவனுன அபராஜிதன் மஹாரதனும் மிக்கபலசாலியுமானபீமஸேனனை அனேகஅம்புகளாலே மூடினன். யுத்தத்தில் பண்டிதகனும் அந்தப்பீமன்மீது மூன்றுபாணங்களைப் பிரயோகித்தான். அந்தப்பீமன் ரணகளத்தில் சத்துருக்களால்உண்டு பண்ணப்பட்டஅந்தத்துன்பத்தைப் பொறுக்கவில்லை. பகைவர்களை அழிக்குந்திறமையுடையவனுனபீமன் இடக்கையினுல் வில்லைஅழுத்திப்பிடித்துக் கொஞ்சம்வளைந்திருக்கின்றகணுக்களுள்ள ஓரம்பினுலே யுத்தத்தில் உமதுகுமாரனுனஅபராஜிதனுடைய நல்லமூக்குடன்கூடிய

தலையை அறுத்தான். பீமனாலே அறுக்கப்பட்ட அபராஜிதனுடைய தலையானது பூமியில்விழுந்தது. பிறகு, பீமன் எல்லாஜனங்களும்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மஹாரதனான குண்டதாரனை வேறொருபல்லத்தினால் மிருத்யுலோகத்திற்கு அனுப்பினான். பிறகு அளவிடமுடியாதபலத்தையுடையபீமன் ஓரம்பைவில்லிற்பூட்டி யுத்தாங்கத்தில் பண்டிதகன்மீது பிரயோகித்தான். அவ்வம்பு காலனால்ஏவப்பட்ட ஒரு ஸர்ப்பமானது ஒருமனிதனைக்கொன்றுவிட்டு எவ்வாறு பூமியில் பிரவேசிக்குமோ அவ்வாறேபண்டிதகனைக்கொன்றுவிட்டுப் பூமியில் விரைவாகப்பிரவேசித்தது. பின்னும் தளர்ச்சியடையாததைரியமுள்ளவனானபீமன் முந்தினகிலேசத்தை நினைத்துக்கொண்டு மூன்றம்புகளாலே விசாலாக்ஷனுடையதலையை அறுத்துப் பூமியில் தள்ளினான். பீமன் சிறந்தவில்லாளியானமஹோதரனை நடுமார்பில் நாராசத்தினால் அடித்தான். அந்தமஹோதரன் யுத்தத்தில்கொல்லப்பட்டுப் பூமியில்விழுந்தான். பீமன் யுத்தத்தில் ஒருபாணத்தினாலே ஆதித்யகேதுவினுடைய கொடியை அறுத்துவிட்டு மிக்ககூர்மையுள்ளபல்லத்தினாலே அவன் தலையையும் அறுத்தான். பிறகு பீமன் மிகுந்தகோபங்கொண்டு சிறிது வளைந்தகணுக்களுள்ளஓரம்பினாலே பஹ்வாசியைஅடித்து யமனுடைய வீட்டிற்கனுப்பினான். பிறகு மற்றஉம்முடையகுமாரர்கள் ஸபையில் சொன்ன பீமனுடையவார்த்தையைஉண்மையென்றெண்ணி வேகமாக ஓடினார்கள். பிறகு துரியோதனராஜன் பிராதாக்களுடையதுயரத்தினால்பீடிக்கப்பட்டு உம்மைச்சேர்ந்தயுத்தவீரர்களைப்பார்த்து, 'இந்தப் பீமனைக் கொல்லுங்கள்' என்றுசொன்னான். இவ்வாறு சிறந்தவில்லாளிகளான இந்தஉமதுபுத்திரர்கள் பிராதாக்கள்கொல்லப்பட்டதைப்பார்த்து, 'பேரறிவாளரான விதுரர் முன்பு ஹிதமும் குற்றமற்றதுமான எந்தவார்த்தையைச் சொன்னாரோ திவ்யதர்சியான அந்தமஹானுபாவருடைய அந்தவசனத்தின்பலன் இதோ நன்றாகஅடையப்பட்டுவிட்டது' என்று அந்தவசனத்தை நன்றாகநினைத்தார்கள். யதார்த்தமானதும் மகிமைதங்கியதுமான முன்னமேசொல்லப்பட்ட அந்தவார்த்தையை நீர் லோபத்தையும் மோகத்தையும் அடைந்து புத்திரர்களிடத்திலுள்ள பிரீதியினாலே நினையாமலிருந்துவிட்டீர். மிக்கபுஜபலமுள்ளவனும் பலசாலியுமான பாண்டவன், கௌரவர்களைக்கொல்லுதலால், உமது புத்திரர்களுடையவதத்தின்பொருட்டு நிச்சயமாகத்தோன்றியிருக்கிறான். பிறகு துர்யோதனராஜன் யுத்தத்தில் பீஷ்மரையடைந்து அதிகமான துக்கத்தால் ஆக்ரமிக்கப்பட்டு மிகவுந்துன்பமுற்றுப் பின்வருமாறு புலம்பலானான்.

'யுத்தத்தில் பீமஸேனனாலே சூரர்களான என்னுடைய சகோதரர்கள் கொல்லப்பட்டார்கள்; அவ்வாறே முயற்சிக்கின்ற மற்றஎல்லாஸைனிகர்களும் கொல்லப்படுகிறார்கள். தேவரீரோ நடுநிலைமையிலிருந்துகொண்டு எப்பொழுதும் எம்மை உபேக்ஷைபண்ணுகிறீர். அவ்விதமான யான் கெட்டவழியை அடைந்துவிட்டேன். என்னுடைய இந்தத்துரதிர்ஷ்டத்தைப் பாரும்' என்றான். இந்தக்கொடிய வார்த்தையைக்கேட்டு உம்முடையபிதாவான பீஷ்மர் கண்களில் நீர் ததும்பத் துர்யோதனனைப்பார்த்து, 'அப்பா! முன்பு என்னாலும் துரோணராலும் விதுரனாலும் கற்பினால்புகழப்பட்டவளான காந்தாரியினாலும் இந்தவிஷயம் உரைக்கப்பட்டது. அதை நீ தெரிந்துகொள்ளவில்லை. பகைவர்களைஅழிப்பவனே! என்னால் முன்னமே சபதம் செய்யப்பட்டிருக்கிறது. யுத்தத்தில் நானாவது அன்றி ஆசார்யரான த்ரோணராவது எவ்விதத்தாலும் வதத்தக்கவர்களல்லர். துரியோதன! நான் உனக்கு இவ்விஷயத்தை ஸத்யமாகஉரைக்கிறேன். பீமன் யுத்தத்தில் தார்த்தராஷ்டிரர்களுள் எவனெவனைப்பார்ப்பனோ அவனவனை யுத்தத்தில் நிச்சயம் கொல்லப்போகிறான். அப்படிப்பட்டநீ உறுதியாயிருந்துகொண்டு யுத்தத்தில் திடமானபுத்தியைச்செலுத்தி ஸ்வர்க்கத்தை முக்கியமாகஅடையத்தக்ககதியென்றெண்ணிப் பார்த்தர்களுடன் ரணகளத்தில் யுத்தம்செய். பாண்டவர்கள் இந்திரனுடன்கூடின தேவாஸுரர்களாலும் ஜயிக்கமுடியாதவர்கள். பாரத! ஆதலால், யுத்தத்தில் ஸ்திரமான எண்ணத்தைவைத்து யுத்தம்செய்' என்றுகூறினார்.

---

## எண்பத்தோன்பதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(திருதராஷ்டிரன் புத்திரர்களுடையவதத்தைக்கேட்டுத் துக்கித்தது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! ஒருவனாலே என்னுடைய அனேகபுத்திரர்கள் கொல்லப்பட்டதைக்கண்டு யுத்தத்தில் பீஷ்மரும் த்ரோணரும் கிருபரும் என்னசெய்தார்கள்? ஸஞ்சய! நாள்தோறும் என்புத்திரர்கள் க்ஷயமடைகிறார்கள். எல்லாவிதத்தினாலும் என்புத்திரர்களைத் தெய்வத்தால் மிகவும் கெடுக்கப்பட்டவர்களென்றே நான் எண்ணுகிறேன். என்னுடைய எல்லாப்புத்திரர்களும் வெல்லப்பெறுகிறார்களேயன்றி வெற்றிபெறுவில்லை. ஐயா! பின்வாங்காதசூரர்களான பீஷ்மர், த்ரோணர், மஹாத்மாவானகிருபர், ஸோமதத்தகுமாரன்,

வீரனான பகதத்தன், அஸ்வத்தாமா, மற்றுமுள்ளசூரர்கள் ஆகிய இவர்களுக்கிடையிலிருந்தும் என்னுடைய குமாரர்கள் யுத்தத்தில் கொல்லப்படுதலால் துரத்ருஷ்டத்தைத்தவிர வேறு என்ன இருக்கத்தக்கது? மந்தனான துர்யோதனன் முன்புசொல்லப்பட்டதை அறியவில்லை. ஐயனே! எப்பொழுதும் நன்மையை விளைவிக்கவேண்டுமென்கிற எண்ணத்தோடு என்னாலும் பீஷ்மராலும் விதுரனாலும் காந்தாரியினாலும் முன்பு தடுக்கப்பட்டும் துர்ப்புத்தியுள்ள துர்யோதனன் மோகத்தினாலே தெரிந்துகொள்ளவில்லை. அதனுடையபயன் இதோவந்துவிட்டது. பீமஸேனன் மிகுந்தகோபங்கொண்டு புத்தியில்லாதஎன் பிள்ளைகளை யுத்தத்தில் நாடோறும் யமனுடையவீட்டிற்குஅனுப்புகிறகாரணத்தினால் விதுரனுடையமிகச்சிறந்தஅந்தவாக்கியமானது இப்பொழுது பலித்துவிட்டது. 'பிரபுவே! சூதாட்டத்தினின்றும் பிள்ளையைத் தடு. பாண்டவர்களுக்குத் துரோகம்செய்யாதே' என்று அப்பொழுது உரைக்கப்பட்டவார்த்தையை நான் தெரிந்துகொள்ளவில்லை. அந்தந்தவிஷயத்தையேஉரைக்கின்றவர்களும் நன்மையைத் தேடுவதில்விருப்பமுள்ளவர்களுமான ஸுஹ்ருத்துக்களுடையவாக்கியத்தை, சாகப்போகிறவன் பத்தியமானஔஷதத்தை எவ்வாறு ஏற்றுக்கொள்ளானோ அவ்வாறாக முற்காலத்தில் நான் கேட்கவில்லை. நன்றாகஎடுத்துரைக்கப்பட்ட அந்தவசனமானது இதோ வந்துவிட்டது. விதுரன், துரோணர், பீஷ்மர், ஹிதத்தைத்தேடுவதில்முயற்சியுள்ளமற்றவர்கள் ஆகியஇவர்களுடைய பத்தியமானவார்த்தையை அனுஷ்டிக்காமல் கௌரவர்கள் நாசமடைகிறார்கள். ஸஞ்சய! அப்படிப்பட்டஇந்தவிஷயம் முந்தியே சென்றுவிட்டது. ஆதலால், எவ்வாறு யுத்தம்நடந்ததோ அதை உள்ளபடி எனக்கு உரைப்பாயாக" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"ராஜரே! மத்தியான்னகாலத்தில் மிகவும்அதிகபயங்கரமாயுள்ளதும் உலகங்களுக்குக்ஷயத்தையுண்டுபண்ணுகின்றதுமான யுத்தமானது நடந்தது. சொல்லுகின்றஎன்னிடத்தினின்று அதைக்கேளும். பிறகு எல்லாச்சேனைகளும் தர்மபுத்திரருடையஆஜ்ஞையினால் பீஷ்மரையேகொல்லவிரும்பிப் பரபரப்புடன் எதிர்த்துநின்றன. திருஷ்டத்யும்னன், சிகண்டி, மஹாரதனானஸாத்யகிஇவர்கள் ஸைனியங்களுடன்கூடியவர்களாகப் பீஷ்மரையே எதிர்த்தார்கள். விராடனும் துருபதனும் எல்லாஸோமகர்களோடுங்கூடி யுத்தத்தில் மஹாரதரான பீஷ்மரையே எதிர்த்தார்கள். கேகயர்கள், திருஷ்டகேது, கவசமணிந்தவனானகுந்திபோஜன் இவர்கள் ஸைனியங்களுடன்சேர்ந்து பீஷ்ம

ரையே எதிர்த்தார்கள். அர்ஜுனன், த்ரௌபதிகுமாரர்கள், வீர்ய முள்ளசேகிதானன் ஆகியஇவர்களெல்லோரும் துரியோதனனுல்கட் டளையிடப்பட்ட எல்லாஅரசர்களையும் எதிர்த்தார்கள். அவ்வாறே சூரனை அபிமன்யுவும் மஹாரதனனஹிடிம்பாபுத்திரனும் அதிக குரோதமுள்ளவனனபீமஸேனனும் கௌரவர்களை எதிர்த்தோடினார் கள். [1]மூன்றுவகுப்பாகப்பிரிந்திருக்கின்ற பாண்டவவீரர்களாலே யுத் தத்தில் கௌரவர்கள் கொல்லப்பட்டார்கள். அவ்வாறே கௌரவர்க ளாலும் யுத்தத்தில் சத்துருக்கள் கொல்லப்பட்டார்கள். ரதிகர்களுள் சிறந்ததுரோணரோ அதிககோபமுண்டு ஸ்ருஞ்சயர்களுடன்கூடின ஸோமகர்களை யமனுடையவீட்டிற்கு அனுப்பநோக்கங்கொண்டு எதிர்த்தோடினர். வில்லாளியானதுரோணராலே யுத்தத்தில் கொல் லப்படுகின்றவர்களும் மஹாபலசாலிகளுமானஸ்ருஞ்சயர்களுக்கு அந்த ரணகளத்தில் பெரும்போர் நடந்தது. துரோணராலே அந்தயுத்த ரங்கத்தில் கொல்லப்பட்டுப் புரளுகிறஅனேகக்ஷத்திரியர்கள் வியாதி யினால்வருத்தப்படும் மனிதர்கள்போலக் காணப்பட்டார்கள். கூக்குர லிடுகிறவர்களும் ரோதனம்செய்கிறவர்களும் உரக்கக்கத்துகிறவர்களு மான யுத்தவீரர்களுடையசப்தமானது பசியினால்வருந்துகின்ற மனி தர்களுடையசப்தம்போல ஓய்வில்லாமற்கேட்டது. அவ்வாறே மிக்க பலசாலியானபீமஸேனன் கோபங்கொண்டு வேறொருகாலன்போலக் கௌரவர்களுக்குக் கோரமானதுன்பத்தைச் செய்தான். அந்த மஹாயுத்தத்தில் ஒன்றொன்றுகொல்லப்படுகிற ஸைன்யங்களினிடத்தி னின்று ரக்தவெள்ளத்தோடுபெருகுகின்ற கோரமானநதியானது தோன்றியது. கோரரூபமுள்ளதும் பெரிதுமான அந்தக்கௌரவ பாண்டவயுத்தமானது யமனுடையராஜ்யத்தை விருத்திபண்ணுவதா யிற்று. பிறகு, பீமன் கோபங்கொண்டு யுத்தத்தில் விசேஷித்து வேகத் துடன் யானைப்படையைநாடி (அதனை) மிருத்யுவினிடத்துக்கு அனுப் பினன். அந்தரணகளத்தில் பீமனால் யானைகள் நாராசங்களால்அடிக் கப்பட்டு விழுந்தன; வீரிட்டன; சிதறின; திக்குக்களில் எல்லாப்பக் கத்திலும் நிலைதவறிச்சுற்றின. துதிக்கையறுபட்டவைகளும் அங் கங்களறுபட்டவைகளுமான பெரியயானைகள் பயந்து அன்றில்பக்ஷி கள்போல அலறிக்கொண்டு பூமியில்விழுந்தன. பிறகு நகுலனும் ஸஹதேவனும் குதிரைப்படையை எதிர்த்தார்கள். பொன்னாலாகிய தலையலங்காரங்களையும் மற்றஆபரணங்களையும் மேல்விரிப்புக்களையும்

[1] அபிமன்யு கடோத்கசன் பீமஸேனன் இம்மூவருடனும் மூன்றுவித மாக ஸேனைகள் பிரிந்துசென்றபடியால்.

அணிந்த அந்தக்குதிரைகள் நூறு நூறாகவும் ஆயிரம்ஆயிரமாகவும் கொல்லப்படுகின்றவைகளாகக் காணப்பட்டன. விழுகின்றகுதிரைகளாலே யுத்தபூமி பரப்பப்பட்டது. யுத்தபூமியானது பற்பலரூபங்களையுடையவைகளும் நாக்கையிழந்தவைகளும் பெருமூச்சுவிடுகின்றவைகளும் கத்துகின்றவைகளும் உயிரையிழந்தவைகளுமான குதிரைகளாலே விளங்கியது. அர்ஜுனனால் யுத்தத்தில்கொல்லப்படும் அரசர்களாலே ஆங்காங்கு யுத்தபூமி பயங்கரமாகவிளங்கியது. ஒடிக்கப்பட்டிருக்கிறரதங்களாலும் த்வஜங்களாலும் அறுக்கப்பட்டும்ஒடிக்கப்பட்டுமிருக்கிற பெரியஆயுதங்களாலும் சாமரங்களாலும் விசிறிகளாலும் மிக்கஒளிபொருந்தினகுடைகளாலும் மாலைகளாலும் பொன்னாபரணங்களாலும் தோள்வளைகளாலும் குண்டலங்களுடன்கூடினதலைகளாலும் புரட்டித்தள்ளப்பட்டிருக்கிறதலைப்பாகைகளாலும் எல்லாப்பக்கங்களிலுமுள்ள கொடித்துணிகளாலும் மங்களகரமான அண்டைமரங்களாலும் கட்டுக்கயிறுகளாலும் குதிரைகளைக்கட்டும்கயிறுகளாலும் நிரப்பப்பட்டயுத்தபூமியானது வஸந்தகாலத்தில் புஷ்பங்களால் இறைக்கப்பட்டபூமிபோல விளங்கியது. சந்தனுபுத்திரரானபீஷ்மரும் ரதிகர்களுள்உத்தமரானதுரோணரும் அஸ்வத்தாமாவும் கிருபரும் கிருதவர்மாவும் இன்னும்மற்றப்போர்வீரர்களும் கோபத்துடனிருக்கும் ஸமயத்தில் பாண்டவர்களுக்கும் இவ்வாறே நாசமுண்டாகியது; உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் நாசமுண்டாயிற்று.

---

## தொண்ணூறாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(இராவான் சகுனியினுடையஸகோதரர்களைக்கொன்றதும் அலம்புஸன் இராவானைக்கொன்றதும்.)

மஹாராஜரே! பயங்கரமும் சிறந்தவீரர்களுக்கு நாசத்தை உண்டுபண்ணுகிறதுமானயுத்தம் அவ்வாறுநடக்கையில் செல்வப்பெருக்குள்ளவனும் ஸுபலபுத்திரனுமான சகுனியானவன் பாண்டவர்களை நன்றாகஎதிர்த்துவந்தான். பகைவீரர்களைக்கொல்லுகின்றவனும் ஸாத்வதவம்சத்தைச்சேர்ந்தவனுமான கிருதவர்மாவும் அவ்வாறே யுத்தத்தில் பாண்டவர்களுடையசேனையை எதிர்த்தான். பிறகு அர்ஜுனனுக்குப்புத்திரனும் பலசாலியும் அதிகஸந்தோஷமுள்ளவனும் சத்ருக்களைத்தபிக்கச்செய்பவனும் காந்தியுள்ளவனும் சிறந்தவீர்யமுடையவனும் புத்திசாலியானபார்த்தனாலே நாகராஜனுடையகன்னிகையினிட

த்தில் உண்டானவனுமான இராவான் காம்போஜதேசத்தில்தோன்றியகுதிரைகளுள்சிறந்தவைகளும் நதீஜம் மஹீஜம்என்பவைகளும் ஆரட்டதேசத்திலும் ஸிந்துதேசத்திலும் வனாயுதேசத்திலும் பிறந்தவைகளும் வெண்ணிறமுள்ளவைகளும் மலைகளில்வஸிக்கின்றவைகளுமான குதிரைகளுடையபெரும்படைகளாலும் தித்திரிதேசத்தில் தோன்றியவைகளும் [1] பொன்னால் அலங்கரிக்கப்பட்டவைகளும் நல்லகவசமுள்ளவைகளும் நன்றாகப்பழக்கப்பட்டவைகளும் காற்றுப்போன்றவேகமுள்ளவைகளும் சிறந்தவைகளுமான இன்னும் மற்ற அனேகம்குதிரைகளாலும் சூழப்பட்டுச் சத்துருசேனையை எதிர்த்தான். கருடனால் பர்த்தாகொல்லப்பட்டிருக்கும்தருணத்தில் இரக்கப்படத்தக்கவளும் பேதைமையுற்றவளும் புத்திரனில்லாதவளுமான அந்தஉலூபிகையானவள் மஹாத்மாவானஐராவதநாகனாலே அர்ஜுனனுக்குக் கொடுக்கப்பட்டாள். பார்த்தன் மன்மதனுக்கு உடன்பட்டவளானஅவளையும் [2] கார்யார்த்தமாகக்கைக்கொண்டான். இவ்வாறு இந்தஅர்ஜுனபுத்திரனைஇராவான் [3] பரக்ஷேத்திரத்தில் உண்டுபண்ணப்பட்டான். அவன் அர்ஜுனனிடத்திலுள்ள த்வேஷத்தினால் துராத்மாவானஅஶ்வஸேனனென்னும் சிறியதகப்பனால்விலக்குண்டு, தாயானஉலூபிகையினால் ரக்ஷிக்கப்பட்டு நாகலோகத்தில் வளர்ந்தான். உண்மையானபராக்ரமமுள்ளவனும் நாகங்களுள்சிரேஷ்டனுமான இந்தஇராவான், அர்ஜுனன் ஸ்வர்க்கலோகம்சென்றிருக்கிறானென்பதைக்கேட்டு ஆகாயத்தில்கிளம்பி விரைவாக இந்திரலோகம்சென்றான். மிக்கபுஜபலமுள்ளவனும் உறுதியானவலிமையுள்ளவனுமான அந்தஇராவான் மனக்கவலையற்றுப் பிதாவை அடைந்து வணக்கத்துடன்கைகூப்பி நமஸ்காரம்செய்தான். மகாத்மாவானஅர்ஜுனனிடத்தில், ‘பிரபுவே! யான் இராவான்; உங்களுக்கு மங்களமுண்டாகவேண்டும். நான் உங்களுடையபுதல்வன்’என்று தன்னைத்தெரிவித்துக்கொண்டான்; தன்தாயோடு அவனுக்குநேசமுண்டானவிதத்தை முழுதும்தெரிவித்தான். அஃதனைத்தையும் நடந்தபடி பாண்டவன் நினைத்துக்கொண்டான். பார்த்தனும் குணங்களால்தனக்கு ஒப்பானபுத்திரனைக் கட்டிக்கொண்டு பிரீதியுடன் தேவராஜனுடைய அரண்மனைக்கு அழைத்துச்சென்றான். மிக்கைவன்மையுள்ள அந்த இராவான் தேவலோகத்தில் அர்ஜுனனால் அப்பொழுது தன்னுடைய

---

[1] இரண்டுசொற்கள் விடப்பட்டன.

[2] ‘பார்யார்த்தம்’ என்பது வேறுபாடம்.

[3] பிறன்மனைவி.

காரியத்தைஉத்தேசித்துப் பிரீதியுடன் கட்டளையிடப்பட்டான். நா
சிரேஷ்டனும் புலிக்குச்சமமானவிக்கிரமமுள்ளவனுமான அவனும்
அர்ஜுனனைநோக்கி, 'மாசற்றவரே! நான் இருக்கிறேன். நான் உங்
களுக்குக் கிங்கரனுகவும் புத்திரனுகவுமிருக்கிறேன். நீங்கள் எல்லா
விதத்தாலும் என்னைநோக்கிக் கட்டளையிடலாம். யான் உங்களுக்கு
எந்தவிருப்பத்தை நிறைவேற்றவேண்டும்? நீங்கள் எந்தஅபீஷ்டத்தை
இச்சிக்கிறீர்கள்?' என்று அப்பொழுதுசொன்னுன். இந்திரகுமார
னுனஅர்ஜுனன் புத்திரனைஅந்தஇராவானை அன்புடன் கட்டிக்
கொண்டு அவனைநோக்கி, '(பகைவர்களுடைய) கர்வத்தையழிப்பவ
னே! (என்காரியங்களைப்) பிரீதியோடு செய்யக்கடவாய்; (என்னிடம்)
அன்போடிருக்கக்கடவாய். யுத்தஸமயம்நேர்ந்தபொழுது நீ நமக்கு
உதவிசெய்யவேண்டும்' என்றுமறுமொழிகூறினுன். இராவானும்,
'அவ்வாறேஆகட்டும்' என்றுசொல்லி யுத்தகாலத்தில் இங்குவந்
தான்; விரும்பத்தக்கநிறமுடையவைகளும் வேகமுள்ளவைகளுமான
குதிரைகளாலே சூழப்பட்டவனுக விளங்கினுன். ஸ்வர்ணுபரணங்
களையுடையவைகளும் பற்பலநிறமுள்ளவைகளும் மனுேவேகம்போ
ன்றவேகமுள்ளவைகளுமான அந்தக்குதிரைகள் பெருங்கடலில்
அன்னப்பறவைகள்போல (யுத்தகளத்தில்) விரைவாகத் துள்ளிக்குதித்
தன. அந்தக்குதிரைகள் மனுேவேகம்போன்றவேகமுள்ளவைகளான
உமதுகுதிரைக்கூட்டங்களைநாடி மார்புகளோடுமார்புகளையும் மூக்குக்
களோடுமூக்குக்களையும் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு அதிக
வேகத்தால்அடிக்கப்பட்டு விரைவாக யுத்தபூமியில் விழுந்தன. அந்தக்
குதிரைக்கூட்டங்கள் ஒன்றோடொன்று அவ்வாறு (மோதி) விழுவத
னுல் கருடன்பறக்குங்காலத்தில் கேட்கப்படுவதுபோலக் கோரமான
சப்தம் கேட்கப்பட்டது. அவ்வாறே உம்முடையகுதிரைவீரர்கள்
எதிர்த்து யுத்தத்தில் ஒருவரை ஒருவர் கொன்றுர்கள். கைகலந்து
மிகநெருங்கினயுத்தம் அவ்வாறுநடக்கையில் இருதிறத்துச்சேனையிலு
முள்ளகுதிரைக்கூட்டங்கள் எல்லாப்பக்கங்களிலும் உயிரையிழந்தன.
ஒருவரைஒருவர் வெட்டிக்கொள்ளுகின்றசூரர்கள் பாணங்களைஇழந்
தும் குதிரைகள்கொல்லப்பட்டும் சிரமத்தினுல் மிகவருத்தப்பட்டும்
நாசத்தையடைந்தார்கள். பிறகு குதிரைப்படையழிந்து சிறிதுமிருந்
திருக்கும்பொழுது சூரர்களான ஸௌபலனுடையஇளையஸஹோதரர்
கள் காற்றுப்போலவேகமாய்த்தாக்குகின்றவைகளும் வேகத்தில்காற்
றுக்கொப்பானவைகளும் பலத்தினுல்நிறைந்தவைகளும் யௌவன
முள்ளவைகளுமான உத்தமமானகுதிரைகளின்மீதேறிக்கொண்டு யுத்த

முனையில்வெளிப்பட்டார்கள். பலத்தினால் நிறைந்தவர்களும் ஸன்னாஹ மூடையவர்களும் யுத்தத்தில் ஸாமர்த்தியமுடையவர்களும் பயங்கர மானரூபத்தையுடையவர்களும் மஹாபலசாலிகளுமான கஜன், கவாக்ஷன், விருஷகன், சர்மவான், ஆர்ஜவன், சுகன் என்னும்இந்தஅறுவர் சகுனியினாலும் அதிகபலமுள்ள தங்களைச்சேர்ந்த யுத்தவீரர்களாலும்சூழப்பட்டுப் பெரும்படையினின்று வெளிப்பட்டார்கள். அதிகமானபலமுள்ளவர்களும் விஜயத்தைவிரும்புகின்றவர்களும் யுத்தத்தில்கெட்டமதங்கொண்டவர்களுமான அந்தக்காந்தாரவீரர்கள் ஸ்வர்க்கத்தைவிரும்பி ஸந்தோஷத்துடன் அப்பொழுது ஜயிக்கமுடியாதபாண்டவசேனையைப்பிளந்துகொண்டு பிரவேசித்தார்கள். புகுகின்றஅந்தக்காந்தாரவீரர்களைக்கண்டு அப்பொழுது வீர்யவானான இராவானும் யுத்தத்தில் விசித்திரமானகுதிரைகளின்மீதிருக்கின்ற தன்னைச்சேர்ந்தவீரர்களைப்பார்த்து, 'துணைவீரர்களுடனும் வாகனங்களுடனுங்கூடின துர்யோதனனைச்சேர்ந்த இந்தயுத்தவீரர்களனைவரையும் யுத்தத்தில் கொல்லத்தக்கஉபாயத்தை நீங்கள் செய்யவேண்டும்' என்று கட்டளையிட்டான். இராவானுடைய அந்தயுத்தவீரர்களனைவரும், 'அங்ஙனமேசெய்கிறோம்' என்றுசொல்லிவிட்டு, பகைவர்களால் யுத்தத்தில்ஜயிக்கமுடியாததான அந்தக்காந்தாரர்களுடையபடையை நாசம்செய்தார்கள். யுத்தத்தில் (இராவானுடைய) படையினாலே நாசஞ்செய்யப்பட்டிருக்கிறஅந்தப்படையைக்கண்டு ஸுபலனுடையபுத்திரர்களனைவரும் யுத்தத்தில் கோபங்கொண்டு இராவானுக்கெதிரிற் சென்று நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். அந்தச்சூரர்கள் ஒருவரைஒருவர் தூண்டியும் கூர்மையானஈட்டிகளாலே (இராவானைக்) குத்தியும் மிகுந்தகுழப்பத்தையுண்டுபண்ணிக்கொண்டு நாற்புறங்களிலும் விரைவாகஓடினார்கள். பிறகு வேணுகம்என்கிறஆயுதங்களாலே அடிக்கப்பட்டயானைபோல மிக்கபலசாலிகளான சூரர்களாலே கூர்மையுள்ளஈட்டிகளால்பிளக்கப்பட்டவனும் பெருகுகின்ற ரக்தத்தால் நனைக்கப்பட்டவனும் மார்பிலும் முதுகிலும் இரண்டு விலாவிலும் அநேகர்களாலேமிகவும்அடிக்கப்பட்டவனும் ஒருவனாகத்தனித்திருப்பவனுமானஇராவான் தைரியத்தால் வருத்தமடையவில்லை. சத்துருபட்டணங்களைஜயிப்பவனானஇராவானும் மிகுந்த கோபங்கொண்டு யுத்தத்தில் கூர்மையானஅம்புகளாலே அவர்களனைவரையும் அடித்து மோகிக்கச்செய்தான். சத்துருக்களைஅடக்குபவனான இராவான் பலத்தினால் தன்சரீரத்தினின்று ஈட்டிகளைப்பிடுங்கிக்கொண்டு ரணகளத்தில் அந்தஈட்டிகளாலேயே ஸௌபலர்களை அடி-

த்தான். கூர்மையானகத்தியை உருவிப்பிடித்துக் கேடகத்தையும் எடுத்துக்கொண்டு காலாளாகவே யுத்தத்தில் ஸுபலபுத்திரர்களைக் கொல்லஎண்ணி விரைவாக எதிர்த்துவந்தான். பிறகு மீண்டுவந்திருக்கின்ற பிராணனையுடையவர்களான அந்தஸுபலபுத்திரர்களனைவரும் கோபத்தால்ஆக்ரமிக்கப்பட்டவர்களாக இராவானைநோக்கி எதிர்த்தோடினார்கள். இராவானும் யுத்தத்தில் கத்தியினால் கைத்தேர்ச்சியைத் தேவர்களும் மனிதர்களும் காணச்செய்துகொண்டு எதிர்த்தான். பிறகு வேகமாகச்செல்லுகின்றகுதிரைகளோடுஸஞ்சரிக்கின்ற அந்த ஸுபலபுத்திரர்களனைவரும் லாகவத்துடனேஸஞ்சரிக்கின்றஇராவானுக்கு இடுக்கணைவிளைவிக்கக்கூடியஸமயத்தை அடையவில்லை. பிறகு ரணகளத்தில் ஆகாயத்தினின்றுகுதித்துப் பூமியிலிருக்கின்ற இராவானை ஸௌபலர்களெல்லோரும் அதிகமாகச் சூழ்ந்துகொண்டு பிடிப்பதற்குத்தொடங்கினார்கள். பிறகு சத்துருக்களைநாசம்செய்கின்றவனானஇராவான் கத்தியைக்கையில்கொண்டு தன்னருகில்வந்தவர்களும் அஸ்திரங்களைக்கையில்கொண்டவர்களுமான அந்தக்காந்தாரவீரர்களுடையஅவயவங்களையும் எல்லாருடையஆயுதங்களையும் அலங்கரிக்கப்பட்டகைகளையும் அறுத்தான். (அங்குள்ளவீரர்கள்) அங்கங்கள் அறுக்கப்பட்டு உயிரையிழந்து பூமியில் விழுந்தார்கள். பலவாறாக உடல்முழுதும் மிகவும்வெட்டப்பட்டவிருஷகனோ வீரர்களைவெட்டுகிறவனும் மிகவும்பயங்கரனுமான அந்தஇராவானிடத்தினின்றுவிடுபட்டான். பிறகு கீழேவிழுந்திருக்கின்ற அவர்களனைவரையுங்கண்டு பயந்தவனான துரியோதனன் மிகுந்தகோபங்கொண்டு கொடியஉருவமுள்ளவனும் பெரியவில்லைக்கையிலேந்தியவனும் மாயாவியும் பகைவர்களைத்துன்புறுத்துகின்றவனும் முன்பு பகாஸுரனைக்கொன்றதனால்பீமஸேனனுக்குவைரியும் ராக்ஷஸனுமான [1] ஆர்ஸ்யஸ்ருங்கியை நோக்கி அவனருகில் ஓடி, 'வீர! பலமுள்ளவனும் மாயையையுடையவனுமான இந்தஅர்ஜுனகுமாரனை இராவான் எனக்குஅப்பிரியமானகாரியஞ்செய்வதற்காக எனக்குப் பலக்குறைவை உண்டுபண்ணிவிட்டான்; பார். ஐயனே! நீயும் இஷ்டப்படி ஸஞ்சரிக்கின்றஸ்பாவமுடையவனாகவும் மாயாசாஸ்திரத்திலும் ஸமர்த்தனாகவும் பார்த்தனாலுண்டுபண்ணப்பட்டவிரோதத்தையுடையவனாகவுமிருக்கிறாய். ஆதலால், இவனை நீ யுத்தத்தில்கொல்' என்றுகூறினான். கோரமான தோற்றத்தையுடையராக்ஷஸன், 'அவ்வாறேஆகட்டும்' என்றுஒப்புக்கொண்டு யௌவனமுள்ளஇராவானிருக்குமிடத்திற்கு ஸிம்மநாதத்

---

[1] இவனே அலம்புஸன்.

தோடுசென்றான். அந்தஆர்ஶ்யசிருங்கி யுத்தத்தில்ஸமர்த்தர்களும் பளபளப்பானஈட்டிகளைக்கொண்டுபோர்புரிகின்றவர்களும் வீரர்களும் சத்துருக்களைநன்றாகஅடிக்கின்றதன்மையுடையவர்களும் ஒன்றுசேர்ந்தவர்களுமான தன்சேனையிலுள்ளபோர்வீரர்களால் சூழப்பட்டவனாக மரித்ததுபோக மீந்திருக்கின்ற சிறந்தஇரண்டாயிரம்குதிரைகளுடன்சேர்ந்து யுத்தத்தில் மஹாபலசாலியானஇராவானைக்கொல்லக் கருதி அவனை எதிர்த்தான். பராக்கிரமசாலியும் பகைவர்களை அழிக்கின்றவனுமானஇராவானும் மிகுந்தகோபங்கொண்டவனாகத் தன்னைக் கொல்லஎண்ணங்கொண்டவனானராக்ஷஸனை விரைவாக எதிர்த்தான். அவ்வாறுஇராவான்தன்னையெதிர்த்துவருவதுகண்டு பிறகு மிக்கபலசாலியானராக்ஷஸன் விரைந்து மாயையைவெளிப்படுத்துவதற்குத் தொடங்கினான். பயங்கரமானஉருவமுள்ளவர்களும் சூலங்களையும் கத்திகளையும்தரித்தவர்களுமான ராக்ஷஸர்களாலே நன்குஏறப்பட்டிருப்பவைகளும் மாயாமயங்களுமான (இராவானுக்குஎவ்வளவுகுதிரைகளுண்டோ) அவ்வளவுகுதிரைகளே அந்தராக்ஷஸனால் உண்டுபண்ணப்பட்டன. மிக்ககோபமுள்ளவைகளும் நன்றாகஅடிக்கும்திறமையுடையவைகளுமான அந்தஇரண்டாயிரம்குதிரைகளும் (இராவானுடையகுதிரைகளை) எதிர்த்து அதிசீக்கிரத்தில் ஒன்றையொன்று யமலோகத்தைஅடையும்படி செய்தன. அச்சேனைகொல்லப்பட்டவுடன், யுத்தத்தில்கொடியமதங்கொண்டவர்களானஅவர்களிருவரும் விருத்திரனும்இந்திரனும்போல யுத்தத்தில் எதிர்த்துநின்றார்கள். பிறகு யுத்தத்தில்கெட்டமதங்கொண்டவனும் எதிர்த்தோடிவருகின்றவனுமான ராக்ஷஸனைக்கண்டு மஹாபலசாலியானஇராவானும் மிகுந்தபரபரப்புடன் எதிர்த்துஓடினான். கெட்டமதமுள்ளவனானஇராவானும் ரணகளத்தில் ஸமீபத்தைஅடைந்தவனான அந்தஆர்ஶ்யசிருங்கியினுடைய ஜ்வலிக்கின்றவில்லையும் கேடகத்தையும் கவசத்தையும் வாளினால் துண்டாக்கினான். அந்தஆர்ஶ்யசிருங்கியானவன் வில்அறுக்கப்பட்டதைக் கண்டு அதிககோபங்கொண்டஇராவானை மாயையினால்மோகிக்கச்செய்துகொண்டு வேகத்துடன் ஆகாயத்தில்கிளம்பினான். பிறகு எல்லா மர்மங்களையும்அறிந்தவனும் தன்னிஷ்டப்படி ரூபத்தையெடுத்துக் கொள்ளும்சக்தியுடையவனும் அணுகமுடியாதவனுமானஇராவானும் ஆகாயத்தில் கிளம்பி ராக்ஷஸனை மாயைகளால்மோகிக்கச்செய்து அம்புகளாலே அவனுடையஅவயவங்களைப்பிளந்தான். அவ்வாறாக அந்த ராக்ஷஸசிரேஷ்டன் அம்புகளால்வெட்டப்பட்டு (உயிரையிழந்தும்) மறுபடியும் மறுபடியுந்தோன்றினான்; யௌவனத்தையுமடைந்தான்.

அந்தராக்ஷஸர்களுக்கு மாயையும் இஷ்டப்படிவயதையும்ரூபத்தையும் எடுப்பதும் இயற்கையானவை. இவ்வாறு அந்தராக்ஷஸனுடையஅங்கம் அறுக்கஅறுக்க (மறுபடியும் மறுபடியும்) உண்டாயிற்று. மிக்க கோபங்கொண்டஇராவானும் மஹாபலசாலியான அந்தராக்ஷஸனான ஆர்ஶ்யஶ்ருங்கியைக் கூர்மையுள்ளகோடாலியினாலே அடிக்கடிவெட்டினான். பலசாலியான அந்தஇராவானாலே மரம்போலவெட்டப்படுகின்ற வீரனான அந்தராக்ஷஸன் கோரமாகச்சப்தித்தான். அந்தச்சப்தமானது எங்கும்நெருங்கியதாயிற்று. கோடாலியினால்வெட்டப்பட்ட ராக்ஷஸன் அதிகமாக ரக்தத்தைப்பெருக்கினான். பிறகு பலசாலியான அவன் கோபங்கொண்டான்; யுத்தத்தில் வேகத்தையும் வெளியிட்டான். பிறகு ஆர்ஶ்யஶ்ருங்கியானவன் யுத்தத்தில்பலசாலியான சத்துருவைப்பார்த்து வீரனும் புகழ்பெற்றவனும் அர்ஜுனகுமாரனுமான அவனை யுத்தமுனையில் மத்தியில் அங்குள்ள அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே கோரமானபெரியஉருவங்கொண்டு பிடிக்க ஆரம்பித்தான். துராத்மாவானராக்ஷஸனுடைய அந்தமாயையைக் கண்டு இராவானும் மிகுந்தகோபங்கொண்டு மாயையையுண்டுபண்ண ஆரம்பித்தான். கோபத்தால்ஆக்ரமிக்கப்பட்டவனும் யுத்தத்தில் திரும்பாதவனுமான அந்தஇராவானுடையதாயின்வம்சம் அவனைவந்தடைந்தது. அந்தஇராவான் அனேகநாகங்களாலே யுத்தத்தில் சூழப்பட்டவனாகச் சிறந்தஉடலுள்ள நாகராஜனான அனந்தன்போல மிகவும்பெரிதானரூபத்தைத் தரித்தான். பிறகு பலவிதமான நாகங்களாலே ராக்ஷஸனை மூடினான். ஸர்ப்பங்களாலேமூடப்பட்ட அந்தராக்ஷஸஶ்ரேஷ்டனோ தியானம்செய்து கருடனுடையரூபத்தையடைந்து ஸர்ப்பங்களைப் பக்ஷித்தான். இராவானுடையதாயின் வம்சமானது மாயையினால்பக்ஷிக்கப்படும்பொழுது ராக்ஷஸன் மோகித்திருக்கின்ற இராவானைக்கத்தியால்வெட்டிக் குண்டலங்களோடும் கிரீடத்தோடுங்கூடியதும் தாமரைப்புஷ்பத்திற்கும் சந்திரனுக்கும்ஒப்பானஒளிபொருந்தியதுமான அவனுடையதலையைப் பூமியில் தள்ளினான். வீரனான அந்தஅர்ஜுனகுமாரன் ராக்ஷஸனால்கொல்லப்பட்டவுடன் அரசனோடுகூடினதார்த்தராஷ்டிரர்கள் துயரநீங்கினவராயினர். பயங்கரமாயும் பெரிதாயுமிருக்கின்ற அப்படிப்பட்டயுத்தத்தில் மறுபடியும் இரண்டுசேனைகளும் (யுத்தத்தின்பொருட்டு) கோரமாக மிகஎதிர்த்தன. வேந்தரே! உம்முடையசேனைகளுக்கும் அந்தப்பாண்டவவீரர்களுக்கும் கைகலந்துநடந்துவரும்அந்தச்சண்டையில் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கின்றயானைகளும் குதிரைகளும் காலாட்களும் யானைகளால்

கொல்லப்பட்டன. ரதத்தில்பூட்டப்பட்டிருக்கிறகுதிரைகளும் யானைகளும் அந்தயுத்தத்தில் காலாட்களால் நாசம்செய்யப்பட்டன. அவ்வாறே காலாட்களும் ரதஸமூஹங்களும் அனேகம்குதிரைகளும் ரதிகர்களாலே நாசம்செய்யப்பட்டன. அர்ஜுனனும் தன்னுடைய ஔரஸபுத்திரனை இராவான்கொல்லப்பட்டானென்பதையறியாமல் யுத்தரங்கத்தில் சூரர்களும் பீஷ்மரைரக்ஷிக்கின்றவர்களுமான அந்த அரசர்களைக் கொன்றான். அவ்வாறே உம்மைச்சேர்ந்தவர்களும் ஆயிரக்கணக்கானஸ்ருஞ்சயர்களும் யுத்தத்தில் பிராணன்களைஹோமம் செய்பவர்களாக ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். விரிந்தகூந்தலுடையவர்களும் கவசத்தையிழந்தவர்களும் ரதங்களையிழந்தவர்களும் விற்களறுக்கப்பட்டவர்களுமான அந்தவீரர்கள் ஒன்றுகூடி ஒருவரோடொருவர் கைகளால் போர்புரிந்தார்கள். சத்ருக்களைத்தபிக்கச்செய்கின்றபீஷ்மர் யுத்தத்தில் பாண்டவர்களுடையசேனையை நடுங்கச்செய்துகொண்டு உயிர்நிலைகளைப்பிளக்கின்ற அம்புகளாலே மஹாரதர்களை அடித்தார். அந்தப் பீஷ்மரால் யுதிஷ்டிரருடையசேனையில் அனேகமனிதர்கள் கொல்லப்பட்டார்கள். அவ்வாறே யானைகளும் குதிரைவீரர்களும் தேராளிகளும் குதிரைகளும் கொல்லப்பட்டனர். அந்தயுத்தத்தில் இந்திரனுடையபராக்கிரமத்தைப்போல அத்யாச்சரியகரமாயுள்ள பீஷ்மருடைய [1] பராக்கிரமத்தை நாங்கள் கண்டோம். அவ்வாறே பீமஸேனன் த்ருஷ்டத்யும்னன் வில்லாளியான ஸாத்யகி இவர்களுடையயுத்தமானது ரணகளத்தில் பயங்கரமாகநடந்தது. துரோணருடையபராக்கிரமத்தைக்கண்டு பாண்டவர்கள் பயத்தைஅடைந்தார்கள். யுத்தத்தில் துரோணரால்அடிக்கப்படுகின்றவீரர்கள், 'துரோணர்ஒருவரே யுத்தத்தில் எல்லாச்சேனைகளையுங்கொல்வதற்குச் சக்தியுள்ளவர்; அவ்வாறிருக்க, பூமியிலுள்ளசூரர்களாலும் யுத்தவீரர்களுடையகூட்டங்களாலும் சூழப்பட்டிருக்கின்றஇந்தத்துரோணர் சத்ருவீரர்களைஜயிப்பதில் யாது ஸந்தேகம்?' என்றுசொன்னார்கள். அவ்வாறு பயங்கரமானயுத்தம்நடந்துவருமளவில் இரண்டுஸேனைகளிலும் சூரர்கள் ஒருவரையொருவர் பொறுக்கவில்லை. வில்லாளிகளான உம்மைச்சேர்ந்த வீரர்களும் பாண்டவவீரர்களும் கோபத்துடன் ராக்ஷஸர்களாலும் பூதங்களாலும் ஆவேசிக்கப்பட்டவைபோன்ற பெரியஸைனியங்களுடன்சேர்ந்து போர்புரிந்தார்கள். தேவாஸுரயுத்தம்போலவிளங்குகின்றஅந்தயுத்தத்தில் யுத்தவீரர்களுள் தன்உயிரைக்காப்பாற்றிக்

[1] ஒருசொல் விடப்பட்டது.

கொள்ளுகின்றவன் ஒருவனையும் நாங்கள்காணவில்லை" என்று கூறினான்.

---

## தொண்ணூற்றோராவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனனுக்கும் கடோத்கசனுக்கும் யுத்தம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! இராவான்கொல்லப்பட்டதுகண்டு மஹாரதர்களானபார்த்தர்கள் யுத்தத்தில் யாதுசெய்தனர்? அதனை எனக்குச் சொல்வாயாக" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! யுத்தத்தில் இராவான்கொல்லப்பட்டதுகண்டு பீமஸேனனுடையகுமாரனானகடோத்கசனென்கிறராக்ஷஸன் மிகப்பெரிதானசப்தத்துடன்கர்ஜித்தான். கர்ஜிக்கின்ற அந்தக்கடோத்கசனுடைய சப்தத்தினால் ஸமுத்ரத்தை ஆடையாகஉடையதும் மலைகளோடும்காடுகளோடுங்கூடினதுமானபூமியானது அப்பொழுது மிகவும்நடுக்கமுற்றது. அந்தஸமயத்தில் அந்தச்சப்தத்தினால் எதிரொலிவிடும்படிசெய்யப்பட்டிருக்கிறஆகாயமும் எல்லாத்திக்குகளும் திக்கோணங்களும் விரைவாகநடுக்கமுற்றன. மிகப்பெரிய அந்தஒலியைக்கேட்டு உமது ஸைன்யத்துக்குத் தொடைகளை அசைக்கமுடியாமலிருத்தலும் நடுக்கமும் வெயர்வையுமுண்டாயின. உம்மைச்சேர்ந்தவர்கள் அனைவருமே வாடியமனத்துடன் ஸிங்கத்தினிடமிருந்து பயந்தயானைகள் போல மிகநடுங்கினார்கள். ராக்ஷஸன் இடிபோலப் பெரியஸிம்மநாதஞ்செய்து ஜ்வலிக்கின்ற சூலத்தைக்கையிலெடுத்து அதிகபயங்கரமானரூபத்தைஏற்படுத்திக்கொண்டு மிக்ககோபமுண்டவனாகவும் [1]காலனுக்கும் [2]அந்தகனுக்கும் [3]யமனுக்குமொப்பானவனாகவும் பற்பலஆயுதங்களைஏந்திய ராக்ஷஸசிரேஷ்டர்களால்சூழப்பட்டவனாகவும் (உமது ஸேனாவீரர்களை) நாற்புறங்களிலும் துன்பஞ்செய்தான். எதிர்த்துவருகின்றவனும் மிக்ககோபங்கொண்டவனும் பயங்கரமானதோற்றமுடையவனுமான அந்தக்கடோத்கசனைக்கண்டு அவனிடத்தினின்று உண்டானபயத்தினாலே கௌரவஸேனை பெரும்பாலும் யுத்தத்தில் விருப்பமற்றதாகச் செய்யப்பட்டது. பிறகு துரியோதனராஜன் பெரிதானவில்லைக் கையிலேந்தி ஸிம்மம்போல அடிக்கடி கர்ஜித்துக்

[1] சாந்திபர்வம் ௩௩௪ - பக்கம் குறிப்பிற் காண்க. [2] முடிவைச்செய்பவன்.
[3] " " " "

கொண்டு கடோத்கசனுடைய அருகில் ஓடினன். துரியோதனனுக்குப்பின்புறத்தில் மதப்பெருக்குள்ளவைகளும் மலைகளுக்குஒப்பானவைகளுமான பதினுயிரம்யானைகளோடு வங்கதேசாதிபன் தானே தொடர்ந்துசென்றான். யானைப்படையினால் சூழப்பட்டுத் தன்னை நோக்கிவருகின்ற உம்முடையபுத்திரனான அந்தத்துர்யோதனனைக் கண்டு அந்தராக்ஷஸன் கோபங்கொண்டான். பிறகு ராக்ஷஸர்களுக்கும் துரியோதனனுடையசேனைக்கும் கைகலந்ததும் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணுவதுமான பெரும்போர் நடந்தது. மேகக்கூட்டம்போலத்தோன்றின யானைப்படையைக்கண்டு மிகுந்தகோபங்கொண்ட ராக்ஷஸர்கள் மின்னலுடன்கூடிய மேகங்கள்போலச் சஸ்திரங்களைக்கையில்கொண்டு பற்பலவித ஸிம்மநாதங்களை வெளியிட்டுக்கொண்டு எதிர்த்துஓடினார்கள். அந்தவீரர்கள் அம்புகளாலும் சக்திகளாலும் ரிஷ்டிகளாலும் நாராசங்களாலும் யானையின்மீதேறிப் போர்புரிகின்றவீரர்களை நாசஞ்செய்துகொண்டு பிண்டிபாலங்களாலும் சூலங்களாலும் உலக்கைகளாலும் கோடாலிகளாலும் பர்வதங்களுடைய கொடுமுடிகளாலும் விருக்ஷங்களாலும் பெரியயானைகளையடித்தார்கள். ராக்ஷஸர்களாலே வதம்செய்யப்படுகின்றவைகளும் மத்தகம்பிளக்கப்பெற்றவைகளும் ரக்தத்தைச்சொரிகின்றவைகளும் உடல்பிளக்கப்பட்டவைகளுமான யானைகளை நாங்கள் கண்டோம். யானையின்மீதேறிப் போர்புரிகின்ற அந்தயுத்தவீரர்கள் அடிக்கப்பட்டு நாசமடையும்போது துரியோதனன் கோபத்திற்குவசப்பட்டுத் தன்னுயிரையிழக்கத்துணிந்து ராக்ஷஸர்களைஎதிர்த்து விரைவாகஓடினன். சிறந்தவில்லாளியான துர்யோதனன் அரக்கர்களின்மீது கூர்மையானஅம்புகளைப்பிரயோகித்து அந்தயுத்தத்திலுள்ள பிரதானர்களானராக்ஷஸர்களையும் கொன்றான். மஹாபலசாலியும் உமதுகுமாரனுமானதுர்யோதனன் மிகுந்தகோபங்கொண்டு நான்குபாணங்களாலே வேகவான், மகாரௌத்ரன், விதயுஜ்ஜிஹ்வன் பிரமாதிஎன்கிற நான்குராக்ஷஸர்களையும் கொன்றான். பிறகு அளவிடமுடியாதமனோதைரியத்தையுடையவனும் பரதகுலத்திற்பிறந்தவீரர்களுள் உத்தமனுமானதுர்யோதனன் அரக்கர்களுடையபடையைக்குறித்து ஒருவராலும்நாடமுடியாத சரமாரியைப்பொழிந்தான். அங்கபலமுள்ளவனான பீமஸேனனுடைய குமாரன் உமதுபுத்திரனுடைய அந்தப்பெரியசெய்கையைக்கண்டு மிக்ககோபத்தோடுவிளங்கினான். அந்தக்கடோத்கசன் இந்திரனுடைய வஜ்ராயுதத்திற்குச்சமமானஒளிபொருந்திய பெரியவில்லை நாணொலியிடும்படிசெய்துகொண்டு பகைவர்களை அழிப்பவனானதுர்யோதனனை

நோக்கி விரைவாகவோடிவந்தான் உபாதுபுத்திரனான துர்யோதனன் எதிர்த்துவருகின்றவனும் காலத்தினலேஸ்ருஷ்டிக்கப்பட்ட அந்த யனைப்போலிருக்கின்றவனுமான அந்தக்கடோத்கசனைப்பார்த்துச் சிறிதும் பயத்தால் மனவருத்தமடையவில்லை. பிறகு கொடுந்தன்மையுள்ளவனும் சிவந்தகண்களையுடையவனுமான அந்தக்கடோத்கசன் கோபங்கொண்டு துர்யோதனனைநோக்கி வருமாறு சொல்லலானான். 'மிகக்கொடியவனான உன்னாலே எவர்கள் நெடுங்காலம் காட்டில்ஓட்டப்பட்டார்களோ அப்படிப்பட்டபிதாக்களின் விஷயத்திலும் மாதாவின்விஷயத்திலும் கடனளியாகாதிருந்தலை நான் இப்பொழுது அடையப்போகிறேன். ராஜனே! மதிகெட்டவனே! குலத்தில்இழிந்தவனே! அந்தப்பாண்டவர்கள் கபடமானசூதாட்டத்தில் தோல்வியடைவிக்கப்பட்டதும், ஒரே வஸ்திரம்தரித்தவளும் ரஜஸ்வலையாயிருப்பவளும் த்ருபதராஜகுமாரியுமான க்ருஷ்ணையானவள் உன்னால் சபைக்குக்கொணர்ந்து பலவாறு துன்புறுத்தப்பட்டதும் உனக்குப் பிரியத்தைச்செய்வதில் விருப்பமுள்ள துஷ்டனானஜயத்ரதன் ஆஸ்ரமத்தில் வசிக்கின்றஅவளை என்பிதாக்களை அலக்ஷ்யம்செய்து அபகரித்ததும் மற்றுமுள்ளனவுமான அவமானங்களுடையமுடிவை நீயுத்தத்தை விட்டுவிலகாமலிருந்தால் இன்று அடையப்போகிறேன்' என்றான். ஹிடிம்பாபுத்திரன் இவ்வாறுசொல்லிப் பெரியவில்லை நாணொலி செய்து பற்களால் உதட்டைக்கடித்து இரண்டுகடைவாய்களையும் நக்கிக்கொண்டு கார்காலத்தில் மேகமானது மழைத்தாரைகளை மலையின் மீது பொழிவதுபோலப் பெரியசராமாரியைத் துரியோதனன்மீதுபொழிந்தான்.

---

## தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(கடோத்கசனுடைய யுத்தம்.)

பிறகு அஸுரர்களாலும் தாங்கமுடியாத அந்தச்சரமாரியை ராஜசிரேஷ்டனான துரியோதனன், பெரியயானையானது வர்ஷதாரையைத் தாங்குவதுபோல யுத்தத்தில் தாங்கினான். பிறகு கோபமிகுந்தவனும் ஸர்ப்பம்போலப் பெருமூச்சுவிடுகின்றவனுமான உபாதுடையபுத்திரன் மிகவுயமுற்றுத் தீட்டப்பட்ட கூர்மையான இருபத்தைந்து நாராசங்களைக் கடோத்கசன்மீது விடுத்தான். அந்தநாராசங்

கள்கந்தமாதனபர்வதத்திலுள்ள கோபங்கொண்டஸர்ப்பங்கள்போல அந்தராக்ஷஸசிரேஷ்டன்மீது விரைவாகவிழுந்தன. அந்தராக்ஷஸன் அவைகளால்அடிக்கப்பட்டு மதப்பெருக்குக்கொண்டயானைபோல ரக்தத்தைப்பெருக்கிக்கொண்டு துரியோதனனைக் கொல்லக்கருதினன். மிக்கபுஜபலமுள்ள அந்தராக்ஷஸன் மலைகளையும்பிளக்குந்திறமையுடையதும் நன்றாகஜ்வலிக்கின்றதும் பெரிதான தூமகேதுவைப்போலப் பிரகாசிக்கின்றதும் ஜ்வலிக்கின்றவஜ்ராயுதம்போன்றதுமான ஒருபெரிய சக்தியைக்கையில்எடுத்து உம்முடையபுத்திரனைக்கொல்லக்கருதி எதிர்த்துவந்தான். அந்தச்சக்தியாயுதம்எடுக்கப்பட்டதுகண்டு வங்கதேசாதிபதியானவன் மலைபோன்றயானையை ராக்ஷஸனைக்குறித்து விரைந்து ஏவினன். அவன் பலமுள்ளதும் யுத்தத்தில்விரைவாகச்செல்லும் ஸ்வபாவமுள்ளதுமான சிறந்தயானையினால் துரியோதனனுடையரதமிருக்கிறவழியைத் தடுத்துக்கொண்டான். அந்தவங்கதேசத்தரசன் யானையினால் உமதுபுத்திரனுடைய[1]ரதத்தையும் தடுத்தான். புத்திமானான வங்கராஜனாலே மார்க்கம் தடுக்கப்பட்டதைக்கண்டு கோபத்தினால் சிவந்தகண்களையுடைய கடோத்கசன் எடுக்கப்பட்ட அந்தப்பெரிய சக்தியை அந்தயானையின்மீது எறிந்தான். கடோத்கசனுடையகையினின்றுவிடுபட்ட மஹாசக்தியினால் அடிக்கப்பட்ட அந்தயானை ரக்தத்தைப்பெருக்கிக்கொண்டு கீழேவிழுந்து உயிரையும் இழந்தது. பிறகு யானைகீழேவிழுந்தவுடனே பலசாலியானவங்கதேசாதிபன் வேகத்தோடு துள்ளிக்குதித்துப் பூமியில்நின்றான். துரியோதனனும் உத்தமமானயானைகீழேவிழுந்ததையும் ஸைனியம் நாசம்பண்ணப்பட்டதையுங்கண்டு அதிகமனவருத்தமடைந்தான். அந்தக்கடோத்கசனுடைய பராக்கிரமத்தைக்கண்டு எதிர்த்துப்போர்புரிவதற்குச்சக்தியற்ற துரியோதனராஜன் ஓடவேண்டியசமயம்நேர்ந்திருந்தும் க்ஷத்திரியதர்மத்தையும் தனக்குள்ளஅதிகௌரவத்தையும்முன்னிட்டு மலைபோல அசைவற்றுநின்றான். அவன் அதிககோபங்கொண்டு ஊழித்தீப்போன்ற ஒளியுள்ள கூர்மையானபாணத்தை ஸந்தானஞ்செய்து கோரமானஅந்தராக்ஷஸன்மீது பிரயோகித்தான். மிக்கஉறுதியுள்ளவனானகடோத்கசன் இந்திரனுடையவஜ்ராயுதம்போலப் பிரகாசிக்கின்றதும் தன்னைநோக்கிவருகின்றதுமான அந்தப்பாணத்தைப்பார்த்து லாகவத்தினால் அதனைத் தன்மீதுபாயாமலிருக்கும்படி செய்துகொண்டான். கோபத்தினால் கண்கள்மிகச்சிவந்தஅந்தக்கடோத்கசன் யுகாந்தகாலத்துமேகம்போல மறுபடியும் உக்கிரமாகக்கர்ஜித்து ஸைனியங்

[1] வேறுபாடம்.

களைப் பயமடையும்படிசெய்தான். பயங்கரனான அந்தராக்ஷஸனுடைய அந்தப்பயங்கரமான ஒலியைக்கேட்டு, சந்தனுபுத்திரரானபீஷ்மர் ஆசாரியரைஅடைந்து சொல்லலானார்.

'ராக்ஷஸனால்உண்டுபண்ணப்பட்ட பயங்கரமான இந்தச்சப்தமானது கேட்கப்படுதலால் ஹிடிம்பாபுத்திரனான கடோத்கசன் நிச்சயமாகத் துரியோதனராஜனோடு போர்புரிகிறான். இந்தராக்ஷஸன் யுத்தத்தில் ஒருபிராணியினாலும் ஜயிக்கத்தகாதவன். அரசனைக்காப்பாற்றுவதற்காக அவ்விடம் செல்லுங்கள். உங்களுக்கு மங்களம். ராக்ஷஸனால்நன்கு பிடிக்கப்பட்ட மிக்கபுஜபலமுள்ள துரியோதனனைக்குறித்து விரைவாகஓடுங்கள். சத்துருக்களைத் தபிக்கச்செய்கின்றவர்களே! நம்மனைவருக்கும் இதுவன்றோ முக்கியமானகாரியம்?' என்றார். பிதாமஹருடையவார்த்தையைக்கேட்டு மஹாரதர்களான துரோணர், ஸோமதத்தன், பாஹ்லிகன், ஜயத்ரதன், கிருபர், பூரிச்ரவஸ், சல்யன், அவந்திதேசத்தரசன், பிருகத்பலன், அஶ்வத்தாமா, விகர்ணன், சித்ரஸேனன், விவிம்சதி, மற்றும்அவர்களைத்தொடர்ந்துவந்திருக்கிறவர்கள் ஆகிய அநேகஆயிரக்கணக்கான ரதிகர்கள், கடோத்கசனால்எதிர்க்கப்பட்டிருக்கிற உம்முடையபுத்திரனான துரியோதனனைப் பாதுகாக்க எண்ணித் துரியோதனனிருக்கிறவிடத்திற்கு அதிவேகமாகச் சென்றார்கள். அவமதிக்கமுடியாததும் மஹாரதர்களால்பாதுகாக்கப்பட்டதும் தன்னைக்கொல்வதற்காகவருகின்றதுமான அந்தச்சேனையைக் கண்டு மிக்கபுஜபலமுள்ள ராக்ஷஸசிரேஷ்டன் பெரியவில்லைக்கையில் பிடித்து, சூலங்களையும்உலக்கைகளையும்கையில்கொண்டவர்களும் பற்பலஆயுதங்களையுடையவர்களுமானபந்துக்களாலே சூழப்பெற்று மைநாகம்என்கிறமலைபோல அசைவற்றுநின்றான். பிறகு ராக்ஷஸர்களுள் முக்கியனான கடோத்கசனுக்கும் துரியோதனனுடையசேனைக்கும் கைகலந்ததும் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணக்கூடியதுமான போர் நடந்தது. சப்திக்கின்றவிற்களுடையஒலியானது எரிக்கப்படுகின்ற மூங்கில்களுடையசப்தம்போல யுத்தத்தில் எங்கும் நெருங்கினதாகக் கேட்கப்பட்டது. யுத்தவீரர்களுடையகவசங்களில்போடப்படும் ஆயுதங்களின்ஒலியானது பிளக்கப்படுகின்றமலைகளின்ஒலிபோல உண்டாகியது. வீரர்களுடையகைகளால்பிரயோகிக்கப்படும் தோமரங்களுடையரூபமானது ஆகாயத்தில்ஸஞ்சரிக்கின்ற ஸர்ப்பங்களுடைய ரூபம்போலாயிற்று. பிறகு தோள்வலியமைந்தராக்ஷஸசிரேஷ்டன் கோபமூண்டு மிகவும்பெரியவில்லில்நாணொலியெழுப்பிப் பயங்கரமான சப்தத்துடன் கர்ஜித்துக்கொண்டு ஒரு அர்த்தசந்திரபாணத்தினால்

ஆசார்யருடையவில்லை அறுத்தான். ஒருபல்லத்தினாலே ஸோமதத்தனுடையகொடியையும் நாசம்செய்து ஸிம்மநாதஞ்செய்தான். பாஹ்லிகனை மூன்றுபாணங்களாலும், கிருபரை ஒருபாணத்தாலும், சித்திரஸேனனை மூன்றுபாணங்களாலும் மார்பில்திருப்பியடித்தான். பின்பு விகர்ணனை அநுனைக் காதுவரையில்நன்குஇழுத்துவிடப்பட்டதும் மிகுந்த கவனத்துடன் லக்ஷியத்தைநோக்கிவிடப்பட்டதுமான ஒருபாணத்தினாலே தோள்பூட்டில் அடித்தான். அந்தவிகர்ணன் ரக்தத்தால் நங்குநனைக்கப்பட்டுத் தன்னுடையரதத்தின்மத்தியிலேயே உட்கார்ந்தான். பிறகு, அளத்தற்கரியபலமுள்ளகடோத்கசன் மிகுந்தகோபங்கொண்டு மறுபடியும் பூரிஸ்ரவஸின்மீது பதினைந்துபாணங்களைப் பிரயோகித்தான். அவைகள் அவனுடையகவசத்தையுடைத்துக்கொண்டு பூமியில் விரைவாகப்பிரவேசித்தன. கடோத்கசனுனவன், விவிம்சதி அஸ்வத்தாமா இவர்களின்ஸாரதிகளையும் அடித்தான். அவ்விருவரும் குதிரைகளுடையகடிவாளங்களை நழுவவிட்டுத் தேர்த்தட்டிலேயே சாய்ந்தார்கள். ராக்ஷஸேந்திரன் ஓர் அர்த்தசந்திரபாணத்தாலே ஸிந்துராஜனுடைய பொன்னால்அலங்கரிக்கப்பட்ட பன்றிக்கொடியையறுத்து இரண்டாவதான அர்த்தசந்திரபாணத்தினாலே அவனுடையவில்லையுமறுத்தான். பிறகு, அவன் கோபத்தால்கண்கள்சிவந்து நான்குநாராசங்களாலே மிகுந்தவைதர்யமுள்ளவனான அவந்திதேசத்தரசனுடைய நான்கு குதிரைகளையும் கொன்றான். காதுவரையிலும் நன்றாகஇழுத்துவிடப்பட்டதும் அவைவந்ததும் கூர்மையுள்ளதுமான ஒருபாணத்தினாலே ராஜபுத்திரனான பிருகத்பலனையும் பிளந்தான். அந்தப்பிருகத்பலன் நன்றாகஅடிக்கப்பட்டுத் துன்பத்தையடைந்து தேரின்நடுவிலேயே உட்கார்ந்தான். தேரிலிருக்கிறராக்ஷஸேந்திரன் அதிகமான கோபாவேசங்கொண்டு ஸர்ப்பங்களுக்கொப்பானவைகளும் தீட்டப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளுமான பாணங்களைச் சல்யன்மீது விடுத்தான். அவ்வம்புகள் யுத்தத்தில் ஸமர்த்தனான சல்யனைப் பிளந்தன.

---

தொண்ணூற்றுமூன்றாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தம்.)

ராக்ஷஸனான கடோத்கசன் யுத்தரங்கத்தில் உம்மைச்சேர்ந்த அனைவரையும் புறங்காட்டியோடும்படியடித்துவிட்டுக் கொல்லநினைந்து துரியோதனனுடையஸமீபத்தில் ஓடிவந்தான். அவன் துரியோதன

ராஜனை விரைவாகத்திரும்பிவருவதாகக்கண்டு யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களான உம்மைச்சேர்ந்தவீரர்கள் அவனைக்கொல்லக்கருதி எதிர்த்தோடினார்கள். மகாரதர்கள் ஒருபனைமரஉயரமுள்ளவிற்களை நாணொலியிடும்படிசெய்துகொண்டும் ஸிம்மநாதம்செய்துகொண்டும் ஸிம்மக்கூட்டங்கள்போல ராக்ஷஸன்ஒருவனை எதிர்த்து ஓடினார்கள். பிறகு,அந்தவீரர்கள் சரத்காலத்தில் மேகங்கள் பர்வதத்தில் நீர்த்தாரைகளைப்பொழிவதுபோல ராக்ஷஸன்மீது சரமாரியை எல்லாப்பக்கங்களிலும்பொழிந்தார்கள். வேணுகமென்கிறஆயுதத்தினாலே அடிக்கப்பட்டயானைபோல நன்றாகஅடிக்கப்பட்டுத் துன்பத்தையடைந்த அந்தராக்ஷஸன் அப்பொழுது கருடனைப்போல ஆகாயத்தில் கிளம்பி எங்கும் ஸஞ்சரித்தான். பயங்கரமானசப்தத்தையுடைய அந்தராக்ஷஸன் சரத்காலமேகம்போலத் திக்குகளையும் ஆகாயத்தையும் திக்குக்கோணங்களையும் எதிரொலியிடும்படிசெய்துகொண்டு இரைந்து கர்ஜித்தான். அவனுடையஅந்தச்சப்தத்தைக்கேட்டு யுதிஷ்டிராஜர் பகைவர்களை அடக்குகிறவனானபீமனைப்பார்த்து, கர்ஜிக்கின்ற இந்தக்கடோத்கசனுடைய பயங்கரமானசப்தம் கேட்கப்படுதலால் இந்தராக்ஷஸன் மகாரதர்களான தார்த்தராஷ்டிரர்களோடு போர்புரிகிறானென்பதுதிண்ணம். அந்த ராக்ஷஸபுங்கவனான கடோத்கசன் தனியே மிகப்பெரியகாரியத்தைச்செய்கிறானென்று நான் எண்ணுகிறேன். பிதாமஹரோ மிகுந்தகோபங்கொண்டு பாஞ்சாலர்களைக் கொல்வதற்கு முயற்சித்திருக்கின்றார் அந்தப்பாஞ்சாலர்களைக்காப்பதற்காகப் பல்குனன் பகைவர்களோடு போர்புரிகிறான். மிக்கவல்லமையுள்ளவனே! ஸமீபத்திலநேர்ந்திருக்கிற இந்தஇரண்டுகாரியத்தையுமறிந்து நீ செல். அதிகஸந்தேகநிலைமையிலிருக்கின்ற ஹிடிம்பாபுத்திரனைரக்ஷி' என்றுகூறினார்.

பீமஸேனன் பிராதாவினுடையவார்த்தையைக்கேட்டு விரைந்து எல்லாஅரசர்களையும் ஸிம்மநாதத்தினால் பயமடையச்செய்துகொண்டு பர்வகாலத்தில்ஸமுத்திரம்போல அதிவேகத்துடன் சென்றான். அந்தப்பீமஸேனனை ஸத்தியதிருதியும் யுத்தத்தில்துஷ்டமதங்கொண்ட ஸௌசித்தியும் ச்ரேணிமானும் வஸுதானனும் காச்யனுடையபுத்திரனானஅபிபூவும் பின்தொடர்ந்தார்கள். அபிமன்யுவைத்தலைவனாகக்கொண்ட மகாரதர்களான திரௌபதிபுத்திரர்களும் வல்லமையுள்ளவனானக்ஷத்ரதேவனும் க்ஷத்ரதர்மாவும் தன்ஸைன்யத்துடன்கூடியவனும் அநூபதேசாதிபதியுமானநீலனும் பெரியதேர்க்கூட்டத்தோடு ஹிடிம்பாபுத்திரனும் ராக்ஷஸேந்திரனுமானகடோத்கசனைச் சூழ்ந்து

கொண்டு எப்பொழுதும்மதமுள்ளவைகளும் அடிக்குந்தன்மையுள்ளவைகளுமான ஆறுயிரம்யானைகளோடு பாதுகாத்தார்கள். அவர்கள் பெரியஸிம்மநாதத்தாலும் சக்கரத்தின் நுனியினின்றுண்டாகும்சப்தத்தாலும் குதிரைக்குளம்புகளின் ஒலிகளாலும் பூமியைநடுங்கும்படிசெய்துகொண்டு வந்தார்கள். அங்ஙனம்வருகின்ற அந்தவீரர்களுடைய அவ்விதசப்தத்தைக்கேட்டு உம்முடையசேனையானது பீமஸேனனிடத்தினின்றுண்டான பயத்தால் மனக்கவலையுற்று நிறம்மாறியிருக்கின்ற முகங்களோடு கடோத்கசனைவிட்டு யுத்தத்தினின்றும் திரும்பியது. பிறகு, அந்தயுத்தகளத்தில் மகாபலசாலிகளும் யுத்தங்களில் புறங்காட்டாதவர்களுமானபாண்டவவீரர்களுக்கும் உம்மைச்சேர்ந்த கௌரவவீரர்களுக்கும் யுத்தம்நடந்தது. மகாரதர்கள் பற்பலவித ஆயுதங்களைப் பிரயோகித்துக்கொண்டும் ஒருவரையொருவரெதிர்த்தும் ஒருவரோடொருவர்கைகலந்தும் மகாபயங்கரமாயும் பயந்தவர்களுக்குப்பயத்தை உண்டுபண்ணக்கூடியதாயுமுள்ளபோரைச் செய்தார்கள். அந்தயுத்தத்தில் குதிரைகள் குதிரைகளோடெதிர்த்தன. காலாட்கள்காலாட்களோடும் தேராளிகள்தேராளிகளோடும் யானைகள்யானைகளோடும் எதிர்த்துப்போர்புரிந்தனர். யுத்தாங்கத்திலுள்ளவீரர்கள் (ஜயத்தை) விரும்பி ஒருவரையொருவரெதிர்த்தார்கள். (அவ்விருதிறத்துவீரர்களும்) ஒருவரோடொருவரெதிர்த்துப் போர்புரிவதால் உடனே பெருந்தூளியானது விரைவாகத்தோன்றியது. யானைகள், குதிரைகள், தேர்கள், காலாட்கள் இவர்களினுடையபாதங்களாலும் சக்கரத்தின் நுனிகளாலும் நன்றாகஎழுப்பப்பட்டதும் புகைநிறமானதும் சிவப்புநிறமுள்ளதுமான கொடியபுழுதியானது யுத்தபூமியை நன்றாகச்சூழ்ந்துகொண்டது. தம்மவரென்றும் பகைவரென்றும் ஒருவரைஒருவர் அறியவில்லை. தகப்பன் பிள்ளையை அறியவில்லை. அவ்வாறே புத்திரனும் பிதாவை அறியவில்லை. அவ்வாறு வரம்புகடந்ததும் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணக்கூடியதுமான அந்தயுத்தத்தில் சஸ்திரங்கள் கர்ஜிக்கின்றமனிதர்கள் இவர்களின் மிக்கபேரொலியானது [1] ப்ரேதங்களுடைய த்வனிபோல உண்டாயிற்று. அவ்விடத்தில் யானைகள் குதிரைகள் மனிதர்கள்இவற்றின் ரக்தத்தினாலும் நரம்புகளாலும் அலைமோதுகின்றதும் மயிர்களாகிறபாசிக்கொத்துகளோடும் புல்தரைகளோடும்கூடியதுமான (பெரியரக்த) நதியானது பெருகஆரம்பித்தது. மனிதர்களுடையஉடல்களிலிருந்து யுத்தத்தில்விழுகின்ற தலைகளுடைய பெரியசப்தமானது கீழேவிழுகின்றகற்களுடைய சப்தம்போ

---

[1] ஒருவகைப் பிசாசுகள்.

லக் கேட்கப்பட்டது. தலையையிழந்தமனிதர்களாலும் சரீரங்களறுக்கப்பட்ட யானைகளாலும் உடல்கள் பிளக்கப்பட்டகுதிரைகளாலும் பூமி வியாபிக்கப்பட்டதாகியது. யுத்தத்தின்பொருட்டு முயற்சிக்கின்ற மகாரதர்கள் பற்பலவிதமான சஸ்திரங்களைப் பிரயோகித்துக்கொண்டு ஒருவரைஒருவர் எதிர்த்துவந்தார்கள். குதிரையின்மீதுள்ள வீரர்களாலே தூண்டப்பட்டகுதிரைகள் (எதிரியின்) குதிரைகளை யுத்தத்திலெதிர்த்து ஒன்றைஒன்று தாக்கிக்கொண்டு உயிரையிழந்து விழுந்தன. மனிதர்கள் மிகுந்தகோபத்தினால் சிவந்தகண்களையுடையவர்களாக மனிதர்களையெதிர்த்து மார்புகளால் மார்புகளில் மோதி ஒருவரையொருவர் வதஞ்செய்தார்கள். பகைவர்களையெதிர்த்துத்தடுக்குந்திறமையுள்ளவர்களான யானைப்பாகர்களாலே தூண்டப்பட்டயானைகள் யுத்தத்தில் (எதிரியினுடைய) யானைகளையே கொம்பின்நுனிகளால்குத்தி நாசஞ்செய்தன. மேலேதோன்றியிருக்கின்ற ரக்தவெள்ளத்தையுடையவைகளும் கொடிகளால்அலங்கரிக்கப்பட்டவைகளுமானஅந்தயானைகள் ஒன்றோடொன்று சேர்க்கைபெற்று மின்னல்களுடன்கூடினமேகங்கள்போலக் காணப்பட்டன. சிலயானைகள் கொம்புநுனிகளாலே பிளக்கப்பட்டும் தோமரங்களாலே மத்தகங்கள் உடைக்கப்பட்டும் கர்ஜிக்கின்றமேகங்கள்போலக் கர்ஜித்துக்கொண்டு எதிர்த்தோடிவந்தன. கைகலந்தஅந்தயுத்தத்தில் சிலயானைகள் துதிக்கைகள்இரண்டாகஅறுக்கப்பட்டும் சிலயானைகள்சரீரங்கள்அறுக்கப்பட்டும் சிறகுகளறுக்கப்பட்டமலைகள்போலக் கீழேவிழுந்தன சிலஉத்தமமானயானைகள் எதிரியின்யானைகளாலே விலாப்புறங்களில்பிளக்கப்பட்டு, மலைகள் அதிகமாகத் [1] தாதுக்களைப் பெருக்குவதுபோல அதிகமாக ரக்தத்தைச் சொரிந்தன. மற்றும்சிலயானைகள் நாராசங்களாலும் தோமரங்களாலும் அடிக்கப்பட்டு (தம்மீதுள்ளவீரர்களையிழந்து) வீரிட்டுக்கொண்டு கொடுமுடிகளையிழந்தமலைகள்போலச் சத்துருயானைகளை எதிர்த்தோடின. சிலயானைகள் சினமிகுந்து மதத்தினால் மதிமயங்கித் தடையற்று யுத்தரங்கத்தில் நூறுநூறாகத் தேர்களையும் குதிரைகளையும் காலாட்படைகளையும் அடித்தன. அவ்வாறே குதிரைகள் குதிரைக்காரர்களால் சாட்டிகளாலும் தோமரங்களாலும் அடிக்கப்பட்டுத் திசைகளைக்கலங்கச்செய்துகொண்டு அவ்வவ்வழியினாலே எதிர்த்தன. நற்குலத்திற்பிறந்தவர்களும் சரீரத்தை யுத்தத்தில்இழக்கத்துணிந்தவர்களுமானரதிகர்கள் ரதிகர்களோடு அதிகமானசக்தியைக்கொண்டு பயமற்றுக் காரியங்களைச் செய்தார்கள். போரில்

[1] செம்புமுதலியவைகள்

வல்லஅரசர்கள் புகழையாவது அல்லது ஸ்வர்க்கத்தையாவது அடைய விரும்பி ஸ்வயம்வரத்தில்செய்வதுபோல யுத்தத்தில் ஒருவரைஒருவர் அடித்துக்கொண்டார்கள். மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணக்கூடிய அவ்விதயுத்தம் அவ்வாறுநடக்கையில் துர்யோதனனுடையபெரியசேனையானது யுத்தத்தில் விருப்பமற்றதாகச்செய்விக்கப்பட்டு விரைவாக ஓடியது.

---

## தொண்ணூற்றுநான்காவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(கடோத்கசன் யுத்தம்.)

தன்னுடையஸைனியம்கொல்லப்பட்டதைக்கண்டு துரியோதனராஜன் மிக்ககோபங்கொண்டு பகைவரைப்பீடிக்கும்பீமஸேனனைக் குறித்துத் தானே நேரில் எதிர்த்துவந்து இந்திரனுடையவஜ்ராயுதத்திற்குஒப்பானசப்தத்தையுடைய மிகப்பெரிய வில்லைக்கையிற்பிடித்துப் பெரியசரமாரியைப் பாண்டவன்மீது பொழிந்தான். கோபத்தையுடைய துரியோதனன் மிக்ககூர்மையுள்ளதும் இறகுகள்கட்டியதுமான ஓர் அர்த்தசந்திரபாணத்தையும் ஸந்தானம்செய்து பீமஸேனனுடையவில்லைத் துண்டாக்கினன். அந்தஸமயத்தைநன்றாகப்பார்த்து மஹாரதனான துரியோதனன் விரைந்து மலைகளையும்பிளக்குந்திறமையுள்ள கூர்மையானஓர்அம்பை வில்லிற்பூட்டினன்; அவ்வம்பினலே பீமஸேனனை மார்பிலடித்தான். நன்றாகஅடிக்கப்பட்டவனும் பராக்கிரமசாலியுமான அந்தப்பீமஸேனன் துன்பத்தையடைந்து இரண்டுகடைவாய்களையும் நக்கிக்கொண்டு பொன்னால் அலங்கரிக்கப்பட்டகொடிமரத்தை நன்றாகப்பிடித்துக்கொண்டான். அவ்வாறு நல்லமனநிலைமையைஇழந்திருக்கிற பீமஸேனனைக்கண்டு கடோத்கசன் எரிக்கப்போகின்ற தீயைப்போலக் கோபத்தினால் நன்றாகஜ்வலித்தான். அபிமன்யுவை முதன்மையாகக்கொண்ட பாண்டவசேனையிலுள்ள மஹாரதர்கள் துர்யோதனராஜனைக் கூவிஅழைத்துக்கொண்டு பரபரப்புடன் எதிர்த்து ஓடிவந்தார்கள். கோபங்கொண்டுஅதிகப்பரபரப்புடன்வருகின்ற அந்தப்பாண்டவவீரர்களைக்கண்டு துரோணர் உமது ஸேனையிலுள்ள மஹாரதர்களைநோக்கி, 'நீங்கள் விரைவாகச்செல்லுங்கள். உங்களுக்கு மங்களம். வியஸனமாகிறஸமுத்திரத்தில்மூழ்கி அதிகஸந்தேஹத்தை அடைந்திருக்கின்றஅரசனைக் காப்பாற்றுங்கள். இதோ பாண்டவசேனையிலுள்ள மஹாரதர்கள் கோபங்கொண்டு பெ

ரியவில்லைக் கையிற்கொண்டவர்களாகவும் பற்பலவிதசஸ்திரங்களை [1] ப்ரயோகிக்கின்றவர்களாகவும் பயங்கரமானசப்தங்களைவெளியிட்டுக் கொண்டுகர்ஜிக்கின்றவர்களாகவும் அரசர்களைப்பயமடையச்செய்கின்றவர்களாகவும் பீமஸேனனை முன்னிட்டுக்கொண்டு துரியோதனனை எதிர்த்துவந்துவிட்டார்கள்' என்றுகூறினர். ஆசாரியருடைய அந்த வார்த்தையைக்கேட்டு ஸௌமதத்தியைமுதன்மையாகக்கொண்ட உம்மைச்சேர்ந்தவீரர்கள் பாண்டவர்களுடையசேனையை எதிர்த்தார்கள். க்ருபர், பூரிஶ்ரவஸ், சல்யன், த்ரோணபுத்திரர், விவிம்சதி, சித்ரஸேனன், விகர்ணன், ஸைந்தவன், பிருஹத்பலன், சிறந்தவில்லாளிகளான அவந்திதேசராஜகுமாரர்களான விந்தானுவிந்தர்கள் ஆகிய இவர்கள் துர்யோதனனை நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். ஒருவரையொருவர்கொல்வதில்விருப்பங்கொண்டவர்களான அந்தப்பாண்டவர்களும் கௌரவர்களும் இருபதடி அளவில்நெருங்கிச்சென்று போர்புரிந்தனர். மிக்கபுஜபலமுள்ளபாரத்வாஜர் இவ்வாறுசொல்லிவிட்டுப் பெரியவில்லை நாணொலிசெய்து பிறகு இருபத்தாறுபாணங்களைப் பீமன்மீது விடுத்தார். கைவன்மைமிக்கதுரோணர் மாரிக்காலத்தில் மேகமானது ஜலதாரைகளை மலையின்மீது பொழிவதுபோல அம்புகளை விரைவாக மறுபடியும் பீமன்மீது இறைத்தார். மஹாபலசாலியும் சிறந்தவில்லாளியுமானபீமஸேனன் விரைந்து பத்துப்பாணங்களாலே இடவிலாப்புறத்தில் அந்தத்துரோணரைத் திருப்பியடித்தான். நன்றாகஅடிக்கப்பட்டவரும் துன்பமடைந்தவரும் பிராயமுதிர்ந்தவருமான துரோணர் ப்ரஜ்ஞைதப்பி உடனே தேரின்நடுவில் உட்கார்ந்தார். ஆசாரியர்மிக்க துன்பமுற்றிருப்பதைக்கண்டு துரியோதனராஜனும் த்ரோணபுத்திரரும் மிக்ககோபங்கொண்டு பீமஸேனனைத் தாங்களே எதிர்த்தார்கள். எதிர்த்துவருகின்றவர்களும் காலனுக்கும் அந்தகனுக்கும் யமனுக்கும் ஒப்பானவர்களுமான அவ்விருவரையும்பார்த்து மிக்கபுஜபலமுள்ளபீமஸேனன் கதையை த்வரையுடன் எடுத்துக்கொண்டு ரதத்தினின்றுவேகமாகக்குதித்து யமதண்டம்போன்ற அந்தப்பெரியகதையை ஓங்கிக்கொண்டு யுத்தரங்கத்தில் மலைபோல் அசைவற்றுநின்றான். கதாயுதத்தைத் தூக்கிக்கொண்டு ஒருகொடுமுடியையுடைய கைலாஸம்போலநிற்கின்ற அந்தப்பீமஸேனனைக்கண்டு துரியோதனனும் அஶ்வத்தாமாவும் ஒன்றுசேர்ந்து எதிர்த்தோடினர்கள். ஒன்றுசேர்ந்துஎதிர்த்துவருகின்றவர்களும் பரபரப்புள்ளவர்களும் பலசாலிகளுள்உத்தமர்களுமான அவ்விருவரையும் த்வரையுடன்கூடினவனானபீமஸேனன்

[1] ஒருசொல் விடப்பட்டது.

வேகத்துடன் எதிர்த்தான். எதிர்த்துவருகின்றவனும் மிக்ககோபங்கொண்டவனும் பயங்கரமானதோற்றமுள்ளவனுமான அந்தப்பீமனைக் கண்டு கௌரவசேனையிலுள்ள மஹாரதர்கள் விரைவாகஎதிர்த்தார்கள். பாரத்வாஜரை முதன்மையாகக்கொண்ட எல்லாக்கௌரவவீரர்களும் பீமஸேனனைக்கொல்லவேண்டுமென்கிறஎண்ணத்தினால் எல்லோரும் ஒன்றுகூடி நாற்புறங்களிலும் பாண்டவனைப்பீடித்துக்கொண்டு பற்பலவிதசஸ்திரங்களைப் பீமனுடையமார்பில் பிரயோகித்தார்கள். துன்புறுத்தப்படுகின்றவனும் ஸம்சயத்தையடைந்திருக்கின்றவனும் மஹாரதனுமான அந்தப்பீமஸேனனைக்கண்டு அபிமன்யுவைத்தலைவனாகக்கொண்ட பாண்டவசேனையிலுள்ள மஹாரதர்கள் இழத்தற்கரியஉயிரையிழந்தாவது பாதுகாக்கவெண்ணிப் பீமஸேனனுக்கு எதிரில் ஓடிவந்தார்கள். சூரனும் பீமனிடத்தன்புள்ளநண்பனும் கார்மேகம்போன்றவடிவமுள்ளவனும் அநூபதேசாதிபதியுமானநீலன் அதிககோபங்கொண்டு த்ரோணபுத்திரரை எதிர்த்தான். மஹாவில்லாளியானஅந்தநீலன் எப்பொழுதுமே த்ரோணபுத்திரரோடு விரோதம்பாராட்டுகிறவன். முற்காலத்தில் இந்திரன் ஒருவராலும்ஜயிக்கமுடியாதவனும் தேவர்களுக்குப்பயத்தையுண்டுபண்ணுகிறவனும் கோபங்கொண்டு தன்பிரதாபத்தினால் மூவுலகையும் பயமடையச்செய்தவனுமான விப்ரசித்தியென்கிற அஸுரனை அடித்ததுபோலப் பெரியவில்லினாணொலியெழுப்பித் த்ரோணபுத்திரரை ஒருபாணத்தால் அடித்தான்.[1] நீலனாலேநன்குதொடுக்கப்பட்ட அம்பினால் பிளக்கப்பட்டவரும் மேலேபெருகுகின்றரக்தவெள்ளத்தோடுகூடியவரும் கோபமுள்ளவரும் புத்திசாலிகளுள்உத்தமருமான அந்த அஸ்வத்தாமா இந்திரனுடையவஜ்ராயுதத்திற்குஒப்பான சப்தத்தோடுகூடினஆச்சர்யகரமான வில்லை நாணொலிசெய்துகொண்டு நீலனைஅழிக்கநினைந்தார். பிறகு அஸ்வத்தாமா பளபளப்புள்ளவைகளும் சிற்பியினால்சாணையில்தீட்டப்பட்டவைகளுமானபல்லங்களை ஸந்தானம்செய்து அவனுடையநான்குகுதிரைகளையுங்கொன்று கொடிமரத்தையும்கீழேதள்ளி ஒருபல்லத்தினாலே அவன்ஸாரதியையும்அடித்துத் தேர்த்தட்டினின்று கீழேவிழும்படிசெய்தார். ஏழாவதுபல்லத்தினாலே நீலனையும் மார்பிலடித்தார். நன்றாகஅடிக்கப்பட்ட அந்தநீலன் துன்பமுற்று ரதமத்தியத்தில் உட்கார்ந்தான். பர்வதம்போன்றவனும் மோகமடைந்தவனுமானநீலராஜனைக்கண்டு கடோத்கசன் மிக்ககோபங்கொண்டவனாகவும் ஞாதிகளால்சூழப்பட்டவனாகவும் யுத்தத்தில்பிரகாசிக்கின்ற த்ரோண

[1] அதிகபாடமான அரைஸ்லோகம் விடப்பட்டது.

புத்திரமா விரைவாக எதிர்த்துஓடினன். அவ்வாறே யுத்தத்தில் கெட்டமதங்கொண்ட இன்னும்சிலராக்ஷஸர்கள் துரோணபுத்திரரை எதிர்த்தார்கள் புஜபலம்மிக்கவனும் வீரனுமானபீமஸேனன் கறுத்த மைபோன்றநிறமுடையநீலனைத் தன்ரதத்திலேற்றிக்கொண்டு துர்யோதனனருகில்வந்தான். பராக்ரமசாலியான அஸ்வத்தாமா கோரமான தோற்றமுள்ள ராக்ஷஸனானகடோத்கசனைப்பார்த்து விரைந்துஎதிர்த்துஓடினர். அஸ்வத்தாமா மிகுந்தகோபமுற்று, கடோத்கசனுக்கு முன் கோபத்துடன் செல்லுகின்றவர்களாக முன்னிலையிலிருந்தஅச்சந்தருந்தோற்றமுள்ளராக்ஷஸர்களை அடித்தார். துரோணபுத்திரருடைய வில்லினின்றுவிடுபட்ட அம்புகளால் அவ்வரக்கர்கள்தோற்கச்செய்யப்பட்டதுகண்டு பெரியதேகத்தையுடையவனும் பீமஸேனனுடையபுத்திரனுமானகடோத்கசன் கோபம்கொண்டான். பிறகு மாயாவியான ராக்ஷஸேந்திரன் யுத்தத்தில் துரோணபுத்திரரை மயங்கும்படிசெய்துகொண்டு கொடியதும் மிக்கபயங்கரமுமானமாயையை வெளிப்படுத்தினன். பிறகு உம்மைச்சேர்ந்தவர்களனைவரும் கடோத்கசனுடைய மாயையினலே புறங்காட்டியோடும்படிசெய்யப்பட்டார்கள். அறுக்கப்பட்டவர்களும் யுத்தபூமியில் புரளுகின்றவர்களும் தளர்ச்சியுற்றவர்களும் ரக்தத்தால்நனைக்கப்பட்டவர்களுமானவீரர்கள் ஒருவரையொருவர்பார்த்துக்கொண்டு துரோணரையும் துரியோதனனையும் சல்யனையும் அஸ்வத்தாமாவையும் பார்த்தார்கள். சிறந்தவில்லாளிகளும் பிரதானர்களுமான கௌரவரதிகர்கள் எல்லோரும் பெரும்பாலும் நாசம்செய்யப்பட்டார்கள். யானைகளும் கொல்லப்பட்டன. குதிரைகளும் குதிரைவீரர்களும் ஆயிரக்கணக்காக அறுக்கப்பட்டார்கள். அதைக்கண்டு உமது ஸைனியம் பாசறையைநோக்கியோடிற்று. 'யுத்தம் செய்யுங்கள்; ஓடாதீர்கள்; இது கடோத்கசனல்விடப்பட்ட ராக்ஷஸ ஸம்பந்தம்பெற்றமாயை' என்று நானும் பீஷ்மரும் இரைந்து அலறிக்கொண்டிருக்கும்பொழுதே (உமதுசேனை) அதிகமோகம்கொண்டு நிலைபெறவில்லை. பயந்தவர்களான அவர்கள் சொல்லுகின்றவர்களுடைய வார்த்தையை நம்பவில்லை. அந்தக்கௌரவர்கள் வேகமாகஓடுவதைக்கண்டு பாண்டவர்கள் ஜயத்தையடைந்து கடோத்கசனோடுசேர்ந்து ஸிம்மநாதஞ்செய்தனர். சங்கதுந்துபிகளுடையகோஷங்கள் படைக்கர்களிலும் அதிகமாகக்கேட்கப்பட்டன. இவ்வாறு மகாபலசாலியான ஹிடிம்பாபுத்திரனலே உம்முடையஸைனியமனைத்தும் தோற்கச்செய்யப்பட்டுச் சூரியாஸ்தமனஸமயத்தில் திக்குகளில்ஓடின.

---

## தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பகதத்தன்முதலானவர்களின் யுத்தம்.)

பகைவரைவாட்டும் துரியோதனன் பெரிய அந்தயுத்தத்தில் ராக்ஷஸனாலே தனக்குண்டான தோல்வியை அப்பொழுது பொறுக்கவில்லை. துரியோதனன் பீஷ்மரை அடைந்து வணக்கத்துடன் நமஸ்கரித்து அவரிடம் விருத்தாந்தமுழுமையும் உள்ளபடி சொல்லத்தொடங்கினான். பகைவர்களால் அவமதிக்கத்தகாத துரியோதனன் அடிக்கடி பெருமூச்சுவிட்டுக்கொண்டு கடோத்கசனுடைய ஜயத்தையும் தன்னுடைய அபஜயத்தையும் தெரிவித்தான். துரியோதனன் அப்பொழுது கௌரவர்களுக்குப்பிதாமகரான பீஷ்மரைப்பார்த்து, 'பிதாமகரே! பிரபுவே! உம்மையும் துரோணரையும் ஆதாரமாகக்கொண்டு பாண்டவர்களுடன் கோரமான சண்டையானது என்னால் தொடங்கப்பட்டது. பகைவர்களைத்தவிக்கச்செய்பவரே! நல்லபிரஸித்திபெற்றிருக்கிற என்னுடையபதினோர் அக்ஷௌஹிணிஸைனியங்கள் உம்முடைய ஆஜ்ஞையில் என்னுடன் கட்டுப்பட்டிருக்கின்றன. பரதவம்சத்தில்பிறந்தவர்களுள்சிறந்தவரே! அப்படிப்பட்டநான் யுத்தத்தில் கடோத்கசனை எதிர்த்துப் பீமஸேனனை முதன்மையாகக்கொண்டபாண்டவர்களால் ஜயிக்கப்பட்டேன். பகைவர்களைத்தவிக்கச்செய்பவரே! உலர்ந்தமரத்தை நெருப்புஎரிப்பதுபோல அந்தத்தோல்வி என் அங்கங்களைஎரிக்கின்றது. மஹாபாக்யமுள்ளவரே! பகைவர்களைத்தவிக்கச்செய்பவரே! பிதாமஹரே! ஆதலால், பிறரால் அவமதிக்கமுடியாதஉம்மைஅடுத்து உம்முடைய அனுக்ரஹத்தினால் அந்தநீசனை ராக்ஷஸனை நானே கொல்வதற்குவிரும்புகிறேன். எனக்கு அதனைச்செய்வதற்கு நீர் தகுதியுள்ளவராயிருக்கிறீர்' என்றுவேண்டிக்கொண்டான். ராஜாவான துர்யோதனனுடைய இந்தவார்த்தையைக்கேட்டுச் சந்தனுபுத்ரரானபீஷ்மர் துர்யோதனனைநோக்கி இந்தவாக்யத்தை உரைக்கலானார்.

'ராஜனே! கௌரவ! மஹாராஜனே! பகைவரைவாட்டுபவனே! நீநடந்துகொள்ளவேண்டியதைப்பற்றி நான்சொல்லும்வார்த்தையைக் கேள். சத்துருக்களை அடக்குகிறவனே! அப்பா! எல்லாநிலைமைகளிலும் நீ உன்தேகத்தைப் பாதுகாக்கவேண்டும். தோஷமற்றவனே! எப்பொழுதுமே தர்மராஜனோடு நீ போர்புரியவேண்டும். அல்லது அர்ஜுனனோடாவது நகுலஸஹதேவர்களோடாவது பீமஸேனனோடாவது இன்னும்மற்றஅரசர்களோடாவது நீ போர்புரியவேண்டும்.

எப்பொழுதும் அரசன் அரசனையே எதிர்த்துச்செல்லுகிறான். ராஜனே! நீ குராத்மாவான ஹிடிம்பாபுத்திரனோடு போர்புரியத்தகாது. நான், துரோணர், கிருபர், அஸ்வத்தாமா, ஸாத்வதனானகிருதவர்மா, சல்யன், விருஷஸேனன், மஹாரதனானவிகர்ணன், துச்சாஸனனைமுதன்மையாகக்கொண்ட உன்னுடையமற்றத்தம்பியர்கள் ஆகிய நாங்கள் உன்னிமித்தமாக மஹாபலசாலியான அந்தராக்ஷஸனை எதிர்த்துப்போர்புரியப்போகிறோம். பயங்கரனான அந்தராக்ஷஸேந்திரன்விஷயத்தில் உனக்கு அதிகமான [1] பச்சாத்தாபம் இருந்தால் யுத்தத்தில் இந்திரனுக்கு ஸமானனான இந்தப்பகதத்தராஜன் கெட்டபுத்தியுடையவனான அந்தக்கடோத்கசனோடு போர்புரிவதின்பொருட்டு யுத்தாங்கத்தைக்குறித்து வரட்டும்' என்றார். வாக்யங்களைஉரைப்பதில் விசேஷஸாமர்த்தியமுடையவரானபீஷ்மர் துரியோதனராஜனைப்பார்த்து இவ்வளவுமாத்திரம்சொல்லிவிட்டுப் பிறகு அரசர்களுள்சிறந்தவனான துரியோதனனுக்கெதிரில் பகதத்தனைப்பார்த்து, 'மஹாராஜனே! நீ விரைவாகச்செல். எல்லாவில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவனும் குரூரமானசெய்கையுடையவனும் ஹிடிம்பாபுத்திரனுமானராக்ஷஸனை, முற்காலத்தில் இந்திரன் தாரகாஸுரனை எதிர்த்ததுபோல நீ முயற்சியுடன் யுத்தத்தில் எதிர்ப்பாயாக. பகைவர்களைவாட்டுகிறவனே! உன்னிடத்தில் திவ்யமான அஸ்திரங்களிருக்கின்றன. விக்கிரமமும் உன்னிடத்தில் இருக்கிறது. உனக்கு முற்காலத்தில் அனேகதேவர்களோடு யுத்தம்நேர்ந்ததுண்டு. ராஜசிரேஷ்டனே! மகாயுத்தத்தில் நீஒருவனே அவனைஎதிர்த்துப்போர்புரியும் வல்லமைபொருந்தியவன். நீ உன்னுடையசேனையினால்சூழப்பட்டவனாகச்செல். ராக்ஷஸசிரேஷ்டனைக்கொல்' என்று கூறினார். ஸேனாதிபதியானபீஷ்மருடைய இந்தவார்த்தையைக்கேட்டுப் பகதத்தன் ஸிம்மநாதம்செய்துகொண்டு பகைவர்களைநோக்கி விரைவாகஎதிர்த்துச்சென்றான். கர்ஜிக்கின்றமேகம்போல ஸிம்மநாதத்துடன் வருகின்ற அந்தப்பகதத்தனைக்கண்டு பாண்டவசேனையிலுள்ளமஹாரதர்களான பீமஸேனன், அபிமன்யு, ராக்ஷஸனானகடோத்கசன், திரௌபதிபுத்திரர்கள், ஸத்யதிருதி, க்ஷத்ரதேவன், சேதிதேசாதிபதியானவஸுதானன், தசார்ணதேசத்தரசன் ஆகியஇவர்கள் மிக்ககோபங்கொண்டு பகதத்தனை எதிர்த்தார்கள். பகதத்தனும் அவர்களை ஸுப்ரதீகமென்கிற யானையோடு விரைவாக நெருங்கிவந்தான். பிறகு பாண்டவர்களுக்குப் பகதத்தனோடு யமனுடையராஜ்யத்தை விருத்திபண்ணக்கூடியதாம்

[1] வேறுபாடம்.

கொடியதும் பயங்கரமுமானபோர் நடந்தது. ரதிகர்களால்விடப்பட்டவைகளும் பயங்கரமானவேகமுள்ளவைகளும் நல்லகூர்மையுள்ளவைகளுமான அந்தப்பாணங்கள் யானைகளின்மீதும் ரதங்களின்மீதும் வீழ்ந்தன. நல்லமதப்பெருக்குக்கொண்டவைகளும் பாகர்களால் நன்கு பழக்கப்பட்டவைகளுமான பெரியயானைகள் ஒன்றையொன்று எதிர்த்துப் பயமற்றவைகள்போலக் கடும்போர்புரிந்தன. மதத்தினாலே மதிமயங்கியபெரியயானைகள் மஹாயுத்தத்தில் ரோஷாவேசங்கொண்டு உலக்கைகள்போன்ற தந்தங்களாலே ஒன்றைமற்றொன்றுதாக்கிக் கொம்பின் நுனிகளால் பிளந்தன. ஈட்டிகளைக்கையில்கொண்டவீரர்களாலேஏறப்பட்டவைகளும் சாமரங்களைத்தலையின் அணிகளாகக்கொண்டவைகளுமானகுதிரைகள் குதிரைவீரர்களாலேதூண்டப்பட்டு ஒன்றைமற்றொன்று விரைவாகக்கொன்றன. காலாட்படைகளும் காலாட்படைகளினுடையகூட்டங்களாலே சக்திகளாலும் தோமரங்களாலும் அடிக்கப்பட்டு அப்பொழுது நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் யுத்தபூமியில்விழுந்தன. ரதிகர்களும் யுத்தத்தில் கர்ணிகளாலும் நாளீகங்களாலும் தோமரங்களாலும் நானாவிதமான ரதங்களையும் வீரர்களையும் நாசஞ்செய்து ஸிம்மநாதம்செய்தார்கள். மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணுகின்ற அந்தயுத்தம் அவ்வாறு நடக்கும்பொழுது மஹாவில்லாளியானபகதத்தன் நாற்புறங்களிலும் ஜலத்தைப்பெருக்குகின்ற மலைபோல ஏழுவிதங்களாக மதஜலத்தைப்பெருக்கிக்கொண்டிருக்கின்ற மதங்கொண்டயானையோடு பீமஸேனனை எதிர்த்துவந்தான். ஐராவதத்தின்மீது வீற்றிருக்கும் இந்திரன் நீர்த்தாரைகளைப்பொழிவதுபோல ஸுப்ரதீகம்என்கிறயானையின் சிரத்தில்வீற்றிருக்கும்பகதத்தன் ஆயிரம் அம்புகளைப் பீமஸேனன்மீது வாரி இறைத்தான். வர்ஷாகாலத்தில் மேகம் பர்வதத்தின்மீது நீர்த்தாரைகளைப் பொழிவதுபோலப் பகதத்தராஜன் பீமனைச் சரதாரைகளால் அடித்தான். மஹாவில்லாளியும் மிகுந்தகோபங்கொண்டவனும் அதிகப்பரபரப்புள்ளவனுமான பீமஸேனனோ நூற்றுக்கணக்குக்கு அதிகப்பட்டிருக்கின்ற பாதரக்ஷகர்களைச் சாமாரிகளால் அடித்தான். அவர்கள்கொல்லப்படுவதைக்கண்டு பிரதாபசாலியானபகதத்தன் கோபமூண்டு பீமஸேனனுடையரதத்தைக்குறித்துத் தன்சிறந்தயானையைத் தூண்டினான். பகதத்தனால்தூண்டப்பட்ட அந்தயானையானது நாண்கயிற்றினின்று இழுத்துவிடப்பட்ட பாணம்போலச் சத்துருக்களை அடக்குகிறவனான பீமஸேனனைக்குறித்து வேகத்துடனே ஓடியது. எதிர்த்துவருகின்ற அந்தயானையைக்கண்டு பீமஸேனனை முதன்மையாகக்கொண்ட பாண்

டவசேனையிலுள்ளமஹாரதர்கள் வேகத்தோடு அதனை எதிர்த்தார்கள். மஹாபலசாலிகளான கேகயதேசத்துவீரர்கள், அபிமன்யு, திரௌபதிபுத்திரர்கள், சூரனும் தசார்ணதேசாதிபதியுமான க்ஷத்திரதேவன், சேதிதேசத்தரசன், திருஷ்டகேது இவர்களெல்லோரும் கோபங்கொண்டு தேவஸம்பந்தம்பெற்ற உத்தமமான அஸ்திரங்களை எல்லாவிதத்திலும் வெளிப்படுத்திக்கொண்டு அந்தஒருயானையை எல்லாப்பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். அனேகவீரர்களாலே அம்புகளால் அடிக்கப்பட்டு ரக்தவெள்ளம்பெருகுகின்ற அந்தமஹாகஜமானது தாதுக்களால்விசித்திரமாகவிளங்குகின்ற சிறந்தமலைபோலவிளங்கியது. தசார்ணதேசாதிபதியும் மலைபோன்ற யானையின்மீதேறிக்கொண்டு பகதத்தனுடையயானையை எதிர்த்துவந்தான். யுத்தத்தில் தன்னை எதிர்த்துவருகின்ற அந்தயானையை ஸுப்ரதீகமென்கிற கஜபதியும் ஸமுத்திரத்தைக் கரை தடுப்பதுபோலத் தடுத்தது. மிக்க தைர்யமுள்ள தசார்ணதேசாதிபதியினுடைய பெரியயானையானது ஸுப்ரதீகத்தால் தடுக்கப்பட்டதுகண்டு உம்முடையஸைனியங்கள், 'நல்லது, நல்லது' என்று புகழ்ந்தன. பிறகு பிராக்ஜ்யோதிஷதேசாதிபதியானவன் கோபங்கொண்டு அந்தயானைக்கெதிரில் பதினான்குதோமரங்களைப் பிரயோகித்தான். அந்தத்தோமரங்கள் பொன்னால்அலங்கரிக்கப்பட்ட அந்தயானையின்கும்பஸ்தலத்தின்மீதுள்ள கவசத்தைப்பிளந்து புற்றில்பாம்புகள் நுழைவதுபோல விரைவாக (க்கும்பஸ்தலத்தில்) நுழைந்தன. நன்றாக அடிக்கப்பட்டதும் துன்பமுற்றதுமான அந்தயானையானது மதத்தையிழந்து வேகமுள்ளபிராக்ஜ்யோதிஷாதிபதியினுடையயானையினிடத்திலின்று திரும்பிப் பயங்கரமாகப்பிளிறிக்கொண்டு, காற்று வேகத்தால் மரங்களை ஒடிப்பதுபோலத் தனது ஸைனியத்தையே அடித்துக்கொண்டு விரைவாகஓடியது. அந்தயானையானது தோல்வியடைவிக்கப்பட்டிருக்கையில் பாண்டவஸேனையிலுள்ளமகாரதர்கள் பெரியஸிம்மநாதஞ்செய்துகொண்டு யுத்தத்தின்பொருட்டே ஸன்னத்தர்களாகநின்றார்கள்; பிறகு பற்பலபாணங்களையும் பற்பலசஸ்திரங்களையும் இறைத்துக்கொண்டும் பீமனைமுன்னிட்டுக்கொண்டும் பகதத்தனுடைய அருகில் ஓடிவந்தார்கள். எதிர்த்துவருகின்றவர்களும் கோபமுடையவர்களும் பொறுமையுள்ளவர்களுமான அந்தப்பாண்டவவீரர்களுடைய கோரமானசப்தத்தைக்கேட்டு மஹாவில்லாளியானபகதத்தன் பயமின்றிக் கோபத்துடன் தன்யானையைத் தூண்டினான். அங்குசத்தினாலும் கட்டைவிரலாலும் யுத்தத்தில்தூண்டப்பட்ட அந்தஉத்தமமான யானையானது

அந்தக்ஷணத்தில் ஊழித்தீப்போலாகியது. மிகுந்தகோபமுண்ட அந்தப்பகதத்தனுடையயானை யுத்தரங்கத்தில் அங்குமிங்கும் ஓடிக்கொண்டு நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் தேர்க்கூட்டங்களையும் யானைகளையும் குதிரைகளையும் குதிரைவீரர்களையும் காலாட்களையும் நசுக்கிற்று. அந்தயானையினால் நன்றாகக்கலக்கப்படும் பெரியபாண்டவசேனையானது நெருப்பில்போடப்பட்ட தோல்போலக் குறைவடைந்தது. புத்திசாலியானபகதத்தனால் தன்ஸேனாநாசம் பண்ணப்பட்டதைக்கண்டு கடோத்கசன் மிகுந்த கோபங்கொண்டு பகதத்தனைஎதிர்த்து அருகில்வந்தான். விகாரரூபத்தையுடையவனும் கொடுந்தன்மையுள்ளவனும் ஜ்வலிக்கின்றவாயையுடையவனும் ஜ்வலிக்கின்றகண்களுள்ளவனும் மஹாபலசாலியுமான கடோத்கசன் மிக்கபயங்கரமான உருவத்தை எடுத்துக்கொண்டு கோபத்தால் ஜ்வலிக்கின்றவன்போல மலைகளையும்பிளக்குந்திறமையுள்ள நிர்மலமானசூலத்தைஎடுத்து யானையைக்கொல்லக்கருதி எறிந்தான். நெருப்புப்பொறிகளுடையகூட்டங்களாலே நான்குபக்கங்களிலும் சூழப்பட்டதும் விரைவாகவருகின்றதுமான அந்தச்சூலத்தைக்கண்டு பிராக்ஜ்யோதிஷதேசத்தரசன் வேகமுள்ளவனாக அழகியதும் கூர்மையுள்ளதும் மிக்கபயங்கரமுமான ஓர் அர்த்தசந்திரபாணத்தைப் பிரயோகஞ்செய்து அந்தப்பாணத்தினாலே அந்தப்பெரியசூலத்தைத் துண்டாக்கினான். இரண்டாகவெட்டப்பட்டதும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டுள்ளதுமான சூலம், இந்திரனால் பிரயோகிக்கப்பட்டு ஆகாயத்தையடைந்து கீழேவிழும் பெரியவஜ்ராயுதம்போலக் கீழேவிழுந்தது. பகதத்தராஜன் சூலம் இரண்டாக அறுக்கப்பட்டுக் கீழேவிழுந்ததுகண்டு பொன்மயமானதண்டத்துடன்கூடியதும் அக்னிஜ்வாலைபோன்றதுமான ஒருபெரியசக்தியைக்கையிலெடுத்து அதை ராக்ஷஸன்மீது ப்ரயோகித்து, 'நில், நில்' என்றும் சொன்னான். இடிபோல ஆகாயமார்க்கத்தில்வருகின்ற அந்தச்சக்தியைக்கண்டு ராக்ஷஸன் விரைவாகக்கிளம்பி அதனைக்கையிற்பற்றிக்கொண்டு ஸிம்மநாதஞ்செய்தான். ராக்ஷஸன் விரைந்து, பகதத்தராஜன்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே சக்தியைப்பிடித்து முழங்காலில்வைத்து இரண்டாக முறித்தான். அது ஆச்சரியமாகஇருந்தது. பலசாலியானராக்ஷஸன் செய்த அச்செய்கையைக்கண்டு ஆகாயத்திலுள்ள தேவர்களும் கந்தர்வர்களும் ரிஷிகளும் ஆச்சரியமடைந்தார்கள். பீமஸேனனை முதன்மையாகக்கொண்டபாண்டவர்களும், 'நல்லது, நல்லது' என்கிறசொற்களின் ஒலியினால் பூமியை எதிரொலியிடச்செய்தார்கள். ஸந்தோஷ

மடைந்தவர்களும் மஹாபலசாலிகளுமான பாண்டவர்களுடைய அந்தப்பெரிய ஸிம்மநாதத்தைக்கேட்டு, பெரிதானவில்லைக் கையிலேந்தியவனும் சிறந்தபிரதாபமுடையவனுமானபகதத்தன் பொறுமல் இந்திரனுடைய வஜ்ராயுதம்போலப் பிரகாசிக்கின்ற பெரியவில்லை நாணொலிசெய்து பாண்டவசேனையிலுள்ள மகாரதர்களை விரைவாக எதிர்த்துவந்தான். அந்தப்பகதத்தன் பளபளப்புள்ளவைகளும் கூர்மையுள்ளவைகளும், அக்னிபோலப்பிரகாசிக்கின்றவைகளுமான நாராசங்களைப்பிரயோகித்துக்கொண்டு பீமனை ஒருபாணத்தாலும் ராக்ஷஸனை ஒன்பதுபாணங்களாலும் அபிமன்யுவை மூன்றுபாணங்களாலும் கேகயர்கள் ஐவரையும் ஐந்துபாணங்களாலும் அடித்தான். அந்தப்பகதத்தன் காதுவரையில்நன்றாகஇழுத்துவிடப்பட்டதும் வணங்கினகணுக்களுள்ளதுமான ஓரம்பினாலே யுத்தத்தில் க்ஷத்திரதேவனுடையவலக்கையைப் பிளந்தான். அம்புகளுடன்கூடின உத்தமமான அவனுடையவில்லானது விரைவாகக் கீழேவீழ்ந்தது. பிறகு திரௌபதிபுத்திரர்கள் ஐந்துபேர்களையும் அந்தப்பகதத்தன் ஐந்துபாணங்களால் அடித்தான்; பீமஸேனனுடையகுதிரைகளையும் குரோதத்தாலே கொன்றான்; கூர்மையுள்ளமூன்றுஅம்புகளாலே ஸிம்மரூபமான அவனதுகொடியையுமறுத்து வேறுமூன்றுபாணங்களாலே அவனுடைய ஸாரதியையும் பிளந்தான். யுத்தத்தில் பகதத்தனால் நன்றாகஅடிக்கப்பட்ட அந்த (ஸாரதியான) விசோகன் துன்பமுற்று ரதமத்தியத்தில் உட்கார்ந்தான். பிறகு, நீண்டகைகளையுடையவனும் ரதத்தைஇழந்தவனும் ரதிகர்களுள்உத்தமனுமானபீமன் கதையைக்கையிலெடுத்து வேகத்தோடு உத்தமமானரதத்தினின்று கீழேகுதித்தான். கையில் தூக்கப்பட்டகதாயுதத்தையுடையவனும் கொடுமுடியுடன்கூடினமலை போன்றவனுமான அப்பீமனைக்கண்டு உம்மைச்சேர்ந்தவர்களுக்குக் கோரமானபயமுண்டாயிற்று. இந்தச் சமயத்தில் கிருஷ்ணனை ஸாரதியாகக்கொண்ட பாண்டுநந்தனனான அர்ஜுனன் எல்லாவிடங்களிலும் சத்துருக்களை நாசஞ்செய்துகொண்டு புருஷசிரேஷ்டர்களும் மகாபலசாலிகளும் தகப்பன்பிள்ளைகளுமான பீமன் கடோத்கசன் இருவரும் பிராக்ஜ்யோதிஷாதிபதியோடு சண்டைசெய்துகொண்டிருக்கிற இடத்திற்கு வந்துசேர்ந்தான். பாண்டவன் போர்புரிகின்றமகாரதர்களானபிராதாக்களைக்கண்டு விரைந்து அம்புகளை இறைத்துக்கொண்டு அங்குப்போர்புரிந்தான். பிறகு மகாரதனான துரியோதனராஜன் ரதங்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் நெருங்கியிருக்கின்ற சேனையைப் பரபரப்புடன் விரைவாகத்தூண்டினான். விரைவாகவருகின்ற

கௌரவர்களுடைய அந்தப்பெரும்படையைப் பாண்டுபுத்திரனை அர்ஜுனன் வேகத்தோடெதிர்த்தான். பகதத்தனும் யுத்தத்தில் அந்த யானையினுமேல் பாண்டவசேனையைஅடித்துக்கொண்டு யுதிஷ்டிரருக் கருகில்வந்தான். பகதத்தனுக்குப் பாஞ்சாலர்களோடும் பாண்டவர்க ளோடும் ஆயுதங்களைக்கையிற்கொண்டகேகயர்களோடும் அப்பொழுது மிகப்பெரிதான போர்நடந்தது. பீமஸேனனும், யுத்தத்தில் அந்தக் கிருஷ்ணார்ஜுனரிருவருக்கும் இராவானுடையபெரியவதத்தை நடந்த படி சொன்னான்.

---

## தொண்ணூற்றுருவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீமன் துரியோதனனுடையஸஹோதரர்சிலரைக் கொன்றது.)

அர்ஜுனன் தன்புத்திரனைஇராவான்கொல்லப்பட்டதைக்கே ட்டு அதிகதுக்கத்தினால் ஆக்ரமிக்கப்பட்டவனாக ஸர்ப்பம்போலப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு யுத்தாங்கத்தில்வாஸுதேவரைப்பார்த்து இவ்விதமானவார்த்தையைச்சொன்னான். பேரறிவாளரும் மகாபுத்தி மானுமானவிதுரர் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் நேரும் இந்தக்கோரமானநாசத்தை முன்னமே நிச்சயமாக அறிந்திருக்கிறார். ஆதலால் அந்தவிதுரர் திருதராஷ்டிரராஜரை யுத்தத்தினின்றுதடுத் தார். மதுஸூதனரே! மற்றஅனேகவீரர்கள் யுத்தத்தில் கௌரவர்க ளால் கொல்லப்பட்டார்கள். அவ்வாறே நம்மாலும் யுத்தத்தில் கௌர வர்கள் கொல்லப்பட்டார்கள். நரசிரேஷ்டரே! பொருளுக்காக இழி வானதொழில் செய்யப்படுகிறது. பொருளுக்காக இவ்விதமானஞாதி களின்நாசம்செய்யப்படுதலால் அப்பொருளை நிந்திக்கவேண்டும். ஞாதி களைக்கொன்று செல்வம்படைத்தலைக்காட்டிலும் வறுமையினால் மரண மடைதலே மேலானது. கிருஷ்ணரே! ஒன்றுசேர்ந்திருக்கின்ற ஞாதி களைக்கொன்றுவிட்டு எதைஅடையப்போகிறோம்? துரியோதனனு டையஅபராதத்தினாலும் ஸுபலபுத்திரனானசகுனியினுடைய தோஷ த்தினாலும் கர்ணனுடையதுராலோசனையினாலும் க்ஷத்திரியர்கள் நாச மடைகிறார்கள். மதுஸூதனரே! மிக்கபுஜபலமுள்ளவரே! யுதிஷ் டிரராஜர், துரியோதனனை(ச் சமாதானவிஷயமாக) வேண்டினது நல்ல கார்யமென்றே நான் இப்பொழுது எண்ணுகிறேன். துர்ப்புத்தியுள்ள ஸுயோதனன் பாதிராஜ்யத்தையாவது ஐந்துகிராமங்களையாவது

கொடுக்கவில்லை. (சூரர்களும் யுத்தபூமியில்படுத்திருக்கின்றவர்களுமான க்ஷத்திரியர்களைக்கண்டு என்னை நான் மிகவும் நிந்தித்துக்கொள்ளுகிறேன். க்ஷத்திரியனுடையபிழைப்பை நிந்திக்கவேண்டும்.(அநியாயமாகப் பந்துக்கள்இறந்துபோவார்கள் என்கிறகருணையினால் நான்போர் புரியாமல்இருப்பேனாயின்) இந்தக்ஷத்திரியர்கள் யுத்தத்தில்என்னை அசக்தனென்று எண்ணுவார்கள். மதுசூதனரே! இதற்காகவே நான் யுத்தத்தை அங்கீகரித்தேன். துரியோதனனுடையசேனையைக்குறித்து நீர் விரைவாகக் குதிரைகளைஓட்டும். கரைகாண்பதற்கு அரிதான யுத்தமாகிறஸமுத்திரத்தை நான் கைகளால் தாண்டப்போகிறேன். மாதவரே! ஓரிடத்திலாவது இந்தக்காலமானது [1] வீணாக்குவதற்குத் தகுதியுள்ளதன்று' என்றான். பார்த்தன் இவ்வாறுசொல்ல, சத்துரு வீரர்களை அழிக்கிறவரான ஸ்ரீகேசவர் வெண்மைநிறமுள்ளவைகளும் காற்றைப்போன்றவேகமுடையவைகளுமான அந்தக்குதிரைகளை நடத்தினார். பிறகு பர்வகாலத்தில் காற்றினால் அதிகவேகமாக அலைக்கப்பட்டஸமுத்திரத்தினுடையஒலிபோல உமது ஸைனியத்தினுடைய பேரொலிஉண்டாகியது. பீஷ்மருக்குப் பாண்டவர்களோடு பிற்பகலில் மேகத்தினிடிமுழக்கம்போன்ற முழக்கத்தையுடையயுத்தமானது நடைபெற்றது. பிறகு உம்முடையகுமாரர்கள், வசுக்கள் இந்திரனைச் சூழ்வதுபோல யுத்தரங்கத்தில் துரோணரைச்சூழ்ந்துகொண்டு பீமஸேனனை எதிர்த்துவந்தார்கள். பிறகு சந்தனுபுத்திரரானபீஷ்மரும் ரதிகர்களுள் உத்தமரானகிருபரும் பகதத்தனும் சுசர்மாவும் அர்ஜுனனைஎதிர்த்து அவன்அருகில் வந்தார்கள். ஹார்த்திக்யனும் பாஹ்லிகனும் ஸாத்யகியை எதிர்ந்தார்கள். அம்பஷ்டராஜன் அபிமன்யுவை எதிர்த்தான். மிகுந்திருக்கின்றமற்றவர்கள் மகாரதர்களான மற்றவர்களையே எதிர்த்தார்கள். பிறகு, கொடிய பயங்கரமான யுத்தம் நடந்தது. பீமஸேனனோ உமதுபுத்திரர்களைப்பார்த்து யுத்தத்தில் கோபங்கொண்டு ஹவிஸினாலேஅக்னி ஜ்வலிப்பதுபோல ஜ்வலித்தான். மேகங்கள் கார்காலத்தில்மலையை மூடுவதுபோல உம்முடையபுத்திரர்கள் பீமனை அம்புகளால்மூடினார்கள். உம்முடையபுதல்வர்களாலே (அம்புகளால்) பலவாறுமூடப்படுகின்றவனும் இரண்டுகடைவாய்களையும் நக்கிக்கொள்ளுகின்றவனும் புலிபோன்றகர்வமுடையவனும் அகன்றமார்புள்ளவனும் வீரனுமான அந்தப்பீமன் அதிககோபங்கொண்டு மிக்ககூர்மையுள்ளதும் நன்றாகப் பிரயோகிக்கப்பட்டதுமான க்ஷுரப்ரத்தினாலே

[1] வேறுபாடம்.

அந்தமகாயுத்தத்தில் துரியோதனராஜனை அடித்தான். துரியோதனன் பொறிகள்கலங்கினவனானான்; அராவிந்துவைந்த வேறொருபல்லத்தினாலே, ஸிம்மம் பலக்குறைவுள்ளமானைக்கொல்வதுபோல, குண்டவியைக் கீழேதள்ளினான். பிறகு பீமஸேனன் உம்முடையபுத்திரர்களைக் கொல்வதின்பொருட்டு மிக்ககூர்மையுள்ளவைகளும் சாணையில்தீட்டப்பட்டவைகளுமான ஏழுபாணங்களை ஸந்தானம்செய்தான். திடமானவில்லைக்கையிற்கொண்டபீமஸேனனாலே தொடுக்கப்பட்ட அந்தப்பாணங்கள் சிறந்தமகாரதர்களாயுள்ள உம்முடையபுத்திரர்களான அநாதிருஷ்டி, குண்டபேதி, விராஜன், தீப்தலோசனன், தீர்க்கபாகு, ஸுபாகு, மகரத்வஜன்ஆகிய இவர்களை ரதங்களினின்றுகீழேதள்ளின. கீழேவிழுகின்ற அந்தவீரர்கள் வஸந்தகாலத்தில் நிறைந்த புஷ்பங்களோடு கீழேவிழுந்திருக்கின்ற பலாசமரங்கள்போல விளங்கினார்கள். பிறகு மகாயுத்தத்தில் மிகுந்திருக்கின்ற உமதுகுமாரர்கள் மகாபலசாலியான அந்தப்பீமஸேனனைக் காலனைப்போலஎண்ணி ஓடிவிட்டார்கள். துரோணரோ யுத்தத்தில் உமதுகுமாரர்களைக்கொளுத்துகின்ற வீரனானபீமன்மீது, மலையின்மீது மேகமானது நீர்த்தாரைகளைப்பொழிவதுபோல நான்குபக்கங்களிலும் அம்புகளை வாரி இறைத்தார். துரோணராலேதடுக்கப்பட்டும் பீமன்உம்முடையகுமாரர்களைக்கொன்றதனால் குந்தீபுத்திரனுடையஆண்மையை அந்தயுத்தத்தில் ஆச்சரியமாகக்கண்டோம். ஆகாயத்தினின்றும் விழுகின்ற மழையைப் பெரியகாளை தாங்குவதுபோலப் பீமன் துரோணரால் தொடுக்கப்பட்டசரமாரியைத் தாங்கினான். விருகோதரன் அந்தயுத்தத்தில் உமதுபுத்திரர்களைக்கொன்றும் துரோணரைத்தடுத்தும் ஆச்சரியத்தைச்செய்தான். மகாபலமுள்ளபுலி மிருகங்களின்மீது பாய்ந்து விளையாடுவதுபோல அர்ஜுனனுக்குமூத்தவனானபீமஸேனன் வீரர்களான உம்முடையபுத்திரர்களின்மீதுபாய்ந்து போர்விளையாட்டைச்செய்தான். பசுக்களுடையமத்தியிலிருக்கின்றஓநாய் பசுக்களை ஓட்டுவதுபோல விருகோதரன் யுத்தரங்கத்தில் பிரவேசித்து உம்முடையகுமாரர்களை நன்றாகஓட்டினான். மஹாரதர்களானபீஷ்மர் பகதத்தன் துரோணர் இவர்கள், யுத்தத்தில் வேகமுள்ளவனும் பாண்டுநந்தனனுமான அர்ஜுனனைத் தடுத்தார்கள். அதிரதனான அந்தஅர்ஜுனன் யுத்தத்தில் அவர்களுடையஅஸ்திரங்களை அஸ்திரங்களால் தடுத்து உமதுஸைனியங்களிலுள்ள உத்தமவீரர்களை யமனிடத்திற்கனுப்பினான். அபிமன்யுவோ உலகத்தில்பிரஸித்திபெற்றவனும் ரதிகர்களுள்சிரேஷ்டனுமான அம்பஷ்டராஜனை அம்புகளால் ரதத்தை

யிழந்தவனாகச்செய்தான். ரதத்தையிழந்தவனும் மஹாபலசாலியுமான அம்பஷ்டராஜன் கீர்த்திமானான ஸுபத்திராபுத்திரனாலே அடிக்கப்பட்டு ரதத்தினின்றுவிரைவாகக்கீழேகுதித்து மிக்கபலசாலியான ஸுபத்திராபுத்திரன்மீது யுத்தத்தில் கத்தியையெறிந்து ஹார்த்திக்யனுடைய ரதத்தின்மீதேறிக்கொண்டான். தன்னைநோக்கிவருகின்றகத்தியை யுத்தமார்க்கத்தில் ஸமர்த்தனும் சத்துருவீரர்களையழிப்பவனுமான ஸுபத்திராபுத்திரன் லாகவத்தினால் கீழேவிழும்படிசெய்தான். அப்பொழுது ரணகளத்தில் அபிமன்யுவினாலே கத்தியானது வீணாகச்செய்யப்பட்டதைக்கண்டு, 'நல்லது, நல்லது' என்கிற ஸைனிகர்களுடையபெரியசப்தமானது தோன்றியது. திருஷ்டத்யும்னனைமுதன்மையாகக்கொண்டபகைவர்கள் உமதுஸைனியத்தோடு போர்புரிந்தார்கள். அவ்வாறே உம்மைச்சேர்ந்தவர்களெல்லோரும் பாண்டவஸைனியத்தையெதிர்த்துப் போர்புரிந்தார்கள். ஒருவரையொருவர் திடமாக அடிக்கின்றவர்களும் ஒருவராலும்செய்யமுடியாதகாரியத்தைச்செய்கின்றவர்களுமான உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பிறருக்கும் அச்சமயத்தில் பெரிதானயுத்தம் நடந்தது. அகங்காரங்கொண்டவர்களான சூரர்கள் யுத்தத்தில் ஒருவரையொருவர் மயிர்பிடித்துக்கொண்டு நகங்களாலும் பற்களாலும் கைக்குத்துக்களாலும் முழங்காலிடிகளாலும் (கன்னத்தில்) அறைதல்களினாலும் கத்திகளாலும் நன்றாகயுத்தஞ்செய்யப்பழக்கப்பட்டகைகளாலும் போர்புரிந்தார்கள். வீரர்கள் தக்கஸமயம் வாய்க்கப்பெற்று ஒருவரையொருவர் யமலோகத்துக்கு அனுப்பினார்கள். பிதா புத்திரனைக் கொன்றான். அவ்வாறே புதல்வனும் பிதாவைக் கொன்றான். அங்கபுரத்தாங்கத்தில் மனிதர்கள் எண்ணம்குலைந்தவர்களாகப் போர்புரிந்தார்கள். யுத்தத்தில்கொல்லப்பட்டிருக்கின்றவீரர்களுடைய விழுந்திருக்கின்றஸ்வர்ணமயமானபின்புறத்தையுடைய அழகியவிற்களும், விலையேறப்பெற்றபூஷணங்களும், பொன்வெள்ளிக்கட்டுக்களுள்ளவைகளும் கூர்மையுள்ளவைகளும் எண்ணெயிட்டுத்தீட்டப்பட்டவைகளும் சட்டையுரித்தபாம்புகள்போன்றவைகளுமான அம்புகளும், தந்தப்பிடிகளுள்ள பொன்னால்அலங்கரிக்கப்பட்ட கத்திகளும், கீழேவிழுந்திருக்கின்றவைகளும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான வில்லாளிகளுடைய கேடகங்களும், பொன்னால்சித்திரவேலைசெய்யப்பட்டவைகளும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டவைகளும் நன்குமுறிக்கப்பட்டவைகளுமானசட்டிகளும், பொன்மயமான கதைகளும், பொன்னால்ஒளிர்கின்றசக்திகளும், கீழேவிழுந்திருக்கின்ற [1]கவசங்களும், பெரியஉலக்கைகளும், பரி

[1] வேறுபாடம்.

காயுதங்களும், பட்டாக்கத்திகளும், பிண்டிபாலங்களும், பொன்னால் அலங்கரிக்கப்பட்ட ஆச்சரியகரமான பலவிதவிற்களும், பலவிதவிசிறிப்புகளும், சாமரங்களும், விசிறிகளும் பிரகாசித்தன. பற்பலவிதசஸ்திரங்களைப்பிடித்துக்கொண்டு கீழேவிழுந்து உயிரையிழந்தமகாரதர்கள் உயிருடன்கூடியமனிதர்கள்போலவே காணப்பட்டார்கள். அந்தயுத்தபூமியில் மனிதர்கள் கதாயுதத்தினால் உடல்நொறுக்கப்பட்டவர்களும் உலக்கைகளாலே தலைகள்பிளக்கப்பட்டவர்களும் யானைகளாலும் குதிரைகளாலும் தேர்களாலும் பொடிபண்ணப்பட்டவர்களுமாகப் பூமியில்படுத்தார்கள். அப்பொழுது போர்க்களமானது அறுத்துத்தள்ளப்பட்ட மலைகள்போன்ற குதிரைகள், மனிதர்கள், யானைகள் இவர்களின் சரீரங்களால்மூடப்பட்டதாகவிளங்கியது. யுத்தபூமியானது போரில் விழுந்திருக்கின்றசக்திகளாலும் ரிஷ்டிகளாலும் அம்புகளாலும் தோமரங்களாலும் நீண்டகத்திகளாலும் பட்டஸங்களாலும் ஈட்டிகளாலும் அவஸ்கந்தங்களாலும் கோடாலிகளாலும் பரிகங்களாலும் பிண்டிபாலங்களாலும் சதக்னிகளாலும் சஸ்திரங்களால்அறுக்கப்பட்டிருக்கிற தேகங்களாலும் எங்கும் நன்றாகப்பரப்பப்பட்டது. சப்தமற்றவர்களும் மெதுவாகச்சப்திக்கின்றவர்களும் ரக்தவெள்ளத்தால் நனைக்கப்பட்டவர்களுமான உயிரையிழந்தவர்களால் ரணகளமானது நிரப்பப்பட்டு விளங்கியது. பலசாலிகளும் காளைகளுடைய கண்போன்றகண்களையுடையவர்களுமான வீரர்களுடைய அறுத்துத்தள்ளப்பட்டவைகளான கைப்புறைகளையுடையவைகளும் தோள்வளைகளையுடையவைகளும் சந்தனக்குழம்பினால் நனைக்கப்பட்டவைகளுமானகைகளாலும் யானைத்துதிக்கைகளுக்குஒப்பானதொடைகளாலும் உத்தமமானசிரோரத்னங்களையுடையவைகளும் குண்டலங்களையணிந்தவைகளுமான தலைகளாலும் யுத்தபூமியானது விளங்கியது. ரக்தத்தால்நான்குபக்கங்களிலும்பூசப்பட்டவைகளும் நாற்புறங்களிலும்இறைக்கப்பட்டவைகளுமானபொற்கவசங்களாலே யுத்தபூமி அடங்கினஜ்வாலையுள்ள நெருப்புகளால் விளங்குவதுபோல மிகவிளங்கிற்று. புரட்டித்தள்ளப்பட்ட அம்புப்பெட்டிகளாலும் விழுந்திருக்கின்றவிற்களாலும் எல்லாப்பக்கங்களிலும் சிதறஅடிக்கப்பட்டவைகளும் பொற்கணுக்களுள்ளவைகளுமான அம்புகளாலும் எல்லா இடங்களிலும் உடைக்கப்பட்டவைகளும் கிண்கிணித்திரள்களால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான தேர்களாலும் பாணங்களால்அடிக்கப்பட்டுத் தொங்கினநாக்களுடன் உதிரத்தைக்கக்குகின்ற குதிரைகளாலும் அச்சுமரங்களாலும் கொடித்துணிகளாலும் அம்புக்கூடுகளாலும் கொடிமரங்களாலும் சிதறஅடிக்

கப்பட்ட வெண்மையான பெரியவீரர்களுடைய மகாசங்கங்களாலும் துதிக்கையிழந்துகீழேபடுத்திருக்கின்றயானைகளாலும் நிறைந்திருக்கிற அந்தயுத்தபூமியானது பற்பலஅலங்காரங்களால் அலங்கரிக்கப்பட்ட நல்லயௌவனமுடைய ஒருஸ்திரீயைப்போல் விளங்கியது. அங்கு உயிருடனிருப்பவைகளும் அதிகமானவேதனையுற்றவைகளும் துதிக்கைகளால் சப்தத்தையும் அடிக்கடிநீர்த்துளிகளையும்விடுகின்றவைகளுமானவேழயானைகளாலே அந்தயுத்தபூமியானது அருவிப்பெருக்கையுடையமலைகளால்விளங்குவதுபோல விளங்கியது. பற்பலநிறமுள்ள கம்பளங்களாலும் யானைகளினுடையமேல்விரிப்புகளாலும் வைடூர்யங்களும்ரத்னங்களும்இழைத்தபிடிகளுடன் கீழேவிழுந்திருக்கிறமங்களகரமானமாவெட்டிகளாலும் நாலுபக்கங்களிலும்விழுந்திருக்கின்ற சிறந்தயானைகளுடையமணிகளாலும் கிழிக்கப்பட்ட பலவிதமானவிரிப்புகளாலும் [1] பற்பலவடிவமுள்ளகண்டபூஷணங்களாலும் பொற்கச்சைகளாலும் பலவாறு அறுக்கப்பட்ட யந்திரங்களாலும் பொன்னுலாகிய தோமரங்களாலும் யுத்தபூமி ஆங்காங்கு அதிகமாகப்பிரகாசித்தது. புழுதிகளாலே கோரோசனைநிறமுள்ளவைகளும் பொன்னால்மறைக்கப்பட்டவைகளுமான குதிரைகளுடைய கவசங்களாலும் அறுக்கப்பட்டுக்கீழேவிழுந்திருக்கின்ற தோள்வளைகளுள்ள குதிரைவீரர்களுடையகைகளாலும் பளபளப்புள்ளவைகளும் கூர்மையுள்ளவைகளுமானஈட்டிகளாலும் மாசற்றரிஷ்டிகளாலும் ஆங்காங்கு புரட்டித்தள்ளப்பட்ட விசித்திரமானதலைப்பாகைகளாலும் பொன்னால்அலங்கரிக்கப்பட்டவிசித்ரமானசரங்களின்வர்ஷங்களாலும் குதிரைகளின்மேல்விரிப்புகளாலும் மிதிக்கப்பட்ட கம்பளங்களாலும் மிகுவிலைபெற்ற விசித்ரமான அரசர்களின்சூடாமணிகளாலும் புரண்டுகிடக்கின்ற குடைகளாலும் சாமரங்களாலும் விசிறிகளாலும் தாமரைமலர்போலவும் சந்திரன்போலவும் பிரகாசிக்கின்றவைகளும் அழகியகுண்டலங்களையுடையவைகளும் நன்றாகஒழுங்குபடுத்தப்பட்டிருக்கின்ற மீசைகளையுடையவைகளும் நன்றாகஅலங்கரிக்கப்பட்டவைகளும் அறுத்துத்தள்ளப்பட்டவைகளும் ஸ்வர்ணத்தினால்விளங்குகின்றகுண்டலங்களையணிந்தவைகளுமான வீரர்களுடையமுகங்களாலும் யுத்தபூமியானது க்ரஹங்களாலும் நக்ஷத்திரங்களாலும் நிறைந்த ஆகாயம்போலாகியது. உம்முடையதும் சத்துருக்களுடையதுமான இந்த இரண்டுபெரிய ஸேனைகளும் ஒன்றோடொன்று தாக்கி இவ்வாறு அந்தயுத்தரங்கத்தில் அடிக்கப்பட்டன. அவர்கள் தோல்வியடைவிக்கப்பட்டும் அடிக்

[1] ஒருசொல் விடப்பட்டது.

கப்பட்டும் களைப்புற்றிருக்குமளவில் இரவு தொடங்கியது. பிறகு அந்த இரவில் உதவிவீரர்களை நாங்கள் காணவில்லை. பிறகு கௌரவர்களும் பாண்டவர்களும் படைகளை யுத்தத்தைவிட்டொழியும்படிசெய்தார்கள். கோரமாயும் ரௌத்ராகாரமாயும் மிக்கபயங்கரமாயுமுள்ள மாலைக்காலம்வந்ததும் கௌரவபாண்டவர்கள் (தம்மவர்களுடன்)சேர்ந்து யுத்தத்தைநிறுத்தி அவ்விராக்காலத்தில்சென்று தத்தம்பாசறைகளை அடைந்தார்கள்.

எட்டாவதுநாள் யுத்தம் முடிந்தது.

---

## தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(கர்ணன், பீஷ்மர் ஆயுதமொழிந்திருந்தால் தான் பாண்டவர்களை ஜயிப்பதாகச்சொல்லியதும் துரியோதனன் கர்ணனுக்குப் போர்புரிய அநுமதிகொடுக்கும்படி பீஷ்மரிடம் வேண்டியதும்.)

பிறகு துர்யோதனராஜன், ஸுபலபுத்திரனான சகுனி, உம்முடைய புத்திரனான துச்சாஸனன், பிறரால்ஜயிக்கமுடியாத ஸூதபுத்திரன் ஆகியஇவர்கள் ஒன்றுகூடி யுத்தத்தில் ஸைனியங்களுடன் பாண்டுபுத்திரர்களை எவ்வாறுஜயிக்கலாமென்று சொல்வதற்கு விரும்பப்பட்டிருக்கிற மந்திராலோசனையைச் செய்தார்கள். பிறகு துர்யோதனராஜன் அந்தமந்திரிகளனைவரையும்பார்த்து ஸூதபுத்திரனையும் மஹாபலசாலியான சகுனியையும்அழைத்துச் சொல்லலானான். 'துரோணர், பீஷ்மர், கிருபர், சல்யன், ஸோமதத்தகுமாரனான பூரிஸ்ரவஸ் ஆகியஇவர்கள் பாண்டவர்களை யுத்தத்தில் பிடிக்கவில்லை. என்னகாரணமோ யான் அறியேன். கொல்லப்படாமலிருக்கின்ற அந்தப்பாண்டவர்களோ என்னுடைய சேனையை நாசம்பண்ணுகின்றனர். கர்ண! அப்படிப்பட்ட யான் யுத்தத்தில் பலங்குறைந்தவனும் ஆயுதங்கள்குறைந்தவனுமாகிறேன். ராதையின்புத்திரனே! நானும்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே துரோணருக்கெதிரில் வீரர்களான என்னுடையதம்பியர்கள் பீமஸேனனால் கொல்லப்பட்டார்கள். தேவர்களாலும் வதம் செய்யத்தகாத சூரர்களான பாண்டவர்களால் வஞ்சிக்கப்பட்டு (பிராண)ஸம்சயத்தையடைந்திருக்கின்ற அப்படிப்பட்ட யான் எவ்வாறு யுத்தத்தை நன்றாகச்செய்வேன்?' என்றான். மஹாராஜரே! ஸூதபுத்திரனான கர்ணன் அந்தத் துரியோதனராஜனைப்பார்த்து,

'பரதசிரேஷ்ட! நீ துக்கப்படவேண்டாம். யான் உனக்குப் பிரியந்தைச் செய்யப்போகிறேன். சந்தனுபுத்திரரானபீஷ்மர் மஹாயுத்தத்தினின்று விரைவாக விலகிப்போகட்டும். பாரத! கங்காபுத்திரரான பீஷ்மர் யுத்தத்தினின்று திரும்பி ஆயுதத்தைக்கீழேவைத்தவுடனே யான் எல்லாஸோமகர்களுடனும்கூடினபார்த்தர்களை யுத்தத்தில் பீமன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே கொல்லப்போகிறேன். ராஜனே! நான் உன்னிடத்தில் உண்மையாகச் சபதம்செய்கிறேன். அந்தப் பீஷ்மர் பாண்டவர்களின்மீது எப்பொழுதும் தயைபாராட்டுகிறாரல்லவா? பீஷ்மர் யுத்தத்தில் இந்த மகாரதர்களானபாண்டவர்களை ஜயிப்பதற்குச் சக்தியற்றவரா? அவர் யுத்தத்தில் நல்லஅபிமானமுள்ளவர்; எப்பொழுதும் யுத்தத்தில் பிரீதியுள்ளவர். ஐயா! அவர் ஒன்றுசேர்ந்த பாண்டவர்களை யுத்தத்தில் எவ்வாறு ஜயிப்பார்? பாரத! அந்தநீ இவ்விடத்தினின்று பீஷ்மருடையபாசறையை விரைவாகஅடைந்து பிரார்த்தித்து ஆசார்யரும் பிராயமுதிர்ந்தவருமான அந்தப்பீஷ்மரை ஆயுதத்தைக்கீழேவைக்கும்படிசெய். ராஜனே! பீஷ்மர்சஸ்திரங்களைக்கீழேவைத்தவுடனே யுத்தாங்கத்தில் என்ஒருவனாலேயே பாண்டவர்கள் மித்ரவர்க்கங்களோடும் பந்துக்களோடுஞ்சேர்ந்து கொல்லப்படுவதை நீ பார்' என்றுகூறினான். இவ்வாறுகர்ணனால்சொல்லப்பட்ட உம்முடையபுத்திரனான துர்யோதனன் அவ்விடத்தில் பிராதாவான துச்சாஸனனைநோக்கி, 'துச்சாஸன! ஒவ்வொருயாத்திரையிலும் எல்லாம் எல்லாஇடத்திலும் ஸன்னத்தமாகும்படி எல்லாவற்றையும் சீக்கிரமாக ஒழுங்குபடுத்து' என்றுசொன்னான். துரியோதனராஜன் இங்ஙனம்சொல்லிக் கர்ணனைநோக்கி, 'பகைவர்களை அழிப்பவனாகிய கர்ண! இதோ நான் புருஷசிரேஷ்டரானபீஷ்மரிடம்சென்று நீயுத்தம் செய்யும்விஷயத்தில் அவரைஅனுமதிகொடுக்கும்படிசெய்து பிறகு விரைவாக உன்னிடம் வந்துசேருவேன். பீஷ்மர் யுத்தத்தைவிட்டு விலகிப்போனவுடன் யுத்தத்தில் நீ பாண்டவர்களை அடிப்பாய்' என்று கூறினான்.

வேந்தரே! பிறகு உம்முடையபுத்திரன் தேவர்களோடு சேர்ந்த மகேந்திரன்போல அந்தஸகோதரர்களோடு விரைவாக அவ்விடத்தினின்று வெளியில்புறப்பட்டான். புலிபோன்றவன்மையுள்ள அந்த ராஜசிரேஷ்டனை அப்பொழுது ஸஹோதரனான துச்சாஸனன் விரைவாகக் குதிரையின்மீதேறும்படிசெய்தான். தோள்வளைகளையும் கிரீடத்தையும் சிறந்தஹஸ்தாபரணங்களையுமுடையவனும் மார்க்கத்தில் செல்லுகிறவனுமான அந்தந்துரியோதனன் மிகவிளங்கினான். மஞ்

சிஷ்டாபுஷ்பத்திற்குழப்பானதும் பொன்போன்றநிறமுடையதும் சிரேஷ்டமானதும் நறுமணம்பொருந்தியதுமான சந்தனத்தால்பூசப் பட்டவனும் சுத்தமான வஸ்திரங்களை உடுத்தவனும் ஸிம்மம்போல அழகியநடையுள்ளவனுமான அந்தத்துரியோதனன் ஆகாயத்தில் மாசற்றஒளியுள்ளசூரியன்போல விளங்கினான். பீஷ்மருடைய பாசறை யை நோக்கிச் செல்லுகின்ற புருஷசிரேஷ்டனான அந்தத்துரியோத னனை உலகமனைத்திலும் வில்லாளிகளென்று பிரஸித்திபெற்றவர்களும் பெரியவில்லைக்கையிலேந்தியவர்களுமான தம்பிமார்களும் மஹாவில் லாளிகளானதேவர்கள் இந்திரனைத்தொடர்ந்ததுபோலப் பின்தொடர்ந் தார்கள். சிலர் குதிரைகளின்மீதும் சிலர் யானைகளின்மீதும் சிலர் ரதங் களின்மீதும் ஏறிக்கொண்டு நான்குபக்கத்திலும் நரசிரேஷ்டனானதுரி யோதனனைச்சூழ்ந்துகொண்டார்கள். நகங்களாலும் ஈட்டிகளாலும் போர்புரியும்ஸ்வபாவமுள்ளகாலாட்கள் விரைந்து சிறந்தவில்லாளியும் மகாரதனுமான துரியோதனனைச் சூழ்ந்துகொண்டார்கள். சிநேகிதர் கள் அரசனைப்பாதுகாப்பதற்காகச் சஸ்திரங்களைக்கையில்கொண்டு ஒன்றுகூடி ஸ்வர்க்கலோகத்தில் இந்திரனைரக்ஷிப்பதற்காகத் தேவர்கள் தோன்றினதுபோலத் தோன்றினார்கள். கௌரவர்களுள் மஹாபலசாலி யானஅந்தஅரசன் கௌரவர்களால்பூஜிக்கப்படுகிறவனும் இடை வெளியற்று ஸகோதரர்களால் பின்தொடர்ந்து சூழப்பட்டவனு மாகிக் கீர்த்திமானானபீஷ்மருடைய வாஸஸ்தானத்தைக்குறித்துச் சென்றான். ஸமர்த்தனான அவன் அந்தஸமயத்தில் யானைத்துதிக்கை போன்றதும் மங்களகரமானதும் எல்லாச்சத்துருக்களையும்அழிக்குந் திறமையுள்ளதுமான தன்வலக்கையை நன்றாகமேலேதூக்கி எல்லாத் திக்குக்களிலும் (தன்னைக்குறித்து) உயரஎடுக்கப்பட்டிருக்கிற மனி தர்களுடைய அஞ்சலிபந்தங்களை ஏற்றுக்கொண்டு பற்பலதேசவாஸிக ளுடைய மதுரமான ஸ்தோத்திரவாக்குக்களையும் கேட்டான். பெரிய கீர்த்தியுள்ளவனும் எல்லாஅரசர்களுக்கும்தலைவனுமான அவன் ஸூ தர்களாலும் மாகதர்களாலும் ஸ்தோத்திரம்பண்ணப்பட்டு அவர்க ளனைவரையும் ஸன்மானித்தான். அவ்விடத்தில் கந்ததைலத்தால் நனைக்கப்பட்டவைகளும் நாற்புறங்களிலும்நன்றாகஜ்வலிக்கின்றவை களும் பொன்னாற்செய்தவைகளுமான தீவர்த்திகளோடு கிங்கரர்கள் மகாராஜனைச் சுற்றிநின்றார்கள். அந்தஸ்வர்ணதீபங்களாலேநான்குபக் கங்களிலும் சூழப்பட்டு ஜ்வலிக்கின்றஅந்தஅரசன் பிரகாசிக்கின்றமகா கிரகங்களோடுகூடின சந்திரன்போலப் பிரகாசித்தான். சட்டையும் தலைப்பாகையுந்தரித்தவர்களும் பிரம்பினால்சுரசுரப்பானஉள்ளங்கை

களையுடையவர்களுமானகிங்கரர்கள் எல்லாத்திக்குக்களிலும் ஜனங்களை மெதுவாக விலக்கினார்கள். பிறகு ஜனநாதனான துரியோதனராஜன் பீஷ்மருடைய மங்களகரமான இருப்பிடத்தை அடைந்து குதிரையினின்று கீழேயிறங்கிப் பீஷ்மரை அடுத்துப் பிறகு அவரை நமஸ்கரித்துப் பொன்னாற்செய்ததும் ஸர்வவிதத்தினாலும் மங்களகரமானதும் சிறந்தவிரிப்பினால் மூடப்பட்டதுமான உத்தமமான ராஜாஸனத்தில் உட்கார்ந்து கைகளைக் குவித்துக்கொண்டு பாஷ்பத்தினால் குரல்தடுமாறக் கண்களில்நீர்ததும்பப் பீஷ்மரைநோக்கிப் பின்வருமாறு கூறலானான்.

'சத்துருக்களை அழிக்குந்திறமையுடையவரே! நாங்கள் தேவரீரை ஆதாரமாகக்கொண்டு இந்திரனுடன்கூடினதேவாஸுரர்களையுங்கூட யுத்தத்தில் ஜயிப்பதற்கு உத்ஸாகமுள்ளவர்களாவோம். அவ்வாறிருக்க, மித்ரவர்க்கங்களையும் பரிவாரங்களையும் பந்துக்களையுமுடைய வீரர்களானபாண்டவர்களைஜயிப்பதில் ஸந்தேகமென்ன இருக்கிறது? கங்காபுத்திரரே! பிரபுவே! ஆதலால், என்விஷயத்தில் நீர் கருணைபுரியவேண்டும். இந்திரன் அஸுரர்களை வதம்செய்வதுபோல வீரர்களானபாண்டவர்களை வதம்செய்யும். பரதகுலத்திலுதித்தவரே! மிக்க புஜபலமுள்ளவரே! 'ஸோமகர்களோடும் கேகயர்களோடும் கருசர்களோடுங்கூடினபாஞ்சாலர்களை நான்கொல்வேன்'என்று முன்னமேயே தேவரீரால் சொல்லப்பட்டிருக்கிறது. பாரதரே! தேவரீருடையவசனம் யதார்த்தமாகவே ஆகட்டும். ஒன்றுசேர்ந்திருக்கின்றபாண்டவர்களையும் சிறந்தவில்லாளிகளானஸோமகர்களையும் நீர் வதம்செய்யும். ஸத்தியவாக்கையுடையவராகக்கடவீர். அரசரே! பிரபுவே! தயையினாலோ அல்லது என்னிடத்திலுள்ளபகையினாலோ அல்லது என்னுடையபாக்யக்குறைவினாலோ தேவரீர் பாண்டவர்களை ரக்ஷிக்கிறீர். யுத்தத்தில் பிரகாசிக்கின்றகர்ணனுக்கு யுத்தம்செய்வதின்பொருட்டுத் தேவரீர் அநுமதிகொடுக்கவேண்டும். அவன் நண்பர்களோடும் பரிவாரங்களோடும் பந்துக்களோடுங்கூடினபாண்டவர்களை ஜயிப்பான்' என்றுவேண்டினான். உம்முடையபுத்திரனான துரியோதனராஜன் ஸத்யபராக்ரமரானபீஷ்மரைப்பார்த்து இவ்வாறுசொல்லிவிட்டுப் பின் ஒன்றும்சொல்லாமலிருந்தான்.

---

## தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் துர்யோதனனுக்கு அர்ஜுனனுடைய திறமையையும் பாண்டவர்களில் ஒருவராலும் ஜயிக்கத்தகாதவர்களென்பதையும் சொல்லிச் சிகண்டியைத்தவிர மற்றப்பாஞ்சாலர்முதலியவர்களைக் கொல்வதாகப் பிரதிஜ்ஞை செய்தது.]

உம்முடையபுத்திரனாலே வாக்குகளாகிற இரும்புமுளைகளாலே அடிக்கப்பட்டவரும் உதாரமானவருமானபீஷ்மர் துக்கத்தால்அடிக்கப்பட்டு அப்பிரியத்தையாவது பிரியத்தையாவது அணுவளவேனும் சொல்லவில்லை. அவர் நெடுங்காலம்தியானம்செய்து துக்கத்தையும் ரோஷத்தையுமுடையவரும் துரியோதனனுடையவாக்காகிறசலாகையினாலேநன்றாகக்குத்தப்பட்டவரும் மகாநாகம்போலப் பெருமூச்சு விடுகிறவருமாகிக் கண்களைஉருட்டிவிழித்துத் தேவாஸுரகந்தர்வர்களுடன்கூடின உலகத்தைக் கோபத்தால்எரிக்கின்றவர்போலவும் வேறொருகாலன்போலவும் உமதுபுத்திரனைப்பார்த்துப் பின்வருமாறு நன்மொழிகூறலானார்.

‘துரியோதன! சக்திக்குத்தக்கபடி முயற்சிக்கின்றவனும் உனக்குப்பிரியத்தைச்செய்கின்றவனும் உனக்குப்பிரியத்தைத்தேடும்விருப்பத்தினால் யுத்தத்தில் பிராணனைஹோமம்செய்கின்றவனுமானஎன்னை என் இவ்வாறு வாக்குக்களாகிறசல்யங்களால் அறுக்கிறாய்? சூரனான பாண்டவன் யுத்தத்தில்இந்திரனைத்தோல்வியடையச்செய்து காண்டவவனத்தில் அக்கினியைத்திருப்தியடையும்படிசெய்ததே போதுமான நிதர்சனம். மகாபாகுபலமுள்ளவனே! பாண்டுகுமாரன் கந்தர்வர்களாலே கவரப்பட்ட உன்னைப் பராக்கிரமத்தினாலே விடுவித்ததே போதுமானநிதர்சனம். பிரபுவே! சூரர்களானஉன்ஸகோதரர்களும் ஸூதபுத்திரனானகர்ணனும் ஓட [1] அப்பொழுது விராடநகரத்தில் ஒன்றுகூடியிருக்கின்றநம்மனைவரையும் பார்த்தன் ஒருவனாகவேஜயித்ததே போதுமான நிதர்சனம். யுத்தத்தில்பராபரப்புள்ள துரோணரையும் என்னையும் யுத்தாங்கத்தில்ஜயித்து வஸ்திரங்களை அந்தஅர்ஜுனன் கவர்ந்ததே போதுமானநிதர்சனம். அவ்வாறேசிறந்தவில்லாளியான துரோணபுத்திரரையும் க்ருபரையும் கோக்கிரஹணத்தில் அவன்முன்புஜயித்ததே போதுமானநிதர்சனம். எப்பொழுதும் தானேவீரபுருஷன் என்ற

[1] இரட்டித்தலால் சிலசொற்கள் விடப்பட்டன.

அகங்காரமுடையகர்ணனைக் கோல்வியடையச்செய்து உத்தரைக்கு வஸ்திரத்தைக்கொடுத்ததே போதுமானநிதர்சனம். இந்திரனுலும்ஜயிக்கத்தகாதவர்களானநிவாதகவசர்களை யுத்தத்தில் பார்த்தன்ஜயித்ததே போதுமானநிதர்சனம். ஜகத்ரக்ஷகரும் சங்கசக்ரங்களையும் கதையை யுத்தரித்தவரும் வாஸுதேவரும் முடிவற்றசக்திகளையுடையவரும் ஆக்கல் அழித்தல் இரண்டினையுஞ்செய்பவரும் ஸர்வேஸ்வரரும் தேவதேவரும் பரமாத்மாவும் சாஸ்வதருமான ஸ்ரீமந்நாராயணரை ரக்ஷகராகவுடையவனும் யுத்தத்தில் வேகமுடையவனுமான பாண்டவனை எவன் ஜயிக்கவல்லமையுடையவன்? ராஜனே! நாரதர்முதலிய மகரிஷிகளாலே பலவாறு நீ சொல்லப்பட்டிருக்கிறாய். ஸுயோதன; நீயோ அஜ்ஞானத்தினால், 'இது சொல்லத்தக்கது; இது சொல்லத்தகாதது' என்பதை அறியவில்லை. காந்தாரீபுத்திர! சாகப்போகின்ற ஒருமனிதன் எவ்வாறு எல்லாமரங்களையும் ஸ்வர்ணமயமாகக்காண்பானே அவ்வாறே நீயும் எல்லாவஸ்துக்களையும் விபரீதமாகக்காண்கிறாய். ஸ்ருஞ்சயர்களோடுசேர்ந்தபாண்டவர்களோடு நீயாகவே பெரிய வைரத்தை உண்டுபண்ணிக்கொண்டாய். இப்பொழுது நீ அவர்களோடு யுத்தரங்கத்தில் சண்டைசெய், நாம் பார்க்கிறோம். நீ ஆண்மைத்தனமுள்ளவனாயிரு. பாண்டவர்கள் இந்திரனுடன்கூடினதேவர்களாலேகூட ஜயிக்கமுடியாதவர்கள். நரசிரேஷ்ட! நானே சிகண்டியைத் தவிர ஒன்றுகூடியிருக்கின்றஸோமகர்களையும் எல்லாப்பாஞ்சாலர்களையும் கொல்லப்போகிறேன். அவர்களாலே நான் யுத்தரங்கத்தில் கொல்லப்பட்டு யமனிடம்செல்வேன். அல்லது அவர்களையாவது யுத்தத்தில் கொன்று உனக்குப் பிரீதியை யான் செய்வேன். சிகண்டி ராஜகிருகத்தில் முன்பு ஸ்திரீயாகப்பிறந்தவன்; வரதானத்தினலே ஆண்பிள்ளையானவன். ஆகையால் அப்படிப்பட்ட இவன் சிகண்டினியென்ற ஸ்திரீயே. பாரத! முற்காலத்தில் பிரம்மதேவராலே சிகண்டினியென்கிறஸ்திரீயாக ஸ்ருஷ்டிக்கப்பட்ட அந்தச்சிகண்டியைப் பிராணன் போனாலும் யான் வதம்செய்யமாட்டேன். காந்தாரிபுத்திர! ஸுகமாகத் தூங்கு. நாளைத்தினம் ஜனங்கள் பூமியுள்ளவரையில் சொல்லிக்கொண்டிருக்கத்தக்கமஹாயுத்தத்தை நான் செய்யப்போகிறேன்' என்று கூறினார். இப்படிச்சொல்லக்கேட்டஉம்முடையபுத்திரன் குருவை முடியினால்வணங்கிவிட்டுத் தன் இருப்பிடம்சென்றான். பிறகு பகைவர்களுக்குநாசத்தைஉண்டுபண்ணுகின்ற துரியோதனராஜன் வந்து மகாஜனங்களைவிட்டு விரைவாகத் தன்னுடையஇருப்பிடத்தைஅடைந்தான். அரசன் ஸந்தோஷமுள்ளவனாக அவ்விராவைக்கழித்தான். அவன்

மறுநாள்விடிந்தவுடன் காலையில்எழுந்து, 'சேனையைஒன்றுசேருங்கள்; இப்பொழுது பீஷ்மர் யுத்தரங்கத்தில் கோபங்கொண்டு ஸோமகர்களைக் கொல்லப்போகிறார்' என்று அரசர்களுக்குக் கட்டளையிட்டான். பீஷ்மர் ராத்திரியில் பலவாறான துரியோதனனுடைய அந்தப் புலம்பலைக்கேட்டு அதைத் தமக்கு அவமதிப்புப்போலஎண்ணி அதிக ஒழிவையடைந்து பராதீனத்தன்மையைநிந்தித்துக்கொண்டு யுத்தரங்கத்தில் அர்ஜுனனோடுபோர்புரியவிரும்பி நெடுநேரம்ஆலோசித்தார்.

காங்கேயரால்எண்ணப்பட்ட அந்தவிஷயத்தைத் துரியோதனன் இங்கிதத்தால்அறிந்து துச்சாஸனனைப்பார்த்து, 'துச்சாஸன! பீஷ்மரைப்பாதுகாக்கின்றரதங்கள் விரைவாகப் பூட்டப்படலாம். இருபத்திரண்டுபடைகளை முழுதும்ஏவு. அநேகவர்ஷகாலமாக விரும்பியிருந்தஸைனியங்களுடன்கூடினபாண்டவர்களுடையவதமும் ராஜ்யத்தின் வரவும் இதோ நேர்ந்துவிட்டன. அந்தயுத்தத்தில் பீஷ்மரை நான்குபக்கங்களிலும்காப்பதே முக்கியமானகாரியமென்று நான் எண்ணுகிறேன். அவர் பாதுகாக்கப்பட்டால் நமக்கு ஸஹாயமாவார்; யுத்தத்தில் பாண்டவர்களையும்கொல்வார். பரிசுத்தமானசித்தமுள்ளபீஷ்மர் என்னைநோக்கி, 'ராஜனே! நான் சிகண்டியைக் கொல்லமாட்டேன். ஏனெனில், அவன் முன்னமே ஸ்திரீயாகப்பிறந்தவன். அக்காரணத்தினால் அவன் என்னால் யுத்தத்தில் விலக்கத்தக்கவன். மகாபாகுபலமுள்ளவனே! யான் பிதாவுக்குப்பிரியத்தைச்செய்யும்எண்ணத்தினாலே ஐஶ்வரியத்தினால்நிரம்பியராஜ்யத்தையும் ஸ்திரீகளையும் முன்பு விட்டேனென்கிறவிஷயத்தை உலகத்தார் அறிவார்கள். நரசிரேஷ்ட! யான் யுத்தத்தில் ஒருபொழுதும் ஸ்திரீயைக் கொல்லமாட்டேன். ஸ்திரீயாகமுந்தியிருந்தவனையும் எவ்விதத்தாலும் கொல்லமாட்டேன். இதை ஸத்யமாக உனக்குச் சொல்லுகிறேன். ராஜனே! இந்தச்சிகண்டியானவன் முன்பு ஸ்திரீயாகப்பிறந்தவனென்பதை நீ கேட்டிருக்கலாம். இவன் முன்பு சிகண்டினியாகப்பிறந்தவிஷயமனைத்தையும் யுத்தத்திற்குமுந்தி நான்சொல்லியிருக்கிறேன். பாரத! சிகண்டியானவன் கன்னிகையாகப்பிறந்து பிறகு புருஷனானவன். அவன்யுத்தம்செய்தால் அவனுக்கெதிரில் எவ்விதத்தாலும் யான் பாணங்களைப் பிரயோகிக்கமாட்டேன். அப்பா! யுத்தத்தில் பாண்டவர்களுக்குஜயத்தைவிரும்பி யுத்தமுனையில்வந்திருக்கின்ற மற்றஎல்லாஅரசர்களையுங் கொல்லப்போகிறேன்' என்றுசொல்லியிருக்கிறார். பரதசிரேஷ்ட! சாஸ்திரங்களைஅறிந்தவரானகாங்கேயர் இவ்வாறு என்னைப்பார்த்துச் சொல்லியிருத்தலால் எல்லாவிதத்தினாலும் அந்தயுத்தகளத்தில் அவ

ருடையரக்ஷணமே முக்கியமென்று நான் எண்ணுகிறேன். பாதுகாக்கப்படாமலிருந்தால் ஸிம்மத்தைக்கூடச் செந்நாய் கொன்றுவிடும். செந்நாய்போன்ற சிகண்டியினாலே பீஷ்மரை மஹாயுத்தத்தில் வதமடையும்படி செய்யாமலிருப்போமாக. மாதுலனான சகுனியும் சல்யனும் கிருபரும் துரோணரும் விவிம்சதியும் முயற்சியுடன் கங்காபுத்திரரை ரக்ஷிக்கவேண்டும். அவர் காக்கப்பட்டால் ஜயம் நிச்சயம்' என்று கூறினான். அவர்களெல்லோரும் இவ்வாறான துரியோதனனுடைய வார்த்தையைக்கேட்டு அப்பொழுது பீஷ்மரை ரதஸமூஹத்தினால் நாற்புறத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். உம்முடைய புத்திரர்களும் பூமியையும் ஆகாயத்தையும் நடுங்கச்செய்துகொண்டும் பாண்டவர்களைக் கலங்கச்செய்துகொண்டும் காங்கேயரைச்சூழ்ந்துகொண்டு ஸந்தோஷத்துடனே சென்றார்கள். அம்மகாரதர்கள் கவசம்பூண்டு யுத்தஸன்னத்தமான ரதங்களோடும் யானைகளோடும் யுத்தரங்கத்தில் பீஷ்மரைச் சூழ்ந்துநின்றார்கள். தேவாஸுரயுத்தத்தில் வஜ்ரத்தைக்கையில் தாங்கின இந்திரனைத் தேவர்கள் பாதுகாத்ததுபோலவே அவர்களனைவரும் மகாரதரான அந்தப்பீஷ்மரைப் பாதுகாத்துக்கொண்டுநின்றார்கள். பிறகு துரியோதனராஜன் மறுபடியும் தன்பிராதாவைநோக்கி, 'துச்சாஸன! யுதாமன்யு உத்தமௌஜஸ் இருவரும் அர்ஜுனனுடைய இடவலப்பக்கங்களிலுள்ள ஸைனியங்களை ரக்ஷிக்கின்றார்கள். அர்ஜுனனும் சிகண்டியினுடைய இடவலப்பக்கங்களிலுள்ள ஸைனியங்களை ரக்ஷிக்கின்றான். பார்த்தனாலே பாதுகாக்கப்படுகின்றவனும் நம்மால் அவ்வாறு உபேக்ஷிக்கப்பட்டவனுமான அந்தச்சிகண்டி பீஷ்மரைக் கொல்லாமலிருக்கத்தக்ககாரியத்தைச் செய்' என்று கட்டளையிட்டான். பிராதாவினுடைய அந்தவார்த்தையைக்கேட்டு உமது புத்திரனான துச்சாஸனன் பீஷ்மரை முன்னிட்டுக்கொண்டு ஸைனியத்துடன் சென்றான். தேர்க்கூட்டங்களாலே சூழப்பட்டிருக்கின்ற பீஷ்மரைக்கண்டு ரதிகர்களுள் சிரேஷ்டனான அர்ஜுனன் திருஷ்டத்யும்னனைப் பார்த்து, 'ராஜனே! பாஞ்சால்ய! புருஷசிரேஷ்டனான சிகண்டியைப் பீஷ்மருக்கெதிரில் இப்பொழுது நிறுத்து. யான் அவனை நிச்சயமாகப் பாதுகாக்கிறேன்' என்று சொன்னான்.

---

தொண்ணூற்றொன்பதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(கௌரவபாண்டவசேனைகள் அணிவகுக்கப்பட்டு ஒன்றையொன்று எதிர்த்தது.)

பிறகு சந்தனுபுத்திரரானபீஷ்மர் சேனையுடன் புறப்பட்டார்; ஸர்வதோபத்திரமென்கிற பெரிதானவ்யூஹத்தையும் தமக்கு ஏற்படுத்திக்கொண்டார். கிருபர், கிருதவர்மா, மகாரதனானசைப்யன், சகுனி, ஸிந்துதேசாதிபதியானஜயத்ரதன், காம்போஜதேசாதிபதியான ஸுதக்ஷிணன் ஆகியஇவர்களெல்லோரும் பீஷ்மரோடும் உமதுபுத்திரர்களோடும் எல்லாஸைனியங்களுக்கும் முந்தி அந்தவ்யூகமுகத்தில் நின்றார்கள். கவசம்பூண்டவர்களான துரோணரும் பூரிஸ்ரவஸும் சல்யனும் பகதத்தனும் வ்யூஹத்தினுடையவலப்பக்கத்தை அடைந்து நின்றார்கள். அஸ்வத்தாமாவும் ஸோமதத்தனும் மஹாரதர்களான அவந்திதேசத்தரசரிருவரும் பெரியசேனையுடன் அந்தவ்யூகத்தினுடைய இடப்பக்கத்தைப்பாதுகாத்தார்கள். துர்யோதனன் த்ரிகர்த்தர்களால் சூழப்பட்டு வ்யூகத்தினுடையமத்தியில் பாண்டவர்களை லக்ஷியம்வைத்துக்கொண்டு நின்றான். ரதிகசிரேஷ்டனான அலம்புஸனும் மகாரதனான ஸ்ருதாயுஸும் கவசம்பூண்டு வ்யூகத்திலுள்ள எல்லாஸைனியங்களுக்கும் பின்புறத்தில் நின்றார்கள். உம்மைச்சேர்ந்தவர்கள் அப்பொழுது இவ்வாறு வ்யூகத்தைஏற்படுத்திக்கொண்டு ஜ்வலிக்கின்றஅக்கினிகள்போல ஸன்னத்தர்களாகக் காணப்பட்டார்கள். பிறகு யுதிஷ்டிரராஜர், பீமஸேனன், அர்ஜுனன், மாத்ரீபுத்திரர்களானநகுலஸகதேவர்கள் ஆகியஇவர்கள் கவசம்பூண்டு வ்யூகத்திலுள்ளஎல்லாஸைனியங்களுக்கும் முன்னிலையில்நின்றார்கள். சத்துருக்களின்படையை அழிக்கின்றவர்களான திருஷ்டத்யும்னனும் விராடனும் மகாரதனான ஸாத்யகியும் பெரும்படையோடு நின்றார்கள். சிகண்டியும் அர்ஜுனனும் ராக்ஷஸனானகடோத்கசனும் தோள்வலிமைமிகுந்த சேகிதானனும் வீர்யமுடையவனானகுந்திபோஜனும் பெரும்படையினால்சூழப்பட்டு யுத்தத்தில் நின்றார்கள். மகாவில்லாளியான அபிமன்யுவும் மகாபலவானானதுருபதனும் பெரியவில்லைக்கையில்தாங்கியயுயுதானனும் வீர்யமுடையயுதாமன்யுவும் பிராதாக்களானகேகயர்களும் யுத்தத்தின்பொருட்டுக் கவசம்பூண்டுநின்றனர். இவ்வாறு சூரர்களான அந்தப்பாண்டவர்களும் யுத்தத்தில் கவசமணிந்து பெரிதானகௌரவவ்யூகத்திற்கேற்றபடி ஒருவராலும்ஜயிக்கமுடியாத எதிரணிவகுத்துக்கொண்டு யுத்தத்

நிற்காநின்றார்கள். உம்மைச்சேர்ந்த அரசர்களும் யுத்தத்தில்முயற்சியுள்ளவர்களாகி ஸேனையோடு பீஷ்மரை முன்னிட்டுக்கொண்டு யுத்தரங்கத்தில் பாண்டவர்களை எதிர்த்தார்கள். பீமஸேனனை முதன்மையாகக் கொண்ட பாண்டவர்கள் பீஷ்மரோடெதிர்த்துப் போர்புரியஎண்ணிப் போரில்வெற்றியைவிரும்பி ஸிம்மநாதங்களையும் கிலிகிலாசப்தங்களையும் சங்கங்களையும் க்ரகசவாத்யங்களையும் பசுவின்கொம்பினால்செய்திருக்கின்றவாத்தியங்களையும் பேரீவாத்தியங்களையும் மிருதங்கங்களையும் பணவங்களையும் வாசித்துக்கொண்டும் மற்றவாத்யமுகங்களை ஒலியிடும்படிசெய்துகொண்டும் பயங்கரமானசப்தங்களைவெளியிட்டுக்கொண்டும் பகைவர்களை எதிர்த்தார்கள். பேரீவாத்யங்கள், மிருதங்கங்கள், சங்கங்கள், துந்துபிவாத்யங்கள் இவைகளினுடையசப்தங்களாலும் உரத்தஸிம்மநாதங்களாலும் பற்பலவிதமான கூத்தாட்டுக்களாலும் நாங்களும் ப்ரதித்வனிசெய்துகொண்டு பரபரப்புடனும் அதிககோபத்துடனும் அதிகவேகமாக அவர்களை எதிர்த்தோம். அப்பொழுது பெரிதானகைகலந்தசண்டை நேர்ந்தது. பிறகு (வீரர்கள்) ஒருவரையொருவர் எதிர்த்துச்சென்று யுத்தஞ்செய்தார்கள். பிறகு பெரியசப்தத்தினால் பூமியானது நடுக்கமுற்றது. பக்ஷிகளும் அதிகோரமாகச்சப்தித்துக்கொண்டு அங்குமிங்கும்அலைந்தன. காந்தியுடன் உதித்தசூரியனும் காந்தியற்றவனானான். காற்று மிகப்பெரியபயத்தை வெளியிட்டுக்கொண்டு நெருங்கிவீசிற்று. கொடியஉருவமுள்ளநரிகள் நேர்ந்திருக்கின்ற பெரியஅநர்த்தத்தை வெளியிட்டுக்கொண்டு பயங்கரமானஒலியுடன் அப்பொழுது ஊளையிட்டன. திக்குகள் ஜ்வலித்தன. மண்மாரிபொழிந்தது. அவ்வாறே ரக்தத்தோடுகலந்தஎலும்புமழை பொழிந்தது. அழுகின்றவாகனங்களின் கண்களினின்று ஜலம் கீழேவிழுந்தது. அவைகள் மனத்தில் அதிகமாகக்கவலையுற்று ஜலமலங்களையும்பெருக்கின. மனிதர்களைப்பக்ஷிக்கின்றவர்களும் பயங்கரமாகக் கர்ஜிக்கின்றவர்களுமான ராக்ஷஸர்களுடைய இன்னஇடத்தினின்று உண்டாகின்றன என்றுகாணமுடியாத உரத்தசப்தங்கள் கேட்கப்பட்டன. நரிகளுடைய கூட்டங்களும் காக்கைகளும் எதிரில்வருகின்றவைகளாகக் காணப்பட்டன. அந்தயுத்தகளத்தில் நாய்களும் பற்பலவிதஒலிகளோடு குலைக்கின்றவைகளாகக் காணப்பட்டன. ஜ்வலிக்கின்றபெரிய தூமகேதுக்கள் சூரியன்மீதுதாக்கிப் பெரிதானபயத்தைவெளிப்படுத்திக்கொண்டு விரைவாகப் பூமியில்விழுந்தன. பிறகு அதிகமாகவிருத்தியடைந்திருக்கின்றஅந்தயுத்தத்தில் அந்தப்பாண்டவன் தார்த்தராஷ்டிரன் இருவருடையபெரும்படைகளும் காற்றினால்நன்றாக அலைக்கப்பட்டிருக்கின்ற

காடுகள்போலச் சங்கங்கள்மிருதங்கங்களுடையசப்தங்களால் நடுக்க முற்றன. அரசர்கள், யானைகள், குதிரைகள் இவர்களால்நெருங்கிய வைகளும் அமங்களகரமான முகூர்த்தத்தில் புறப்பட்டவைகளுமான ஸேனைகளுடைய நெருங்கியசப்தமானது காற்றினால்கலக்கப்பட்ட ஸமுத்திரங்களுடையசப்தம்போலத் தோன்றியது.

---

## நூறாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(அலம்புஸன், திரௌபதீபுத்திரர்களோடு போர்புரிந்து அபிமன்யுவை எதிர்த்தது.)

தேராளிகளுட்சிறந்தவனும் தேஜஸ்ஸுடையவனுமான அபிமன்யு மஞ்சள்நிறமுள்ள சிறந்தகுதிரைகளோடு மேகம் வர்ஷதாரைகளைப் பொழிவதுபோலச் சரமாரிகளைப்பொழிந்துகொண்டு பெரிதான துரியோதனன்படையை எதிர்த்துச்சென்றான். யுத்தத்தில்கோபங்கொண்டவனும் சத்ருக்களை அழிக்கிறவனும் பலஆயுதங்களுள்ளவனும் குறைவற்றதானசேனைக்கடலில் பிரவேசிக்கின்றவனுமான அபிமன்யுவை உம்மைச்சேர்ந்தவீரர்கள் யுத்தத்தில்தடுப்பதற்குக்கூடச் சக்தியற்றவர்களானார்கள். அந்தஅபிமன்யுவினால்யுத்தத்தில்தொடுக்கப்பட்டவைகளும் சத்ருக்களை அழிக்கின்றவைகளுமான அம்புகள் சூரர்களானக்ஷத்திரியர்களை யமனுடையவாஸஸ்தானத்திற்கு அனுப்பின. ஸுபத்திராபுத்திரன் யுத்தத்தில் கோபங்கொண்டு யமதண்டம்போன்றவைகளும் கொடியவைகளும் ஜ்வலிக்கின்றஸர்ப்பம்போன்றவைகளுமான அம்புகளைத் தொடுத்தான். அவன் ரதங்களையும் ரதிகர்களையும் குதிரைகளையும் குதிரைவீரர்களையும் யானைகளையும் யானைமீதேறியிருக்கின்றவர்களையும் விரைவாகப் பிளந்தான். ரணகளத்தில் அப்படிப்பட்ட பெரியகாரியத்தைச்செய்கின்ற அபிமன்யுவினுடையசெய்கையை அரசர்கள் ஸந்தோஷமுள்ளவர்களாகப் பூஜித்தார்கள்; பல்குனகுமாரனைப் புகழவும்புகழ்ந்தார்கள். ஸுபத்திரையின்புத்திரனான அபிமன்யு, காற்றானது பஞ்சுக்குவியல்களை ஆகாயத்தில் நான்குபக்கங்களிலும் பறக்கும்படிசெய்வதுபோல அக்கௌரவஸைனியங்களைப் பறக்கும்படியடித்தான். அந்தஅபிமன்யுவினாலே துரத்தப்படுகின்ற உமதுபடைகள் சேற்றில்அமிழ்ந்தயானைகள்போல் ரக்ஷிப்பவனை அடையவில்லை. அபிமன்யு உம்முடையஎல்லாச்சேனைகளையும் துரத்தி

விட்டுப் புகையில்லாதநெருப்புப்போல் விளங்கிக்கொண்டுநின்றான். காலனாலே தூண்டப்பட்ட விட்டிற்பூச்சிகள் எரிகின்றதீயைப்பொருந்ததுபோல உம்மைச்சேர்ந்தவீரர்கள் சத்துருக்களைஅழிக்கின்ற அபிமன்யுவைப்பொறுக்கவில்லை. அடிக்கின்றவனும் பெரியவில்லைக்கையிற்கொண்டவனும் பாண்டவர்களுள் மகாரதனுமான அபிமன்யு எல்லாச்சத்துருக்களுக்கும் வஜ்ராயுதத்தையுடைய இந்திரன்போலக்காணப்பட்டான். பொன்மயமானபின்புறமுள்ளதும் திக்குக்களில் ஸஞ்சரிக்கின்றதுமான அந்தஅபிமன்யுவினுடையவில்லானது மேகங்களில் பிரகாசிக்கின்றமின்னல்போல் விளங்கியது. யுத்தரங்கத்தில் கூர்மையுள்ளவைகளும் தைலந்தவைகளுமான அம்புகள் பூத்தமரங்களடர்ந்த கானகத்தினின்று வண்டினங்கள்போல் வெளியில்ஸஞ்சரித்தன. பொன்னாலாகிய உறுப்புக்களுள்ள ரதத்தோடுஸஞ்சரிக்கின்றவனும் மகாபலசாலியுமான அந்தஅபிமன்யுவுக்கு அவகாசத்தை ஜனங்கள் காணவில்லை. மகாவில்லாளியான அபிமன்யுவானவன் கிருபர், துரோணர், துரோணபுத்திரர், ப்ருகத்பலன், ஸைந்தவன் ஆகிய இவர்களை மோகிக்கச்செய்துகொண்டு லாகவத்தோடு நன்றாகஸஞ்சரித்தான். உம்முடையஸைனியத்தைஎரிக்கின்ற இந்தஅபிமன்யுவினுடையவில்லைச் சூரியமண்டலத்திற்கொப்பாக மண்டலாகாரமாகச்செய்யப்பட்டதாகவே நாங்கள் கண்டோம். பகைவர்களைமிகவும்தபிக்கச்செய்கின்றவனும் அதிவேகமுள்ளவனுமான அந்தஅபிமன்யுவைக்கண்டு சூரர்களானக்ஷத்திரியர்கள் அவனுடையசெய்கைகளாலே இவ்வுலகத்தை இரண்டுஅர்ஜுனர்களையுடையதாக எண்ணினார்கள். அவனால் அடிக்கப்படும் அந்தப்பெரியபாரதஸேனையானது மதங்கொண்டஸ்திரீபோல ஆங்காங்கு சுழன்றது. மயனைஜயித்து மித்திரர்களை இந்திரன் ஸந்தோஷிக்கச்செய்ததுபோல அபிமன்யு மகாஸைனியத்தை ஓடும்படியடித்தும் மகாரதர்களைநடுங்கும்படிசெய்தும் மித்திரர்களை ஆனந்தமடையும்படிசெய்தான். அந்தஅபிமன்யுவினாலே யுத்தத்தில் துரத்தப்பட்ட உம்முடையசேனைகள் மேககர்ஜனைபோலக் கோரமாக அலறின. பர்வகாலத்தில் காற்றினால் அதிகமாகஅலைக்கப்பட்டு வேகத்துடன்கூடின ஸமுத்திரத்தினுடைய சப்தத்தைப்போலக் கோரமான உமது ஸைன்யத்தினுடைய அந்தச்சப்தத்தைக்கேட்டு அப்பொழுது துர்யோதனன் ரிஸ்யசிருங்ககுமாரனை அலம்புஸனைப்பார்த்துப் பின்வருமாறுகூறலானான்.

'இரண்டாவதுபல்குனன்போன்ற இந்தஅபிமன்யு விருத்திரன் தேவஸேனையைத்துரத்துவதுபோலக் கோபத்தினால் நம்முடைய

ஸேனையை ஓட்டுகிறான். அப்படிப்பட்ட அபிமன்யுவுக்கு எல்லாவித்தைகளிலுங்கரைகண்டவனும் ராக்ஷஸர்களுள் சிரேஷ்டனுமான உன்னைத்தவிர வேறுசிறந்தமருந்து இருக்கிறதாக யுத்தத்தில் நான் காணவில்லை. ஆகலால், விரைவாகச்சென்று அந்தவீரனான அபிமன்யுவை யுத்தத்தில் ஸம்ஹாரம்செய். பீஷ்மர் துரோணர்இவர்களைமுதன்மையாகக்கொண்டநாங்கள் அர்ஜுனனைக் கொல்வோம்' என்றான். இவ்வாறுசொல்லியதைக்கேட்டு, பலசாலியும் பிரதாபசாலியுமான அந்தராக்ஷஸேந்திரன் வர்ஷாகாலத்தில்மேகம்போல உரக்கவிம்மநாதஞ்செய்துகொண்டு உன்துபுத்திரனுடைய ஆஜ்ஞையினாலே யுத்தரங்கத்தில் விரைவாகச்சென்றான். அந்த அலம்புஸனுடையபெரியசப்தத்தினாலே பாண்டவர்களுடையபெரியசேனையானது காற்றினால்அலைக்கப்பட்டகடல்போல எங்குங்கிலைபற்றதாயிற்று. அனேகவீரர்கள் அவனுடையசப்தத்தினால்பயப்படுத்தப்பட்டுப் பிரியமானபிராணனைவிட்டு யுத்தபூமியில் விழுந்தார்கள். அர்ஜுனகுமாரனான அபிமன்யுவும் ஸந்தோஷத்தோடு அம்புடன்கூடினவில்லைக்கையிலெடுத்து ரதமத்தியத்தில் நர்த்தனம்செய்கின்றவன்போலிருந்துகொண்டு ராக்ஷஸனை எதிர்த்தோடினான். பிறகு, அந்தராக்ஷஸன் கோபங்கொண்டு யுத்தத்தில் அர்ஜுனகுமாரனைஎதிர்த்து அவன்ஸமீபத்திலிருந்த அவனுடையசேனையைத் துரத்தினான். அவ்வாறுவதம்பண்ணப்படுகின்ற அந்தப்பாண்டவர்களுடைய பெரியசேனையைலக்ஷ்யம்வைத்து, தேவர்களுடையஸேனையைப் பலன்என்கிற அஸுரன் எதிர்த்ததுபோல ராக்ஷஸன் யுத்தத்தில் எதிர்த்தான். கோரரூபமுள்ளராக்ஷஸனாலே யுத்தரங்கத்தில் கொல்லப்படுகின்றஅச்சைனியத்திற்கு நாசம்உண்டாகியது. பிறகு ராக்ஷஸன் தன்பராக்கிரமத்தைவெளிப்படுத்திக்கொண்டு அவ்விதமான பாண்டவர்களுடையபெரியசேனையை ஆயிரம்அம்புகளாலே யுத்தரங்கத்தில் துரத்தினான். அந்தப்பாண்டவர்களுடைய படையானது கொடியஉருவமுள்ளஅரக்கனால் போரில்அடிக்கப்பட்டுப் பயந்தோடியது. யானை தாமரைஓடையை நாசம்செய்வதுபோல, யுத்தத்தில் அவ்வரக்கன் பாண்டவஸேனையைமிகஅடித்துப் பிறகு ரணகளத்தில் மகாபலசாலிகளான திரௌபதிபுத்திரர்களை எதிர்த்தான். மகாவில்லாளிகளும் சத்துருக்களை அடிக்குந்திறமையுள்ளவர்களுமான அந்தத்திரௌபதிகுமாரர்கள் கோபங்கொண்டு பஞ்சஜ்யோதிக்கிரஹங்கள் சூரியனைநாடுவதுபோல யுத்தத்தில் ராக்ஷஸனை லக்ஷ்யம்வைத்து விரைவாகஓடினார்கள். கோரமானயுகமுடிவில் சந்திரகிரகங்களால் சந்திரன்பிடிக்கப்படுவதுபோல ராக்ஷஸோத்தமன்

வீரியசாலிகளான அவர்களால் பீடிக்கப்பட்டான். பிறகு பலசாலியான
பிரதிவிந்தியன் கூர்மையுள்ளவைகளும் முழுமையும் உலோகங்களா
லானவைகளும் முனைமழுங்காதவைகளுமான அம்புகளால் ராக்ஷஸனை
விரைவாக அடித்தான். அவர்களால் கவசம்பிளக்கப்பட்ட ராக்ஷஸசிரோ
ஷ்டன் சூரியனுடைய கிரணங்களால் ஆக்ரமிக்கப்பட்ட பெரியமேகம்
போல விளங்கினான். பொற்கட்டுக்களுள்ளவைகளும் தேகத்தில் நன்
றாகப்பாய்ந்திருக்கின்றவைகளுமான அம்புகளாலே அந்த ஆர்ஸ்யசிருங்
கியானவன் பிரகாசிக்கின்ற சிகரங்களுடன் கூடின மலைபோல விளங்கி
னான். பிறகு பிராதாக்களான த்ரௌபதிகுமாரர்களைவரும் மகாயுத்
தத்தில் ராக்ஷஸராஜனைப் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட கூர்மையான
பாணங்களால் அடித்தார்கள். கோபமூட்டப்பட்ட ஸர்ப்பங்கள்
போன்ற கோரமான அம்புகளாலே நன்றாகப்பிளக்கப்பட்ட அந்த அலம்
புஸன் நாகராஜன்போல மிக்ககோபங்கொண்டான். மிகவும் அடிக்கப்
பட்ட அந்த அலம்புஸன் அந்தமகாரதர்களாலே பீடிக்கப்பட்டு ஒரு
முகூர்த்தகாலம் தொடர்ச்சியாக மூர்ச்சையடைந்திருந்தான். பிறகு
பிரஜ்ஞையடைந்து கோபத்தினாலே இரண்டுமடங்காக விருத்திபண்
ணப்பட்ட பராக்கிரமத்துடன் அம்புகளாலே அவர்களுடைய கொடி
மரங்களையும் விற்களையும் அறுத்தான். மகாரதனான அலம்புஸன்
தேரின்நடுவில் நர்த்தனம்செய்கின்றவன்போலவும் சிரிப்புள்ளவன்
போலவும் ஒவ்வொருவரையும் ஐவைந்து பாணங்களால் அடித்தான்.
மகாபலசாலியும் கோபமுள்ளவனுமான ராக்ஷஸன் விரைவுடனும்
மிக்கபரபரப்புடனும் அம்மகாத்மாக்களுடைய குதிரைகளைக் கொன்
றான். மிக்கபரபரப்புள்ள அரக்கன் மிக்ககூர்மையுள்ளவைகளும் பற்பல
வடிவமுள்ளவைகளுமான அம்புகளாலே நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்
கணக்காகவும் மறுபடியும் அவர்களைப் பிளந்தான். அந்தயுத்தத்தில்
ராக்ஷஸன் மகாவில்லாளிகளை ரதத்தையிழந்தவர்களாகச்செய்து அவர்
களைக்கொல்லக்கருதி வேகத்தோடு ஓடினான். துராத்மாவான அவ்வரக்
கனால் அவர்கள் யுத்தத்தில் பீடிக்கப்படுவதைக்கண்டு அர்ஜுனகுமா
ரன் யுத்தத்தில் ராக்ஷஸனை எதிர்த்து அருகில்ஓடிவந்தான். அவ்விரு
வருக்கும், விருத்திரனுக்கும் இந்திரனுக்கும் யுத்தம்நேர்ந்ததுபோல
யுத்தம் நேர்ந்தது. அந்தயுத்தத்தை உம்மைச்சேர்ந்தவர்களனைவரும்
மகாரதர்களான பாண்டவர்களும் பார்த்தார்கள். மஹாராஜரே! மகா
யுத்தத்தில்ஒன்றுசேர்ந்தவர்களும் ஒருவர்மீதொருவர்கோபத்தால்ஜ்வ
லிக்கின்றவர்களும் மகாபலசாலிகளும் குரோதத்தினால் நன்றாகச்சிவந்
திருக்கின்றகண்களையுடையவர்களும் போரில்காலாக்னிக்கொப்பான

வர்களுமான அவ்விருவரும் குரோதமுள்ளஸர்ப்பங்கள்போலக் கண்க ளால் ஒருவரைஒருவர் பார்த்துக்கொண்டார்கள். முற்காலத்தில் தேவா ஸுரயுத்தத்தில் இந்திரனுக்கும் சம்பரனுக்கும் போர்நேர்ந்ததுபோல அவ்விருவருக்கும் கோரமானதும் தொடக்கத்திலேயே குரூரமாயிருப் பதுமான போர்நேர்ந்தது" என்றுகூறினன்.

---

## நூற்றோராவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி)

(அபிமன்யு அலம்புஸனை வென்றது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! மகாரதர்களை வதஞ்செய்கின்றவ னும் யுத்தத்தில்சூரனுமான அர்ஜுனகுமாரனை அலம்புஸன் எவ்வாறு யுத்தத்தில்எதிர்த்துப் போர்புரிந்தான்? சத்துருவீரர்களைநாசம்செய்பவ னை அபிமன்யுவும் அலம்புஸனை யுத்தத்தில் எவ்வாறு எதிர்த்துப் போர்புரிந்தான்? அவற்றை நடந்தவண்ணம் எனக்குச் சொல்லவேண் டும். ஸஞ்சய! தனஞ்சயனும் யுத்தத்தில் என்னுடையஸைனியங்களில் என்னசெய்தான்? ரதிகர்களுள்சிறந்தவனானபீமனும் ராக்ஷஸனான கடோத்கசனும் நகுலஸஹதேவர்களும் மகாரதனானஸாத்யகியும் என்னசெய்தார்கள்? இதை எனக்கு உண்மையாகச்சொல். நீ ஸமர்த் தனாயிருக்கிறாய்" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"ராக்ஷஸேந்திரனுக்கும் ஸுபத்திராபுத்திரனுக்கும்நடந்ததும் ஸந்தோஷகரமானதும் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணக்கூடியதுமான யுத்தத்தை உமக்கு யான் சொல்லப்போகிறேன். யுத்தத்தில் பாண்ட வர்களான அர்ஜுனனும் பீமஸேனனும் நகுலஸஹதேவர்களும் எவ் வாறு பராக்கிரமத்தை வெளிப்படுத்தினார்களோ அவ்வாறே பீஷ்மரை யுந் துரோணரையும்முதன்மையாகக்கொண்ட உம்மைச்சேர்ந்தவர்க ளெல்லாரும் பயமின்றி அற்புதமும் விசித்ரமுமானசெய்கைகளைச் செய்தார்கள். அலம்புஸனோ யுத்தத்தில் மகாரதனானஅபிமன்யுவை அடிக்கடிவெருட்டி மிகப்பெரிய ஸிம்மநாதஞ்செய்துகொண்டு வேகத் தோடுஅவனைஎதிர்த்தோடி, 'நில், நில்' என்றும் சொன்னான். அபி மன்யுவும் வேகத்தோடு ஸிம்மம்போல் அடிக்கடி கர்ஜித்துக்கொண்டு மகாவில்லாளியும் தன்பிதாவுக்கு அத்யந்தம்வைரியுமான ஆர்ஶ்யசிரு ங்கியைப்பார்த்து எதிர்த்தோடிவந்தான். பிறகு சிறந்தரதிகர்களான நர ராக்ஷஸர்களிருவரும் த்வரையுடன் தேவாஸுரர்கள்போல இரண்டு

ரதங்களால் யுத்தத்தில் (பரஸ்பரம்) எதிர்த்தார்கள். ராக்ஷஸசிரேஷ்டனை அலம்புஸனே மாயாவி பல்குனபுத்திரனே திவ்யமான அஸ்திரங்களுடன்கூடியவன். பிறகு, அர்ஜுனகுமாரனை அபிமன்யுவானவன் கூர்மையுள்ளமூன்று பாணங்களாலே ஆர்ஷ்யசிருங்கியை யுத்தத்திலடித்துத் திரும்பவும் ஐந்துபாணங்களால் அடித்தான். அலம்புஸனும் மிக்க கோபங்கொண்டு பெரியயானையைத் தோத்ரங்களாலே அடிப்பது போல அர்ஜுனகுமாரனை ஒன்பதுபாணங்களால் வேகத்துடன்மார்பிலடித்தான். பிறகு காரியங்களைவிரைந்துசெய்யும்தன்மையுடையராக்ஷஸன் அர்ஜுனனுடையகுமாரனை அனேகபாணங்களால் யுத்தத்தில்துன்பமுறும்படி அடித்தான். பிறகு அபிமன்யு கோபங்கொண்டு கூர்மையுள்ளவைகளும் பதிவான கணுக்களுள்ளவைகளுமான ஒன்பதுபாணங்களாலே ராக்ஷஸேந்திரனை விசாலமானமார்பைப்பிளந்தான். அவ்வம்புகள் அவனுடையசரீரத்தை விரைவாகப்பிளந்துகொண்டு மர்மஸ்தானங்களில் பிரவேசித்தன. அவ்வம்புகளாலே எல்லா அங்கங்களும் பிளக்கப்பட்ட அந்தராக்ஷஸேந்திரன் பூத்தபலாசமரங்கள் அடர்ந்திருக்கும் மலைபோல விளங்கினன். மகாபலசாலியான அந்தராக்ஷஸசிரேஷ்டன் பொன்மயமானகணுக்களுள்ள அம்புகளைத்தொடுத்துக்கொண்டு ஜ்வாலையுடன்கூடின பர்வதம்போல விளங்கினன். பிறகு கோபமும் பொறுமையுமுள்ள அலம்புஸனானவன் மகேந்திரனுக்குஒப்பான அர்ஜுனகுமாரனை அம்புகளாலே மூடினன். அந்தராக்ஷஸனாலேதொடுக்கப்பட்டவைகளும் யமதண்டம்போன்றவைகளும் கூர்மையுள்ளவைகளுமான பாணங்கள் அபிமன்யுவைப்பிளந்துகொண்டு பூமியில் பிரவேசித்தன. அவ்வாறே அபிமன்யுவினாலேதொடுக்கப்பட்டவைகளும் பொன்னணிகளுள்ளவைகளுமான அம்புகள் அலம்புஸனைப்பிளந்துகொண்டு பூமியில்பிரவேசித்தன. ஸுபத்திராபுத்திரனே யுத்தாங்கத்தில் ராக்ஷஸனை எதிர்த்துக் கணுக்கள்பதிவாயுள்ள அம்புகளாலே யுத்தத்தில் பலன் என்கிறஅஸுரனை இந்திரன்புறங்காட்டச்செய்ததுபோல (அவனைப்) புறங்காட்டச்செய்தான். சத்துருவினால் ரணகளத்தில் ஹிம்ஸிக்கப்பட்டு யுத்தத்தில்நோக்கமற்றிருக்கின்றராக்ஷஸன் சத்துருக்களை வதஞ்செய்யுந்திறமையுள்ள இருள்மயமான மகாமாயையை வெளியிட்டான். பிறகு, அவர்கள் எல்லோரும் இருளால்மூடப்பட்டவர்களானார்கள். ரணகளத்தில் பாண்டவஸேனவீரர்கள் அபிமன்யுவையாவது தங்களைச்சேர்ந்தவர்களையாவது பிறர்களையாவது காணவில்லை. குருநந்தனனை அபிமன்யுவும் அந்தக்கொடியபேரிருளைக்கண்டு அத்யுக்ரமான பாஸ்கராஸ்திரத்தை வெளியிட்டான். பிறகு உலகமனைத்தும் பிரகாச

மாயிற்று. அபிமன்யு துராத்மாவான அந்தராக்ஷஸனுடைய அவ்வித மானமாயையை நாசஞ்செய்தான். மகாவீர்யமுடையவனும் புருஷ சிரேஷ்டனுமான அபிமன்யு மிகுந்தகோபங்கொண்டு ராக்ஷஸேந்திரனை யுத்தத்தில் கணுக்கள்படிவான அம்புகளாலே மறைத்தான். அவ்வாறே அந்தராக்ஷஸனால் இன்னும்வேறான அனேகமாயைகள் வெளி யிடப்பட்டன. எல்லா அஸ்திரங்களையுமறிந்தவனும் அளவிடமுடி யாத வல்லமையுள்ளவனுமான அபிமன்யு அம்மாயைகளனைத்தையும் தடுத்தான். பிறகு தன்மாயை அழியப்பெற்றவனும் அம்புகளால் துன் பஞ்செய்யப்படுகின்றவனுமான அந்தராக்ஷஸன் அவ்விடத்திலே ரதத் தைவிட்டு அதிகபயத்தால்ஓடினான். மாயாயுத்தம்செய்யும்தன்மையுள்ள அந்தராக்ஷஸன் விரைவாக ஜயிக்கப்பட்டவுடனே அர்ஜுனகுமா ரன் யுத்தத்தில் உமது ஸைன்யத்தை, மதத்தினால்மூடப்பட்ட சிறந்த காட்டானையானது தாமரைகளால்நிறைந்த ஓடையை நாசம்செய்வது போல மிகநாசஞ்செய்தான். பிறகு சந்தனுபுத்திரரானபீஷ்மர் ஓடு கின்றஸேனையைக்கண்டு அபிமன்யுவைப் பெரிதானசரமாரியினால் நான்குபக்கங்களிலும் வளைத்துக்கொண்டார். மகாரதர்களான அனேக தார்த்தராஷ்டிரர்கள் யுத்தத்தில் ஸகாயமற்ற அந்தவீரனை எல்லாப்பக் கங்களிலும்சூழ்ந்துகொண்டு அம்புகளால் திடமாகப்பிளந்தார்கள். ரதி கர்களுள்வீரனும் பிதாவையொத்தபராக்கிரமமுள்ளவனும் விக்கிரமத் தினாலும் பலத்தினாலும் வாஸுதேவருக்கொப்பானவனும் எல்லாச் சஸ்திரதாரிகளுள்ளும்சிறந்தவனுமான அந்த அபிமன்யுவானவன் பிதா வான அர்ஜுனன், மாதுலரானஸ்ரீகிருஷ்ணன் இருவரையும்போலப் பலவிதகாரியங்களை யுத்தத்தில்செய்தான். பிறகு புத்திரனிடம்செல்ல விருப்பமுள்ளவனும் மிக்ககோபமுள்ளவனும் வீரனுமான தனஞ்சயன் உம்முடையஸைனிகர்களை நாசம்செய்துகொண்டு யுத்தத்தில் பீஷ்மரை எதிர்த்தான். உம்முடையபிதாவானபீஷ்மர், ராகு சூரியனைஎதிர்ப்பது போல யுத்தத்தில் அர்ஜுனனை எதிர்த்தார். பிறகு ரதங்களையும் யானைகளையும் குதிரைகளையுமுடைய உம்முடையபுத்திரர்கள் யுத் தத்தில் பீஷ்மரைச்சூழ்ந்துகொண்டு நாற்புறங்களிலும் பாதுகாத் தார்கள். அவ்வாறே பாண்டவர்களும் மகாயுத்தத்தின்பொருட்டு ஸன் னத்தர்களாகவும் கவசமணிந்தவர்களாகவுமிருந்துகொண்டு அர்ஜு னனை நாற்புறங்களிலும்சூழ்ந்து பாதுகாத்தார்கள். பிறகு கிருபர், பீஷ் மருக்கெதிரில்நிற்கின்ற அர்ஜுனனை இருபத்தைந்துபாணங்களால் நிறைத்தார். பிறகு ஸாத்யகியானவன் பாண்டவனுக்குப்பிரியத்தைச் செய்யஎண்ணி ஒருபுலி யானையைஎதிர்ப்பதுபோலக் கூர்மையுள்ள

அம்புகளாலே அந்தக்கிருபரை எதிர்த்தடித்தான். கிருபரும் விரைவுடன் மிகச்சினந்து கழுகிறகுகள்பூண்ட ஒன்பதுபாணங்களால் ஸாத்யகியை மார்பிலடித்தார். பிறகு ஸாத்யகியும் கோபங்கொண்டு அதிகவேகத்துடன் வில்லைவளைத்துக் கௌதமரின்உயிரைவாங்கக்கூடிய ஒருபாணத்தை விரைவாகஸந்தானஞ்செய்தான். வேகத்துடன் வருகின்றதும் இந்திரனுடையவஜ்ராயுதம்போன்ற ஒளிபொருந்தியதுமான அந்தப்பாணத்தை அதிககோபமுள்ள துரோணபுத்திரர் குரோதத்தினால் இரண்டாகஅறுத்தார். ரதிகர்களுட்சிறந்தஸாத்யகி பிறகு கௌதமரைவிட்டுவிட்டு ராகு ஆகாயத்தில் சந்திரனைஎதிர்த்து வருவதுபோல யுத்தரங்கத்தில் துரோணபுத்திரரை எதிர்த்துவந்தான். துரோணபுத்திரர் அந்தஸாத்யகியினுடையவில்லை இரண்டாகஅறுத்து அறுக்கப்பட்ட வில்லையுடைய அவனை அம்புகளாலடித்தார். அந்த ஸாத்யகி சத்துருக்களை ஸம்ஹரிக்குந்திறமைபொருந்தியதும் காரிய பாரத்தைஸஹிக்கத்தக்கதுமான வேறுஒருவில்லைக் கையிலெடுத்து அறுபதுபாணங்களால் துரோணபுத்திரரை இரண்டுகைகளிலும் மார்பிலும் அடித்தான். அடிக்கப்பட்டதுரோணபுத்திரர் துன்பமுற்று ஒருமுகூர்த்தகாலம்மூர்ச்சையடைந்து கொடிமரத்தைப்பிடித்துக்கொண்டு தேரினிடையில் உட்கார்ந்தார். பிறகு பிரதாபசாலியானதுரோணபுத்திரர் மீண்டும்பிரஜ்ஞையடைந்து கோபங்கொண்டு யுத்தத்தில் ஸாத்யகியை நாராசத்தால்அடித்தார். அந்தநாராசமானது வஸந்தகாலத்தில் பலமுள்ளஒருபாம்புக்குட்டி வளையில் புகுவதுபோல ஸாத்யகியைப்பிளந்துகொண்டு பூமியில் பிரவேசித்தது. பிறகு துரோணபுத்திரர் வேறொருபல்லத்தினாலே யுத்தத்தில் ஸாத்யகியினுடையஉத்தமமானத்வஜத்தையறுத்து ஸிம்மநாதஞ்செய்தார்; மறுபடியும் வர்ஷாகாலத்தில் மேகம் சூரியனைமறைப்பதுபோலக் கோரமானஅம்புகளாலே ஸாத்யகியை மூடினார். ஸாத்யகியும் அவ்வம்புத்திரளை நாசஞ்செய்துவிட்டுப் பாணஸமூகங்களைப் பலவாறு துரோணபுத்திரர்மீது விரைவாக இறைத்தான். சத்துருவீரர்களைக்கொல்லுகிறவனான ஸாத்யகி மேகமண்டலத்தினின்றுவிடுபட்ட சூரியன் ஜனங்களைத் தபிக்கச்செய்வதுபோல அஸ்வத்தாமாவைத் தவிக்கும்படிசெய்துவிட்டான். மிக்கபலசாலியானஸாத்யகி மறுபடியும் அதிகமுயற்சியுடன் ஆயிரக்கணக்கான அம்புகளாலே துரோணபுத்திரரை மூடினான்; ஸிம்மநாதமுஞ்செய்தான். ராகுவினால் சந்திரன் கவரப்பட்டதுபோல ஸாத்யகியினாலே தமதுபுத்திரன் கவரப்பட்டதுகண்டு பிரதாபசாலியானதுரோணர் ஸாத்யகியை எதிர்த்துவந்தார். துரோணர் விருஷ்ணிகுலத்திற்

பிறந்தஸாத்யகியினால் மிகவும்பீடிக்கப்பட்ட தமதுபுத்திரரைப் பாதுகாக்கஎண்ணி அந்தமகாயுத்தத்தில் மிக்ககூர்மையுள்ள அம்பினால் ஸாத்யகியை அடித்தார். ஸாத்யகியோ யுத்தத்தில் மகாரதனுன குருபுத்திரரைவிட்டுவிட்டு முழுதும் உலோகத்தாற்செய்த இருபதுபாணங்களால் துரோணரையடித்தான். அளவற்றமனோதைரியமுடையவனும் சத்துருக்களைத்தபிக்கச்செய்கின்றவனும் மகாரதனுமான அர்ஜுனன் கோபங்கொண்டு அந்தஸமயத்தில் துரோணரைக்குறித்து யுத்தத்தில் எதிர்த்துவந்தான். பிறகு ஆகாயத்தில் புதனும் சுக்கிரனும்எதிர்ப்பது போல, துரோணரும் பார்த்தனும் மகாயுத்தத்தில் ஒருவரோடொருவர் எதிர்த்தார்கள்'' என்றுகூறினன்.

---

## நூற்றிரண்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(துரோணார்ஜுனர்களின்யுத்தமும் பீமஸேனனது பராக்கிரமமும்.)

திருதராஷ்டிரன், "மகாவில்லாளியான துரோணரும் பாண்டவனுகிய தனஞ்சயனுமாகிய இரண்டுபுருஷசிரேஷ்டர்களும் முயற்சியுடன் யுத்தத்தில் எவ்வாறு எதிர்த்தார்கள்? புத்திசாலியான துரோணருக்கு எப்பொழுதுமே அர்ஜுனனிடம் பிரியமுண்டு. ஸஞ்சய! அர்ஜுனனுக்கும் எப்பொழுதுமே யுத்தத்தில் ஆசார்யரிடத்தில் பிரியமுண்டு. ரதிகர்களும் யுத்தத்தில்உத்ஸாகமுடையவர்களும் ஸிம்மம்போலக் கொழுத்தவர்களும் முயற்சியுடையவர்களுமான அந்தத்துரோணரும் அர்ஜுனனும் எவ்வாறு எதிர்த்தார்கள்?" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானன்.

"அரசரே! துரோணர் யுத்தத்தில் பார்த்தனைத் தமக்குப் பிரியனென்று எண்ணவில்லை. பார்த்தனும் க்ஷத்திரியதர்மத்தைமுன்னிட்டு யுத்தத்தில் துரோணரை ஆசார்யராக எண்ணவில்லை. க்ஷத்திரியர்கள் யுத்தத்தில் (ஸ்நேகத்தினாலாவது கௌரவத்தினாலாவது) ஒருவரையொருவர் விட்டுவிலகவில்லை; பிதாக்களோடும் பிராதாக்களோடும் வரம்புகடந்து யுத்தஞ்செய்கிறார்கள். பாரதரே! யுத்தகளத்தில் துரோணர் பார்த்தனால் மூன்றுபாணங்களால் அடிக்கப்பட்டார். பார்த்தனுடையவில்லினின்றுவிடப்பட்ட அந்தப்பாணங்களைத் துரோணர் யுத்தத்தில் லக்ஷ்யம்செய்யவில்லை. பார்த்தன் சரமாரியினாலே மறுபடியும் யுத்தத்தில் துரோணரை மூடினன். துரோணர் கானகத்

தில்பற்றிய மிக்கநெருப்புப்போல ரோஷத்தினால் நன்றாகஜ்வலித்தார்.
பிறகு துரோணர் பதிவானகணுக்களுள்ள அம்புகளாலே அர்ஜுனனை
யுத்தத்தில் அதிசீக்கிரத்தில் மூடினார். பிறகு துரியோதனராஜன் யுத்
தத்தில் துரோணரைப்பின்தொடர்ந்துபாதுகாக்கும்பொருட்டு ஸுசர்
மாவை ஏவினான். திரிகர்த்தராஜனும் கோபங்கொண்டு வில்லை
நன்றாகவளைத்து உருக்குமுட்களை நுனியில்கொண்ட பாணங்களாலே
யுத்தத்தில் பார்த்தனை மூடினான். அவ்விருவர்களாலும்விடப்படும்
அம்புகள் சரத்காலத்தில் ஆகாயத்தில்ஸஞ்சரிக்கின்ற அன்னப்பறவை
கள்போல ஆகாயத்தில் விளங்கின. அந்தஅம்புகள் அர்ஜுனனை
அடைந்து, ருசியுள்ளபழங்களின்மிகுதியால்வளைந்தமரத்தில் பக்ஷிகள்
பிரவேசிப்பதுபோல நான்குபக்கங்களிலும் அவன்தேகத்தில் பிர
வேசித்தன. ரதிகர்களுள்சிரேஷ்டனான அர்ஜுனனோ யுத்தத்தில் மிகக்
கர்ஜித்துப் புத்திரர்களோடுகூடின திரிகர்த்தராஜனை அம்புகளால் அடித்
தான். யுகாந்தகாலத்தில் காலனால் துன்பஞ்செய்யப்படுதல்போலப்
பார்த்தனால்துன்பஞ்செய்யப்படுகிற அந்தவீரர்கள் உயிரை இழப்பதில்
நிச்சயங்கொண்டு பாண்டவனையெதிர்த்து அவனதுரதத்தின்மீது
சரமாரியைப் பொழிந்தார்கள். பிறகு நாற்புறங்களினின்றும்வரு
கின்ற அந்தச்சரமாரியை, மலையானது வர்ஷதாரையைத்தடுப்பது
போல அர்ஜுனன் சரவர்ஷங்களால் தடுத்தான். அநேகயுத்தவீரர்க
ளாலேவிடப்பட்டதும் ஒருவராலும்நெருங்கமுடியாததுமானசரமாரி
யை, காற்று மேகக்கூட்டங்களைத்தடுப்பதுபோல அர்ஜுனன் ஒருவ
னாகவேயிருந்து தடுத்ததாகிய அவனுடைய அற்புதமானகைத்தேர்ச்சி
யை நாங்கள் அந்தயுத்தத்தில் கண்டோம். பார்த்தனுடைய அந்தச்
செய்கையினாலே தேவர்களும் தானவர்களும் ஸந்தோஷமடைந்தார்
கள். பிறகு அர்ஜுனன் யுத்தத்தில் கோபங்கொண்டு படைமுகத்தில்
திரிகர்த்தர்களைக்குறித்து வாயவ்யாஸ்திரத்தைப் பிரயோகித்தான்.
பிறகு காற்று ஆகாயத்தைக்கலங்கச்செய்துகொண்டும் விருக்ஷஸமூகங்
களைக்கீழேதள்ளிக்கொண்டும் ஸைனிகர்களைநாசஞ்செய்துகொண்டும்
தோன்றியது. பிறகு துரோணர் மிக்கபயங்கரமானவாயவ்யாஸ்திரத்
தைக்கண்டு அதற்குப்பகையும் கோரமுமான சைலாஸ்திரத்தைப்
பிரயோகித்தார். யுத்தத்தில் துரோணரால் அந்தஅஸ்திரம்விடப்பட்ட
வுடனே காற்றுத்தணிந்தது. பத்துத்திக்குகளும் தெளிந்தன. பிறகு
வீரனானபாண்டுபுத்திரன் திரிகர்த்தனைச்சேர்ந்த ரதிகர்களுடைய கூட்
டங்களை யுத்தத்தில் உத்ஸாகத்தையிழந்தவைகளாகவும் புறங்காட்டி
ஓடுகின்றவைகளாகவும் பராக்கிரமத்தையிழந்தவைகளாகவும் செய்

தான். பிறகு துரியோதனனும் ரதிகர்களுள்சிரேஷ்டரான கிருபரும் அச்வத்தாமாவும் சல்யனும் காம்போஜதேசாதிபதியானஸுதக்ஷிணனும் அவந்திதேசாதிபதிகளான விந்தானுவிந்தர்களும் தனது தேசத்துவீரர்களோடுகூடின பாஹ்லீகராஜனும் பெரியதேர்க்கூட்டத்தோடு பார்த்தனுடைய திசைகளை நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். அந்தப்பக்ஷத்திலும் மஹாபலசாலியானசுருதாயுவும் யானைப்படையோடு பீமனுடைய திசைகளைச் சூழ்ந்துகொண்டார்கள். வேந்தரே! பூரிச்ரவஸும் சலனும் ஸுபலனுடையபுத்திரனான சகுனியும் பளபளப்புள்ளவைகளும் கூர்மையுள்ளவைகளுமான அம்புகளாலே மாத்ரீபுத்திரர்களைத் தடுத்தார்கள். பீஷ்மரோ யுத்தத்தில் படைகளோடுகூடின கௌரவர்களோடு யுதிஷ்டிரரைவந்தடைந்து நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டார். தன்னையெதிர்த்துவருகின்றயானைப்படையைக்கண்டு பிருதாபுத்திரனும் செந்நாயினுடல்போன்றஉடலுடையவனும் வீரனும் ரதிகர்களுள்சிறந்தவனுமானபீமன் காட்டில் ஸிம்மம்போல மஹாயுத்தத்தில் இரண்டுகடைவாய்களையும்அடிக்கடி நக்கிக்கொண்டு கதாயுதத்தைக்கையிலெடுத்து ரதத்தினின்று விரைவாகக்குதித்து உம்முடையஸைநிகர்களைப் பயமுறுத்தினான். பிறகு கதாயுதத்தைக்கையிற்கொண்ட அந்தப்பீமனைக்கண்டு யானைமீதேறியிருக்கின்றஅந்தவீரர்கள் யுத்தத்தில்முயற்சியுடன் அவனை எல்லாப்பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். யானைகளின்நடுவிலிருக்கின்ற அந்தப்பாண்டவன் பெரியமேகமண்டலத்தினுடையநடுவிலிருக்கிற சூரியன்போல விளங்கினான். பாண்டவசிரேஷ்டனானபீமன் தொடர்ச்சியாயிருக்கின்ற ஒப்பற்ற பெரியமேகமண்டலத்தைக் காற்றனது சிதறஅடிப்பதுபோலக் கதாயுதத்தினாலே யானைப்படையை நாசம்செய்தான். பலசாலியானபீமஸேனனால் யுத்தத்தில் கொல்லப்படும்அந்த யானைகள் கர்ஜிக்கின்றமேகங்கள்போல அலறின. அந்தயுத்தமுனையில் யானைகளால் கொம்புகளால் பலவாறாகப்பிளக்கப்பட்டபீமன் பூத்த அசோகவிருக்ஷத்திற்குஒப்பாக விளங்கினான். பாண்டவன் பிறகு கதாயுதத்தினால் யானைவீரர்களுடையஅம்புமழையைநாசம்செய்து காற்றுவேகம்போன்றவேகத்தோடு யுத்தத்தில் ஸஞ்சரித்தான். கொம்பினால் அவயவங்கள்கிழிபட்டபீமன் யானைகளுடையகொம்புகளால் மிகத் துன்புறுத்தப்பட்டு யானையைக் கொம்பில்பிடித்துப் பிறகு அதனைக் கொம்பிழந்ததாகச்செய்தான். பீமன் அந்தத்தந்தத்தினாலேயே காலதண்டத்தைக்கையில்கொண்டயமன்போல யுத்தத்தில் யானையை மத்தகத்தில்அடித்துக் கீழேதள்ளினான். உதிரத்தால்நனைக்கப்பட்ட

கதாயுதத்தைக்கையில்தரித்தவனும் மேலேபடிந்திருக்கின்றமாம்ஸத்தினாலும் ஊனீராலும்பிரகாசிக்கின்றவனுமானபீமன் ரக்தத்தினால் தேகமனைத்தும் பூசப்பட்ட ருத்திரன்போலக் காணப்பட்டான். இவ்வாறு கொல்லப்படுகின்றவைகளும் மாண்டவைபோகமிருந்திருக்கின்றவைகளுமான அந்தப்பெரியயானைகள் தம்ஸைனியத்தையேநாசஞ்செய்துகொண்டு திக்குக்களில் வேகமாகஓடின. நான்குபக்கங்களிலும்ஓடுகின்ற அந்தப்பெரியயானைகளால் துரியோதனனுடையஸைன்யமுழுமையும் மறுபடியும் யுத்தத்தைவிட்டுப் புறங்காட்டிஓடியது.

---

## நூற்றுமூன்றாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தவர்ணனம்.)

பீஷ்மருக்கு ஸோமகர்களோடு மத்தியான்னகாலத்தில் லோகங்களுக்குநாசத்தைஉண்டுபண்ணக்கூடிய பயங்கரமானயுத்தம் நடந்தது. தேராளிகளுட்சிறந்த காங்கேயர் பாண்டவர்களுடையசேனையை நூறு நூறாகவும் ஆயிரமாயிரமாகவும் கூர்மையானஅம்புகளாலே நாசஞ்செய்தார். மிருகங்களுடையகூட்டத்தைஅடைந்து ஸிம்மமானது அடிப்பதுபோல உம்முடையபிதாவானபீஷ்மர் அச்சைனியத்தை அடித்தார். திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் விராடனும் அவ்வாறே துருபதனும் மஹாரதரானபீஷ்மரையடைந்து யுத்தத்தில் பாணங்களாலே அவரையடித்தார்கள். பிறகு பீஷ்மர் திருஷ்டத்யும்னனையும் விராடனையும் மும்மூன்றுபாணங்களாலடித்துத் துருபதன்மீதும் நாராசத்தைப் பிரயோகித்தார். பகைவர்களைஅழிக்கிறஅந்தப்பீஷ்மராலேஅடிக்கப்பட்டபெரியவில்லாளிகள் காலால்மிதிக்கப்பட்டஸர்ப்பங்கள்போல யுத்தத்தில் கோபத்தையடைந்தார்கள். சிகண்டியானவன் பரதகுலத்திற்பிறந்த அரசர்களுக்குப்பிதாமகரானபீஷ்மரைப் பாணங்களால் அடித்தான். விரதம்தவறாதபீஷ்மர் அந்தச்சிகண்டியைப் பெண்தன்மையுள்ளவனென்றுமனத்தினாலெண்ணி அவன்மீது அம்புதொடுக்கவில்லை. திருஷ்டத்யும்னனோ ரணகளத்தில் குரோதத்தினால் அக்னிபோலஜ்வலித்துக்கொண்டு பிதாமகரை மூன்றுபாணங்களாலே இரண்டுகைகளிலும் மார்பிலும் அடித்தான். துருபதன் இருபத்தைந்து பாணங்களாலும் விராடன் பத்துப்பாணங்களாலும் சிகண்டி இருபத்தைந்துபாணங்களாலும் பீஷ்மரை அடித்தார்கள். மிகுதியாகஅடிக்

கப்பட்டு ரக்தப்பிரவாஹத்தால்முழுதும்நனேக்கப்பட்ட அந்தப்பீஷ்மர் வஸந்தகாலத்தில் புஷ்பங்கள்நிறைந்த சிவந்தஅசோகவிருக்ஷம் போல விளங்கினர். காங்கேயர் அந்தப்பாண்டவஸேனைவீரர்களை மும்மூன்றுபாணங்களால் திருப்பியடித்து ஒருபல்லத்தினல் துருபதனுடையவில்லையும் அறுத்தார். அந்தத்துருபதன் வேறுவில்லேக்கையிலெடுத்துப் பீஷ்மரை ஐந்துபாணங்களால்அடித்து யுத்தமுனையில் மிக்ககூர்மையுள்ளமூன்றுபாணங்களாலே அவருடையஸாரதியையும் அடித்தான். யுதிஷ்டிருடைய ஆஜ்ஞையினல் பீமன், திரௌபதியின் ஐந்துபுதல்வர்கள், பிராதாக்களானஐந்துகேகயராஜபுத்திரர்கள், ஸாத்வதனைஸாத்யகிஇவர்கள் அனைவரும் பீஷ்மரை எதிர்த்தார்கள். பீஷ்மரைக்காப்பதில்முயற்சியுள்ள உம்மைச்சேர்ந்தஎல்லாவீரர்களும் ஸைனியங்களுடன் எதிரிகளிடத்தினின்று (அவரை) ரக்ஷித்துக்கொள்வது என்றகார்யத்தின்பொருட்டு யுத்தத்தில் திருஷ்டத்யும்னன்முதலான வீரர்களையும் பாண்டவஸேனையையும்எதிர்த்தார்கள். அந்தயுத்தத்தில் உம்முடையவீரர்களுக்கும் சத்துருவீரர்களுக்கும் மனிதர்களுக்கும் குதிரைகளுக்கும் தேராளிகளுக்கும் யானைகளுக்கும் யமனுடைய ராஷ்டிரத்தைவிருத்திபண்ணுகின்றமிகப்பெரியஸங்குலயுத்தம் நடந்தது. ரதிகன்ரதிகனைஎதிர்த்து அவனை யமலோகத்திற்கனுப்பினன். அவ்வாறே மனிதர்கள், யானைகள், குதிரைகள், குதிரைவீரர்கள்ஆகிய இவர்கள் சத்துருக்கள்படையிலுள்ளமனிதர்களையும் யானைகளையும் குதிரைகளையும் குதிரைக்காரர்களையும்எதிர்த்து யமலோகத்திற்கு அனுப்பினர்கள். அரசரே! வீரர்கள் பதிவான கணுக்களுள்ளஅம்புகளாலும் பயங்கரமாகவும் பற்பலவிதமாகவுமிருக்கின்ற அம்புகளாலும் ஆங்காங்கு பகைவர்களைப் பரலோகத்திற்கு அனுப்பினர்கள். ரதங்களோ ரதிகர்களால் இழக்கப்பட்டவைகளாகவும் ஸாரதிகள் கொல்லப்பட்டவைகளாகவும் மிகஓடுகின்றகுதிரைகளையுடையவைகளாகவும் யுத்தபூமியில் நான்குதிக்குக்களிலும் ஓடின. யுத்தத்தில் தேர்கள் அனேகமனிதர்களையும் குதிரைகளையும் அடித்துக்கொண்டு காற்றுப்போன்றவைகளும் [1] கந்தர்வநகரங்களுக்குஒப்பானவைகளுமாகக்காணப்பட்டன. கவசமணிந்தவர்களும் காந்தியுள்ளவர்களும் குண்டலங்களையும் தலைப்பாகைகளையுமுடையவர்களும்

---

[1] காற்றினல் ஆகாயத்தில் பலவடிவங்களாக அமையும்மேகவரிசைகள்; ஆகாயத்தில் விசித்ரமாகத்தோன்றும் நகரமென்றும் அது உற்பாதமென்றும் கூறுவர் வராகமிஹிரர்; ஸ்ரீ வால்மீகிராமாயணம் யுத்தகாண்டம் 103 - வது ஸர்க்கம் முதல்சுலோகம் கோவிந்தராஜீய வியாக்யானம்.

பொன்னாலாகிய தோள்வளைகளை அணிந்தவர்களும் தேவகுமாரர்களுக்குஒப்பானவர்களும் சௌர்யவிஷயத்தில் யுத்தத்தில் இந்திரனுக்கு ஒப்பானவர்களும் ஐசுவரியத்தினாலும் நீதியினாலும் முறையே குபேரனையும் பிருஹஸ்பதியையும்ஜயித்தவர்களும் எல்லாஜனங்களுக்கும் தலைவர்களும் சூரர்களுமான எல்லாரதிகர்களும் ரதத்தையிழந்து ஆங்காங்கு ஸாதாரணமனிதர்கள்போல ஓடுவதைக்கண்டோம். யானைகளும் சிறந்தபாகர்களால் விடுபட்டுத் தங்களுடையசேனைகளையே அடித்துக்கொண்டும் பலவாறுஅலறிக்கொண்டும் கீழேவிழுந்தன. கேடகங்களோடும் விசித்திரமானசாமரங்களோடும் கொடித்துணிகளோடும் வெண்குடைகளோடும் பொற்காம்புள்ளவைகளும் நாற்புறங்களிலும் சிதறினவைகளுமான [1] சாமரங்களோடும் ஓடுகிறவைகளும் நீருண்ட மேகங்களுக்குஒப்பானவைகளும் மேககர்ஜனைபோன்ற ஒலியுள்ளவைகளுமான யானைகள் திசைகள்தோறும் காணப்பட்டன. உமது வீரர்களுக்கும் பகைவர்களுக்கும்நடந்த அந்தஸங்குலயுத்தத்தில் யானைமீதுள்ளவீரர்கள் யானைகளால்விடுபட்டு ஓடுகின்றவர்களாகக் காணப்பட்டார்கள். (அவ்வாறே) பற்பலதேசங்களிலுண்டானவைகளும் பொன்னால்அலங்கரிக்கப்பட்டவைகளும் வேகத்தில்காற்றுப்போன்றவைகளுமானகுதிரைகளை நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் கண்டேன். அவ்வாறே அந்தயுத்தாங்கத்தில் குதிரைகள்கொல்லப்பட்டவர்களும் கத்திகளைக்கையிற்பிடித்தவர்களும் நான்குபக்கங்களிலும்ஓடுகின்றவர்களும் பகைவர்களால் ஓட்டப்படுகின்றவர்களுமானகுதிரைவீரர்களைக் கண்டோம். ஒருயானை மகாயுத்தத்தில் ஓடுகின்றமற்றொருயானையைத்தாக்கிப் பலத்தினால் காலாட்படைகளையும் குதிரைகளையும் அடித்துக்கொண்டுசென்றது. யுத்தத்தில் யானையானது ரதங்களைப் பொடியாக்கியது. போர்க்களத்தில் ரதங்களும் பூமியில் விழுந்திருக்கின்ற குதிரைகளை அவற்றின்மீதோடி அரைத்தன. [2] குதிரைகளும் மனிதர்களை(க்குளம்புகளால்) துவைத்தன. அந்தஸைனியங்கள் இப்படி பலவிதமாக ஒன்றையொன்று அடித்தன. [3] அவ்வாறு ரௌத்ரஸ்வரூபமாயும் மஹாபயங்கரமாயுமுள்ள அந்தயுத்தம் நடக்கும்போது கோரரூபமானதும் ரக்தத்தாலும் நரம்புகளாலும் அலைமோதுகின்றதும் எலும்புக்கூட்டங்களால் நெருங்கியதும் எவ்விதத்தாலும் ஒருவராலும் நெருங்கமுடியாததும் யமனுடையராஜ்

[1] இது இரட்டிக்கிறது. 'தோமரா:' என்று பாடங்கொள்வர் சிலர்.

[2] வேறுபாடம்.

[3] அதிகபாடமான அரைஸ்லோகம் விடப்பட்டது.

யத்தைவிருத்திபண்ணுகின்றதும் மயிர்களாகிறபாசிக்கொத்துக்களும் புல்தரைகளுமுள்ளதும் ரதங்களாகிறமடுக்களுள்ளதும் அம்புகளாகிற நீர்ச்சுழல்களுள்ளதும் குதிரைகளாகிறமீன்களுள்ளதும் தலைகளாகிற கற்களால்வியாபிக்கப்பட்டதும் யானைகளாகிற முதலைகளால் சூழப்பட்டதும் கவசங்கள் தலைப்பாகைகளாகிற நுரைக்கூட்டங்களுள்ளதும் விற்களும் வேகமுள்ள கத்திகளுமாகிற ஆமைகளால்நிறைந்ததும் சங்கங்களாகிற [1] முதலைகளினுடையகூட்டங்களால் வியாபிக்கப்பட்டதும் குடைகளாகிற [2] ஆமைகளையும் ரதங்களாகிற தெப்பங்களையுமுடையதும் கொடித்துணிகளுள்ள த்வஜங்களாகிற மரங்களால்நிறைந்ததும் மனிதர்களாகிற கரைகளை இடித்துத்தள்ளுகின்றதும் மாம்ஸம்தின்னும் (கழுகுமுதலான) பக்ஷிகளாகிற அன்னப்பறவைகளால்சூழப்பட்டதுமான ரக்தநதி பெருகஆரம்பித்தது. அரசரே! சூரர்களும் மகாரதர்களுமான அனேகக்ஷத்திரியர்கள் அந்த நதியைப் பயமின்றி ரதங்கள் யானைகள் குதிரைகளாகிற தெப்பங்களாலே தாண்டினார்கள். வைதரணீநதியானது இறந்தவர்களை யமனுடைய பட்டணத்தைக்குறித்துக் கொண்டுபோவதுபோல யுத்தத்தில்பயந்து மயக்கமுற்றவர்களை அந்தநதியானது அடித்துக்கொண்டுசென்றது. அந்தப்போர்க்களத்தில் க்ஷத்திரியர்கள் அந்தப்பெரியஅனர்த்தத்தைக் கண்டு, 'அரசர்கள் துரியோதனனுடையஅநியாயத்தினாலே நாசம் அடைகிறார்கள். குணசாலிகளானபாண்டுபுத்திரர்களிடத்தில் பாபாத்மாவும் பேராசையினால் மதிமயக்கங்கொண்டவனுமான திருதராஷ்டிராஜன் எவ்வாறு த்வேஷம்கொண்டான்?' என்று அலறினர். இவ்வாறு பாண்டவர்களுடைய ஸ்தோத்திரத்துடன்கூடியவைகளும் உமதுபுத்திரர்களுக்கு மிக்கபயங்கரமானவைகளுமான ஒருவரொருவர் சொல்லிக்கொள்ளும் பலவிதவார்த்தைகள் கேட்கப்பட்டன. பாரதரே! பிறகு எல்லாயுத்தவீரர்களாலும் சொல்லப்பட்ட அந்த வார்த்தைகளைக்கேட்டு எல்லாஉலகங்களுக்குந்தீங்கிழைப்பவனும் உம்முடையகுமாரனுமான துரியோதனன் பீஷ்மரையும் துரோணரையும் கிருபரையும் சல்யனையும்பார்த்து, 'அகங்காரத்தைவிட்டு நீங்கள்யுத்தம்செய்யுங்கள். ஏன் காலவிளம்பம்செய்கின்றீர்கள்?' என்றுசொன்னான். இவ்வாறு துரியோதனனால் ஏவப்பட்ட அரசர்களனைவரும் போர்புரிந்தார்கள். பிறகு பாண்டவர்களுடன் கௌரவர்களுக்குப் போர்நடந்தது. அரசரே! முற்காலத்தில் மகாத்மாக்களாலே நீர் தடுக்கப்பட்டும் சூதாட்டத்தாலுண்டான அதிகோரமான அனர்த்தத்தை

[1], [2], அதிகபாடம்.

அப்பொழுது தடுக்காமையினுடைய அதிபயங்கரமானபலனைக இதைப் பாரும். வேந்தரே! படைகளையும் உதவிவீரர்களையுமுடைய பாண்டு புத்திரர்கள் யுத்தத்தில் உயிரைக் காப்பாற்றவில்லை. கௌரவர்களும் யுத்தத்தில் உயிரைக் காப்பாற்றவில்லை. புருஷசிரேஷ்டரே! இக்காரணத்தினாலும் தெய்வவசத்தாலும் உமது அநீதியாலும் கோரமான ஜனநாசமானது நேர்ந்திருக்கின்றது.

---

## நூற்றுநான்காவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தவர்ணனை.)

நரசிரேஷ்டனான அர்ஜுனன் சுசர்மாவுடன் யுத்தத்திற்குவந்திருக்கிற அந்த அரசர்களைக் கூர்மையுள்ளபாணங்களாலே யமனுடைய வீட்டிற்கு அனுப்பினான். பிறகு சுசர்மாவும் யுத்தத்தில் பாணங்களாலே பார்த்தனை அடித்து எழுபதுபாணங்களால் வாஸுதேவனையும் மறுபடியும் ஒன்பதுபாணங்களால் பார்த்தனையும் அடித்தான். மகாரதனான இந்திரபுத்திரன் பாணக்கூட்டத்தால் அவனைத்தடுத்து யுத்தத்தில் சுசர்மாவின்படையிலுள்ள போர்வீரர்களை யமனுடையவீட்டிற்கு அனுப்பினான். அரசரே! மகாரதர்களான அந்தவீரர்கள் யுகாந்தகாலத்தில் காலனாலே பீடிக்கப்படுவதுபோல அர்ஜுனனால் பீடிக்கப்பட்டு யுத்தத்தில்பயந்து ஓடினார்கள். சிலர்குதிரைகளையும் சிலர் ரதங்களையும் சிலர்யானைகளையும் விட்டுவிட்டு எல்லாத்திக்குகளிலும் ஓடினார்கள்; குதிரைகள் யானைகள் ரதங்கள் இவைகளின்மீதேறிக்கொண்டு மிக்கவிரைவுடன் ஓடினார்கள். பாரதரே! பெரும்போரில் காலாட்படைகளும் சஸ்திரங்களை எறிந்துவிட்டு அபேக்ஷையில்லாமல் அவ்வவ்வழியினால்ஓடின. ஓடுகின்ற அந்தயுத்தவீரர்கள் திரிகர்த்ததேசாதிபதியான சுசர்மாவினாலும் அவ்வாறே மற்றச்சிறந்தஅரசர்களாலும் பலவாறு தடுக்கப்பட்டும் யுத்தத்தில் நிலைபெறவில்லை. அவ்வாறு அந்தச்சேனை ஓடுவதைக்கண்டு உம்முடையபுத்திரனான துரியோதனன் எல்லாப்படைகளுக்கும்முன்னின்று யுத்தத்தில் பீஷ்மரை முன்னிட்டுக்கொண்டு எல்லாவிதமானமுயற்சியோடும் அர்ஜுனனுக்கருகில் எதிர்த்துவந்தான். வேந்தரே! யுத்தத்தில் திரிகர்த்ததேசாதிபதியானசுசர்மாவினுடைய உயிரைக்காப்பதற்காகத் துரியோதனன்ஒருவனே தம்பியர்களுடனும்சேர்ந்து பலவிதபாணங்களை இறைத்துக்

கொண்டு நின்றான்; மற்றமனிதர்கள் ஓடிவிட்டனர். அவ்வாறே பாண்டவர்களும் கவசம்பூண்டு எல்லாவிதமானமுயற்சியுடனும் பீஷ்மரிருக்குமிடத்திற்கு அர்ஜுனனைக்காப்பதற்காகச் சென்றார்கள். காண்டீவத்தைவில்லாகக்கொண்ட அர்ஜுனனுடைய கோரமானவீரியத்தை யுத்தத்தில் அறிந்தவர்களாயிருந்தும், பாண்டவர்கள் ஹாஹாகாரத்தாலே உண்டுபண்ணப்பட்டஉத்ஸாகத்தோடு எல்லாப்பக்கங்களிலும் பீஷ்மரைச்சூழ்ந்தார்கள். பிறகு பனைமரத்தைக்கொடியாகக்கொண்ட சூரரான பீஷ்மர் பாண்டவர்களுடையசேனையை யுத்தரங்கத்தில் பதிவானகணுக்களுள்ளஅம்புகளாலே மறைத்தார். மகாராஜரே! பிறகு எல்லாக்கௌரவர்களும் ஒன்றுகூடி, சூரியன் உச்சியைஅடைந்திருக்கும்ஸமயத்தில் பாண்டவர்களுடன் போர்புரிந்தார்கள். சூரனான ஸாத்யகியானவன் ஐந்துபாணங்களாலே கிருதவர்மாவையடித்து ஆயிரக்கணக்கானபாணங்களையிறைத்துக்கொண்டு யுத்தத்தில் நின்றான். துருபதராஜனும் கூர்மையுள்ளஅம்புகளால் துரோணரையடித்து மறுபடி எழுபதுபாணங்களால் அடித்து அவருடையஸாரதியையும் ஐந்துபாணங்களால் அடித்தான். பீமஸேனனோ தனக்குப்பிரபிதாமகனான பாஹ்லீகராஜனையடித்து, காட்டில் புலிபோல உரக்கஸிம்மநாதஞ்செய்தான். சூரனான அர்ஜுனபுத்திரன் சித்திரஸேனனாலே அநேகபாணங்களால் அடிக்கப்பட்டு ஆயிரக்கணக்காகப் பாணங்களை இறைத்துக்கொண்டு யுத்தபூமியில் நின்றான். அர்ஜுனபுத்திரனும் யுத்தத்தில் சித்ரஸேனனை மூன்றுபாணங்களால் அடித்தான். யுத்தத்தில்எதிர்த்த சிரேஷ்டர்களானஅவ்விருவரும் ஆகாயத்தில்சேர்ந்திருக்கின்றமஹாகோரரூபிகளான புதனும் சனியும்போல் விளங்கினார்கள். சத்துருவீரர்களைக்கொல்பவனும் சிறந்தபலமுடையவனுமான ஸுபத்திராபுத்திரன் அந்தச்சித்திரஸேனனுடைய நான்குகுதிரைகளையும் ஸாரதியையும் ஒன்பதுபாணங்களால் அடித்து ஸிம்மநாதஞ்செய்தான். அரசரே! மகாரதனான அந்தச்சித்ரஸேனன் குதிரைகள் கொல்லப்பட்டரதத்தினின்று விரைவாகக்குதித்துத் துர்முகனுடையரதத்தில் விரைவாகஏறினான். பராக்கிரமசாலியான துரோணரும் விரைந்து பதிவான கணுக்களுள்ளஅம்புகளாலே துருபதனைப்பிளந்து அவனது ஸாரதியையும் அடித்தார். பிறகு துருபதராஜன் ஸேனாமுகத்தில் ஹிம்ஸிக்கப்பட்டுப் பூர்வவைரத்தைநினைத்துக்கொண்டு வேகமுள்ளகுதிரைகளோடுயுத்தரங்கத்தைவிட்டோடினான். பீமஸேனனோ பாஹ்லீகராஜனை எல்லாச்சேனைகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஒருமுகூர்த்தத்திற்குள் குதிரைகளையும் ஸாரதியையும் ரதத்தையுமிழந்தவனாகச்

செய்தான். மகாராஜரே! புருஷசிரேஷ்டனனபாஹ்லீகன் அதிகமான பிராணஸம்சயத்தையடைந்து அந்தமஹாயுத்தத்தில் பரபரப்புடன் அந்தரதத்தினின்று குதித்து லக்ஷ்மணனுடையரதத்தில் விரைவாக ஏறினன். ஸாத்யகியானவன் பெரிதானபோர்க்களத்தில் பலவித அம்புகளாலே கிருதவர்மாவைத்தடுத்துப் பிதாமகரானபீஷ்மரை நாடினன். அந்தஸாத்யகி பெரியவில்லை அசைத்துக்கொண்டு பரதகுலோத்தமரானபீஷ்மரைக் கூர்மையுள்ளவைகளும் மர்மங்களைக்கூடச் சேதிக்குந்திறமையுள்ளவைகளுமான அறுபதுபாணங்களால் அடித்துத் தேரினிடையில்நர்த்தனம்செய்கின்றவன்போலக் காணப்பட்டான். பிறகு பிதாமகரானபீஷ்மர் அந்தஸாத்யகியின்மீது பொன்னல் அலங்கரிக்கப்பட்டதும் மிக்கவேகமுள்ளதும் பெண்ணுகம்போன்றதும் மங்களகரமானதும் இரும்பினுற்செய்ததுமான பெரியசக்தியைப் பிரயோகித்தார். மகாகீர்த்திமானனஸாத்யகி தன்னைநோக்கிவிரைவாகவருகின்றதும் மிருத்யுவுக்கொப்பானதும் எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாததுமான அந்தச்சக்தியை லாகவத்தினலே தன்மீதுதாக்காமல் கீழே விழும்படிசெய்தான். மகாபயங்கரமான அந்தச்சக்திஆயுதமானது ஸாத்யகியை அடையாமல் அதிகஒளியுடன்கூடின பெரிய [1] உற்கைபோலப் பூமியின்மீதுவிழுந்தது. அரசரே! பிறகு ஸாத்யகியோ பொன்னுற்பிரகாசிக்கின்ற தன்னுடையசக்தியை வேகமாகக்கையிலெடுத்துப் பிதாமஹருடையரதத்தைக்குறித்து எறிந்தான். மகாயுத்தத்தில் ஸாத்யகியினுடைய புஜத்தினுடையவேகத்தினலே நன்றுகஎறியப்பட்ட அந்தச்சக்தியாயுதமானது ஒருமனிதனைக்குறித்துக் காலராத்திரிவருவதுபோல (பீஷ்மரைக்குறித்து) வேகத்தோடு எதிரில்வந்தது. பாரதரானபீஷ்மர் விரைவாகவருகின்றஅந்தச்சக்தியாயுதத்தை மிக்க கூர்மையுள்ள இரண்டுக்ஷுரப்ரங்களாலே இரண்டாகவெட்டினர். அந்தச்சக்தி பூமியில் சிதறியது. பகைவர்களை அழிக்குந்திறமையுடையவரும் கோபங்கொண்டவருமான காங்கேயர் சக்தியைத்துண்டாக்கி ஸாத்யகியை ஒன்பதுபாணங்களாலே மார்பிலடித்து அட்டஹாஸஞ்செய்தார். பிறகு பாண்டவர்கள் ரதங்களையும் யானைகளையும் குதிரைகளையுமுடையவர்களாக ஸாத்யகியைரக்ஷிக்கவேண்டியதற்காக யுத்தத்தில் பீஷ்மரைச் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு யுத்தத்தில் வெற்றியில்விருப்பமுள்ளபாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் மயிர் பொடிக்கத்தக்க கைகலந்தயுத்தம் நடக்கஆரம்பித்தது.

---

[1] தூமகேது.

## நூற்றைந்தாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர்முதலானவர்களுடைய யுத்தவர்ணனம்.)

மகாராஜரே! வர்ஷாகாலத்தில் ஆகாயத்தில் மேகங்களால் சூழப்பட்டசூரியனைப்போல யுத்தகளத்தில் பாண்டவர்களால் நான்குபக்கங்களிலும்சூழப்பட்டும் கோபங்கொண்டுமிருக்கின்ற பீஷ்மரைக்கண்டு துர்யோதனன் துச்சாஸனனைநோக்கி, 'பரதர்களிற்சிறந்தவனே! சூரரும் மகிமைதங்கியவில்லைக் கையில்தாங்கியவரும் சூரர்களையழிப்பவருமான இந்தப்பீஷ்மர் நாலுபக்கங்களிலும் சூரர்களானபாண்டவர்களால் சூழப்பட்டிருக்கிறார். மகாத்மாவான அந்தப்பீஷ்மருடைய ரக்ஷணமானது உன்னால் செய்யத்தக்கது. நமக்குப்பாட்டனாரான பீஷ்மர் யுத்தத்தில் பாதுகாக்கப்படுவாராயின் முயற்சியுடையவர்களான பாஞ்சாலர்களைப் பாண்டவர்களுடன் யுத்தத்தில் கொல்வார். இந்தயுத்தத்தில் பீஷ்மரைப்பாதுகாப்பதே நமக்கு முக்கியமானகாரியமென்றெண்ணுகிறேன். பெரியவிரதமுள்ளவரும் மகாவில்லாளியுமான இந்தப்பீஷ்மர் நமக்கு ரக்ஷகர். நீ யுத்தத்தில் ஒருவராலும் செய்யமுடியாதகாரியத்தைச்செய்கின்ற பிதாமஹரை எல்லாஸைன்யங்களோடும் சேர்ந்து சூழ்ந்துகொண்டு பாதுகாக்கவேண்டும்' என்று கூறினான். இவ்வாறு சொல்லியதைக்கேட்ட உமதுபுத்திரனான அந்தத்துச்சாஸனன் யுத்தகளத்தில் பெரியஸைனியத்தால் சூழப்பெற்றுப் பீஷ்மரை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துநின்றான். பிறகு லக்ஷம் குதிரைகளுக்கு(த் தலைவனும்) ஸுபலபுத்திரனுமான சகுனியானவன் (யுத்தம்செய்வதில்) பழக்கப்பட்டவர்களும் யுத்தத்தில் ஸமர்த்தர்களுமான புருஷசிரேஷ்டர்களோடுகூடினவர்களும் நிர்மலமானஈட்டிகளைக் கையிற்கொண்டவர்களும் ரிஷ்டிகளையும் தோமரங்களையுந்தரித்தவர்களும் கொழுப்புடையவர்களும் மிக்கவேகமுடையவர்களும் வல்லமையுடையவர்களுமான [1] காலாட்களோடுகூடிப் புருஷசிரேஷ்டர்களான நகுலன், ஸகதேவன், பாண்டுபுத்திரரானதர்மராஜர் ஆகியஇவர்களை நான்குபக்கத்திலும்வளைத்து எதிர்த்தான். பிறகு துரியோதனராஜன் பாண்டவர்களைத்தடுப்பதற்காகச் சூரர்களான பதினாயிரம்குதிரைவீரர்களை அனுப்பினான். வேந்தரே! அதிவேகமுள்ளவைகளும் யுத்தத்தில்புகுந்தவைகளும் பக்ஷிகளைப்போல விரைவாகச்செல்லு

[1] 'பதாதிநாம்' என்று பாடங்கொள்ளப்பட்டது.

கின்றவைகளுமான குதிரைகளினுடையகுளம்புகளால்அடிக்கப்பட்டுப் பூமியானது நடுக்கமுற்றது; சப்திக்கவும்சப்தித்தது. மலையில்எரிக்கப்படுகின்ற பெரிய மூங்கிலடர்ந்தகாட்டினுடையசப்தம்போலக் குதிரைகளுடைய மிகவும்பெரிதானகுளப்படிச்சப்தமானது அப்பொழுது கேட்கப்பட்டது. அந்தயுத்தகளத்தில் தாவிச்செல்லுகின்றகுதிரைகளாலே உண்டுபண்ணப்பட்டபெரும்புழுதியானது சூரியனுடைய ரதத்தையடைந்து சூரியனை மறைத்தது. அதிவேகத்துடன் பிரவேசிக்கின்ற அன்னப்பறவைகளாலே பெரியதடாகம் கலக்கப்படுவது போலச் சிறந்தவேகமுள்ள அந்தக்குதிரைகளாலே பாண்டவசேனையானது கலக்கப்பட்டது. கனைக்கின்ற குதிரைகளினுடையசப்தத்தினாலே ஒன்றுமே அறியப்படவில்லை. அவ்வொலியினால், (வேறு) பேரொலியும் விழுங்கப்பட்டுமறைந்தது. மஹாராஜரே! பிறகு, யுதிஷ்டிரராஜரும் மாத்ரீபுத்திரர்களான நகுலஸகதேவர்களும், ரணகளத்தில் குதிரைக்காரர்களுடையவேகத்தை, வர்ஷாகாலத்தில் மிகநிரம்பியதும் பௌர்ணமாஸியில் கொந்தளிப்புற்றதுமான மகோததியினுடையஜலத்தின்வேகத்தைக் கரைதடுப்பதுபோலப் பலத்தால் தடுத்தார்கள். பிறகு, அந்த(ப் பாண்டவ)ரதிகர்கள் கணுக்கள்பதிவான அம்புகளாலே [1] குதிரைவீரர்களுடைய தலைகளை அறுத்தார்கள். மகாராஜரே! உறுதியானவில்லைக்கையில்தாங்கிய வீரர்களாலே அடிக்கப்பட்ட அந்தக்குதிரைவீரர்கள் யானைகளாலேஅடிக்கப்பட்டமஹாகஜங்கள் மலையிலுள்ளகுகையில் விழுவதுபோல விழுந்தார்கள். அந்தக்குதிரைவீரர்களும் பத்துத்திசைகளிலும் ஸஞ்சரித்துக்கொண்டு மிக்ககூர்மையுள்ளஈட்டிகளாலும் கணுக்கள்பதிந்திருக்கும் அம்புகளாலும் வீரர்களுடையமுடிகளை அறுத்தெறிந்தார்கள். ரிஷ்டிகளாலேஅடிக்கப்பட்ட குதிரைவீரர்களின்தலைகள் பெரியமரங்களினின்றுபழங்கள்உதிர்வதுபோலஉதிர்ந்தன. மன்னரே! ஆங்காங்கு நாசஞ்செய்யப்பட்டகுதிரைவீரர்களோடுகூடின குதிரைகள் எல்லாவிடங்களிலும் கீழேவிழுந்தவைகளும் கீழேவீழ்த்தப்பட்டவைகளுமாகக் காணப்பட்டன. பிராணனைக்காப்பாற்றுவதில் நோக்கங்கொண்டமான்கள் ஸிம்மத்தைக்கண்டு பயந்து ஓடுவதுபோல வதஞ்செய்யப்படுகின்றகுதிரைகள் பயத்தால் பீடிக்கப்பட்டு எங்கும் ஓடின. மகாராஜரே! பாண்டவர்கள் மகாயுத்தத்தில் சத்துருக்களைஜயித்துச் சங்கங்களையூதினார்கள். யுத்தத்தில் பேரீவாத்தியங்களையும் அடித்தார்கள். பிறகு துரியோதனன் ஸேனை தோல்வியடைவிக்கப்பட்டதைக்

[1] ஒருசொல் விடப்பட்டது.

கண்டு மனந்தளர்ந்து மத்ரராஜனைப்பார்த்து, 'மகாபாகுபலமுள்ளவரே! பிரபுவே! மூத்தோனான இந்தப்பாண்டுபுத்திரன் நகுலஸஹதேவர்களோடுகூடி நீங்கள்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்தத்தில்ஸேனையைஓடச்செய்கிறான். மிக்கபுஜபலமுள்ளவரே! ஸமுத்திரத்தைக்கரை தடுப்பதுபோல இவனை நீர் தடுப்பீராக. நீர் பகைவர்களால் தாங்குதற்கு மிகஅரிய வல்லமையுள்ளவரென்று கேட்டிருக்கிறேன்' என்று சொன்னான். பிரதாபசாலியானசல்யன் உமதுபுத்திரனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு யுதிஷ்டிரராஜரிருக்குமிடத்திற்குத் தேர்க்கூட்டத்துடன் சென்றான். யுதிஷ்டிரர் தம்மைநோக்கி விரைவாகவருகின்றதும் பெருவெள்ளத்தின் வேகம்போன்றவேகமுள்ளதுமான சல்யனுடைய மிக்கபெரும்படையை யுத்தத்தில் தடுத்தார். மகாரதரான தர்மராஜர் யுத்தத்தில் மத்ரராஜனைப் பத்துப்பாணங்களாலே நடுமார்பில் விரைவாக அடித்தார். நகுலனும் ஸஹதேவனும் அவனை ஏழுபாணங்களால் அடித்தார்கள். மத்ரராஜனும் அவர்களனைவரையும் மும்மூன்றுபாணங்களால் அடித்தான்; யுதிஷ்டிரரைக் கூர்மையான அறுபதுபாணங்களாலே மறுபடியும் அடித்துப் பரபரப்புடன் கூடினமாத்ரீபுத்திரர்களை இரண்டிரண்டுபாணங்களாலே அடித்தான். பிறகு தோள்வலிமிக்கவனும் சத்துருக்களைஜயிக்கின்றவனுமானபீமன் மிருத்யுவினுடையவாயை அடைந்ததுபோல யுத்தத்தில் மத்ராஜனுடையவசத்தையடைந்திருக்கின்ற யுதிஷ்டிராராஜரைக்கண்டு யுத்தத்தில் விரைவாகச் சல்யனை எதிர்த்துவந்தான். பீமன் வரும்பொழுதே முழுமையும்உருக்கினாற்செய்தவைகளும் கூர்மையுள்ளவைகளும் மர்மஸ்தானத்தைப்பிளக்கின்றவைகளுமான நாராசங்களாலே மத்ரராஜனை அடித்தான். பிறகு பீஷ்மர் துரோணர்இருவரும் பெருஞ்சேனைசூழ்ந்துவர விரைவாக அம்புகளைப்பொழிந்துகொண்டு தர்மராஜரை எதிர்த்துவந்தார்கள். பிறகு சூரியன் மேற்றிசையைஅடைந்து பிரகாசிக்குமளவில் மகாகோரமும் அதிபயங்கரமுமானயுத்தம் ஆரம்பித்தது.

---

## நூற்றுறுவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(வாஸுதேவர் பீஷ்மருடைய வல்லமையைப்பொறாமல் அவரைக்கொல்லச் சென்றதும் அர்ஜுனன்தடுக்க இருவரும் திரும்பித் தேரேறியதும்.)

வேந்தரே! பிறகு உமதுபிதாவானபீஷ்மர் கோபங்கொண்டு கூர்மையுள்ள உத்தமமானபாணங்களாலே ஸைனிகர்களோடுகூடினபாண்

டவர்களை யுத்தத்தில் நான்குபக்கங்களிலும் அடித்தார். பீஷ்மர் பீம னைப் பன்னிரண்டுபாணங்களாலும் ஸாத்யகியை ஒன்பதுபாணங்களா லும் நகுலனை மூன்றுபாணங்களாலும் ஸகதேவனை ஏழுபாணங்களா லும் அடித்து யுதிஷ்டிரருடைய இரண்டுகைகளிலும் மார்பிலும் பன்னி ரண்டுபாணங்களை நாட்டினர். பிறகு மஹாபலசாலியான பீஷ்மர் திருஷ் டத்யும்னனையும்அடித்து ஸிம்மநாதம்செய்தார். பிதாமஹரான அந்தப் பீஷ்மரை நகுலன் பன்னிரண்டுபாணங்களாலும் ஸாத்யகி மூன்று பாணங்களாலும் திருஷ்டத்யும்னன் எழுபதுபாணங்களாலும் பீமஸே னன் ஏழுபாணங்களாலும் யுதிஷ்டிரர் பன்னிரண்டுபாணங்களாலும் திருப்பியடித்தார்கள். துரோணரோ ஸாத்யகி பீமஸேனன் இவர்களில் ஒவ்வொருவனையும் யமதண்டத்திற்கொப்பான கூர்மையுள்ள ஐந்து ஐந்துபாணங்களாலே அடித்தார். அவ்விருவரும் வேணுகமென்கிற ஆயு தங்களாலே பெரியயானையைஅடிப்பதுபோல் பிராம்மணசிரேஷ்ட ரான அந்தத்துரோணரை லக்ஷ்யத்தில் நேராகச்செல்லுகின்ற மும் மூன்றுபாணங்களாலே திருப்பியடித்தார்கள். கூர்மையான அம்புகளா லே துன்புறுத்தப்பட்டும் ஸௌவீரர்களும் கிதவர்களும் கீழ்நாட்டுவீரர் களும் மேனாட்டுவடநாட்டுவீரர்களும் மாளவர்களும் அபீஷாஹர்க ளும் சூரஸேனர்களும் சிபிகளும் வஸாதிகளும் யுத்தத்தில் பீஷ்மரை விட்டு விலகவில்லை. அவ்வாறே பற்பலதேசத்தினின்றுவந்திருக்கிற மற்ற அரசர்களும் பற்பலஆயுதங்களைக்கையிற்கொண்டு பாண்டவர் களை எதிர்த்தார்கள். அரசரே! அவ்வாறே பாண்டவர்களும் பிதாமஹ ரைச் சூழ்ந்துகொண்டார்கள். பகைவர்களால் ஜயிக்கமுடியாதபீஷ்மர் எல்லாப்பக்கத்திலும் தேர்க்கூட்டங்களால்சூழப்பட்டுக் காட்டில்பிடி த்தநெருப்புப்போலச் சத்துருக்களையெரித்துக்கொண்டு பிரகாசித்தார். ரதமாகிறஅக்கினிகிருகத்திலுள்ளதும் வில்லாகிறஜ்வாலையுள்ளதும் கத் திகள், சக்திகள், கதைகளாகிறவிறகுகளோடுகூடியதும் பாணங்களா கிறநெருப்புப்பொறிகளுள்ளதுமான பீஷ்மராகிறநெருப்பு க்ஷத்திரிய சிரேஷ்டர்களை எரித்தது. மகாராஜரே! பெருந்தீயானது காற்றுடன் கூட உலர்ந்தகாட்டில் ஸஞ்சரிப்பதுபோலப் பீஷ்மர் திவ்யாஸ்திரத் தைப்பிரயோகம்செய்துகொண்டு ஸஞ்சரித்தார். அவர் பொன்மயமான கனுக்களுள்ளவைகளும் கழுகிறகுகள் பூண்டவைகளும் மிக்ககூர்மை யுள்ளவைகளுமான கர்ணிகளாலும் நாளீகங்களாலும் நாராசங்களா லும் அந்தஸைனியத்தை மூடினார். மேலும் கூர்மையுள்ள அம்புகளா லே கொடிகளையும் தேராளிகளையும் கீழேதள்ளி ரதஸமூகங்களை மொட் டையாயிருக்கின்றபனங்காடுகள்போலச் செய்தார். மிக்கபுஜபலமுள்ள

வரும் ஆயுததாரிகளனைவரிலுஞ்சிறந்தவருமான அந்தப்பீஷ்மர் ரண களத்தில் ரதங்களையும் யானைகளையும் குதிரைகளையும் மனிதர்களையிழந்தவைகளாகச் செய்தார். பாரதகுலத்திற்பிறந்தவரே! இடிமுழக்கம் போன்றபீஷ்மருடையநாணொலியையும் கையுறைகளுடைய ஒலியையுங்கேட்டு எல்லாப்பிராணிகளும் நடுக்கமுற்றன. உமதுபிதாவினுடையபாணங்கள் வீணாகாமல் லக்ஷ்யங்களில் பாய்ந்தன. பீஷ்மருடையவில்லினின்றுவிடுபட்ட அம்புகள் (யுத்தவீரர்களுடைய) கவசங்களில் தடையற்றுப் பாய்ந்தன. மகாராஜரே! வீரர்கள்கொல்லப்பெற்றவையும் வேகமுள்ளகுதிரைகளோடுகூடியவையுமானதேர்கள் யுத்தபூமியில் அங்குமிங்கும்இழுக்கப்படுவதை நாங்கள் கண்டோம். பதினாலாயிரம் சைத்யர்களும், காசிதேசத்துவீரர்களும், கரூசர்களும், மகாரதர்களென்றுபிரஸித்திபெற்றவர்களும் மகாகுலத்தில்பிறந்தவர்களும் யுத்தத்தில்சரீரத்தைஇழக்கத்துணிந்தவர்களும் முன்வைத்தகாலைப் பின்வைக்காதவர்களும் பொன்னால்அலங்கரிக்கப்பட்ட கொடிகளையுடையவர்களுமான மற்றுமுள்ளஅரசர்களனைவரும் வாயைத்திறந்துகொண்டிருக்கும்அந்தகனைப்போன்றபீஷ்மரை ரணகளத்தில் எதிர்த்துக்குதிரைகளோடும் ரதங்களோடும் யானைகளோடும் பரலோகம்சேர்வதற்காக (அந்தயுத்தகளத்தில்) மூழ்கினார்கள். பாரதகுலத்திற்பிறந்த மகாராஜரே! அச்சுக்களும் சக்கரங்களும் மற்றுமுள்ளஉறுப்புக்களும் ஒடிக்கப்பெற்றசிலதேர்களை நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் நாங்கள் கண்டோம். [1] வரூதங்களோடு உடைத்துத்தள்ளப்பட்ட தேர்களாலும் கீழேதள்ளப்பட்ட ரதிகர்களாலும் அம்புகளாலும் உடைக்கப்பட்ட நல்லகவசங்களாலும் பட்டஸங்களாலும் கதாயுதங்களாலும் பிண்டிபாலங்களாலும் கூர்மையுள்ளஅம்புகளாலும் அச்சுமரங்களாலும் அம்புக்கூடுகளாலும் உடைக்கப்பட்ட சக்கரங்களாலும் கைகளாலும் விற்களாலும் கத்திகளாலும் குண்டலங்களையணிந்த தலைகளாலும் கையுறைகளாலும் விரலுறைகளாலும் கீழேபுரட்டித்தள்ளப்பட்ட கொடிமரங்களாலும் பலவாறாகஅறுக்கப்பட்டவிற்களாலும் யுத்தபூமியானது நான்குபக்கத்திலும் நன்குபரப்பப்பட்டதாகியது. அந்தயுத்தகளத்தில் யானைமீதேறிப்போர்புரிகின்றவீரர்கள் யானைகளையும் குதிரைவீரர்கள் குதிரைகளையும் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் விரைவாக எதிர்த்தார்கள். அந்தவீரர்கள் முயற்சித்தும் பீஷ்மருடையபாணத்தால் பீடிக்கப்பட்டுஓடுகின்ற மகாரதர்களைத்தடுப்பதற்

[1] வேறொன்றில் மோதுவதால் கெடாமலிருப்பதற்காகத் தேரைச்சுற்றி மரத்தினால் அமைக்கப்பட்ட ஓர் உறுப்பு.

குச் சக்தியற்றவர்களானார்கள். மகாராஜரே! மகேந்திரனுக்குச்சமமானவீர்யமுள்ளபீஷ்மராலே அடிக்கப்படுகின்ற பெருஞ்சேனை சிதறியது. இருவர் ஒன்றுசேர்ந்து ஓடவில்லை. பாண்டுபுத்திரர்களுடைய சேனை தேர்களும்யானைகளும்குதிரைகளும்மிக அடிக்கப்பட்டதும் மேழேவிழ்ந்திருக்கின்ற கொடிகளால்நெருங்கியதும் ஹாஹாகாரங்கொண்டதும் ப்ரஜ்ஞையையிழந்ததுமாயிற்று. பிதா புத்திரனைக் கொன்றான். அவ்வாறே புத்திரனும் பிதாவைக் கொன்றான். யுத்தத்தில் நண்பன் தெய்வபலத்தினால் தூண்டப்பட்டுத் தன்பிரியமானதோழனைக் கொன்றான். இன்னும்மற்றப்பாண்டுபுத்திரர்களுடைய ஸைனிகர்கள் கவசங்களையிழந்து விரித்ததலைமயிருடன் நாலாபக்கங்களிலும் ஓடுகின்றவர்களாகக் காணப்பட்டார்கள். அப்பொழுது பாண்டுபுத்திரனுடையசேனையானது வழிதெரியாமல் சுற்றிச்சுற்றித்தடுமாறுகின்ற பசுக்கூட்டம்போலத் தடுமாறுகின்றதாகவும் அங்குமிங்கும் சுற்றிவருகின்றரதங்களின் ஏர்க்கால்களோடுகூடியதாகவும் தீனஸ்வரத்துடன் கூடியதாகவும் காணப்பட்டது. யாதவநந்தனரான ஸ்ரீவாஸுதேவர் ஸேனை பீஷ்மரால் நன்றாகநாசஞ்செய்யப்படுகின்றதைக்கண்டு உத்தமமானரதத்தை நிறுத்திக்கொண்டு குந்திபுத்திரனான அர்ஜுனனைப் பார்த்துப் பின்வருமாறு வசனிக்கலானார்.

'பார்த்த! நீஎதிர்பார்த்திருந்தகாலம் இதோ வந்துவிட்டது. நரசிரேஷ்டனே! யுத்தத்தில் பிரகாசிக்கின்றஇந்தப்பீஷ்மரை நன்றாக அடி. வீரனே! முற்காலத்தில் விராடநகரத்தில் அரசர்களால்நிறைந்த சபையில் ஸஞ்சயனுக்கருகில், 'எவர்கள் என்னை யுத்தத்தில் எதிர்த்துப் போர்புரிவார்களோ அப்படிப்பட்ட பீஷ்மர்துரோணர்முதலான எல்லாக்கௌரவஸைனிகர்களையும் பந்துமித்திரபரிவாரங்களுடன் யான் கொல்வேன்' என்று உன்னால் உரைக்கப்பட்ட அந்தவாக்கியத்தை இப்பொழுது உண்மையாகச்செய். சத்துருக்களை நாசஞ்செய்கின்றவனே! குந்தீபுத்திர! க்ஷத்திரியதர்மத்தைநினைத்து மனக்கவலையற்றவனாகி நீ யுத்தம்செய்' என்றுசொன்னார். வாஸுதேவர் இவ்வாறு சொல்ல அர்ஜுனன் குறுக்கானபார்வையுடன் தலைகுனிந்துகொண்டு விருப்பமில்லாதவன்போலப் பின்வரும்வார்த்தையைக் கூறலானான். 'கொல்லத்தகாதவர்களைக்கொன்று நரகத்தைப்பிரதியபயனாகக்கொண்டராஜ்யத்தைஅடைவது நலமா? அன்றி வனத்தில்வாஸஞ்செய்து துக்கங்களை அனுபவிப்பது நலமா? எதுநல்லதாகும்? குதிரைகளைப் பீஷ்மரிருக்குமிடத்திற்கு நடத்தும். உம்முடையவார்த்தையை யான் அனுஷ்டிக்கப்போகிறேன். ஒருவராலும் அவமதிக்கமுடியாதவரும்

கௌரவர்களுக்குப் பிதாமஹருமான பீஷ்மரை வீழ்த்தப்போகிறேன்' என்றான். மஹாராஜரே! எவ்விடத்தில் பீஷ்மர் சூரியன்போலப் பார்க்க முடியாதவராகி ஜ்வலித்துக்கொண்டுநிற்கிறாரோ அவ்விடத்தைக் குறித்து மாதவர் வெள்ளிபோலப் பிரகாசிக்கின்றகுதிரைகளை நடத்தினார். யுத்தத்தில் பீஷ்மரை எதிர்ப்பதின்பொருட்டுமுயற்சிக்கின்ற மகா புஜபலமுள்ள பார்த்தனைக்கண்டு யுதிஷ்டிரருடைய பெரியஸேனையானது மீண்டும் யுத்தத்திற்காகத் திரும்பிவந்தது. பிறகு கௌரவர்களுள் சிரேஷ்டரானபீஷ்மர் ஸிம்மம்போல அடிக்கடி அதிகமாகக்கர்ஜித்துக்கொண்டு தனஞ்சயனுடையரதத்தின்மீது விரைவாகஅம்புமழைகளையிறைத்தார். பரதகுலத்தில்உதித்தவரே! ஒருக்ஷணத்திற்குள் அவனுடையரதமானது குதிரைகளோடும் ஸாரதியோடும் பெரிதான அம்புமழையினாலே பிறரால்அறியப்படவில்லை. வாஸுதேவரோ தைரியத்தைக்கைக்கொண்டு பீஷ்மருடையஅம்புகளாலே மிக அடிக்கப்பட்ட அந்தக்குதிரைகளை யுத்தகளத்தில் பரபரப்பில்லாமலும் விரைவுடனும்நடத்தினார். பிறகு பார்த்தன் மேகத்தினிடிமுழக்கம்போன்ற சப்தத்துடன்கூடிய திவ்யதனுஸைக் கையிலெடுத்துக் கூர்மையுள்ள அம்புகளாலே பீஷ்மருடையவில்லையறுத்துக் கீழேதள்ளினான். வில் அறுக்கப்படவே, உமதுபிதாவான அந்தப்பீஷ்மர் அடுத்தநிமிஷத்திலேயே பெரிதானவேறுவில்லைக்கையிலெடுத்து நாணேற்றி மேகம் போலக்கர்ஜிக்கின்றஅந்தவில்லை இருகைகளாலும் இழுத்தார். பிறகு அர்ஜுனன் கோபங்கொண்டு பீஷ்மருடைய அந்தவில்லையும் அறுத்தான். சந்தனுவின்குமாரரானபீஷ்மர் அர்ஜுனனுடைய அவ்விதமான லாகவத்தைப் புகழ்ந்தார். காங்கேயரானவர் வில்லாளிகளுள் சிரேஷ்டனைபார்த்தனைநோக்கி, 'சத்துருக்களையழிப்பவனே! மிக்க புஜபலமுள்ளவனே! நல்லது; நல்லது; குந்தீபுத்திர! நல்லது' என்று சொன்னார். பீஷ்மர் இவ்வண்ணம்சொல்லிப் பின்பு வேறொருஅழகிய வில்லைக்கையிலெடுத்து யுத்தத்தில் அர்ஜுனனுடையதேரைக்குறித்து அம்புகளைத் தொடுத்தார். வாஸுதேவர் அந்தப்பீஷ்மருடைய அம்புகளைப் பயனற்றவையாகச்செய்துகொண்டும் மண்டலகதிகளைக்காண்பித்துக்கொண்டும் குதிரையைநடத்தும்விஷயத்தில் அதிகமான ஸாமர்த்தியத்தைக் காண்பித்தார். பீஷ்மருடையஅம்புகளாலே நன்றாகக் காயப்படுத்தப்பட்ட நரசிரேஷ்டர்களான அவ்விருவரும், கொம்புகளாலேநன்றாகக்கீறப்பட்டு (அவைகளை) அடையாளமாகக்கொண்டவைகளும் மிகுந்தயுத்தமுயற்சியுள்ளவைகளுமான இரண்டுகாளைகள்போல விளங்கினார்கள். மஹாபாகுபலமுள்ளவரும் லக்ஷ்மீநாதரும் சத்துரு

வீரர்களைக்கொல்பவருமான வாஸுதேவரோ அர்ஜுனன் போரில்மெதுவாயிருத்தலைக்கண்டு யுத்தத்தில் ஓய்வின்றிச் சரமாரியைப்பொழிகிறவரும் இரண்டுசேனைகளின்நடுவையடைந்து சூரியன்போலத்தபிக்கச்செய்கிறவரும் பாண்டுபுத்திரனுடைய ஸைனிகர்களுள் சிறந்தவர்களையெல்லாம்கொல்லுகிறவரும் யுதிஷ்டிரருடையசேனையில் யுகாந்தினுடையமுடிவை உண்டுபண்ணுகிறவர்போலிருப்பவருமான பீஷ்மரைப் பொறுக்கவில்லை. பிறகு யோகியானவாஸுதேவர் வெள்ளிபோலப்பிரகாசிக்கின்ற பார்த்தனுடையகுதிரைகளை விட்டுவிட்டுப் பெரிதானரதத்தினின்று கீழேகுதித்தார். பலசாலியும் சாட்டையைக் கையில்கொண்டவரும் அதிகபராக்கிரமமுள்ளவரும் அடிக்கடி ஸிம்மம்போலக்கர்ஜிக்கின்றவரும் லோகநாதரும் அளவற்றகாந்தியுள்ளவருமான அந்தவாஸுதேவர் கோபத்தினால்கண்கள்சிவந்து (பீஷ்மரைக்) கொல்லக்கருதி மகாயுத்தத்தில் உம்மைச்சேர்ந்தவீரர்களுடைய தேஜஸுகளைப் பக்ஷிக்கின்றவர்போலத் தம்கைகளையே ஆயுதமாகக்கொண்டு தம்இருகால்களாலும் பூமியைப்பிளக்கின்றவர்போலப் பீஷ்மரையெதிர்த்து ஓடிவந்தார். யுத்தகளத்தில் பீஷ்மரைக்கொல்வதில் முயற்சியுள்ளவராக அருகில்வருகின்ற மாதவரைக்கண்டு அங்குள்ளஸைனிகர்களனைவரும் வாஸுதேவரிடத்தினின்றுண்டானபயத்தினாலேபீடிக்கப்பட்டு, 'பீஷ்மர் மாண்டார்; பீஷ்மர் மாண்டார்' என்று அலறிக்கொண்டே ஓடினார்கள். பீதாம்பரத்தைத்தரித்தவரும் இந்திரநீலக்கற்போலக்கறுத்த மேனியுடையவருமான ஜனார்த்தனர் பீஷ்மரைக்குறித்து எதிர்த்து ஓடுகின்றவராக மின்னலுடன்கூடியமேகம்போல விளங்கினார். யாதவசிரேஷ்டரானஸ்ரீவாஸுதேவர், ஸிம்மம் யானையையெதிர்ப்பதுபோலவும் ரிஷபம் ரிஷபத்தையெதிர்ப்பதுபோலவும் ஸிம்மநாதஞ்செய்துகொண்டு விரைவாகப்பீஷ்மரையெதிர்த்து ஓடினார். பீஷ்மர் யுத்தத்தில் புண்டரீகாக்ஷர் தம்மையெதிர்த்துவருவதுகண்டு யுத்தத்தில் பரபரப்பின்றிப் பெரியவில்லை நன்றாகஇழுத்து மனவமைதியுடன் கோவிந்தரைப் பார்த்துக்கூறலானார்.

'புண்டரீகாக்ஷரே! வாரும்; வாரும். தேவதேவரே! உமக்குவந்தனம். ஸாத்வதசிரேஷ்டரே! என்னை இப்பொழுது மகாயுத்தத்தில் கீழேதள்ளும். தேவரே! தோஷமற்றவரே! கிருஷ்ணரோ! தேவரீரால் யுத்தத்தில்கொல்லப்பட்டாலும் அடியேனுக்கு எல்லாஉலகத்திலும் சிறந்தநன்மையே. கோவிந்தரே! அடியேன் இப்பொழுது யுத்தத்தில் மூவுலகத்தோராலும் கொண்டாடப்பட்டவனாகிறேன். உமதுஇஷ்டப்படிஅடியேனைஸம்ஹாரஞ்செய்யும். குற்றமற்றவரே! நான்உமக்குத்தாஸ

ஞயிருக்கிறேன்' என்று தெளிந்தமனத்துடன் மொழிந்தார். பிறகு மிக்க புஜபலமுள்ள அர்ஜுனன் கேசவரைப்பின்தொடர்ந்தோடி இருகைகளாலும் கட்டிப்பிடித்தான். பார்த்தனுலேகட்டிப்பிடிக்கப்படுகின்றவரும் செந்தாமரைமலர்போன்றகண்களையுடையவரும் புருஷோத்தமருமான வாஸுதேவர் அர்ஜுனனையிழுத்துக்கொண்டே விரைவாகப்பீஷ்மருடையபக்கத்திற்குச் சென்றார். சத்துருவீரர்களைக் கொல்லுகின்றவனுனபார்த்தனே பலாத்காரமாக ஸ்ரீகிருஷ்ணருடைய இரண்டுகால்களையுங்கட்டிக்கொண்டு அவரை அதிபிரயாசத்தால் பத்தாவதுஅடியில் பிடித்துநிறுத்தினன். பிறகு நண்பனுனஅர்ஜுனன் மிக்கமனவருத்தமுற்று, கோபத்தினுல் கலங்கினகண்களுள்ளவரும் ஸர்ப்பம் போலப் பெருமூச்சுவிடுகின்றவருமான ஸ்ரீகிருஷ்ணரைப்பார்த்து, 'மகாபாஹுபலமுள்ளவரே! நீர் யுத்தமுயற்சியினின்று திரும்பும். கேசவரே! 'யான் போர்புரியப்போவதில்லை' என்று முன்பு நீர்சொல்லியவார்த்தையை நீர் பொய்யாகச்செய்வது தகாது. மாதவரே! உலகிலுள்ளஜனங்கள் உம்மை, 'பொய்சொல்லுகிறவர்' என்றுசொல்லுவார்கள். இதுமுழுமையும் என்பொறுப்பே. யான் பிதாமஹரைக் கொல்வேன். சத்துருக்களை அழிப்பவரே! கேசவரே! என்சஸ்திரத்தின்மீதும் ஸத்தியத்தின்மீதும் ஸுகிருதத்தின்மீதும் ஆணையிடுகிறேன். யான் சத்துருக்களுக்குநாசத்தைச்செய்யப்போகிறேன். நிரம்பினசந்திரமண்டலமானது யுகமுடிவுக்காலத்தில் தற்செயலாகக் கீழே விழுவதுபோல, ஒருவராலும் ஜயிக்கமுடியாதவரும் மகாரதருமான பீஷ்மர் என்னுல் தள்ளப்பட்டு இப்பொழுதே கீழேவிழுவதைப்பாரும்' என்று அன்போடு கூறினன். மாதவரோ மகாத்மாவானபல்குனனுடையவார்த்தையைக்கேட்டும் அவனுடைய வல்லமையைக்கண்டும் மிகுந்த பிரீதியுடையவரானர்; மறுமொழிஒன்றும்சொல்லாமலே கோபத்துடன் மீண்டும் ரதத்தின்மீதேறிக்கொண்டார். ரதத்தின்மீதேறியிருக்கின்ற நரசிரேஷ்டர்களான கிருஷ்ணர்ஜுனர்களிருவரையும் சந்தனுபுத்திரரானபீஷ்மர் மேகம் இரண்டுமலைகளின்மீது வர்ஷதாரையைப்பொழிவதுபோலச் சரமாரியைப் பொழிந்தார். சூரியன்[1] சிசிரருதுவினுடையமுடிவில் தன்கிரணங்களாலே தேஜஸுகளைக்கவர்வதுபோல உமதுபிதாவானதேவவிரதர் யுத்தவீரர்களுடையபிராணன்களைக் கவர்ந்தார். பாண்டவர்கள் யுத்தத்தில் எவ்வாறு கௌரவஸேனியங்களை நாசஞ்செய்தனரோ அவ்வாறே உமதுபிதாவானபீஷ்மர் பாண்டவஸேனியங்களை யுத்தத்தில் நாசஞ்செய்தார். அடிக்கப்பட்டு

[1] மாசியும் பங்குனியும்.

ஓடுகின்றஸைனிகர்களோ ஊக்கத்தையும் அறிவையுமிழந்து தன்னுடையதேஜஸினாலே தவிக்கச்செய்கின்றவனும் ஆகாயமத்தியை அடைந்திருக்கின்றவனுமானசூரியனைப்பார்க்கமுடியாததுபோல, யுத்தத்திலொப்பற்றவரான பீஷ்மரைப்பார்ப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். மகாராஜரே! நூறுநூறாகவும் ஆயிரம்ஆயிரமாகவும் பீஷ்மராலேகொல்லப்படுகின்ற அந்தப்பாண்டவஸேனையிலுள்ளவீரர்கள் பயத்தால்பீடிக்கப்பட்டு யுத்தத்தில் பீஷ்மர், செய்கைகளை மனிதர்களின்வல்லமைக்குமேற்படச்செய்வதைக் கண்டார்கள். பாரதரே! பீஷ்மராலே அவ்விதமாகத்துரத்தப்படுகின்ற பாண்டவஸேனைகள் சேற்றில்அமிழ்ந்த பசுக்கள்போல ரக்ஷகனை அடையவில்லை. பலசாலியானபீஷ்மராலே துர்ப்பலர்களானபாண்டவஸைனிகர்கள் யுத்தத்தில் எறும்புகள்போல நசுக்கப்பட்டார்கள். ராஜேந்திரரே! அவ்வாறே பகைவர்களைநாசஞ்செய்யுந்தன்மையுள்ள பீஷ்மராலே யுத்தத்தில் எல்லாப்பாண்டவவீரர்களும் ஸ்ருஞ்சயர்களுடன் அடிக்கப்பட்டார்கள். பாரதரே! மகாரதரும் அசைக்கமுடியாதவரும் அம்புக்கூட்டத்தைப்பொழிகின்றவரும் அரசர்களைவாட்டுகின்றவருமான பீஷ்மரை அந்தப்பாண்டவவீரர்கள் பாணங்கள்போன்ற கிரணங்களோடுபிரகாசிக்கின்ற சூரியனைப்போலப் பார்க்கச் சக்தியற்றவர்களானார்கள். அந்தப்பீஷ்மர் பாண்டவஸேனையை அடித்துக்கொண்டிருக்கும்ஸமயத்தில் சூரியன் அஸ்தமயத்தையடைந்தான். பிறகு, பீஷ்மர் ஸைனியங்களுடன்கூடிய பலசாலிகளானபாண்டுபுத்திரர்களைச் சரமாரியால் தடுத்தார். மகாபலசாலியும் பெரியவிரதமுள்ளவருமான பீஷ்மர் சக்ரபாணியான ஸ்ரீகிருஷ்ணபகவான் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பலசாலிகளான கருசதேசத்துவீரர்களாலும் சேதிதேசத்துவீரர்களாலும் எப்பொழுதுமேசூழப்பட்டிருக்கிறபாண்டுபுத்திரர்களை மகாஸ்திரங்களால் அடித்தார். பிறகு, சிரமத்தினால் வருத்தமுற்றிருக்கின்ற ஸேனைகளினுடையமனமானது யுத்தத்தைநிறுத்துவதில் நோக்கமுற்றதாகியது.

ஒன்பதாவதுநாள் யுத்தம் முடிந்தது.

---

## நூற்றேழாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் இரவில் கிருஷ்ணனோடு ஆலோசித்துப் பீஷ்மரிடஞ்சென்று அவரைவதஞ்செய்யும் உபாயத்தைக் கேட்டதும் அவர் சொல்லியதும்.)

அந்தக்கௌரவபாண்டவவீரர்கள் போர்புரிந்துகொண்டிருக்கையில் சூரியனும் அஸ்தமிக்கக் கோரமானஸந்தியாகாலமானது தோன்றிவிட்டது. பிறகு யுத்தத்தை நாங்கள் காணவில்லை. பாரதரே! பிறகு யுதிஷ்டிரராஜர் ஸந்தியாகாலம் நேர்ந்திருப்பதையும் தமதுஸேனை பீஷ்மராலே அடிக்கப்பட்டு அஸ்திரங்களையிழந்து பயத்தால் மனத்தளர்ச்சியுற்று யுத்தத்தினின்று திரும்பி ஓடுவதில் பற்றுதலுள்ளதாயிருப்பதையும் மகாரதரானபீஷ்மர் போரில்மிக்கபரபரப்புடன் அடிப்பதையும் மகாரதர்களான ஸோமகர்கள் வெல்லப்பெற்று ஊக்கமிழந்திருப்பதையும் கோரமும் பயங்கரமுமான இரவின்தொடக்கத்தையும் பார்த்து ஆலோசித்து அரசர்களுடையபோரை நிறுத்த [1] விரும்பினார். பிறகு யுதிஷ்டிரராஜர் தமதுபடைகளை யுத்தத்தைநிறுத்தும்படி செய்தார். அப்பொழுது அவ்விதமாகவே உம்முடையபடைகளும் யுத்தத்தை நிறுத்திவிட்டன. குருசிரேஷ்டரே! யுத்தத்தில் காயங்களால் அதிகமாகத் துன்பம்அடைவிக்கப்பட்ட மகாரதர்கள் ஸைனியங்களை யுத்தத்தைவிட்டொழியும்படிசெய்து (இருப்பிடத்தை) அடைந்தார்கள். பீஷ்மருடையபாணத்தால் மிகவும்பீடிக்கப்பட்டபாண்டவர்கள் யுத்தத்தில் அவருடையசெய்கையைநினைத்து அப்பொழுது ஆறுதலையடையவில்லை. பாரதரே! பீஷ்மரும் ஸ்ருஞ்சயர்களுடன்கூடின பாண்டவர்களை யுத்தத்தில்ஜயித்து உம்முடையகுமாரர்களாலேபுகழப்பெற்றும் நமஸ்கரிக்கப்பெற்றும் நான்குபக்கங்களிலும் மிகவும்மகிழ்ச்சியுற்றவர்களானகௌரவர்களோடு(தம்வாஸஸ்தானத்தை) அடைந்தார்.

பிறகு எல்லாப்பிராணிகளையும்மயங்கச்செய்கின்றஇரவு தோன்றியது. கோரமானஅவ்விரவின்தொடக்கத்தில் விருஷ்ணிகளுடன் கூடினபாண்டவர்களும் (ஒருவராலும்) ஜயிக்கமுடியாதஸ்ருஞ்சயர்களும் மந்திராலோசனையின்பொருட்டுச் சேர்ந்துஉட்கார்ந்தார்கள். மகாபலசாலிகளும் மந்திரத்தின்நிச்சயத்தை அறிந்தவர்களுமான (அவர்கள்) மனக்கலக்கமற்றவர்களாகித் தங்களுக்குநன்மையைஉண்டாக்கக்கூடியதும் சமயத்திற்கேற்றதுமானஆலோசனையைச் செய்தார்கள். பிறகு யுதிஷ்டிரராஜர் நெடுநேரம்ஆலோசித்து வாஸுதேவரைப்பார்

[1] வேறுபாடம்.

த்து இவ்வாறனவார்த்தையைச் சொல்லலானார். 'கிருஷ்ணரே! மகாத்மாவும் பயங்கரமானபராக்கிரமமுள்ளவரும் தாமரைக்காடுகளையானை அழிப்பதுபோல என்னுடையபடையை விசேஷமாகஅழிப்பவருமான பீஷ்மரைப் பாரும். மிகழுண்டெரிகின்றதீப்போலச் சேனைகளைப் பக்ஷிக்கின்றமகாத்மாவான இந்தப்பீஷ்மரைப்பார்ப்பதற்கு நாம் சக்தியற்றவர்களாயிருக்கிறோம். கோரமானதும் கொடுவிஷமுள்ளதுமான தக்ஷகனென்கிற மகாஸர்ப்பம்போலச் சிறந்தபிரதாபசாலியானபீஷ்மர் கோபங்கொண்டு தீக்ஷ்ணமானசஸ்திரங்களுடன்விற்பிடித்துக் கூர்மையுள்ளபாணங்களை யுத்தத்தில் அதிகமாகப்ரயோகஞ்செய்துகொண்டு விளங்குகிறார். கோபங்கொண்டயமன், வஜ்ரத்தைக்கையிற்கொண்ட தேவராஜன், பாசாயுதத்தைத்தரித்தவருணன், கதாயுதத்தையுடைய குபேரன்ஆகியஇவர்களையும் ஜயித்துவிடலாம். மிகுந்தகோபங்கொண்டபீஷ்மரோ மகாயுத்தத்தில் ஜயிப்பதற்குஸாத்தியப்படாதவர். கிருஷ்ணரே! இதுஇவ்வாறனபிறகு அப்படிப்பட்டநான் என்னுடையபுத்திக்குறைவினலே யுத்தத்தில் பீஷ்மரைஎதிர்த்துத் துக்கஸமுத்திரத்தில் மூழ்கிவிட்டேன். ஒருவராலும்ஜயிக்கமுடியாதமாதவரே! யான் கானகம்செல்வேன். அவ்விடத்துக்குச்செல்வது எனக்கு மேன்மையானது. கண்ணரே! யுத்தத்தில் எனக்குவிருப்பமில்லை. பீஷ்மரோ எப்பொழுதும் நம்மைக்கொல்லுகிறார். நன்றாகஜ்வலிக்கின்ற நெருப்பைநோக்கிச்செல்லுகின்ற விட்டிற்பூச்சியானது மரணத்தையேஅடைவதுபோல நான் பீஷ்மரை எதிர்த்துவிட்டேன். வ்ருஷ்ணிகுலத்திலுதித்தவரே! யான் ராஜ்யநிமித்தமாகப் பராக்ரமம்செய்து நாசத்தையடைவிக்கப்பட்டுவிட்டேன். சூரர்களானஎன்னுடையபிராதாக்களும் பாணங்களால் மிகவும்பீடிக்கப்பட்டுவிட்டார்கள்; என்னிமித்தமாக ஸஹோதராநேசத்தினல் ராஜ்யத்தைஇழந்து கானகம்சென்றார்கள். மதுஸூதனரே! என்னிமித்தமாகத் திரௌபதியும் அவ்விதமான கிலேசத்திற்கு உடன்படுத்தப்பட்டாள். நான் உயிரைப் பெரிதாக நினைந்திருந்தேன். இப்பொழுது அவ்வுயிரும் கிடைக்கஅரிதாகிவிட்டது. மிச்சமானவாழ்நாளைக்கொண்டு நான் உத்தமதர்மத்தையனுஷ்டிப்பேன். கேசவரே! பிராதாக்களோடுகூடினயான் தேவரீரால்அனுக்கிரகிக்கத்தக்கவனுயிருந்தால் நமக்குரிய தர்மத்திற்குவிரோதமின்றி ஹிதத்தைச்சொல்லும்' என்றார்.

இவ்வாறன அந்தத்தர்மநந்தனருடைய வார்த்தையைக்கேட்டுப் பிறகு வாஸுதேவர் யுதிஷ்டிரரை நல்லவார்த்தைகளினலே தேறுதலடையும்படிசெய்து கருணையினலே பின்வருமாறு அதிக விஸ்தார

மான மறுமொழிகூறலானார். ஸத்தியபிரதிஜ்ஞையையுடையவரே! தர்மபுத்திரரே! சௌர்யமுடையவர்களும் (பகைவர்களால்) ஜயிக்க முடியாதவர்களும் பகைவர்களை அழிப்பவர்களுமான, வாயுவுக்கும் அக்னிக்கும் ஸமமானதேஜஸுள்ள பீமார்ஜுனர்களையும் பராக்கிரம முடையவர்களும் தேவர்களுக்கெல்லாம் ஈசுவரர்கள்போன்றவர்களு மான நகுலஸஹதேவர்களையும் பிராதாக்களாகக்கொண்டநீர் துயர மடையவேண்டாம். பாண்டவரே! நீர் என்னையாவது நேயமுறையி னால் ஏவும். பீஷ்மரோடு நான் போர்புரிவேன். மகாராஜரே! மகாயுத் தத்தில் உம்மால்ஏவப்பட்டயான் எதைத்தான் செய்யமாட்டேன்? பல்குனன் (தான்கொல்ல) விரும்பாமலிருந்தால் தார்த்தராஷ்டிரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே புருஷசிரேஷ்டரான பீஷ்மரை யுத்தத்தில்அழைத்து நான் கொல்வேன். பாண்டவரே! வீரரானபீஷ் மர்கொல்லப்பட்டால் நமக்குஜயமுண்டென்று நீர்கருதினால் நான் இப்பொழுதே கௌரவர்களுள் பிராயம்முதிர்ந்தவரானபிதாமஹரை ஒருதேராளியாயிருந்தே கொல்வேன். அரசரே! யுத்தத்தில் மகேந்திர னுடையபராக்கிரமம்போன்ற என்னுடையபராக்கிரமத்தைப் பாரும். மகாஸ்திரங்களைப்பிரயோகித்துக்கொண்டிருக்கிற அந்தப்பீஷ்மரைத் தேரினின்று கீழேதள்ளுவேன். எவன் பாண்டுபுத்திரர்களுக்குச் சத் துருவோ அவன் எனக்குச் சத்துரு; ஸம்சயமில்லை. எவை உமது பொருள்களோ அவை என்னுடையவையே. எவை என்னுடைய பொருள்களோ அவைஉம்முடையவையே. உம்முடையதம்பியான அர்ஜுனன் எனக்குமித்திரன்; ஸம்பந்தி; சிஷ்யன். வேந்தரே! யான் பல்குனன்நிமித்தமாக (எனது)மாம்ஸங்களையும் அறுத்து அளிப்பேன். புருஷசிரேஷ்டனான இந்தஅர்ஜுனனும் என்னிமித்தமாக உயிரையும் விடுவான். ஐயா! இது நம்முடையபிரதிஜ்ஞை. நாம் ஒருவரைஒரு வர் (ஆபத்தைத்) தாண்டும்படி செய்துகொள்வோம். ராஜேந்திரரே! யான் யுத்தஞ்செய்யஸன்னத்தனாகும்படி என்னை நீர் ஏவும். பார்த்த னால் முன்பு உபப்லாவ்யத்தில் உலூகனிடத்தில், 'பீஷ்மரை வீழ்த்து வேன்' என்றுபிரதிஜ்ஞைசெய்யப்பட்டது. புத்திசாலியானபார்த்தனு டைய அந்தவாக்கை (நாம்) முழுதும் காக்கவேண்டும். அர்ஜுனனிடம் அனுமதிபெற்று நான் இக்காரியத்தைச்செய்யவேண்டும். ஸந்தேக மில்லை. இல்லையேல்யுத்தத்தில் இதைச்செய்வது பல்குனனுக்கு ஸுல பமானது. அந்தஅர்ஜுனன் சத்துருபட்டணங்களை அழிக்குந்திறமை யுள்ளபீஷ்மரை யுத்தத்தில் கொல்லுவான். பார்த்தன் முயற்சித்தால் யுத்தத்தில் செயற்கரியகாரியத்தையும் செய்வானன்றோ? அர்ஜுனன்

யுத்தத்தில் நல்லமுயற்சியுடையவர்களும் தைத்யர்களோடும் தானவர்களோடுங்கூடினவர்களுமான தேவர்களையும் கொல்வான். அவ்வாறிருக்க, இந்தப்பீஷ்மரைக்கொல்வதில் யாதுஸந்தேகமுளது? மஹாவீர்யமுடையவரும் சந்தனுபுத்ரருமானபீஷ்மர் இப்பொழுது புத்தியே நடைபட்டிருக்கிறார்; அவர், அறிவுமழுக்கமடைந்திருத்தலாலும் வாழ்நாள் குறைந்தமையாலும் நிச்சயமாகவே செய்யவேண்டியவிஷயத்தை அறியவில்லை' என்றார்.

யுதிஷ்டிரர், மிக்கபுஜபலமுள்ளவரே! மாதவரே! நீர் எவ்விதம் சொல்லுகிறீரோ அது அவ்விதந்தான். உம்முடையவேகத்தைத்தாங்கும்விஷயத்தில் இவர்கள்எல்லோரும் போதுமானவர்களல்லர். புருஷப்புலியே! தேவரீர் என்னுடையபக்ஷத்தில் நிலைபெற்றிருக்கிறீர். அப்படிப்பட்டயான் நிச்சயமாகவே இந்த எல்லாவிருப்பங்களையும் அடையப்போகிறேன். ஜயசீலர்களுள்உத்தமரே! கோவிந்தரே! தேவரீரைநாதராகக்கொண்டு யான் யுத்தத்தில் இந்திரனுடன்கூடினதேவர்களையும் ஜயிப்பேன். அவ்வாறிருக்க, மகாரதரான பீஷ்மரைக்குறித்து யாதுஸம்சயம்? மாதவரே! தேவரீருடைய கௌரவத்தைக்கருதி உம்மைப்பொய்யராகச்செய்வதற்கு யான்விரும்பவில்லை. போர்புரியாமலேயிருந்து நீர் வாக்களித்தபடி உதவிபுரிவீராக. பிரபுவே! பீஷ்மர், 'துரியோதனனுக்காக நான் யுத்தம்செய்வேன். உன்னுடையநன்மையின் பொருட்டு நான் ஆலோசிக்கப்போகிறேன். எவ்விதத்தாலும் (உனக்காக) யான் போர்புரியேன். இது ஸத்தியம்' என்று யுத்தவிஷயமாக என்னிடத்தில் ஒருசபதஞ்செய்திருக்கிறார். மாதவரே! அந்தப்பீஷ்மரல்லவோ எனக்கு ராஜ்யத்தைஅளிப்பவர்; ஆலோசனைசொல்பவர். மதுசூதனரே! ஆகலால் அவருடையவதத்தின்உபாயத்தைத்தெரிந்து கொள்ளுவதற்காக உம்முடன்சேர்ந்து நாம்எல்லோரும் மறுபடியும் அவரிடம்போவோம். ஆதலால், நாமனைவரும்ஒன்றுகூடிப் புருஷசிரேஷ்டரான அவரைக் காலவிளம்பமின்றி அடைவோம். விருஷ்ணிகுலத்திலுதித்தவரே! உமக்குவிருப்பமிருந்தால் ஆலோசனையைத் தாமதமின்றி(அவரிடம்)கேட்கிறேன். ஜனார்த்தனரே! கிருஷ்ணரே! அவர் நம்முடையவிஷயத்தில் ஹிதமாயும் ஸத்தியமாயுமுள்ளவாக்யத்தை உரைக்கப்போகிறார். அவர்சொல்லும்வண்ணமே யுத்தத்தில் செய்யப்போகிறேன். உறுதியானவிரதமுள்ளஅவர் நமக்கு ஜயத்தைக் கொடுக்கப்போகிறார்; மந்திராலோசனையையும் சொல்லப்போகிறார். பாலர்களும் பிதாவையிழந்தவர்களுமானநாங்கள் அந்தப்பீஷ்மரால் வளர்க்கப்பட்டோம். மாதவரே! என்பிதாவான பாண்டுவுக்கு

இஷ்டமானதகப்பனாரும் முதிர்ந்தவருமான அந்தப்பிதாமஹரை யான் கொல்வதற்கு விரும்புகிறேன். க்ஷத்திரியப்பிழைப்பை நிந்திக்கவேண்டும்' என்றார். மஹாராஜரே! பிறகு கண்ணபிரான் குருநந்தனரானதர்மபுத்திரரைப்பார்த்து, 'பேரறிவாளரே! ராஜேந்திரரே! உம்முடையவார்த்தை எனக்குப் பிரியமாயிருக்கிறது. ஸமர்த்தரும் பயங்கரமானபிரதிஜ்ஞையுடையவருமானபீஷ்மர் கண்பார்வையினாலும் (பகைவர்களை) எரிப்பார். கங்காபுத்ரரானபீஷ்மருடையவதோபாயத்தைக்கேட்பதற்காக அவரிடத்தில் நீர் செல்லலாம். நீர் கேட்டால் அவர் உண்மையையே சொல்லுவர். பாரதரே! நாம் மந்திராலோசனைகேட்கும்பொருட்டுக் கௌரவர்களுக்குப்பிதாமஹரானபீஷ்மரிடம்செல்வோம். பரதகுலத்திற்பிறந்தவரே! நாம் அங்குச்சென்று முதியவரானசந்தனுபுத்திரரை ஆலோசனைகேட்போம். அவர் நமக்கு எவ்விதமானமந்திரத்தை உபதேசிப்பரோ அந்தமந்திராலோசனையினால் பகைவர்களை எதிர்த்துப்போர்புரிவோம்' என்றுகூறினார். பாண்டு மகாராஜருக்குமூத்தவரே! இவ்வாறு வீர்யமுடையவாஸுதேவரும் அந்தவீரர்களானபாண்டவர்களும் ஆலோசனைசெய்து எல்லோரும் ஒன்றுகூடி அப்பொழுது ஆயுதங்களையும்கவசங்களையும்வைத்துவிட்டுப் பீஷ்மருடைய அரண்மனையை அடைந்து உள்ளேபிரவேசித்து அவரை முடிகளால்வணங்கினார்கள். மகாராஜரே! பாண்டவர்கள் பரதசிரேஷ்டரான அந்தப்பீஷ்மரைப்பூஜித்துத் தலையால்வணங்கிச் சரணமடைந்தார்கள். மகாபுஜபலமுள்ளவரும் கௌரவர்களுக்குப்பிதாமகருமான பீஷ்மர் அவர்களைப்பார்த்து, 'வாஸுதேவரே! உமக்கு நல்வரவா? தனஞ்சய! உனக்கு நல்வரவா? தர்மபுத்திர! பீம! நகுல! ஸஹதேவ! உங்களுக்கு நல்வரவா? குழந்தைகாள்! உங்களுக்குப்ரீதியை விருத்திபண்ணக்கூடிய எந்தக்காரியத்தை இப்பொழுது நான் செய்வேன்? யுத்தத்தைத்தவிரமற்றவிஷயங்களில் அன்புபாராட்டுங்கள். ஸந்தேகப்படாதீர்கள். மிகவும்செயற்கரியகாரியத்தையும் யான் எவ்விதத்தாலும் செய்வேன்' என்றுகூறினார். அவ்வாறு பிரீதியுடன் அடிக்கடிசொல்லுகின்றபீஷ்மரைப்பார்த்து ராஜாவானதர்மநந்தனர் தாழ்ந்து பிரீதியுடன் பின்வரும்வாக்கியத்தை உரைக்கலானார்.

'பிரபுவே! எல்லாமறிந்தவரே! எவ்வாறு நாங்கள் ஜயமடைவோம்? எவ்வாறு ராஜ்யத்தை அடைவோம்? பிரஜைகளுக்கு எவ்வாறு பிராணஸந்தேகம் உண்டாகாமலிருக்கும்? அதனை எனக்கு உரைக்கவேண்டும். தேவரீரே உமது வதோபாயத்தை எங்களுக்குச் சொல்லவேண்டும். வீரரே! யுத்தத்தில் தேவரீரை நாங்கள் எவ்விதமாகஸகிப்போம்? குரு

பிதாமஹரே! (யுத்தத்தில் பகைவர்கள்) உமக்கு அநர்த்தத்தைவிளை விக்கக்கூடிய ஸமயமானது கொஞ்சமேனும் சம்பவிக்கிறதில்லை. யுத்தத்தில் எப்பொழுதுமே தேவரீர் வட்டமானவில்லுடன் காணப் படுகிறீர். மிக்கபாஹுபலமுள்ளவரே! அம்புகளையெடுப்பதும் வில்லிற் பூட்டுவதும் விடுவதும் காணப்படவில்லை. ரதத்தில் தேவரீரை அபர சூரியனைப்போலக் காண்கிறோம். சத்துருவீரர்களை அழிக்கின்றவரே! பரதசிரேஷ்டரே! [1] அல்லாவிடில் ரதங்களையும் குதிரைகளையும் போர் வீரர்களையும் யானைகளையுங்கொல்லுகின்றதேவரீரை எந்தமனிதன் தான் ஜயிப்பதற்குவல்லமையுடையவனுவான்? புருஷசிரேஷ்டரே! பெரியசரமாரிகளைப்பொழிகின்றதேவரீர்களாலே யுத்தரங்கத்தில்பெரி தானஎன்னுடையபடை நாசத்தை அடைவிக்கப்பட்டுவிட்டது. பிதா மஹரே! எவ்வாறு தேவரீரை யுத்தத்தில் ஜயிப்போமோ, அகண்டபூ மண்டலாதிபத்யம் எனக்கு எவ்வாறு கிடைக்குமோ, என்னுடையஸை ணியத்திற்கு எவ்வாறு க்ஷேமம் உண்டாகுமோ அதனைஎனக்குச்சொல் வீராக' என்றார்.

பாண்டுவுக்குமூத்தோரே! பிறகு சந்தனுபுத்திரரானபீஷ்மர் பாண்டவர்களைப்பார்த்து, 'குந்தீபுத்திர! எல்லாவற்றையும்அறிந்த வனே! நான் உயிரோடிருக்கும்வரையில் யுத்தத்தில் உனக்கு எவ் விதத்தாலும் ஜயமுண்டாகாது. இதனை ஸத்தியமாக நான் உனக்குச் சொல்லுகிறேன். பாண்டவர்களே! யுத்தத்தினுல் நான்ஒருவன் ஜயிக் கப்பட்டால் நீங்கள் பகைவர்களை யுத்தத்தில் ஜயிப்பீர்கள். யுத்தத்தில் நீங்கள் ஜயத்தைவிரும்புவீர்களானுல் என்மீது விரைவாக அடியுங்கள். பார்த்தர்களே! உங்களுக்கு அனுமதிகொடுக்கிறேன். அனுயாஸமாக என்னை அடியுங்கள். இவ்வாறுசெய்யப்பட்டால் உங்களுக்கு நன்மை யுண்டென்று நான் எண்ணுகிறேன். நான் உங்களால் அறியப்பட்ட வன். நான்கொல்லப்பட்டால் எல்லாம் கொல்லப்பட்டவைகளே. ஆதலால், இவ்வாறு நீங்கள் செய்யவேண்டும்' என்றுகூறினுர். யுதிஷ் டிரர், 'காலதண்டத்தைக்கையிற்கொண்டு கோபங்கொண்டிருக்கின்ற அந்தகனைப்போன்றதேவரீரை யுத்தத்தில் நாங்கள் ஜயிக்கத்தக்கஉபா யத்தைத் தேவரீர் எங்களுக்கு உரைக்கவேண்டும். யுத்தத்தில் வஜ்ர தரனுனஇந்திரனும் வருணனும் யமனும்ஜயிக்கத்தக்கவர்கள். இந்திர னுடன்கூடினதேவாஸுரர்களாலும் தேவரீர் யுத்தரங்கத்தில் ஜயிக்க முடியாதவர்' என்றுவிஜ்ஞாபனம்செய்தார்.

பீஷ்மர், 'மிக்கபுஜபலமுள்ளவனே! பாண்டவ! நீ சொல்வது ஸத்தியமே. யுத்தத்தில்முயற்சியுடனே சஸ்திரங்களைக்கையிலெடுத்

---

[1] வதோபாயத்தைச் சொல்லாமலிருந்தால் என்பது.

துச் சிறந்தவில்லையுங்கையில்பிடித்தயான் யுத்தத்தில் இந்திரனுடன் கூடினதேவாஸுரர்களாலேகூட ஜயிக்கமுடியாதவன். ஆதலால், ஆயுதங்களைக்கீழேவைத்துவிடுவேனேயாகில் என்னை இந்தமகாரதர்கள் கொல்வார்கள். தர்மநந்தன! ஆயுதத்தைக்கீழேவைத்தவனிடத்திலும் விழுந்தவனிடத்திலும் கவசத்தையுங்கொடியையுமிழந்தவனிடத்திலும் ஓடுகிறவன்விஷயத்திலும் பயந்தவனிடத்திலும், 'உன்னைச்சேர்ந்தவன் நான்' என்றுகூறுகிறவனிடத்திலும் ஸ்திரீயால்ஜயிக்கப்பட்டவனிடத்திலும் ஸ்திரீயைப்பிரதானமாகக்கொண்டவனிடத்திலும் ஸ்திரீயென்றுபிரவித்திபெற்றவனிடத்திலும் ஸ்திரீயினிடத்திலும் ஸ்திரீயினுடையபெயரையுடையவனிடத்திலும் அங்கங்குறைந்தவனிடத்திலும் ஏகபுத்திரனுள்ளவன்விஷயத்திலும் ஸந்ததியுண்டுபண்ணாதவன் விஷயத்திலும் நபும்ஸகனிடத்திலும் எனக்கு யுத்தம்செய்ய மனம்ஒவ்வாது. ராஜேந்திர! முன்னமேநிச்சயிக்கப்பட்டிருக்கிற இவ்விதமான என்னுடைய ஸங்கல்பத்தைக்கேள். மஹாவீரனென்று பிரவித்திபெறாதஒருவனைப்பார்த்து ஒருபொழுதும் நான் போர்புரியேன். ராஜனே! உன்னுடையஸைனியத்திலுள்ள மகாரதனும் துருபதகுமாரனுமான இந்தச்சிகண்டி யுத்தத்தில் பொறுமையுள்ளவன்; சூரன்; யுத்தத்தில் பகைவர்களை ஜயிப்பவன். அவன் முதலில் ஸ்திரீயாயிருந்து பிறகு புருஷத்தன்மையைப்பெற்றவிஷயமனைத்தையும் உள்ளபடி நீங்களும் அறிவீர்கள். கவசம்பூண்ட சூரனான அர்ஜுனன் யுத்தத்தில் சிகண்டியைமுன்னிட்டுக்கொண்டு கூர்மையுள்ளபாணங்களோடு என்னையே எதிர்த்துவரட்டும். வீரனென்றுபிரவித்திபெறாதவனும் மேலும் முன்புஸ்திரீயாயிருந்தவனுமான சிகண்டியின்விஷயத்தில் பாணத்தைக் கையாலெடுத்து எவ்விதத்தினாலும்அடிப்பதற்கு நான்விரும்பமாட்டேன். பரதர்களிற்சிறந்தவனே! பாண்டுகுமாரனான அர்ஜுனன் அந்தஸமயத்தைப்பெற்று அம்புகளால் நான்குபக்கங்களிலும் என்னை விரைவாகஅடிக்கட்டும். முயற்சியுள்ளவனானஎன்னை உலகங்களில் அஸ்திரசஸ்திரங்களால் அடிக்கக்கூடியவீரன் மகாபாக்யசாலியானகிருஷ்ணன், அல்லது பாண்டுபுத்திரனான தனஞ்சயன்இவர்களைத்தவிர வேறொருவன் இருப்பதாக யான்காணவில்லை. இப்பொழுது எனக்கெதிரில் நபும்ஸகனானசிகண்டியை முன்னிட்டுக்கொண்டுஆயுதங்களைக் கையில்கொண்டவனாகவும் யுத்தத்தில முயற்சியுள்ளவனாகவும் சிறந்த வில்லைப்பிடித்தவனாகவுமிருக்கின்றஅர்ஜுனன் என்னைக் கீழேதள்ளட்டும். இவ்வாறுசெய்தால் உனக்கு ஜயமானது நிச்சயமாகஉண்டாகும். குந்தீபுத்திர! நல்லவிரதமுள்ளவனே! நான்சொன்னபடி இந்தக்காரியத்தை நீ செய். பிறகு யுத்தத்தில் ஒன்றுசேர்ந்திருக்கின்ற திருதராஷ்

டிரபுத்ரர்களை நீ ஜயிப்பாய்' என்று நியமித்தார். பிறகு பீஷ்மரால் அனுமதிகொடுக்கப்பட்டபாண்டவர்கள் மகாத்மாவும் கௌரவர்களுக்குப் பிதாமஹருமானபீஷ்மரை அபிவாதனஞ்செய்து தங்கள்தங்களுடைய பாசறையை அடைந்தார்கள். பரலோகத்தை அடைவதில்தீக்ஷைகொண்ட கங்காபுத்திரரானபீஷ்மர் அவ்வாறுசொன்னவுடனே அர்ஜுனன் துக்கத்தினால் மிகுந்ததாபமடைந்து ஸ்ரீகிருஷ்ணனைப்பார்த்துக் கூறலானான்.

'மாதவரே! ஆசார்யரும் கௌரவர்களுள்முதிர்ந்தவரும் சிறந்த அறிவையுடையவரும் புத்திமானுமான பிதாமஹரோடு யுத்தகளத்தில் எவ்வாறு நான் யுத்தம்செய்வேன்? வாஸுதேவரே! பெரியமனமுள்ளவரும் மகாத்மாவுமானபீஷ்மர் பால்யத்தில் புழுதிவிளையாட்டினால் புழுதிபடிந்திருக்கின்ற மேனியையுடையஎன்னால் அழுக்கடையும்படி செய்விக்கப்பட்டார். கதனுக்குமூத்தவரே! பாலனானநான் குழந்தையாயிருக்கையில் எவருடையமடியின்மீதேறி மகாத்மாவும் பிதாவுமான பாண்டுவுக்குப் பிதாவானஅவரை, 'தாத!' என்று அழைத்தேனோ, அவர் என்னைப்பார்த்து, 'பரதகுலத்திலுதித்தகுழந்தாய்! உனக்கு யான் தந்தையல்லேன். யான் உன்தந்தைக்குத்தந்தை' என்றுசொன்னாரோ அப்படிப்பட்டமகானுபாவர் என்னால் எவ்வாறு கொல்லத்தக்கவர்? கண்ணரே! பீஷ்மர் இஷ்டப்படி என்ஸைனியத்தைப் பீடிக்கட்டும். மகாத்மாவானபீஷ்மருடன் நான் போர்புரியேன். ஜயமோ அல்லதுவதமோ எதுவந்தாலும் வரட்டும். நீர் எப்படி எண்ணுகிறீர்? ஸநாதநதர்மத்தைஅறிந்தவனான நம்மைப்போன்றமனிதன் சஸ்திரங்களைக்கீழேவைத்தவரும் வயதுமுதிர்ந்தவருமான பிதாமகர்மீது எப்படி அடிப்பான்?' என்றுலஜ்ஜையுடன்சொல்ல, ஸ்ரீவாஸுதேவர், 'ஜிஷ்ணுவே! பார்த்த! முன்பு, 'யுத்தத்தில் பீஷ்மரை நான் கொல்வேன்' என்று பிரதிஜ்ஞைசெய்துவிட்டு, க்ஷத்திரியதர்மத்தில் நிலைபெற்றிருக்கின்றநீ எவ்வாறு பீஷ்மரைக்கொல்லாமலிருக்கலாம்? பார்த்த! யுத்தத்தில் கொடியமதங்கொண்ட இந்தக்ஷத்திரியரை ரதத்தினின்று கீழே தள்ளு. கங்காபுத்திரரை நீ யுத்தத்தில் கொல்லாமல் உனக்கு விஜயம் கிடைக்காது. முன்பு தேவர்களாலும்காணப்பட்டிருக்கிறஇது பரவசனாயிருந்தாலும் உனக்கு ஸம்பவிக்கும். எது முன்புகாணப்பட்டதோ அது அவ்விதமே ஆகும்; வேறுவிதமாக மாறாது. வாயைத்திறந்திருக்கும் யமன்போன்றவரும் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவருமானபீஷ்மரை வஜ்ரபாணியானமஹேந்திரனாயிருந்தாலும் உன்னைத்தவிர வேறு எவன் எதிர்த்துப்போர்புரிவதற்கு வல்லமையுடையவனாவான். முற்

காலத்தில் மஹாபுத்திமானுன ப்ருஹஸ்பதியானவர் இந்திரனைப்பார்த்துச்சொல்லியதுபோல நீ மனவுறுதிகொண்டு பீஷ்மரை வதம்செய். என்னுடையஇந்தவார்த்தையை நீ கேள். வயதுமுதிர்ந்தவனாயினும் அறிவினால்சிறந்தவனாயினும் நற்குணங்களால் நிறைந்தவனாயினும் தன்னைக்கொல்லக்கருதிவருகின்ற [1]ஆததாயியை ஒருவன்நிச்சயமாகக் கொல்லவேவேண்டும். தனஞ்சய! யுத்தம்செய்தல், பிரஜைகளைரக்ஷித்தல், யாகம்செய்தல்இவைகள் க்ஷத்திரியர்களுக்கு நிலைத்ததர்மமென்பது அஸூயையில்லாதவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது' என்று மறுமொழிசொன்னார்.

அர்ஜுனன், 'கிருஷ்ண! சிகண்டி நிச்சயமாய்ப் பீஷ்மருக்கு நாசத்தை உண்டுபண்ணுகிறவனாகப்போகிறான். பீஷ்மர் பாஞ்சாலபுத்திரனாசிகண்டியைப்பார்த்து எப்பொழுதுமே திரும்பிவிடுகிறார். ஆதலால், நாம் அந்தப்பீஷ்மருக்கெதிரில் சிகண்டியைமுன்னிட்டு உபாயத்தினாலே பீஷ்மரைத் தள்ளுவோமென்பது என்னுடையஎண்ணம். யான் பாணங்களாலே மற்றவில்லாளிகளைத் தடுப்பேன். சிகண்டியோ யுத்தம்செய்பவர்களுள் உத்தமரானபீஷ்மரையே எதிர்த்துப்போர்புரியட்டும். 'நான் சிகண்டியைக் கொல்லேன். இவன் முன்புபெண்ணாயிருந்து பின் புருஷனானவன்' என்னும் பீஷ்மருடையவாக்கியம் கேட்கப்பட்டிருக்கிறது' என்றான். பீஷ்மரைவதஞ்செய்தற்குரியஉபாயத்தைப்பற்றிய அர்ஜுனனுடையவார்த்தையைக்கேட்டு அப்பொழுது பாண்டவர்கள் கிருஷ்ணனுடன்சேர்ந்து மயிர்சிலிர்த்தவர்களாக ஸந்தோஷமடைந்தார்கள். மாதவரோடுகூடின புருஷசிரேஷ்டர்களான பாண்டவர்கள் இவ்வாறு நிச்சயத்தைச்செய்துகொண்டு மகாத்மாவானபீஷ்மரிடத்தினின்று அனுமதிபெற்று ஸந்தோஷமுள்ளமனத்துடன்போய்த் தங்கள்தங்கள் ஸுகசயனங்களை அடைந்தார்கள்" என்றுகூறினான்.

---

## நூற்றெட்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(பீஷ்மருடையயுத்தம்; சிகண்டிக்குப் பீஷ்மருடன் ஸம்வாதமும் யுத்தஸன்னாகமும்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! எவ்வாறு சிகண்டி கங்காபுத்திரரான பீஷ்மரை யுத்தத்தில் எதிர்த்தான்? பாண்டவர்களும் எவ்வாறு எதிர்த்

[1] விராடபர்வம் 175-ம்பக்கம் குறிப்பிற்காண்க.

தார்கள்? அதனை எனக்குச்சொல்லவேண்டும்'' என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

''மகாராஜரே! பிறகு நிர்மலமான அதிகாலையில் சூரியோதயமாவதற்குமுன், பேரிகைகளும் மத்தளங்களும் ஆனகங்களும் அடிக்கப்படவும் வெண்மையான சங்கங்கள் எல்லாஇடங்களிலும் ஊதப்படவும் பாண்டவர்கள் பகைவர்களையெல்லாம் அழிக்கத்தக்கதான அணியை வகுத்துச் சிகண்டியைமுன்னிட்டுக்கொண்டு யுத்தத்திற்காகச் சென்றார்கள். அரசரே! சிகண்டி எல்லாப்படைகளுக்கும்முதலில் நின்றான். பிறகு பீமஸேனன் அர்ஜுனனிவ்விருவரும் அந்தச்சிகண்டியினுடைய சக்ரரக்ஷகர்களானார்கள். த்ரௌபதீபுத்திரர்கள் வீர்யவானானசுபத்திராபுத்திரன் ஸாத்யகி சேகிதானன்ஆகியஇவர்கள் ஸைனியத்திற்குப்பின்பக்கத்தை ரக்ஷித்தார்கள். அவர்களுக்குப்பின் பாஞ்சாலர்களால்நான்குபக்கங்களிலும்பாதுகாக்கப்பட்டிருக்கின்ற மகாரதனானதிருஷ்டத்யும்னன் அவர்களுக்கு ரக்ஷகனானான். பிறகு பிரபுவானயுதிஷ்டிரமகாராஜர் நகுலஸஹதேவர்களோடுகூடி ஸிம்மநாதத்தினால் (திசைகளை) எதிரொலியிடும்படிசெய்துகொண்டு புறப்பட்டார். பிறகு விராடன் தன்னுடையஸைனியத்தினால்சூழப்பட்டு அவருக்குப்பின்புறம்சென்றான். மிக்கபுஜபலமுள்ளவரே! துருபதன் அவருக்குப்பின்புறத்தில் அவரைஅடுத்து விரைவாகவந்தான். பிராதாக்களான ஐந்துகேகயவீரர்கள், வீர்யமுடையவனானதிருஷ்டகேது, கடோத்கசன்என்கிற ராக்ஷஸன் இவர்கள்அந்தஸைனியத்தினுடைய பின்புறத்தைப்பாதுகாத்தார்கள். பாண்டவர்கள் இவ்வாறு பெரியஸேனையை அணிவகுத்துக்கொண்டு தங்கள்உயிரையிழக்கவுந்துணிந்து யுத்தத்தில் உம்முடைய ஸேனையை எதிர்த்துவந்தார்கள். ராஜரே! அவ்வாறே கௌரவர்கள் மகாரதரான பீஷ்மரை எல்லாஸைனியங்களுக்கும்முன்னிலையில்வைத்துக்கொண்டு பாண்டவர்களைக்குறித்து எதிர்த்துச்சென்றார்கள். பிறகு பகைவர்களால் ஜயிக்கமுடியாதவரும் மகாபலசாலிகளான உம்முடைய புத்திரர்களாலேபாதுகாக்கப்பட்டவரும் சிறந்தவில்லாளியுமான துரோணரும், அவருடையகுமாரரும் மகாபலசாலியுமான அஸ்வத்தாமாவும் அந்தஸைனியத்தைப் பின்தொடர்ந்தனர். அதன்பின்புறத்தில் பெரிய யானைப்படையினால் சூழப்பட்ட பகதத்தன் சென்றான். கிருபர் கிருதவர்மா இவ்விருவரும் பகதத்தனைப் பின்தொடர்ந்தார்கள். பலவானும் காம்போஜதேசாதிபதியுமான ஸுதக்ஷிணன் அவனைப் பின்தொடர்ந்தான். பாரதரே! மாகதன் ஜயத்ஸேனன் ஸௌபலன் பிருகத்பலன் அவ்வாறே ஸுசர்மாவைத்தலைமையாகக்கொண்ட மகாவில்லாளிக

ளான மற்றஅரசர்கள் ஆகியஇவர்கள் உமதுஸைனியத்தின் பின்புறத்தைப்பாதுகாத்தனர். சந்தனுபுத்திரரானபீஷ்மர் ஒவ்வொருதினம்வந்தவுடனும் போரில் ஆஸுரவ்யூகங்களையும் பைசாசவ்யூகங்களையும் ராக்ஷஸவ்யூகங்களையும் ஏற்படுத்தினர். பாரதரே! பிறகு ஒருவரையொருவர் அடிக்கின்ற உம்மைச்சேர்ந்தவீரர்களுக்கும் பாண்டவவீரர்களுக்கும் யமனுடையராஜ்யத்தைவிருத்திபண்ணக்கூடிய பெரும்போர்நடந்தது. அர்ஜுனனைத்தலைவனுகக்கொண்டபார்த்தர்கள் சிகண்டியைமுன்னிட்டுக்கொண்டும் பற்பலவிதஅம்புகளை இறைத்துக்கொண்டும் யுத்தத்தில் பீஷ்மரை எதிர்த்துவந்தார்கள். பாரதரே! அந்தப்போர்க்களத்தில் பீமனுல் அம்புகளால்அடிக்கப்பட்ட உம்மைச்சேர்ந்தவீரர்கள் ரக்தவெள்ளத்தால்நனைக்கப்பட்டு அப்பொழுது பரலோகம்சென்றூர்கள். நகுலனும் ஸஹதேவனும் மகாரதனுனஸாத்யகியும் உம்முடையபடையில்புகுந்து பராக்கிரமத்தால் நாசம்செய்தார்கள். யுத்தத்தில்வதம்செய்யப்படுகின்றஉம்முடையஸைனிகர்கள் பாண்டவர்களுடையபெரிதானஸேனையைத்தடுப்பதற்குச் சக்தியற்றவர்களானூர்கள். பிறகு எல்லாப்பக்கங்களிலும்பீடிக்கப்படுகின்ற உம்முடையஸேனையானது மகாரதர்களாலேஓட்டப்பட்டுப் பத்துத்திக்குக்களிலும்ஓடின. பரதர்களிற்சிறந்தவரே! ஸ்ருஞ்சயர்களுடன்கூடினபாண்டவர்களாலே கூர்மையான அம்புகளால்கொல்லப்படுகின்ற உம்முடையஸைனிகர்கள் ரக்ஷகனை அடையவில்லை" என்றுன்.

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பார்த்தர்களாலேபீடிக்கப்படுகின்ற சேனையைக்கண்டு பராக்கிரமசாலியானபீஷ்மர்கோபங்கொண்டு யுத்தத்தில் என்னசெய்தாரென்பதைச் சொல்வாயாக. ஸஞ்சய! பகைவர்களைவாட்டுகிறவர்களும் என்னைச்சேர்ந்தவீரர்களைநாசம்செய்கிறவர்களுமானபாண்டவர்கள் யுத்தத்தில் எவ்வாறு கௌரவர்களை எதிர்த்தார்கள்? அதை எனக்குச் சொல்" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினன். "மகாராஜரே! பாண்டவர்களாலும் ஸ்ருஞ்சயர்களாலும் உமதுபுத்திரனுடையசேனையானது பீடிக்கப்படும்பொழுது உமதுபிதா செய்ததை உமக்குச் சொல்லுகிறேன். பாண்டுவுக்கு மூத்தவரே! சூரர்களானபாண்டவர்கள் மிக்கமனமகிழ்ச்சியுடன் உமதுபுத்திரனுடையசேனையை எதிர்த்து நாசம்செய்தார்கள். ராஜரே! அப்பொழுது யுத்தத்தில் பகைவர்களாலே செய்யப்படுகின்றஸைனியத்தினுடையநாசத்தையும் மனிதர்கள், யானைகள், குதிரைகள் இவைகளினுடையநாசத்தையும் பீஷ்மர் பொறுக்கவில்லை. சிறந்தவில்லாளியும் பகைவர்களால ஜயிக்கமுடியாதவருமான பீஷ்மர் தம்உயிரையிழக்கத்துணிந்து பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் ஸ்ருஞ்சயர்களை

யும் நாராசங்களாலும் வத்ஸதந்தங்களாலும் கூர்மையுள்ள அஞ்சலிகங்களாலும் வர்ஷித்தார். மன்னரே! அந்தப்பீஷ்மர் யுத்தத்தில் சஸ்திரங்களைக்கையில்கொண்டு பாண்டவர்களுள்மகாரதர்களான ஐந்து உத்தமவீரர்களை முயற்சியுடனே அம்புகளால் தடுத்தார். பீஷ்மர் யுத்தத்தில் கோபங்கொண்டு வீரியத்தோடும் பொறுமையோடும் பிரயோகிக்கும் பலவித சஸ்திரவர்ஷங்களாலும் அஸ்திரவர்ஷங்களாலும் கணக்கிலடங்காத ஏராளமான யானைகளையுங்குதிரைகளையுங் கொன்றார். புருஷசிரேஷ்டரே! பீஷ்மர் ரதங்களினின்று ரதிகர்களையும் குதிரைகளின் முதுகினின்று குதிரைவீரர்களையும் ஒன்றுசேர்ந்திருக்கின்ற காலாட்கூட்டங்களையும் யானைகளினின்று பகைவர்களுக்குத் தோல்வியைஉண்டுபண்ணுந்திறமையுள்ள யானைவீரர்களையும் கீழே தள்ளினார். யுத்தத்தில் அஸகாயசூரரும் மிக்கசுறுசுறுப்புள்ளவரும் மகாரதருமான பீஷ்மரைப் பாண்டவவீரர்கள் வஜ்ரபாணியான இந்திரனை அஸுரர்கள் எதிர்ப்பதுபோல எதிர்த்தார்கள். இந்திரனுடைய வஜ்ராயுதம்போலத் தாக்குகின்றவைகளும் கூர்மையுள்ளவைகளுமான அம்புகளைத்தொடுத்துக்கொண்டு(பீஷ்மர்) கோரமான சரீரமுள்ளவராக எல்லாத்திக்குக்களிலும் காணப்பட்டார். யுத்தரங்கத்தில் போர்புரிகின்ற பீஷ்மருடைய இந்திரதனுஸுக்கொப்பான பெரிதானவில்லானது எப்பொழுதும் மண்டலாகாரமாகவே காணப்பட்டது. வேந்தரே! உமதுகுமாரர்கள் யுத்தத்தில் அந்தச்செய்கையைப்பார்த்து அதிகமான ஆச்சரியத்தையடைந்து பிதாமஹரைப் பூஜித்தார்கள். பாண்டவர்கள் மனநிலைதவறினவர்களாகி யுத்தரங்கத்தில்போர்புரிகின்ற சூரரானஉம்முடையபிதாவை, விப்ரசித்தியென்பவனைத் தேவர்கள்பார்ப்பதுபோலப் பார்த்தார்கள்; வாயைத்திறந்திருக்கும் அந்தகனைப்போன்ற அந்தப்பீஷ்மரைத் தடுக்கச் சக்தியற்றவர்களானார்கள். பத்தாவதுநாள் வந்தவுடனே பீஷ்மர் சிகண்டியினுடையதேர்ப்படையைக் கூர்மையானபாணங்களாலே நெருப்பானது காட்டைஎரிப்பதுபோல எரித்தார். கோபங்கொண்டநாகம்போன்றவரும் காலனால்சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற அந்தகனைப்போன்றவருமான அந்தப்பீஷ்மரைச் சிகண்டி மூன்றுபாணங்களால் நடுமார்பிலடித்தான். அந்தச்சிகண்டியினாலே அதிகமாக அடிக்கப்பட்டபீஷ்மர் சிகண்டியைப்பார்த்துக் கோபங்கொண்டு மீண்டும் அவனைப் பார்க்கவில்லை சிரித்துக்கொண்டு பின்வருமாறுசொல்லலானார்.

'உன்னிஷ்டப்படி அடித்தாலடி. இல்லாமற்போனால் சும்மாஇரு. உன்னைஎதிர்த்து எவ்விதத்தாலும் யான் போர்புரியேன். நீ பிரம்ம

தேவராலே ஸ்திரீயாக ஸ்ருஷ்டிபண்ணப்பட்ட சிகண்டினியன்றோ?' என்றார். பீஷ்மருடைய அந்தவார்த்தையைக்கேட்டுச் சிகண்டி கோப மூண்டு, இரண்டுகடைவாயையும் நக்கிக்கொண்டு யுத்தரங்கத்தில் பீஷ்மரைப்பார்த்து, 'மிக்கபுஜபலமுள்ளவரே! உம்மை க்ஷத்திரியர் களுக்குப் பயத்தையுண்டுபண்ணுகிறவரென்றறிவேன்; ஜமதக்னி குமாரரானபரசுராமரோடு நீர் யுத்தஞ்செய்ததை நான் கேட்டிருக்கி றேன்; உம்முடைய திவ்யமானபிரபாவத்தைப் பலவாறு கேட்டிருக் கிறேன்; உம்முடையமஹிமையை அறிந்திருந்தாலும் உம்மோடு நான் இப்போது யுத்தம்செய்யப்போகிறேன். நரோத்தமரே! பாண் டவர்களுக்கும் எனக்கும் பிரியத்தைச்செய்ய எண்ணி இப்பொழுது உம்மை யுத்தரங்கத்தில் எதிர்த்துப் போர்புரியப்போகிறேன். உம்மை நிச்சயமாகக் கொல்லப்போகிறேன். உம்முடையமுன்னிலையில் ஸத் தியத்தின்மீது ஆணையிடுகிறேன். இப்படிப்பட்ட என்னுடையவாக்கி யத்தைக்கேட்டு எதுசெய்யத்தக்கதோ அதை நீர் செய்யும். உமது இஷ்டப்படி யுத்தஞ்செய்தாலும்செய்யும். இல்லாவிட்டாலும் வேண் டாம். நீர் உயிரோடு என்னிடத்தினின்று தப்பிப்பிழைக்கப்போகிற தில்லை. பீஷ்மரே! யுத்தத்தில் ஜயம்பெறுபவரே! நீர் இவ்வுலகத்தை நன்றாகப் பார்த்துவிடும்' என்றுகூறினான். அந்தச்சிகண்டி பீஷ்மரைப் பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டுப் பிறகு வாக்குக்களாகிற அம்புக ளால் மிக்கதுன்பத்தை உண்டுபண்ணிக்கொண்டு படிந்தகணுக்களுள்ள ஐந்துபாணங்களாலே பீஷ்மரை அடித்தான். அந்தச்சிகண்டியினு டைய அவ்விதமானவார்த்தையைக்கேட்டு மகாரதனான அர்ஜுனன் (பீஷ்மரைக்கொல்வதற்கு) இதுதான்சமயமென்றெண்ணிச் சிகண்டி யைப்பார்த்து, 'அம்புகளால் சத்துருக்களைஓடும்படிசெய்துகொண்டு யான் உன்னைப் பின்தொடரப்போகிறேன். நீ மிகுந்தபரபரப்புடன் பயங்கரமானபராக்ரமமுள்ள பீஷ்மரையெதிர்த்து விரைவாகச்செல். மஹாபலசாலிகளான கௌரவர்கள் யுத்தத்தில் உனக்குத்துன்பத்தை யுண்டுபண்ணுவதற்கு வல்லமையுள்ளவர்களாகார்கள். சிறந்த புஜபல முள்ளவனே! ஆதலால், இப்பொழுது முயற்சியுடன் பீஷ்மரை எதிர்த் துச்செல். யுத்தத்தில் பீஷ்மரைக் கொல்லாமல்போனால் என்னோடு கூட நீ இவ்வுலகத்தில்வஸிக்கின்றஜனங்களால் பரிகஸிக்கத்தக்கவனு வாய். வீர! இந்த உத்தமமானயுத்தத்தில் நாம் பரிகஸிக்கப்படத்தக் கவர்களாகாவண்ணம் யுத்தத்தில்முயற்சியைச்செய். பிதாமஹரை ஸம் ஹாரஞ்செய். ஒன்றுசேர்ந்து முயற்சிக்கின்றவர்களும் மகாரதர்களுமான எல்லாக்கௌரவர்களையும் நான் தடுத்துப் போர்புரியப்போகிறேன். நீ பிதாமஹரை நாசம்செய். யான் துரோணரையும் துரோணபுத்திரரை

யும் கிருபரையும் துரியோதனனையும் சித்திரஸேனனையும் விகர்ணனையும் விந்தாநுவிந்தர்களையும் ஜயத்ரதனையும் அவந்திதேசத்தரசர்களான விந்தாநுவிந்தர்களையும் காம்போஜதேசாதிபதியான ஸுதக்ஷிணனையும் சூரனான பகதத்தனையும் மகாபலசாலியான மாகதனையும் சூரனான பூரிஸ்ரவஸையும் ரிஷ்யசிருங்கபுத்திரனும் ராக்ஷஸனுமான அலம்புஸனையும் எல்லா மகாரதர்களுடனுங்கூடின திரிகர்த்ததேசாதிபதியான சுசர்மாவையும் கரையானது ஸமுத்திரவேகத்தைத் தடுப்பதுபோலத் தடுக்கப்போகிறேன். ஒன்றுகூடி யுத்தம்செய்கின்றவர்களும் மகாபலசாலிகளுமான எல்லாக்கௌரவர்களையும் யுத்தத்தில் யான் எதிர்ப்பேன். நீ பிதாமஹரை வதஞ்செய்' என்று தூண்டினான்" என்று கூறினான்.

---

## நூற்றேண்பதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மருக்கும் துரியோதனனுக்கும் ஸம்வாதமும் பீஷ்மருடைய பராக்கிரமத்தை வர்ணித்தலும்.)

திருதராஷ்டிரன், "யுத்தத்தில் கோபங்கொண்ட பாஞ்சாலராஜகுமாரனான சிகண்டி தர்மாத்மாவும் தீவ்ரமான விரதத்தையுடையவரும் கங்காபுத்திரருமான பிதாமகரை எவ்வாறு எதிர்த்தான்? ஆயுதங்களைக் கையிலெடுத்தவர்களும் த்வரைப்படவேண்டியகாலத்தில் த்வரையுடன்கூடியவர்களும் பகைவர்களை ஜயிக்க எண்ணங்கொண்டவர்களுமான எந்தமகாரதர்கள் பாண்டவஸேனையில் சிகண்டியைப் பாதுகாத்தார்கள்? மகாவீர்யமுடைய சந்தனுபுத்திரரான அந்தப் பீஷ்மர் அந்தப்பத்தாவதுதினத்தில் பாண்டவர்களோடும் ஸ்ருஞ்சயர்களோடும் எவ்வாறு போர்புரிந்தார்? ரணகளத்தில் சிகண்டியினால் பீஷ்மர்எதிர்க்கப்பட்டதை நான்பொறுக்கவில்லை. ஸஞ்சய! அந்தப்பீஷ்மருக்குத் தேர் ஒடியாமலிருந்ததா? பாணங்களைப் பிரயோகிக்கின்ற அவருடையவில் சிதறாமலிருந்ததா?" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான். "பரதரிற்சிறந்தவரே! படிந்தகணுக்களுள்ள அம்புகளால் யுத்தத்தில் சத்துருக்களை ஹிம்ஸித்துக்கொண்டு ரணகளத்தில் போர்புரிகின்ற இந்தப்பீஷ்மருக்கு வில்லும் சிதறவில்லை; தேரும் ஒடியவில்லை. அரசரே! யுத்தத்தின்பொருட்டுப் பிதாமஹரைமுன்னிட்டுக்கொண்டு அநேக லக்ஷக்கணக்கான உமது ஸேனையிலுள்ள மகாரதர்களும் யானைக்கூட்டங்களும் நன்குபழக்கப்பட்ட குதிரைகளும் (பாண்டவஸேனையை) எதிர்த்துச்சென்றன. குருகுலத்தில்பிறந்தவரே! யுத்தத்

தில்பகைவர்களைஜயிக்குந்திறமையுள்ள அந்தப்பீஷ்மரும் பிரதிஜ்ஞை செய்தபிரகாரம் யுத்தத்தில் பாண்டவர்களுக்கு ஓழிவின்றி நாசத்தை உண்டுபண்ணினார். போர்புரிகின்றவரும் மிக்கவில்லாளியும் அம்புகளால் பகைவர்களைக் கொல்லுகின்றவருமான அந்தப்பீஷ்மரைப் பாஞ்சாலர்கள் பாண்டவர்களுடன் நாலாபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். பாண்டுவுக்குமூத்தவரே! பத்தாவதுநாள்வந்தவுடன் அவ்விதமானசத்துருசேனையைக் கூர்மையான அம்புகளாலே நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் சிதறியோடும்படிசெய்கின்றவரும் மகிமைபொருந்தியவில்லையுடையவரும் பாசத்தைக்கையில்கொண்டயமன் போன்றவருமான பீஷ்மரைப் பாண்டவர்கள் யுத்தத்தில் ஜயிப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். மகாராஜரே! பிறகு இரண்டுகைகளாலும் பாணங்களைப் பிரயோகிக்கின்றவனும் ரக்தங்களாலும் மாம்ஸங்களாலும் ரணகளத்தை அருவருக்கத்தக்கதாகச்செய்கின்றவனும் சத்துருக்களாலே ஜயிக்கப்படாதவனுமான தனஞ்சயன் எல்லாரதிகர்களையும்பயமுறுத்திக்கொண்டு பீஷ்மருக்கருகில் வந்தான். பார்த்தன் ஸிம்மம்போலஉரக்கக்கர்ஜித்தும் அடிக்கடி வில்லிற்பூட்டியநாண்கயிற்றை ஒலிக்கும்படி இழுத்தும் சரமாரிகளைப் பொழிந்துகொண்டு யுத்தகளத்தில் காலன்போல ஸஞ்சரித்தான். வேந்தரே! ஸிம்மத்தினுடையசப்தத்தைக்கேட்டு மிருகங்கள் பயந்து ஓடுவதுபோல அந்த அர்ஜுனனுடையசப்தத்தினாலே மிக்கநடுக்கமுற்றவர்களாகி உம்மைச் சேர்ந்தவர்கள் மிக்கபயங்கரமான அந்தயுத்தரங்கத்தினின்று ஓடினார்கள். பிறகு துரியோதனன் பாண்டவன்வெல்வதையும் உமதுஸேனை நாலாபக்கங்களிலும் பீடிக்கப்படுவதையுங்கண்டு மிகுந்ததுன்பத்தையடைந்து பீஷ்மரைப்பார்த்து (பின்வருமாறு) வசனிக்கலானான்.

'ஐயா! வெண்மையானகுதிரைகளுடன்கூடியவனும் கிருஷ்ணனைஸாரதியாகவுடையவனுமான இந்தப்பாண்டுநந்தனன் என்னைச் சேர்ந்தவர்களனைவரையும் நெருப்பானது காட்டைஎரிப்பதுபோல எரிக்கிறான். யுத்தம்புரியும் வீரர்களுள் சிரேஷ்டரே! காங்கேயரே! பாண்டவனால் யுத்தத்தில் துரத்தியடிக்கப்பட்டு நமதுஸேனைகள் நாலாபக்கங்களிலும் ஓடுகின்றதைப் பாரும். சத்துருக்களைத்தபிக்கும்படி செய்கின்றவரே! கானகத்தில் பசுக்கூட்டங்களை இடையன் துரத்துவதுபோலவே நம்முடையஇந்தச்சேனையானது பாண்டவனால் துரத்தப்படுகிறது. தனஞ்சயனுடையஅம்புகளாலேஅடிக்கப்பட்டு ஆங்காங்குஓடுகின்ற என்னுடையசேனையை எவ்விதத்தினாலும் ஜயிக்க முடியாதபீமனும் ஓடும்படிசெய்கிறான். ஸாத்யகி சேகிதானன் மாத்ரீ

புத்திரர்களான நகுலஸஹதேவர்கள் மகாபராக்கிரமசாலியான அபிமன்யு ஆகியஇவர்கள் என்னுடையபடையை ஓடும்படிசெய்கிறார்கள். அவ்வாறே சூரனான திருஷ்டத்யும்னனும் ராக்ஷஸனானகடோத்கசனும் மகாயுத்தத்தில் என்னுடையசேனையை விரைவாகஓடும்படிசெய்கிறார்கள். பரதகுலத்திற்பிறந்தவரே! புருஷசிரேஷ்டரே! இந்தமகாரதர்களனைவராலும் கொல்லப்படுகின்ற இந்தக்கௌரவஸைனியத்திற்கு நிலைத்துநிற்பதிலும் சண்டைசெய்வதிலும் தேவதைக்குச்சமமான பராக்கிரமமுள்ள உம்மைத்தவிர வேறுகதியிருப்பதாக நான்காணவில்லை. போதுமானதிறமையுள்ளநீர் துன்பமடைந்தவர்களான நம்முடையஸைனிகர்களுக்குச் சீக்கிரம் ரக்ஷகராகவேண்டும்' என்றான். மகாராஜரே! இவ்வாறுசொல்லியதைக்கேட்ட உம்முடையபிதாவும் சந்தனுபுத்திரருமானதேவவிரதர் ஒருமுகூர்த்தகாலம் ஆலோசித்துத் தம் மனத்தில் நிச்சயம்செய்துகொண்டு உமதுபுத்திரன் தேறுதலடையும்படியான சிலவார்த்தைகளைப் பின்வருமாறுகூறலானார்.

'துரியோதன! அரசனே! நீ ஸாவதானமாகக்கேள். [1] மகாபலசாலியே! ஒவ்வொருநாளும் மகாபலசாலிகளான பதினாயிரம் க்ஷத்திரியர்களைக்கொன்றுவிட்டு நான் யுத்தத்தினின்றுமீளுவேன்' என்று முன்பு நான் உன்னிடம்செய்த இந்தப்பிரதிஜ்ஞையானது முடிக்கப்பட்டுவிட்டது. பரதர்களில்சிறந்தவனே! என்னால்சொல்லப்பட்டகாரியத்தை இவ்வாறு நான் செதுய்முடித்துவிட்டேன். இச்சமயத்திலும் என்பலத்திற்குத்தக்கபடி பெரியகாரியத்தைச் செய்யப்போகிறேன்; இப்போது நான், கொல்லப்பட்டு(ப் பூமியில்) படுக்கவாவதுபடுப்பேன்; அல்லது பாண்டவர்களைக்கொல்லவாவது கொல்வேன். இந்திரனுடன்கூடின அமரர்களாலும் மகாபலசாலிகளான பாண்டவர்கள் ஜயிக்கமுடியாதவர்கள். அவ்வாறிருக்க, சாகுந்தன்மையுடையக்ஷத்திரியனாலே எவ்வாறு அவர்கள் ஜயிக்கத்தக்கவர்கள்? புருஷசிரேஷ்டனே! யான் யுத்தமுனையில்பிராணனைவிட்டு எஜமானனுடைய அன்னத்தைப் புஜித்ததினால்ஏற்படுத்தப்பட்ட உன்கடனை இன்று தீர்த்துக்கொள்ளப்போகிறேன்' என்றார். பரதசிரேஷ்டரே! எவ்விதத்தினாலும் ஜயிக்கமுடியாதவரானபீஷ்மர் இவ்வாறுசொல்லிவிட்டு க்ஷத்திரியர்களை அம்புகளால்பிளந்துகொண்டு பாண்டவர்களுடையஸேனையை எதிர்த்தார். பரதசிரேஷ்டரே! சேனையின்மத்தியில்நிற்கின்றவரும் கோபங்கொண்டஸர்ப்பம்போன்றவரும் கங்காபுத்திரருமானபீஷ்மரைப் பாண்டவர்கள் எதிர்த்தார்கள். குருகுலத்திற்பிறந்தராஜரே!

[1] பொருந்தாமையால் அதிகபாடமான ஒரு சுலோகம் விடப்பட்டது.

பத்தாம்நாளில் பீஷ்மர் தம்முடையசக்தியைவெளிப்படுத்திக்கொண்டு லக்ஷக்கணக்கானவீரர்களைக் கொன்றார். மேலும் பாஞ்சால்ர்களுள் எவர்கள் மேன்மைபெற்றவர்களோ,ராஜபுத்திரர்களோ,மகாரதர்களோ அவர்களுடைய தேஜஸுகளை, சூரியன் கிரணங்களாலே ஜலத்தை இழுப்பதுபோல இழுத்தார். மகாராஜரே! புருஷசிரேஷ்டரான பீஷ்மர் வேகமுள்ளபதினாயிரம்யானைகளையும் லக்ஷம்குதிரைவீரர்களுடன் கூடினகுதிரைகளையும் இரண்டுலக்ஷக்கணக்கிலடங்கின நிறைந்தகாலாட்படைகளையுங்கொன்று புகையற்றநெருப்புப்போல யுத்தத்தில் நன்றாகஜ்வலித்தார். உத்தராயணத்தை அடைந்து தபிக்கச்செய்கின்ற சூரியனைப்போல ஜ்வலிக்கின்றஅந்தப்பீஷ்மரைப் பாண்டவஸேனா வீரர்களுள்சிலர் பார்ப்பதற்கும் சத்தியுள்ளவர்களாகவில்லை. சிறந்த வில்லாளியானபீஷ்மராலே துன்பமடையும்படி செய்விக்கப்பட்டவர்களும் கோபமுள்ளவர்களுமான அந்தப்பாண்டவஸேனாவீரர்களும் மஹாரதர்களானஸ்ருஞ்சயர்களும் கொல்வதின்பொருட்டுப் பீஷ்மரை எதிர்த்தோடிவந்தார்கள். அனேகமகாவில்லாளிகளாலே (அம்புகளால்) சிதறஅடிக்கப்பட்டவரும் அவ்வாறுஹிம்ஸிக்கப்படுகின்றவருமான அந்தப்பீஷ்மர் மேகங்களால்சூழப்பட்டமலைபோலக் காணப்பட்டார். உம்முடையபுத்திரர்களோ பெரியசேனையுடன்கூடின கங்காபுத்திரரானபீஷ்மரை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துநின்றார்கள். பிறகு யுத்தம்நடந்தது.

---

## நூற்றுப்பத்தாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனனுக்கும் துச்சாஸனனுக்கும் யுத்தம்.)

ராஜரே! அர்ஜுனனோ யுத்தத்தில் பீஷ்மருடைய விக்கிரமத்தைக்கண்டு சிகண்டியைப்பார்த்து, 'பிதாமகரை நீ எதிர்க்கவேண்டும். அவரிடத்தினின்று இப்பொழுது நீ எவ்விதத்தாலும் பயப்படவேண்டாம். யான் கூர்மையான அம்புகளாலே உத்தமமானரதத்தினின்று பீஷ்மரைக் கீழேதள்ளப்போகிறேன்' என்றுகூறினன். பரதர்களிற் சிறந்தவரே! பார்த்தன்இவ்வாறுசொல்ல, சிகண்டியானவன் பார்த்தனுடையவார்த்தையைக்கேட்டுப் பீஷ்மரை எதிர்த்தான். ராஜரே! அவ்வாறே திருஷ்டத்யும்னனும் மகாரதனான அபிமன்யுவும் மகிழ்ச்சியுடன் பார்த்தனுடையவார்த்தையைக்கேட்டுப் பீஷ்மரை எதிர்த்தார்

கள். பிராயமுதிர்ந்தவர்களான விராடனும் துருபதனும் கவசம்பூண்டவனுனகுந்திபோஜனும் உமதுபுத்திரன்பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே காங்கேயரை எதிர்த்தார்கள். ராஜரே! நகுலன் ஸஹதேவன் வீர்யமுடையவரானதர்மராஜர் ஆகியஇவர்களும் மற்றெல்லாச்சைனியங்களும் பார்த்தனுடையவார்த்தையைக்கேட்டுக் காங்கேயரை எதிர்த்துச்சென்றார்கள். ஒன்றுசேர்ந்த மகாரதர்களான அவர்களை உம்மைச்சேர்ந்தயுத்தவீரர்கள் சக்திக்கும் உத்ஸாகத்திற்கும் தக்கபடி எதிர்த்தார்கள். அந்தவிஷயத்தைச் சொல்லுகின்ற என்னிடத்தினின்று கேளும். மகாராஜரே! சித்ரஸேனன் யுத்தகளத்தில் பீஷ்மரைஎதிர்க்கக்கருதிச்செல்லுகின்றசேகிதானனைப் புலிக்குட்டிவிருஷபத்தைஎதிர்த்துச்செல்லுவதுபோல எதிர்த்துச்சென்றான். வேந்தரே! கிருதவர்மா பரபரப்புள்ளவனும் யுத்தத்தில்முயற்சியுள்ளவனும் பீஷ்மரின்பக்கத்தைக்குறித்துநெருங்கிவருகின்றவனுமானதிருஷ்டத்யும்னனைத் தடுத்தான். காங்கேயரைக்கொல்வதில்நோக்கத்துடன் அதிககோபமாகவருகின்றபீமஸேனனை ஸோமதத்தகுமாரன் விரைவாகத்தடுத்தான். அவ்வாறே, சூரனும் அனேகபாணங்களை இறைக்கின்றவனுமானநகுலனை விகர்ணன் பீஷ்மர் உயிர்வாழ்தலை விரும்பித் தடுத்தான். ராஜரே! பீஷ்மருடையரதத்தைக்குறித்துச் செல்லுகின்றஸஹதேவனை யுத்தகளத்தில் சாத்வானுடையபுத்திரரானகிருபர் மிகுந்தகோபங்கொண்டு தடுத்தார். பலசாலியானதுர்முகனும் பீஷ்மரைக்கொல்லஎண்ணங்கொண்டவனும் குரூரமானசெய்கையுடையவனும் மகாபலசாலியும் பீமஸேனகுமாரனுமான கடோத்கசன் என்கிறராக்ஷஸனை எதிர்த்தான். பாண்டவர்களுக்குப்பிரியத்தைச் செய்யவேண்டுமென்கிறஎண்ணத்தினலே பீஷ்மரைக்கொல்வதில்விருப்பமுற்றிருக்கிறவனும் யுத்தத்தில்கோபங்கொண்டவனுமானஸாத்யகியை ரிச்யசிருங்கனுடையகுமாரனான அலம்புஸன் எதிர்த்தான். மகாராஜரே! பீஷ்மருடையரதத்தைக்குறித்துச்செல்லுகின்றஅபிமன்யுவைக் காம்போஜதேசாதிபதியானஸுதக்ஷிணன் எதிர்த்தான். பாரதரே! வயதுசென்றவர்களும் ஒன்றுசேர்ந்திருக்கிறவர்களும் சத்ருக்களை அடிக்கும்வல்லமையுடையவர்களுமான விராடன் துருபதன் இவ்விருவரையும் அஸ்வத்தாமா கோபங்கொண்டு தடுத்தான். யுத்தத்தில்முயற்சியுள்ளவரானபாரத்வாஜர் பீஷ்மரைக்கொல்லவேண்டுமென்றெண்ணங்கொண்டவரும் பாண்டுபுத்திரர்களுள்மூத்தவருமானதர்மபுத்திரரைத் தடுத்தார். மகாராஜரே! பீஷ்மரைக்கவர்ந்துகொள்ளக் கருதிய சிகண்டியைமுன்னிட்டு யுத்தத்தில் வேகமுடையவனும் பத்

துத்திக்குக்களையும்பிரகாசிக்கச்செய்கின்றவனுமான அர்ஜுனனை மகா வில்லாளியான துச்சாஸனன் யுத்தத்தில் தடுத்தான். உம்மைச்சேர்ந்த மற்றப்போர்வீரர்கள் பீஷ்மருக்குள் நேராகச்செல்லுகின்ற மகாரதர்க ளானபாண்டவவீரர்களை யுத்தத்தில் தடுத்தார்கள். மகாரதனான திரு ஷ்டத்யும்னனே பரபரப்புடன், 'இதோ குருநந்தனனான அர்ஜுனன் யுத்தகளத்தில் பீஷ்மரை எதிர்த்துச்செல்லுகிறான். எதிர்த்தோடுங் கள்; பயப்படாதீர்கள். பீஷ்மர் உங்களைநாடமாட்டார். அர்ஜுனனை யுத்தத்தில் எதிர்த்துப்போர்புரிவதற்கு இந்திரனும் உத்ஸாஹமுடைய வனாகான். வீரர்களே! அங்ஙனமிருக்க, பலமற்றவரும் ஸ்வல்பமான வாழ்நாட்களையுடையவருமான பீஷ்மர் யுத்தத்தில் அர்ஜுனனைஎதிர்த் துப்போர்புரிவதற்குச் சக்தியுள்ளவராகாரென்பதில் ஸந்தேகம் யாது?' என்று அடிக்கடி ஸைனியங்களை உரக்கக்கூவி அழைத்துக் கொண்டு வேகமாகப் பீஷ்மர்ஒருவரையே எதிர்த்தோடினான். இவ்வா றானஸேனாபதியினுடையவார்த்தையைக்கேட்டுப் பாண்டவசேனையி லுள்ளமகாரதர்கள் மிக்கஉத்ஸாகத்துடன் காங்கேயருடையரதத்தை எதிர்த்துச்சென்றார்கள். யுத்தத்தில்வருகின்ற அந்தப்பாண்டவவீரர் களை உம்மைச்சேர்ந்தபுருஷசிரேஷ்டர்கள் உத்ஸாகத்துடன், ஜலப் பிரவாகங்களை மலைகள்தடுப்பதுபோலத் தடுத்தார்கள். மகாராஜரே! மகாரதனான துச்சாஸனன் பயத்தைவிட்டுப் பீஷ்மருடையஉயிரைப் பாதுகாக்கவிருப்பமுள்ளவனாக அர்ஜுனனை அருகில்எதிர்த்துவந் தான். அவ்வாறே மகாரதர்களும் சூரர்களுமானபாண்டவர்கள் காங் கேயருடையரதத்தைக்குறித்தும் உமதுபுத்திரர்களைநோக்கியும் யுத் தத்தில் எதிர்த்தோடிவந்தார்கள். ராஜரே! பார்த்தன் துச்சாஸன னுடையரதத்தைநாடி அதைத்தாண்டிச்செல்லாமலிருந்தானென்னும் விசித்ரமானஆச்சரியத்தை அவ்விடத்தில் கண்டோம். பொங்குத லுற்ற மகாஸமுத்திரத்தைக் கரைதடுப்பதுபோலக் கோபங்கொண் டிருக்கிறபாண்டவனை உமதுபுத்திரன் தடுத்தான். பாரதரே! அவ் விருவரும் ரதிகர்களுள்சிறந்தவர்கள். அவ்விருவரும் பரதவம்சத்தில் பிறந்தவர்களுள்(பிறர்களால் எவ்விதத்திலும்) ஜயிக்கமுடியாதவர்கள். இருவரும் காந்தியினாலும் தேஜஸினாலும் சந்திரனுக்கும்சூரியனுக்கும் ஒப்பானவர்கள். அதிகப்பரபரப்புள்ளவர்களும் ஒருவரைஒருவர்கொல் வதில் விருப்பமுள்ளவர்களுமான அவ்விருவரும் மகாயுத்தத்தில், முன்பு மயன் இந்திரன் இவர்களிருவரும் எதிர்த்ததுபோல எதிர்த் தார்கள். மகாராஜரே! துச்சாஸனன் யுத்தத்தில் கூர்மையான மூன் றம்புகளாலே பாண்டவனையும் இருபது அம்புகளாலே வாஸுதேவ

ரையும் அடித்தான். பிறகு அர்ஜுனன், கிருஷ்ணர் பீடிக்கப்பட்டதைக்கண்டு கோபங்கொண்டு துச்சாசனன்மீது யுத்தத்தில் நூறு நாராசங்களைப் பிரயோகித்தான். ராஜரே! தாகங்கொண்ட ஸர்ப்பங்கள் தடாகத்துத்தண்ணீரை அருந்துவதுபோல அந்நாராசங்கள் அவனுடைய கவசத்தைப்புடைத்து யுத்தத்தில் அவன் ரக்தத்தைப்பானஞ்செய்தன. பரதசிரேஷ்டரே! துச்சாசனன் கோபங்கொண்டு பதிந்தகணுக்களுள்ள இறகுகட்டின மூன்றுபாணங்களால் பார்த்தனை நெற்றியில் அடித்தான். மகாராஜரே! பாண்டவன் ரணகளத்தில் நெற்றியில்பாய்ந்திருக்கின்ற அந்தப்பாணங்களாலே நன்றாகவளர்ந்திருக்கின்ற கொடுமுடிகளாலே மகாமேரு விளங்குவதுபோல விளங்கினான். வில்லாளியானஉம்முடையபுத்திரனாலே நன்றாக அடிக்கப்பட்டவனும் மகாவில்லாளியுமான அந்தப்பார்த்தன் யுத்தரங்கத்தில் பூத்திருக்கின்ற பலாசவிருக்ஷம்போல விளங்கினான். பிறகு, பாண்டவன் கோபங்கொண்டு பர்வகாலத்தில் மிகுந்தகோபங்கொண்ட ராகு பூர்ணசந்திரனைப் பீடிப்பதுபோலத் துச்சாசனனைப் பீடித்தான். ராஜரே! பலவானான அர்ஜுனனாலே பீடிக்கப்படுகின்ற உமதுபுத்திரன் பார்த்தனை யுத்தத்தில் சாணையில்தீட்டப்பட்டிருக்கின்றவைகளும் கழுகிறகுகள் பூண்டவைகளுமான அம்புகளாலே அடித்தான். பிறகு பார்த்தன் மூன்றம்புகளாலே அவனுடையவில்லை அறுத்து ரதத்தையும் உடைத்துப் பிறகு கூர்மையுள்ளபாணங்களாலே உமதுபுத்திரனையுமடித்தான். அந்தத்துச்சாஸனன் பீமனுக்கெதிரில் நின்றுகொண்டு வேறுவில்லைக் கையிலெடுத்து இருபத்தைந்துபாணங்களாலே அர்ஜுனனை இரண்டு கைகளிலும் மார்பிலும் அடித்தான். மகாராஜரே! சத்துருக்களைத் தபிக்கச்செய்கின்றபாண்டவன் அந்தத்துச்சாசனன்மீது கோபங்கொண்டு யமதண்டம்போன்றவைகளும் கோரரூபமுள்ளவைகளுமான அனேகஅம்புகளைத் தொடுத்தான். முயற்சியுள்ளபார்த்தனுடைய அந்தப்பாணங்களை உம்முடையகுமாரன் தன்னைவந்து நாடுவதற்குள்ளாகவே வெட்டினான். அது ஆச்சரியம்போலிருந்தது. உம்முடையபுத்திரனானவன் கூர்மையுள்ளபாணங்களாலே பார்த்தனையடித்தான். பிறகு பார்த்தனும் யுத்தத்தில் கோபங்கொண்டு பொற்கணுக்களுள்ளவைகளும், சாணையில்தீட்டப்பட்டவைகளுமான அம்புகளை வில்லில்பூட்டி (அவன்மீது) எய்தான். மகாராஜரே! பாரதரே! அன்னப்பறவைகள் தடாகத்தைஅடைந்து அதனைவிட்டகலாது வசிப்பதுபோல அந்தப்பாணங்கள் மிக்கவலிமையமைந்த அந்தத்துச்சாசனனுடையதேகத்திலேயே அமிழ்ந்தன. மகாபலசாலியானபாண்

டவனாலேபீடிக்கப்படுகின்ற உமது புத்திரன் யுத்தாங்கத்தில் பார்த்தனை விட்டுவிட்டு விரைவாகப் பீஷ்மருடைய ரதத்தைக் குறித்தோடினான். ஆழ்ந்த ஆபத்ஸமுத்திரத்தில் மூழ்குகின்ற அந்தத் துச்சாசனனுக்குப் பீஷ்மர் அக்காலத்தில் திட்டுபோலாயினார். ராஜரே! சூரனும் பராக்கிரமசாலியுமான உம்முடைய குமாரன் பிறகு பிரஜ்ஞையை அடைந்து மறுபடியும் பார்த்தனை எதிர்த்தான். கூர்மையுள்ள அம்புகளாலே புரந்தரன் விருத்திராஸுரனைப் பிளந்ததுபோல, துச்சாசனன் பார்த்தனைப் பிளந்தான். மிக்கபலமுள்ள சரீரத்தையுடைய அர்ஜுனன் கொஞ்சமேனும் வருத்தமடையவில்லை.

---

## நூற்றுப்பதினோராவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(த்வந்துவயுத்தம்.)

கவசமணிந்தவனும் ரணகளத்தில்பீஷ்மரைநோக்கியேமுயற்சிக்கின்றவனுமானஸாத்யகியைப் பெரியவில்லைக்கையிற்கொண்ட அலம்புஸன் யுத்தத்தில் தடுத்தான். பரதகுலத்திற்பிறந்தராஜரே! ஸாத்யகி மிகுந்தகோபங்கொண்டு மிகநகைத்து ஒன்பதுபாணங்களாலே யுத்தத்தில் ராக்ஷஸனை அடித்தான். ராஜரே! அவ்வாறே ராக்ஷஸனும் அதிககோபங்கொண்டு சினியின்குலத்தில்பிறந்தவீரர்களுள் உத்தமனானஸாத்யகியை ஒன்பதுபாணங்களால் அடித்தான். சினியினது பௌத்திரனும் சத்துருவீரர்களைக்கொல்லுகின்றவனுமான ஸாத்யகி அதிககோபங்கொண்டு ராக்ஷஸன்மீது யுத்தத்தில் பாணஸமூகத்தைப் பிரயோகித்தான். பிறகு ராக்ஷஸன் மிக்க பாகுபலமுள்ளவனும் உறுதியான பராக்கிரமத்தையுடையவனுமானஸாத்யகியைக் கூர்மையுள்ள பாணங்களால் அடித்து ஸிம்மநாதஞ்செய்தான். தேஜஸ்வியானஸாத்யகி அப்பொழுது ராக்ஷஸனால்யுத்தத்தில்மிகஅடிக்கப்பட்டுத் தைரியத்தைக்கைப்பற்றி நகைத்து ஸிம்மநாதத்தையும்செய்தான். பிறகு கோபங்கொண்டவனானபகதத்தன் யுத்தத்தில் வேணுகம்என்னும் ஆயுதங்களாலே மகாகஜத்தைஅடிப்பதுபோலக் கூர்மையுள்ளபாணங்களாலே ஸாத்யகியை அடித்தான். ரதிகர்களுள்உத்தமனானஸாத்யகி யுத்தத்தில் ராக்ஷஸனைவிட்டுவிட்டுப் பிராக்ஜ்யோதிஷதேசத்தரசன் மீது கணுக்கள்படிந்த அம்புகளைத் தொடுத்தான். பிராக்ஜ்யோதிஷதேசாதிபதியும் மிகுந்தஹஸ்தலாகவமுடையவன்போல நூறுமுனையுள்ள

ஒருபல்லத்தினாலே அந்தஸாத்யகியினுடையபெரியவில்லை அறுத்தான். சத்துருவீரர்களைச்கொல்லுகின்றவனான ஸாத்யகி பிறகு வேகமுள்ளவேறுவில்லைக் கையிலெடுத்து யுத்தத்தில் கோபங்கொண்ட பகதத்தனைக் கூர்மையுள்ளஅம்புகளால் அடித்தான். மகாவில்லாளியான அந்தப்பகதத்தன் மிகஅடிக்கப்பட்டு இரண்டுகடைவாய்களையும் நக்கிக்கொண்டு, பொன்னாலும் வைடூர்யத்தினாலும் அலங்கரிக்கப்பட்டதும் இரும்பினாற்செய்ததும் உறுதியானதும் யமதண்டத்திற்கு ஒப்பானதும் கோரமானதுமான சக்திஆயுதத்தை மகாயுத்தத்தில் ஸாத்யகியின்மீதெறிந்தான். அரசரே! அந்தப்பகதத்தனுடைய பாகுபலத்தால் பிரயோகிக்கப்பட்டதும் விரைவாகத்தன்னைநோக்கிவருகின்றதுமான அந்தச்சக்திஆயுதத்தை ஸாத்யகி யுத்தத்தில் பாணங்களால் இரண்டாகத்துண்டாக்கினான். பிறகு அந்தச்சக்திஆயுதமானது ஒளியைஇழந்த பெரிதானஎரிநக்ஷத்திரம்போல விரைவாகக்கீழேவிழுந்தது. அரசரே! உம்முடையகுமாரன் சக்தியாயுதம்நாசம்பண்ணப்பட்டதைக்கண்டு பெரிதானதேர்க்கூட்டத்துடன் ஸாத்யகியைத் தடுத்தான். அவ்வாறு சூழப்பட்டிருப்பவனும் விருஷ்ணிவீரர்களுள் மகாரதனுமானஸாத்யகியைக்கண்டு துரியோதனன் அதிககோபங்கொண்டு தன் தம்பியரனைவரையும்பார்த்து, 'கௌரவ்யர்களே! இந்தயுத்தகளத்தில் நம்முடைய பெரிதானதேர்க்கூட்டத்தினின்று ஸாத்யகி உயிரோடு திரும்பாவண்ணம் செய்யுங்கள். அவன் கொல்லப்பட்டால் பாண்டவர்களுடையபெரும்படை கொல்லப்பட்டதென்றே யான் எண்ணுகிறேன்' என்றுகூறினான். மகாரதர்கள் அந்தத்துரியோதனனுடைய வார்த்தையைக்கேட்டு, 'அவ்வாறேஆகட்டும்' என்றுஏற்றுக்கொண்டு யுத்தகளத்தில் பீஷ்மரைக்கொல்ல முயற்சிக்கின்றஸாத்யகியை எதிர்த்துச் சண்டைசெய்தார்கள். அப்பொழுது பீஷ்மரைக்கொல்லும்பொருட்டு முயற்சித்துவருகின்றஅபிமன்யுவைப் பலசாலியானகாம்போஜராஜன் யுத்தத்தில்தடுத்தான். ராஜரே! காம்போஜராஜன் பதிந்தகணுக்களுள்ளஅம்புகளாலே அர்ஜுனகுமாரனையடித்து மறுபடியும் அறுபத்துநான்குபாணங்களாலே அவனையே அடித்தான். ஸுதக்ஷிணனே பீஷ்மருடையஉயிரை(க் காக்க) விரும்பி யுத்தத்தில் மறுபடியும் அபிமன்யுவை ஐந்துபாணங்களால் அடித்து ஒன்பதுபாணங்களால் அவனதுஸாரதியையும் அடித்தான். அவ்விருவரும் ஒருவரைஒருவர் எதிர்த்ததில் மிகவும்பெரிதான அந்தயுத்தம் நடந்தது. சத்துருக்களை அழிப்பவனானசிகண்டி கங்காபுத்திரரான பீஷ்மரைஎதிர்த்துவந்தபொழுது மகாரதர்களும் வயதுசென்றவர்களுமான விராடனும் துருபத

னும் பெரியசேனையைத்தடுத்துக்கொண்டு பரபரப்புடனே யுத்தரங்கத்தில் பீஷ்மரைக்குறித்தோடிவந்தார்கள். பாரதரே! ரதிகர்களுள் சிரேஷ்டரான அஸ்வத்தாமா யுத்தத்தில்கோபங்கொண்டு (அவர்களை) எதிர்த்தார். பிறகு, அவ்விருவருக்கும் அஸ்வத்தாமாவுக்கும் யுத்தம் நடந்தது. பகைவர்களைத்தபிக்கச்செய்பவரே! மூயற்சிக்கின்றவரும் மகாவில்லாளியும் போரில் பிரகாசிக்கின்றவருமான துரோணபுத்திரரை விராடராஜன் பத்துப்பல்லங்களாலே அடித்தான். துருபதனும் அப்பொழுது கூர்மையான மூன்றுபாணங்களால் அவரை அடித்தான். குருபுத்திரரைஎதிர்த்து மகாபலசாலிகளான அவ்விருவரும் நன்றாகஅடித்தார்கள். பிறகு அஸ்வத்தாமாவோ பீஷ்மரைக்குறித்து நன்றாகமுயற்சிக்கின்ற சூரர்களானவிராடன் துருபதன் இருவரையும் அனேகஅம்புகளால்அடித்தான். யுத்தத்தில் அவ்விருவரும் அஸ்வத்தாமாவினுடைய கோரமானபாணங்களைத்தடுத்ததாகிய கிழவர்களுடைய ஆச்சரியகரமான பெரியசெய்கையைக் கண்டோம். அவ்வாறாகவே சரத்வானுடையகுமாரரானகிருபாசாரியர் எதிர்த்துவருகின்ற ஸஹதேவனை,வனத்தில் மதங்கொண்டயானை மற்றொருமதங்கொண்டயானையை எதிர்த்துவருவதுபோல எதிர்த்து அருகில்வந்தார். யுத்தத்தில்சூரரானகிருபர் மகாரதனானமாத்ரீபுத்திரனைப் பொன்னால்அலங்கரிக்கப்பட்ட எழுபதுபாணங்களாலே விரைவாகஅடித்தார். மாத்ரீபுத்திரனே அம்புகளாலே அவருடையவில்லை இரண்டாகத்துண்டாக்கினான். பிறகு, அறுக்கப்பட்டவில்லையுடையகிருபரை ஒன்பதுபாணங்களால் அவன் அடித்தான். அந்தக்கிருபர் யுத்தத்தில் பெரியகாரியத்துக்குச்சாதனமானவேறுவில்லைக்கையிலெடுத்துக்கோபங்கொண்டு பீஷ்மருடையஉயிரைக் காப்பாற்றஎண்ணி மிக்கஉத்ஸாஹத்துடன் கூர்மையுள்ளபத்துப்பாணங்களால் மாத்ரீபுத்திரனை மார்பிலடித்தார். மஹாராஜரே! அவ்வாறே பாண்டவனும் கோபங்கொண்டு பீஷ்மரைக்கொல்லும்விருப்பத்தினால் கோபமுள்ளகிருபரை மார்பிலடித்தான். அவ்விருவருக்கும் கோரரூபமுள்ளதும் பயங்கரமுமானயுத்தம் நடந்தது. சத்துருக்களைத்தபிக்கச்செய்கின்றவனும் கோபமுள்ளவனுமான விகர்ணன் யுத்தத்தில் மகாபலசாலியான பீஷ்மரைப் பாதுகாத்துக்கொண்டு அறுபதுபாணங்களாலே நகுலனை அடித்தான். நகுலனும் புத்திசாலியும்உம்முடையபுத்திரனுமானவிகர்ணனாலே மிகவும்அடிக்கப்பட்டு அவனை எழுபத்தேழுபாணங்களால் பிளந்தான். சத்துருக்களைத்தபிக்கச்செய்கின்றவர்களும் வீரர்களும் நரசிரேஷ்டர்களுமான அவ்விருவரும் பசுக்கொட்டிலில் இரண்டுகாளைகள்போலப் பீஷ்

மர்நிமித்தமாக ஒருவரைஒருவர் அடித்துக்கொண்டார்கள். பராக்கிரம சாலியான துர்முகன் போரில் உம்முடையசேனையை நாசம்செய்து கொண்டு ஸஞ்சரிக்கின்ற கடோத்கசனை ரணகளத்தில் பீஷ்மருக்காக எதிர்த்தான். கடோத்கசனோ கோபமுள்ளவனாகி யுத்தத்தில் பகை வர்களைவாட்டும்தன்மையுடைய துர்முகனைப் படிந்தகணுக்களுள்ள ஓரம்பினால் மார்பில் அடித்தான். வீரனான துர்முகன் உத்ஸாகத் துடன் கர்ஜித்துக்கொண்டு யுத்தமுனையில் கூர்மையுள்ள அறுபது அம்புகளாலே அவனை அடித்தான். அவ்வாறே பீஷ்மரின்வதத்தைக் கருதி வந்துகொண்டிருக்கின்ற ரதிகசிரேஷ்டனான திருஷ்டத்யும்னனை மகாரதனான கிருதவர்மா எதிர்த்தான். அவன் திருஷ்டத்யும்னனை இரும்புமயமான ஐந்துபாணங்களாலடித்து மறுபடியும்ஐம்பதுபாணங் களால் விரைவாகஅடித்து, 'நில், நில்' என்றும் சொன்னான். ராஜரே! மிக்கபாகுபலமுள்ள ஹார்த்திக்கியன் அந்தமகாரதனான பார்ஷதனை அடித்தான். பார்ஷதனும் தீட்டப்பட்டவைகளும் கூர்மையுள்ளவை களும் கழுகிறகுகள்பூண்டவைகளும் லக்ஷ்யத்தில் நேராகத்தாக்குகின் றவைகளுமான ஒன்பதுபாணங்களாலே அந்தஹார்த்திக்யனை அடித் தான். விருத்திரனும்மகேந்திரனுமாகியவிருவருக்கும் யுத்தம்நேர்ந்தது போலப் பீஷ்மர்நிமித்தமாக மஹாயுத்தத்தில் அவ்விருவருக்கும் ஒரு வரையொருவர் வெல்வதில்நோக்கமுள்ள போர் நடந்தது. மகாரதரான பீஷ்மரைக்குறித்து, அவ்வாறுஎதிர்த்துவருகின்ற பீமஸேனனைப் பூரிஶ்ரவஸ் விரைவாகஎதிர்த்து, 'நில்; நில்' என்றுசொன்னான். பிறகு ஸோமதத்தகுமாரன் மிக்ககூர்மையுள்ளதும் பொற்கணுக்களுள்ளது மான ஒரு நாராசத்தினாலே யுத்தத்தில் பீமனை நடுமார்பிலடித்தான். ராஜசிரேஷ்டரே! மார்பில்தைத்திருக்கின்ற அந்தநாராசத்தினாலே பிர தாபசாலியான பீமஸேனன், முற்காலத்தில் ஸுப்ரம்மண்யருடைய சக்தியாயுதத்தினால் தைக்கப்பட்ட கிரௌஞ்சபர்வதம்போல விளங் கினான். சிற்பியினால் நன்றாகச்சாணைபிடிக்கப்பட்டிருக்கின்றவைகளும் சூரியன்போல் ஜ்வலிக்கின்றவைகளுமான அந்தஅம்புகளை நரசிரேஷ் டர்களான அவ்விருவரும் கோபங்கொண்டு யுத்தகளத்தில் ஒருவர்மீ தொருவர் தொடுத்தனர். பீமன் பீஷ்மரைக்கொல்வதில் விருப்பங் கொண்டு மகாரதனானஸௌமதத்தியை அடித்தான். அவ்வாறே ஸௌமதத்தியும் பீஷ்மருடையவிஜயத்தில் ஆசைகொண்டு பீமனை யடித்தான். அவ்விருவரும் செய்ததற்குப்பிரதிசெய்வதில் முயற்சி யுள்ளவர்களாகி யுத்தரங்கத்தில் போர்புரிந்தார்கள். பெரியஸேனையி னால் சூழப்பட்டவரும் பீஷ்மருக்குஎதிராகவருகின்றவரும் குந்திபுத் திரருமானயுதிஷ்டிரரைப் பாரத்வாஜர் தடுத்தார். மேகத்தினிடிமுழக்

கத்திற்குழப்பான துரோணருடையதேரின்சப்தத்தைக்கேட்டுப் பிர பத்திரகர்கள் நடுங்கினார்கள். ராஜரே! யுத்தரங்கத்தில் பாண்டுபுத்திரனுடையபெரியசேனையானது முயற்சியுள்ளதாயிருந்தும் துரோணரால் தடுக்கப்பட்டுஅடியினின்று அடிபெயர்த்துவைத்து நகர்வதற்குக்கூடச் சக்தியற்றதாயிற்று. ஜனநாதரே! பீஷ்மரைக்குறித்துப் போர்புரிவதில் முயற்சியுடையவனும் அதிககோபமுள்ளவனுமான சேகிதானனை உமதுபுத்திரனானசித்திரஸேனன் தடுத்தான். பாரதரே! பீஷ்மருக்காகக் கொடும்போர்புரிகிற சித்திரஸேனன் சேகிதானனை அதிக வல்லமையுடன் எதிர்த்துப் போர்புரிந்தான். அவ்வாறே சேகிதானனும் சித்திரஸேனனை எதிர்த்துப் போர்புரிந்தான். அவ்விருவருக்கும் அந்தஎதிர்ப்பில் மிக்க பெரியபோர் நடந்தது. பாரதரே! அந்த யுத்தகளத்தில் அர்ஜுனன் பலவாறாகத்தடுக்கப்பட்டும் உம்முடைய புதல்வனைப் புறங்காட்டியோடும்படி அடித்து உம்முடையசேனையையும் அடித்தான். பாரதரே! 'இந்தஅர்ஜுனன் நம்முடையபீஷ்மரை எவ்விதத்தாலாவது கொல்லாமலிருக்கவேண்டும்' என்று நிச்சயித்துத் துச்சாஸனனும் அதிகவல்லமையுடன் பார்த்தனைத்தடுத்தான். பாரதரே! யுத்தத்தில் வதஞ்செய்யப்படுகின்ற உம்முடையபுத்திரனின் ஸேனையானது சிரேஷ்டர்களான ரதிகர்களாலே ஆங்காங்கு கலக்கப்பட்டது.

---

## நூற்றுப்பன்னிரண்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(துரோணர் அஸ்வத்தாமாவுக்குத் துர்நிமித்தங்களைக்காட்டிப் போருக்குச்செல்லக் கட்டளையிட்டது.)

பிறகு, வீர்யமுடையவரும் பெரியவில்லைக்கையிற்பிடித்தவரும் மதயானையைப்போன்ற வலிமையுடையவரும் மிக்கபலசாலியும் சுபாசுபஸூசகங்களான சகுனபலன்களையறிந்தவரும் பராக்கிரமசாலியும் நரசிரேஷ்டருமானதுரோணர் மதங்கொண்டயானைகளைக்கூடத் தடுக்குந்திறமையுள்ள பெரியவில்லைக் கையிலெடுத்து நாணொலியிடும்படி செய்துகொண்டும் பாண்டவர்களுடையசேனையை ஓடும்படிசெய்துகொண்டும் அச்சேனையில்பிரவேசித்து நான்குபுறங்களிலும் நேர்ந்துள்ள துர்நிமித்தங்களைக்கண்டு சத்துருஸைனியங்களைத் தபிக்கும்படிசெய்கின்ற தம்புத்திரரான அஸ்வத்தாமாவைப்பார்த்துப் பின்வருமாறு வசனிக்கலானார்.

துரோணர், 'அப்பா! மகாபலசாலியானபார்த்தன் பீஷ்மரைக் கொல்லவேண்டுமென்று அதிகமுயற்சியையுத்தத்தில்செய்யும்நாள் இதுவே. எனது அம்புகள் மேல்நோக்குகின்றன. வில் துடிக்கிறதுபோலிருக்கிறது. [1]அஸ்திரங்கள் என்கட்டளைக்குக்கீழ்ப்படிய விரும்பவில்லை. என்மனம் க்ரூரமாயிருக்கிறது. மிருகங்களும் பக்ஷிகளும் ஓயாமல் திக்குகளில் பயங்கரமாகக் கத்துகின்றன. பரதகுலத்தில்பிறந்த வீரர்களுடையஸேனையிருக்குமிடத்தில் கழுகுகள் தாழ்ந்துபறந்து உட்காருகின்றன. சூரியன் ஒளியிழந்தவன்போலக் காணப்படுகிறான். திக்குக்கள் நான்குபக்கங்களிலும் சிவந்திருக்கின்றன. பூமி அலறுகிறது; துன்பமடைகிறது; நான்குபக்கங்களிலும் நடுங்குகிறதுபோல்இருக்கின்றது. [2]கங்கங்களும் க்ருத்ரங்களும் கொக்குக்களும் அடிக்கடி கத்துகின்றன. அமங்களகரமானவைகளும் கொடிய உருவமுள்ளவைகளுமான நரிகள் ஊளையிட்டுக்கொண்டு மிகுந்தபயத்தைஉணர்த்துகின்றன. பெரியஉற்கையானது சூரியமண்டலத்தின் மத்தியத்தினின்று கீழேவிழுந்தது. கவந்தத்துடன்கூடின [3]பரிகமானது சூரியனைச் சூழ்ந்துகொண்டிருக்கிறது. அவ்வாறே கோரமான பரிவேஷமானது அரசர்களுடையதேகங்களுக்கு நாசம்உண்டாகக் கூடிய கோரமானபயத்தைத் தெரிவித்துக்கொண்டு சந்திரசூரியமண்டலங்களைச்சுற்றித் தோன்றியுளது. குருராஜனுடைய தேவாலயங்களிலுள்ளதேவதைகள் நடுங்குகின்றன; சிரிக்கின்றன; கூத்தாடுகின்றன; அழுகின்றன. ஜ்யோதிர்க்கிரகங்கள் துர்லக்ஷணங்களுடன் கூடின சூரியனை இடமாகச்சுற்றுகின்றன. [4]பகவானானசந்திரனும் தலைகீழாக உதயமாகிறான். அரசர்களுடையசரீரங்களைக் காந்திகளையிழந்தவையாகவுங்காண்கிறேன். தார்த்தராஷ்டிரனுடையஸைனியங்களில் கவசமணிந்தவீரர்கள் பிரகாசிக்கவில்லை. இரண்டுஸைனியங்களுக்கும் நாலுபக்கங்களிலும் பெரியபாஞ்சஜன்யத்தின்ஒலியும் காண்டீவத்தின்ஒலியும் கேட்கப்படுகின்றன. அர்ஜுனன் யுத்தத்தில் நிச்சயமாகச் சிறந்தஅஸ்திரங்களைப் பிரயோகித்து மற்றயுத்தவீரர்களை விலக்கிக்கொண்டு பீஷ்மரை எதிர்க்கப்போகிறான். தோள்வலியுள்ளவனே! பீஷ்மர் அர்ஜுனன் இருவருக்கும் நேரக்கூடிய மகாயுத்தத்தை நினைத்து மயிர்க்கால்கள் சிலிர்க்கின்றன. என்மனம் வாட்டமடைகிறதுபோலிருக்கிறது. இச்சமயத்தில் பார்த்தன் வஞ்சனையில்

[1] 'அஸ்திரங்கள் ஞாபகத்திற்குவரவில்லை' என்றும் கொள்ளலாம்.

[2] கழுகின்வகைகள்.

[3] சூரியனைச்சுற்றி இருக்கும் ஒருவட்டமான ரேகை.

[4] ஒளியுள்ளவன் - ஸ்ரீயுள்ளவன்.

வல்லவனும் பாவபுத்தியுள்ளவனுமான சிகண்டியை யுத்தத்தில் முன்னிட்டுக்கொண்டு பீஷ்மரின்முன்னிலையில் யுத்தபூமியைநாடிவிட்டான். முன்பே பீஷ்மர், 'நான் சிகண்டியைக் கொல்லமாட்டேன். ஏனெனில், பிரம்மதேவரால் இவன் ஸ்திரீயாகப் பிறப்பிக்கப்பட்டவன். பிறகு தெய்வச்செயலால் மீண்டும் புருஷனானவன்' என்று உரைத்திருக்கிறார். மகாபலசாலியானசிகண்டியானவன் பீஷ்மரால்மதிக்கப்படாத கொடியுள்ளவன். அமங்களஸ்வரூபியான அவன்மீது பீஷ்மர் (ஆயுதமெடுத்து) அடிக்கமாட்டார். இதை ஆலோசிக்கின்ற என்னுடைய அறிவானது மிகவும் தளர்ச்சியடைகிறது. பார்த்தனும் போரில் முயற்சிகொண்டு கௌரவர்களுள்பெரியவரான பீஷ்மரைக்குறித்து அருகில்வந்துவிட்டான். யுதிஷ்டிரருடைய குரோதமும் அர்ஜுனனோடு யுத்தத்திற்காகப் பீஷ்மர் எதிர்த்திருப்பதும் என்னுடைய அஸ்திரப்ரயோகஆரம்பமும் நிச்சயமாகவே பிரஜைகளுக்கு அமங்களகரமானவை. பாண்டவன் மனவுறுதியுள்ளவன்; சிலாக்கியமான பலமுடையவன்; சூரன்; அஸ்திரங்களை நன்கு கற்றறிந்தவன்; அஸாத்தியமான விக்கிரமமுள்ளவன்; வெகுதூரத்திலிருந்தே லக்ஷ்யத்தை அடிக்கும் ஸ்வபாவமுடையவன்; திடமானபாணங்களையுடையவன்; நிமித்தங்களையறிந்தவன்; யுத்தத்தில் இந்திரனுடன்கூடின தேவர்களாலும் ஜயிக்கமுடியாதவன்; சிறந்தபலசாலி; புத்திமான்; கிலேசங்களை ஸஹிக்கும்திறமையுள்ளவன்; யுத்தம்செய்யும்வீரர்களுள் உத்தமன்; எப்பொழுதும் யுத்தத்தில் விஜயமடைகிறவன்; பயங்கரமான அஸ்திரங்களையுடையவன். விரதம்தவறாதவனே! யுத்தத்தில் பகைவர்களை எதிர்த்துவருகின்றவனும் பயங்கரமானஅஸ்திரங்களையுடையவனுமான அர்ஜுனனை நீ கண்டு அவன்வருவழியைவிட்டுவிலகி யுத்தத்துக்குச்செல். மகாகோரமானயுத்தத்தில் இப்பொழுதுநேர்ந்துள்ள பெரிதானஇந்தக்கஷ்டத்தைப்பார். மிக்ககோபங்கொண்ட அர்ஜுனனாலே பொன்னால் சித்ரவேலைசெய்யப்பட்டவைகளும் மகிமைபொருந்தியவைகளும் மங்களகரமானவைகளுமான சூரர்களுடைய கவசங்கள் கணுக்கள்படிந்த பாணங்களால் பிளக்கப்படுகின்றன. த்வஜங்களுடையநுனிகளும் தோமரங்களும் விற்களும் வெட்டப்படுகின்றன. மேலும் பளபளப்புள்ளவைகளும் கூர்மையுள்ளவைகளுமானஈட்டிகளும் பொன்னால்மிகவிளங்குகின்ற சக்திகளும் யானைகளினுடையகொடிகளும் நாசம்பண்ணப்படுகின்றன. புத்திர! வேலைக்காரர்கள் பிராணன்களைக்காப்பாற்றுவதற்கு இதுஸமயமன்று. ஸ்வர்க்கத்தைமுன்னிட்டுக்கொண்டு புகழ்ச்சியின்பொருட்டும் ஜயத்தின்பொருட்டும்செல். இந்த அர்ஜுனன், தேர்களும் யானைகளும் குதி

ரைகளுமாகிறநீர்ச்சுழலுள்ளதும், மகாகோரமானதும், எவ்விதத்தாலும் தாண்டமுடியாததுமான யுத்தநதியை ஒருதேரின்உதவியினால் தாண்டுகிறான். யுதிஷ்டிரனிடத்திலேமேய பிராம்மணப்ரீதியும் இந்திரியநிக்ரகமும் கொடையும் தவமும் மங்கைதங்கியநடக்கையும் காணப்படுகின்றன. அர்ஜுனனையும் பலவானனபீமஸேனனையும் மாத்ரீபுத்ரர்களானநகுலஸஹதேவர்களையும் உடன்பிறந்தவர்களாகக்கொண்டவனும் விருஷ்ணிகுலத்தில்தோன்றின வாஸுதேவரை நிலைத்தநாதராகவுடையவனும் தவத்தினால் பரிசுத்தமானதேகமுள்ளவனுமான அந்தத்தர்மபுத்திரனுடைய துக்கத்தினால்உண்டானகோபமானது துர்ப்புத்தியுள்ளதுரியோதனனுடைய சேனையை எரிக்கிறது. இதோ பார்த்தன் வாஸுதேவரை ஆதாரமாகக்கொண்டு தார்த்தராஷ்டிரனுடையஸேனைகளனைத்தையும் எல்லாப்பக்கங்களிலும் பிளக்கிறவனாகக் காணப்படுகிறான். பேரலைகளுள்ள மிகப்பெரிய கடலானது திமிங்கலத்தினால் கலக்கப்படுவதுபோல இந்தக்கௌரவஸைனியம் இதோ கிரீடியினால் கலக்கப்படுவதாகக் காணப்படுகிறது. கூகூசப்தங்களும், கிலகிலாசப்தங்களும் ஸேனாமுகத்தில் கேட்கப்படுகின்றன. நீ பாஞ்சாலபுத்திரனைக்குறித்துச் செல். நான் யுதிஷ்டிரனைக்குறித்துச் செல்லப்போகிறேன். நாற்புறங்களிலும் இருக்கிற அதிரதர்களாலே சூழப்பட்டதும் நடுக்கடல்போன்றதுமான அளவற்றதேஜஸுள்ளதர்மபுத்திரனுடையவ்யூகமத்தியமானது ஒருவராலும் நாடமுடியாதது. ஸாத்யகி, அபிமன்யு, திருஷ்டத்யும்னன், விருகோதரன், நகுலஸஹதேவர்கள் ஆகியஇவர்கள் பிரஜைகளுக்குநாதனான தர்மபுத்ரனைப் பாதுகாத்துக்கொண்டிருக்கிறார்கள். கிருஷ்ணன்போலக் கறுத்தநிறமுடையவனும் பெரியஸாலவிருக்ஷம்போல உன்னதமாயிருக்கின்றவனுமான இந்தத்திருஷ்டத்யும்னன் இரண்டாவது அர்ஜுனனைப்போல ஸேனாமுகத்தில் ஸஞ்சரிக்கிறான். பெரியவில்லைக்கையிலெடுத்து உத்தமமான அஸ்திரங்களைப்பூட்டி த்ருஷ்டத்யும்னனைக்குறித்துச் செல். அரசனையும் விருகோதரனையும் எதிர்த்து நீ சண்டைசெய்வாயாக. எவன்தான் பிரியனானதன்புதல்வன் அநேகவர்ஷகாலம்ஜீவித்திருக்க விரும்பமாட்டான்? ஆயினும் நான் க்ஷத்திரியதர்மத்தை நன்றாகப்பார்த்து உன்னை ஏவுகிறேன். ஐயனே! யுத்தங்களில் யமனுக்கும் வருணனுக்கும் ஸமானரான இந்தப்பீஷ்மர் மஹாயுத்தத்தில் இதோ பாண்டவர்களுடைய பெருஞ்சேனையை எரிக்கிறார்' என்றுகூறினார். மஹாராஜரே! பிரதாபசாலியான த்ரோணர் தம்புத்திரரைப்பார்த்து இவ்வாறு கட்டளையிட்டு அம்மஹாயுத்தத்தில் தர்மராஜருடன் போர்புரிந்தார்.

---

## நூற்றுப்பதின்மூன்றாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீமஸேனனது பராக்ரமவர்ணனை.)

அரசரே! பகதத்தன், கிருபர், சல்யன், கிருதவர்மா, அவந்தி தேசராஜர்களான விந்தாநுவிந்தர்கள், ஸிந்துதேசாதிபதியான ஜயத்ரதன், சித்ரஸேனன், விகர்ணன், யௌவனமுள்ளவனான துர்மர்ஷணன் ஆகிய உம்மைச்சேர்ந்தவர்களான இந்தப்பத்துயுத்தவீரர்கள் பற்பல தேசங்களினின்றுவந்திருக்கின்ற பெரியஸேனையுடன் யுத்தத்தில் பீஷ்மருக்கு மிக்ககீர்த்தியைவிரும்பிப் பீமஸேனனுடன் போர்புரிந்தனர். சல்யனோ பீமஸேனனை ஒன்பதுபாணங்களால் அடித்தான். கிருதவர்மாவும் கிருபரும் மூன்றுபாணங்களாலும் ஒன்பதுபாணங்களாலும் பீமனையடித்தார்கள். சித்ரஸேனனும் விகர்ணனும் பகதத்தனும் பீமஸேனனைப் பப்பத்துப்பாணங்களால் அடித்தார்கள். ஸைந்தவன் பீமஸேனனை மூன்றுபாணங்களால் அடித்தான்; அவந்திதேசாதிபதிகளானவிந்தாநுவிந்தர்கள் ஐவைந்துபாணங்களால் அடித்தார்கள். துர்மர்ஷணனோ கூர்மையுள்ளஇருபதுபாணங்களால் பாண்டவனை அடித்தான். மகாராஜரே! வீரனும் சத்துருவீரர்களைக்கொல்லுகின்றவனுமான அந்தப்பாண்டவன் தனித்தனியாகப்பிரகாசிக்கின்றவர்களும் எல்லாவுலகங்களிலுமுள்ளவீரர்களைக்காட்டிலும்உத்தமர்களும் மகாரதர்களுமான அந்தக்கௌரவர்களனைவரையும் யுத்தத்தில் அடித்தான். பாரதரே! பீமன் சல்யனை எழுபாணங்களாலும் கிருதவர்மாவை எட்டுப்பாணங்களாலும் அடித்துப் பின் கிருபருடைய அம்புடன்கூடின வில்லை நடுவில் துண்டாக்கினான்; பிறகு அறுக்கப்பட்டவில்லையுடைய இந்தக்கிருபரை மறுபடியும் எழுபாணங்களால் அடித்தான்; அவ்வாறே விந்தனையும் அநுவிந்தனையும் மும்மூன்றுபாணங்களால் அடித்தான்; துர்மர்ஷணனையும் சித்ரஸேனனையும் முறையேஇருபதுபாணங்களாலும் ஐந்துபாணங்களாலும் அடித்தான்; விகர்ணனையும் ஜயத்ரதனையும் முறையேபத்துப்பாணங்களாலும் ஐந்துபாணங்களாலும் அடித்தான். பீமன் மறுபடியும் ஸைந்தவனை மூன்றுபாணங்களால்அடித்து மகிழ்ச்சியோடு கர்ஜித்தான். ரதிகர்களுள்உத்தமரானகௌதமர் பிறகு வேறுவில்லைக்கையிலெடுத்துப் பரபரப்புடன் கூர்மையுள்ளபத்துப்பாணங்களால் பீமனை அடித்தார். மகாராஜரே! வேணுகம்என்கிறஆயுதங்களால் பெரியயானை அடிக்கப்படுவதுபோலப் பத்துப்பாணங்களால் அடிக்கப்பட்ட பிரதாபசாலியானபீமன் பிறகு கோபங்கொண்டு யுத்

தத்தில் அனேகபாணங்களால் கிருபரையடித்தான். காலனுக்கும் அந்
தகனுக்கும் ஒப்பானகாந்தியுள்ள பீமஸேனன் அவ்விதமாகவே ஸைந்
தவனுடையகுதிரைகளையும் அவனதுஸாரதியையும் மூன்றுபாணங்
களால் அடித்து யமலோகத்திற்கு அனுப்பினான். மகாரதனானஸைந்த
வன் குதிரைகள்கொல்லப்பட்டரதத்தினின்று விரைவாகக்குதித்துப்
பீமஸேனன்மீது கூர்மையுள்ளபாணங்களைப் பிரயோகஞ்செய்தான்.
பீமன் மிக்கபலசாலியானஸைந்தவனுடையவில்லை இரண்டுபல்லங்க
ளாலே நடுவில்துண்டாக்கினான். வேந்தரே! அறுக்கப்பட்டவில்லை
யுடையவனும் ரதத்தையிழந்தவனும் குதிரைகள்கொல்லப்பட்டவ
னும் ஸாரதியையிழந்தவனுமான அந்தஜயத்ரதன் விரைவாகச் சித்ர
ஸேனனதுரதத்தின்மீதேறினான். அந்தயுத்தத்தில் பாண்டவன் அத்
யாச்சரியகரமானகாரியத்தைச் செய்தான். பீமன் எல்லாஜனங்களும்
பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மகாரதர்களைப் பாணங்களால்
அடித்தும் தடுத்தும் ஸைந்தவனை ரதத்தையிழந்தவனாகச்செய்தான்.
அப்பொழுது சல்யன் பீமஸேனனுடைய வீரச்செய்கையைப்பொரு
மல் சிற்பியினாலேநன்றாகச்சாணைபிடிக்கப்பட்டவைகளும் மிக்ககூர்மை
யுள்ளவைகளுமான அம்புகளை வில்லிற்பூட்டி யுத்தத்தில் பீமனையடித்
தான்; 'நில்; நில்' என்றும் சொன்னான். சத்துருக்களைத்தண்டிக்குந்திற
மையுள்ளவர்களான கிருபர், கிருதவர்மா, வீர்யசாலியானபகதத்தன்,
அவந்திதேசத்தரசர்களான விந்தானுவிந்தர்கள், சித்ரஸேனன், துர்மர்
ஷணன், விகர்ணன், வீரியசாலியானஸிந்துராஜன் இவர்கள் சல்யனைக்
காக்கும்பொருட்டுப் பீமனை விரைவாகஅடித்தார்கள். அந்தப்பீமனும்
அவர்களை ஐவைந்துபாணங்களாலடித்துச் சல்யனை எழுபதுபாணங்க
ளாலும் மறுபடியும் பத்துப்பாணங்களாலும் அடித்தான். சல்யன் அந்
தப்பீமனை ஒன்பதுபாணங்களால்அடித்து மறுபடியும் ஐந்துபாணங்க
ளால்அடித்து அவனுடையஸாரதியைப் பல்லத்தினாலே மர்மஸ்தானத்
தில் திடமாகஅடித்தான். பிரதாபசாலியானபீமஸேனன், விசோகன்
(பாணங்களால்) பிளக்கப்பட்டிருப்பதைக்கண்டு மத்திரராஜனுடைய
இரண்டுகைகளிலும் மார்பிலும் மூன்றுபாணங்களைப் பிரயோகித்
தான். அவ்வாறே மற்றப்பெரியவில்லாளிகளையும் மும்மூன்றுபாணங்
களாலடித்து ஸிம்மம்போலக் கர்ஜித்தான். யுத்தத்தில்முயற்சியுடைய
வர்களும் மகாவில்லாளிகளுமான அந்தக்கௌரவவீரர்கள் யுத்தத்தில்
ஸமர்த்தனானபாண்டவனை முனைமழுங்காதமும்மூன்றுபாணங்களாலே
மர்மஸ்தானங்களில் நன்றாகஅடித்தார்கள். சிறந்தவில்லாளியானஅந்
தப்பீமஸேனன் நன்றாகஅடிக்கப்பட்டும் வர்ஷிக்கின்றமேகங்களால்
(விடப்பட்ட) ஜலதாரைகளாலே மலையானது துன்பமுறாததுபோலத்

துன்பமுறவில்லை. அரசரே! பாண்டவர்களுள்மகாரதனும் மிக்க கீர்த்தியுள்ளவனுமானபீமஸேனன் கோபமீறி மத்ரராஜனை மூன்று பாணங்களாலும் கிருபரை ஒன்பதுபாணங்களாலும் நான்குபக்கங் களிலும் மிகுதியாக அடித்துப் பிராக்ஜ்யோதிஷதேசத்தரசனை நூறு பாணங்களால் யுத்தத்தில் அடித்தான்; பிறகு அதிசஹஸ்தலாகவமுள் ளவன்போல மகாபலசாலியானகிருதவர்மாவினுடைய அம்புடன் கூடினவில்லை மிக்ககூர்மையுள்ளக்ஷுராப்ரத்தினலே அறுத்தான். பகைவர்களை வாட்டுகிறவனுனகிருதவர்மா அப்படிப்பட்டவேறுவில் லைக்கையிலெடுத்து விருகோதரனை இரண்டுபுருவங்களினிடையில் நா ராசத்தால் அடித்தான். பீமனே யுத்தத்தில் சல்யனை ஒன்பதுபாணங் களால்அடித்துப் பகதத்தனை மூன்றுபாணங்களாலும் கிருதவர்மாவை எட்டுப்பாணங்களாலும் கௌதமர்முதலானரதிகர்களை இரண்டிரண்டு பாணங்களாலும் அடித்தான். அவர்களும் அந்தப்பீமனை யுத்தத்தில் கூர்மையுள்ளபாணங்களால் அடித்தார்கள். மகாரதர்களால் எல்லாஆயு தங்களாலும் அவ்வாறுபீடிக்கப்பட்டும் அந்தப்பீமன் துன்பமற்றவ னுக ஸமானர்களானஅவர்களைத் துரும்புபோலஎண்ணிஸஞ்சரித்தான். ரதிகர்களுள்சிரேஷ்டர்களானஅந்தவீரர்களும் மனக்கவலையற்றவர்க ளாகப் பீமன்மீது நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகம்செய்தார்கள். அறிவிற்சிறந்தவரே! மகாரத னும் வீரனுமானபகதத்தன் மிக்கவேகமுள்ளதும் பொற்காம்புள்ளது மான சக்தியாயுதத்தை அந்தப்பீமன்மீது யுத்தத்தில் பிரயோகித்தான். மகாபாகுபலமுள்ளஸைந்தவன் தோமரத்தையும் பட்டஸத்தையும் பீமன்மீது பிரயோகித்தான். அரசரே! யுத்தத்தில் கிருபரும் சல்ய னும் முறையே சதக்னியையும் ஒருபாணத்தையும் பீமன்மீது பிர யோகித்தார்கள். பிறகு மற்றச்சிறந்தவில்லாளிகள் பீமஸேனனைக் குறித்துப் பராக்ரமத்தினல் ஐந்துஐந்துபாணங்களைப் பிரயோகித்தார் கள். வாயுபுத்திரனுனபீமன் தோமரத்தை க்ஷுரப்ரத்தினல் இரண் டாகவெட்டினன். பட்டஸத்தை மூன்றுபாணங்களாலே எள்ளுச்செடி யின் அடிக்கட்டையைவெட்டியெறிவதுபோல் வெட்டியெறிந்தான். மகாரதனுனஅந்தப்பீமன் கழுகிறகுகள்கட்டப்பெற்ற ஒன்பதுபாணங் களாலே சதக்னியைத்துண்டித்து மத்ரராஜன்தொடுத்த பாணத்தையு மறுத்து யுத்தத்தில்பகதத்தன்விடுத்த சக்தியையும் விரைவாக அறுத் தான். யுத்தத்தில்புகழ்சிபெற்றபீமஸேனனும் கோரமானமற்றப் பா ணங்களைக் கணுக்கள்படிவாயுள்ள அம்புகளாலே ஒவ்வொன்றையும் மும்மூன்றுகத் துண்டாக்கினன். பிறகு சிறந்தவில்லாளிகளான அவர் கள் அனைவரையும் மும்மூன்றுபாணங்களால் அடித்தான். பிறகு அம்

மகாயுத்தம்நடக்கையில் அர்ஜுனன் மகாரதனும் யுத்தத்தில்சத்துருக்களை நாசம்செய்கின்றவனும் அம்புகளால் போர்புரிகின்றவனுமானபீமனைக்கண்டு ரதத்தோடு அந்தயுத்தரங்கத்துக்கு வந்தான். அந்தயுத்தகளத்தில் ஒன்றுகூடியவர்களும் மகாபலசாலிகளுமான அந்தப்பாண்டவர்களிருவரையுங்கண்டு உம்மைச்சேர்ந்தபுருஷசிரேஷ்டர்கள் ஜயத்தில் ஆசைவைக்கவில்லை. பாரதரே! பிறகு, பீஷ்மரைக்கொல்லவிரும்பிய அர்ஜுனன் சிகண்டியை முன்னிட்டுக்கொண்டு ரணகளத்தில் மகாரதர்களோடுபோர்புரிகின்றபீமனை அடைந்து உம்மைச்சேர்ந்தபத்து வீரர்களை யுத்தத்தில்எதிர்த்தான். வேந்தரே! ரணகளத்தில் பீமனை எதிர்த்துப்போர்புரிந்துகொண்டுநின்றவர்களை அர்ஜுனன் பீமனுக்குப்பிரியத்தைச்செய்யக்கருதி அடித்தான். பிறகு துரியோதனராஜன் சுசர்மாவைப்பார்த்து, 'நீ ஸேனாஸமூகங்களாலே எல்லாப்பக்கங்களிலும்சூழப்பெற்று அர்ஜுனனையும் பீமஸேனனையும் கொல்வதின்பொருட்டு விரைவாகச்செல். பாண்டுபுத்திரர்களான இந்தஅர்ஜுனனையும் பீமனையும்கொல்' என்று தூண்டினான். துர்யோதனனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு, திரிகர்த்ததேசத்திற்கும் பிரஸ்தலதேசத்திற்குந்தலைவனானசுசர்மா வில்லாளிகளானபீமார்ஜுனர்களைக்குறித்து யுத்தத்தில் எதிர்த்து விரைவாகஓடி அநேகஆயிரம் ரதங்களால் நாற்புறங்களிலும் அவர்களைச் சூழ்ந்துகொண்டான். பிறகு அர்ஜுனனுக்குப் பகைவர்களுடன் பெரும்போர் நடந்தது.

---

## நூற்றுப்பதினொன்காவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீமார்ஜுனர்களுடைய பராக்கிரமவர்ணனை.)

அரசரே! அர்ஜுனனே யுத்தத்தில்முயற்சியுடையவனும் மகாரதனுமானசல்யனைப் படிந்தகணுக்களுள்ள அம்புகளால் [1] மூடினான். ராஜேந்திரரே! அர்ஜுனன் ஸுசர்மாவையும் கிருபரையும் மும்மூன்று பாணங்களால் அடித்தான். பிராக்ஜ்யோதிஷதேசத்தரசன், ஸிந்துராஜனானஜயத்ரதன், சித்ரஸேனன், விகர்ணன், கிருதவர்மா, துர்மர்ஷணன், மகாரதர்களான அவந்திதேசத்துவீரர்கள் ஆகியஇவர்கள் ஒவ்வொருவரையும் கழுகிறகுகள்கட்டினமும்மூன்றுபாணங்களால் யுத்தத்தில் அடித்தான். பாரதரே! சித்திரஸேனனது ரதத்திலிருப்ப

---

[1] 'ஸமரே' என்பது விடப்பட்டது.

வனும் அதிரதனுமானஜயத்ரதன் அம்புகளாலே பாண்டவனுடைய சேனையை யுத்தத்தில்பீடித்துப் பாணங்களாலே அர்ஜுனனையும்அடித்து வேகத்துடன் பீமனையுமடித்தான். மகாராஜரே! சல்யனும் ரதிகர்களுள்உத்தமமான கிருபரும், பலவாறு மர்மஸ்தானங்களைப் பிளக்கின்றபாணங்களாலே அர்ஜுனனை யுத்தத்தில் துன்பமடையச்செய்தார்கள். சித்ரஸேனன்முதலான உம்முடையகுமாரர்கள் யுத்தத்தில் அர்ஜுனனையும் பீமஸேனனையும் கூர்மையுள்ள ஐவைந்துபாணங்களால் விரைந்து அடித்தார்கள். ரதிகர்களுள்சிறந்தவர்களும் பரதசிரேஷ்டர்களுமான குந்தியின்குமாரர்கள் திரிகர்த்தர்களுடையபெரிய படையை யுத்தத்தில் மிகவருத்தினார்கள். ஸுசர்மாவும் ரணகளத்தில் விரைவாகச்செல்லுகின்ற ஒன்பதுபாணங்களால் பார்த்தனையடித்து அவனுடையபெரும்படையை நடுங்கும்படிசெய்துகொண்டு உரக்கஸிம்மநாதம்செய்தான். சூரர்களானமற்றரதிகர்கள் பொற்கட்டுள்ளவைகளும் லக்ஷ்யத்தில்நேராகச்செல்லுகின்றவைகளும் கூர்மையுள்ளவைகளுமானபாணங்களாலே பீமஸேனனையும் தனஞ்சயனையும் அடித்தார்கள். அந்தரதிகர்களுடையமத்தியில் ரணக்கிரீடைசெய்கின்றவர்களும் ரதிகர்களுள்உதாரர்களும் பரதகுலத்தில்பிறந்தவீரர்களுள் சிறந்தவர்களுமான குந்திபுத்திரர்கள் இருவரும், மாம்ஸத்தைப்பக்ஷிக்க விருப்பங்கொண்டு பசுக்கூட்டத்தினிடையில் ஸஞ்சரிக்கின்ற மதமிஞ்சிய இரண்டுஸிம்மங்கள்போல ஆச்சரியகரமானரூபமுடையவர்களாகக் காணப்பட்டார்கள். வீரர்களானபீமன் அர்ஜுனனிருவரும் யுத்தகளத்தில் சூரர்களுடையவிற்களையும் அம்புகளையும் பலவாறுஅறுத்து அவர்களுடையதலைகளை நூறுநூறாக உருட்டினார்கள். அந்தப் பெரியபோர்க்களத்தில் அனேகரதங்கள் ஒடிக்கப்பட்டன. நூற்றுக்கணக்கானகுதிரைகள் கொல்லப்பட்டன. யானைகளும் யானைப்பாகர்களோடே பூமியில்வீழ்ந்தன. அரசரே! ஆங்காங்கு அனேகரதிகர்களும் குதிரைவீரர்களும் நாசம்பண்ணப்பட்டு எல்லாப்பக்கங்களிலும் துடிக்கிறவர்களாகக் காணப்பட்டார்கள். கொல்லப்பட்டயானைக்கூட்டங்களாலும் காலாட்படைகளின்கூட்டங்களாலும் நாசம்செய்யப்பட்டகுதிரைகளாலும் பலவாறுகஒடிக்கப்பட்டதேர்களாலும் யுத்தபூமி பரப்பப்பட்டிருந்தது. பாரதரே! பலவாறுகவெட்டித்தள்ளப்பட்ட குடைகளாலும் கீழேஅறுத்துத்தள்ளப்பட்ட கொடிமரங்களாலும் ஒடிந்துகீழேகிடக்கின்ற அங்குசங்களாலும் யானைவிரிப்புகளாலும் கேயூரங்களாலும் தோள்வளைகளாலும் முத்துமாலைகளாலும் அகைக்கப்பட்டகம்பளங்களாலும் தலைப்பாகைகளாலும் ரிஷ்டிகளாலும் சாம

ரங்களாலும் விசிறிகளாலும் ஆங்காங்கு புரட்டித்தள்ளப்பட்டவை
களும் சந்தனம்பூசப்பெற்றவைகளுமானகைகளாலும் அரசர்களுடை
யதொடைகளாலும் யுத்தபூமியானது நன்கு பரப்பப்பட்டது. மிக்க
பலசாலியானபார்த்தன் அம்புகளாலே அந்தவீரர்களைத் தடுத்துக்கொ
ன்றதாகிய அவனுடைய ஆச்சரியமானவல்லமையை அந்தயுத்தத்தில்
நாங்கள் கண்டோம். மஹாபலசாலியான உம்முடையபுத்திரனே
பீமார்ஜுனர்களுடைய பராக்கிரமத்தைக்கண்டு கங்காபுத்திரரான
பீஷ்மருடைய ரதத்தின்ஸமீபத்தை அடைந்தான். கிருபர், கிருதவர்
மா, ஸிந்துதேசாதிபதியானஜயத்ரதன், அவந்திதேசாதிபர்களான
விந்தாநுவிந்தர்கள்ஆகிய இவர்கள் அப்பொழுது யுத்தத்தைவிட்டு
விலகவில்லை. பிறகு, சிறந்தவில்லாளியானபீமனும் மகாரதனானபல்
குனனும் கௌரவர்களுடையகோரமானபடையை யுத்தத்தில் மிகவும்
ஓடும்படிசெய்தார்கள். பிறகு அரசர்கள் அர்ஜுனனதுதேரின்மீது
மயிலிறகுகள்கட்டினபாணங்களில் பதினாயிரங்களையும் லக்ஷங்களையும்
விரைவாகவிழும்படிசெய்தார்கள். பிறகு பார்த்தன் அந்தமகாரதர்
களைப் பாணக்கூட்டத்தால்தடுத்து யுத்தகளத்தில் நாலாபக்கங்களிலும்
அவர்களைமிருத்யுவினிடத்திற்கு அனுப்பினான். மகாரதனானசல்யனோ
யுத்தரங்கத்தில் விளையாடுகிறவன்போலிருந்துகொண்டு கோபமுற்றுப்
பதிந்தகணுக்களுள்ள பல்லங்களாலே அர்ஜுனனை மார்பிலடித்தான்.
பார்த்தன் அவனுடையவில்லையும் கையின்உறையையும் ஐந்துபாணங்
களால்அறுத்துக் கூர்மையுள்ளஅம்புகளாலே பிறகு அவனையும் மர்ம
ஸ்தானத்தில் அடித்தான். பிறகு மத்ரராஜன் ரோஷமுள்ளவனாகிக்
கார்யத்திற்குஸாதகமாயுள்ள வேறுவில்லைக்கையிலெடுத்து யுத்தத்தில்
அர்ஜுனனை அடித்தான். மகாராஜரே! மத்ரராஜன் அர்ஜுனனை மூன்று
பாணங்களாலும் வாஸுதேவரை ஐந்துபாணங்களாலும் பீமஸேனனை
ஒன்பதுபாணங்களாலும் இரண்டுகைகளிலும் மார்பிலும் அடித்தான்.
பிறகு, மகாரதர்களும் பாண்டுபுத்திரர்களுமான பார்த்தனும் பீமஸேன
னும் துரியோதனனுடையபெரும்படையைநாசஞ்செய்துகொண்டிரு
ந்தவிடத்திற்குத் துரோணரும் மகாரதனானமாகதனும் துர்யோதன
னால் கட்டளையிடப்பெற்று வந்தார்கள். பரதகுலத்தில்பிறந்தவர்களுள்
உத்தமரே! ஜயத்ஸேனனோ யுத்தரங்கத்தில் பயங்கரமானஆயுதத்தை
யுடையபீமனைக் கூர்மையுள்ளஎட்டுப்பாணங்களால்அடித்தான். பீமன்
அந்தஜயத்ஸேனனைப் பத்துப்பாணங்களாலும் மறுபடி ஐந்துபாணங்
களாலும் அடித்து ஒருபல்லத்தினாலே அவனுடையஸாரதியை அடித்
துத் தேர்த்தட்டினின்று கீழேவிழும்படிசெய்தான். பிறகு அரசனான

அந்தமாகதன் எல்லாச்சேனைகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே நிலைதவறி எல்லாப்பக்கங்களிலும் ஓடுகின்றகுதிரைகளோடு(போர்க்களத்தினின்றும்) விலகினன். துரோணரோ அத்தருணம்பார்த்துப் பீமஸேனனைக் கூர்மையுள்ளவைகளும் உருக்கினலானவைகளும் நுனியில்முட்களோடுகூடியவைகளுமான அறுபத்தைந்துபாணங்களாலே அடித்தார். பாரதரே! யுத்தத்தில்புகழ்பெற்றபீமன் பிதாவுக்குச்சமமானஅந்தக்குருவைப் போரில் ஐந்துபல்லங்களாலும் அவ்வாறே அறுபதுபாணங்களாலும் அடித்தான். அர்ஜுனனோ ஸுசர்மாவை அனேகபாணங்களால்அடித்து அவனுடையஸைன்யத்தைக் காற்றானது பெரியமேகங்களைச் சின்னபின்னம்செய்வதுபோலச் சின்னபின்னமாக்கினன். பிறகு பீஷ்மரும் துர்யோதனராஜனும் கோஸலதேசாதிபதியான பிருகத்பலனும் அதிககோபமுண்டு பீமஸேனன்தனஞ்சயன் இருவரையும் எதிர்த்தார்கள். அவ்வாறே சூரர்களானபாண்டவர்களும் பார்ஷதனான திருஷ்டத்யும்னனும், வாயைத்திறந்திருக்கும் யமன்போன்றபீஷ்மரை யுத்தத்தில் எதிர்த்துவந்தார்கள். சிகண்டியோ பாரதர்களுக்குப்பிதாமகரானபீஷ்மரைநாடி மகாரதரானஅவரிடத்தில் பயமின்றி மிக்கமனக்களிப்புடன் எதிர்த்துவந்தான். யுதிஷ்டிரனை முதன்மையாகக்கொண்டபார்த்தர்கள் சிகண்டியைமுன்னிட்டுக்கொண்டு எல்லாஸ்ருஞ்சயர்களுடனும் யுத்தத்தில் பீஷ்மரைஎதிர்த்துப் போர்புரிந்தார்கள். அவ்வாறே உம்மைச்சேர்ந்தவர்களனைவரும் விரதத்தினின்றுதவறாத பீஷ்மரைமுன்னிட்டுக்கொண்டு சிகண்டிமுதலானபார்த்தர்களனைவரையும் யுத்தத்தில் எதிர்த்துப் போர்புரிந்தார்கள். பிறகு, பீஷ்மருக்கு ஜயமுண்டாவதன்பொருட்டுப் பாண்டவர்களுடன் அந்தயுத்தரங்கத்தில் கௌரவர்களுக்குப் பயங்கரமானபோர் நடந்தது. அரசரே! உம்மைச்சேர்ந்தவர்களுடைய ஜயத்தில் பீஷ்மர் பந்தயமானர். யுத்தமாகிறசூதாட்டமானது, வெற்றியின்பொருட்டோ தோல்வியின்பொருட்டோ அந்தப்பீஷ்மரைச்சார்ந்திருந்தது. ராஜேந்திரரே! திருஷ்டத்யும்னனோ எல்லாச்சைனியங்களையும்பார்த்து, 'ரதிகசிரேஷ்டர்களே! நீங்கள் பயப்படாதீர்கள். கங்காபுத்திரரைஎதிர்த்துச்செல்லுங்கள்' என்று கட்டளையிட்டான். ஸேனபதியின்வார்த்தையைக்கேட்டு மகாயுத்தத்தில் பாண்டவர்களுடையசேனை பிராணனை விடத்துணிந்து பீஷ்மரைஎதிர்த்து விரைவாகச்சென்றது. மகாராஜரே! ரதிகர்களுள் சிரேஷ்டரானபீஷ்மரும் வருகின்றஅப்பெரும்படையை,பெரியகடலானது வருகின்றவெள்ளத்தையெல்லாம் ஏற்றுக்கொள்வதுபோல ஏற்றுக்கொண்டார்" என்று கூறினன்.

---

## நூற்றுப்பதினைந்தாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் போரில் வெறுப்படைந்து தன்னைக்கொல்லமுயலும்படி யுதிஷ்டிரரை ஏவியது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! சந்தனுமகாராஜருடையபுத்திரரும் மகாவீர்யசாலியுமானபீஷ்மர் பாண்டவர்களோடும் ஸ்ருஞ்சயர்களோடும் எவ்வாறு பத்தாவதுநாளில் யுத்தஞ்செய்தார்? கௌரவவீரர்களும் பாண்டவர்களை எவ்வாறு யுத்தத்தில் எதிர்த்தனர்? போரையாபரணமாகக்கொண்டபீஷ்மருடைய மகாயுத்தத்தை எனக்குச்சொல்" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பரதகுலத்தில் உதித்தவரே! கௌரவர்கள் பாண்டவர்களோடு எதிர்த்துச்சண்டைசெய்ததையும் மேலும் அந்தயுத்தம் நடந்தவகையையும் இப்பொழுது நான் (உமக்கு) உரைப்பேன். கிரீடியினாலே, ஒவ்வொருதினமும்வந்தவுடன் உம்மைச்சேர்ந்தமகாரதர்கள் உத்தமமான அஸ்திரங்களால் பரலோகத்தையடைவிக்கப்பட்டார்கள். யுத்தத்தில்ஜயத்துடன்கூடியவரும் குருகுலத்தில்பிறந்தவருமானபீஷ்மர் தாம் பிரதிஜ்ஞைபண்ணியபடி பார்த்தர்களுக்கு யுத்தத்தில் ஓய்வின்றி நாசத்தை உண்டாக்கினார். சத்துருக்களைத்தபிக்கச்செய்பவரே! கௌரவர்களுடன்சேர்ந்து போர்புரிகின்றபீஷ்மரையும் பாஞ்சாலராஜகுமாரனை சிகண்டியுடன்கூடியிருக்கின்ற அர்ஜுனனையுங்கண்டு ஜனங்கள் ஸந்தேகமடைந்தார்கள். பத்தாவதுநாளில் பீஷ்மருக்கும் அர்ஜுனனுக்கும்நேர்ந்த அந்தச்சண்டையில் யுத்தரங்கத்தில் மிகவும்பயங்கரமானஜனக்ஷயமானது ஒழிவற்றுஉண்டாயிற்று. சத்துருக்களைத்தபிக்கச்செய்கின்றவரும் உத்தமமானஅஸ்திரங்களையறிந்தவரும் சந்தனுபுத்திரருமானபீஷ்மர் அந்தப்பத்தாவதுநாள்யுத்தத்தில் பதினாயிரம்பதினாயிரமாகவும் இன்னும்அதிகமாகவும் யுத்தவீரர்களைக் கொன்றார். அரசரே! பெயர்களும் கோத்திரங்களும் அறியப்படாதவர்களும் போரில் பின்வாங்காதவர்களுமான எல்லாச்சூரர்களும் அங்குப் பீஷ்மராற்கொல்லப்பட்டார்கள். தர்மாத்மாவும் பகைவர்களைவாட்டுகிறவருமானபீஷ்மர் பத்துநாள்முழுமையும் பாண்டவசேனையை அவ்வாறு தபிக்கச்செய்துவிட்டு ஜீவித்திருப்பதில் ஆசையற்றவரானார். மஹாராஜரே! மிக்கபுஜபலமுள்ள உம்முடையபிதாவான அந்தத்தேவவிரதர் (எல்லாருக்கும்) எதிரில் விரைவில் தமக்குவதத்தை

விரும்பி, 'யுத்தத்தில் எதிர்த்து நிற்கும் புருஷசிரேஷ்டர்களை யான் கொல்லேன்' என்று எண்ணி ஸமீபத்திலிருக்கின்ற பாண்டுநந்தனரைப்பார்த்து, 'யுதிஷ்டிர! பேரறிவுள்ளவனே! எல்லாச்சாஸ்திரங்களிலும் வல்லவனே! அப்பா! சொல்லுகின்ற என்னிடத்திலிருந்து தர்மத்தைவிட்டுவிலகாததும் ஸ்வர்க்கத்தைப்பலனாகக்கொண்டதுமான வார்த்தையைக் கேள். அப்பா! பரதகுலத்தில் உதித்தவனே! இந்ததேகத்தில் நான் அதிகமாக வெறுப்படைந்திருக்கிறேன். யுத்தத்தில அனேகபிராணிகளைக்கொன்றுகொண்டே எனக்கு நெடுங்காலம் சென்றுவிட்டது. ஆதலால், எனக்கு நீ பிரியத்தைச்செய்யவிரும்பினால் அர்ஜுனனையும் பாஞ்சாலர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் முன்னிட்டுக்கொண்டு என்னைக்கொல்லும்விஷயத்தில் முயற்சிசெய்ய வேண்டும்' என்கிறவாக்கியத்தைக்கூறினர். ஸத்யத்தில் நோக்கங்கொண்ட பாண்டவராஜர் அவருடைய அந்த அபிப்பிராயத்தையறிந்து யுத்தத்தில் ஸ்ருஞ்சயர்களுடன் பீஷ்மரை எதிர்த்துச் சென்றார். மன்னரே! பிறகு திருஷ்டத்யும்னனும் பாண்டுபுத்திரரான யுதிஷ்டிரரும் பீஷ்மருடைய அந்தவார்த்தையைக்கேட்டுத் தங்கள் ஸைனிகர்களைப்பார்த்து, 'ஸத்யஸந்தனும் சத்துருக்களைஜயிப்பவனுமான அர்ஜுனனாலே நீங்கள்காக்கப்பெற்றுப் பீஷ்மரை எதிர்த்துச் செல்லுங்கள்; அவருடன் போர்புரியுங்கள்; யுத்தத்தில் அவரைஜயித்துவிடுங்கள். சிறந்தவில்லாளியும் ஸேனாபதியுமான திருஷ்டத்யும்னனும் பீமஸேனனும் யுத்தத்தில் நிச்சயமாக உங்களைப் பாதுகாப்பார்கள். ஸ்ருஞ்சயர்களே! யுத்தத்தில் இப்பொழுது உங்களுக்குப் பீஷ்மரிடத்திலின்று கொஞ்சமேனும் பயமுண்டாகவேண்டாம். சிகண்டியைமுன்னிட்டுக்கொண்டு நிச்சயமாகப் பீஷ்மரை ஜயிக்கப்போகிறோம்' என்றுசொன்னார். பத்தாவதுநாளில் அந்தப்பாண்டவர்கள் அவ்விதமான பிரதிஜ்ஞையைச் செய்துகொண்டு [1] மஹாலோகத்தை அடைவதில்முயற்சியுள்ளவர்களாகிக் கோபமூண்டு சென்றார்கள். அவர்கள் சிகண்டியையும் பாண்டவனான தனஞ்சயனையும் முன்னிட்டுப் பீஷ்மரைத்தள்ளுவதில் அதிகமுயற்சியைச் செய்தார்கள். பிறகு உமது புத்திரனாலே கட்டளையிடப்பட்ட மஹாபலசாலிகளும் சேனைகளையுடையவர்களும் துரோணரோடும் அவர்புத்ரரோடுங்கூடியவர்களுமான பற்பலதேசத்து அரசர்களும் எல்லா ஸஹோதரர்களோடுங் கூடினபலவானான துச்சாஸனனும் யுத்தமத்தியிலிருக்கின்ற பீஷ்மரை அப்பொழுது காப்பாற்றினார்கள். பிறகு உம்மைச்சேர்ந்தசூரர்கள் மஹாவிரதசாலியான பீஷ்மரைமுன்னிட்டுக்கொண்டு சிகண்டியைமுத

[1] 'ப்ரம்மலோகம்' என்பது மூலம்

ன்மையாகக்கொண்டபாண்டவர்களை யுத்தத்தில் எதிர்த்துப் போர் புரிந்தார்கள். வானரத்தைக்கொடியாகக்கொண்ட அர்ஜுனன் சேதி தேசத்துவீரர்களோடும் பாஞ்சாலர்களோடும் சிகண்டியைமுன்னிட்டுக்கொண்டு சந்தனுபுத்திரரானபீஷ்மரை எதிர்த்தான். சினியின்பேரனை ஸாத்யகி த்ரோணபுத்திரரையும் திருஷ்டகேது பௌரவனையும் அபிமன்யு பத்திரியுடன்கூடின துரியோதனனையும் எதிர்த்துப் போர்புரிந்தார்கள். பகைவர்களைவாட்டுபவனே! விராடனோ ஸைனியங்களுடன்சேர்ந்து ஸேனையுடன்கூடியவனும் விருத்தக்ஷத்திரனுடையகுமாரனுமான ஜயத்ரதனை எதிர்த்தான். யுதிஷ்டிரர் சிறந்த வில்லாளியும் ஸைனியங்களையுடையவனுமானமத்ரராஜனை எதிர்த்தார். பீமஸேனனும் நான்குபக்கங்களிலும் காக்கப்பெற்ற யானைப்படையையெதிர்த்து அருகிற்சென்றான். பாஞ்சால்யன், ஸஹோதரர்களுடன்சேர்ந்து முயற்சியுடன் எவ்விதத்தினாலும் அவமதிக்கமுடியாதவரும் தடுக்கமுடியாதவரும் ஆயுதம்பிடித்தவர்களுள்ளுஞ்சிறந்தவருமான த்ரோணரைநோக்கி எதிர்த்துச்சென்றான். சத்துருக்களையடக்குபவனும் ஸிம்மத்தைக்கொடியாகக்கொண்டவனும் ராஜபுத்திரனுமான பிருகத்பலன் கோங்குமரத்தைக் கொடியாகக்கொண்ட ஸுபத்திராபுத்திரனை எதிர்த்தான். உமதுபுத்திரர்கள் யுத்தத்தில் பார்த்தனைக்கொல்லக்கருதி அரசர்களுடன் சிகண்டியையும் பாண்டவனை தனஞ்சயனையும் எதிர்த்தார்கள். மிக்கபயங்கரமாயுள்ள இரண்டு ஸேனைகளின்பராக்கிரமமானது அந்தயுத்தரங்கத்தில்வெளிப்பட்டுச் சேனைகளும் சிதறியோடவே பூமி மிகநடுங்கியது. பாரதரே! உம்மைச் சேர்ந்தவர்களுடையனவும் பிறர்களுடையனவுமான அந்தச்சேனைகள் யுத்தத்தில் பீஷ்மரைக்கண்டு நன்றாகப்போர்புரியத் [1] தொடங்கின. பாரதரே! பிறகு முயற்சிகொண்டு ஒருவரையொருவர்எதிர்த்தோடி வருகின்ற அவ்வீரர்களுடையபெரியசப்தமானது எல்லாத்திக்குகளிலும் தோன்றியது. யானைகளினுடையகர்ஜனைகளும் சங்கவாத்தியங்கள் துந்துபிவாத்யங்கள் இவைகளினுடையசப்தமும் ஸைனியங்களினுடைய ஸிம்மநாதமும் பயங்கரமாகத்தோன்றின. எல்லா அரசர்களின்மாலைகளிலும் தோள்வளைகளிலும் கிரீடங்களிலுமுள்ள சந்திரசூரியர்களுக்கொப்பானஒளியானது மங்கிப்போயிற்று. சந்திரங்களைப்பின்னல்களாலேசூழப்பட்டிருக்கிற புழுதியாகிறமேகங்கள் நன்றாகத்தோன்றிவிட்டன. பயங்கரமானவில்களுடையசப்தமாகிறஇடிமுழக்கமும் தோன்றியது. இரண்டுசேனைகளிலும் பாணங்களசங்கங்

---

1 வேறுபாடம்.

கள் இவைகளினுடையசப்தங்களும் பேரிகைகளுடைய பேரொலி களும் ரதங்களின்சப்தங்களும் தோன்றின. இரண்டுஸேனைகளிலு முள்ளபிராஸங்கள், சக்திகள், ரிஷ்டிகள் இவைகளினுடையகூட்டங்க ளாலும் பாணங்களுடையகூட்டங்களாலும் நிரப்பப்பட்டஆகாய மானது ஒளியற்றதாகியது. மஹாயுத்தத்தில் ரதிகர்கள் ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு விழுந்தார்கள். குதிரைகளும் அவ்வாறே விழுந்தன. யானைகள் யானைகளை அடித்தன, காலாட்கள் காலாட்களை அடித்தார்கள். நரசிரேஷ்டரே! மாம்ஸத்திற்காக இரண்டுகழுகு களுக்குச் சண்டையுண்டாவதுபோல அந்தயுத்தத்தில் பீஷ்மர்நிமித்த மாகக் கௌரவர்களுக்குப் பாண்டவர்களோடு மிக்கபெரும்போர் நடந்தது. பாரதரே! மஹாயுத்தத்தில் வெற்றியைப்பெறஎண்ணிய அவ்விருதிறத்தாருக்கும் ஒருவரையொருவர்கொல்வதற்காக யுத்தத் தில் கோரமானஎதிர்ப்பு நேர்ந்தது.

---

## நூற்றுப்பதின்மூன்றுவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்த வருணனை.)

மஹாராஜரே! பராக்கிரமசாலியான அபிமன்யு பீஷ்மரைப்பாது காப்பதன்பொருட்டுப்பெரியஸேனையுடன்சேர்ந்திருக்கிற உம்முடைய புத்திரனை எதிர்த்துப் போர்புரிந்தான். துர்யோதனன் கோபங்கொண்டு ரணகளத்தில் படிநதகணுக்களுள்ளஒன்பதுபாணங்களாலே அபிமன் யுவை மார்பில்அடித்து மறுபடியும் மூன்றுபாணங்களால் அவனை அடித்தான். அபிமன்யு போர்க்களத்தில் அதிககோபங்கொண்டு மிருத் யுவினுடையநாவைப்போன்ற இரும்பினலாகிய ஒருசக்தியைத் துர் யோதனனதுதேரின்மீது பிரயோகித்தான். அரசரே! மகாரதனுன உம்முடையபுத்திரன் வருகின்ற கோரரூபமான அந்தச்சக்தியை க்ஷுரப்ரத்தினலே இரண்டாகத்துண்டாக்கினன். அதிககோபமுள் ளவனுன அபிமன்யு அந்தச்சக்திகீழேவிழுந்ததைக்கண்டு துரியோத னனை மூன்றுபாணங்களாலே இரண்டுகைகளிலும் மார்பிலும் அடித் தான். பரதசிரேஷ்டரே! பின்னும் அவன் கோபமுள்ளஅந்தத்துர் யோதனனை உக்ரமானபத்துக்கணைகளாலே நடுமார்பிலடித்தான். பாரதரே! பீஷ்மருடையநாசத்தின்பொருட்டும் பார்த்தனுடையவிஜ யத்தின்பொருட்டும், பார்க்கின்றவரைமகிழ்விப்பதும் எல்லாஅரசர்க

ளாலும்புகழ்ப்பெற்றதும் கோரமாயுள்ளதும் விசித்திரமாயிருப்பது மான அந்தயுத்தம் நடந்தது. வீரர்களான அபிமன்யுவும் துர்யோதனனும் யுத்தகளத்தில் சண்டையிட்டனர். பிராம்மணர்களுள்சிறந்தவரும் பகைவர்களைவாட்டச்செய்யுந்தன்மையுள்ளவருமான துரோணபுத்திரர் கோபங்கொண்டு யுத்தத்தில் பரபரப்புள்ள ஸாத்யகியை நாராசத்தினாலே மார்பிலடித்தார். பாரதரே! அளவிடமுடியாத மனோபலமுள்ளஸாத்யகியும் குருபுத்திரரை எல்லாமர்மஸ்தானங்களிலும் கழுகிறகுகள்பூண்ட ஒன்பதுபாணங்களாலே அடித்தான். அஸ்வத்தாமாவோ யுத்தத்தில் ஸாத்யகியை ஒன்பதுபாணங்களாலும் மறுபடி முப்பதுபாணங்களாலும் இரண்டுகைகளிலும் மார்பிலும் விரைவாக அடித்தார். துரோணபுத்திரராலே மிகவும் அடிக்கப்பட்டவனும் உறுதியானவில்லைக்கையிற்பிடித்தவனும் மிக்கபிரதாபசாலியுமான அந்தஸாத்யகி துரோணபுத்திரரை மூன்றுபாணங்களாலே அடித்தான். மகாரதனான பௌரவன் பெரியவில்லைக்கையில்கொண்ட திருஷ்டகேதுவை யுத்தத்தில் அம்புகளால்மூடிப் பலவாறுபிளந்தான். அவ்வாறே மகாரதனும் மிக்கதோள்வலிமையுள்ளவனுமான திருஷ்டகேது பௌரவனை யுத்தத்தில் கூர்மையுள்ள முப்பதுபாணங்களாலே விரைவாக அடித்தான். மகாரதனானபௌரவனும் திருஷ்டகேதுவினுடையவில்லைஅறுத்து உரக்கஸிம்மநாதம்செய்து கூர்மையுள்ள அம்புகளால் அவனையடித்தான். மகாராஜரே! அந்தத்திருஷ்டகேது வேறுவில்லைக்கையிலெடுத்து எழுபத்துமூன்றுபாணங்களாலே பௌரவனையடித்தான். சிறந்தவில்லாளிகளும் சிறப்புற்றவர்களும் மகாரதர்களுமான அவ்விருவரும் அந்தயுத்தகளத்தில் ஒருவர்மீதொருவர் பெரிதான அம்புமழையைப் பொழிந்தார்கள். பாரதரே! அவ்விருவரும் ஒருவர்ஒருவருடையவில்லைஅறுத்தும் குதிரைகளைக்கொன்றும் ரதத்தைஇழந்தவர்களாகி மிகச்சினந்து கத்திச்சண்டைக்காக எதிர்த்தார்கள். வேந்தரே! அவ்விருவரும் முன்புறத்தில்நூறுசந்திரப்பிரதிமைகளையுடையவைகளும்அனேகநக்ஷத்திரப்பிரதிமைகளால்சித்திரவேலை செய்யப்பட்டவைகளும் விருஷபத்தினுடையதோலினாற்செய்யப்பட்டவைகளும் விசித்திரமாயுள்ளவைகளுமான இரண்டுகேடகங்களையும் மிகஅழகியஒளிபொருந்தியவைகளும் பளபளப்புள்ளவைகளுமான இரண்டுகத்திகளையும் கையிலெடுத்து,பெருங்காட்டில் ஒருபெண்சிங்கத்தோடு சேரமுயற்சிக்கின்ற இரண்டுஆண்சிங்கங்கள்போல ஒருவரையொருவர் எதிர்த்தார்கள். அவ்விருவரும் விசித்திரமானமண்டலகதிகளையும் போக்குவரவுகளையுங்காண்பிக்கின்றவர்களாகவும் ஒருவரை

ஒருவர் எதிர்க்கின்றவர்களாகவும் ஸஞ்சரித்தார்கள். பௌரவன் அதிககோபங்கொண்டு பெரியகத்தியினால் திருஷ்டகேதுவை நெற்றியெலும்பில் அடித்தான்; 'நில், நில்' என்றுஞ்சொன்னான். சேதிராஜனும் யுத்தத்தில் புருஷசிரேஷ்டனானபௌரவனை முனைகூர்மையான பெரியகத்தியினால் தோள்பூட்டுகளில் அடித்தான். மகாராஜரே! பகைவர்களை அடக்குந்திறமையுள்ள அவ்விருவரும் மகாயுத்தத்தில் ஒருவரை ஒருவர் தாக்கி ஒருவர்மற்றொருவருடையவேகத்தால் அடிக்கப்பட்டுக் கீழேவிழுந்தார்கள். பிறகு உம்முடையகுமாரனான ஜயத்ஸேனன்பௌரவனைத் தன்ரதத்தின்மீதேற்றிக்கொண்டு யுத்தரங்கத்தினின்று ரதத்தோடு அப்புறம்சென்றான். பிரதாபசாலியும் பராக்கிரமமுள்ளவனும் மாத்திரிபுத்திரனுமானஸஹதேவன் யுத்தத்தில்கோபங்கொண்டுதிருஷ்டகேதுவை அந்தயுத்தரங்கத்தைவிட்டு வெளியே கொண்டுபோனான். சித்திரஸேனன் [1]ஸுசர்மாவை அநேகஅம்புகளால்அடித்து மறுபடியும் அறுபதுபாணங்களாலும் ஒன்பதுபாணங்களாலும் அவனை அடித்தான். அரசரே! ஸுசர்மாவோ யுத்தத்தில் கோபங்கொண்டு உமதுபுத்திரனைக் கூர்மையுள்ள நூறுபாணங்களாலே அடித்தான். சித்ரஸேனனும் யுத்தத்தில்கோபமூண்டு பதினானகணுக்களுள்ள முப்பது பாணங்களால் ஸுசர்மாவைஅடித்தான். அவனும் அவனைத் திருப்பியடித்தான். ராஜரே! பீஷ்மருடையயுத்தத்தில் கீர்த்தியையும்கௌரவத்தையும் விருத்திபண்ணுகிறவனும் பீஷ்மருடையநாசத்தைக்குறித்துப் பராக்கிரமத்தைவெளியிடுகிறவனுமான அபிமன்யு பார்த்தன் நிமித்தமாக ராஜபுத்திரனானபிருகத்பலனோடு போர்புரிந்தான். கோஸலேந்திரனோ அர்ஜுனகுமாரனை ஐந்துபாணங்களால்அடித்துப் பதினானகணுக்களுள்ள இருபதுகணைகளால் மறுபடியும் அடித்தான். சுபத்திராபுத்திரன் உருக்கினாலாகியஎட்டுப்பாணங்களால் கோஸலேந்திரனை அடித்தும் யுத்தத்தில் அசையும்படிசெய்யவில்லை; திரும்பவும் கோஸலேந்திரனை அம்புகளால் பீடித்தான். பல்குனகுமாரன் கோஸலராஜனுடையவில்லையும் மறுபடியும் அறுத்தான்; கழுகிறகுகள்பூண்டமுப்பதுபாணங்களாலும் அடித்தான். ராஜபுத்திரனான அந்தப்பிருகத்பலன் யுத்தத்தில் கோபங்கொண்டு வேறுவில்லைக்கையிலெடுத்து அபிமன்யுவை அநேகஅம்புகளால் அடித்தான். பகைவர்களை வாட்டுபவரே! மகாராஜரே! பரபரப்புள்ளவர்களும் ரணகளத்தில் ஆச்சரியகரமாகப்போர்புரியும்ஸ்வபாவமுடையவர்களுமான அவ்விருவருக்கும்

[1] இவன் பாண்டவகக்ஷியைச்சேர்ந்தவன். கௌரவகக்ஷியிலுள்ள சுசர்மா வேறு; அவன் திரிகர்த்ததேசாதிபதி.

தேவாஸுரயுத்தத்தில் பலிசக்ரவர்த்திக்கும் இந்திரனுக்கும் யுத்தம் நடந்ததுபோலப் பீஷ்மர் நிமித்தமாக யுத்தம்நடந்தது. வஜ்ராயுதத்தைக் கையிற்கொண்ட இந்திரன் உத்தமமானபர்வதங்களைப் பிளந்ததுபோலப் பீமஸேனன் யானைப்படையையெதிர்த்துப் போர்புரிந்துகொண்டு அதிகமாகவிளங்கினன். பீமனாலேகொல்லப்படுகின்றவைகளும் மலைக்கொப்பானவைகளுமானயானைகள் பூமியைத்திரொலிப்பிடும்படிசெய்துகொண்டு ஒன்றாய்சேர்ந்து பூமியில்விழுந்தன. மலைபோன்றஉருவமுடையவைகளும் பிளைக்தமைக்திரள்போன்றவைகளுமான அந்தயானைகள் பூமியை அடைந்து சிதறுகின்றமலைகள்போலவிளங்கின. மகாவில்லாளியானயுதிஷ்டிரர் பெருஞ்சேனையினால் ரக்ஷிக்கப்பட்டு(த் தம்மை)எதிர்த்தமத்திராஜனை யுத்தத்தில் அடித்தார். பரபரப்புள்ள பராக்ரமசாலியான மத்ராராஜனும் பீஷ்மருக்காக மகாரதரானதர்மநந்தனரை யுத்தத்தில் பீடித்தான். ஸைந்தவராஜன் விராடராஜனைக் கணுக்கள் பதிந்திருக்கும்கூர்மையானஒன்பதுபாணங்களாலும் மறுபடியும் முப்பதுபாணங்களாலும்அடித்தான். மகாராஜரே! ஸேனாபதியானவிராடனும் ஸைந்தவனைக் கூர்மையுள்ளமுப்பதுபாணங்களால் நடுமார்பில் அடித்தான். விசித்திரமானவில்லையும் வாளையுமுடையவர்களும் விசித்திரமானகவசங்களையும் ஆயுதங்களையும் த்வஜங்களையுமுடையவர்களுமான அந்தவிராடனும் ஸைந்தவனுமாகிய இருவரும் யுத்தத்தில் விசித்திரரூபமுடையவர்களாக விளங்கினார்கள். த்ரோணர் மகாயுத்தத்தில் பாஞ்சாலபுத்ரனையெதிர்த்து, படிந்தகணுக்களுள்ள அம்புகளால் பெரும்போர்புரிந்தார். மகாராஜரே! பிறகு த்ரோணர் பார்ஷதனுடையபெரியவில்லைவெட்டி அவன்மீது ஐம்பதுபாணங்களைப் பிரயோகித்தார். சத்ருவீரர்களைக் கொல்லுகின்ற அந்தத்ருஷ்டத்யும்னன் த்ரோணர்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே வேறுதனுஸைக்கையிலெடுத்து, போர்புரிகின்றஅவர்மீது யுத்தத்தில் அம்புகளைத் தொடுத்தான். மகாரதரானஅந்தத்த்ரோணர் அவ்வம்புகளை அம்புகளால் அடித்து ஒடித்துத் த்ருபதபுத்திரன்மீது ஐந்துபாணங்களைப் பிரயோகித்தார். மகாராஜரே! சத்ருவீரர்களைக்கொல்லுகின்றவனானபார்ஷதன் பிறகு கோபமுண்டு த்ரோணரின்மீது யுத்தத்தில் யமதண்டத்திற்கொப்பானகதையை எறிந்தான். விரைவாகவருகின்றதும் தங்கப்பட்டங்களால்அலங்கரிக்கப்பட்டுள்ளதுமான அந்தக்கதாயுதத்தைத் த்ரோணர் ஐம்பதுபாணங்களாலே யுத்தத்தில் தடுத்தார். த்ரோணருடையவில்லினின்று விடுபட்ட அம்புகளாலே பலவாறாகத்துண்டாடப்பட்டும் பொடிசெய்யப்பட்டும் அந்தக்கதாயுதம் சிதறிப்போய்ப் பூமி

யில் விழுந்தது. பகைவர்களைவாட்டுகிற பார்ஷதன் கதைசிதறவடிக்
கப்பட்டதைக்கண்டு துரோணர்மீது முழுதும்இரும்பினாலாகியமங்கள
கரமானசக்தியை எறிந்தான். பாரதரே! துரோணர் அந்தச்சக்தியா
யுதத்தை ஒன்பதுபாணங்களால் யுத்தத்தில்அறுத்து மகாவில்லாளி
யானபார்ஷதனையும் யுத்தத்தில் பீடித்தார். மகாராஜரே! துரோண
ரும் பார்ஷதனுமாகியஇருவருக்கும் பீஷ்மர்கிபிக்கமாக உக்ரமாயும்
பயங்கரமாயுமுள்ள இந்தப்பெரும்போர் இவ்விதம்நடந்தது. அர்ஜு
னன் மிகுந்தமுயற்சியுடன் பீஷ்மரருகிற்சென்று கூர்மையான அம்பு
களாலே பீடித்துக்கொண்டு காட்டினுள்மதங்கொண்டயானையையெதிர்
ப்பதுபோல எதிர்த்தான். பிரதாபசாலியும் மகாபலசாலியுமான பகதத்
தராஜன் மும்மதப்பெருக்குள்ளதும் மகத்தால்விவேகமற்றதுமான
யானையோடு அந்தஅர்ஜுனனை எதிர்த்தான். விரைவாகத்தன்னை
எதிர்த்துவருகின்றதும் தேவராஜனுடைய யானைபோன்றதுமான
அந்தயானையை அர்ஜுனன் அதிகமுயற்சியுடன் எதிர்த்தான். பிறகு
பிரதாபசாலியும் யானைமீதுள்ளவனுமான பகதத்தராஜன் அர்ஜுன
னைச் சரமாரியினால் யுத்தத்தில் தடுத்தான். பிறகு, அர்ஜுனனோ வரு
கின்றஅந்தயானையை மகாயுத்தத்தில் வெள்ளிபோலப்பளப்பளப்பாகப்
பிரகாசிக்கின்ற இரும்பாலாகிய கூரியஅம்புகளாலே அடித்தான். மகா
ராஜரே! அர்ஜுனன் சிகண்டியை, 'பீஷ்மருடன்போர்புரியப்போ;
போ'என்று தூண்டினான். 'பீஷ்மரை நாசஞ்செய்' என்றும்சொன்
னான். பாண்டுமகாராஜருக்குமூத்தோரே! பிறகு பிராக்ஜ்யோதிஷதே
சத்தரசனான பகதத்தன் பாண்டவனைவிட்டுவிட்டு விரைவாகத் துரு
பதனுடையரதத்தைக்குறித்து எதிர்த்துச்சென்றான். மகாராஜரே!
பிறகு அர்ஜுனன் சிகண்டியைமுன்னிட்டுக்கொண்டு விரைவாகப் பீஷ்
மரை எதிர்த்துவந்தான். பிறகு யுத்தம் நடந்தது. பிறகு உம்மைச்
சேர்ந்தஅந்தவீரர்கள் யுத்தத்தில் வேகமுள்ளபாண்டவனை அழைத்
துக்கொண்டே எதிர்த்தார்கள். அது ஆச்சரியமாயிருந்தது. ராஜரே!
ஆகாயத்தில் மேகங்களை வர்ஷாகாலத்தில் காற்றானது சின்னபின்னம்
செய்வதுபோல அர்ஜுனன் உமதுபுத்திரர்களுடையபற்பலவிதமான
படைகளைச் சின்னபின்னம்செய்தான். சிகண்டியோ பரதர்களுக்குப்
பிதாமகரானபீஷ்மரையடைந்து சிறிதும்பயமில்லாமல் விரைவாக
அனேகபாணங்களால் (அவர்மேனியை) நிரப்பினான். ரதமாகிற அக்
கினிகிருகத்தையுடையதும் வில்லாகிறஜ்வாலையுள்ளதும் கத்திகள்
சக்திகள் கதைகளாகிறவிறகுகளையுடையதும் பாணக்கூட்டங்களாகிற
மகாஜ்வாலையுடையதுமான சிகண்டியாகிறநெருப்பு யுத்தத்தில் க்ஷத்

கிரியர்களை எரித்தது. உலர்ந்தகாட்டில் நன்றாகவிருத்தியடைந்திருக்கின்ற அக்னியானது காற்றுடன்சேர்ந்து ஸஞ்சரிப்பதுபோலப் பீஷ்மரும் திவ்யாஸ்திரங்களைப் பிரயோகித்துக்கொண்டு ஜ்வலித்தார். மகாரதரானபீஷ்மர் யுத்தாங்கத்தில் பார்த்தனுக்கு உதவியாகவந்திருக்கின்றஸோமகர்களை அழைத்துப் பொற்கட்டுக்களுள்ளவைகளும் கூர்மையுள்ளவைகளும் பதிந்தகணுக்களுள்ளவைகளுமான அம்புகளாலே பாண்டவனுடைய அந்தசேனையையும் தடுத்தார். அரசரே! பீஷ்மர் மகாயுத்தத்தில் நாலுதிக்குக்களையும் திக்குக்கோணங்களையும் எதிரொலியிடும்படிசெய்துகொண்டும் ரதிகர்களையும் குதிரைக்காரர்களுடன்கூடினகுதிரைகளையும்கீழேவிழும்படிசெய்துகொண்டும் ரதங்களுடையகூட்டங்களை மொட்டையானபனங்காடுகள்போலச்செய்தார். வேந்தரே! ஆயுததாரிகளனைவருள்ளுஞ்சிறந்த பீஷ்மர் யுத்தத்தில் ரதங்களையும் யானைகளையும் குதிரைகளையும் மனிதர்களையிழந்தவைகளாகச்செய்தார். அரசரே! இடிமுழக்கம்போன்ற அந்தப்பீஷ்மருடையநாணொசையைக்கேட்டு நான்குபக்கங்களிலும் ஸைனிகர்கள் நடுக்கமுற்றார்கள். அரசரே! உமதுபிதாவினுடையபாணங்கள் வீணாகாமல்வீழ்ந்தன. பீஷ்மருடையவில்லினின்றுவிடுபட்ட அம்புகள் சரீரங்களில் தடைப்பட்டு நிற்கவில்லை. அந்தரணகளத்தில் ரதங்களை மனிதர்களற்றவையாகவும் மிக்கவேகமுள்ளகுதிரைகளோடு காற்றுப்போலவிரைவாகச்செல்லுகின்றவையாகவும் கண்டோம். மஹாரதர்களென்றுபிரஸித்திபெற்றவர்களும் மஹாவம்சத்திற்பிறந்தவர்களும் சரீரங்களைவிடத்துணிந்தவர்களும் முன்வைத்தகாலைப்பின்வைக்காதவர்களும் சூரர்களும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டதுவஜத்தையுடையவர்களும் குதிரைகளையும், தேர்களையும், யானைகளையுமுடையவர்களுமான பதினாலாயிரம்சைத்யர்களும் காசிதேசத்துவீரர்களும் கரூசர்களும் வாயைத்திறந்துகொண்டிருக்கும் அந்தகனைப்போன்ற பீஷ்மரை யுத்தத்தில் எதிர்த்துப் பரலோகத்தை அடைந்தார்கள். அரசரே! யுத்தாங்கத்தில் பீஷ்மரையெதிர்த்துத் தான்உயிரோடிருப்பதில் எண்ணமுள்ளமகாரதன் ஸோமகர்களுள் ஒருவனுமது அந்தயுத்தத்தில் இல்லை. ஜனங்கள் பீஷ்மருடையபராக்ரமத்தைக்கண்டு ரணகளத்தில்போர்புரிகின்றஎல்லாயுத்தவீரர்களையும் யமனுடையபட்டணத்தை அடைவிக்கப்பட்டவர்களாகவே எண்ணினார்கள். இந்தப்பீஷ்மரை வீரனும் வெண்மையானகுதிரைகளையுடையவனும் கிருஷ்ணனைஸாரதியாகக்கொண்டவனுமான பாண்டுபுத்திரனையும் யுத்தத்தில் அளவிறந்தபராக்கிரமமுள்ள பாஞ்சாலபுத்திரனை

சிகண்டியையும்தவிர வேறொருமகாரதனாவது யுத்தத்தில் எதிர்க்கவில்லை.

---

## நூற்றுப்பதினேழாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தவர்ணனை.)

சிகண்டியோ யுத்தகளத்தில் புருஷசிரேஷ்டரானபீஷ்மரை எதிர்த்து அவருடையமார்பில் கூர்மையுள்ளபத்துப்பல்லங்களால் அடித்தான். பரதவம்சத்தில்பிறந்தவரே! கங்காபுத்திரரானபீஷ்மர் சிகண்டியைக் கோபத்தினால்ஜ்வலிக்கின்றகண்ணாலே எரிப்பவர்போலக் கடைக்கண்ணால் நன்றாகப்பார்த்தார். அரசரே! அந்தப்பீஷ்மர் அந்தச்சிகண்டியினுடைய பெண்தன்மையைநினைத்து எல்லாஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்தத்தில் அவனை அடிக்கவில்லை. அதை அவன் அறியவில்லை. மகாராஜரே! அர்ஜுனனே சிகண்டியைப்பார்த்து, 'சிகண்டி! ரதிகசிரேஷ்ட! இந்தப்பீஷ்மரைக்கொல்லும்விஷயத்தில் நீவேகத்தைப்பாராட்டு. வீரனே! நீ ஆலோசிப்பதனால் யாதுபயன்? மகாரதரானபீஷ்மரை வதஞ்செய். புருஷசிரேஷ்ட! யுத்தத்தில் பிதாமகரானபீஷ்மரை எதிர்த்துப்போர்புரியும்வல்லமையுடைய மனிதன் யுதிஷ்டிரருடையசேனையில் உன்னைத்தவிரவேறொருவன் இருப்பதாகயான் காணவில்லை. இதை ஸத்தியமாக யான் உனக்குச் சொல்லுகிறேன்' என்றுகூறினான். பரதசிரேஷ்டரே! பார்த்தனால்இவ்வாறு சொல்லப்பட்டசிகண்டியானவன் பற்பலவிதமான அம்புகளைப்பிரயோகித்துக்கொண்டு விரைவாகப் பிதாமகருடையபக்கத்தில் வந்தான். உமது பிதாவானதேவவிரதர் அந்தப்பாணங்களைப்பொருளாகஎண்ணாமல் யுத்தத்தில் கோபங்கொண்டஅர்ஜுனனை அம்புகளால் தடுத்தார். மகாரதரான அந்தப்பீஷ்மர் அவ்வாறேபாண்டவருடையஎல்லாச்சேனையையும் கூர்மையுள்ளஅம்புகளால் அடித்துப் பரலோகத்திற்கு அனுப்பினார். அரசரே! அவ்வாறே பாண்டவர்கள் பெரும்படையினால் சூழப்பெற்று மேகங்கள் திவாகரனைமூடுவதுபோலப் பீஷ்மரை நன்றாக மூடினார்கள். பரதசிரேஷ்டரே! யுத்தரங்கத்தில் (பலகவர்களாலே) நான்குபக்கங்களிலும்சூழப்பட்டபீஷ்மர்காட்டில்ஜ்வலிக்கின்றநெருப்பு (மரங்களை) எரிப்பதுபோல யுத்தத்தில் சூரர்களை எரித்தார். அந்தரணகளத்தில் உம்முடையபுத்திரனானவன் பிதாமஹரைப்பாதுகாத்துக்கொண்டு அர்ஜுனனோடும்போர்புரிந்ததாகிய அவனுடைய ஆச்சரியகர

மான ஆண்மையை நாங்கள் கண்டோம். மகாத்மாவும் வில்லாளியும் உமது குமாரனுமான துச்சாஸனன் தான் ஒருவனாகவே யுத்தத்தில் பரிவாரங்களுடன் கூடின பாண்டவர்களை எதிர்த்துப் போர்புரிந்தான். அவனுடைய செய்கையினாலே எல்லா ஜனங்களும் ஸந்தோஷமடைந்தார்கள். பாண்டவர்கள் யுத்தத்தில் உக்கிரனான துச்சாஸனனைத் தடுக்க முடியவில்லை. யுத்தத்தில் துச்சாஸனனாலே ரதிகர்கள் ரதங்களையிழந்தவர்களாகச் செய்யப்பட்டார்கள். அனேகங் குதிரைவீரர்களும் அனேகமகா வில்லாளிகளும் மகாபலமுள்ள யானைகளும் கூர்மையுள்ள அம்புகளால் பிளக்கப்பட்டுப் பூமியில் விழுந்தனர். அவ்வாறே மற்றும் சிலயானைகள் அம்புகளால் அடிக்கப்பட்டுத் திக்குகளில் ஓடின. அக்கினியானது விறகை அடைந்து பிரகாசிக்கின்ற ஜ்வாலைகளுடன் அதிகமாக ஜ்வலிப்பதுபோல உமது புத்திரன் பாண்டவஸேனையை நன்றாக எரித்துக்கொண்டு ஜ்வலித்தான். பரதகுலத்திற் பிறந்த வீரர்களுள் உத்தமனான அந்தத் துச்சாஸனனை, மஹேந்திரனுடைய புதல்வனும் வெண்ணிறமுள்ள குதிரைகளையுடையவனும் கிருஷ்ணனை ஸாரதியாகக் கொண்டவனுமான அர்ஜுனனையன்றிப் பாண்டவவீரர்களில் ஒருமகாரதனேனும் எவ்விதத்தாலும் எதிர்ப்பதற்கும் ஜயிப்பதற்கும் சக்தியுள்ளவனாகவில்லை. அரசரே! அந்தத் துச்சாஸனனை யுத்தரங்கத்தில் ஜயசீலனான அந்த அர்ஜுனன் ஜயித்து எல்லா ஸைனியங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீஷ்மரையெதிர்த்து விரைவாகச் சென்றான். ஜயிக்கப்பட்ட உமது குமாரனான துச்சாஸனன் பீஷ்மருடைய பாகுபலத்தை ஆதாரமாகக் கொண்டு அடிக்கடி தேறுதலடைந்து மதம்மேலிட்டவனாக நன்றாகப் போர்புரிந்தான். அரசரே! அர்ஜுனனோ ரணகளத்தில் போர்புரிந்துகொண்டு விளங்கினான். சிகண்டி யுத்தகளத்தில் இடிவிழுதலுக்கு ஒப்பானவைகளும் ஸர்ப்பங்களுடைய விஷம்போன்றவைகளுமான அம்புகளாலே பிதாமகரையடித்தான். அந்தப் பாணங்கள் உமது பிதாவுக்கு வருத்தத்தை உண்டுபண்ணவில்லை. காங்கேயர் புன்னகைசெய்துகொண்டே அப்பொழுது அந்தப் பாணங்களை ஏற்றுக்கொண்டார். உஷ்ணத்தினாலே வருத்தப்பட்ட ஒருமனிதன் நீர்த்தாரைகளை ஏற்றுக்கொள்வதுபோலப் பீஷ்மர் சிகண்டியினுடைய சரதாரைகளை ஏற்றுக்கொண்டார். மகாராஜரே! யுத்தரங்கத்தில் மகாத்மாக்களான பாண்டவர்களுடைய ஸைனியங்களைக் கொளுத்துகின்ற பீஷ்மரை க்ஷத்திரியர்கள் கோரஸ்வரூபமுடையவராகக் கண்டார்கள்.

பிறகு உம்முடைய குமாரனான துர்யோதனன் ஸைனியங்களையெல்லாம்பார்த்து, 'யுத்தரங்கத்தில் எல்லாப்பக்கங்களிலும் அர்ஜுனனைக்

குறித்து யுத்தத்திற்காக எதிர்த்தோடுங்கள்; யுத்ததர்மங்களை அறிந்த பீஷ்மர் உங்கள் அனைவரையும் யுத்தத்தில் பாதுகாப்பார். ஆதலால் நீங்கள் பெரும்பயத்தைவிட்டுப் பாண்டவர்களை எதிர்த்துப் போர்புரியுங்கள். இதோ பீஷ்மர் யுத்தத்தில் பலைாத்தார்த்தராஷ்டிரர்களுடைய சுகத்தையும் கவசத்தையும்பாதுகாத்துக்கொண்டு பெரிதானபனைமரக் கொடியோடு நிற்கிறார். முயற்சியுள்ள தேவர்களும் பீஷ்மரை நெருங்குவதற்குச் சக்தியுள்ளவர்களாகார். அவ்வாறிருக்க, பலவான்களாயிருந்தாலும் மனிதர்களானபாண்டவர்கள் மகாத்மாவானபீஷ்மரை எதிர்ப்பதற்குச் சக்தியற்றவர்களென்பதில் யாதுஸந்தேகம்? யுத்தவீரர்களே! ஆதலால் போர்க்களத்தில் அர்ஜுனனைக்கண்டு நீங்கள் ஓடவேண்டாம். யான் இப்பொழுது யுத்தரங்கத்தில் முயற்சியுடன் நான்குபக்கங்களிலும்முயற்சியுள்ள உங்களோடும் மற்ற அரசர்களோடும்கூடிப் பாண்டவனைஎதிர்த்துப் போர்புரியப்போகிறேன்' என்றுகூறினான். அரசரே! வில்லாளியானஉமதுபுத்திரனுடைய அந்தவார்த்தையைக்கேட்டு அர்ஜுனனைக்குறித்துயுத்தம்செய்வதில் முயற்சியுடையவர்களும் சிறந்தபலசாலிகளும் பெரியஸேனையுள்ளவர்களுமான அந்தவிதேஹர்களும் கலிங்கர்களும் தாஸேரகர்களுடையகூட்டங்களும் நிஷாதர்களும் ஸௌவீரர்களும் பாஹ்லீகர்களும் தரதர்களும் மேனாட்டுவீரர்களும் வடநாட்டுவீரர்களும் மாளவர்களும் அபீஷாஹர்களும் சூரஸேனர்களும் சிபிகளும் வஸாதிகளும் ஸால்வர்களும் சகர்களும் திரிகர்த்தர்களும் அம்பஷ்டர்களும் கேகயர்களும் குந்திபுத்திரனை அர்ஜுனனை விட்டிற்பூச்சிகள் நெருப்பைஎதிர்த்துவருவதுபோல அந்தமஹாயுத்தத்தில் எதிர்த்துவந்தார்கள். மகாராஜரே! மிக்கபலசாலியான அந்தஅர்ஜுனன் திவ்யாஸ்திரங்களைநன்றாகத்தியானஞ்செய்து வில்லிற்பூட்டி மிக்கவேகமுள்ள அந்தஅஸ்திரங்களாலும் பாணாக்னிகளாலும், தீயானது விட்டிற்பூச்சிகளைஎரிப்பதுபோல, சேனையுடன்கூடின அந்தமகாரதர்களையெல்லாம் எரித்தான். அனேகஆயிரம்பாணங்களைப்பிரயோகிக்கின்றவனும் உறுதியானவில்லைக்கையிற்பிடித்தவனுமான அந்தஅர்ஜுனனுடைய காண்டீவமானது ஆகாயத்தில்ஜ்வலிக்கின்றதுபோலக் காணப்பட்டது. மகாராஜரே! அம்புகளால்பீடிக்கப்பட்ட அந்தஅரசர்கள் சிதறிப்போனபெரியகொடிகளையுடையவர்களாகி ஒன்றுகூடி வானரக்கொடியையுடையவனை எதிர்க்கவில்லை. ரதிகர்கள் த்வஜங்களுடனே கீழேவிழுந்தார்கள். குதிரைவீரர்கள் குதிரைகளுடன் கீழேவிழுந்தார்கள். கிரீடியினுடைய அம்புகளாலேஅடிக்கப்பட்டு யானைவீரர்களும் யானைகளோடு கீழேவிழுந்தார்கள். பிறகு அர்ஜுனனை

னுடையகையினால்விடப்படும் அம்புகளாலே யுத்தபூமி மூடப்பட்டதாகியது. ஸேனையானது எல்லாத்திக்குக்களிலும் அம்புகளால்துரத்தப்பட்டதாகக் காணப்பட்டது. மகாராஜரே! பிறகு பார்த்தன் கௌரவசேனையைத்துரத்திவிட்டுத் துச்சாஸனனைக்குறித்து அநேகபாணங்களைப் பிரயோகித்தான். அந்தஎல்லாப்பாணங்களும் உமதுபுத்திரனான துச்சாஸனனைப் பிளந்துகொண்டு ஸர்ப்பங்கள் புற்றில்நுழைவதுபோலப் பூமியில் நுழைந்தன. பிரபுவானபார்த்தன் பிறகு துச்சாஸனனுடையகுதிரைகளையும் கொன்றான்; ஸாரதியையும் கீழேதள்ளினான்; இருபதுபாணங்களால் விவிம்சதியையும் ரதத்தை இழந்தவனாகச்செய்தான். படிந்தகணுக்களுள்ள ஐந்து அம்புகளாலே விவிம்சதியை மிகவும்அடித்தான். வெள்ளைக்குதிரைகளையுடைய குந்திபுத்திரன் அநேகபாணங்களாலே கிருபரையும் விகர்ணனையும் சல்யனையும் அடித்து ரதங்களையிழந்தவர்களாகவும் செய்தான். கிருபர், சல்யன், துச்சாஸனன், விகர்ணன், விவிம்சதிஇவர்கள்எல்லோரும் இவ்வாறு ரதத்தையிழந்தவர்களாகச் செய்யப்பட்டார்கள். ஸவ்யஸாசியினாலேஜயிக்கப்பட்ட கௌரவவீரர்களனைவரும் யுத்தரங்கத்தில் ஓடினார்கள். பரதசிரேஷ்டரே! அர்ஜுனன் மகாரதர்களை முற்பகலில் ஜயித்துவிட்டுப் புகையில்லாதநெருப்புப்போல யுத்தரங்கத்தில் ஜ்வலித்தான். மகாராஜரே! கிரணங்களையுடையசூரியன்போல மற்ற அரசர்களையும் சரமாரியினால் தபிக்கச்செய்தான். பாரதரே! மகாரதர்களைச் சரமாரிகளாலே அவ்வாறு புறங்காட்டியோடும்படிசெய்து ரணகளத்தில் ரக்தவெள்ளத்தையுடைய மகாநதியைக் கௌரவஸைனிகர்களுக்கும் பாண்டவர்களுக்குமிடையே ஓடும்படிசெய்தான். அரசரே! மிகவும்பயங்கரமானதும் சிறந்தவீரர்களுக்கு அழிவைச்செய்வதுமானஅந்தயுத்தத்தில் பாண்டவர்கள் ஸ்ருஞ்சயர்களுடன்சேர்ந்து பீஷ்மரைக்குறித்துப் பராக்கிரமத்தை வெளியிட்டார்கள். யுத்தத்தில் பராக்ரமத்துடன் ஜ்வலிக்கின்ற பிதாமகரானபீஷ்மரைக் கண்டு உமது புத்திரர்கள் பிரம்மலோகத்தைமுன்னிட்டுக்கொண்டு(யுத்தத்தினின்று) திரும்பவில்லை. யுத்தத்தில்கொடியமதங்கொண்ட உம்மைச்சேர்ந்த வீரர்கள் ஸ்வர்க்கலோகத்தையடையநோக்கங்கொண்டு யுத்தத்தில் மரணத்தைவிரும்பினவர்களாகப் பாண்டவர்களை எதிர்த்தார்கள். மகாராஜரே! சூரர்களானபாண்டவர்களும் புத்திரர்களுடன்சேர்ந்து உம்மால் முன்புஉண்டுபண்ணப்பட்ட பற்பலவிதமான அநேகதுன்பங்களை நினைத்து யுத்தத்திலபயத்தைவிட்டு ஸ்வர்க்கலோகத்தைமுன்னிட்டுக்கொண்டு ஸந்தோஷமுள்ளவர்கள்போலவே உம்மைச்சேர்ந்தவர்

களோடும் உமதுபுத்திரர்களோடும் போர்புரிந்தார்கள். யானைகளும் தேர்க்கூட்டங்களும் பலவாறு தோமரிகளால் அடிக்கப்பட்டன. யானைகளால் தேர்கள் நொருக்கப்பட்டன. காலாட்களால் குதிரைகளும் கொல்லப்பட்டன. யானைகளின்மீதும் குதிரைகளின்மீதும் ரதங்களின்மீதும் ஏறிப் போர்புரிகின்றவர்களுடையசரீரங்களும் தலைகளும் நடுவில் அறுக்கப்பெற்று எல்லாத்திக்குக்களிலும்விழுந்தன. குண்டலங்களையும் தோள்வளைகளையும் அணிந்தவர்களும் கீழேவிழுந்தவர்களும் வீழத்தப்படுகின்றவர்களும் மகாரதர்களுமான ராஜபுத்திரர்களாலும் ரதங்களுடையசக்ரங்களால்அறுக்கப்பட்டு நாசம்பண்ணப்படுகிறயானைகளாலும் அந்தயுத்தபூமியானது மூடப்பட்டது. காலாட்படைகளும் குதிரைகளும குதிரைவீரர்களும் நான்குபக்கங்களிலும் ஓடினார்கள். யானைகளும் ரதிகர்களும் எல்லாப்பக்கங்களிலும் கீழேவிழுந்தார்கள். சக்கரங்களும் நுகத்தடிகளும் கொடிமரங்களும் முறிக்கப்பெற்றுத் தேர்களும் பூமியில் சிதறின. யானைகள் குதிரைகள் ரதிகர்களுடையகூட்டங்கள் இவைகளினுடைய இரத்தத்தால் நனைக்கப்பட்டும் மூடப்பட்டுமிருக்கின்ற அந்தயுத்தபூமி சரத்காலத்தினுள்ளசிவந்தமேகம்போல விளங்கியது. நாய்களும் காக்கைகளும் கழுகுகளும் செந்நாய்களும் நரிகளும் விகாரஉருவமுள்ளமிருகங்களும் பக்ஷிகளும் உணவைப்பெற்று உரக்கக்கத்தின. எல்லாத்திக்குக்களிலும் பலவிதமானகாற்றுகள் வீசின. ராக்ஷஸர்களும் பூதங்களும் கத்திக்கொண்டு காணப்படவே, பொற்சங்கிலிகளும் மிக்கவிலைபெற்ற கொடித்துணிகளும் திடீரென்று காற்றினால் அசைக்கப்பட்டவைகளாகக் காணப்பட்டன. ஆயிரக்கணக்கானவெண்குடைகளும் கொடிகளோடுகூடினமகாரதங்களும் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் சிதறுகின்றவைகளாகக் காணப்பட்டன. கொடிகளுடன்கூடியயானைகள் பாணங்களால் துன்பமுற்றுத் திக்குக்களில் ஓடின. மநுஷ்யேந்திரரே! கதாயுதத்தையும்சக்தியையும்வில்லையுந்தரித்த க்ஷத்திரியர்களும் எல்லாஇடங்களிலும் பூமியில்விழுந்தவர்களாகக் காணப்பட்டார்கள். அம்புகளாலும் நாராசங்களாலும் ஆயிரக்கணக்காக அடிக்கப்படுகின்ற பெரியயானைகள் ஆங்காங்கு தீனஸ்வரத்தை வெளியிட்டுக்கொண்டு கீழேவிழுந்தன. மகாரதனான்சேனுபதியா யுத்தத்தில் ஸேனையைப் பார்த்து, 'ஸைனிகர்களே! கங்காபுத்திரரானபீஷ்மரை எதிர்த்துச்செல்லுங்கள். அதனையன்றி, நீங்கள்செய்யும் காரியத்தால் யாதுபயன்?' என்றுகட்டளையிட்டான். ஸேனுபதியினுடையவார்த்தையைக்கேட்டு ஸோமகர்கள் ஸ்ருஞ்சயர்களுடன் நான்குபக்கங்களிலும் சரமாரிகளைப்

பொழிந்துகொண்டு கங்காபுத்திரரை எதிர்த்தார்கள். மகாராஜரே! பிறகு பீஷ்மர் திவ்யாஸ்திரத்தைப் பிரயோகித்துக்கொண்டு எல்லா வில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே குந்திபுத்திரனை எதிர்த்தார். கவசம்பூண்டசிகண்டி, யுத்தத்தில் அர்ஜுனனைக்குறித்துச்செல்லுகின்றபீஷ்மரை எதிர்த்துத்தடுத்தான். பிறகு பீஷ்மர் அக்னிக்கொப்பான அந்த அஸ்திரத்தை உபஸம்ஹாரஞ்செய்தார். இந்தச்சமயத்திலேயே வெள்ளைக்குதிரைகளையுடையகுந்திபுத்திரன் பிதாமகரை மோகிக்கச்செய்துவிட்டு உன்னுடைய சைனியத்தை நாசஞ்செய்தான்.

---

## நூற்றுப்பதினெட்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம்.—(தொடர்ச்சி.)

### (பீஷ்மருடையபராக்கிரமவர்ணனை.)

பரதகுலத்திற்பிறந்தவரே! சைனியங்கள்நன்றாக அணிவகுக்கப்படாமல் பெரும்பான்மையாக ஒன்றையொன்று அனுஸரித்துநிற்குமளவில் அனைவரும் பிரம்மலோகத்தை அடைவதில்பற்றுள்ளவர்களானார்கள். ஸங்குலயுத்தத்தில் படைகள் [1] தம்மையொத்தபடைகளை எதிர்க்கவில்லை. ரதிகர்கள் ரதிகர்களோடும் காலாட்கள் காலாட்களோடும் குதிரைவீரர்கள் குதிரைவீரர்களோடும் யானைவீரர்கள் யானைவீரர்களோடும் போர்புரியவில்லை. பாரதரே! அந்தப்போர்க்களத்தில் அவர்கள் பைத்தியங்கொண்டவர்கள்போலப் போர்புரிந்தார்கள். இருதிறத்துச்சேனைகளுக்கும் அதிபயங்கரமானயுத்தம் நடந்தது. எல்லாப்பக்கங்களிலும் மனிதர்களுடையகூட்டங்களும் யானைக்கூட்டங்களும் சிதறஅடிக்கப்படவே, மகாபயங்கரமாயுள்ள அந்தயுத்தத்தில் (இருதிறத்துச்சேனைகளுக்கும்) ஏற்றத்தாழ்வில்லாமலிருந்தது. பாரதரே! பிறகு, சூரர்களான சல்யன், கிருபர், சித்திரஸேனன், துச்சாஸனன், விகர்ணன் ஆகியஇவர்கள் பிரகாசிக்கின்ற ரதங்களின்மீதேறிக்கொண்டு யுத்தத்தில்பாண்டவர்களுடைய சேனையை நடுங்கும்படி அடித்தார்கள். மிக்கபலசாலிகளான கௌரவர்களாலே கொல்லப்படுகின்றதும் ஜலத்தில்முழுகுகின்ற ஓடம்போன்றதுமான அந்தப் பாண்டவஸேனையானது யுத்தத்தில் ரக்ஷகனைப்பெறவில்லை. குளிர்காலமானது பசுக்களுடையமர்மஸ்தானங்களைப்பிளப்பதுபோலப் பீஷ்மர் பாண்டுபுத்திரர்களுடையமர்மஸ்தானங்களைப்பிளந்தார். அவ்வாறே மகாபல

---

[1] ஒழுங்கில்லாமல் சண்டைசெய்தார்கள் என்றபடி.

சாலியானபார்த்தனாலே உமது ஸைனியத்திலுள்ள புதியநீருண்ட மேகங்கள்போன்றகஜங்கள் பலவாறுகீழேதள்ளப்பட்டன. பார்த்தனாலே அம்புகளாலும் நாராசங்களாலும் அடிக்கப்படுகின்றவர்களும் நசுக்கப்படுகின்றவர்களுமான அனேகபிரதானஸேனாவீரர்கள் ஆயிரக் கணக்காகக் காணப்பட்டார்கள். அந்தயுத்தகளத்தில் பெரியயானைகள் கோரமானதீனஸ்வரத்தைவெளியிட்டுக்கொண்டு கீழேவிழுந்தன. யுத்தபூமியானது, கொல்லப்படும் மஹாபலசாலிகளானவீரர்களுடைய ஆபரணங்களையணிந்தசரீரங்களாலும் குண்டலங்களுடன்கூடினதலை களாலும் நிறைக்கப்பட்டுவிளங்கியது. மஹாராஜரே! சிறந்தமஹா வீரர்களுக்கு அழிவையுண்டுபண்ணுகின்ற அந்தயுத்தத்திலேயே பீஷ்மரும் பாண்டவனானதநஞ்சயனும் விக்ரமத்தைவெளியிடும் பொழுது யுத்தத்தில்பராக்கிரமமுள்ளபிதாமஹரைப்பார்த்து அந்த உமது புத்திரர்களனைவரும் யுத்தகளத்தில் ஸ்வர்க்கத்தைமுக்கியமான கதியெனஎண்ணி நாசத்தைவிரும்பி ஸைநிகர்களைமுன்னிட்டுக் கொண்டு பாண்டவர்களை யுத்தத்தில் எதிர்த்தார்கள். மகாராஜரே! சூரர்களானபாண்டவர்களும் உத்தமவீரர்களுக்கு அழிவைஉண்டு பண்ணுகின்றஅந்தயுத்தத்தில் முன்பு புத்திரனுடன்சேர்ந்துஉம்மால் உண்டுபண்ணப்பட்ட பலவிதமான அனேகக்கிலேசங்களை நினைத்துக் கொண்டு யுத்தத்தில்பயத்தைவிட்டு ப்ரம்மலோகத்தையடைவதில் பற்றுதலுடன் மிக்கமனக்களிப்புற்றவர்கள்போல உம்மைச்சேர்ந்த வர்களையும் உமதுபுத்திரர்களையும் எதிர்த்துப் போர்புரிந்தார்கள். பாண்டவஸேனாபதியும் மகாரதனுமானதிருஷ்டத்யும்னன் யுத்தத் தில் தன்ஸேனையைப்பார்த்து, 'ஸோமகர்களே! நீங்கள் ஸ்ருஞ்சயர் களுடன் காங்கேயரை எதிர்த்துச்செல்லுங்கள்' என்றுசொன்னான். ஸேனாபதியினுடையவார்த்தையைக்கேட்டு ஸோமகர்களும் ஸ்ருஞ்ச யர்களும் சரமாரியினால் அடிக்கப்பட்டுக் கங்காபுத்திரரை எதிர்த்து வந்தார்கள். அரசரே! பிறகு ஹிம்ஸிக்கப்படுகின்ற உமதுபிதாவான பீஷ்மர் கோபத்திற்குட்பட்டவராகி ஸ்ருஞ்சயர்களுடன் போர்புரிந் தார். ஐயா! கீர்த்திசாலியான அந்தப்பீஷ்மருக்கு முற்காலத்தில் சிறந்த புத்தியுள்ளபரசுராமராலே பகைவர்களுடையபடையை அழிக்குந்திற மையுள்ள அஸ்திரசிக்ஷை அளிக்கப்பட்டது. பிராயமுதிர்ந்தவரும் கௌரவர்களுக்குப்பாட்டனாரும் சத்துருவீரர்களையழிப்பவருமான அந்தப்பீஷ்மர் அந்தவித்தையைப்பெற்றுச் சத்துருக்களுடையபலத் துக்குநாசத்தை உண்டுபண்ணிக்கொண்டு நாள்தோறும் பார்த்தர்களைச் சேர்ந்தவீரர்களில் பதினாயிரம்பேர்களை ஸம்ஹரித்தார். பரதர்களில்

சிறந்தவரே! அந்தப்பத்தாவதுநாள்வந்தவுடன் [1] பெரியபாட்டனாரான பீஷ்மர் தாம் ஒருவராகஇருந்துகொண்டே யுத்தத்தில் மாத்ஸ்யர்களுடையபடைகளிலும் பாஞ்சாலர்களுடையபடைகளிலுமுள்ள கணக்கிலடங்காதயானைகளையும் குதிரைகளையுங்கொன்று ஏழுமகாரதர்களையும் ஐயாயிரம்ரதிகர்களையும் பதினாலாயிரங்காலாட்களையும் கொன்றார். பிரஜைகளுக்கெல்லாம் நாதரே! உம்முடையதகப்பனாராகிய பீஷ்மர் அந்தயுத்தத்தில் அனேகஆயிரம் யானைகளையும் பதினாயிரம் குதிரைகளையும் பயிற்சியின் பலத்தால் கொன்றார்; பிறகு, எல்லாஅரசர்களுடையசேனையையும் நாசஞ்செய்துவிட்டு விராடனுடையபிரியஸகோதரனானசதாநீகனையும் கொன்றார். மகாராஜரே! பிரதாபசாலியானபீஷ்மர் யுத்தத்தில் சதாநீகனைக்கொன்று அனேகஆயிரம்அரசர்களைப் பல்லங்களாலே கீழேதள்ளினார். யுத்தத்தில்மனக்கலக்கமுற்றயுத்தவீரர்கள் தநஞ்சயனை அலறிஅழைத்தார்கள். அர்ஜுனனுடன்வந்த பாண்டவர்களைச்சேர்ந்தஅரசர்களெல்லாரும் பீஷ்மரைஎதிர்த்து யமலோகத்தை அடைந்தார்கள். பீஷ்மர் பாணஸமூகங்களைப் பத்துத்திக்குகளிலும் இறைத்துக்கொண்டு பார்த்தர்களுடையசேனையைத்தாண்டிப் படைமுகத்தில்நின்றார். அந்தப்பீஷ்மர் அந்தப்பத்தாவதுநாளில் மிக்க பெரியகாரியத்தைச்செய்து கையில்பிடிக்கப்பட்டவில்லுடன் இரண்டு சேனைகளுக்குமிடையில்நின்றார். வேந்தரே! கிரீஷ்மகாலத்தில்ஆகாயத்தின்மத்தியையடைந்து தபிக்கின்றபாஸ்கரனை எவ்வாறு ஜனங்கள்கண்ணெடுத்துப்பார்ப்பதற்குச் சக்தியுள்ளவர்களாகமாட்டார்களோ அவ்வாறே அந்தப்பீஷ்மரை வேந்தர்கள் பார்ப்பதற்குச் சக்தியுள்ளவர்களாகவில்லை. பரதகுலத்தில் உதித்தவரே! யுத்தத்தில் இந்திரன் அஸுரஸேனையைத் தபிக்கச்செய்ததுபோலப் பீஷ்மர் பாண்டவர்களைத்தபிக்கச்செய்தார்.

அவ்வண்ணம் பராக்ரமத்தைவெளிப்படுத்திப் பகைவர்களைக் கொல்லுகின்றபீஷ்மரைக்கண்டு, தேவகிபுத்திரரான மதுஸூதனர் பிரீதியுடன் தனஞ்சயனைநோக்கி, 'இதோ சந்தனுபுத்திரரானபீஷ்மர் இரண்டுசேனைகளின்மத்யத்தில்நிற்கிறார். பலத்தினாலேஇவரைக்கொன்று நீவெற்றியடையப்போகிறாய். இச்சேனைபிளக்கப்படுகிறவிடத்தில் (சென்று)இந்தப்பீஷ்மரைப் பலத்தினால்அசைவற்றுநிற்கும்படிசெய். பிரபுவே!வேறொருவன் பீஷ்மருடையபாணங்களைப் பொறுக்கத்திறமையுள்ளவனல்லன்' என்றார். அரசரே! இவ்வாறுகிருஷ்ணனாலேதூண்டப்பட்ட

[1] 'ப்ரபிதாமஹ:' என்பது மூலம்.

அர்ஜுனன் அந்தக்ஷணத்தில் பீஷ்மரைக் கொடியோடும் ரதத்தோடும் குதிரைகளோடும் அம்புகளால் மறையும்படி செய்தான். குருபுங்கவர்களுள் உத்தமரான அந்தப்பீஷ்மரும் பாண்டவனால் பிரயோகிக்கப்படும் அவ்வம்புத்திரள்களை அம்புத்திரள்களால் பலவாறாக நாசஞ்செய்தார். மஹாராஜரே! பிறகு பீஷ்மருடைய பாணங்களால் அடிக்கப்பட்டுச் சோகஸாகரத்தில் மூழ்கியிருக்கின்றவர்களான பாஞ்சாலராஜன், வீர்யமுடையவனான திருஷ்டகேது, பாண்டுபுத்திரனான பீமஸேனன், பார்ஷதனான திருஷ்டத்யும்னன், நகுலஸஹதேவர்கள், சேகிதானன், ஐந்துகேகயநாட்டுமன்னர்கள், ஸாத்யகி, மிக்கபுஜபலமுள்ளசுபத்திராபுத்திரனான அபிமன்யு, கடோத்கசன், த்ரௌபதிபுத்திரர்கள், சிகண்டி, வீர்யமுடையவனான குந்திபோஜன், விராடன் இவர்களும் பாண்டவபக்ஷத்தைச்சேர்ந்த மகாபலசாலிகளான மற்றும்பலரும் பல்குனனாலே கைதூக்கிவிடப்பட்டார்கள். பிறகு கிரீடியினாலேகாப்பாற்றப்படுகின்ற சிகண்டி வேகத்துடன் உத்தமஆயுதத்தைக் கையிலேந்திப் பீஷ்மரையே எதிர்த்தோடினான். யுத்தமுறைகளைச் சரியாகஅறிந்தவனும் சத்துருக்களால்ஜயிக்கப்படாதவனுமான அர்ஜுனன் அந்தப்பீஷ்மருக்கு உதவியாகவந்தஎல்லாவீரர்களையுங்கொன்று பீஷ்மரையே எதிர்த்தோடினான். உறுதியானவில்லைக்கையிற்கொண்ட ஸவ்யஸாசியினாலே பாதுகாக்கப்பட்டவர்களான ஸாத்யகி சேகிதானன், பார்ஷதனான திருஷ்டத்யும்னன், விராடன், துருபதன், நகுலஸஹதேவர்கள் ஆகிய இவர்கள் யுத்தத்தில் பீஷ்மரைக்குறித்து விரைவாகஓடினார்கள். யுத்தத்தில் அபிமன்யுவும் த்ரௌபதிகுமாரர்களான ஐந்துஉபபாண்டவர்களும் பீஷ்மரை எதிர்த்தார்கள். (முற்கூறினவீரர்களனைவரும்) கையில் பெரியஆயுதங்களையெடுத்திருக்கும் பீஷ்மரைக் கண்டார்கள். உறுதியானவில்லைக்கையில்கொண்டவர்களும் யுத்தத்தில்புறங்காட்டாதவர்களுமான அந்தவீரர்கள் எல்லாரும் பகைவர்களுடையபாணங்களைத் திருப்பியடிக்குந்திறமையுள்ள அம்புகளாலே பலவாறு பீஷ்மரை அடித்தார்கள். உத்தமர்களான மன்னர்களாலேவிடப்படும் அம்புத்திரள்களை மிக்கமனோதைரியமுள்ளபீஷ்மர் நாசஞ்செய்து பாண்டவர்களுடைய சேனையில் பிரவேசித்தார். பிதாமகரானஅவர் விளையாடுகின்றவர்போல(த் தம்மீது பாயாமலிருக்கும்படி) பாணங்களைத் தடுத்தார். பீஷ்மர் புன்சிரிப்புடன் அந்தச்சிகண்டியின் ஸ்திரீத்தன்மையை அடிக்கடி நினைத்து அந்தப்பாஞ்சாலகுமாரனை சிகண்டியின்மீது கணைகளைத்தொடுக்கவில்லை. மகாரதரானபீஷ்மர் துருபதனுடையசேனையில் ஏழுரதிகர்களைக் கொன்றார். பிறகு அந்தக்ஷணத்தில் அந்தப்பீஷ்ம

ரொருவரைக்குறித்தே எதிர்த்தோடிவருகின்ற மாத்ஸ்யர்கள், பாஞ்சாலர்கள், சைஞ்யர்கள் இவர்களுடைய கிலகிலாசப்தமும் தோன்றியது. அந்தவீரர்கள் யுத்தத்தில் சத்துருக்களைத் தபிக்கச்செய்கின்றவரும், பாகீரதிபுத்திரருமான அந்தப்பீஷ்மரொருவரை, மேகங்கள் ஸூரியனை மூடுவதுபோல, சரக்கூட்டங்களாலும் குதிரைகளாலும் ரதங்களுடைய கூட்டங்களாலும் அம்புகளாலும் மூடினார்கள். பிறகு அந்தப்பீஷ்மருக்கும் பாண்டவவீரர்களுக்கும் நடந்தேறுகின்றதும் தேவாஸுரயுத்தம்போன்றதுமான அந்தப்போரில் கிரீடி சிகண்டியைமுன்னிட்டுக்கொண்டு பீஷ்மரை எதிர்த்தான்.

---

## நூற்றுப்பத்தொன்பதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் ரணகளத்தில் சாய்ந்தது.)

இவ்வாறு அந்தப்பாண்டவர்களெல்லோரும் சிகண்டியைமுன்னிட்டுக்கொண்டு யுத்தகளத்தில் பீஷ்மரை நாற்புறங்களிலும்சூழ்ந்துகொண்டு அடித்தார்கள். எல்லாஸ்ருஞ்சயர்களும் ஒன்றுசேர்ந்து மிகவும்கோரமானசதக்னிகளாலும் பரிகாயுதங்களாலும் கோடாலிகளாலும் முத்கரங்களாலும் உலக்கைகளாலும் ஈட்டிகளாலும் க்ஷேபணீயங்களாலும் பொற்கட்டுகளுள்ளஅம்புகளாலும் சக்திகளாலும் தோமரங்களாலும் கம்பனங்களாலும் நாராசங்களாலும் வத்ஸதந்தங்களாலும் புசுண்டிகளாலும் யுத்தத்தில் நான்குபக்கத்திலும் பீஷ்மரை அடித்தார்கள். பீஷ்மர் அப்பொழுது அனேகவீரர்களால் அடிக்கப்பட்டுக் கவசம்சிதறி மர்மஸ்தானங்கள் பிளக்கப்பட்டும் வருத்தமடையவில்லை. ஜ்வலிக்கின்ற அம்புகளும் வில்களுமாகிற தணலுள்ளதும் அஸ்த்ரவேகமாகிறகாற்றுள்ளதும் தேருருளையின் சப்தமாகிறஉஷ்ணமுள்ளதும் அழகியவில்லாகிற மகாஜ்வாலையுள்ளதும் நாசமடைகிறவீரர்களாகிறபெருவிறகுகளோடுகூடியதுமான மகாஸ்திரங்கள் நிறைந்தபீஷ்மராகியநெருப்பானது சத்துருக்களுக்கு யுகாந்தகாலத்துநெருப்புப்போலாயிற்று. பீஷ்மர் ரதஸமூகங்களுடைய மத்தியத்திலுள்ளவழியினாலே திரும்பி வெளியில்வந்தார். மறுபடியும் அரசர்களுடைய மத்தியையடைந்து (அங்குமிங்கும்) ஸஞ்சரிக்கின்றவராகக் காணப்பட்டார். வேந்தரே! பிறகு பீஷ்மர் பாஞ்சாலராஜனையும் திருஷ்டகேதுவையும்தாண்டிப் பாண்டவர்களுடைய சேனையின்

மத்தியை அடைந்தார். பிறகு, பீஷ்மர் பயங்கரமானசப்தமுள்ளவை களும் அதிகவேகமுள்ளவைகளும் மர்மஸ்தானங்களையும் கவசங்களை யும்உடைக்கின்றவைகளும் கூர்மையுள்ளவைகளுமான உத்தமமான அம்புகளாலே ஸாத்யகி, பீமன், பாண்டுபுத்திரனுன தனஞ்சயன், துரு பதன், விராடன், பார்ஷதனுன திருஷ்டத்யும்னன் இவ்வாறுவீரர்களை யும் திருப்பியடித்தார். அந்தமகாரதர்கள் அந்தப்பீஷ்மருடையகூர்மை யானபாணங்களைத்தடுத்து வல்லமையுடனே அவரைப் பப்பத்துக்கணை களாலே துன்பமடையும்படி அடித்தார்கள். பொன்கட்டுகளுள்ளவை களும் சாணையில்தீட்டப்பட்டவைகளும் மகாரதனுன சிகண்டி பீஷ் மரின்மீதுதொடுத்தவைகளுமான பெரியஅம்புகள் அவருக்குத் துன் பத்தையுண்டுபண்ணவில்லை. பிறகு அர்ஜுனன் விரைந்து பீஷ்மரை யே எதிர்த்தோடினன். சிகண்டியைமுன்னிட்டுக்கொண்டு அந்தப் பீஷ்மருடையதனுஸையும் வெட்டினன். மகாரதர்கள் பீஷ்மருடைய தனுர்ப்பங்கத்தைப் பொறுக்கவில்லை. மகாரதர்களான துரோணர், கிருதவர்மா, விந்துராஜனுனஜயத்ரதன், பூரிஸ்ரவஸ், சலன், சல்யன், பகதத்தன் இந்தஏழுவீரர்களும் மிகவுங்கோபங்கொண்டு கிரீடியை எதிர்த்துவந்தார்கள். மகாரதர்கள் மிக்ககோபங்கொண்டு அந்தயுத்த ரங்கத்தில் திவ்யாயுதங்களைப் பிரயோகித்துப் பாண்டவனை மூடுகின்ற வர்களாக எதிர்த்தார்கள். அர்ஜுனனைக்குறித்துவருகின்ற அவர்களு டையசப்தமானது யுகாந்தகாலத்தில்பொங்குகின்ற ஸமுத்திரங்க ளுடையசப்தம்போலக் கேட்கப்பட்டது. பல்குனனுடையரதத்தை நோக்கி, 'கொல்லுங்கள்; விரைவுபடுங்கள்; பிடியுங்கள்; அடியுங்கள்; அறுங்கள்' என்கிறநெருங்கினசப்தம் தோன்றியது. பரதர்களிற்சிறந் தவரே! நெருங்கினஅந்தச்சப்தத்தைக்கேட்டுப் பாண்டவர்களைச் சேர்ந்த மகாரதிகர்கள் பல்குனனைப்பாதுகாக்கஎண்ணி எதிர்த்து ஓடி னர்கள். ஸாத்யகி, பீமஸேனன், பார்ஷதனுன திருஷ்டத்யும்னன், விராடன், துருபதன், ராக்ஷஸனுனகடோத்கசன், மிகுந்தகோபமுள்ள அபிமன்யு இவ்வேழுவீரர்களும் கோபம்மூண்டு விசித்திரமானவில்லை யேந்தி விரைந்து அந்தப்பீஷ்மரைக்குறித்து ஓடினர்கள். பரதசிரேஷ் டரே! யுத்தகளத்தில் தேவர்களுக்கு அஸுரர்களுடன் யுத்தம்நடந் ததுபோல அந்தப்பாண்டவவீரர்களுக்கு நெருங்கியதும் மயிர்க்கூச் சத்தையுண்டுபண்ணக்கூடியதுமானயுத்தம் நடந்தது. சிரேஷ்டனுன சிகண்டியோ யுத்தகளத்தில் கிரீடியினுலேபாதுகாக்கப்பட்டு யுத்தத் தில் வில்அறுக்கப்பட்டபீஷ்மரைப பத்துக்கணைகளாலும் அவரு டையஸாரதியைப் பத்துப்பாணங்களாலும்அடித்து த்வஜத்தையும்

ஒருபாணத்தால் அறுத்தான். கங்காபுத்திரரானபீஷ்மர் மிக்கவேகத்துடன்கூடினவேறொருவில்லைக் கையிலெடுத்தார். அந்தவில்லையும் பல்குனன் கூர்மையுள்ளமூன்றுபாணங்களாலே வெட்டியெறிந்தான். இவ்வாறு ஸவ்யஸாசியும் சத்ருருக்களைத் தபிக்கச்செய்கின்றவனுமான அந்தப்பாண்டவன் கோபங்கொண்டு பீஷ்மர் கையில் வில்லெடுக்க எடுக்கத் திரும்பவுந்திரும்பவும் அறுத்தான். வில்அறுக்கப்பட்டவரும் மிகுந்தகோபங்கொண்டவருமான அந்தப்பீஷ்மர் இரண்டுகடைவாய்களையும்நக்கிக்கொண்டு மலைகளைக்கூடப்பிளக்கும்வல்லமையுடைய ஒரு சக்தியாயுதத்தைக் கையில்விரைவாகஎடுத்து மிகுந்தகோபத்துடன் அந்தச்சக்தியைப் பல்குனனுடையரதத்தின்மீது எறிந்தார். அர்ஜுனன் ஜ்வலித்துக்கொண்டுவருகின்றதும் வஜ்ராயுதம்போன்றதுமான அந்தச்சக்திஆயுதத்தைப்பார்த்துக் கூர்மையான ஐந்துபல்லங்களைக் கையிலெடுத்தான். பரதசிரேஷ்டரே! கோபங்கொண்ட அர்ஜுனன், பீஷ்மருடையகையினால்சுழற்றிஎறியப்பட்ட அந்தச்சக்தியாயுதத்தை ஐந்துபாணங்களாலே ஐந்தாகத்துண்டாக்கினான். மிக்ககோபங்கொண்ட அந்தக்கிரீடியினால் அறுக்கப்பட்டஅந்தச்சக்தியானது மேகக்கூட்டத்தினின்று அற்றுவிழுந்தமின்னல்போல் கீழேவிழுந்தது. பகைவர்களின்பட்டணங்களை அழிக்கின்றவரும் வீரருமானபீஷ்மர் அந்தச்சக்தி அறுக்கப்பட்டது கண்டு கோபமூண்டு, இந்தப்பாண்டவர்களுக்கு மகாபலசாலியான [1]வாஸுதேவர் ரக்ஷகராயில்லாவிடின் இவ்வெல்லாப் பாண்டவர்களையும் இந்தஒருவில்லினாலேயே கொல்வதற்கு யான் சக்தியுள்ளவன். இந்தவாஸுதேவர் எல்லாஉலகங்களாலும்ஜயிக்கத் தகாதவரென்பதே என்னுடையஎண்ணம். பாண்டவர்கள் கொல்லத் தகாதிருப்பதும் சிகண்டி ஸ்திரீயாயிருப்பதும் ஆகியஇவ்விரண்டுகாரணங்களையுங்கருதி யான் பாண்டவர்களுடன் போர்புரியேன். முன்பு நான் காளியை என்பிதாவுக்கு மணம்புரியச்செய்தபொழுது ஸந்தோஷமடைந்தபிதாவினாலே நான் விரும்பும்போது மரணமும் போரில் ஒருவராலும்கொல்லக்கூடாமையும் எனக்கு (வரமாகக்) கொடுக்கப்பட்டன. ஆதலால் அப்படிப்பட்ட மரணத்தைஅடைவதற்கு இதுவே தகுந்தகாலமென்று எண்ணுகிறேன்' என்று யுத்தத்தில் நிச்சயமான ஆலோசனைசெய்தார். அளவற்றதேஜஸுள்ளபீஷ்மருடைய இவ்விதமானநிச்சயத்தையறிந்து ரிஷிகளும் வஸுக்களும் ஆகாயமார்க்கத்திலிருந்துகொண்டு பீஷ்மரைப்பார்த்து, 'ஐயா! உமதுமனத்தில் என்ன எண்ணுகிறீரோ அது எங்களுக்கும்பிரியம். மகாராஜரே! அதனைச்

[1] 'விஷ்வக்ஸேந:' என்பது மூலம்.

செய்யும். யுத்தத்தினின்று புத்தியைத்திருப்பும்' என்று கூறினார்கள்.
இந்தவாக்கியத்தின் முடிவில் அனுகூலமானதும் நறுமணம்பொருந்தி
யதும் ஜலபிந்துக்களையுடையதும் மங்களகரமுமானகாற்று வீசியது.
தேவதுந்துபிகளும் பேரொலியோடு முழங்கின. பீஷ்மரின்மீது
பூமாரியும் விழுந்தது. அவர்கள்பேசுகிற வார்த்தைகளை மகாபாகுபல
முள்ளபீஷ்மரும் வ்யாஸமுனிவரின் அனுக்ரஹம்பெற்றநானுமே
கேட்டோம்; மற்றவர்கள் கேட்கவில்லை. அரசரே! எல்லாஉலகங்களுக்
கும்பிரியரானபீஷ்மர் அப்பொழுது ரதத்தினின்றுகீழேவிழஆரம்பிக்
கவே தேவர்களுக்கெல்லாம் அதிகமானபரபரப்பு உண்டாயிற்று.
பிறகு மஹாதபஸ்வியும் சந்தனுபுத்திரருமானபீஷ்மர் தேவகணங்க
ளுடையஇவ்வாறானவார்த்தையைக்கேட்டு அர்ஜுனனையெதிர்த்துப்
போர்புரியவில்லை. மஹாராஜரே! எல்லாக்கவசங்களையும்உடைக்கின்ற
கூர்மையுள்ளபாணங்களாலேபிளக்கப்பட்டசிகண்டியோ கோபங்கொ
ண்டு பரதர்களுக்குப்பிதாமஹரானபீஷ்மரைக் கூர்மையுள்ளஒன்பது
பாணங்களாலே மார்பிலடித்தான். மஹாராஜரே! சிகண்டியினால் அடிக்
கப்பட்ட குருபிதாமஹரான அந்தப்பீஷ்மர் பூகம்பம்உண்டாகுங்
காலத்தில் மலை எப்படியசையாதோ அப்படி யுத்தத்தில் அசையாமல்
நின்றார். பிறகு பீபத்ஸு அட்டஹாஸஞ்செய்துகொண்டு
காண்டீவம் என்கிறவில்லை நாணொலியிடும்படிசெய்து பீஷ்மரை
இருபத்தைந்து க்ஷுத்ரகபாணங்களால் அடித்தான். தநஞ்சயன்
கோபங்கொண்டு விரைவுடன் இந்தப்பீஷ்மரை எல்லாஅங்கங்களி
லும் மர்மஸ்தானங்களிலும் நூற்றுக்கணக்கானபாணங்களால் பல
முறை அடித்தான். இவ்வாறு ஆயிரக்கணக்கானமற்றவீரர்களாலும்
மிகவும் அடிக்கப்படுகின்ற மகாரதரானபீஷ்மர் அவர்களையும் அம்பு
களால் விரைவாகத்திருப்பியடித்தார். ஸத்யபராக்ரமரானஅந்தப்பீஷ்
மர் யுத்தத்தில் அந்தவீரர்களால்விடப்பட்ட அம்புகளைக் கணுக்கள்
பதிவான அம்புகளால் ஒரேஸமயத்தில் தடுத்தார். மகாரதனான
சிகண்டி யுத்தரங்கத்தில் பீஷ்மர்மீது தொடுத்தவைகளும் பொற்கணுக்
களுள்ளவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான அவனு
டைய அம்புகள் பீஷ்மருக்குத் துன்பத்தை உண்டுபண்ணவில்லை.
பிறகு, கிரீடியானவன் மிகுந்தகோபத்துடன் சிகண்டியைமுன்னிட்டுக்
கொண்டு பீஷ்மரையெதிர்த்து அவருடையவில்லையும்ஒடித்து அவ
ரையும் ஒன்பதுபாணங்களால்அடித்து அவருடையகொடியையும் ஓர்
அம்பினால்அறுத்துப் பத்துப்பாணங்களால் அவருடையஸாரதியையும்
அடித்து அவரை நன்றாகநடுங்கும்படிசெய்தான். அந்தப்பீஷ்மர் மிக்க

பலமுள்ளவேறுவில்லைக் கையிலெடுத்தார். அவருடைய அந்தவில்லையும் கூர்மையுள்ள மூன்று பல்லங்களாலே மூன்றாகத் துண்டாக்கினன். குந்திபுத்திரன் மஹாயுத்தத்தில் பீஷ்மர் வில்லைக் கையிலெடுக்கவெடுக்க அவைகளெல்லாவற்றையும் அரைநிமிஷத்திற்குள் அறுத்தான். இவ்வாறு அர்ஜுனன் பீஷ்மருடைய அனேகவிற்களை யுத்தத்தில் துண்டாக்கினன். பிறகு, சந்தனுபுத்திரனான பீஷ்மர் பராக்கிரமத்தினால் அர்ஜுனனை மீறவில்லை. பிறகு இந்தப்பீஷ்மர்மீது அர்ஜுனன் இருபத்தைந்து க்ஷுத்ரகமென்கிற பாணங்களைப் பிரயோகித்தான். அதிகமாக அடிக்கப்பட்டவரும் சிறந்தவில்லாளியுமான அந்தப்பீஷ்மர் துச்சாஸனனை நோக்கி, '(துச்சாஸன!) பாண்டவர்களுள் மகாரதனான இந்தப்பார்த்தன் யுத்தத்தில் கோபங்கொண்டு அனேக ஆயிரக்கணக்கான பாணங்களாலே என்னையே எதிர்த்தடிக்கிறான். இந்த அர்ஜுனன் வஜ்ரபாணியான இந்திரனாலும் யுத்தத்தில் ஜயிக்கமுடியாதவன். வீரர்களான தேவர்கள், அஸுரர்கள், ராக்ஷஸர்கள் ஆகிய இவர்களனைவரும் ஒன்றுசேர்ந்தாலும் என்னையும் ஜயிப்பதற்குச் சக்தியுள்ளவர்களாகார்கள். அவ்வாறிருக்க, மிக்ககோபங்கொண்ட அர்ஜுனனைத்தவிர மகாரதர்களான மனிதர்கள் என்னை ஜயிப்பதற்குச்சக்தியற்றவர்களென்பதில் யாதுஸந்தேகம்? இதை யான் ஸத்தியமாக உனக்குச்சொல்லுகிறேன்' என்றார். இவ்வாறாக அவ்விருவரும் பேசிக்கொண்டிருக்குங்கால், பல்குனன் யுத்தகளத்தில் சிகண்டியைமுன்னிட்டுக்கொண்டு கூர்மையான அம்புகளாலே பீஷ்மரையடித்தான். பிறகு காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனனால் கூர்மையானபாணங்களால் நன்றாகப்பீடிக்கப்பட்ட அந்தப்பீஷ்மர் புன்சிரிப்புடையவர்போலத் துச்சாஸனனைப் பார்த்து, 'வஜ்ராயுதத்திற்கும் இடிக்கும் ஒப்பான தாக்குதலையுடையவைகளும் நல்லகணுக்களுள்ளவைகளும் நன்றாகத்தீட்டப்பட்டவைகளும் ஒன்றன்பின்ஒன்றாகத் தொடர்ந்து தொடுக்கப்படுகின்றவைகளுமான இந்த அம்புகள் சிகண்டியுடையனவல்ல. இவைகள் மர்மஸ்தானங்களைப் பிளக்கின்றன; திடமான கவசங்களை உடைக்கின்றன; உலக்கைகள்போலத்தாக்கி எனக்குஹிம்ஸையை உண்டுபண்ணுகின்றன. இந்தப்பாணங்கள் சிகண்டியுடையனவல்ல. வஜ்ராயுதமும் யமதண்டமும் போலத் தாக்குகின்றவைகளும் வஜ்ரத்தினுடையவேகம்போல ஒருவராலும் தாங்கமுடியாதவேகமுடையவைகளுமான இந்தப்பாணங்கள் என்பிராணனைத் தபிக்கச்செய்கின்றன. இந்தப்பாணங்கள் சிகண்டியுடையனவல்ல. கதாயுதமும் பரிகாயுதமும்போலத் தாக்குகின்றவைகளும் யமதூதர்கள்போலவருகின்றவைகளுமான இந்தப்பாணங்கள்

என்பிராணனைநாசஞ்செய்கின்றனபோலும். இந்தப்பாணங்கள் சிகண்டியுடையனவல்ல. மிக்கமேகப்பங்கொண்டவையும் அடிக்கடிநாவினால் நக்கிக்கொள்ளுகின்றவையும் விஷத்தினால் அதிகரித்தவையுமான ஸர்ப்பங்கள்போன்றஇந்தப்பாணங்கள் என்னுடையமர்மஸ்தானங்களில் பிரவேசிக்கின்றன. இவைகள் சிகண்டியுடையனவல்ல. இவைகள் அர்ஜுனனுடையபாணங்களே. இவைகள் சிகண்டியினுடையனவல்ல. [1] நண்டுக்குஞ்சுகள் பிறக்குங்காலத்தில் தாய்நண்டைப்பிளப்பதுபோல இந்தஅர்ஜுனனுடையபாணங்கள் என்அங்கங்களைப் பிளக்கின்றன. காண்டீவத்தைவில்லாகக்கொண்டவனும் வானரக்கொடியையுடையவனும் ஜயசீலனும் வீரனுமானஅர்ஜுனனைத்தவிர மற்றஅரசர்கள் எல்லோரும் எனக்குத்துன்பத்தையுண்டுபண்ண வல்லமையுள்ளவர்களாகார்கள்' என்றார்.

பாரதரே! சந்தனுபுத்திரரானபீஷ்மர் இவ்வாறுசொல்லிப் பிறகு பாண்டுபுத்திரனைஎரிக்கஎண்ணங்கொண்டவர்போல அவன்மீது சக்தியைப் பிரயோகித்தார். பாரதகுலத்தில்பிறந்தவரே! அந்தரணகளத்தில் குருவீரர்களனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அர்ஜுனன் இந்தப்பீஷ்மருடையஅந்தச்சக்தியை மூன்றுபாணங்களாலே மூன்றாகவெட்டிக் கீழேதள்ளினான். பிறகு, காங்கேயர் பின்புமேரக்கூடியமிருத்யு ஜயம்இரண்டில்ஒன்றைவிரும்பிப் பொன்னால்அலங்கரிக்கப்பட்டகேடகத்தையும் கத்தியையும் கையிலெடுத்தார். ரதத்தினின்றுகீழேஇறங்குவதற்குள் அவர்கையிலுள்ள அந்தக்கேடகத்தை அர்ஜுனன் அம்புகளாலே நூறுதுண்டுகளாக்கினான். அது ஆச்சரியமாயிருந்தது. பிறகு யுதிஷ்டிரராஜர் தம்முடையஸைனியங்களைப் பார்த்து, 'காங்கேயரைக்குறித்து எதிர்த்துச்செல்லுங்கள். அணுவளவுகூட உங்களுக்குப் பயம்வேண்டாம்' என்றுஏவினார். பிறகு அந்தப் பாண்டவஸைனிகர்கள் தோமரங்களோடும் ஈட்டிகளோடும் பாணஸமூகங்களோடும் பட்டஸங்களோடும் நல்லவாள்களோடும் கூர்மையுள்ள நாராசங்களோடும் வத்ஸதந்தங்களோடும் பல்லங்களோடும் அந்தப் பீஷ்மர்ஒருவரையே எல்லாப்பக்கங்களிலும் எதிர்த்துஓடிவந்தார்கள். பிறகு பாண்டவர்களுடையபயங்கரமானஸிம்மநாதமானது அப்பொழுதுதோன்றியது. அவ்வாறே பீஷ்மருடையஜயத்தைவிரும்புகின்றவர்களாக உம்முடையபுத்திரர்களும் ஸிம்மநாதஞ்செய்தார்கள். கௌரவர்களனைவரும் பீஷ்மரொருவரையே பாதுகாத்தனர். ஸிம்மநாதங்களை

[1] 'மாகமாம் ஸேகவாஇவ' என்பது மூலம்.

யும் செய்தனர். ராஜேந்திரரே! பத்தாவதுநாளில் பீஷ்மருக்கும் அர்ஜுனனுக்கும் நேர்ந்த அந்தச் சண்டையில் உம்மைச்சேர்ந்தவீரர்களுக்குப் பகைவர்களுடன் கைகலந்தபோர் நடந்தது. ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு போர்புரிகின்ற ஸைனிகர்கள் கோரமான ஸமுத்திரத்தினுடைய நீர்ச்சுழல்போல ஒரு முகூர்த்தகாலம் சுழன்றார்கள். அப்பொழுது பூமி ரக்தத்தால் நனைக்கப்பட்டுப் பயங்கரமாயிருந்தது. ஸமமானதரையும் மேடுபள்ளமும் ஒன்றுமே காணப்படவில்லை. அந்தப் பத்தாவதுநாளில் அந்தப்பீஷ்மர் பதினாயிரம்புத்தவீரர்களைக்கொன்று தாம் மர்மஸ்தானங்கள் உடைக்கப்பெற்று யுத்தத்தில் நின்றார். பிறகு அந்தப்போர்முகத்தில் பார்த்தனும் கையில்விற்பிடித்து நின்றுகொண்டு கௌரவஸைனியங்களினிடையில்பிரவேசித்து அச்சேனையை ஓடும்படிசெய்தான். பாண்டவர்கள் பீஷ்மருடன் வந்திருக்கின்ற அனைவரையும் பாணங்களாலே துரத்தியடித்ததாகிய அவர்களுடைய ஆச்சரியகரமானபராக்கிரமத்தை அந்தயுத்தத்தில் நாங்கள் கண்டோம். நாங்கள் வெள்ளைக்குதிரைகளையுடையவனும் குந்திபுத்திரனுமான அர்ஜுனனிடத்தினின்றுபயந்து கூர்மையான ஆயுதங்களால் பீடிக்கப்பட்டு யுத்தத்தில் அப்பொழுது விரைவாக ஓடினோம். [1] ஸௌவீரர்கள், கிதவர்கள், கீழ்நாட்டுவீரர்கள், மேனாட்டுவீரர்கள், வடநாட்டுவீரர்கள், மாலவர்கள், அபீஷாஹர்கள், சூரஸேனர்கள், சிபிகள், வஸாதிகள், ஸால்வர்கள், திரிகர்த்தர்கள், அம்பஷ்டர்கள், கேகயர்கள் ஆகிய இந்த [2] மஹாத்மாக்களெல்லாரும் அர்ஜுனனுடையபாணத்தால் அடிக்கப்பட்டுக் காயங்களால் துன்பத்தையடைவிக்கப்பட்டவர்களாகி யுத்தகளத்தில் அர்ஜுனனோடு [3] போர்புரிகின்றபீஷ்மரைவிட்டுவிலகினார்கள். பாண்டவவீரர்களனைவரும் தனியாயிருக்கிற அந்தப்பீஷ்மரை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு எல்லாக்கௌரவர்களையும் துரத்தியடித்துச் சரமாரிகளையுமிறைத்தார்கள். மன்னரே! பீஷ்மருடையரதத்தைக்குறித்து, 'கீழேசாய்த்துவிடுங்கள்; பிடியுங்கள்; போர்புரியுங்கள்; அறுங்கள்' என்றொழியாதசப்தந்தோன்றியது. ராஜரே! யுத்தத்தில் நூறுநூறாகவும் ஆயிரம்ஆயிரமாகவும் (சத்துருக்களைக்) கொன்ற அந்தப்பீஷ்மருடையதேகத்தில் பிளக்கப்படாதஇடம் இரண்டங்குலஇடைவெளிகூட இல்லை. பல்குனனால் யுத்தத்தில் கூர்மையான முனையுள்ள அம்புகளாலே நொறுக்கப்பட்டு இவ்விதநிலைமையையடைந்திருக்கின்ற உமதுபிதாவானபீஷ்மர் கிழக்குமுகமாக ரதத்தினின்று

[1] பொருந்தாமையால் அதிகபாடமான மூன்றரைசுலோகங்கள் விடப்பட்டன. [2] வேறுபாடம். [3] வேறுபாடம்.

கீழேவிழுந்தார். பாரதரே ! ஸூரியன் அஸ்தமிக்கச்சிறிதுநேரமிருக்கை
யில் உம்முடையபுத்திரர்கள்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீஷ்
மர் ரதத்தினின்றுகீழேவிழ, ஆகாயத்தில் யுத்தத்தைப்பார்க்கவந்திருக்
கிறதேவர்கள் அரசர்கள் இவர்களுடைய 'ஆ! ஆ!' என்கிற மிக்கபெரி
தானசப்தமுண்டாயிற்று. ரதத்தினின்றுகீழேவிழுகின்ற மஹாத்மா
வான பிதாமஹரைக்கண்டு அவருடன்கூடவே எங்களெல்லோருடைய
மனங்களும் கீழேவிழுந்தன. எல்லாவில்லாளிகளுக்கும்த்வஜம்போன்
றவரும் மிக்கபுஜபலமுள்ளவருமான அந்தப்பீஷ்மர் அறுத்துத்தள்ளப்
பட்ட இந்திரத்துவஜம்போலப் பூமியை எதிரொலியிடும்படிசெய்து
கொண்டு கீழேவிழுந்தார். அம்புத்திரள்களால் நன்றாகமூடப்பட்டிருக்
கிற அந்தப்பீஷ்மர் பூமியைத்தொடவில்லை. ரதத்தினின்றுகீழே
விழுந்து சரதல்பத்தில்படுத்திருக்கின்றவரும் மகாவில்லாளியும் புருஷ
சிரேஷ்டருமான இந்தப்பீஷ்மரைத் தெய்வத்தன்மைவந்து அடைந்
தது. மேகம் வர்ஷித்தது. பூமியும் நன்றாகநடுங்கியது. ஸூரியன்தக்ஷி
ணாயனத்திலிருக்கும்பொழுது அந்தப்பீஷ்மர் கீழேவிழுகின்றவராகக்
காணப்பட்டார். பாரதரே ! வீரரானபீஷ்மர் காலத்தை ஆலோசித்துப்
பிரஜ்ஞையையடைந்தார்; 'மஹாத்மாவும் கங்காபுத்திரரும் எல்லா
வில்லாளிகளுள்ளும் உத்தமரும் காலத்துக்குக் கர்த்தாவும் நரசிரேஷ்
டருமானபீஷ்மர் தக்ஷிணாயனம்நேர்ந்திருக்குங்காலத்தில் எவ்வாறு
பிராணனைவிட்டார்?' என்னும் திவ்யவாக்குக்களை ஆகாயத்தில் எல்லாப்
பக்கங்களிலும் கேட்டார். காங்கேயர் அவைகளைக்கேட்டு நல்லகதியை
யடையவேண்டுமென்கிறவிருப்பத்தோடு, 'உத்தராயணத்தைவிரும்பி
னவனாக யான் இதோ உயிரோடிருக்கிறேன். பூமியில்விழுந்தாலும்
நான் பிராணன்களைத் தரிப்பேன்' என்று தேவர்களைப்பார்த்து மறு
மொழிகூறினார். ஹிமவானுடையகன்னிகையான கங்காதேவியானவள்
அந்தப்பீஷ்மருடைய அந்தஅபிப்பிராயத்தையறிந்து அந்தரணகளத்
தில் மஹரிஷிகளை ஹம்ஸவடிவத்துடன் அனுப்பினாள். பிறகு, மானஸ
தடாகத்தில்வஸிக்கின்ற அந்தஅன்னப்பறவைகள் எந்தஇடத்தில் புரு
ஷசிரேஷ்டரும் கௌரவர்களுக்குப்பிதாமஹருமானபீஷ்மர் சரதல்பத்
தில்படுத்திருக்கிறாரோ அவ்விடத்திற்கு அவரைப்பார்ப்பதற்கு ஒன்று
கூடி விரைவுடன்வந்தன. ஹம்ஸரூபிகளான அந்தரிஷிகளோ பீஷ்மரை
யடைந்து குருகுலோத்தமரான அவர் சரதல்பத்திலிருப்பதைக்கண்
டார்கள். கற்றறிந்தவர்களான அந்தரிஷிகள் மஹாத்மாவும் கங்காபுத்திர
ரும் பரதசிரேஷ்டருமான அந்தப்பீஷ்மரைக்கண்டு பிரதக்ஷிணஞ்செய்து
ஸூரியன் தக்ஷிணாயனத்திலிருப்பதையும்பார்த்து ஒருவரோடொருவர்

ஆலோசனைசெய்து 'மஹாத்மாவும் ஸத்புருஷருமானபீஷ்மர் தக்ஷிணாயனத்தில் எவ்வாறு மரணத்தையடையலாம்?' என்று சொன்னார்கள். இவ்வாறுசொல்லிவிட்டு அந்தஹம்ஸங்கள் தெற்குத்திக்கைநோக்கிப் புறப்படஆரம்பித்தன. பாரதரே! மஹாபுத்தியுள்ளவரும் சந்தனுபுத்திரருமானபீஷ்மர் அவைகளைப்பார்த்து ஆலோசித்து, 'ஹம்ஸங்களே! சூரியன் தக்ஷிணாயனத்திலிருக்கும்பொழுது நான் ஒருகாலும் லோகாந்தரத்தையடையமாட்டேன். இது நிச்சயமாக என்மனத்திலிருக்கின்றது. சூரியன் உத்தராயணத்தை அடைந்தபின் என்னுடையபுராதனமான ஸ்தானத்தை அடையப்போகிறேன். ஸத்தியமாக உங்களுக்கு நான் சொல்லுகிறேன். உத்தராயணத்தைக்கருதியே நான் பிராணனைத் தரிக்கப்போகிறேன். பிராணனைவிடுவதென்பது என்னிஷ்டத்தைப் பொறுத்தது. இது நிச்சயம். ஆகலால், உத்தராயணத்தில்மரிக்கஎண்ணங்கொண்டு நான் பிராணனைத் தரிக்கப்போகிறேன். மகாத்மாவான அப்படிப்பட்டஎன்பிதாவினாலே எனக்கு, 'உனக்கு உன்னிஷ்டப்படி மரணமுண்டாகட்டும்' என்று எந்தவரன் கொடுக்கப்பட்டதோ அது என்விஷயத்தில் ஸத்யமாகட்டும். ஆகலால் உயிர்நீங்குதலானது நிச்சயமாகஸம்பவிக்கப்போவதனால் அக்காலம்வரையில் நான் பிராணனைத் தரிப்பேன்' என்றுசொன்னார். அந்தஹம்ஸஸ்வரூபிகளான தேவரிஷிகளைப்பார்த்து அப்பொழுது இவ்வாறுசொல்லிவிட்டு அந்தப்பீஷ்மர் சரதல்பத்தையடைந்து படுத்திருந்தார். கௌரவர்களுக்குத்தலைமையானவரும் மகாபராக்கிரமசாலியுமானபீஷ்மர் இவ்வாறு சாய்ந்தவுடன் பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் ஸிம்மநாதஞ்செய்தனர். பாரதர்களிற் சிறந்தவனே! பாரதர்களுக்குப்பிதாமகரும் மஹாபலசாலியுமான அந்தப்பீஷ்மர்கொல்லப்பட்டவுடனே உம்முடையபுத்திரர்கள் யாதொன்றையும் அறியவில்லை. அப்பொழுது கௌரவர்களுக்கு அதிகமானமதிமயக்கம் உண்டாகியது. பிறகு, கிருபர் துர்யோதனன் முதலானவர்கள் பெருமூச்சுவிட்டுக்கொண்டு அழுதார்கள்; துக்கத்தினாலே பொறிகலங்கி நெடுநேரம்திகைத்துநின்றார்கள். மகாராஜரே! கௌரவர்களனைவரும் மனக்கவலையுற்றார்கள். யுத்தத்தில் மனத்தைச்செலுத்தவில்லை. கௌரவர்கள் தொடைநடுக்கமுற்றுப் பாண்டவர்களை எதிர்த்துச் செல்லவில்லை. அரசரே! ஒருவராலும்கொல்லத்தகாதவரும் மகாதேஜஸ்வியுமான சந்தனுபுத்திரரானபீஷ்மர் கொல்லப்பட்டவுடனே அந்தக்குருசிரேஷ்டர்கள் துக்கத்தால் பிடிக்கப்பட்டவர்களானார்கள். வேந்தரே! விரைவாகக் குருராஜனான துரியோதனனுடையநாசமானது கௌரவர்களால் ஊகிக்கப்பட்டது. உத்தமர்களான யுத்தவீரர்கள்

கொல்லப்பட்டும் கூர்மையுள்ள அம்புகளாலே அடிக்கப்பட்டும் நாங்கள் அர்ஜுனனால் ஜயிக்கப்பட்டுச் செய்யவேண்டியவிஷயத்தை அறியவில்லை. சூரர்களும் பரிகாயுதம்போன்ற கைகளையுடையவர்களுமான எல்லாப்பாண்டவர்களும் ஜயத்தையும் பரலோகத்தில்உத்தமகதியையுமடைந்து மகாசங்கங்களை முழக்கினார்கள். ஜனேஸ்வரரே! ஸோமகர்களும் பாஞ்சாலர்களும் மிக்கமகிழ்ச்சியடைந்தார்கள். பிறகு ஆயிரக்கணக்கான ஜயபேரிகள்முழங்கவே மகாபலசாலியானபீமஸேனன் அதிகமாகத்தோள்தட்டி ஸிம்மநாதம்செய்தான். பிரபுவான காங்கேயர்கொல்லப்பட்டவுடனே இருதிறத்துச்சேனைகளிலுமுள்ள வீரர்கள் சஸ்திரங்களைக்கீழேஎறிந்துவிட்டு ஆங்காங்கு மனக்கவலையுற்றார்கள். சிலர் உரக்கரோதனஞ்செய்தார்கள். மற்றவர்கள் ஓடினார்கள். அவ்வாறே இன்னும் சிலர் மூர்ச்சையடைந்தார்கள். சிலர் க்ஷத்திரியஜாதியை நிந்தித்தார்கள். சிலர் பீஷ்மரைப் பூஜித்தார்கள். ரிஷிகளும் பித்ருக்களும் பெரியவிரதமுள்ள பீஷ்மரைப் புகழ்ந்தார்கள். பரதர்களுடையமுன்னோர்களும் பீஷ்மரைப்புகழ்ந்தனர். வீர்யமுடையவரும் புத்திசாலியுமானபீஷ்மர் யோகதசையை அடைந்து மஹோபநிஷத்தை ஜபித்துக்கொண்டு தம்நிர்யாணகாலத்தை எதிர்பார்த்திருந்தார்'' என்று கூறினான்.

---

## நூற்றிருபதாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(எல்லோரும் பீஷ்மரை அபிவாதனஞ்செய்ததும் அர்ஜுனன் பீஷ்மருக்கு அம்புகளாலே தலையணை அமைத்ததும்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பலசாலியும் தேவருக்குஒப்பானவரும் இளமைதொடங்கிப்ரம்மசாரியாயிருக்கின்றவருமான பீஷ்மராலே விடுபட்டிருக்கின்றயுத்தவீரர்கள் அப்பொழுது எவ்வாறானார்கள்? பீஷ்மர் தயையினால் துருபதபுத்திரனான சிகண்டியை அடிக்காமலிருந்தபொழுதே பாண்டவர்களால் கௌரவர்களும் மற்றவர்களும் கொல்லப்பட்டவர்களென்றே நான் எண்ணுகிறேன். துர்ப்புத்தியுள்ளவனான என்னுடையபிதா இப்பொழுதே கொல்லப்பட்டாரென்பதைக் கேட்டேன். அதைக்காட்டிலும் என்ன கஷ்டம் உண்டாகப்போகிறது? இதனைப்பெருந்துக்கமென்று நினைக்கிறேன். ஸஞ்சய! பீஷ்மர்கொல்லப்பட்டாரென்பதைக் கேட்டும் நூறுகச்சிதறிப்போகாமலிருந்த

லால் என்மனம் நிச்சயமாகவே உருக்கினலாகியது. நல்லவிரதமுள்ளவனே! கௌரவர்களுள்ஸிம்மம்போன்றவரும் ஜயத்தைவிரும்புகின்றவரும் யுத்தத்தில்கொல்லப்பட்டவருமான அந்தப்பீஷ்மராலே வேறெந்தக்காரியம் செய்யப்பட்டதோ அதனை எனக்குச்சொல்லு. யுத்தத்தில் தேவவிரதர்கொல்லப்பட்டாரென்பதை அடிக்கடி (நினைத்து) நான் பொறுக்கவில்லை. எவர் முன்பு ஜமதக்னிகுமாரரானபரசுராமராலும் திவ்யாஸ்திரங்களால் கொல்லப்படவில்லையோ அவர் பாஞ்சாலராஜவம்சத்தில்உதித்தவனும் த்ருபதனுடையகுமாரனுமானசிகண்டியினல் எவ்வாறு கொல்லப்பட்டார்?" என்றுவினவ,ஸஞ்சயன்சொல்லலானன்.

"கௌரவர்களுக்குப் பிதாமஹரானபீஷ்மர் ஸாயங்காலத்தில் கௌரவர்களை விசனமடையும்படிசெய்துகொண்டும் பாஞ்சாலர்களைச் சந்தோஷிக்கச்செய்துகொண்டும் பூமியில் விழுந்தார். அப்பொழுது அனேகஅம்புகளாலேநன்குபிளக்கப்பட்டவரும் ரதத்தினின்றுகீழே விழுந்தவருமான அந்தப்பீஷ்மர் பூமியைத்தொடாமலே சரதல்பத்தையடைந்து சயனித்துக்கொண்டிருக்கிறார். யுத்தத்தில்ஜயம்பெறுபவரும் கௌரவர்களுக்கு எல்லைமரம்போன்றவருமானபீஷ்மர் விழுந்தவுடனே பிராணிகளுடைய 'ஆ! ஆ!' என்கிறசப்தமானது நெருங்கியதாயிற்று. அரசரே! இருதிறத்துச்சேனைகளிலுமுள்ளக்ஷத்தியர்களைப் பயம் வந்துஅடைந்தது. வேந்தரே! கவசங்களும் கொடிகளும் சிதறப்பெற்றவரும் சந்தனுபுத்திரருமான பீஷ்மரைக்கண்டு கௌரவர்களும் பாண்டவர்களும் நாற்புறத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். சந்தனுகுமாரரானபீஷ்மர்கொல்லப்பட்டவுடனே ஆகாயம்இருளால் மூடப்பட்டதாயிற்று; சூரியன் ஒளியையிழந்தவனானன்; பூமியும் அலறியது. படுத்திருக்கின்ற புருஷசிரேஷ்டரான பீஷ்மரைக்கண்டு எல்லாப்பிராணிகளும், 'இவர் பிரம்மவித்துக்களுள் சிரேஷ்டர். இவர் எப்பொழுதுமே பிரம்மவித்துக்களுக்குக்கதி' என்றுபேசிக்கொண்டன. ரிஷிகள் சரதல்பத்தில் சயனித்திருக்கின்றவரும் பரதர்களுக்குப்பிதாமஹருமான பீஷ்மரைக்கண்டு, 'இந்தப்புருஷசிரேஷ்டர் முன்பு பிதாவானசந்தனு காமத்தால்பீடிக்கப்பட்டிருப்பதுதெரிந்து அந்தப்பிதாவினுடைய இஷ்டத்திற்காகத் தம்மை ஊர்த்வரேதஸாக்கிக்கொண்டார்,' என்று ஸித்தர்களோடும் சாரணர்களோடும்கூடிப் பேசிக்கொண்டார்கள். ஐயா! பரதர்களுக்குப் பிதாமஹரும் சந்தனுபுத்திரருமானபீஷ்மர் கொல்லப்பட்டவுடனே உமதுபுத்திரர்கள் ஒன்றையுமறியவில்லை. பாரதரே! (கௌரவர்கள்) துக்கத்தினல்முகம்வாடி ஒளியிழந்து வெட்கி லஜ்ஜையுடன் தலைகுனிந்துநின்றார்கள். பாண்டவர்களோ ஜயத்தை

யடைந்து யுத்தமுனையில்நின்ற எல்லோரும் ஸ்வர்ணத்தால் அலங் கரிக்கப்பட்ட மகாசங்கங்களை ஊதினார்கள். மாசற்றவரே! மகாராஜரே! ஸந்தோஷத்தினாலே ஆயிரக்கணக்கான ஜயபேரிவாத்தியங்கள் முழக் கப்படவே மஹாபலசாலியும் குந்திபுத்ரனுமானபீமஸேனன் மிக்க பலசாலியானசத்ருவைப் பலத்தினால்கொன்று மிகுந்தஸந்தோஷத் துடன் விளையாடுவதை நாங்கள் கண்டோம். அப்பொழுது கௌரவர் களுக்கு அதிகமானமதிமயக்கம் உண்டாகியது. கர்ணன் துரியோ தனனிருவரும் அடிக்கடி பெருமூச்சுவிட்டார்கள். கௌரவர்களுக் குப்பிதாமகரான பீஷ்மர் அவ்வாறு கீழேதள்ளப்பட்டவுடனே எல் லாம் ஹாஹாகாரங்கொண்டதாகவும் வரம்புகடந்ததாகவுமிருந்தது. பீஷ்மர்சாய்ந்ததைக்கண்டு உமதுகுமாரனான துச்சாஸனன் அதிவேகத் துடன் துரோணருடையபடையை அடைந்தான். புருஷசிரேஷ்ட னும் வீரனுமான துச்சாஸனன் பிராதாவான துரியோதனனால்அனுப் பப்பட்டுக் கவசமணிந்து தன்னுடையசேனையை உத்ஸாகமடையும் படிசெய்துகொண்டு தன்னுடையஸைனியத்துடன் அவரிடம்சென் றான். மகாராஜரே! அவ்வாறுவருகின்றதுச்சாஸனனைப்பார்த்துக் கௌ ரவர்கள், 'இவன் என்னசொல்லப்போகிறானோ?' என்று அவனைச் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு குருகுலத்தில்பிறந்தவனான துச்சாஸ னன், பீஷ்மர் கொல்லப்பட்டாரென்பதைத் துரோணருக்குக்கூறி னான். பரதர்களிற்சிறந்தவரே! துரோணர் அப்பொழுது அவ்வித அப்பிரியமானவார்த்தையைக்கேட்டு மூர்ச்சையடைந்தார். ஐயா! பிரதாபசாலியான அந்தப்பாரத்வாஜர் விரைவாகப்பிரஜ்ஞையடைந்து தம்முடையஸைனியங்களை அப்பொழுது (யுத்தம்செய்வதினின்று) தடுத்தார். பாண்டவர்களும் கௌரவர்கள்யுத்தத்தினின்று திரும்பி விட்டதுகண்டு வேகமுள்ளகுதிரைகளையுடையரதங்களாலே தங்க ளுடையஸைனியங்களை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார் கள்.

எல்லாச்ஸைனியங்களும் திரும்பியவுடன் அரசர்களனைவரும் கவசத்தைக்கழற்றிவிட்டுப் பீஷ்மரை அடைந்தார்கள். பிறகு லக்ஷக் கணக்கானயுத்தவீரர்கள் யுத்தத்தைவிட்டொழிந்து பிரம்மதேவரிடம் தேவர்கள்வருவதுபோல மகாத்மாவானபீஷ்மரிடம் வந்தார்கள். அந் தப்பாண்டவர்களும் கௌரவர்களும் படுத்திருப்பவரும் பரதசிரேஷ் டருமான பீஷ்மரிடம்சென்று அபிவாதனஞ்செய்து எதிரில்நின்றார் கள். பிறகு தர்மாத்மாவும் சந்தனுபுத்திருமான பீஷ்மர் அப்பொ ழுது நமஸ்கரித்து எதிரில் நிற்கின்றபாண்டவர்களையும் கௌரவர்களை

யும்பார்த்துப் பின்வருமாறு கூறலானூர். 'மகாபாக்கியசாலிகளே! உங்களுக்கு நல்வரவா? மகாரதர்களே! உங்களுக்குநல்வரவா? தேவர்களுக்குஒப்பானவர்களே! உங்களைப்பார்த்ததனாலே நான் ஸந்தோஷமடைகிறேன்' என்றார். பாரதரே! பீஷ்மர் தொங்குகின்றதலையோடு அவர்களை இவ்வாறுபுகழ்ந்து மற்றொருபக்கத்திலிருக்கின்ற உமதுபிள்ளைகளைப்பார்த்து, 'என்தலை அதிகமாகத்தொங்குகிறது. தலையணை ஒன்று கொடுங்கள்' என்றுகூறினார். பிறகு, அரசர்கள் சிறியனவாயும் மிருதுவாயுமுள்ளசிறந்ததலையணைகளைக் கொண்டுவந்தனர். பிதாமஹரானபீஷ்மர் அந்தச்சிறந்ததலையணைகளை விரும்பவில்லை. பிறகு புருஷசிரேஷ்டரானபீஷ்மர் அவ்வரசர்களைப் பார்த்துச் சிரிக்கிறவர்போலிருந்துகொண்டு 'அரசர்களே! வீரசயனங்களில் இவ்விதமான தலையணைகள் தகுந்தவைகளல்ல' என்றுகூறினார். பிறகு அவர் பாண்டுவின்புதல்வனும் நீண்டகைகளையுடையவனும் எல்லாஉலகங்களிலும் (சிறந்த) மகாரதனும் புருஷஸ்ரேஷ்டனுமான தனஞ்சயனைப்பார்த்து, 'தனஞ்சய! மகாபாகுபலமுள்ளவனே! அப்பா! என்தலை தொங்குகிறது. இத்தருணத்தில் எந்தத்தலையணை தகுந்ததென்று நீ எண்ணுகிறாயோ அதனை எனக்குக் கொடு' என்றுநியமித்தார். அர்ஜுனன் பெரிய வில்லைநாணேற்றிப் பிதாமகரைஅபிவாதனஞ்செய்து இருகண்களிலும்நீர்ததும்பப் பீஷ்மரைப்பார்த்து, 'குருசிரேஷ்டரே! சஸ்திரதாரிகளானவீரர்களனைவரிலும்உத்தமரே! ஒருவராலும்அவமதிக்கமுடியாதவரே! பிதாமஹரே! உமக்கு யான் அடிமை. நான் என்னசெய்ய வேண்டும்? கட்டளையிடுங்கள்' என்றிவ்விதம்சொன்னான். சந்தனுகுமாரரானபீஷ்மர், அந்தஅர்ஜுனனைப்பார்த்து, 'அப்பா! என்தலை தொங்குகிறது. இந்தவீரசயனத்தில் எந்தத்தலையணையைத் தகுந்ததென்றுஎண்ணுகிறாயோ அதனை எனக்கு இப்பொழுது கொடுக்க வேண்டும். குருசிரேஷ்ட! அர்ஜுன! எனக்குத் தலையணையை ஏற்படுத்து. வீர! வீரசயனத்திற்கு அநுகுணமானதலையணையை எனக்கு விரைவாகக்கொடு. பார்த்த! நீ அல்லவோ ஸமர்த்தன்; எல்லாவில்லாளிகளுள்ளும்சிரேஷ்டன்; க்ஷத்திரியதர்மத்தையறிந்தவன்; புத்தியையும் பலத்தையும் குணங்களையும் உடையவன்' என்றுகூறினார். சத்துருக்களை ஜயிப்பவனான பல்குனனும் அந்தமுயற்சியை, 'அவ்விதமே' செய்வதாகச்சொல்லிக் காண்டீவத்தையும் பதிவானகணுக்களுள்ள அம்புகளையுமெடுத்து அநுமந்திரித்து மகாத்மாவும் பாரதர்களுள் மகாரதருமான பீஷ்மரை அநுமதிகொடுக்கும்படிசெய்து மகா வேகமுள்ளவைகளும் மிக்ககூர்மையுள்ளவைகளுமான மூன்று அம்புக

ளாலே பீஷ்மருடையதலையைத் தூக்கிநிறுத்தினான். ஸவ்யஸாசியினால் தம்அபிப்பிராயம் அறியப்பட்டவுடன் பரதசிரேஷ்டரும் தர்மாத்மாவும் தர்மார்த்தங்களுடைய தத்துவங்களையறிந்தவருமான பீஷ்மர் மனக்களிப்படைந்தார். அவர் தலையணைகொடுத்ததனால் அர்ஜுனனைப் புகழ்ந்தார். பரதகுலத்திற்பிறந்தஎல்லாவீரர்களையுங் கண்ணால் பார்த்துவிட்டுப் பரதவம்சத்தில்பிறந்தவனும் குந்திபுத்திரனும் யுத்தஞ் செய்கின்றவீரர்களுள்சிறந்தவனும் அன்பர்களுக்குப்பிரீதியைவிருத்தி பண்ணுகின்றவனுமான அர்ஜுனனைநோக்கி, 'பாண்டவ! சயனத்திற்குத்தகுந்ததான தலையணை உன்னால் எனக்கு ஏற்படுத்தப்பட்டது. வேறுவிதமாக நீ செய்திருப்பாயானால் உன்னை நான் முன்னமே சபித்திருப்பேன். மிக்கபாகுபலமுள்ளவனே! க்ஷத்திரியதர்மங்களில் நிலைபெற்றவனும் சரதல்பத்தையடைந்தவனுமான க்ஷத்திரியன் யுத்தத்தில் இவ்வாறேபடுக்கவேண்டும்' என்றுகூறினார்.

இவ்வாறு அர்ஜுனனைப்பார்த்துச் சொல்லிவிட்டு, பாண்டவர்களையும் அவர்களோடுசேர்ந்த எல்லா அரசர்களையும் ராஜபுத்திரர்களையும் பார்த்துப் பின்வரும்வார்த்தையைச் சொல்லலானார். '(மன்னர்களே!) பாண்டவனாலேஏற்படுத்தப்பட்ட என்னுடையதலையணையைப் பாருங்கள். இந்தச்சயனத்தில் சூரியன் தெற்கினின்று வடக்கேதிரும்பும் வரையில் யான்படுத்திருக்கப்போகிறேன். அப்பொழுது யுத்தத்தினின்று மீண்டும்உயிரைத்தரித்திருக்கும்அரசர்கள் என்னைப் பார்ப்பார்கள். திவாகரன் உத்தமதேஜஸுள்ளதும் ஏழுகுதிரைகளுள்ளதுமான ரதத்தோடு குபேரனால்அடையப்பட்ட வடதிசையை அடையும் வரையில் என்னுடையபிராணன்களை அன்புக்குமிகஉரியநண்பர்களைப் போல நான்நிச்சயம்பாதுகாக்கப்போகிறேன். மன்னர்களே! நான்வஸிக்கும்இந்தஇடத்தில் அகழ்களைத்தோண்டவேண்டும். அனேகபாணங்களாலேநிறைக்கப்பட்டவனாகிய நான் இவ்வாறு இருந்துகொண்டே சூரியனைஉபாஸிக்கப்போகிறேன். மன்னர்காள்! வைரத்தைவிட்டுவிட்டு யுத்தத்தினின்றும்ஒழியுங்கள்' என்றுசொன்னார். பிறகு ஸமர்த்தர்களாலே நன்றாகக்கற்பிக்கப்பட்டவர்களும் (தேகங்களில்தைத்திருக்கின்ற) சல்யங்களைப்பிடுங்கும்விதத்தை அறிந்தவர்களுமானவைத்தியர்கள் எல்லாஉபகரணங்களோடும் பீஷ்மரிடம்வந்தார்கள். அந்தவைத்யர்களைக்கண்டு கங்காபுத்திரரானபீஷ்மர் உமதுபுத்திரனான துரியோதனனைப்பார்த்துப் பின்வருமாறு மொழிந்தார். 'கொடுக்கவேண்டியவைகளைக்கொடுத்து மரியாதைசெய்து வைத்தியர்களை அனுப்பிவிடலாம். இவ்வண்ணம்நேர்ந்தபிறகு வைத்தியர்களால் எனக்கு இப்பொழுது

செய்யத்தக்ககாரியம் என்ன இருக்கின்றது? க்ஷத்திரியதர்மத்தில்சிறந்த ஸர்வோத்தமமானகதியை நான் அடைந்தவனுயிருக்கிறேன். அரசர்களே! சரதல்பத்தையடைந்துள்ளஎனக்கு இவ்வாறு சிகித்ஸை செய்துகொள்வது தர்மமன்று. வேந்தர்களே! இவ்வம்புகளோடேயே நான் நெருப்பிலெரிக்கத்தக்கவன்' என்றூர். அந்தப்பீஷ்மருடைய அந்தவார்த்தையைக்கேட்டு உமதுபுத்திரனுன துரியோதனன் அவரவர்களுக்குத்தக்கபடி மரியாதைசெய்து வைத்தியர்களை அனுப்பிவிட்டான். பிறகு அங்குள்ளபற்பலதேசத்தரசர்கள் அளவற்றதேஜஸ்ஸுடையவரானபீஷ்மர் தர்மத்தில் நன்குநிலைபெற்றிருப்பதைக்கண்டு ஆச்சரியங்கொண்டனர். உமதுபிதாவானபீஷ்மருக்கு மன்னர்களும் மகாரதர்களும் வீரர்களும் ரக்தத்தால்நனைக்கப்பட்டவர்களுமான எல்லாப் பாண்டவர்களும் கௌரவர்களும் ஒன்றுகூடித் தலையணை ஏற்படுத்திக் கொடுத்துப் பிறகு மங்களகரமானசயனத்தில்படுத்திருப்பவரும் மகாத்மாவுமான அவரிடம்வந்து அபிவாதனஞ்செய்து மும்முறைவலம் வந்து அவருக்கு நாலுபக்கங்களிலும் ரக்ஷையைஏற்படுத்தி ஸாயங்காலமானதும் அதிகமனவருத்தமுற்றவர்களாகவும் தங்கள்தங்களுடையபாசறைகளையே நினைக்கின்றவர்களாகவும் தங்கள்தங்கள் இருப்பிடத்தை அடைந்தார்கள். மகாபலசாலியான ஸ்ரீமாதவர் பீஷ்மர் சாய்ந்ததைக்கண்டு தங்கள்ஸ்தானங்களை அடைந்தவர்களும் பிரீதியடைந்தவர்களும் மகாரதர்களுமானபாண்டவர்களுக்கருகில்வந்து அச்சமயத்தில் தர்மபுத்திரரானயுதிஷ்டிரரைப்பார்த்து, 'கௌரவ்யரே! தெய்வாதீனத்தால் நீர் ஜயசீலராகவிளங்குகிறீர். ஸத்யஸந்தரும் மகாரதரும் ஒருவராலும்கொல்லத்தகாதவருமானபீஷ்மர் பாக்கியவிசேஷத்தால் சாய்க்கப்பட்டார். ஸத்யஸந்தரும் மஹாரதரும் எல்லாச்சாஸ்திரங்களிலும்கரைகண்டவரும் மனிதர்களால் தனித்தும் தேவர்களோடு கூடியும் ஜயிக்கமுடியாதவருமானபீஷ்மர் நேத்திரத்தினுலேயே பகைவரைக்கொல்லும்திறமையுள்ளவரான உம்மைஎதிர்த்து (உமது) கோரமானநேத்திரத்தால் எரிக்கக்கப்பட்டார்' என்றுகூறினர். இவ்வாறு சொல்லியதைக்கேட்டதர்மராஜர் ஜநார்த்தனரைப்பார்த்துப் பின்வருமாறு மறுமொழிகூறினர்.

'உமது அருளால் வெற்றி; உம்முடையகோபத்தினுல் தோல்வி. கிருஷ்ணரே! பக்தர்களுக்குஅபயங்கொடுக்கின்ற நீரன்றோ எங்களுக்கு ரக்ஷகராயிருக்கிறீர்? கேசவரே! எவர்களுக்கு யுத்தத்தில் நீர் எப்பொழுதும் ரக்ஷகராகஇருக்கிறீரோ, எவர்களுக்கு எப்பொழுதும் ஹிதத்தைத்தேடுவதில் முயற்சியுள்ளவராகஇருக்கிறீரோ அவர்

களுக்கு ஜயமுண்டாவது ஆச்சரியகரமன்று. எல்லாவிதங்களாலும் உம்மைநாடியிருக்கின்றவர்களுக்கு (க்ஷேமம்உண்டாவது) ஆச்சரியமன்றென்பது என்னுடையஎண்ணம்' என்றார். இவ்வாறுசொல்ல ஜநார்த்தனர் அதனைக்கேட்டுப் புன்சிரிப்புடன், 'ராஜசிரேஷ்டரே! இப்படிச்சொல்வது உமக்கேஉரியதாகும்' எனமொழிந்தார்.

பத்தாவதுநாள் யுத்தம் முடிந்தது.

---

## நூற்றிருபத்தோராவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் தண்ணீர்கேட்டவுடன் அரசர்கள் குடத்தில்கொணர அதனையருந்தாமல் அர்ஜுனனைக்கேட்டதும், அவன் பாதாளகங்கையால் அவருக்குத் தாகசாந்திசெய்வித்ததும், அவர் அவனைப்புகழ்ந்து ஸமாதானஞ் செய்து கொள்ளும்படி துரியோதனனுக்குச் சொல்லியதும்.)

மகாராஜரே! அவ்விரவுவிடிந்தவுடனே எல்லாஅரசர்களும் பாண்டவர்களும் கௌரவர்களும் பீஷ்மரிடம்சென்றார்கள். கௌரவர்களுட்சிறந்தவரே! வீரசயனத்தில்படுத்திருக்கின்றவரும் க்ஷத்திரியசிரேஷ்டரும் வீரருமான அந்தப்பீஷ்மரை க்ஷத்திரியர்கள் அபிவாதனஞ்செய்து ஸ்தோத்திரம்செய்தார்கள். அந்தஇடத்தில் ஆயிரக்கணக்கானகன்னிகைகள் சென்று சந்தனப்பொடிகளையும் பொரிகளையும் புஷ்பமாலைகளையும் சாந்தனவரின்மீது எல்லாப்பக்கங்களிலும்வாரியிறைத்தார்கள். ஸ்திரீகளும் முதியவர்களும் சிறுவர்களும் பார்க்கிறவர்களான(மற்ற)ஸாதாரணஜனங்களும் உதிக்கின்றசூரியனைப் [1]பிராணிகள் விரும்புவதுபோலச் சந்தனுபுத்திரரானபீஷ்மரை விரும்பியடைந்தார்கள். நூற்றுக்கணக்கான தூரியவாத்யங்களும் அவ்விடம் கொண்டுவரப்பட்டன. அவ்வாறே [2]நடர்களும் [3]நர்த்தகர்களும் சில்பிகளும் குருகுலத்துவிருத்தரான பிதாமஹரிடம் வந்துசேர்ந்தார்கள். ராஜேந்திரரே! அந்தக்கௌரவர்களும் பாண்டவர்களும் ஒன்றுசேர்ந்து கவசங்களைக்கழற்றி ஆயுதங்களையும்கீழேவைத்துவிட்டுப் பீஷ்மருடைய அருகில்வந்து பழமைபோல அந்யோந்யம்பிரீதியுடன் வயதின்முறைப்படி ஒருவராலும்ஜயிக்கமுடியாதவரும் பகைவர்களைப் பீடிப்பவருமான தேவவிரதரைச் சுற்றிஉட்கார்ந்தார்கள். அனேகஅரசர்களாலே நிறைந்

---

[1] 'பூதானி' என்பது மூலம், 'கந்தர்வர்முதலானபிராணிகள்' என்பது பழையவுரை. [2], [3]. கூத்தாடுபவரின்வகைகள்.

ததும் பீஷ்மராலேவிளங்குகின்றதும் ஜ்வலிக்கின்றதுமான அந்தப்பாரதசபையானது ஆகாயத்தில் சூரியமண்டலம்போலப் பிரகாசித்தது. கங்காபுத்திரரைச்சூழ்ந்திருக்கும் அரசர்களுடைய அந்தச்சபையானது தேவேசரானபிரம்மதேவரை உபாஸிக்கின்றதேவர்களுடையகோஷ்டிபோல விளங்கியது. பரதரேறே! அம்புகளால்மிகவும்வாட்டப்பட்ட பீஷ்மர் வேதனையைத்தைரியத்தினால்பொறுத்துக்கொண்டு [1] ஸர்ப்பம்போலப்பெருமூச்சுவிட்டுக்கொண்டிருந்தார். பாணங்களால்எரிச்சலுண்டுபண்ணப்பட்டதேகமுள்ளவரும் ஆயுதங்களின் அடியினால் மூர்ச்சையடைபவருமான பீஷ்மர் அங்குநிற்கின்றமன்னர்களைப்பார்த்து, 'தீர்த்தம்வேண்டும்'என்றுசொன்னார். மன்னவரே! பிறகு அந்தக்ஷத்திரியர்கள் நான்குபக்கங்களினின்றும் பற்பலவிதபக்ஷ்யங்களையும் குளிர்ந்த தீர்த்தக்குடங்களையும் கொண்டுவந்தார்கள். சாந்தனவர் அருகில்கொண்டுவரப்பட்டதீர்த்தத்தைப்பார்த்து, (அரசர்களே!) கேவலம் மனிதர்களுக்குமாத்திரம்உரிய இந்தப்போகங்கள் இப்பொழுது என்னால் அநுபவிப்பதற்குத்தகுந்தவைகளல்ல. யான் மனிதர்களைவிட்டுவிலகிச்சரதல்பத்தைஅடைந்து சூரியசந்திரர்கள்திரும்புவதைமாத்திரம் எதிர்பார்த்தவனாகஇருக்கிறேன்' என்றுமொழிந்தார். [2] பாரதரே! சந்தனுபுத்திரரானபீஷ்மர் இவ்வாறுசொல்லி அரசர்களை நிந்தித்து, 'அர்ஜுனனைப்பார்க்கவிரும்புகிறேன்' என்றுகூறினார். பிறகு மிக்கபுஜபலமுள்ள அர்ஜுனன் பிதாமஹருடையஅருகில்வந்து அபிவாதனஞ்செய்து கைகளைக்குவித்துக்கொண்டு வணக்கத்துடன் எதிரில்நின்றுகொண்டு, 'யான் யாதுசெய்யக்கடவேன்?' என்றுகேட்டான். மன்னரே! நமஸ்காரஞ்செய்து எதிரில்நிற்கின்றபாண்டுபுத்திரனானதனஞ்சயனைப்பார்த்துத் தர்மாத்மாவானபீஷ்மர் பிரீதியுடன் கூறலானார். 'அர்ஜுன! உன்னுடைய பாணங்களாலேசூழப்பட்ட என்னுடையசரீரம் எரிக்கப்படுகிறதுபோலிருக்கின்றது. என்னுடையமர்மஸ்தானங்கள் வருத்தமடைகின்றன. என்வாயும் உலர்ந்துபோகிறது. அர்ஜுன! வேதனையினால் சரீரம்துன்பமடைந்திருக்கின்றஎனக்கு நீ தீர்த்தத்தைக்கொடு. மகாவில்லாளியான அர்ஜுன! நீதான் சாஸ்திரத்தில்சொல்லியமுறைப்படி

---

[1] வேறுபாடம்.

[2] வய: வாஸ்ரா த்/மோவாஸா: மொசய ந்த—மொசயம்।மொச யெநாஷிவனெ—ஃந மொசய ந்த—மொசயம்॥ என்பது அதிகபாடம்;

'மன்னர்களே! ஸ்வர்க்கஸம்பந்தம்பெறுததும் பசுஸம்பந்தம்பெறுததும் அக்னிமயமானபாணத்தினாலேபூமியினின்றுகொண்டுவரப்பட்டதுமான தேஜோமயமானதீர்த்தத்தை யான் பானம்பண்ணப்போகிறேன்' என்பது பொருள்.

தீர்த்தம்கொடுக்கச் சக்தியுள்ளவனுயிருக்கிறாய்?' என்றார். வீர்யமுடைய வனான அர்ஜுனனே, 'அவ்வாறேஆகட்டும்' என்றுசொல்லிவிட்டு ரதத்தின்மீதேறிக் காண்டீவம்என்னும்வில்லை உறுதியாகநாணேற்றி இழுத்தான். இடிமுழக்கம்போன்ற அந்தஅர்ஜுனனுடையநாணொலியையும் தலத்வனியையும்கேட்டு எல்லா அரசர்களும் எல்லாப்பிராணிகளும் நடுங்கினார்கள். பிறகு ரதிகர்களுள்உத்தமனும் குந்தியின்புதல்வனுமான அந்தப்பாண்டவன் படுத்துக்கொண்டிருப்பவரும் சஸ்திரதாரிகளானஎல்லாச்சூரர்களுள்ளும்சிறந்தவரும் பரதசிரேஷ்டருமான பீஷ்மரை ரதத்தோடுபிரதக்ஷிணஞ்செய்து ஜ்வலிக்கின்றஒருபாணத்தைவில்லிற்பூட்டி அதைப் பர்ஜந்யாஸ்திரமந்திரத்தினால் அபிமந்திரித்து எல்லாஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீஷ்மருடையவலப்பக்கத்தில் பூமியைப்பிளந்தான். பிறகு நிர்மலமும் மங்களகரமுமானநீர்ப்பெருக்கானது பூமியினின்றும் மேல்நோக்கிப் பெருகஆரம்பித்தது. பிறகு பார்த்தன், குளிர்ந்ததும் அமிருதம்போன்றதும் திவ்யமானமணமும் சுவையுமுள்ளதுமான ஜலத்தினுடையகுளிர்ந்த தாரையினாலே குருகுலத்திற்பிறந்தவர்களுள்சிறந்தவரும் தெய்வத்தன்மையுள்ளவரும் சிறந்தபராக்கிரமமுள்ளவருமானபீஷ்மரைத் திருப்திசெய்தான். இந்திரன்போல அரியசெய்கையைச்செய்கின்றபார்த்தனுடையஅந்தச்செய்கையினாலே அரசர்கள் மிக்கஆச்சரியத்தையடைந்தார்கள். மனிதர்களின் பராக்ரமத்துக்கு மேற்பட்டபராக்ரமத்தையுடைய அர்ஜுனனுடைய அச்செய்கையைக்கண்டு கௌரவர்கள் குளிரினால் பீடிக்கப்பட்டபசுக்கள்போல மிகநடுக்கமுற்றார்கள். சூழ்ந்திருந்தமன்னர்கள் ஆச்சரியத்தினாலே உத்தரியங்களை வீசினார்கள். சங்கங்கள் துந்துபிவாத்யங்கள் இவைகளினுடையசப்தம் எங்கும் நெருங்கியதாகத்தோன்றியது. அரசரே! திருப்தியடைந்தவரான பீஷ்மரும் அர்ஜுனனை எல்லாஅரசர்களுக்கும் வீரர்களுக்குமெதிரில் புகழ்ந்துகொண்டு பின்வருமாறு சொல்லலானார்.

'மிக்கபாகுபலமுள்ளவனே! கௌரவநந்தன! உன்னிடத்தில் இச்செய்கை ஆச்சரியமன்று. அளவற்றகாந்தியுடையவனே! நீ பூர்வயுகத்திலிருந்தநரரிஷியென்றும், நீ வாஸுதேவரைச் சகாயமாகக்கொண்டு பெரிதானகாரியத்தைச் செய்யப்போகிறாயென்றும் நாரதர் சொல்லியிருக்கிறார். தேவராஜன் தேவர்களுடன்சேர்ந்தும் செய்யமுடியாததான ஸர்வக்ஷத்திரியஸம்ஹாரரூபமான காரியத்தை நீ நிச்சயமாகவே செய்யப்போகிறாய்' என்று அந்தத்தேவரகஸ்யத்தை அறிந்தவர்கள் கருதுகிறார்கள். நீ ஒருவன் புவியில்உள்ளவில்லாளி

களுள்உத்தமன்; மனிதர்களுள்சிரேஷ்டன். உலகத்திலுள்ளப்ராணிகளுள் மனிதர்கள்சிறந்தவர்கள்; பக்ஷிகளுள் கருடன்சிறந்தது; நதிகளுக்கு ஸாகரம்சிறந்தது; நாலுகால்பிராணிகளுள் பசுமாடு சிறந்தது; தேஜஸுள்ளவஸ்துக்களுள் சூரியன்சிறந்தது; பர்வதங்களுள் ஹிமாசலம் சிறந்தது; ஜாதிகளுள் பிராம்மணஜாதி சிறந்தது; வில்லாளிகளுள் நீ சிறந்தவன். அர்ஜுன! என்னாலும் விதுரனாலும் துரோணராலும் பலராமராலும் ஜனார்த்தனராலும் ஸஞ்சயனாலும் அடிக்கடிசொல்லப்பட்ட வாக்கியம் துரியோதனனால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. விபரீதபுத்தியுள்ளவனும் புத்தியற்றவனுமான துரியோதனன் அந்தவாக்யத்தை நம்பவில்லை. நெடுங்காலமாகச்சாஸ்திர முறையைக்கடந்தவனான அந்தத் துரியோதனன் பீமனுடையபலத்தினாலே அவமதிக்கப்பட்டும் கொல்லப்பட்டும் படுக்கப்போகிறான்' என்றார். கௌரவராஜனான துரியோதனன் இந்தவார்த்தையைக்கேட்டு மனத்தளர்ச்சியடைந்தான்.

சந்தனுபுத்திரரான பீஷ்மர், அந்தத் துரியோதனனைப்பார்த்து, 'அரசனே! அறிந்துகொள். கோபத்தைவிட்டுவிடு. துரியோதன! புத்திமானான பார்த்தன் நன்மணம்பொருந்தியதும் குளிர்ந்ததுமான தீர்த்தத்தைஉண்டுபண்ணினதை நீ பிரத்யக்ஷமாகக்கண்டாயல்லவோ? இவ்விதமானஜலத்தை உண்டுபண்ணுகிறவன் வேறொருவனும் இவ்வுலகிலில்லை. அர்ஜுனன் ஆக்னேயாஸ்திரம், வாருணாஸ்திரம், ஸௌம்யாஸ்திரம், வாயவ்யாஸ்திரம், வைஷ்ணவாஸ்திரம், ஐந்திராஸ்திரம், பாசுபதாஸ்திரம், உலகங்களைப்படைத்த பிரம்மதேவரிடத்தினின்று கிடைத்த பிரம்மாஸ்திரம், தாதாவையும் த்வஷ்டாவையும் ஸவிதாவையும் விவஸ்வானையும் தேவதையாகக்கொண்டஅஸ்திரங்கள் ஆகிய இவைகள்எல்லாவற்றையும் அறிவான். இப்புவியில் வேறொருவன் இவ்வஸ்திரங்களை அறியான். இம்மண்ணுலகனைத்திலும் தனஞ்சயன்ஒருவனே இவ்வஸ்திரங்களை அறிகிறான். தேவகிபுத்திரரானகிருஷ்ணரும் அறிவார். இவ்வுலகில் வேறொருவனும் அறியான். அப்பா! யுத்தத்தில் இந்தஅர்ஜுனன் எவ்விதத்தாலும்ஜயிக்கமுடியாதவன். மகாத்மாவான இந்தஅர்ஜுனனுடையசெய்கைகள் மனிதனால் செய்யமுடியாதவைகள். மன்னவ! பலமுள்ளவனும் யுத்தத்தில்சூரனும் போரில்பிரகாசிக்கின்றவனுமான அந்தஜிஷ்ணுவுடன் காலதாமதமின்றி நீ நட்பைச் செய்துகொள். குருகுலத்தவரிற்சிறந்தவனே! அப்பா! மஹாபாகுபலமுள்ளவரானகிருஷ்ணர் [1] ஸ்வாதீனராயிருக்கும்பொழுதே சூரனான

[1] 'கோபங்கொள்ளாமலிருக்கையிலேயே' என்பது.

பார்த்தனோடு நீ ஸந்திசெய்துகொள். அப்பா! அர்ஜுனன் பதிவான கணுக்களுள்ளபாணங்களால் உன்னுடைய எல்லாச்சேனைகளையும் நாசம்செய்துவிடுமுன்னரே நீ அவனோடு ஸந்தியைச்செய்துகொள். வேந்தனே! யுத்தத்தில்மாண்டவர்கள்போக மிகுந்திருக்கிற உன் ஸஹோதரர்களும் அனேகஅரசர்களும் உயிரோடிருக்கையிலேயே உனக்கு அர்ஜுனனோடு ஸந்தி உண்டாகட்டும். ஐயா! குரோதத்தினால் ஜ்வலிக்கின்றகண்களையுடையயுதிஷ்டிரன் யுத்தகளத்தில் உன்ஸேனையை எரிக்குமுன்னரே (உனக்குப் பார்த்தனோடு) ஸந்தி உண்டாகட்டும். மஹாராஜனே! நகுலன் ஸஹதேவன் பீமஸேனன் அர்ஜுனன் இவர்கள் உன்சேனையைமுழுதும் அழிக்காமலிருக்கும்பொழுதே உனக்குவீரர்களானபாண்டவர்களோடு ஸ்நேகமுண்டாவதை நான்விரும்புகிறேன். அப்பா! யுத்தம் என்னுடனேமுடியட்டும். பாண்டவர்களோடு நீ விரோதத்தைவிட்டுவிடு. தோஷமற்றவனே! நான் இப்பொழுது சொல்லிய வார்த்தை உனக்கும் ருசிக்கலாம். இந்தவிஷயமானது உனக்கும் உன் குலத்திற்கும் தகுந்ததென்று நான்எண்ணுகிறேன். கோபத்தைவிட்டுவிட்டுப் பாண்டவர்களோடு ஸமாதானஞ்செய்துகொள். பல்குனனாலே எது செய்யப்பட்டதோ அது போதுமானது. பீஷ்மனுடையநாசத்தினாலே உங்களுக்கு நேசமுண்டாகட்டும். மிகுந்திருக்கின்றவர்கள் நன்றாகப்பிழைத்திருக்கட்டும். அரசனே! நீ கிருபைசெய். பாண்டவர்களுக்கு ராஜ்யத்திற்பாதியைக் கொடு. தர்மராஜன் இந்திரப்பிரஸ்தத்தை அடையட்டும். கௌரவேந்திர! நீ மித்திரத்துரோகியும் அரசர்களுக்குக்கீழ்ப்பட்டவனுமாகிப் பழிச்சொல்லை அடையவேண்டாம். பிரஜைகளுக்கு என்னுடையநாசத்தினாலே மனஅமைதி உண்டாகட்டும். பாண்டவர்கள் பிரீதியுடையவர்களாக(க்கௌரவர்களோடு) சேரட்டும். அரசனே! தந்தை தனயனையும் மருகன் மாமனையும் பிராதா பிராதாவையும் அடையட்டும். இச்சமயத்திற்கேற்ற என்னுடைய இவ்வார்த்தையை மோகத்தினாலேயோ புத்தியின் குறைவினாலேயோ கேளாமற்போவாயாயின் நீ கடைசியில் மனவருத்தமடைவாய். நீங்களெல்லோரும் இதனை முடிவாகக்கொண்டவர்களாயிருக்கிறீர்கள். உண்மையானஇந்தவார்த்தையை யான் உனக்குக் கூறலாயினேன்' என்றார்.

கங்காபுத்திரரானபீஷ்மர் அரசர்களின்மத்தியில் நேயத்தால் இந்த வாக்கியத்தைத் துரியோதனன்கேட்கும்படிசெய்துவிட்டுப் பின் பாணங்களால் மர்மஸ்தானங்கள் மிகவருத்தப்பட்டிருந்தும் வேதனையை அடக்கிக்கொண்டு தம்மனத்தை யோகதாரணையுடன்கூடியதாகச் செய்து பேசாமலிருந்துவிட்டார். தர்மத்தோடும் அர்த்தத்தோடுங்

கூடியதும் ஹிதமானதும் ஆரோக்யகரமாயுள்ளதுமான அந்தவார்த்தையைக்கேட்டும், சாகப்போகிறவன் நல்லமருந்தை ஏற்காததுபோல உமதுபுத்திரன் அதனை ஏற்கவில்லை.

---

## நூற்றிருபத்திரண்டாவது அத்யாயம்.

## பீஷ்மவதபர்வம். (தொடர்ச்சி.)

(அரசர்களெல்லாம் அகல, கர்ணன் பீஷ்மரிடம் வந்ததும், அவர் அவன்பிறப்பைக்கூறிப் பாண்டவரோடு உறவாடச்சொல்லியதும், அவன் அதனைக் காரணங்காட்டிமறுத்து க்ஷமைகேட்டு மீண்டதும்.)

மஹாராஜரே! சந்தனுபுத்திரரானபீஷ்மர் பேசாமலிருந்துவிட்ட பிறகு, அந்தஎல்லாஅரசரும் மீண்டு தங்கள்இருப்பிடம் சேர்ந்தனர். பீஷ்மர் கொல்லப்பட்டாரென்பதைக் கேட்டுப் புருஷசிரேஷ்டனான கர்ணன் சிறிதுபயமுற்று விரைவுடன் அவருடையபக்கத்திற்குவந்தான். அவன் அப்பொழுது சரதல்பத்தையடைந்திருக்கின்ற மகாத்மாவான பீஷ்மரை, ஜனனகாலத்தில் நாணல்படுக்கையில்படுத்தவரும் வீரரும் பிரபுவுமான ஸுப்ரம்மண்யரைப்போலக் கண்டான். மகாதேஜஸுடையவனான கர்ணன் கண்களைமூடிக்கொண்டிருக்கும் வீரரான அந்தப்பீஷ்மரைஅடைந்து அப்பொழுது பாஷ்பத்தினால் தடுமாறுகின்றகுரலோடு அவருடையசரணங்களில்விழுந்து, 'குருசிரேஷ்டரே! யான் ராதையின்புத்திரன்; குற்றமற்றவனாயினும் பார்க்கும்பொழுதெல்லாம் உங்களால்மிகவெறுக்கப்படுபவன்' என்று தன்னைப் பீஷ்மரிடம் தெரிவித்துக்கொண்டான். கௌரவர்களுள்முதியவரானபீஷ்மர் அம்புகளால்மூடப்பட்டிருக்கின்றகண்களையுடையவராகி அந்தவார்த்தையைச் செவியுற்றுத் தம்வாஸஸ்தானம் நிர்ஜனமாயிருப்பதைக் கண்டு ரக்ஷகர்களைத் தூரச்செல்லும்படிசெய்து பிதா புத்திரனைக்கட்டிக்கொள்வதுபோலக் கர்ணனைஒருகையால்கட்டிக்கொண்டு மெள்ள அவனைப்பார்த்து ஸ்நேகத்துடன் பின்வருமாறு கூறலானார்.

'நீ என்னோடு பகைக்கிறவிஷயத்தில் எனக்கு வருத்தமில்லை. நீஎன்னிடம்வராமலிருந்தால் நிச்சயமாகவேஉனக்குச்ச்ரேயஸ்உண்டாகாது. கர்ண! நீ குந்தீபுத்திரன்; ராதாபுத்திரனல்ல. நீ ஸூர்யனிடத்தினின்றும் பிறந்தவன். ஸூதபபாகன் உனக்குப் பிதாவல்லன். மஹாபாகு பலமுள்ளவனே! நீ ஸூரியனிடத்திலிருந்துஉண்டானவனென்று நாரதரிடத்தினின்றும் கிருஷ்ணத்வைபாயனரிடத்தினின்றும் கேட்டு அறிந்

திருக்கிறேன். தேஜஸினாலும் ஸம்சயமில்லை. அப்பா! எனக்கு உன்மீது த்வேஷமில்லை. உனக்கு உண்மையைச் சொல்லுகிறேன். உன்னுடைய உற்சாகத்தைக்கெடுப்பதற்காக உன்னைநோக்கிக் குரூரமானவார்த்தையை யான் சொன்னேன். நீ காரணமின்றிப் பாண்டவர்களைத்வேஷிக்கிறாயென்பது என்னுடையஎண்ணம். ஸூதபுத்திரனே! துரியோதனராஜனால் பலவாறுதூண்டப்பட்டு நீ தர்மலோபத்தைச்செய்கிறவனானமையால் உனதுபுத்தியும் இவ்விதமானகெட்டநிலைமையை அடைந்துவிட்டது. குணசாலிகளுடையபுத்தியும் இழிகுணர்களின்சேர்க்கையால் த்வேஷமுள்ளதாகவும் மாத்ஸர்யமுள்ளதாகவும் ஆகிறது. அந்தக்காரணத்தினால் கௌரவர்களுடையசபையில் நீ பலவாறு குரூரமானவார்த்தையைக்கேட்கும்படிசெய்யப்பட்டாய். இப்புவியில் யுத்தத்தில் சத்துருக்களால்தாங்கமுடியாதஉன்பராக்ரமத்தை யான் அறிவேன். உன்னிடத்திலுள்ளபிராம்மணப்ரீதியையும் சௌர்யத்தையும் நீ தானஞ்செய்வதில்நன்குநிலைபெற்றிருப்பதையும் யான் அறிவேன். தேவனுக்கொப்பானவனே! மனிதர்களுள் உனக்குஒப்பானவன் ஒருவனுமில்லை. குலத்திலுண்டாகிறஉட்கலகபயத்தாலே நான் எப்பொழுதுமே குரூரமானவார்த்தையைச்சொன்னேன். பாணங்களிலும் அஸ்திரங்களிலும் அவைகளைஸந்தானஞ்செய்வதிலும் சுறுசுறுப்பிலும் அஸ்திரபலத்திலும் பல்குனனோடும் மஹாத்மாவானஸ்ரீகிருஷ்ணரோடும் ஸமானனாயிருக்கிறாய். கர்ண! வில்லாளியான நீ ஒருவனாகவே காசிநகரத்தையடைந்து குருராஜனானதுரியோதனனுக்கு ஒருகன்னிகையை [1] விவாகம்செய்விப்பதற்காக அரசர்களை யுத்தத்தில் அடித்தாய். அவ்விதமாகவே பலசாலியும் ஒருவராலும்அணுகமுடியாதவனுமான ஜராஸந்தராஜனும் [2] அடிக்கப்பட்டான். போரில்புகழ்பெற்றகர்ண! யுத்தத்தில் உனக்குஒப்பானவன் ஒருவனுமில்லை. நீ பிராம்மணர்களுக்குஹிதன்; ஆண்மையைமுன்னிட்டுப் போர்புரிபவன்; தேஜஸினாலும் பலத்தினாலும் யுத்தஞ்செய்வதில் நீ தேவகுமாரனுக்குஸமானன். யுத்தத்தில் மனிதர்களனைவரிலும் மேம்பட்டவன். உன்னைப்பற்றி முன்பு நான் பாராட்டியகோபத்தை இப்பொழுதுவிட்டுவிட்டேன். விதியைமுயற்சியால்வெல்லமுடியாது. பகைவர்களையழிப்பவனே! வீரர்களான பாண்டவர்கள் உனக்குச் சகோதரர்களான பிராதாக்கள். மிக்கபாகுபலமுள்ளவனே! எனக்குப்பிரியத்தைச்செய்யவிரும்புவாயாயின் அவர்களோடு நீ சேர்ந்துவிடு. ஆதித்யகுமாரனே! பகை என்னோடு தீர்ந்து

[1] சாந்திபர்வம் 4-வது அத்யாயம் பார்க்க.

[2] சாந்திபர்வம் 5-வது அத்யாயம் பார்க்க.

போகட்டும். இப்புவியிலுள்ள எல்லாஅரசர்களும் இப்பொழுது உபத்திரவமற்றவர்களாயிருக்கட்டும்' என்றார்.

கர்ணன், 'மகாபாகுபலமுள்ளவரே! இவையனைத்தையும் அறிவேன்; ஸம்சயமில்லை. பீஷ்மரே! நான் குந்திபுத்திரனென்றும் சூதபுத்திரனல்லனென்றும் சொன்னது வாஸ்தவமே. நான் குந்தியினால் எறியப்பட்டேன்; சூதனால் வளர்க்கப்பட்டேன். துரியோதனனுடைய ஐஸ்வரியத்தைஅனுபவித்துவிட்டு அதனைப்பொய்யாகச்செய்ய நான் பிரியப்படவில்லை. மிக்கவல்லமையுடையவரே! வஸுதேவகுமாரரானகிருஷ்ணர் அர்ஜுனனுக்குஉபகாரஞ்செய்வதின்பொருட்டு எவ்வாறுஉறுதியானவிரதத்துடனிருக்கிறாரோ அவ்வாறாகவே துரியோதனன்நிமித்தமாகத் தனம், சரீரம், புத்திரர்கள், மனைவி, கீர்த்திஇவ்வனைத்தும் என்னால்விடப்பட்டன. கௌரவரே! 'க்ஷத்திரியர்கள் வியாதியினால் மரணமடைந்தவர்களாகவேண்டாம்' என்று துரியோதனனை அடுத்து என்னால் பாண்டவர்கள் எப்பொழுதும் கோபமூட்டப்பட்டார்கள். இந்தவிஷயம் அவசியம் வரக்கூடியதே. இது ஒருவனாலும் தடுக்கமுடியாதது. விதியைமுயற்சியால்தடுப்பதற்கு எவன் வல்லவன்? பிதாமஹரே! பூமிக்குக்ஷயத்தைக்காண்பிக்கின்றநிமித்தங்களை நீங்கள்தெரிந்துகொண்டிருக்கிறீர்கள்; ஸபையிலும்கூறியிருக்கிறீர்கள். பாண்டவர்களும் வாஸுதேவரும் வேறுமனிதர்களாலே ஜயிக்கத்தகாதவர்களென்று எல்லாவிதத்தாலும் நான் தெரிந்துகொண்டிருக்கிறேன். அவர்களையும் நாம் எதிர்த்துப்போர்புரிவதில் ஊக்கமுள்ளவர்களாயிருக்கிறோம். 'யுத்தத்தில் பாண்டவர்களைஜயிப்பேன்' என்று என்மனம் உறுதியுடனிருக்கிறது. மிக்ககுரூரமான இந்தவைரம் என்னால்விடமுடியாதது. நான் ஸ்வதர்மத்தினாலே பிரீதியுள்ளமனத்தையுடையவனாகித் தனஞ்சயனோடு போர்புரியப்போகிறேன். ஐயா! யுத்தத்தின்பொருட்டுநிச்சயமுள்ளவனான எனக்கு அனுமதிகொடும். வீரரே! தேவரீருடையஅனுமதிபெற்று யுத்தஞ்செய்யவேண்டுமென்பது என்னுடையஎண்ணம். கோபத்தாலும் ஆலோசனைக்குறைவினாலும் நான் சொல்லிய தகாதசொற்களையும் செய்தவிரோதமானசெய்கைகளையும் தேவரீர் என்விஷயத்தில் பொறுத்தருள்க' என்றுவேண்டினான். பீஷ்மர், 'கர்ண! அதிகுரூரமானஇந்தவைரமானது விடமுடியாததாயிருக்குமாயின் யான் உனக்கு அனுமதிகொடுக்கிறேன். ஸ்வர்க்கத்தையடையவேண்டுமென்கிறவிருப்பத்தோடு யுத்தஞ்செய். நான் கோபத்தைவிட்டுப் பரபரப்பின்றி யுத்தத்தில் செய்யவேண்டியகாரியத்தைச் செய்துமுடித்தேன். என்சக்திக்கியன்றவளவும் உத்ஸாஹத்திற்குத்தக்கபடியும்

ஸாதுக்களுக்குரியநல்லொழுக்கங்களில் யான் நிலைபெற்றிருந்தேன். அப்படிப்பட்டயான் உனக்கு அனுமதிகொடுக்கிறேன். எதை விரும்புகிறாயோ அதை அடைவாயாக. நீ தனஞ்சயனிடத்தினின்றும் க்ஷத்திரியதர்மத்தால் அடையக்கூடியஉலகங்களை அடையப்போகிறாய். நீ அகங்காரத்தைவிட்டுப் பலத்தையும் வீர்யத்தையும்அடைந்து போர் புரிவாயாக. க்ஷத்திரியனுக்குத் தர்மத்தைவிட்டுவிலகாதயுத்தத்தைக் காட்டிலும் மேலானது வேறொன்றுமில்லை. வெகுநாளாக விரோதத்தைத்தணிப்பதற்குப் பெரிதானமுயற்சியைச் செய்தேன். ஆனால் அது என்னால் முடியாமல்போயிற்று. எங்கு தர்மமோ அங்குஜயம்' என்று கூறினார். காங்கேயர்இவ்வாறுசொல்லியவளவில் ராதேயன், அபிவாதனஞ்செய்து விடைபெற்றுக்கொண்டு ரதத்தின்மீதேறி உமதுபுத்திரனிடத்திற்குச் சென்றான்" என்று கூறினான்.

ஜனமேஜயமகாராஜரே! இவ்வாறு அனேகவிருத்தாந்தங்களையுடையதும் பாவத்தைப்போக்குவதும் மங்களகரமுமான இந்தப் பீஷ்மபர்வமுழுதும் கேட்கின்றஉமக்கு என்னால் கூறப்பட்டது. அரசரே! இப்புவியில் வேதத்தின்கரைகடந்தவர்களான பிராம்மணர்களை இந்தப்பர்வத்தை எப்பொழுதும் சொல்லுகிறவர்களும் சிரத்தையுடன்கேட்பவர்களும் எல்லாப்பாவங்களையுந் தொலைத்து முடிவுக்காலத்தில் சரீரத்தைவிட்டு எந்தஇடத்தைஅடைந்தபின் மீண்டும் திரும்பார்களோ அவ்வித விஷ்ணுவின்ஸ்தானமானவைகுண்டத்தை அடைகிறார்கள். பரதர்களிற்சிறந்தவரே! ஆதலால், இம்மைமறுமைப்பயன்களை அடையவிருப்பமுள்ளமனிதன் ஸர்வப்ரயத்னத்தினாலும் பாரதத்தைக்கேட்கவேண்டும். ராஜேந்திரரே! இந்தப்பீஷ்மபர்வம்படிக்கும்பொழுது பிராம்மணர்களைச் சந்தனங்களாலும் புஷ்பங்களாலும் அலங்காரஞ்செய்து அவர்களுக்குப்போஜனம் அளிக்கவேண்டும்; உத்தமமான தீர்த்தத்தையும் அவர்களுக்குக் கொடுக்கவேண்டும்" என்றுகூறினார்.

பீஷ்மவதபர்வம் முற்றிற்று.

---

பீஷ்மபர்வம் முற்றிற்று.